# நீலகண்டப் பறவையைத் தேடி. . . .

வங்காள மூலம் :

அதீன் பந்த்யோபாத்யாய

தமிழாக்கம் :

எஸ். கிருஷ்ணமூர்த்தி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புதுடில்லி

# முன்னுரை

இந்தியக் கலையின் சிறப்பு அது இயற்கையுடன் கொண்டுள்ள உறவுதான். வடமொழிக் காவியம் பிறக்கக் காரணமாயிருந்த அந்த முதல் கவிதையை நினைவு கூறுங்கள் :

மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம : சாசுவதீ : ஸமா :
யத்க்ரௌஞ்ச மிதுனதேகம் அவதீ : சாமமோஹிதம் !

இயற்கையிடம் பரந்து காணப்படும் இத்தகைய பரிவுணர்ச்சியானது வடமொழி இலக்கியம் முழுவதிலும் பரந்து கிடப்பதைக் காணலாம். ராமனின் வனவாசத்தில் இலங்கையின் நிழல் விழும் வரையில் வனவாசத்தின் வேதனை உணரப்படவில்லை; சித்திரகூட மலை, மால்யவதி ஆறு, தண்டகாரண்யம் இவற்றின் இதந்தான் தெரிகின்றன. சுவர்க்கத்தை நோக்கி யாத்திரை செய்த பஞ்ச பாண்டவர்களைத் தொடர்ந்து சென்றது ஒரு நாய். அந்த நீண்ட யாத்திரையை வெற்றிகரமாகச் செய்து முடிக்கும் சக்தி அதனிடம் இருந்தது. உண்மையில் வடமொழி இலக்கியம் படைக்கப்பட்டதன் நோக்கம் மனிதன் மற்ற பிராணிகளின் உலகத்தை அடக்கி ஆள்வதற்காகப் படைக்கப்பட்டவன் அல்ல என்பதை எடுத்துக் கூறவும், அதே நேரத்தில் இயற்கையுடன் ஆத்ம பூர்வமாக ஒன்றுவதன் மூலமே மனிதன் முழுமை பெறுகிறுன் என்பதை வலியுறுத்துவதற்காகவுமே எனலாம். குப்தர்கள் காலத்தில்தான் பாரதம் மற்றக் காலங்களை விடப் பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடைந்திருந்தது. அந்தக் காலத்தில் கூட ஆசிரம வாழ்க்கையின் மதிப்பு குன்றிவிடவில்லை. இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகக் காளிதாசனின் கவிதையைச் சொல்லலாம். ஆசிரமத்தைத் தவிர, வேறு எங்கும் சகுந்தலையைக் கற்பனை செய்துகொள்ள முடியாது.

காளிதாசனின் மேகதூதன் அளகாபுரியை அடைவதற்கு முன் பாரத நாட்டின் பல்வேறு பாகங்களிலுள்ள மலைகள், ஆறுகள், ஊர்களைக் கடந்து செல்லவேண்டி யிருக்கிறது. வடமொழி இலக்கியத்தில் நாம் கேட்பது வேட்டைக்காரர்களின் வெறியோசை அல்ல, மிருகங்கள், பறவைகளின் ஒலிகள்தான். காதம்பரியைப் படைத்த பாணபட்டனின் சிருஷ்டியின் வேதனை பல நூற்றாண்டுகளுக்குப் பின்னும் நம் இதயத்தைத் தொடுகிறது.

தற்காலத்தைச் சேர்ந்த ஒரு வங்காளி நாவலுக்கு முன்னுரை எழுதத் தொடங்கும்போது மேற்கூறிய சிந்தனைகள் தோன்றுகின்றன. ஓர் இனத்தின் பாரம்பரியத்தில் சேர்ந்துள்ள அனுபவத்தை மூலதனமாகக் கொண்டுதான் பிற்காலத்து எழுத்தாளர்கள் தங்கள் வெற்றிப் பாலத்தை அமைத்துக் கொள்கிறார்கள். இவ்வாறுதான் இதயத்து உணர்ச்சிகளின் பரஸ்பரப் பரிமாற்றத்தின் பாதை தடையின்றித் தொடர்கிறது. பாரதத்தின் பண்பாடு பல இனங்களையும் பல மதங்களையும் சார்ந்ததாக இருந்தாலும் அது அடிப்படையில் ஒன்றாக இருப்பதற்குக் காரணம் இந்தப் பாரம்பரிய வெளிப்பாடு தான். பிரதேசங்களின் வேற்றுமைகள் இந்த வெளிப்பாட்டின் தொடர்ச்சியைத் துண்டிக்க முடியவில்லை.

வங்காளி இலக்கியத்தில் முதல்முதலில் வெற்றிகண்ட நாவலாசிரியர் நம் தேசியகீதமான 'வந்தே மாதர'த்தைப் படைத்த பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் (1838-1894). 1865-ஆம் ஆண்டில் ''துர்க்கேச நந்தினி'' பிரசுரமானதிலிருந்து வங்காளி நாவலின் வெற்றியாத்திரை தொடங்கிவிட்டது. வங்காளி வசன இலக்கியத்துக்கு வித்திட்டவர் ராஜாராம் மோகன்ராய் (1772-1833); அதை முளைக்கச் செய்தவர் ஈசுவர சந்திர வித்யாசாகர் (1820-1891). பங்கிம் சந்திரர் அதை மலர்களும் கனிகளும் நிறைந்த மரமாக வளர்த்தார். 'மிருணாலினி' (1869), 'துர்க்கேசநந்தினி' 'சீதாராம்' (1887), தேவி சௌதுராணி (1884), 'ஆனந்த மடம்' (1884) என்னும் நாவல்களை அவற்றின் கதைக் கருவின் அடிப்படையில் வரிசைப்படுத்திப் பார்த்தால் அவற்றில் வரலாறு ஊடுருவிச் செல்வதைக் காணலாம். அவற்றில் முகமதியப் படையெடுப்பிலிருந்து வாரன்ஹேஸ்டிங்ஸ் ஆட்சி (1772-1785) வரையிலுள்ள வங்கநாட்டு வரலாறு விவரிக்கப்பட்டுள்ளது. 'ராஜசிம்மன்' (1882) முகலாய ராஜபுத்திர மோதலை வர்ணிக்கிறது. இந்த நாவல்களில் பங்கிம்சந்திரர் வரலாற்றுப் பின்னணியில் சுதந்திர உணர்ச்சிக்கே முக்கியத்துவம் அளித்திருக்கிறார்; ஆயினும் கூடவே அவற்றில் தனி மனித உணர்வுகளின் வெளிப்பாடுகளும் திறம்படச் சித்தரிக்கப் பட்டிருக்கின்றன.

பங்கிம் சந்திரர் நாட்டைக் கல்லும் செங்கல்லும் மரமும் சேர்ந்த ஒரு உயிரற்ற கலவையாகக் கருதாமல் தாயாகவே கருதினர். இலக்கியத்திலும் நாட்டைத் தாயின் உருவகமாகவே தீட்டியுள்ளார். 'ஆனந்த மடம்' நாவலில் 'வந்தே மாதரம்' பாடுவதற்கு முன் அதன் புரட்சிக்காரக் கதாநாயகன் பவானந்தன், ''எங்களுக்கு வேறு தாய் இல்லை! ஜனனி ஜன்ம பூமிஸ்ச ஸ்வர்காதபி கரீயஸீ !—தாயும் தாய்நாடும் சுவர்க்கத்தை விட உயர்ந்தவர்கள் ! —எங்களுக்கு வேறு தாய் இல்லை, தந்தை இல்லை, மனைவி இல்லை, மக்கள் இல்லை, வீடு வாசல் இல்லை! இனியநீர் பெருக்கினள், இன் கனி வளத்தினள், மலயமாருதத்தால் குளிர்ந்தவள், பயிர்களின் பசுமை நிறங்கொண்டவள்—இந்தத் தாய்நாடு ஒன்றே எங்கள் தாய்!'' எனக் கூறுவதைக் காணலாம். சமூகத்துக்கு ஒரு கலைஞன் ஆற்ற வேண்டிய கடமையைப் பங்கிம் சந்திரர் வங்காளி நாவலின் ஆரம்ப காலத்தில் நன்கு நிறைவேற்றினர்.

சமூக சீர்திருத்தவாதியான ராம் மோகனின் வசனம் முக்கியமாக சாஸ்திரக் கருத்துகளைப் பற்றியது. வித்யாசாகரின் வசனமும் அப்படித்தான் ; இருந்தாலும் அது நடைமுறைகளுடன் சம்பந்தப்பட்டிருந்தது. மேலும் வித்யாசாகர் ஓர் ஆசிரியருமாவார். சுதந்திர உணர்வை நாவலில் நுழைத்த சிறப்பு பங்கிம் சந்திரரைச் சேரும். அவர் மதவெறி கொண்டவர் என்று ஒரு சிலர் குற்றஞ் சாட்டுகிருர்கள். ஆனல் அவர் மத வேறுபாடின்றி இந்து – முஸ்லீம் உழவர்கள் மேல் தன் அன்பைத் தாராளமாகப் பொழிந்திருப்பது அவருடைய 'ஸாம்ய' (*1879*) என்ற கட்டுரைத் தொகுப்பிலிருந்து தெளிவாகும்.

தன் வரலாற்று நாவல்களுக்கான கதைக் கருவைத் தேர்ந்தெடுக்கும்போது அவர் முகம்மதியப் படையெடுப்பால் இந்துக்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைச் சித்தரிக்க முனைந்தார் என்பதையும் மறுக்க முடியாது. அவர் இந்துக்களின் முன்னேற்றத்தை விரும்பியது உண்மைதான் ; ஆனல் அவர் பிற மதங்களை வெறுக்கவில்லை. இது அவருடைய கடைசிக் காலப் படையெடுப்பு ஒன்றில் தெளிவாகிறது— '' 'எல்லோரும் சமம் ; எல்லோரும் தன்னைப் போன்றவர்களே' என்ற ஞானந்தான் வைஷ்ணவ மதம். ஆகவே உண்மையான வைஷ்ணவன் இந்து, முஸ்லீம், உயர்ந்த ஜாதிக்காரன், தாழ்ந்த ஜாதிக்காரன் என்று வேற்றுமை பாராட்ட மாட்டான்.'' இத்தகைய தாராள மனப்பான்மையுடன் தான் அதீன்பந்த்யோபாத்யாயர் 'நீலகண்ட பறவையைத் தேடிக் கொண்டு' நாவலில் ஏழை முஸ்லீம்களின் வாழ்க்கையைப் பார்க்கிருர். இந்தப் பார்வை வங்காளி நாவலில் பங்கிம் சந்திரரின் காலத்திலிருந்தே தொடர்ந்து வந்திருக்கிறது.

ரவீந்திரநாத டாகுர் காலத்தில் (1861-1947) நாம் இன்னும் ஒரு படி மேலே போகிறோம. அவர் ஒரு வேறுபட்ட காலத்தைச் சேர்ந்தவர். 1906-ஆம் ஆண்டில் வெளியான அவருடைய நாவல் 'நௌகாடூபி'யைப் பற்றிப் பிற்காலததில் சொல்லும்போது அவர் தம்மைக் காட்டிக் கொள்கிறார்—"இந்தக் காலத்தில் நாவல்களில் சம்பவங்களுக்கு முக்கியததுவம் குறைந்து, உள்ளப் போராட்டங் களே முக்கியததுவம் பெற்றுவிட்டன." பாத்திரங்களின் குணங் களைப் பகுத்துணர்ந்து அவற்றை அதனதன் இயற்கைக்கேற்ப மலர விடுவதே டாகுரின் குறிக்கோள். இதிலும அவருடைய கவிதைத் திறன் அவரைக் கைவிடவில்லை; அது அவருடைய வெளிபபாட்டுச் சிறப்பை அதிகமாக்கியது. அவருடைய ஆரம்பக் காலப் படைப்புக்களான 'பௌ-டாகுராணிர்ஹாட்'டும் (1883) 'ராஜ ரிஷி' யும் (1887) அக்காலத்தில் பாராட்டப்பட்டாலும் இந்தக் கால அளவுகோற்படி குற்றமற்றவை அல்ல. 'சோக்கேர் பாலி'யில் (1903) அவர் தம்முடைய போக்கையும் தம் நாவலின் போக்கையும் மாற்றிக்கொண்டார். அதுமுதல் அவரது நாவல்களில் சம்பவங்கள் குறைந்து குணச்சித்திர வெளிபபாடு அதிகமாகியது. காந்தீஜி அவரைக் 'குருதேவர்' என்று அழைத்தார். அவர் தம் கதைகளின் மூலம் ஒரு சிந்தனையாளராக உருவெடுத்தார்.

அவர் 'கொரா' (1910) 'கோரே பாயிரே' (1916) முதலான நாவல் களில் சுதேசி இயக்கம் குறுகிய இனவெறியாக ஆவதைக் கண் டித்தார். 'சார் அத்யாய்' (1934) நாவலில் அரசியல் நடைமுறை கள் மனிதனின் குணங்களை எவ்வாறு பாதிக்கின்றன என்பதைத் தெளிவாகக் காட்டினார். 'சதுரங்கம்' (1916) காம இச்சைக்கும் பண்டைய அத்யாத்ம சாதனைக்குமிடையே நிகழும் மோதலைச் சித்தரிக்கிறது. 1929-ஆம் ஆண்டில் வெளியான அவருடைய 'சேஷேர் கவிதா', 'ஜோகா ஜோக்' ஆகிய நாவல்களில் அவர் முறையே ரோமாண்டிக் காதலின் மலர்ச்சியையும் இல்லற வாழ்க் கையின் சூழ்நிலையில் காதல் மொட்டு காய்ந்து போய் விழுவதை யும் சித்தரிக்கிறார். ஆனால் ரவீந்திரரின் படைப்புகளில் சிந்தனைக் குரிய கருத்துக்கள் வலுவில் திணிக்கப்படவில்லை; அவை பாத்திரங் களின் அனுபவங்களின் வெளிப்பாடாக, அவர்களுடைய பேச்சு வார்த்தைகளின் மூலம் உருப்பெறுகின்றன.

வங்காளியின் முழுவாழ்க்கையும் டாகுரின் படைப்புகளில் இடம் பெறவில்லை. சமூகத்தில் தாழ்த்தப்பட்டவர்களின் கதையை முதல் முதலாக எழுதியவர் சரத்சந்திர சட்டோபாத்யாயர் (1876-1938) —'ஸ்ரீகாந்தன்' (1917-1933) நாவலின் நான்கு பாகங்களில்.

ரவீந்திரநாத் டாகுரே ஓரிடத்தில் ''சரத்சந்திரரின் பார்வை வங்காளியின் இதய ஆழத்திலுள்ள ரகசியத்தை ஊடுருவிவிட்டது'' என்ருர்.

சேற்றிலும் தாமரையை மலர்விக்கும் வங்காளியின் மென்மை சரத்சந்திரரின் படைப்புகளில் சுடர் விடுகிறது. பலகேடுகள் நிறைந்திருந்தாலும் சமூகம் சீர்திருததப்பட முடியாததல்ல என்ற உணர்வுள்ள பாத்திரங்களை அவரது படைப்புகளில் காண்கிரும். அந்தப் பாத்திரங்கள் சமூகத்தால் தண்டிக்கப்படுவதும் நம் பார்வைக்குத் தப்பவில்லை. நாவலில் சரத்சந்திரரின் முக்கியக் கரு அன்புதான்.

அவர் ரோமாண்டிக் உணர்வையும் குடும்ப வாழ்க்கையின் சிக்கல்களையும் முறையே 'தத்தா' (1918) விலும் 'தேனு பாவ்னு' (1923) விலும் சித்தரிப்பதோடு நின்றுவிடாமல், கணவனை இழந்த பெண்ணும் சுமங்கலியும் பரபுருஷனைக் காதலிப்பது போன்ற சிக்கலான விஷயத்தைக் கூடப் பரிவு ததும்ப வர்ணித்திருக்கிருர், 'பள்ளி சமாஜ்' (1916), 'கிருகதாஹ்' (1920) என்னும் நாவல்களில். வழுக்கி விழுந்தவள் என்பதாலேயே ஒரு பெண் முற்றிலும் கறைபட்டவளாகி விடுவதில்லை; சூழ்நிலையின் நிர்பந்ததால் ஒரு பெண் தம் வாழ்க்கையை ஒருவிதமாக அமைத்துக் கொள்ள நேரலாம்—என்ற உண்மையை அவர் வங்காளிக்குப் புரிய வைத்து அவனுடைய உள்ளத்தில் அனுதாபத்தையும் பரிவையும் தோற்றுவித்தார். அவர் தமது ஐம்பத்து மூன்ருவது பிறந்த நாள் விழாவில் பேசும்போது, ''குறை, குற்றம், பாவம் இவை மாத்திரமே மனிதனின் முழுமையான உருவமாகிவிடாது. இவற்றுக்குள்ளே அசல மனிதன் இருக்கிருன்—இதை ஆத்மா என்றும் சொல்லலாம்—அவன் அந்தக் குறைகளையும் குற்றங்களையும் கடந்து அவற்றுக்கு மேலே நிற்கிருன்'' என்று கூறினர்.

முதலாவது உலகமகா யுத்தகாலத்து எழுத்தாளர்கள் ரவீந்திரரின் அசாதாரணமான சிந்தனைத் திறனுலோ, சரத்சந்திரரின் உணர்ச்சி வேகததாலோ திருப்தி அடையவில்லை. 'கல்லோல்' (1923-29) பத்திரிகை வாயிலாக அவர்களுடைய படைப்புக்களில் சரீர சம்பந்தப்பட்ட இச்சைகளும் வாழ்க்கையின் அடக்க முடியாத வேகமும் வெளிப்பட்டன. அவர்கள் 'கல்லோல் குழு' என்ற பெயரால் அறிமுகமானுர்கள். அவர்களுள் ஒருவர் சைலஜானந்த முகோபாத்யாய (1900). அவர் சிறுகதைகள் மூலம் அதிகம் புகழ் பெற்ருலும் 'ஷோலோ ஆனு' (1925), 'சஹர் தேகேதூரே' (1947) போன்ற நாவல்களில் வட்டாரத் தன்மையை முதல் முதலாகக் கொண்டுவந்து இலக்கியத்தில் ஒரு புதிய பாதையை வகுத்தார்.

தாராசங்கர்பந்த்யோபாத்யாய (1898-1971) இத்தன்மைக்கே உருவங் கொடுத்தார், தமது 'தாத்ரி தேவதா' (1939), 'காளிந்தி' 1940, 'கணதேவதா பஞ்சகிராம்' (1942-43), 'ஹான்சுலி பாங்கேர் உபகதா' (1947) போன்ற சிறந்த படைப்புக்களில். கரடு முரடான 'ராட்' பிரதேசத்தின் அழகு மயூராக்ஷி நதியில் வரும் திடீர் வெள்ளம், கேண்ட்டு தேவதையைக் குறித்துப் பாடப்படும் பாட்டுக்கள், புதுச்சோறு, திருவிழாவில் மத்தள ஒளி, கொள்ளைக் காரர்களின் சமிக்ஞைகள், ஜமீந்தார்களின் ஆடம்பரம், இயந்திர யுகத்தால் ஏற்படும் பாதிப்புக்கள் முதலானவைகளைச் சித்தரிப்பதே இவரது தனிச் சிறப்பாகும்.

இவரைப் போலவே மாணிக்பந்த்யோபாத்யாய (1908-1956) 'பத்மாநதீர் மாஜி' (1936) யில் கிழக்கு வங்காளத்தின் மக்களது வாழ்க்கையை அழகாகச் சித்தரித்திருக்கிறார். அவருடைய பார்வை தாராசங்கரிடமிருந்து வேறுபட்டிருந்தாலும் அவர் நகர்புறத்து நடுத்தர, தாழ்த்தப்பட்ட மக்களின் பிரச்சனைகளை எதிரொலித் திருக்கிறார். காட்டுப் பகுதிகளையும் அங்கு வாழ் மக்களைப் பற்றி யும் நேரடியாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் விபூதிபூஷண் பந்யோபாத்யாயவிடம் (1894 - 1950) செல்ல வேண்டும். அப் பொழுதுதான் இயற்கையுடன் மனிதன் கொண்டுள்ள நேரடித் தொடர்பினை வெளிப்படுத்துவதே இலக்கியத்தின் நோக்கம் என்னும் ரவீந்திரரின் இலக்கியக் கொள்கையின் உண்மைப் பொருள் விளங்கும். வங்காளி இலக்கியத்தில் ரவீந்திரரால் உருவாக்கப்பட்ட இந்த இலக்கியக் கொள்கை விபூதிபூஷணின் நாவல்களில் தொடர்கிறது.*

உண்மையில், தாராசங்கரின் 'தாத்ரி தேவதா' வின் முடிவில் அத்தையம்மாளுக்குக் கதாநாயகன் சிவநாத் செலுத்தும் அஞ்சலி யையும் 'அபராஜித'வின் முடிவில் விபூதிபூஷணின் கூற்றையும் படித்தால் வங்காளி வாழ்க்கையில் ரவீந்திரரின் பாதிப்பு எவ்வளவு ஆழமானது என்பது தெரியும்; ஒரு வட்டாரத்துக்குரியதை உலகத் துக்கே பொதுவானதாயும், ஒரு குறிப்பிட்ட காலத்துக்குரியதை எந்தக் காலத்துக்கும் பொருந்துவதாயும் செய்வதில் அவருடைய அலாதித்திறனும் தெளிவாகும்.

"பூமி ஜீவன்களின் தாய்; சமூகத்தின் நாடு; மனிதனின் வீடு— அந்த இருப்பிடத்தின் உருவமே நீ!...நீயே எனக்கு வீட்டை

---

* 'பதேர் பாஞ்சாலி' (1929), 'அபராஜிதா' (1932), 'ஆரண்யக்' (1938) முதலான நாவல்களின் மூலம் [மீண்டும் தொடருகிறது.]

அறிமுகப்படுத்தினுய்; அதன் மூலமே நாட்டைப் புரிந்துகொண் டேன்! பூமியைப் புரிந்துகொள்வதன் மூலம் நான் உன்னைப் புரிந்துகொள்ளும்படி நீ எனக்கு ஆசி கூறு!''

—'தாந்ரிதேவதா'

''முப்பது, ஐம்பது, நூறு, ஆயிரம், மூவாயிரம் ஆண்டுகள் கழிந்துவிடும். மூவாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் இம்மாதிரி மாலை நேரம் வரும். இம்மாதிரிக் கோடைக்காலப் புயலும் மழையும் வரும். அப்போதும் இதேபோல் பறவைகள் ஒலிக்கும், சந்திரன் உதிக்கும்.... நிசப்தமான சரத்காலத்து நண்பகலில் காட்டுவழியில் விளையாடிக்கொண் டிருக்கும் இந்த ஒன்பது வயதுப் பாலகனின் உள்ளத்தில் தோன்றும் விசித்திர அநுபவங்களின் வரலாறு எங்கே எழுதப்பட்டிருக்கும்?''

—'அபராஜித'

தாராசங்கர், விபூதிபூஷண், மாணிக் ஆகியோரைத் தற்கால வங்காளி நாவலாசிரியர்களின் வழிகாட்டியாக நன்றியுடன் நினைவு கூர்கிருர் அதீன் பந்த்யோபாத்யாய. தனிப்பட்ட முறையில் அவருக்கு மிகவும் பிடித்தமான வசனகர்த்தாக்கள் பங்கிம்சந்திர ரும் அவனீந்திரநாத் டாகுரும் (1871–1951) ஆவார்கள். ரவீந்திர ரின் சகோதரன் மகனை பின்னவர் நாவலாசிரியர் இல்லாவிடி னும் கதை இலக்கியத்தில் அவரது எளிய, தெளிவான நடை வங்கமொழியில் அலாதியானது. கதை சொல்லும் முறையில் இவ்விருவரையும் பின்பற்றுவதுதான் அதீன் பந்த்யோபாத்யாயவின் இந்த அபிமானத்துக்குக் காரணம். நாவல் எழுதுவது அவரைப் பொறுத்த வரையில் தம் கூற்றுக்கு ஒப்பானதாகும். 'நீலகண்டப் பறவையைத் தேடிக்கொண்டு' – நாவலின் மூலமாகவே அவர் தம்மைக் காட்டிக்கொள்ள முனைகிருர்—அதாவது கலையின் மூலம் எவ்வளவு தூரம் காட்டிக்கொள்ள முடியுமோ அவ்வளவு உண்மை கற்பனை மெருகுடன் விரிந்து விடுதலைபெற விழைகிறது. ஆனல் கற்பனையின் அஸ்திவாரத்தை மறக்கக்கூடாது; இங்கே தான் சம்பவங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன....

அதீன் பந்த்யோபாத்யாய டாக்கா மாவட்டத்தைச் சேர்ந்த ராயி னதிக் கிராமத்தில் 1930–ஆம் ஆண்டு பிறந்தார். அவரது முழுப் பெயர் அதீந்திரசேகர் பந்த்யோபாத்யாய. 'நீலகண்டப் பறவை யைத் தேடிக்கொண்டு' நாவல் நிகழும் கிழக்கு வங்காளம் அவரது இளமை நினைவுகளில் கரைந்திருக்கிறது.

அவர் இந்தியாவுக்கு வந்தபோது முதலில் மூர்ஷிதாபாத் ஜில்லா வில் வசித்துக்கொண்டு அங்கிருந்து தானே படித்து மெட்ரிக்

பாஸ் செய்தார். அவர் கற்றது வணிகத்துறைப் படிப்பு. சிறிது காலம் பத்திரிகை அலுவலகத்திலும் பணிபுரிந்தார் அவர். 1950-ஆம் ஆண்டு அவர் ஒரு கப்பலில் பயிற்சி பெறுவதற்காகச் சேர்ந்தார். சுமார் ஒரு வருடகாலம் அவர் பல்வேறு துறைமுகங் களைப் பற்றி அநுபவம் பெற்று அதன் விளைவாக 'சமுத்ரமானுஷ்' என்ற நாவலை இயற்றி 1960-ஆம் ஆண்டில் வெளியிட்டார். அவருக்கு மாணிக்பந்த்யோபாத்யாய நினைவுப் பரிசு கிடைத்தது. இதுவரை அவர் எழுதியுள்ள நாவல்கள் இருபத்திரண்டு. வெவ் வேறு சமயங்களில் இயற்றப்பட்ட அந்த நாவல்களின் மூலஸ் வரம் 'நீலகண்டப் பறவையைத் தேடிக்கொண்டு' நாவலிலேயே அடங்கியிருக்கிறது என்று அவரே கூறியிருக்கிறார். இந்தப் படைப்பை இயற்றுவதில் அவர் 1961 முதல் 1971 வரை ஈடுபட்டிருந்தார்; இதன் மூலமே அவர் தம் லட்சியத்தில் வெற்றி பெற்றிருக்கிறார்.

நீலகண்டப் பறவையின் தேடல் எப்படிப்பட்டது, யாருடையது?

இந்த நாவல் புனையப்படும் முன் இதன் பதினெட்டு அத்தியா யங்கள் சிறுகதைகளாக வெளிவந்தன என்பதை நினைவு கொள்ள வேண்டும். ஆகவே அத்தியாயங்கள் தனித்து நிற்கக் கூடியவை; ஆயினும் ஒன்றோடொன்று நெருக்கமாக இணைந்தவை. 'நாவலின் ஒவ்வோர் உறுப்பும் தன்னிறைவு பெற்றுத் தனித்து நிற்கக் கூடியதாக இருக்கவேண்டும்' என்ற இலட்சியத்திலிருந்து நாவலாசிரியர் ஒருபோதும் பிறழவில்லை. இப்போதும் அவர் சோதனை நோக்குடன் நடத்தப்படும் வங்காளிப் பத்திரிகை ஒன் றின் ஆசிரியர்களுள் ஒருவர். 'நீலகண்டப் பறவையைத் தேடிக் கொண்டு' ஒரே பாத்திரத்தையோ அல்லது அப்பாத்திரம் சம்பந்தப்பட்ட சம்பவங்களையோ மட்டும் வைத்துச் சொல்லப் படும் கதையல்ல; அது ஒரு பலகோண ஆராய்ச்சியின் விளைவு.

இந்த நாவலைப் பற்றிய குறிப்பு முதல் அத்தியாயத்திலேயே வந்துவிடுகிறது — "உண்மையிலேயே இப்போது பெரிய பாபு இரு கைகளையும் உயரத் தூக்கிக் கைதட்டிக்கொண்டே யிருந்தார். அவர் வளர்த்துவந்த ஆயிரக்கணக்கான நீலகண்டப் பறவைகள் ஆகாயத்தில் ஏதோ ஒரு மூலையில் மறைந்துபோய்விட்டாற் போல வும், அவர் கைதட்டி அவற்றைத் திரும்பச் செய்ய முயல்வது போலவும் ... பார்த்தால் தோன்றும் —மத்திய யுகத்து வீரன் ஒருவன் இரவின் இருளில் பாவங்களைத் தேடிப் பிடித்துத் தண்டிக்க அலைகிறான் என்று."

பெரிய பாபு அதாவது மணீந்திரநாத் —நீலகண்டப் பறவையைக் குறியீடாகக் கொண்டு தேடித்திரிவது பாலினை. அவர் இனி

அவளைச் சந்திக்க வாய்ப்பு இல்லை; இருந்தாலும் அவளது நினைவால் உந்தப்பட்டு மணீந்திரநாத் யானைமேலேறி மறைந்துபோய் விடுகிறார், மரக்கிளையுடன் தம்மைக் கட்டிப்போட்டுக் கொள்கிறார். ஆற்றில் படகோட்டும்போது வழி தவறிவிடுகிறார். பாலின் ஓர் உண்மையான மனிதப் பிறவியாகக் கருதப் படாவிட்டாலும் அவள் ஒரு கற்பனைச் சத்தியம் — அவள் அடைய முடியாதவள், ஆனால் மிகவும் விரும்பப்படுபவள்; அவள் கைக் கெட்டாதவள், ஆனால் அலைந்து சுற்றிக் களைத்த மணீந்திரநாத் அவள் ஜன்னலுக்கு வெளியே நெல்லிமரத்தடியில் நிற்பதாக நினைக்குமளவுக்கு அவ்வளவு தெளிவாக அவரது மணக்கண்ணுக்குத் தெரிகிறாள்; அவளது மோகனக் கவர்ச்சியில் அவர் தன் பேச்சுத் திறனை இழந்து கவிதையின் உணர்ச்சி வழியே அவளை அடைய முனைகிறார்...

ஆகவே நீலகண்டப் பறவையைத் தேடிக்கொண்டு 'ஒரு ரோமாண்டிக் தேடல். தேடலுக்குள்ளாகும் அழகு பிறநாட்டைச் சேர்ந்ததாயினும் ஆசைக் கெட்டாததல்ல. வங்காளி இலக்கியத்தில், மத்திய யுகத்து வைஷ்ணவக் கவிதையில் நாம் காணும் உணர்ச்சி வேகத்தை மணீந்திரநாத்திடமும் காண்கிறோம். ஞானதாஸின் மொழியில்—

அமியா சாகரே ஸினான் கோரிதே
சகலி கரல பேலோ!
சகீ! கீ மோர் கரமே லேக்ஹி!

(அமுதக் கடலில் ஸ்நானம் செய்யவந்தேன். அது விஷமாக மாறிவிட்டது! தோழி, என் அதிருஷ்டத்தைப் பார்!)

மணீந்திரநாத்தின் வேதனை, அவருடைய பிரார்த்தனை — இவற்றுக்கு எவ்விதத் தடையும் இல்லை. அவர் சித்தசுவாதீனம் இல்லாதவர். ஆனால் நாவலின் மற்றப் பாத்திரங்களும் சிக்கல் அற்றவர்கள் அல்ல. அடக்கப்பட்ட ஆசைகளால் அவர்கள் அலைக்கழிக்கப் படுவதை நம்மால் உணர முடிகிறது. பெண்பாத்திரங்களில், ஜோட்டன் மணமாகியவளாயினும் அவளது ஆசை தணிந்துவிடவில்லை; மாலதியின் கைம்பெண் நிலையோ பொறுக்க முடியாதது. ஆசைக்கும் விவேகத்துக்குமிடையே போராட்டம். ஜோட்டன் தன்னையே ஏசிக் கொள்கிறாள், "இந்தச் சைத்தான் உடம்பு எப்போதும் தீனி கேட்கிறது!" மாலதியின் காதல் ரகசியமாக அவளது பாலிய நண்பன் ரஞ்சித்தைச் சரணடைகிறது. கடைசியில் அவள் அவனுடன் செல்லும் நல்வாய்ப்பைப் பெறுகிறாள். ஆனால் அதற்கு முன் அவள் மிருகப்பசி கொண்டவர்களின்

இச்சைக்குப் பலியாகி விடுகிருள். இன்ெருரு பெண்ணுக்கும் தாகம் தீர வழியில்லை—இரண்டாவது பீபியும் பேலுவும் இணைய வாய்ப்பு இல்லை. இளமையின் வலுவையிழந்த பேலு தன்ஞல் ஆன்னு பீபியைக் கட்டுப்படுத்தி வைக்க முடியாதென்று உணர்கிருன்.

பண்பாட்டுக்கும் உணர்ச்சிக்குமிடையே நேரும் இந்த மோதல் கிழவர் மகேந்திரநாத்தையும் அலைக்கழித்துத் துன்புறுத்துகிறது. "தம் உடல் சிதையில் எரியும்போதுகூட, தன் புதல்வன் மணீந்திர நாத்தின் பார்வை தம்மைக் குற்றஞ்சாட்டும் என்று பயப்படுகிருர் அவர். தந்தையைத் தனயன் திரஸ்காரம் செய்வதாகச் செய்யப் படும் கற்பனையில் தான் 'நீலகண்டப் பறவையைத் தேடிக் கொண்டு' நாவலின் ஆசிரியர் தான் தீட்ட விரும்பும் உணர்ச்சிச் செறிவைத தீப்பிழம்பாக வெளிப்படுத்துகிருர் — "நீங்கள்தான் அந்த மனிதர்! என் ஆத்மாவுடன் நெருங்கியிருந்தாள் ஒரு பெண், அவள் பெயர் பாலின். அவளுக்கு நீண்டு உயர்ந்த மூக்கு, நீலக் கண்கள். அவளை நீங்கள் தூர விரட்டிவிட்டீர்கள்! அப்பா, நான் சமுத்திரத்தைப் பார்த்ததில்லை, ஆனுல் வசந்த காலத்து வானத்தைப் பார்த்திருக்கிறேன். வானத்துக்குக் கீழே ஸோனுலி பாலி ஆற்றின் நீர்; நீரில் அவளுடைய முகம் தெரிகிறது. வானத்திலுள்ள ஏதாவதொரு பெரிய நட்சத்திரம் இருட்டில் நீரில் பிரதிபலித்தால் என் அன்புக்குரிய அந்தப் பெண் தூர தேசத்திலிருந்து என்னிடம் சொல்வது போலிருக்கிறது —'மணி, நீ போகாதே! நாம் வில்லோ மரததடியில் உட்கார்ந்துகொண்டு சான்டாகிளாஸைப் பற்றிப் பேசிக்கொண் டிருக்கலாம். நீ போய் விடாதே!'....... குளிர்காலத்தில் புற்களின் மேல் இருக்கும் பனித் துளிகளைப் பார்ததிருக்கிறேன். பனித்துளியைப் போல் பவித்திர மான அந்த முகத்தை என்னிடமிருந்து பிரித்துவிட்டீர்களே, அப்பா!"

மகேந்திரநாத்தின் மதம் அவர் பாலினை மாற்றுப் பெண்ணுக ஏற்றுக் கொள்வதற்குத் தடையாக இருந்தது. மதந்தான் வங்காளத்தின் இரு பெரிய பகுதியினரிடையே—இந்து-முஸ்லீம்—சுவராக நின்றது. நாவலின் ஆரம்பத்தில் டாக்காக் கலகம் பற்றிய செய்தியைக் கேட்ட பிறகும் ஆபேத்அலியால் இந்து விரோதியாக ஆக முடியவில்லை — "முசல்மான்கள் படுகொலை செய்யப்பட்டால் அவனுக்கு ஆத்திரமுண்டாகிறது—ஆனுல் பெரிய எஜமான், தனபாபு, இன்னும் பக்கத்துக் கிராமங்களிலுள்ள பல இந்துக்களின் தாராள மனப்பான்மையும் அவனுக்கு அவர்களுடன்

தலைமுறை தலைமுறையாக இருந்து வரும் இதயபூர்வமான உறவும் அவனுடைய வருத்தத்தையும்ஆத்திரத்தையும்போக்கிவிடுகின்றன."

சாம்சுத்தீன் முதல் முதலாக முஸ்லீம் லீக் கட்சியின் சார்பில் தேர்தலுக்கு நிற்கும்போது அவனுடைய மனைவி அலிஜான் அவனைக் காரணம் கேட்கிருள். ஆயினும் இந்த விரோதத்துக்குக் காரணம் ஆழத்தில் – இரு இனத்தினருக்குமிடையே இருந்த பொருளாதார வேற்றுமையில்—இருந்தது.

காக்கைகளை விரட்டும்போது பேலுவின் மனத்தில் தோன்றிய எண்ணங்களை நாவலாசிரியர் விவரிக்கிருர். வசதியுடன் சந்தோஷமாக வாழும் இந்துக் குடும்பங்களைப் பார்த்து அவனுக்கு உள்ளூற ஆத்திரம் வந்தால் சாமு மௌல்வி — முல்லாக்களைப் போல அவனுக்குச் சற்று ஆறுதல் அளிக்கக் கூடும். "சாமுவின் லீக் கட்சி ஜிந்தாபாத்! நமக்காக ஒரு நாடு வேண்டும்!" மதவெறியாலும் சுயநலத்தாலும் இயக்கப்பட்டு இந்த விரோதம் பகிரங்க யுத்தமாக ஆக நேரமாகவில்லை. "முஸ்லீம் குடியானவர்கள் ஆனந்தமயீ கோயிலுக்கடுத்த நிலத்தில் தொழுகை நடத்தப் போகிருர்களாம். அது மசூதியல்ல. அது ஒரு பண்டைய கால இடிந்த கோட்டை—அது ஈசாகானுடையதாக இருக்கலாம் அல்லது சாந்தராயோ கேதார்ராயோ கட்டியதாகவு மிருக்கலாம். அந்த இடத்தில் தொழுகை நடத்தும்படி முஸ்லீம்கள் தூண்டப்படுகிருர்கள். இந்தச் செய்திதான் இன்று காலை ஆபீஸுக்குக் கிடைத்தது. முஸ்லீம்கள் — குறிப்பாக, மௌல்வி சாயபு — பாபுக்களுக்குத் தொந்தரவு செய்யக் கிளம்பிவிட்டார்கள். மௌல்வி சாயபுக்கு இரண்டு பெரிய நூல் கடைகள் இருக்கின்றன. நல்ல விளைச்சல் உள்ள ஆயிரம் பீகா சொந்த நிலம் இருக்கிறது அவருக்கு.

இந்த தேவியின் மகிமையால் அவர்களால் ஏற்படும் துன்பம் பறந்து போய்விடும். தேவியை எதிர்த்து நிற்க யாரால் முடியும்? தேவியின் கையிலுள்ள கூர்மையான வாள் அந்த மகிஷாசுரனைக் கொல்லத் தயாராயிருக்கிறது. "இவ்வாறு சாஸ்திரங்களிலிருந்து ஆயுதப் பிரயோகதத்துக்குத் தூண்டுதல் கிடைக்கிறது; மனிதர்கள் பரஸ்பரக் கொலையில் ஈடுபட்டு வெறிபிடித்து அலைகிருர்கள். ஆயினும் மனிதத்தன்மை அவர்களிடமிருந்து முற்றும் மறைந்து விடுவதில்லை. மாலதி ஜப்பரால் கடத்தப்பட்ட பின இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்று கூடி அவளை மீட்க முயற்சி செய்கிருர்கள், பக்கிரிசாயபு அவளைக் காப்பாற்றி வீட்டில் கொண்டு வந்து சேர்க்கிருர், நாவலின் முடிவில் ரஞ்சித் அவளை ஜோட்டனின் வீட்டிலேயே கொஞ்ச காலம் விட்டு வைக்க நினைக்கிருன்.

இதிலிருந்து ஒரு கேள்வி எழுகிறது—அவனுடைய ஆத்திரம் யார் மேல்? ஜப்பர் மேலா, அல்லது தேசபக்தன் யாரையாவது கண்டதுமே அவனுக்குக் கைவிலங்கு பூட்ட நினைக்கும் சந்தோஷ் தரோகா மேலா?

இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே வேற்றுமை கொஞ்சநஞ்சமில்லைதான். ஆனால் அதைக் கடக்கும் வழியும் திறந்திருந்தது—சுதந்தர நாட்டைச் சமைத்துக்கொள்ளும் வழி. இந்த நாவல் வங்கபந்து ஷேக்முஜிபுர் ரகிமானுக்குச் சமர்ப்பணம் செய்யப்பட்டதில் வியப்பில்லை. ஏனெனில் சுதந்தர வங்காளத்தின் மாலுமி என்ற முறையில் அவர்தான் தம் நாட்டு மக்களைப் புதிய யுகத்தின் வாயிலுக்கு அழைத்து வந்திருக்கிறார்.

சமூகத்திலும் தனி மனிதர்கள் விஷயத்திலும் ஏற்படும் பாதிப்புகள், எதிர்பாதிப்புகள் இவற்றுடன் முன்னேறும் பாத்திரங்களோடு கூட இந்த நாவலில் இன்னொரு முக்கியமான அம்சமும் இருக்கிறது. பாரதீயக் கலையுடன் நெருங்கிச் சம்பந்தப்பட்ட அம்சந்தான் அது - இயற்கை. நாவலின் ஆரம்பத்தில் குழந்தை பிறந்த செய்தியைத் தெரிவிக்க ஈசம் ஷேக் வரும்போதே இயற்கையும் கூடவே வந்துவிடுகிறது — "அவனைப் பார்த்தால் தோன்றுகிறது—இந்தமாதிரி ஒரு செய்தியைக் கொண்டு செல்லத்தான் அவன் தர்முச் வயலிலிருந்தோ, ஸோனாலி பாலி ஆற்றின் மணலிலிருந்தோ கிளம்பி வந்திருக்கிறான் என்று." நாவல் முன்னேற முன்னேற இன்னும் பல அழகிய காட்சிகள் நம் கண் முன்னே விரிகின்றன. தர்முஜ் வயல், பாக்குப்பழம், சீதலக்ஷா நதியின் நீர், அந்த நீருடன் உவமிக்கத் தக்க வானத்தின் பிரவாகம், பறவைகளின் கூட்டிசை, மிருகங்கள்.... அது ஒரு தனி உலகம்.

பொதுவாக ஒரு வெறும் சாப்பாட்டுப் பொருளாகக் கருதப்படும் மீன் கூட ஜாலாலி ஏரியில் மரணமடையும் அத்தியாயத்தில் ஒரு தனி முக்கியத்துவத்தை அடைகிறது— மீனின் உடலில் முட்களும் ஈட்டிகளும் உண்டாக்கிய காயங்கள், தழும்புகள்—மனிதன் பிறந்த காலத்திலிருந்து அவனால் வேட்டையாடப்பட்டதன் சின்னங்கள். மீனின் வலது உதட்டில் இரண்டு பெரிய தூண்டில் முட்கள் மூக்கு வளையம் போல் தொங்குகின்றன. அதன் உடலில் சின்னச் சின்ன முட்கள் குத்திக்கொண்டிருக்கின்றன. .. "அந்த மீன் இப்போது மகிழ்ச்சியாலும் பரபரப்பாலும் ஏரியின் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு மேலே தாவியது. கூடையொன்று தனியே மிதப்பதைக் கண்டு கரையில் பரிதவித்துக் கொண்டிருந்த ஜனங்கள் அது போன்ற ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான மீன்கள் ஏரிநீரைக் கிழித்துக்கொண்டு மேலே

தாவுவதையும் பிறகு கீழே இறங்குவதையும் பார்த்தார்கள். அந்த மீன்கள் அவர்களை எச்சரிப்பது போலிருந்தது. பாபுக்களே, பார்த்துக் கொள்ளுங்கள்! நாங்கள் செய்யும் வேடிக்கையைப் பாருங்கள்! நாங்கள் தண்ணீர்ப் பிராணிகள்; தண்ணீரில் எங்களுக்குச் சுகம்!''

நாவலில் மனித உலகமும் மிருகங்களின் உலகமும் இணைகோடுகளைப் போல் விலகியிருக்கவில்லை; அவை பக்கத்து வீட்டுக்காரர்களைப் போல் தங்களுக்குள்ளே உறவுகளைப் பரிமாறிக் கொள்கின்றன. குழந்தை சோனா பிறக்கும் சமயம் வயலில் ஆமைகள் முட்டையிடும் காலம். இவ்விரு உலகங்களுக்குமிடையே உள்ள தூரம் இதைவிட அதிகமாவதில்லை.

இயற்கையுடன் உறவு கொள்வதுதான் இந்தியக் கலையின் சிறப்பு. பங்கிம்சந்திரரிலிருந்து தொடங்கி விபூதிபூஷண் வரையில் வளர்ந்து வந்துள்ள வங்காளி நாவலின் பாரம்பரியத்தில் நமக்கு இப்போது ஒரு புதிய நாவல் கிடைத்திருக்கிறது. அதில் நாம் ரோமாண்டிக் உணர்ச்சிப் பெருக்கு, குடும்பம் சீர்குலையும் பரிதாபம், பசி தீர்த்துக் கொள்வதற்காக மக்கள் படும் அல்லல், மதவெறி, மனித மதிப்பீடுகள் இவையெல்லாவற்றையும் காண்கிறோம்.

மரத்தில் வாழ நேர்ந்தாலும் ஆகாயத்தில் சஞ்சரிக்கக் கூடிய நீலகண்டப் பறவை உலகத்துக்கும் சுவர்க்கத்துக்கும் மையமாக விளங்கும் ஞானி போல ஒரே நேரத்தில் புழுதியாலும் நட்சத்திரக் கூட்டத்தாலும் கவரப்பட்டு அந்தக் கவர்ச்சியில் தன்னையிழந்து விடும் நீலகண்டப் பறவை— இந்தப் பறவைதான் இந்நாவலின் குறியீடு....

—நிகிலேஷ் குஹா

ஸோனுலி பாலி ஆற்றின் மணலில் வெயில் சாய்ந்து விழுந்துகொண் டிருந்தது. ஈசம் ஷேக் படகின் மேல் நிழலில் உட்கார்ந்துகொண்டு புகை பிடித்துக்கொண் டிருந்தான். பின் பனிக் காலத்து மாலை. சந்தையிலிருந்து திரும்பிக்கொண் டிருந்த கிராமவாசிகள் கரை யோரமாக நடந்துகொண் டிருந்தார்கள். அங்கிருந்து பார்த்தால் தூரத்தில் கிராமங்களும் திறந்த வெளிகளும் தெரியும். தர்முஜ் கொடிகள் வானத்தை நோக்கி அண்ணுந்து பார்த்துக்கொண் டிருந்தன. புகை பிடித்துக்கொண்டே ஈசம் ஷேக் இவற்றையெல் லாம் பார்த்துக்கொண் டிருந்தான். பூச்சிகள் காற்றில் பறந்து கொண்டிருந்தன. எங்கும் பொன்னிறத் தானியத்தின் மணம். அக்ராண் மாதத்தின் கடைசி நாட்கள். பள்ளங்களிலிருந்தும் தாழ்ந்த நிலங்களிலிருந்தும் தண்ணீர் வடிந்து ஆற்றில் விழுந்துகொண் டிருந்தது. தண்ணீர் விழும் ஒலி காதில் விழுந்தது.

மைதானத்தின் மறு ஓரத்தில் சூரியன் இறங்கிவிட்டான். ஆலமர நிழல் மண் திட்டை மூடிவிட்டது. பயிர்களின் மேல் பறக்கும் பூச்சிகளின் ரீங்காரம். தென்பக்கத்து மைதானத்திலிருந்து பறந்து வந்துகொண் டிருந்த பறவைகளின் நிழல் நீரின் மேல் விழுந்தது. இந்தச் சமயத்தில் சில ஆட்கள் கிராமத்துப் பாதையிலிருந்து அங்கு இறங்கி வந்துகொண் டிருந்தார்கள். அவர்கள் சொல்லிக் கொண்டார்கள், டாகுர் வீட்டுத் தனபாபுவுக்குப் பிள்ளை பிறந் திருப்பதாக.

இந்தச் செய்தியைக் கேட்டதுமே ஈசம் தன் ஹூக்காவைக் கூரையின் எரவாணத்தில் செருகிவைத்தான். ஹூக்காச் சட்டி யைக் குப்புறக் கவிழ்த்து வைத்தான். தாழ்வான கூரையைக் குனிந்த வாறே கடந்து வெளியே வந்தான். மேலே வானம், கீழே தர்முஜ் வயல், எதிரில் ஸோனுலி பாலி ஆறு. ஸ்படிகம் போல் தெளிந்த

நீர். இந்த நிழல் செறிந்த பூமியில் ஈசம் மேற்குப் பக்கம் திரும்பி நின்றுகொண்டு, "சோபான் அல்லா" என்று சொல்லிக்கொண்டான். பிறகு ஆற்றைக் கடந்து கிராமத்துக்குச் செல்லும் பாதையில் நடக்கத் தொடங்கினுன்.

தனபாபுவுக்குப் பிள்ளை பிறந்திருக்கிருன்! மிகவும் சந்தோஷமான சமாசாரம். எல்லாம் கடவுள் கிருபை.

பாதையின் இருபுறமும் கண்ணுக்கெட்டிய வரை நெல் வயல்கள். அவனுடைய பார்வை மாலை நேரத்தின் விசித்திர வண்ணங்களில் நிலைத்தது. அவன் நினைத்துக்கொண்டான்: அக்கம்பக்கத்தில் எவ்வளவு கிராமங்கள்! அங்குள்ள மனிதர்கள் அவனுக்கு எவ்வளவு தெரிந்தவர்கள்!

கீழே தண்ணீர்ப் பள்ளம்; அதில் நீந்திக் குதிக்கும் மீன்கள்.

அவன் பாதையின் ஒருபுறம் துண்டை விரித்தான். கீழே புல். புல்லின் ஈரத்தில் துண்டு நனைந்தது. அவன் அதைப் பொருட்படுத்தாமல் அதன் மேல் முழந்தாளிட்டு உட்கார்ந்தான். தண்ணீரால் முகத்தைக் கழுவிக்கொண்டான்; தன் தாடியைக் கையால் நீவிவிட்டுக் கொண்டான். பலதடவை பூமியைத் தலையால் தொட்டு வானத்தை நோக்கியவாறு தன்னை மறந்த நிலையில் நமாஜ் ஓதினுன்.

அந்தி நேரம். சூரியன் மறைந்துகொண் டிருந்ததால் ஈசமுடைய நிழல் நீண்டுகொண்டே சென்றது. வாய்க்கால் நீரின் சலனத்தில் அவனுடைய நிழலும் அசைந்தது. மஞ்சள் நிறப் பூச்சிகள் அவனுடைய தலைக்கு மேலே பறந்தன. மறையும் சூரியனின் மஞ்சள் ஒளியில் அவனுடைய முகம் விசித்திரச் சிவப்பாகக் காட்சியளித்தது, ஏதோ ஒரு தேவதையின் அபூர்வ ஒளி அவனுடைய முகத்தில் பிரதிபலித்தாற் போல.

தொழுகையை முடித்துவிட்டு அவன் எழுந்து நடந்தான். வழியில் சந்தித்தவர்களிடம் எல்லாம் தனபாபுவுக்குப் பிள்ளை பிறந்திருக்கும் செய்தியைச் சொன்னுன். அவன் இந்தச் செய்தியைத் தெரிவிப்பதற்காகவே தர்மூஜ் வயலிலிருந்து, ஆற்றிலிருந்து எழுந்து வந்திருக்கிருனென்று தோன்றியது. அவன் பாதையைக் கடந்து பாக்குத் தோப்புக்குள் நுழைந்தான்.

டாகுர் வீட்டு முன்னறையில் ஏகக் கூட்டம். வெளியிலும் பலர் கூடி நின்றுகொண் டிருந்தார்கள். ஈசம் அவர்களுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு உள்ளே போய்த் தன் வழக்கமான இடத்தில் உட்கார்ந்து புகையிலையை எடுத்து வைத்துக்கொண்டான்.

ஸோனுலி பாலி ஆற்றில் சூரியன் முழுகிக்கொண் டிருக்கிருன். பயிர்களுக்கிடையில் இருட்டில் ஆமைகள் முடங்கிக் கிடக்கின்றன. தரை சற்று உலர்ந்ததும் இந்த ஆமைகள் கரைக்கு வந்து முட்டை

யிடத் தொடங்கிவிடும். தோடார்பாக் மைதானத்தில் பல ஓநாய்கள் ஊளையிடும் ஓலம். தண்ணீர் ஓரத்தில் ஒன்றிரண்டு மின்மினிகள் பளபளத்தன. அவை இருட்டில் இறக்கைகளை விரித்தபடி பறந்துகொண்டே யிருந்தன. பறவைகளின் கடைசிக் கூட்டம் ஒன்று கிராமத்தின் மேல் பறந்து சென்றது. கிராமத்து மைதானத்தில் மனிதர் யாரும் இல்லை; எவ்வித அரவமும் இல்லை. பட்சிகள் மேலே பறப்பதை இருட்டிலும் உணர முடியும். அவை எங்கே போகின்றன என்று அவனுக்குத் தெரியும். அவை ஹாஸான * பீரின் தர்க்காவுக்குப் போகின்றன. அவை அங்கேதான் இரவைக் கழிக்கும். மலை போல் குளிர் வந்து இறங்கும்போது அவை தென்பக்கத்து ஏரிக்குப் போய்விடும்.

ஈசம் எழுந்து நின்றுகொண்டு சொன்னான்: "பெரியம்மா, நான் இருக்கேன்."

சின்ன பாபு கதவுக்கு வெளியே வந்து நின்றார். "ஈசம் வந்துட்டியா?"

"ஆமாங்க. தனபாபுவுக்குச் சமாசாரம் சொல்லியனுப்பிச் சுட்டீங்களா? இல்லேன்னா என்னை அனுப்புங்க. செய்தி சொல் லிட்டு வரேன். ஒரு துணி சம்பாதிச்சிக்கிட்டு வரேன்."

சின்ன பாபு அவனைப் பார்த்துச் சொன்னார்: "போயேன். நாளைக்கே புறப்படச் சொல்லு, தனபாபுவை. கவலைப்படவேண் டாம், அவன் சம்சாரம் சௌக்கியமா இருக்கான்னு சொல்லு."

"அது சொல்லமாட்டேனா? என்ன போங்க! பெரியம்மா எங்கே?"

"அம்மா பிரசவ அறையிலே. நீ பெரிய மன்னியைக் கூப்பிட்டு உனக்குச் சாதம் போடச் சொல்லு."

ஈசம் தானே போய் ஒரு வாழை இலையை நறுக்கிக்கொண்டு வந்தான். ஒரு செம்பு தண்ணீரும் எடுத்து வைத்துக்கொண்டு கூப்பிட்டான். "சோறு போடுங்கம்மா."

பெரிய நாட்டுப் பெண் சொன்னாள்: "இலையை அலம்பிக்கோ."

ஈசம் இலையின்மேல் தண்ணீர் தெளித்துக்கொண்டு சொன்னான்: "உம், போடுங்க."

அவள் சாப்பாடு போட்டாள். சாப்பிடும்போது சாப்பாட்டில் முழுக்க முழுக்க ஈடுபடுவது ஈசமின் வழக்கம். ஒரு பருக்கைச் சோற்றைக்கூட எறியமாட்டான் அவன். இப்படிப்பட்டவர்கள் சாப்பிடுவதைப் பார்க்கப் பெரிய நாட்டுப் பெண்ணுக்கு மிகவும் பிடிக்கும். அவனைப் பார்க்கும்போது அவளுக்கு அவனுடைய பீபியின் நினைவு வந்தது. ஈசமுடைய இடிந்த வீடு, நொண்டி

---

* பீர் - முஸ்லிம் மகாத்மா.

மனைவி, குச்சிகளாலான வீட்டு வேலி – இவற்றை நினைவுகூர்ந்து பெரிய நாட்டுப் பெண்ணுக்கு அவனிடம் பரிவு ஏற்பட்டது. வழக்கம்போல் அவள் சொன்னாள்: "நன்றா வயிறு நிறையச் சாப்பிடு, ஈசம். இன்னுங் கொஞ்சம் பருப்புப் போடவா? மீன்? நீ ரொம்பத் தூரம் நடக்கணுமே! நீ போய்ச் சேர்றதுக்குள்ளே ராப் பொழுது கழிஞ்சுடும்."

ஈசம் தன் முழுக் கவனத்தையும் செலுத்திச் சாப்பிடுகிறான். சுமார் பத்து முழ தூரத்திலுள்ள பிரசவ அறையைப் பார்க்கிறான். அங்கே தனமாமியும் பெரியம்மாவும் இருக்கிறார்கள். அறையில் மூலைக்கு மூலை பிரம்பு இலைகள் தொங்குவதை ஈசம் கவனித்தான். அறை வாயிலில் மட்கிலா மரத்தின் கிளையைப் பார்த்தான். அறைக்குள் விளக்கு எரிகிறது. குழந்தை இரண்டு தடவை, "ஞா ... ஞா" என்று கத்தியது. நனைந்த மரக்கட்டையின் மணம், புகை நாற்றம், சாம்பிராணி மணம் எல்லாம் சேர்ந்து இவ்வீட்டில் ஒரு குழந்தையின் பிறப்பை அறிவிக்கின்றன. தகரத்தாலும் மரத்தாலும் ஆன வீடு, சகட மரத்தின் நிழல், தனமாமி, பெரிய மாமி...! இந்த வீட்டின் பெரிய பாபு பைத்தியம். இது நினைவுக்கு வந்ததும் ஈசம் சொன்னான்: "பெரிய பாபுவைக் காணோமே, அம்மா?"

பெரிய நாட்டுப் பெண் தன் பெரிய பெரிய கண்களால் ஈசமைப் பார்த்தாள். ஆனால் வார்த்தை எதுவும் பேசவில்லை. பேசத் தொடங்கினால் அக்கண்களிலிருந்து நீர் பெருகத் தொடங்கிவிடும். அக்கண்களைப் பார்த்தே ஈசம் புரிந்துகொண்டான், பெரிய பாபு வீட்டிலில்லை என்று. எங்கே இருக்கிறார், எங்கே போகிறார் என்று யாருக்கும் தெரியாது. தெரிந்துகொள்ள நேரமுமில்லை; தேவையுமில்லை. ஈசம் எல்லாச் சாதத்தையும் பருப்போடு சேர்த்துக் கலந்துகொண்டு ஒரே வாயில் சிலந்தியைப் போல் விழுங்கினான். இப்போது பெரிய நாட்டுப் பெண் அருகில் இல்லை. முன்னறையில் இப்போது அதிக ஆட்கள் இல்லை. பெரிய மாமியின் பையனும் தனமாமியின் பெரிய பையனும் சமையலறையில் அவசர அவசரமாகச் சாப்பிடுகிறார்கள்.

ஈசம் முன்னறையிலிருந்து ஒரு தடியும் லாந்தரும் எடுத்துக் கொண்டான். துண்டால் தலையில் முண்டாசு கட்டிக்கொண்டான். இந்த அக்ராண் மாதத்துக் குளிரில் சேறு நிறைந்த தண்ணீரில் நடக்கவேண்டும். தண்ணீர் நிறைந்த தாழ்நிலங்களைக் கடக்க வேண்டும். முண்டாசுத் தலையுடன் ஐந்து கோச தூரம் நடக்க வேண்டும் அவன். ஏரிகரையோரமாகவும் ஆற்றின் மேட்டுப் பகுதியிலும் அவன் நடந்து செல்லும்போது சில சமயம் மௌனா

மாக இருப்பான்; சில சமயம் * காஜியின் பாட்டுக்களைப் பாடிக் கொண்டு போவான். சமையலறையைக் கடந்து செல்லும்போது ஈசம் கவனித்தான். பெரிய மாமி கிணற்றங்கரையில் இருட்டில் நின்றுகொண்டு யாருக்காகவோ காத்துக்கொண் டிருக்கிறாள். அவனைப் பார்த்ததும் அவள் சொன்னாள்: "ஈசம், பெரிய மாமா ஆலமரத்து மேட்டிலே இருக்காரான்னு பாரு. நீ அந்த வழியாகத் தானே போவே!"

ஈசம் மூங்கில் புதரைத் தாண்டிக்கொண்டு மைதானத்தின் இருட்டில் நுழையும்போது சொன்னான்: "நீங்க வீட்டுக்குப் போங்க. நான் பார்த்தேன்னு அனுப்பறேன் அவரை." கொஞ்சங் கொஞ்சமாக அவன் இருளில் மறைந்தான். இப்போது கண் ணுக்குத் தெரியவில்லை அவன். மைதானத்தில் லாந்தரின் அசைவு மட்டும் தெரிந்தது.

ஈசமின் வலது கையில் தடி, இடது கையில் லாந்தர். அக்ராண மாதம். பனி விழுகிறது. வயல்களிடையே பாதை இன்னும் சரியாக உருவாகவில்லை. குறுகலான ஒற்றையடிப் பாதை. மழைத் தண்ணீர் பாதையிலிருந்து வடிந்துவிட்டது. ஈர மண், சேற்றில் கால் வைத்தால் புதைகிறது. ஆனால் கால்கள் அவ்வாறு புதையாதபடி நிதானமாகக் கால்வைத்து நடக்கிறான் ஈசம். இருள் அடர்ந் திருந்ததால் ஈசமினால் லாந்தர் வெளிச்சத்தையும் தன்னையும் தவிர வேறெதையும் உணர முடியவில்லை. இந்தப் பகுதியில் பின்பனிக் காலத்திலேயே குளிர் வந்துவிடுகிறது. புதர்களிலிருந்த பூச்சி புழுக்கள் குளிர்காரணமாக மௌனமாக இருக்கின்றன. ஈசம் மேட்டுக்கு ஏறி வந்தான். பக்கத்தில் பாகல் வயல்கள். எதிரில் குளம். குளத்தங்கரையில் அந்த ஆலமரம். இரவு வெகுநேரம் வரை பெரிய பாபு இங்கே தங்குவதுண்டு. ஈசம் லாந்தரைத் தூக்கிப் புதர்களில் பெரிய பாபுவைத் தேடினான். புதருக்குப் புதர் மின் மினிகள். ஆலமரத்து விழுதுகள் தரைவரை இறங்கியிருக்கின்றன. பண்டைக் கால ஆலமரமாதலால் விழுதுகளால் தனித்தனி அறைகளே உருவாகியிருந்தன. அவன் கூவினான்: "பெரிய மாமா, இருக்கீங்களா?" பதில் எதுவும் கிடைக்கவில்லை. இருந்தாலும் லாந்தரைத் தூக்கிப் பிடித்து மரத்தைச் சுற்றிலும் தேடினான். அவர் அங்கு இல்லை, வேறு எங்கோ போய்விட்டார் என்று புரிந்ததும் மரத்துமேட்டிலிருந்து கீழே இறங்கிவந்தான். தூரத்திலிருந்த கிராமங்கள், அவற்றின் விளக்குகள், ஹாசிமின் அலங்காரப் பொருள் விற்பனைக்கடையில் எரிந்துகொண் டிருந்த பெட்ரோ

* காஜி - மதசம்பந்தமான பாட்டுக்கள் இயற்றும் முஸ்லிம் கவிகளுக்கு இடப்பட்ட பொதுப் பெயர்.

மாக்ஸ் விளக்கின் ஒளி ஆகியவற்றைப் பார்த்துக்கொண்டே அவன் வாய்க்கால் கரைக்கு வந்தபோது ஏதோ ஒரு மனிதக் குரல் கேட்டது.

அவன் கேட்டான் : "யாரது?"

இருளிலிருந்து பதில் கேள்வி வந்தது : "நீ யாரு?"

"நான் ஈசம் ஷேக். ஊரு தோடர்பாக்."

அவன் சொல்ல விரும்பினுன் : "நான் * கொய்ளுப் படகிலே படகோட்டியா இருந்தேன். இப்போ டாகுர் வீட்டிலே வேலே செய்ய றேன். எனக்கு இருட்டு ஓர் இலட்சியமில்லே. பாபுகளோட பழகறேன். ஆற்றங்கரை தர்மூஜ் வயலுக்கு நான்தான் காவல். நான் டாகுர் வீட்டு வேலேக்காரன். எனக்கு வயசாயிடுத்து. இப்போ கொய்ளுப் படகு ஓட்ட முடியல்லே."

"நான் ஹாசிம்பூயிநா. ஊரு கொலாகாச்சா."

"ஓ ஹாசிமா! என்ன பண்றே?"

"மீன் பிடிச்சிக்கிட்டிருக்கேன். தண்ணி இறங்குது பார்த்தியா? கொய் மீனுக்காக வலே விரிச்சிருக்கேன். இந்தக் கும்மிருட்டுலே எங்கே புறப்பட்டுட்டே?"

"மூடா பாடா போய்க்கிட்டிருக்கேன். தனபாபுவுக்குப் புள்ளே பொறந்திருக்கு. அந்தச் சேதியைச் சொல்லப் போறேன்."

"தனபாபுவுக்கு எவ்வளவு புள்ளே?"

"இதைச் சேர்த்து ரெண்டு. உங்கிட்டே நெருப்புக்குச்சி இருக்கா? பீடி பத்த வச்சுக்கறேன்."

ஈசம் பீடி பற்ற வைத்துக்கொண்டான். பெரிய பாபுவை நினைத்து அவன் மனம் வருந்தியது. இரவில் அவர் திரும்பி வரா விட்டால் பெரியம்மா அவருக்காகக் கண்முழிச்சுக்கிட்டு உட்கார்ந் திருப்பாங்க.

அவன் கேட்டான் : "பெரிய பாபுவைப் பார்த்தியா?"

"மத்தியானம் பார்த்தேன். ஆத்து மணல்லே நடந்து போய்க் கிட்டிருந்தாரு."

ஈசம் வருத்தத்துடன் சொன்னுன் : "அண்ணே, ஒனக்கும் எனக்கும் சின்னச் சின்னக் கஷ்டங்கள்தான்."

பிறகு அவன் பாவுசா ஏரியைக் கடப்பதற்காக விடுவிடு என்று நடக்கத் தொடங்கினுன். 'சந்தை கலேயறதுக்குள்ளே குதாரா காட்டுக்குப் போயிட்டா அங்கே படகு கிடைக்கும். இல்லேன்னு இந்தக் குளிர்லே தண்ணியிலே இறங்கி நீந்தணும்.' இதை நினைக்கும் போதே அவனுடைய உடம்பு நடுக்கத்தில் சுருங்கியது.

---

* கொய்ளு—நிறையப் பிரயாணிகளே ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்துக்கு ஏற்றிச் செல்லும் பெரிய படகு.

ஈசம் விரும்பினுல் ஒரு குறுக்குப் பாதையில் போய் இன்னும் முன்பே ஏரிகரையை அடைந்துவிடலாம். இருந்தாலும் அவனை தடுத்தது, ஓர் இனம் புரியாத பயம். பயத்துக்குக் காரணம் முக்கியமாகப் பாமந்திசௌக்கில் இருந்த கிழட்டு இலவமரமும் அதன் இரண்டு உலர்ந்த கிளைகளுமே. மரத்தடியில் சமாதிகள், காலங்காலமாக இருந்துவரும் சமாதிகள். ஆயிரம் இருக்கும், அதற்கு மேலேயும் இருக்கலாம். இந்தப் பயத்தால்தான் ஈசம் அந்தப் பாதையில் போகவில்லை.

ஈசம் தன் கைத்தடியை இறுகப் பிடித்துக்கொண்டான். பயம் ஏற்பட்டால் தலையை நிமிர்த்தி வானத்தைப் பார்ப்பான். அல்லா கிருபையுள்ளவர். அந்தக் கிருபை மிகுந்த அல்லாவை வானத்தில் தேடினுன் அவன். இப்போது எண்ணிறந்த நட்சத்திரங்கள் வானத்தில் புள்ளிகளாக ஒளிர்கின்றன. கீழே கும்மிருட்டு. தூரத்தில் கிராமங்களின் விளக்குகள், பெட்ரோமாக்ஸ் விளக்கின் வெளிச்சம். மரங்கள் புதர்களினூடே இந்த வெளிச்சம் கண்ணில் படுகிறது. பராபர்தி போகும் பாதையில் சிலர் நீரில் நடந்து போய்க்கொண் டிருக்கிருர்கள். அவர்களிடம் விளக்கு இல்லை. தண்ணீரில் அவர் கள் நடக்கும் சப்தம் மட்டும் காதில் விழுகிறது. அவர்களுடைய பேச்சொலியும் ஈசமின் காதில் விழுகிறது.

அவன் கொஞ்சங் கொஞ்சமாக ஏரிப்பக்கம் இறங்கிப் போனுன். பயிரிலிருந்த பனி அவனுடைய முழங்கால் வரை நனைத்துவிட்டது. அவன் பராபர்திப் பாதையிலிருந்து வலது பக்கமாக விலகிப் போய்க்கொண் டிருக்கிருன். இந்தப் பகுதியில் வேறு மனித அரவமே இல்லை. மைதானம் சூல்கொண்ட பசுவைப் போல் சலனமின்றி இருட்டில் படுத்துக் கிடக்கிறது. சந்தைக்குப் போனவர் யாரும் அவ்வழியில் வரவில்லை. தானியக் கதிர்களின் கனத்தால் பயிர்கள் பாதையின் மேல் சாய்ந்திருக்கின்றன. அவன் தன் கைத்தடியால் பயிர்களை இருபுறமும் விலக்கித் தனக்குப் பாதையை உண்டாக்கிக் கொண்டு நடக்கிருன்.

அவன் ஏரிகரைக்குப் போய்ச் சேர்ந்தபோது குதாராகாட் மூடிக் கிடந்ததைக் கண்டான். படகோட்டி படகை அக்கரையில் வைத்து விட்டுப் போய்விட்டான். படகு மங்கலாக இங்கிருந்து தெரிகிறது. அவன் இடதுபக்கம் சில அடிகள் நடந்துபோனுன். சற்றுத் தூரத்தில் விளக்கு வெளிச்சம் தெரிந்தது ஈசமுக்குத் தெரியும், இந்தச் சமயத்தில் மீனவப் படகுகள் இருக்கும் என்று. மழை நீர் தாழ்நிலப் பகுதிகளிலிருந்து இறங்கிக்கொண் டிருக்கும். வெள்ளம் வந்தபோது எங்கும் பொங்கிப் பரவிய தண்ணீர் அக்ராண் மாதத்தில் வடிந்துவிடும். வடியும் நீருடன் மீன்களும் ஆமைகளும்

வரும். மீனவர்கள் முரட்டு வலைகளுடன் வந்திருக்கிறார்கள். ஏரியில் வலைகளை விரித்துவிட்டு இருட்டில் உட்கார்ந்திருக்கிறார்கள். ஈசம் கரை வழியே நடந்து விளக்கு வெளிச்சம் தெரிந்த இடத்துக்குப் போனான். அங்கிருந்து கூவினான்: "நான்தான் ஈசம். என்னை அக்கரையிலே கொண்டுபோய் விடு. நான் ஒரு சேதி கொண்டு போறேன். தனபாபுவுக்குப் புள்ளே பொறந்திருக்கு."

பிறகு அவன் நாற்புறமும் பார்த்துவிட்டுக் கூவினான்: "பெரிய மாமா இருக்கீங்களா? அம்மா உங்களுக்காகக் காத்துக்கிட்டிருக்காங்க. வீட்டுக்குப் போங்க."

பதில் எதுவுமில்லை. ஒரே ஒரு செம்படவப் படகு அக்கரையிலிருந்து வந்தது. அதிலிருந்தவன் கேட்டான்: "தனபாபுவுக்குப் புள்ளே பொறந்திருக்கா?"

ஈசம் சொன்னான்: "ஆமா."

"அப்போ நாளைக்கு ஒரு கர்மா மீன் எடுத்துக்கிட்டுப் போறேன். மீனைக் கொடுத்துட்டு ஒரு சட்டை கேட்டு வாங்கிக்கப் போறேன்."

அவன் படகின் மேற்பலகையைத் தூக்கி இருட்டிலிருந்து ஒரு பெரிய மீனைத் தூக்கி எடுத்தான். நீல நிறமுள்ள அம்மீன் மேற்பலகையில் துள்ளிக் குதிப்பதை விளக்கு வெளிச்சத்தில் கவனித்தான் ஈசம். அதன் கண்களைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது, ஒரு பைத்தியக்கார மனிதர் வயல்களில் எப்போதும் அலைந்து திரிவதைப் போல; பூக்கள், பழங்கள், பறவைகளைப் பார்த்துக்கொண்டு அலைவதைப் போல. மீனின் கண்கள் அம்மனிதரின் கண்களை நினைவுறுத்தின. பெரிய மாமி தன் பெரிய பெரிய கண்களால் விழித்துக்கொண்டு மனிதர் எப்போது திரும்பி வருவார் என்று காத்துக்கொண் டிருக்கிறாள்.

ஈசம் கேட்டான்: "பெரிய பாபுவைப் பார்த்தியா?"

பதில் வந்தது: "இன்னிக்குப் பார்க்கல்லியே."

ஈசம் வேறொன்றும் பேசவில்லை. பைத்தியக்கார மனிதர், இந்த வயல்களிலெல்லாம் இரவும் பகலும் சுற்றித் திரிகிறார். எந்த இருட்டில், யாரைத் தேடிக்கொண்டு அவர் இப்படி அலைகிறார் என்று ஈசமுக்குப் புரியவில்லை. அவன் ஏரியின் மறுகரையை அடைந்ததும் மறுபடியும் வயல்களைக் கடக்கத் தொடங்கினான்.

இப்போது அவன் சணல் வயல்களைக் கடந்துகொண் டிருக்கிறான். இப்போது இங்கே ஒரு பயிருமில்லை. உளுந்து, கேசரிப் பருப்பு ஆகிய பயிர்களெல்லாம் இருக்கவேண்டும், ஆனால் இல்லை. பயிர்கள் இல்லாத தரிசு நிலங்கள். வெட்டப்பட்ட சணல் பயிர்களின் வேர்கள் மட்டும், சொரசொரப்பாக வளர்ந்திருக்கும் தாடிபோல் நிலத்திலிருந்து நீட்டிக்கொண் டிருக்கின்றன. ஜோகிபாடாவில்

இந்த இரவு நேரத்திலும் நெசவு நடக்கிறது. தறி இயங்கும் ஒலி அவனுக்கு வயலிலேயே கேட்கிறது. அவன் கிராமத்துக்குப் போகும் எண்ணத்துடன் குறுக்காக நடக்கிறுன். மீனவர்களின் படகுகள் இப்போது கண்ணுக்குத் தெரியவில்லை. வலைக்கு மேலே மூங்கில் நுனியில் தொங்கும் விளக்கின் வெளிச்சம் மட்டும் துருவநட்சத்திரம் போல் அவனுக்கு வழிகாட்டுகிறது. அவன் எவ்வளவு தூரம் நடந்து வந்திருக்கிறுன், எந்தப் பக்கம் போக வேண்டும் என்பதையெல்லாம் அந்த வெளிச்சம் அவனுக்குத் தெரிவிக்கிறது. வயல்களின் கோடியில் அந்தக் கிழட்டு இலவ மரம் கொஞ்சங் கொஞ்சமாக உருக் கொள்கிறது. பகல் நேரத்தில் அதை இங்கிருந்து தெளிவாகப் பார்க்க முடியும். மரத்திற்குப் பக்கத்திலிருந்த கிராமத்தில் ஒரு தடவை வைசூரிப் பரவியது.

ஈசம் பயந்துகொண்டே நடக்கிறுன். மரம் தூரத்திலிருந்தாலும் அவனுக்குப் பயத்திலிருந்து விடுதலை கிடைக்கவில்லை. அவன் மரத்திலிருந்து விலகிச் செல்லச் செல்ல மரம் அவனை நோக்கி நகர்ந்து வருவதாகத் தோன்றுகிறது. வலது பக்கம் சுமார் அரைக் கோசதூரம் நடந்தால் அந்த மரம். அதனடியில் சமாதிகள். மேட்டு நிலத்திலிருந்து அவன் ஒரு தடவை மரத்தைப் பார்த்துவிட்டதாலும், ஒரு நாள் சந்தையிலிருந்து திரும்பும்போது இருட்டில் அதன் உச்சியில் ஓர் ஒளி ஜொலிப்பதைப் பார்த்த தாலும் பயந்து போயிருந்த ஈசம் வேகமாக நடந்து ஜோகி பாடாவுக்கு வந்து சேர்ந்தான். ஆனுல் அவனை யாராவது பார்த்து விட்டால் சமாதிகளைத் தாண்டி வந்ததாகச் சொல்லிவிடுவான். காரணம், அந்தப் பிராந்தியத்திலேயே மிகவும் தைரியசாலி என்று பெயர் பெற்றிருந்தான் அவன். ஆனுல் அவன் ஒரு போதும் தன் பயத்தை வெளிக்காட்டிக் கொண்டதில்லை. தைரியசாலி என்று பெயர் பெற்றிருந்ததால் அவன் இருட்டிலும் அகாலத்திலும் தன் பயத்தை மறைத்துக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டு நடப்பான். ஜோகிபாடாவை அடைந்ததும் மனிதர்களின் அரவம், சர்க்காவின் ஒலி, தறிகளின் இயக்கம் ஆகியவற்றுல் அவனுடைய பயம் மறைந்தது. அப்போது பழக்கப்பட்ட குரலைக் கேட்டு அவன் சொன்னுன் : ''ஆமிர் சித்தப்பா குரலா இருக்கே!''

''நீ...... ?''

''நான்தான் ஈசம்.''

''இந்த அகாலத்திலேயா ?''

''மூடாபாடா போய்க்கிட்டிருக்கேன். தனபாபுவுக்குப் பிள்ளே பொறந்திருக்கு. அந்தச் சேதி சொல்லப் போறேன். உங்க உடம்பு எப்படி இருக்கு ?''

"சுகமில்லேப்பா. பெரிய பாபுவோட பைத்தியம் தெளிஞ்சுடுத்தா ?"

"இல்லே, சித்தப்பா."

"பெரிய எசமானுக்குக் கண்ணு தெரியல்லேன்னு கேள்விப்பட்டேனே ?"

"ஆமா. அவர் நாள் பூரா அரைக்குள்ளேயே உட்கார்ந்திருக்கார். பெரிய எசமானியம்மாளும் பெரிய மாமியுந்தான் அவரைக் கவனிச்சுக்கருங்க."

"பாவம், புள்ளைக்குப் பைத்தியம். அப்பாவுக்குக் கண் தெரியல்லே."

"ஆமா சித்தப்பா."

"சரி, கொஞ்சம் உட்காரு. ஹுக்கா பிடிச்சுட்டுப் போகலாம்."

"இன்னொரு நாள் பார்த்துக்கலாம், சித்தப்பா. இன்னிக்கு இப்பவே போகணும்."

இவ்வாறு சொல்லிக்கொண்டே ஈசம் சையத் மிஸ்திரியின் நாணல் குடிசையைத் தாண்டி ராமபத ஜோகியின் மாந்தோப்புக்குள் நுழைந்தான். கிராமத்தின் மதூதியைக் கடந்து வயலுக்கு வந்ததும் இலவமரத்து நினைவு மறுபடியும் வந்துவிட்டது. அவன் தனக்குத் தைரியமூட்டிக் கொள்வதற்காக 'அல்லாவே துணை' என்று சொல்லிக் கொண்டான். மரம் வரவரச் சைத்தானக ஆகிக் கொண்டிருக்கிறது. சைத்தான் மாதிரி அவனைப் பின்தொடருகிறது. இடையிடையே கையிலிருந்த லாந்தரும் தடியும் மிகவும் கனத்து விட்டதாகத் தோன்றுகின்றன. இப்படி ஏன் ஆகவேண்டும் என்று நினைத்தான் அவன். அவன் எவ்வளவோ இரவுகளில் எவ்வளவோ தூரங்கள் நடந்து நல்ல செய்திகளும் கெட்ட செய்திகளும் கொண்டுபோயிருக்கிருன். ஆனுல் பாவுசா மைதானத்தை மட்டும் இன்னும் அவனுல் கடக்க முடியவில்லை. இலவ மரம் மிகவும் அருகில் வந்துவிட்டதாகத் தோன்றியது அவனுக்கு. ஒரு சமயம் பின்னுலிருந்து விரட்டுகிறது, ஒரு சமயம் முன்னுல் வந்து மிரட்டுகிறது. அவன் இரண்டு தடவை தன் கைத்தடியைத் தலைக்கு மேலே வேகமாகச் சுழற்றினன். தான் சிலம்பம் விளையாடுவது அவனுக்கு நினைவு வந்தது. சிலம்பத்தில் கெட்டிக் காரனுன அவன் அந்த மரத்தைத் தன் எதிராளியாக நினைத்துக் கொண்டு இடையிடையே தன் தடியைச் சுழற்றினன். லாந்தரை இடது கையில் வைத்துக்கொண்டு வலது கையால் தடியைச் சுழற்றிக்கொண்டே அவன் கீழே இறங்குகிருன். செடிகொடிகளில் அவனுடைய கால்கள் சிக்கிக்கொண்டதால் அவன் அவற்றைத்,

தடியால் விலக்கி விட்டுக்கொண்டு நடக்கிறன். அவன் இவ்வாறு செடிகொடிகளை விலக்கிவிட்டுக் கொள்வது, தன்னுடைய பாதையைக் கண்டுகொள்வதற்காக மட்டும் அல்ல, தன் பயத்தை மறப்பதற்காகவுந்தான். வயலில் இறங்கியதுமே அவனுடைய உடம்பு ஜில்லிட்டுப் போகிறது. கட்டுமஸ்தான உடம்பு ஈசமுக்கு. இந்தக் கிழவயதிலும் அவனுடைய கழுத்து விரைப்பாக நிமிர்ந்து நிற்கிறது. இருந்துங்கூட இந்த இரவு, இருட்டு, விசாலமான தாழ்நில மைதானம், இலவமரம் எல்லாமாகச் சேர்ந்துகொண்டு அவனை விரட்டுகின்றன ; ஏதோ ஒரு குழப்பத்தில் ஆழ்த்துகின்றன. விளக்கு வெளிச்சத்தில் பாதை தெரியவில்லை ஈசமுக்கு. இந்த மைதானத்தைக் கடந்துவிட்டால் மறுபடி கிராமம். பிறகு கிராமத்தி லிருந்து போகும் வழி, பூதம் மாதிரி தோற்றமளிக்கும் கோலா காந்தால் பாலம், அப்புறம் பூரிபூஜா மைதானம். அப்புறம் ஒன்றுக்குப் பின் ஒன்ருகக் கிராமங்கள் - புல்தா ஏரி, நமசூத்ரபாடா, பேடாப், போனுப், மாஸாப் கிராமங்கள்.

இருள் காரணமாக வானத்தில் இவ்வளவு நட்சத்திரங்கள் ஜொலிக்கின்றன. தாழ்நிலத்தின் இறக்கம் பாதாளத்துக்கே கொண்டுபோய்ச் சேர்த்துவிடும் போலிருக்கிறது. ஒற்றையடிப் பாதை இன்னும் சரியாக உருவாகவில்லை. அக்ராண் கழிந்து பௌஷ் மாதம் வந்தால், கதிர் அறுப்பு முடிந்துவிட்டால் பாதைகள் தெளிவாக உருப் பெற்றுவிடும். இப்போது இங்கிருந்து வழி கண்டு பிடித்து மறுகரையை அடைவது மிகவும் சிரமந்தான்.

ஈசம் வெகுநேரம் வரை ஒரு பழக்கமான பாதையைத் தேடிக் கொண்டிருந்தான். திருவிழாவுக்குச் செல்பவர்கள் இந்தப் பாதை வழியாகத்தான் மைதானத்தைக் கடப்பது வழக்கம். பயிர் வயல் களுக்கு நடுவே எங்கேயோ பாதை மறைந்து கிடக்கிறது. அவன் ஜாக்கிரதையாகப் பயிர்களை விலக்கி விலக்கிப் பார்த்துக்கொண்டு முன்னேறுகிறன். இதோ பாதை! ஆனல் சற்றுத் தூரம் சென்ற பிறகு தோன்றுகிறது, இது சரியான பாதையில்லை யென்று. பாதை அவனேடு கண்ணுமூச்சி விளையாட்டு விளையாடுகிறது போலும். அவன் நினைத்தான், ‘மைதானத்தின் ஓரமாக நடந்து கொண்டேயிருந்தால் நிச்சயம் பக்கத்துக் கிராமத்தை அடைந்து விடமுடியும்.’ மறுபடியும் அவன் மனத்துக்குள் சொல்லிக்கொண் டான், ‘அல்லாவே துணை!’ அவன் இந்த இரவில் இந்த மைதானத்தைக் கடக்கத்தான் வேண்டும். இருட்டில் பாதையைக் கண்டுபிடிப்பது எவ்வளவு கஷ்டமாக இருந்தாலும், அவனை மிரட்டும் சைத்தானின் கண் எவ்வளவு பயங்கரமாயிருந்தாலும்

அவன் இந்த மைதானத்தைக் கடந்து அடுத்த மைதானத்தை அடையத்தான் போகிருன்; தனபாபுவுக்குச் செய்தி தெரிவிக்கத் தான்போகிருன்!

அவன் ஒரு சமயம் உறுதியாக இருந்தான்; ஒரு சமயம் பயத்துக்கு ஆட்பட்டுப் பலமிழந்துபோகிருன். மைதானத்துக்குள் தான் முழுகிக்கொண் டிருப்பதாகத் தோன்றுகிறது அவனுக்கு. தான் ஒரே இடத்தைச் சுற்றிச் சுற்றி வருவதாகத் தோன்றுகிறது. அவனுல் கொஞ்சங்கூட முன்னேற முடியவில்லே. "கடவுளே துணே" என்று அவன் சொல்லிக்கொண்டான். தான் ஒரே இடத்தைச் சுற்றிச் சுற்றி வருகிருேமா என்று சோதித்துப் பார்த்துக் கொள்வதற்காக அவன் பயிர்களே விலக்கிவிட்டுச் சேற்று மண்ணில் தன் கைத்தடியை ஊன்றி வைத்தான். அந்த இடத்தை அடையாளம் கண்டுகொள்வதற்காகப் பக்கத்திலிருந்த செடி களேப் பிடுங்கி எறிந்தான். பிடுங்கப்பட்ட செடிகளே ஒரு சிலுவை போலத் தரையில் பரப்பி வைத்தான். அவற்றைச் சுற்றி வட்ட மாக ஒரு கோடு போட்டான்.

இந்த மைதானமும் இந்த வழியும் வெகுநேரமாக அவனுடன் விளேயாடுகின்றன. அவன் சற்று நேரம் உட்கார்ந்தான். பிரபஞ்சம் முழுவதும் சலனமற்று இருக்கிறது. பைத்தியக்காரப் பெரிய பாபுவைப் போல் மர்மம் நிறைந்ததாக இருக்கிறது. அவன் தனக்குத்தானே சிரித்துக்கொள்ள முயற்சி செய்தான். ஆனுல் அவனுடைய தொண்டை உலர்ந்து கிடந்தது. ஒரு சிறு இருமல் தொண்டையிலிருந்து வெளிப்பட்டது. உடனே அதன் ஒலி மைதானமெங்கும் பரவியது. எங்கிருந்தோ ஒரு புதுமாதிரி அரவம். அவன் உற்றுக் கேட்டான். இப்போது மைதானம் பைத்தியக்காரப் பாபுவைப் போல் மர்மம் நிறைந்ததாக இல்லே. அக்ராண் மாதப் பனியில் நனேந்து கிடந்த சூனிய மைதானம் அவனுடைய நொண்டிப் பெண்டாட்டியைப் போல உறங்கிக் கொண்டிருக்கிறது. ஜிஞ்ஜி முதலிய இரவு பூச்சிகள் குளிர்காலத்துக் காக ஏங்கிக்கொண் டிருக்கின்றன. குளிர்காலம் எப்போது வரும், எப்போது வயல்கள் காலியாகும், அவற்றில் எப்போது தானியங்கள் சிதறிக் கிடக்கும், நாம் பறந்து போய் அவற்றை எப்போது தின்னலாம், சுற்றலாம், ஆடலாம், விளேயாடலாம்!

அவன் இவ்வித ஏக்கக் குரல்களேக் கேட்கக் கேட்க, அதன் விளேவாகத் தானும் சோகத்தில் மூழ்க மூழ்க, அந்தப் பயங்கர இலவமரம் உச்சியில் எரியும் நெருப்புடன் அவனே நோக்கி முன்னேறி வருவதாகத் தோன்றுகிறது.

அந்த நெருப்பு எரிகிறது, பிறகு அணைகிறது ; அல்லது அணைந்து போய்க் கொள்ளிவாய்ப் பிசாசாக உருக்கொள்கிறது. தூரத்தில் மைதானத்தின் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரை ஆடி ஆடி அவனுக்கு விளையாட்டுக் காட்டுகிறது. அவன் சொல்லிக்கொண்டான் : ''ரொம்ப நல்லாயிருக்கு. இப்படி உட்கார்ந்திருந்தால் பயம் அவனை இன்னும் முடமாக்கிவிடும். அவன் உடனே எதிர்த் திசையில் ஓடிப் போனால்தான் ஏதாவது ஒரு கிராமத்தை அடைய முடியும் !''

அவன் லாந்தரை எடுத்துக்கொண்டு வேகமாக ஓட ஆரம்பித்தான். விளக்கு இரண்டு தடவை தப், தப் என்று பெரிதாக எரிந்தது. விளக்கு அணைந்துவிடுமோ என்று பயந்து அவன் ஓடுவதை நிறுத்திக்கொண்டான். அவனுடைய முழங்கால்களில் பலமே இல்லை. அவன் அடிக்கடி பின்பக்கம் திரும்பிப் பார்க்கிறான். இலவமரம் நிஜமாகவே தன்னை நோக்கி முன்னேறி வருவதை அவன் தெளிவாக உணர்கிறான். மரத்தின் உச்சியில் நெருப்புச் சுடர். அதன் கிளைகளிலெல்லாம் வைசூரி கண்டு இறந்தவர்களின் பிணங்கள் தொங்குகின்றன. அவன் சிலுவைக் குறி போட்டிருந்த இடத்துக்கு மறுபடி வந்திருக்கிறான். இலவமரத்துக்குத் திடீரென்று உயிர் வந்துவிட்டது ! அப்படியானால் அவன் உண்மையிலேயே ஒரு வட்டத்துக்குள் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்திருக்கிறான் ! ஈசம் பயத்தால் வெளிறிப் போய்த் தரையை உதைத்தான். அவன் பிடுங்கி எறிந்திருந்த செடிகள் பெருங்காற்றில் இருளில் சிதறின.

அவன் சைத்தானை நோக்கிச் சொன்னான் : ''சைத்தானோட மகனே, என்ன நினைச்சுட்டிருக்கே நீ ? ஏரியோட தண்ணிக்குள்ளே என்னை முழுகடிக்கப் பாக்கறியா ?'' அவன் தடியை மேலே சுழற்றினான். முஹர்ரம் திருவிழாவின்போது வாத்திய இசை முழங்க அவன் சிலம்பம் விளையாடுவான். தடியை முன்னும் பின்னும், மேலும் கீழும், வலப்பக்கமும் இடப்பக்கமும் சுழற்றுவான். தடியை முன்னால் நீட்டுவான் ; பிறகு பின்னால் இழுப்பான். இப்போது மைதானத்தின் கரையில் ஏறும்போது இம்மாதிரி சிலம்பம் செய்து கொண்டே போனான் ஈசம். இந்த மைதானமும் இலவமரமும் விளைவித்த பயம் அவனை ஆட்கொண்டுவிட்டன. சிலம்பம் விளையாடி என்ன பயன் ? யாரோ அவனைப் பின்பக்கமாக இழுக்கிறார்கள். அவனுக்கு நாற்புறமும் யாரோ நடந்து வருகிறார்கள். மைதானம் முழுதும் மனிதர்களின் காலடியோசை மிதக்கிறது. உருவமற்ற ஒரு சைத்தான் அவனுடன் கூடவே — ஆனால் அவனுடன் பேசாமல்— நடக்கிறான். ஈசம் மேலே ஏறுவதற்குப் பதிலாக இருளில் கீழே இறங்கிக் கொண்டிருக்கிறான். "கடவுளே, இது என்ன ?'' என்று

அவன் உரக்கக் கத்திவிட்டான். "தனபாபு, என்னைக் குருட்டுப் பிசாசு பிடுச்சுக்கிட்டிருக்கு !"

அவன் விளக்கையும் தடியையும் எறிந்துவிட்டு வயல் வரப்புக் களின் மேல் அலைந்து திரிய ஆரம்பித்தான். பயிர்கள் அவனுடைய கால்களைக் கீறுகின்றன. அவன் சுற்றிச் சுற்றி மறுபடி ஒரே இடத் துக்கு வந்து சேருகிறான். இப்போது அவன் கண்ணுக்கு நேர் எதிரே பிசாசின் வெளிச்சம் எரிந்து எரிந்து அணைகிறது. அந்த வெளிச்சம் ஆயிரம் கண்களாக மாறிவிட்டது. இருளில் அந்தக் கண்கள் பூதங்களாக ஜொலிக்கின்றன. ஈசமினால் இனியும் போராட முடியவில்லை. அவன் கொஞ்சங் கொஞ்சமாக நினைவிழந்து வரப்பின்மேல் விழுந்தான்.

முன்னால் கையில் லாந்தருடன் சுந்தர் அலி, பின்னால் தனபாபு. நான்கு நாட்களுக்கு முன் அவருக்குத் தன் மனைவியின் கடிதம் கிடைத்தது. அவள் எழுதியிருந்தாள்; 'எனக்கும் உடம்பு ரொம்ப முடியவில்லை. இப்போது நீங்கள் அருகில் இருந்தால் தேவலை' என்று. தனபாபு - சந்திரநாத் - கடிதம் கிடைத்த பிறகு தாமதம் செய்ய வில்லை. பெரிய ஆபீஸ் கட்டிடத்தில் இருந்த தம் இரண்டாவது அண்ணன் பூபேந்திரநாத்திடம் போய்ச் சொன்னார்: "நான் ஒரு தடவை ஊருக்குப் போயிட்டு வரலாமான்னு பார்க்கறேன், அண்ணா. இவ கடுதாசி எழுதியிருக்கா, உடம்பு சரியில்லையாம் !"

அண்ணா தம்பிக்குத் துணையாகச் சுந்தர் அலியை அனுப்பி யிருக்கிறார். போய்ச் சேருவதற்குள் நள்ளிரவாகிவிடும். அவருக்கு இப்போது வேலைப்பளு அதிகம். இல்லாவிட்டால் அவரும் ஊருக்கு வந்திருப்பார். ஆண் குழந்தை பிறந்திருக்கும் செய்தியறிந்திருந்தால் சந்திரநாத்துக்கு இவ்வளவு கவலை இருந்திருக்காது. அவர் வேகமாக நடக்கிறார். சீதலக்ஷா ஆற்றின் கரையோரமாகச் சற்றுத் தூரம் நடந்து, கடைவீதியை இடப்பக்கமாகக் கடந்து, மாஸாப் – போனாப் கிராமங்களின் வழியே புல்த்தா ஏரிக்கு வந்து அவர்கள் பயணத்தைத் தொடர்கிறார்கள். வேலைக்காரன் சந்தர் அலி இடையிடையே இருமுகிறான். சந்திரநாத் அந்த ஒலி கூட எழுப்பவில்லை. அவர்கள் பயமின்றி அரவமின்றி இந்த மைதானத்தில் இறங்கிவிட்டார்கள். மைதானத்தைக் கடந்துவிட்டால் பாவுசா ஏரி. அதன் பிறகு இரண்டு கோச தூரந்தான் வீடு. வீடு போய்ச் சேர அதிக நேரமாகாது.

திடீரென்று சுந்தர் அலி கூவினுன் : "எசமான், ரத்தம் !" லாந்தர் அவனுடைய கையிலிருந்து கீழே விழுந்துவிடும் போலிருந்தது. அவன் பின்பக்கம் ஓட முற்பட்டான்.

தனபாபு திடுக்கிட்டார். "இங்கே கூடவா கொலே கொள்ளே ?"

சுந்தர் அலி சொன்னுன் : "கரையோரமாகப் போகலாம் எசமான் ! நான் கீழே நடந்து வரமாட்டேன்."

தனபாபு அதட்டினுர் : "ரத்தமா ? எங்கே ? யார் கொலே செய்யப் பட்டாங்க, பார்ப்போம்!" அவர் கவனமாக விளக்கைத் தூக்கிக் கீழே கிடந்த மனிதனின் முகத்துக்கு நேரே கொண்டு போனுர். மிகவும் பழக்கமான முகம். அவனேச் சற்று அசைத்துப் பார்த்தார். மூச்சு இன்னும் இருக்கிறது. அவர் கூப்பிட்டார், "ஈசம், உனக்கு என்ன வந்துடுத்து ? ஈசம், ஈசம் !"

அவர் ஈசமின் உடம்பை நன்ருகக் கவனித்துப் பார்த்தார். அடி பட்ட அடையாளம் எதுவும் இல்லே அதில்.

தனபாபு ஈசமுக்கு அருகில் உட்கார்ந்துகொண்டு அவனுடைய கண்ணிமைகளேத் தூக்கிப் பார்த்தார். எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. ஈசம் மைதானத்தில் இருட்டில் வழி தவறிவிட்டா னென்று புரிந்தது. அவர் ஏரியிலிருந்து தண்ணீர் கொண்டுவந்தார். தண்ணீரில் துண்டை நனேத்து அவனுடைய முகத்தின்மேல் பிழிந்தார். அவனுக்கு நினேவு திரும்பியதும் சொன்னுர் : "என்ன, பயந்து போயிட்டியா ? நான்தான் உன்னேட தன மாமா."

ஈசம் மெதுவாகக் கண்களேத் திறந்து பார்த்தான். முதலில் அவனுல் நம்பவே முடியவில்லே. நம்பிக்கை இல்லாமலேயே அவன் கேட்டான் : " தனமாமாவா ? யார் தனமாமாவா ?" தனபாபுவைப் பார்த்து அவனுக்கு அழுகையே வந்துவிட்டது.

"மாமா, என்னேக் குருட்டுப் பிசாசு பிடிச்சுடுத்து. இந்த மைதானம் பூரா விரட்டி விரட்டியடிக்கிறது. என் உடம்பு உடம் பாகவே இல்லே, மாமா."

"மெதுவாக நடந்துவா. இங்கே எதுக்கு வந்தே ?"

இப்போதுதான் அவனுக்கு நினேவு வந்தது. அவன் ஏன் இந்த மைதானத்துக்கு வந்தான், எங்கே போக விரும்பினுன், அவன் என்ன செய்தி கொண்டுவந்தான் என்பனவெல்லாம்.

"மாமா, உங்களுக்குப் புள்ளே பொறந்திருக்கு. இதைச் சொல் லத்தான் பொறப்பட்டேன் நான். வழியிலே இந்தக் குருட்டுப் பிசாசு......"

விசாலமான மைதானத்தில் ஒளி—இருட்டு. என்ன பதில் சொல்வ தென்று புரியாமல் நின்ருர் சந்திரநாத். ஆகாயத்தில் ஆயிரக்கணக்

கான நட்சத்திரங்கள் ஜொலிக்கின்றன. குளிர்ந்த காற்று தானியத்தின் மணத்தைச் சுமந்துகொண்டு வருகிறது.

ஈசம் சொன்னான்: "வாங்க மாமா, மெதுவா நடக்கலாம்."

போகும்போது மிகவும் தயங்கிக்கொண்டே அவன் சொன்னான்: "எனக்கு ஒரு துணி கொடுக்கணும்."

அவர்கள் நடந்தபடி மேட்டு நிலத்துக் குளத்தங்கரைக்கு வந்தார்கள். அவர்கள் அரசமரத்தைக் கடக்கும்போது ஈசம், "பெரிய மாமா இருக்கீங்களா? பெரிய மாமா?" என்று கூப்பிட்டான். பதில் எதுவும் வரவில்லை. கரையில் அடர்த்தியான புதர்கள். இந்த இரவில், இந்தக் காட்டுக்குள் உட்கார்ந்திருப்பவரை யாராலும் கண்டுபிடிக்க முடியாது. உள்ளே யாராவது இருக்கிறாரா இல்லையா என்று பகல் நேரத்தில்கூடக் கண்டுபிடிப்பது கஷ்டம். ஈசமோ சந்திரநாத்தோ மறுபடி கூப்பிடவில்லை. பாகல் வயல்களைத் தாண்டித் தானிய வயல்களுக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது வயலுக்குள்ளிருந்து 'கச் - கச்' என்று ஒலியெழுவதை உணர்ந்தார்கள். வயலில் தண்ணீர் கொஞ்சந்தான். பாதங் கூட முழுவதும் நனையாது. ஈசம் லாந்தரைத் தூக்கிப் பார்த்தான்.— பெரிய பாபு!

வயலுக்குள்ளே பெரியபாபு குந்திக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார். ஈசம் உள்ளே நுழைந்து சொன்னான். "எழுந்திருங்க, வீட்டுக்குப் போகலாம். அம்மா உங்களுக்காகக் காத்துக்கிட்டிருக்காங்க."

ஆனால் பெரியவரின் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. முன் மாதிரியே உட்காந்திருந்தார் அவர். எழுந்திருக்கவே இல்லை. எதையோ அழுத்திக்கொண்டு அதன்மேல் உட்கார்ந்திருந்தார். அவருடைய கால்களுக்குக் கீழே இருட்டு, பயிர்கள், 'கச் – கச்' என்ற ஒலி. பயிர்கள் அசைகின்றன. ஈசம் விளக்கைக் கீழே கொண்டுவந்து பார்த்தான். ஒரு பெரிய ஆமை! அவர் ஓர் ஆமையை மல்லாத்திப் போட்டு அதன் மேல் உட்கார்ந்திருக்கிறார். ஆமை தன் கால்களை நீட்டி, முகத்தைத் தூக்கி அவரைக் கடிக்க முயற்சி செய்கிறது. அதனால் அவருடைய கால்களைக் கூடத் தொட முடியவில்லை. பயிர்கள் மட்டும் அசைகின்றன. ஈசம் ஏதோ சொல்ல முற்பட்டான். அப்போது ஆமையின் மார்பின் மேல் உட்கார்ந்திருந்த பெரிய பாபு கத்தினார். "காத்சோரத் சாலா!"

ஈசம் சொன்னான்: "நீங்க என்ன பண்றீங்க, பெரிய மாமா? இவ்வளவு பெரிய ஆமையைப் பிடிச்சு அதுமேலே உட்கார்ந்திருக்கீங்களே?"

பிறகு அவன் சொன்னான்: "நீங்க வீட்டுக்கு வாங்க. தனமாமா இதோ இருக்கார். அவருக்குப் புள்ளே பொறந்திருக்கு."

தன பாபு சொன்னர்: "எழுந்து வாங்க பெரியண்ணே! ஆமையை ஈசம் எடுத்துக்கிட்டு வருவான்."

பெரியவர் நல்ல பிள்ளை போல் தனபாபுவைத் தொடர்ந்தார். அவர் எப்போது ஓடுவாரோ, எப்போது கை தட்டுவாரோ என்பதை உத்தேசித்துத் தனபாபு அவரை முன்னல் போகவிட்டுத் தாம் அவரை ஜாக்கிரதையாகத் தொடர்ந்தார். பெரியவர் இருட்டில் ஓட முற்பட்டபோது தனபாபு சொன்னர்: "எங்கிட்டே தடி இருக்கு, பெரியண்ணு. ஓடினல் கால்மேலே போட்டுடுவேன். காலை உடைச்சுடுவேன்."

தம்பியின் வாயிலிருந்து இம்மாதிரி வார்த்தைகள் வருவதைக் கேட்டுப் பெரியவர் திரும்பி நின்ருர். 'என்னை நீ மிரட்டரயா சந்திரநாத்?' என்று கேட்பது போல் பரிதாபமாகத் தம்பியைப் பார்த்துக்கொண்டே நின்ருர். அவர் எப்போதுமே பேசுவதில்லை. அதுபோல் இப்போதும் மௌனமாகக் கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டு நின்ருர். அவருடைய கண்களைப் பார்த்தால் தோன்றும், நாற்பது வயதைக் கடந்த இந்த மனிதர் இப்போது ஆகாயத்தின் கோடிவரை கைகளை நீட்டிக் கை தட்டுவார் என்று.

வானமெங்கும் மங்கிய நிலவொளி. இப்போது உண்மையிலேயே பெரியவர் கைகள் இரண்டையும் உயரத் தூக்கிக் கைகொட்ட ஆரம்பித்துவிட்டார். அவர் வளர்த்து வந்த ஆயிரக்கணக்கான நீலகண்ட பட்சிகள் ஆகாயத்தின் ஏதோ ஒரு மூலையில் காணமற் போய்விட்டன போல; கைகொட்டுவது அவற்றைத் திருப்பி யழைப்பதற்காக. தனபாபு நின்றவாறே புதிதாக எல்லாவற்றையும் கவனித்தார். பெரிய அண்ணுவுக்குப் பெரிய பெரிய கண்கள், நீள மான மூக்கு. அகன்ற நெற்றிக்கருகில் ஒரு பெரிய மச்சம். எல்லா வற்றையும் விட முக்கியமாகச் சூரியனைப் போன்ற தேஜஸ் வாய்ந்த உடல் நிறம். ஆறரை அடி உயரம், நீண்டு நிமிர்ந்த ஆஜானுபாகு வான தேகம். அவரைப் பார்த்தால் மத்திய யுகத்து வீரன் ஒருவன், இரவின் இருளில் பாவங்களைத் தேடித் தண்டிக்க அலைவது போல் தோன்றும். அவருடைய அகன்ற ஆழ்ந்த விழிகள் நாள் முழுவதும் பட்டினி கிடந்ததால் குழிந்து கிடப்பதைக் கவனித்தார் சந்திரநாத். அவரால் தம் கண்ணீரை அடக்கிக்கொள்ள முடியவில்லை. அவரைப் பார்த்துச் சொன்னர்: "அண்ணு, நீங்க எவ்வளவு கஷ்டப்படறீங்க? பொறத்தியாருக்கும் எவ்வளவு கஷ்டம் கொடுக்கறீங்க?"

மணீந்திரநாத் – பெரிய அண்ணு, "காத் சோரத்சாலா" என்று மட்டும் சொன்னர். பிறகு தொடர்ந்து வானத்தைப் பார்த்துக் கை கொட்டினர். இந்தச் சப்தம் அப்பெரிய மைதானத்தில் ஆச்சரிய மான ஒலியை எழுப்பியது. அவ்வொலி கிராமங்களையும் திறந்த

வெளிகளையும் தாண்டி ஸோனுலிபாலி ஆற்றின் மணற்பரப்பையும் கடந்து, தர்மூஜ் வயல்களின் மேல் தொங்கிக்கொண்டு இருப்ப தாகத் தோன்றியது. வாழ்க்கையில் தாம் இழந்த எல்லா நீலகண்ட பட்சிகளும் திரும்பிவந்து இந்த நிர்ஜனமான இரவில் சேர்ந்து விடவேண்டும். இதுதான் அவருடைய பெரிய ஆசை. ஆனால் அவை திரும்பி வரவில்லை. இது அவருக்கு மிகவும் வேதனையைத் தந்தது.

இப்போது சந்திரநாத்தைத் தொடர்ந்து வீட்டை நோக்கிப் போகும்போது அவர் சொல்ல விரும்பியிருக்கலாம், 'சந்திரா, உனக்குப் புள்ளே பொறந்திருக்கு. எனக்கு ரொம்பச் சந்தோஷம்' என்று. ஆனால் அவர் வாயிலிருந்து வெளிவந்தது காத்சோரத்சாலா தான். அவர் தம் உணர்ச்சிகளை வெளிக்காட்ட இயலாமைக் குறித்து வேதனைப்பட்டார். வானத்தில் எவ்வளவு நட்சத்திரங்கள்! ஆனால் ஒன்றுமே அவருடைய பைத்தியக்கார எண்ணங்களைப் பகிர்ந்துகொள்ள விரும்பவில்லை. எல்லாமே அவருடைய கால்களை முறித்துவிட விரும்புகின்றன.

மணீந்திரநாத் வேறு வார்த்தை பேசாமல் தம் தம்பியைப் பின் தொடர்ந்து நடந்தார்.

மத்தளம் மிருதங்கங்களின் ஒலி கேட்கிறது. பைங்குழல் ஒலிக் கிறது. யாரோ டமாரம் அடிக்கிறார்கள். மக்கள் கூட்டமொன்று மத்தளங்களை ஒலித்துக்கொண்டு ஆற்றங்கரை வழியே வருகிறது. சசீந்திரநாத் குளத்தங்கரையில் நின்றுகொண்டு இந்த ஒலியைக் கேட்டான்.

பேலு நாராயண்கஞ்சிலிருந்து திரும்பி வந்துகொண் டிருக்கிறான். அவனுடைய கழுத்தில் கருப்பு ரிப்பன் தொங்குகிறது. அவன் சடுகுடு விளையாடிவிட்டுத் திரும்பிக்கொண் டிருக்கிறான். அவனுக்குக் கிடைத்த கோப்பைகளும் மெடல்களும் ஒரு கறுப்புத் துணியில் கட்டப்பட்டிருக்கின்றன.

இந்தத் தடவையும் பேலு கோபால்தியைச் சேர்ந்த பாபுக் களுக்கு எதிராக விளையாடிவிட்டு வந்திருக்கிறான். அவன் முகத்தில் குறுந்தாடி வளர்ந்திருப்பதாலும், அவன் எப்போதும் தோளில் ஒரு துண்டு அணிந்திருப்பதாலும் பனியனுக்குள் அவனுடைய மார்பு ஆமைபோல் தோற்றம் அளிக்கிறது. அது எவ்வளவு அகலம் என்று சொல்ல முடியாது.

ஆனால் கூட்டம் அருகில் வந்ததும் தெரிந்தது. அது பேலுவின் குழு அல்ல, வேறொரு குழு. அப்படியானால் இந்தத் தடவை பேலு தோற்றுப் போய்விட்டானா? அவனுடைய குழு ஏன் இன்னும் திரும்பவில்லை? பேலுவின் இளமை கழிந்துவிட்டது போலும். அவன் இளைஞனாக இருந்தபோது சடுகுடு விளையாட்டில் பெரிய விளையாட்டுக்காரர்களாக இருந்தவர்கள் இரண்டு பேர்தாம்: பேலுவும் சாபுவும். அப்போது இந்தப் பிராந்தியத்தில் பிஸ்வாஸ் பாடா, நயாபாடா, ஏன், பத்து இருபது கோச தூரத்தில், அல்லது கோபால்தி மைதானத்தில், அல்லது ஆற்றைக் கடந்து மேக்னா நதியின் மணல் வெளியில் அவர்களுடைய விளையாட்டைப் பார்க்கச் சாரிசாரியாக மக்கள் கூடுவார்கள்.

பேலு, 'சடுகுடு ..சடுகுடு!' என்று சொல்லிக்கொண்டே நடுக் கோட்டைத் தாண்டிப் புலி போல் பாயும்போது, கடைசி ஆட்டத்தில் தம்பட்டங்களும், பாக்பைப்புகளும் ஒலிக்கும்போது பேலுவின் முகத்தைப் பார்த்தால் அவன் மிகப் பெரிய விளையாட்டு வீரனென்று தோன்றும். அப்போது அவன் கழுத்தில் எவ்வளவு மெடல்கள் தொங்கும்!

அவன் தன் கட்சிக்காக எவ்வளவு கோப்பைகள் வாங்கித் தந்திருக்கிறான்! இரவு பகல் பார்க்காமல் பேலு இருபது இருபத்தைந்து கோசதூரங்கூட நடந்து போய் விளையாடியிருக்கிறான். ஒரு தடவை பட்டணத்தில் விளையாடி ஜயித்து திரும்பி வரும் போது பல்லக்கில் வந்திருக்கிறான். எங்கும், 'பேலுவுக்கு ஜே, பேலுவுக்கு ஜே!' கோஷந்தான். பல்லக்கின் இருபுறமும் இரண்டு பேர்களின் தலைமேல் இரண்டு பெரிய கோப்பைகள். பெட்ரோமாக்ஸ் விளக்கும் தம்பட்டை ஒலியுமாக அவர்கள் பட்டணத்திலிருந்து கிராமத்துக்கு ஊர்வலமாக வந்தார்கள். ஊர்வலம் லாங்கல்பந்த் மைதானத்தையும் நதியையும் கடந்ததும் கிராமத்து ஆண்களும் பெண்களும் ஊர்வலத்தைப் பார்க்க வந்து நின்றார்கள். அதற்கு முடிவே இல்லை. அவர்கள் பேலுவைப் பார்த்தார்கள், இரண்டு பெரிய கோப்பைகளையும் பார்த்தார்கள். கறுப்பு ரிப்பன் அணிந்த சடுகுடு ஆட்டக்காரர்களைப் பார்த்தார்கள். டாக்காவில் ஜூலன் ஊர்வலத்தைப் பார்ப்பது போல.

அப்படிப்பட்ட பேலு இப்போது தோற்றுப் போய்விட்டான் போலும். மாற்றுக் கட்சி ஆட்கள் 'கோபால்தி பாபுகளுக்கு ஜே!' என்று கத்திக்கொண்டு போகிறார்கள். இந்தச் சமயத்தில் பேலுவின் முகத்தைப் பார்க்கவேண்டுமென்று தோன்றியது சசீந்திரநாத்துக்கு. தோற்றுப்போன பேலு முன்னதாகவே வீடு போய்ச் சேர்ந்திருக்

கலாம். அவன் வேறொன்றும் செய்ய முடியாமல் தன் பெண்டாட்டி ஆன்னுவை அடித்துக்கொண் டிருப்பான்.

சந்திரநாத் இப்போது தம் பிள்ளையைப் பார்த்துக்கொண் டிருக்கிறார். பிரசவ அறையில் சசிபாலா சந்திரநாத்தைச் சற்றுக் குனிந்து பார்க்கச் சொன்னாள். வெற்றிலை போட்டுக்கொண் டிருந்ததால் அவருடைய மனைவியின் உதடுகள் சிவந்திருந்தன. நெற்றி சூனியமாக இருந்தது. இந்தச் சில நாட்கள் குங்குமம் அணிந்து கொள்ளக் கூடாது. அறைக்குள் ஈரவிரகு எரிகிறது. சில கிழிந்த கந்தைகள். ஒரு மூலையில் நெருப்பு கணகணவென்று எரிகிறது. அவள் குழந்தையை அவருக்கு முன்னால் தூக்கிக் காட்டினாள். சந்திரநாத் குழந்தையைப் பார்க்காமல் அவளுடைய முகத்தைப் பார்த்தார். அந்த முகம் எவ்வளவு வெளிறியிருக்கிறது! ஆம்பல் இலையின் நிறம் போல இருந்தது முகத்தின் நிறம். மறுபடி தாயாகி விட்ட பெருமை அவளுடைய கண்களில் ஒளிவிட்டது. அவளுடைய கைகளில் அணிந்திருந்த இரும்பு வளையல், சிவப்புக் கரைப் புடைவை, இரண்டு கைகளாலும் குழந்தையைத் தூக்கிக் காட்டும் பாணி, இவை எல்லாம் சேர்த்து கிசுகிசுவென்று கேட்கின்றன, 'குழந்தை எப்படி இருக்கு? யார் மாதிரி இருக்கு? உங்க மாதிரியா, என் மாதிரியா?'

மணீந்திரநாத் ஓர் அரச மரத்தடியில் நின்றார். இந்த வழியாகத் தான் சடுகுடு விளையாட்டுக் கோஷ்டி சென்றிருந்தது. கோப்பைகளையும் மெடல்களையும் மக்களின் உற்சாகத்தையும் பார்ப்பதற்காக அவர் வெளியே வந்திருந்தார். இப்போது விளையாட்டுக் கோஷ்டி நயாபாடா மைதானத்துக்குள் இறங்கிப் போய்விட்டது. அவர் அவர்களுடன் அவ்வளவு தூரம் போகவில்லை. இந்த அரசமரத் தடிக்கு வந்ததுமே அவர் தூரத்தில் ஒரு கோட்டையைக் காண்கிறார்.

கோட்டையில் சில குதிரை வீரர்கள்—இளைஞர்கள்—அணிவகுப்புப் பழகுகிறார்கள். கோட்டை வாசல் திறந்ததும் ஆயிரக்கணக்கான வீரர்கள் வெளியே மைதானத்துக்கு வந்து, தங்கள் திறமையைக் காட்டுவதுபோல் மரத்தின் மேல் தலைக்கு நேரே ஆயிரக்கணக்கான கங்கா மைனாப் பறவைகள் பறந்து பறந்து வேடிக்கை காட்டுகின்றன. இன்னும் ஆற்றிலிருந்து திரும்பி வராத பறவைகள், ஆற்று மணலிலும் ஏரி நீரிலும் புழு பூச்சிகளைத் தேடித் தேடித் தின்னும் பறவைகள் எல்லாம் இப்போது திரும்பி வந்துவிடும். அவை திரும்பி வந்ததும் அவர் இந்த மரத்தடியில் தம் மனத்துக்குப் பிடித்தமான ஓர் உலகத்தைச் சிருஷ்டி செய்துகொண்டு உட்கார்ந்திருப்பார்.

அரச மரத்தடியில் சில மட்கிலாச் செடிகள், சில பிரம்புப் புதர்கள், காட்டு நாணற்செடிகள் எல்லாம் இருந்தன. சில குருவிகள் இடை

விடாமல் புதர்களின் மேல் ஆடிப் பறந்து திரிகின்றன. மணீந்திரநாத் மரத்தைப் பிரதட்சிணம் செய்வது போல் சுற்றிச் சுற்றி வந்தார். எவ்வளவு பெரிய மரம்! கடவுளைப் போல அவருக்கு முன்னால் நின்று கொண்டிருந்தது அது. கடவுளையே பிரதட்சிணம் செய்வது போன்ற பாவம் அவருடைய கண்களில். அவர் தலையைத் தூக்கி மரத்தைப் பார்க்கிறார், ஏதோ வாயால் முணுமுணுக்கிறார். அப்போது அந்தப் பக்கம் போய்க்கொண்டிருந்த முஸ்லிம் கிராமத்து மக்கள் அவருக்கு வணக்கம் தெரிவித்தார்கள். அவர்கள் சொல்லிக்கொண்டார்கள், "எப்பேர்ப்பட்ட மனிஷர் எப்படி ஆயிட்டார்!" என்று. அவரிடம் சொன்னார்கள். "வீட்டுக்கு வாங்க. கொண்டுபோய் விட்டுட்டுப் போறோம்."

மணீந்திரநாத் அவர்களுடைய பேச்சைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்தார். அவர்கள் போன பிறகு ஜாக்கிரதையாகப் புதருக்குள் நுழைந்து உட்கார்ந்து கொண்டார். சப்தம் செய்யாமல் அங்கே உட்கார்ந்துகொண்டு ஒரு மட்கிலாக் குச்சியை ஒடித்துப் பல் துலக்கத தொடங்கினார். பல நாட்களாகப் பல் துலக்கவே மறந்து விட்டவர் போல் அவர் தம் வாய்நாற்றத்தைப் போக்கிக் கொள்வதற்காகப் பற்களை அழுத்தி அழுத்தித் தேய்த்துக் கொள்ள ஆரம்பித்தார். கிராமத்துக்கு வந்துகொண்டிருந்த ஆபேத் அலி அவர் புதருக்குள் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவன் சொன்னான்: "வீட்டுக்குப் போங்க, எசமான்! மானத்தோட நிலைமை நல்லாயில்லே."

மணீந்திரநாத் அவனுடைய பேச்சைக் கேட்டும் சும்மா சிரித்தார். முஸ்லிம் பெண்கள் அல்லிக் கிழங்கு சேகரித்துக்கொண்டு வீடு திரும்பிக்கொண்டிருந்தார்கள். புதருக்குள் 'கச் கச்' என்ற ஒலியைக் கேட்டு அவர்கள் உள்ளே எட்டிப் பார்த்தார்கள். பைத்தியக்கார பாபு குழந்தையைப் போல் தவழ்ந்துகொண்டு எதையோ தேடிக் கொண்டிருக்கிறார். அவர்கள் சொன்னார்கள்: "எசமான், வீட்டுக்குப் போங்க. அம்மா கவலைப் பட்டுக்கிட்டிருப்பாங்க. மானத்திலே ரொம்ப இறுக்கமாயிருக்கு."

அவரைப் பலவந்தமாக இழுத்துக்கொண்டு போகலாமா என்று தோன்றியது ஆபேத் அலிக்கு. ஆனால் அவருடைய தாய் சசிபாலா அம்மாவின் நினைவு வந்து அவனைத் தடுத்தது. அவன் அப்படி அவரை அழைத்து வருவது அம்மாவுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். "நீ ஏன் தொட்டு இழுத்துக்கொண்டு வந்தே?" என்று அவள் கேட்கலாம். மறுபடியும் அவருக்கு ஸ்நானம் செய்துவைக்க வேண்டியிருக்கும். இவற்றையெல்லாம் யோசித்துப் பார்த்த அவன்

அங்கே அப்புறம் நிற்கவில்லை. அவன் சந்தாக் குடும்பத்தினரின் படகில் வேலை செய்கிறான். ஆற்றில் படகை நிறுத்தி வைத்துவிட்டு, பல நாட்களுக்குப் பிறகு களைப்புடன் வீடு திரும்புகிறான். ஆயினும் வானத்தின் நிலையைப் பார்த்து அவனுக்குப் பயம் தோன்றியது. புயலும் மழையும் ஆரம்பித்துவிட்டால் மனிதர் நனைந்து செத்துப் போய்விடுவார். அவன் ஆற்று மணலில் இறங்கி அங்கிருந்த ஈசமின் குடிசையை நோக்கி நடந்தான். ஈசமுக்குச் செய்தி சொல்லிவிட்டு வீடு திரும்ப நினைத்தான் அவன்.

சொர் சொர் என்று மழை பெய்யத் தொடங்கியது. குளிர்ந்த காற்றும் வீசியது. வானம் இருக்கும் நிலையைப் பார்த்துவிட்டு மக்கள் வயல்களிலிருந்து கிராமத்தை நோக்கி வர ஆரம்பித்தார்கள். சம்சாரிகள் மாடு கன்றுகளை இழுத்துக்கொண்டு வீடு திரும்பினார்கள். புயல் மழை ஏற்படலாம்; ஆலங்கட்டி மழை பெய்யலாம். ஆகாயம் கொஞ்சங் கொஞ்சமாகக் கறுத்துவிட்டது. ஓரிரண்டு வெள்ளைக் கொக்குகள் இங்குமங்கும் பறந்து எங்கோ சூனியத்தில் மறையத் தொடங்கின. எங்கும் ஒருவித இறுக்கம். இப்போது மரஞ்செடிகள் எதுவும் அசையவில்லை. முஸ்லிம் கிராமத்தில் கோழிகள் கூவுகின்றன. ஆகாயம் கறுக்கக் கறுக்க, பூமியின் தோற்றம் பயங்கரமாக ஆக ஆக மணீந்திரநாத்துக்கு உற்சாகம் அதிகரித்தது. என்ன உற்சாகம்! என்ன உற்சாகம்! அவர் சுற்றிச் சுற்றி ஆடத் தொடங்கிவிட்டார். வெறிபிடித்த ஆகாயத்தைப் பார்த்துவிட்டு ஆனந்தம் மேலிட்டவராக அவர் கை கொட்டினார். நடனமாடிக்கொண்டே கை கொட்டினார், உலகமே தம்முடன் சேர்ந்து கைகொட்டுகிறாற் போன்ற உணர்வுடன். சொட்டுச் சொட்டென்று மழைத்துளிகள் விழுகின்றன. செடிகளின் இலைகள் நனைகின்றன. வெயிலாயிருந்தால் அவருடைய மூளை விறைத்துப் போய்விடும். இப்போது இந்த மழையும், குளிர்ந்த ஆகாயமும் அவரை ஓரளவு தன்னிலைக்குக் கொண்டுவந்தன. ஆனால் எந்த நேரத்திலும் சசீந்திரநாத் அல்லது சந்திரநாத் வந்துவிடலாம். அவர்கள் அவரைப் பார்த்து வலுக்கட்டாயமாக இழுத்துக்கொண்டு போய்விடுவார்கள். கடவுளைப் போன்ற இந்த மரத்திலிருந்து அவர்கள் தம்மைப் பிரித்து இழுத்துக்கொண்டு போய்விடுவார்கள் என்ற நினைப்பு வந்ததும் அவர் தம்மைத் துணியால் மரத்துடன் கட்டிக்கொண்டு அதில் விதவிதமாக முடிச்சுக்கள் போட்டுக் கொண்டார். இப்போது இந்தப் புயலில் யாரும் அவரை இழுத்துக் கொண்டு போக முடியாது. அவர் தம்மை மரத்துடன் துணியால் இறுகக் கட்டிக்கொண்டுவிட்டார்.

ஆபேத் அலி தோடார்பாகைக் கடந்து பாதை வழியே நடந் தான், வீட்டு வேலைகளையும் தொழுகையையும் மறந்து. அவன் ஈசமைப் பார்க்கப் போய்க்கொண் டிருக்கிறன். ஈசமின் குடிசையில் விளக்கு எரியக் காணேம். அவன் மேட்டில் நின்றுகொண்டு கூப்பிட்டான்: "ஈசம் சித்தப்பா, இருக்கீங்களா?" மழையில் அவனுடைய உடம்பு நனைந்துவிட்டது. காற்று வீசுவதால் குளிரா யிருந்தது. ஆகையால் அவனல் வெகுநேரம் காத்திருக்க இயல வில்லை. அவன் தன் ஊருக்குத் திரும்பி, வீட்டுக்கு முன்னல் வந்து நின்றுகொண்டு, "ஜப்பரோட அம்மா! நான் வந்துட்டேன், கதவைத் திற!" என்றன்.

ஒரு பதிலும் வராமலிருக்கவே அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. அவன் உரக்கக் கத்தினன்: "நீங்க செத்துப் போயிட்டீங்களா, என்ன?"

மழை காரணமாகவோ அல்லது வேறெந்தக் காரணத்தாலோ ஜப்பர் கதவைத் திறக்கத் தாமதம் செய்தான். ஆபேத் அலி மறுபடியும் மறுபடியும் கதவைத் தட்டிக்கொண்டே இருந்தான். ஜப்பர் கதவைத் திறந்ததும் அவன் வெறி பிடித்தவன் போல் கத்தினன்; "உன்னேட அம்மா எங்கே?"

"அம்மா சாமுவோட வீட்டுக்குப் போயிருக்கா."

"ஏன்?" என்று கேட்டுக்கொண்டே ஆபேத் அலி தன் லுங்கியால் உடம்பையும் முகத்தையும் துடைத்துக்கொண்டான்.

"சாமு வீட்டிலே ஏதோ விசேஷமாம்."

ஆபேத் அலி மூன்று நான்கு நாட்களுக்குப் பிறகு வீடு திரும்பி யிருக்கிறன். ஆகையால் கிராமத்தில் எங்கே என்ன நடக்கிறது என்று அவனுக்குத் தெரியக் காரணமில்லை. அவன் சந்தாக் குடும்பத் தினரின் படகை ஓட்டிக்கொண்டு நாராயண்கஞ்ச் போயிருந்தான், சாமான்கள் வாங்கி வர. சந்தாக் குடும்பத்தினர் தந்தியில் ஒரு மளிகைக் கடை வைத்திருந்தார்கள்.

ஆபேத் அலியின் மனத்தில் அமைதி இல்லை. பெரிய பாபு இன்னும் புதருக்குள் உட்கார்ந்திருக்கிறரோ என்று கவலையாக இருந்தது அவனுக்கு. வீட்டில் அவருக்காக எல்லோரும் கலவரப் பட்டுக்கொண் டிருப்பார்கள். யாராவது அவரைத் தேடப் புறப்பட்டிருக்கலாம்.

அவன் தன் பிள்ளையிடம் சொன்னன்: "ஒரு காரியம் செய் யறியா?"

ஜப்பர் எரிச்சலுடன் கேட்டான்: "என்ன செய்யணும்?' ஏனென்றல் தகப்பன் அவனை வயலிலிருந்து வைக்கோல் எடுத்துக்

கொண்டுவரச் சொல்லலாம், வைக்கோல் ஈரமாகிவிட்டால் மாடு தின்னுது என்று.

முதலில் தன் மனைவியைக் கூப்பிடச் சொல்லலாமென்று நினைத்தான் ஆபேத் அலி. அவன் வேலை செய்துவிட்டு வந்திருக்கிறன். அவனுடைய பெண்டாட்டி அவனை உட்கார்த்தி வச்சு அவனுக்குச் சாப்பாடு போடல்லே. ஆதரவா நாலு வார்த்தை பேசல்லே. யார் வீட்டிலேயோ ஆனந்தமாக் கூத்தடிச்சிக்கிட்டிருக்கா. அவன் எரிச்சலுடன் சொன்னுன்: "உன்னுடை அம்மாவைக் கூப்பிடு!"

"அம்மா இப்போ வருவாளா?"

"ஏன் வரமாட்டா? மூணு நாளாத் துடுப்பு வலிச்சுட்டு வந்திருக்கேன். என்னைப் பத்தி ஒங்களுக்கு கொஞ்சங்கூடக் கவலை இல்லியா?"

"நீங்க இன்னும் ரொம்ப நாள் கஷ்டப்படவேண்டாம், பாபா ஜான்!"

பையனின் பேச்சில் எதையோ புரிந்துகொண்டவன் போல் ஆபேத் அலி சொன்னுன். "சரி, சரி. வாயை மூடு."

ஜப்பர் பேசாமல் புல்லால் ஆன கிழிந்த ஆசனத்தின் ஓர் ஓரத்தில் உட்கார்ந்திருந்தான். பிறகு திடீரென்று கேட்டான்: "ஹுக்கா பிடிக்கறீங்களா, பாபாஜான்?"

பையனுக்கும் கொஞ்சம் ஹுக்கா பிடிக்க ஆசையாக இருக்கிறதென்று ஆபேத் அலிக்குப் புரிந்தது. தன் மனத்தை நிதானத்துக்குக் கொண்டுவருவதற்காக அவன் சொன்னுன்: "கொண்டு வா!"

ஜப்பர் ஹுக்காவைத் தயார் செய்து தகப்பனுக்குக் கொடுத்தான். பிறகு தானும் அதில் இரண்டு இழுப்பு இழுத்துவிட்டுச் சொன்னுன்: "நீங்க தொழுகை செய்யுங்க. நான் சாப்பாடு போடறேன்."

"தொழுகை பண்ணப் போறதில்லே."

ஆபேத் அலி எழுந்தான். ஒரு பாத்திரத்தில் மழைநீரை ஏந்தி அதைக் கொண்டு கைகளையும் முகத்தையும் கழுவிக்கொண்டான். வெளியே மழை பலமாகப் பெய்கிறது. நடுநடுவே மின்னல் ஆகாயத்தைக் கிழிக்கிறது, யாரோ வானத்தின் மேல் ஒரு பொற்கொடியைப் படரவிட்டிருப்பது போல. பாளம் பாளமாகப் பிளவுபட்டிருந்த வானத்தில் இடி முழங்கியது. ஆபேத் அலியின் வீடு கீழே விழுந்துவிடும் போல இருந்தது. வைக்கோல் கூரை நைந்து போய்விட்டது. அதன் வழியே தண்ணீர் ஓடுகிறது. சணல் தட்டையாலான வேலியும் பாழாகிவிட்டது. மூங்கில் பரணில் கிழிந்த ஜமக்காளமும் தலையணையும். கீழே கிழிந்த பாய். ஆபேத் அலி பாயின் மேல் சாப்பிட உட்கார்ந்தான். வெளியே மழையுடன்

புயல் அடிக்கிறது. கல்யாண முருங்கை மரத்தின் கிளையொன்று புயலில் முறிந்து விழுந்தது.

ஆபேத் அலி நயமாக, சௌஜன்யமான குரலில் பிள்ளையைக் கூப்பிட்டான் : "ஜப்பர் ! ஜப்பர் !"

"என்ன சொல்றீங்க ?"

"ஒரு காரியம் செய்வியா ?"

"என்ன வேலை ?"

"ஒரு தடவை டாகுர் வீட்டுக்குப் போய், பெரிய பாபு இடுகாட்டு மைதானத்துலே ஆலமரத்தடியிலே உட்கார்ந்திருக்கார்னு சொல்லிட்டு வர்றீயா ? பாவம், பெரிய பாபுவுக்கு ரொம்பக் கஷ்டம். போ, போய்ச் சொல்லிவிட்டு வா."

"என்னாலே முடியாது, பாபா ஜான் ! வேறே ஏதாவது வேலை இருந்தாச் சொல்லுங்க."

ஆபேத் அலி சாப்பாட்டை விட்டு எழுந்துவிட்டான். அவன் ஜப்பரைக் கொன்றுவிட நினைப்பவன் போல் அவன் முன்னே வந்து காலைத் தூக்கினான். பிறகு ஏதோ நினைத்துக் காலைப் பின்னுக்கிழுத்துக் கொண்டு சொன்னான். "அயோக்கிய ராஸ்கல், நீயா என்னோட தகப்பன் ? நீ சொல்றபடியா நான் கேட்கணும் ?"

ஜப்பர் தலை குனிந்தவாறு அப்படியே உட்கார்ந்திருந்தான். "எனக்கு வேறே வேலை இருந்தாச் சொல்லுங்க."

அவன் தனக்குள்ளே ஏதோ நிச்சயம் செய்துகொண் டிருந்தான். நாட்கள் மிகவும் கஷ்டத்துடன்தான் கழிகின்றன. அவனுடைய தகப்பன் எவ்வளவு நாள் கழித்துத் திரும்பி வந்திருக்கிறான். வந்தவன் அன்பா நாலு வார்த்தை பேசாமல், புனுகுபூனை மாதிரி உறுமுகிறான்.

அவன் இதுவரை வெளியிட விரும்பாமல் இருந்த ஒரு விஷயத்தை– இப்போது தந்தையின் முரட்டுத்தனத்தையும் கோபத்தையும் பார்த்து—தெரிவித்துவிடலாமா என்று நினைத்தான். அப்பன் மறுபடி ஏதாவது பேசினால் சொல்லியேவிடுவான் அவன்.

" என்ன போகமாட்டியா ?"

" மாட்டேன். வேறே வேலை இருந்தாச் சொல்லுங்க."

" அப்போ நான் சொல்றதைக் கேட்கமாட்டே ?"

"மாட்டேன்."

"ஏன் ? என்ன ஆயிடுத்து ?"

ஆபேத் அலியின் குரல் சற்றுத் தாழ்ந்தது.

" நான் லீகிலே பேர் கொடுத்திருக்கேன்."

"என்ன செஞ்சே ? என்ன செஞ்சே ? லீகிலே பேர் கொடுத்து உங்க அப்பனுக்குச் சொர்க்கவாசல் திறந்து வச்சுட்டியோ ?"

"இதுலே என்ன வந்தது? இந்து ஜனங்க நம்மைப் பாத்தாக் காறி உமிழுருங்க. நாமும் அவங்க மேலே காறித் துப்புவோம்."

"சாமு வீட்டிலே இதுக்காகத்தான் கூட்டமா?"

ஜப்பர் மௌனமாயிருந்தான்.

தகப்பன் பிள்ளை இருவருமே பேசாமல் இருந்தார்கள். ஆபேத்அலி மறுபடி சாப்பிட உட்கார்ந்தான், தலையைக் குனிந்துகொண்டு. கண்களில் நீர் ததும்பியது. சாப்பாடு உறைத்ததாலா, பிள்ளையின் பேச்சாலா என்று தெரியவில்லை. இந்தத் துன்பத்தைச் சமாளிப்பதற்காக அவன் தண்ணீர் குடித்துக்கொண்டே இருந்தான். பிறகு மிகவும் மெதுவாக – வெகுதூரத்திலிருந்து பேசுவது போலச் சொன்னுன்: "பெரிய பாபு தண்ணீயிலே நனைஞ்சுக்கிட்டிருக்கார், நீ போகலேன்னு நா போறேன்."

ஆபேத் அலி தண்ணீர்ப் பாத்திரத்தின் மூக்கைத் தன் வாயில் வைத்துக்கொண்டு வார்த்தை போல் தண்ணீரைக் 'களுக் களுக்' என்று விழுங்கினுன். பிறகு மிச்ச நீரை வாயில் வைத்து வெகு நேரம் கொப்புளித்துத் துப்பினுன். பல்லிடுக்குகளில் ஒட்டிக் கொண்டிருந்த உணவுத் துணுக்குகளை நாக்கால் துழாவி எடுத்து அவற்றை ருசித்தவாறே ஜப்பரைக் குரூரமாகப் பார்த்தான். பார்த்துக்கொண்டே சொன்னுன்: "நீ என் சாப்பாட்டைச் சாப்பிடக் கூடாது. நாளையிலேருந்து உனக்குச் சாப்பாடு இல்லே."

ஆத்திரம் ஆத்திரமாக இருந்தது ஆபேத் அலிக்கு. தன் பிள்ளை இவ்வாறு கௌரவம் பாராட்டுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. மூன்று நாளைய உழைப்பின் சிரமமும் வீட்டில் மனைவி இல்லாதிருப்பதும் அவனுக்கு வெறியை உண்டாக்கின. வீட்டு மூலையிலிருந்த ஈட்டியை எடுத்துப் பிள்ளையின் வயிற்றைக் கிழிக்கத் தோன்றியது அவனுக்கு.

ஏதோ நினைத்து அவன் சொன்னுன்: "அல்லா, தேசத்திலே இதென்ன ஆரம்பிச்சிருக்கு?"

அவனுடைய பாதி நரைத்த தாடி வழியே நீர்த்துளிகள் வழிந்து கீழே விழுந்தன. சிம்னி விளக்கின் ஒளியில் அவனுடைய முகத்தில் உணர்ச்சி கொந்தளித்தது. டாக்காவில் கலகம் ஏற்பட்டு விட்டது. இந்த விஷயம் ஏனே அடிக்கடி நினைவுக்கு வந்தது அவனுக்கு. இந்துக்கள் – முஸ்லிம்கள் இரு ஜாதியினருமே செத்துக் கொண்டிருக்கிருர்கள். சேப்பங்கிழங்கு சீவப்படுவது போல், முஸ்லிம்கள் கொல்லப்பட்டால் அவன் உணர்ச்சி வசப்பட்டு விடுகிறுன். ஆனுல், பெரிய பாபு, தன பாபு, இன்னும் பக்கத்துக் கிராமத்திலுள்ள பல இந்துக்கள் ஆகியவர்களுடைய தாராள மனப்

பான்மை, அவர்களுடன் தலைமுறை தலைமுறையாக இருந்துவரும் இதய பூர்வமான உறவு ஆகியவை அவனுடைய வருத்தத்தையும் ஆத்திரத்தையும் போக்கிவிடுகின்றன.

ஆபேத் அலி வீட்டுக்குள்ளிருந்தே கையை வெளியே நீட்டிப் பார்த்தான். பிறகு ஒரு மூங்கில் தொப்பியைத் தலையில் போட்டுக் கொண்டு இருட்டுப் பாதையில் இறங்கினான்.

சசீந்திரநாத் போய்க் கொண்டிருந்தார். முன்னால் ஈசம் நடந்து கொண்டிருந்தான். பேசிக்கொண்டே போனான்: "சம்சாரத்தில் எத்தனை வகை துக்கங்கள்? பெரிய பாபு சாயங்காலத்திலிருந்து காணாமல் போய்விட்டார். எங்கே போயிட்டாரோ? இந்த மழையி லேயும் புயல்லேயும் எங்கே ஆம்பிட்டுக்கிட்டாரோ? நம்ம விரோதிக்குக் கூட இந்த மாதிரி கஷ்டம் வரவேண்டாம். செத்துப் போயிட்டாக்கூட 'ஏதோ போயிட்டார்'னு நினைச்சுக்கலாம். எவ்வளவு நாள்தான் இந்தப் பரிதாபத்தைப் பார்த்துக்கிட்டு இருக்கணுமோ?"

சசீ மழையிலும் குளிரிலும் நடுங்கிக் கொண்டிருந்தார். ஈசமுந் தான். அவர்கள் வேகமாக நடந்தார்கள். பல வயல்களைக் கடந்து முஸ்லிம் பாடாவுக்குள் நுழைந்தபோது இஸ்மதாலியின் பெரிய பையன் மன்சூர் வராந்தாவில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அவனுக்கு முன்னால் குர்ஆன். மேலே கயிற்றில் லாந்தர் தொங்கு கிறது. புயலும் மழையும் குறைந்திருக்கின்றன. சாயங்காலமானதும் அவன் வழக்கம் போல் படிக்க உட்கார்ந்தபோது மழை வெள்ளத்தில் கிராமமே மிதந்துகொண் டிருப்பதைக் கண்டான். அவன் மாடுகளைக் கொட்டத்தில் அடைத்து, வாத்துக்களைக் கூண்டுக்குள் விரட்டிவிட்டு, ஜன்னல் கதவுகளை மூடிவிட்டு உட்கார்ந்திருந்தான். புயலும் மழையும் குறைந்ததும் ஜன்னல்களைத் திறந்துவைத்தான். ஆகாயம் முன்போல் கர்ஜனை செய்யவில்லை. தொழுகை செய்யும் பாவனையில் குனிந்து உட்கார்ந்தபோது அவன் சுரைக்காய்ப் பந்தலில் வெளிச்சம் வந்து விழுவதைக் கவனித்தான். பிறகு வெளிச்சம் அவனுடைய வீட்டுப் பக்கம் வந்தது. டாகுர் வீட்டுச் சின்ன பாபு - சசீ டாகுர் வந்துகொண்டிருக்கிறார்; கூட ஈசமும் வருகிறான். அவன் அவசர அவசரமாக இறங்கி வந்தான். "இந்த மழையிலே எங்கே கிளம்பினீங்க?"

"எங்க பெரிய அண்ணாவைப் பார்த்தியா?"

"இல்லையே எசமான். அவுரு இன்னிக்கு இந்தப் பக்கம் வரல்லியே."

மன்சூர் ஹரிக்கேன் விளக்கை எடுத்துக்கொண்டு சொன்னான்: "நீங்க உட்கார்ந்திருங்க. நாங்க பாடாவிலே தேடிட்டு வரோம்."

சசீ சொன்னார் : "நீ என்னத்துக்கு மழையிலே போகணும்? எல்லாரும் எதுக்குக் கஷ்டப்படணும் ?"

சசீ நடக்கத் தொடங்கினார். மன்சூர் ஒன்றும் பேசாமல் அவர்களுடன் தானும் சென்றான். கிராமத்தில் சில நாய்கள் குரைத்தன. பேலுவின் வீடு மூங்கில் காட்டுக்குக் கீழே இருளில் மூழ்கிக் கிடந்தது. சசீக்குக் கேட்கத் தோன்றியது : "பேலு தோத்துப் போயிட்டானா? அவன் வீட்டிலே ஏன் இவ்வளவு இருட்டு? அவனோட பீபி விளக்கு ஏத்திக்கிட்டு நூல் சுத்திக்கிட்டு இருப்பாளே? இன்னிக்கு ஏன் ஒரு சத்தத்தையும் காணோம்?"

ஆனால் சசீ ஒன்றும் பேசவில்லை. இலவமரத்தில் பூக்களின் வாசனை. புயலாலும் மழையாலும் பூக்கள் தரையில் சிதறிக் கிடக்கின்றன. அவற்றை மிதித்துக்கொண்டு நடந்துவந்த சசீ, சாமுவின் வீட்டில் ஒரு பெரிய விளக்கு எரிந்துகொண் டிருப்பதைக் கண்டார். தகரத்தாலும் மரத்தாலும் ஆன பெரிய வீடு. அகலமான வராந்தா. மூங்கில் வேலி. வாசலுக்கு நேர் எதிரே மூங்கிலில் விளக்கு தொங்குகிறது. வீட்டுக்கு முன்னால் போட்டிருந்த கூடாரம் பிரிக்கப் பட்டுவிட்டது. மழையும் புயலும் ஓய்ந்த பிறகு மறுபடியும் கூடாரம் போடப்படும். இப்போது மக்கள் வீட்டுக்குள்ளேயும் வராந்தாவிலும் குழுமியிருக்கிறார்கள். கிராமத்தின் இருளில் இந்த வெளிச்சம் சசீயை வியப்புக்குள்ளாக்கியது.

மன்சூருக்குப் புரிந்துவிட்டது, பாபுவுக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டதென்று. பாபு ஏதேதோ நினைத்துக்கொண் டிருக்கிறார் என்று எண்ணினான். அவன் வெளிப்படையாகவே சொன்னான் : "கூட்டம் நடக்கிறது எசமான். சாம்சுத்தீன் இங்கே லீகின் கிளை ஒண்ணு திறக்கப் போறானாம். டாக்காவிலேருந்து வந்தப்பறம் சாமு லீகிலே பெரிய ஆளாயிட்டான்."

சசீ பதிலொன்றும் சொல்லவில்லை. சாமுவின் நடத்தை அவருக்குப் பிடிக்கவில்லை.

மன்சூர் கேட்டான் : "சாமுவைக் கூப்பிடவா? நீங்க வந்திருக்கிறதாச் சொல்லட்டுமா?"

சசீ சொன்னார் : "வேண்டாம், வேண்டாம், அவசியமில்லே. அவன் காரியமாயிருக்கான். எதுக்குக் கூப்பிடணும்?"

அப்படியும் மன்சூர் சாமுவுக்குச் செய்தி தெரிவித்துவிட்டான் : "சின்ன பாபு உன் வீட்டு வழியாப் போயிக்கிட்டிருக்கார். நீ உட்கார்ந்து கூட்டம் போட்டுக்கிட்டு இருக்கே. அவரைப் போய்ப் பார்த்துட்டு வா. அவருக்கு வெத்திலை புகையிலை கொடு."

செய்தியைக் கேட்டுச் சாமு வேகமாக வெளியே வந்தான்.

"சலாம், எசமான்!"

"எப்படி இருக்கேப்பா, சாமு ?"

"சுகமில்லே, எசமான் ! தனபாபுவுக்குப் புள்ளே பொறந்திருக்காமே ?"

"ஆமா."

"அப்போ எனக்கு இனிப்புக் கொடுக்கணும். ஒரு நாள் வரேன்."

சசீ இதுவரை அந்த விஷயத்தைப் பற்றிப் பேசவேண்டாமென்றிருந்தார். வேறு எதையாவது பேசலாம் என்றிருந்தார். ஆனல் உள்ளுக்குள்ளே ஏதோ குழப்பம் ஏற்பட்டுவிட்டது. ஏளனமாகச் சொன்னார் : "சீடப்புள்ளேகளைச் சேர்க்கறியாக்கும்! திடீர்னு லீடரா ஆயிட்டே ? முன்னேயெல்லாம் "சுதந்தரம், சுதந்தரம்'னு சொல்லிக்கிட்டிருந்தியே."

அவருடைய பேச்சு சாமுவுக்குப் பிடிக்கவில்லை. அவன் பேச்சை மாற்ற விரும்பிச் சொன்னன்: "எசமான், கொஞ்சம் இருந்துட்டுப் போங்களேன்."

மன்சூர் சொன்னன்: "பெரிய பாபுவைத் தேடிக்கிட்டு வந்திருக்காங்க."

இப்போது சாம்சுத்தீனும் சசீயுடன் நடக்கத் தொடங்கினன், இந்த விஷயத்தில் எல்லாருக்குமே ஒரு தார்மிகப் பொறுப்பு இருப்பது போல. எப்பேர்ப்பட்ட மனிதர் அவர்! உலகத்தில் இப்படிப்பட்ட மனிதர் பிறப்பதில்லை. அப்படிப்பட்டவர் பைத்தியமாகிவிட்டார். எல்லாவற்றையும், அன்புக்குரிய எல்லாவற்றையும், இன்பந் தருவது எல்லாவற்றையும் துறந்துவிட்டு இந்த மனிதர் எங்கேயோ கண்காணுத இடத்துக்கு ஓடிப் போய்விடப் பார்க்கிருர்.

எல்லாரும் மௌனமாக நடக்கிருர்கள். வீடுகள் ஒன்றையொன்று ஒட்டினற்போல் கட்டப்பட்டிருந்ததால் சசீ குனிந்து கொண்டே வழியில் நடக்கவேண்டியிருந்தது. நிமிர்ந்து நின்ருல் வீட்டுக் கூரை தலையில் இடிக்கும். ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு குறிப்பிட்ட எல்லை கிடையாது. எது யார் விடு, எந்த வீட்டுக்கு யார் சொந்தக்காரன் என்று சசீயால் சொல்ல இயலவில்லை. கடைசியில் ஆபேத் அலியின் வீடு. அதன் வாசலில் இன்னெரு சிறு குடிசை எழும்பியிருந்தது. அதைப் பார்த்ததும் சசீக்குப் புரிந்துவிட்டது. அவர் சொன்னர் : "ஆபேத் அலியோட அக்கா ஜோட்டன் திரும்பி வந்துட்டா போலிருக்கு." அவருக்குப் புரிந்தது, கொஞ்சநாட்களுக்கு முன் பீபியாக இருந்த ஜோட்டன் இப்போது விதவையாகி விட்டாளென்று. ஜோட்டனுக்கு மூன்று தடவை நிக்காஹ் ஆகி விட்டது. இல்லை இல்லை, சசீ கணக்குப் போட்டுப் பார்த்தார். இதோடு நாலு தடவை. தலாக் ஆனலோ விதவையாகிவிட்டாலோ அவள்

தம்பியிடம் திரும்பி வந்துவிடுவாள். அப்போதெல்லாம் ஆபேத்அலி தன் வீட்டுக்கு முன்னால் வடக்குப் பக்கம் வாசல் வைத்து, குச்சிகளாலும் கொடிகளாலும் ஒரு குடிசை கட்டிக் கொடுத்துவிடுவான். இதுவரை தான் அவள் விஷயத்தில் அவனுக்குப் பொறுப்பு. இதன் பிறகு சில நாட்கள் ஜோட்டனின் வாழ்க்கைப் போராட்டம் தொடரும். நெல் வறுத்துக் கொடுப்பது, அவல் இடித்துக் கொடுப்பது என்று. மழைக் காலம் முடிந்து இந்துக்களின் பண்டிகைகளும் முடிந்துவிட்டால் ஜோட்டன் சோற்றுப் பாத்திரத்தை நன்றாகத் துலக்கி எடுத்துக்கொண்டு மற்ற ஏழைபாழைகளுடன் தண்ணீரில் இறங்கிவிடுவாள். சணல் வயல்களில் அலைவாள், அல்லிக்கிழங்கு தோண்ட. அல்லிக்கிழங்கு தீர்ந்துபோய்விட்டால் ஆபேத் அலியிடம் புகார் செய்யத் தொடங்கிவிடுவாள் : "ஊரிலே ஆம்பளைகளே இல்லையா, ஆபேத் அலி ?"

ஜோட்டன் வாசலில் வெளிச்சத்தைக் கண்டு தலையை நீட்டிப் பார்த்தாள். சசீ வாசல் வழியே போவதைக் கண்டாள். ஒரு தடவை கூப்பிடலாமா என்று நினைத்தவள், அவ்வளவு பெரியவரைக் கூப்பிடலாமா என்ற தயக்கத்தில் பேசாமல் இருந்துவிட்டாள்.

அவர்கள் போய்க்கொண் டிருந்தபோது ஆபேத் அலியின் வீட்டு வாசல் திறந்துகொண்டது. ஜப்பர் கதவைத் திறந்ததும் சசீ அங்கேயே நின்றார். பெரியவர்களை ஒருங்கே பார்த்ததும் ஜப்பருக்குக் கூச்சம் ஏற்பட்டது. அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை முதலில். பிறகு சாமுவைப் பார்த்ததும் அவனுக்குக் கொஞ்சம் தைரியம் வந்து சொன்னான்: "பாபாஜான் உங்க வீட்டுக்குத்தான் போயிருக்கார்."

"ஏன் ?"

"பெரிய பாபுவைப் பத்தி சேதி சொல்றத்துக்கு. பெரிய பாபு இடுகாட்டுலே உக்காந்திருக்காராம்."

அவர்கள் மேலும் தாமதம் செய்யவில்லை. வேகமாக நடந்தார்கள். அவர்களைப் பார்த்த பிறகு ஜப்பரால் வீட்டுக்குள் உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவனும் அவர்களுக்குப் பின்னால் நடந்தான். மழை நின்று புயலும் ஓய்ந்துவிட்டது. மரத்தின் உச்சியிலும் புதர்களிலும் மறுபடி மின்மினிகள் பளிச்சிடத் தொடங்கின.

இரவின் இருளில் ஐவரும் வயலுக்குள் இறங்கி இடுகாட்டு ஆலமரத்துப் பக்கம் அண்ணாந்து பார்த்தார்கள்.

எல்லாருக்கும் முன்னால் அங்கே போய்ச் சேர்ந்துவிட விரும்பினான் ஈசம். அவன் சொன்னான் : "வேகமா நடங்க, எசமான்."

அக்ராண மாதத்தின் முதல் குளிரானதால் மின்மினியின் வெளிச்சம் மங்கலாக இருந்தது. அதே காரணத்தால் இரவு இந்த நேரத்திலும்

கிரௌஞ்ச பட்சி கூவவில்லை. தரையும் புல்லும் மழைத் தண்ணீரை உறிஞ்சிக்கொண்டுவிட்டன. தரை கெட்டியாக இருந்தது. பாதையில் எங்கும் வழுக்கல் இல்லை. எங்கும் அமைதி. வெகுநாட்களுக்குப் பிறகு பெய்திருக்கும் மழை பயிர்களுக்கு மிகவும் நல்லது. நல்ல விளைச்சல் இருக்கும், பஞ்சம் இருக்காது. ஈசம் வேகமாக நடக்கிறான். யாரும் எதுவும் பேசவில்லை. சசீ அவர்களுடைய கெட்ட எண்ணத்தைக் கண்டுபிடித்து விட்டாற்போல, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்துவந்துள்ள பரஸ்பர உறவில் இப்போது துக்கமும் வேதனையும் பரவிக்கொண் டிருப்பது போல ஒரு மௌனம். சாம்சுத்தீன் உள்ளூற ஒரு குற்ற உணர்வால் பீடிக்கப்பட்டிருந்தான். ஆகவே மௌனமாக நடந்தான் அவன்.

லாந்தரைத் தூக்கி ஆலமரத்தடியில் தேடியபோது பெரிய பாபு தூக்கில் தொங்குபவனைப் போல் தொங்கிக்கொண் டிருப்பதைப் பார்த்தார்கள். ஒரே ஒரு வித்தியாசம், சுருக்கு கழுத்துக்குப் பதிலாக இடுப்பில் இருந்தது. அவர் வில்லைப் போல் வளைந்திருந்தார். சர்க்கஸ் ஆட்டக்காரனைப் போல் அவர் மயில் விளையாட்டுக் காண்பிக்க விரும்பினார் என்று தோன்றியது. புயலும் மழையும் அவருடைய உடலில் வெள்ளைக் கரைகளை விட்டுவிட்டுப் போயிருந்தன. அவருடைய உடலுக்குள் எங்கேயோ ஒரு வேதனை, காதல் வேதனை. அவருடைய கனவு மாளிகையில் வாழ்ந்துவந்த பறவை இப்போது அவருடைய பிடியிலிருந்து நழுவிப் பறந்து போய்விட்டது போலும்! இப்போது அவர் அதைத் தேடிக்கொண்டிருக்கிறார். பறவை பறந்து போய்விட்டது, தீவு தீவாந்தரங்களைக் கடந்து. வியாபாரிகளின் நாட்டைக் கடந்து ஜலதேவதைகளின் தேசத்துக்குப் போய்ச் சேர்ந்து அங்கே சோகித்திருக்கும் ராஜகுமாரனின் தலையில் உட்கார்ந்துகொண்டு அழுகிறது. அப்போது பெரிய பாபுவின் மனசில் ஏதோ ஒரு பெரும் வேதனை ஏற்படுகிறது. அவர் தம் கையைத் தாமே கடித்துக்கொள்கிறார்.

அவர் தம் கையைக் கடித்துப் பாளம் பாளமாகக் கிழித்துக் கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். இவ்வாறு அவர் கிளையிலிருந்து தொங்கிக்கொண் டிருக்கிறார்.

ஈசம் மட்கிலாக் காட்டுக்குள் தவழ்ந்தவாறே நுழைந்தான். புதருக்குள்ளிருந்து பெரிய பாபுவை மெதுவாக விடுவித்தான். குளிரால் அவருடைய கண்கள் இடுங்கிப் போயிருந்தன. அவர் இரவு பகலாகத் தண்ணீருக்குள் முழுகிக் கிடந்தாற் போலவும், யாரோ அவரைத் தண்ணீரிலிருந்து தூக்கிக் கொண்டுவந்து இந்தப் புதருக்குள் எறிந்துவிட்டாற் போலவும் தோன்றியது, அவருடைய நிலையைப் பார்த்தால். கைகால்கள் வெளிறிக் கிடந்தன. ஈசம் புதரி

விருந்து வெளியே இழுத்துவந்து அவருக்கு நன்ருக உடையணி வித்தான். அவருடைய கையிலும் வாயிலும் ரத்தம். அவருடைய உடலும் முகமும் இப்போது பார்க்கப் பயங்கரமாக இருந்தன. அடை யடையாக எங்கும் ரத்தம். மரக்கிளைகளில் பறவைகளின் ஓலம். நிர்ஜனமான வயல்வெளி எல்லாரையும் சோகத்தில் ஆழ்த்தியது.

சசீ விளக்கைத் தூக்கிப் பெரியவரின் முகத்தையும் மணிக் கட்டையும் பார்த்தபோது அவர் சிரித்துவிட்டார். குழந்தையின் கள்ளங்கபடமற்ற சிரிப்பு. சசீயால் அவரைப் பார்க்க முடியவில்லை. அவரை உடனே வீட்டுக்குக் கொண்டுபோக வேண்டும். சசீ அருகம்புல்லைப் பிடுங்கி அதன் ரசத்தை அவருடைய காயங்களில் பிழிந்தார். காயத்தின் எரிச்சலாலும் வேதனையாலும் அவருடைய முகம் சுருங்கியது. அவர் ஒன்றும் பேசவும் இல்லை, கத்தவும் இல்லை. சாமியாடிபோல் ஆடிக்கொண்டே அவர்களுடன் நடந்து போனுர். நடந்து போகும்போது சாம்சுத்தீன் சொன்னுன்: ''பாபுவைக் கூட்டிக்கிட்டுக் காசி, கயா, மதுரா எல்லா இடங்களுக்கும் போயிட்டு வந்தீங்களே! ஒண்ணும் பிரயோசனப் படல்லியே? இவரைக் குணப்படுத்த முடியல்லியே!''

மன்சூர் கேட்டான்: ''கல்கத்தாவுக்குக் கூட்டிக்கிட்டுப் போய்ப் பெரிய டாக்டர் கிட்டேயெல்லாம் காண்பிச்சீங்களே; அவங்க ளாலே ஒண்ணும் செய்யமுடியல்லியா?''

அந்த இருட்டில் சசீயின் குரலில் நம்பிக்கையின்மை தொனித் தது. சொன்னுர்: ''ஊஹூம். யாராலும் எதுவும் செய்ய முடியல்லே. பத்துப் பன்னெண்டு வருஷமா உள்ளூர் வெளியூர் எல்லாம் எவ்வளவு முயற்சி பண்ணினேம்?''

மன்சூர் சொன்னுன்: ''நான் கூட ஹாஸான் பீரோட தர்காவிலே படையல் வச்சேன். ஒண்ணும் நடக்கல்லே.''

சசீ வேறெதுவும் பேசவில்லை. எல்லாருமே இந்த வேதனையால் நொந்திருக்கிருர்கள். இந்தத் துக்கம் பக்கத்துக் கிராமங்களைக் கூடத் தாக்கியிருக்கிறது. ஒரு காலத்தில் அந்தப் பக்கத்து மக்களெல்லாரும் அவரிடம் எவ்வளவு எதிர்பார்த்தார்கள்? பெரிய பாபுவின் வியக்கத் தக்க புத்தி தீட்சண்யம் குறித்து எவ்வளவு பெருமைப் பட்டுக் கொண்டிருந்தார்கள் அவர்கள்! 'எங்கள் பிராந்தியத்திலும் ஒரு பெரிய மனிதர் இருக்கிருர். எல்லாருக்கும் முன்னுல் ராஜமரியாதை யுடன் அறிமுகப்படுத்தப்படத் தகுந்தவர் அவர்.' அதிருஷ்டப் பிறவியான இம்மனிதரை எல்லாருடைய அன்பும் பரிவும் ஆதரவுடன் தாலாட்டி வளர்த்து வந்தன.

அப்படிப்பட்ட மனிதர் நாளுக்கு நாள் எப்படி ஆகிக்கொண்டு வருகிருர்!

மன்சூர் சசீயைக் கேட்டான் : "எசமான், எங்கப்பா சொல்ருர், பெரிய எசமான்— அதாவது உங்கப்பா-அவரோட வாழ்க்கையிலே ஒரு தடவைகூடப் பொய் சொன்னதில்லையாமே?"

''ஆமா, அப்படித்தான் சொல்ருங்க !'' என்ருர் சசீ.

"அப்படீன்ஞ அவருக்கு இந்த மாதிரி கஷ்டம் ஏன் வந்தது?"

சசீயால் பதில் சொல்ல முடியவில்லை. வானத்திலிருந்த மேகங்கள் காற்றில் கலைந்துவிட்டன. அவர்கள் ஆற்றுப் படுகை வழியே குளத்தங்கரைக்கு வரவில்லை. நரேன்தாஸின் கட்டாரி மரத்தடி வழியே செல்லும் குறுக்குப் பாதையில் நடந்தார்கள். நரேன்தாஸ் வீட்டு வாசலில் விளக்கு வெளிச்சம் இல்லை. உள்ளேயும் தறியின் அரவம் இல்லை. எல்லாரும் இவ்வளவு சீக்கிரம் தூங்கி விட்டார்களா ?

சாம்சுத்தீன் நினைத்தான் : 'நரேன்தாஸின் தங்கை விதவையாகிப் பிறந்த வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டாள். அந்தத் துக்கம் வீட்டின் சுற்றுப்புறத்தில் எல்லாம் பரவிக் கிடக்கிறது.'

அவன் ஒரு நாள் மாலதியைத் தூரத்திலிருந்து பார்த்தான். விதவையானதிலிருந்து அவள் ரவிக்கை அணிவதில்லை. அவளுக்குக் குழந்தைகள் இல்லை. ஏரியில் முதலை அகப்பட்டுக்கொண்ட வருஷந்தான் அவளுக்குக் கல்யாணம் நடந்தது. நரேன்தாஸ் கல்யாணத்துக்கு நன்ருகச் செலவு செய்தான். நான்கு மாதங்களுக்கு முன்பு மாலதி இந்தக் கிராமத்தை விட்டுப் பட்டணத்துக்குப் போனுள். மாப்பிள்ளை ராஜகுமாரன் மாதிரி இருந்தான். சிறிய உடல் வாகு. சாமு நினைத்தால் இப்போது கூட அவனுடைய கண்களை நினைவுக்குக் கொண்டுவர முடியும். நரேன்தாஸ் நஸிந்தியிலிருந்து நான்கு பெட்ரோமாக்ஸ் விளக்குக் கொண்டுவந்து வீட்டிலும் வெளியிலும் வெளிச்சம் போட்டான். கண்களில் நீர் வழிய அவன் மாப்பிள்ளையின் கைகளைப் பிடித்துக்கொண்டு சொன்னுன் : "மாலதிக்கு அம்மாவும் இல்லை, அப்பாவும் இல்லை. நீதான் எல்லாம்" என்று.

வெகுநேரம் பலகையின் மேல் படுத்துக்கொண்டு அழுதான். எல்லாரும் சென்ற பிறகு வீடு வெறிச்சென்று போய்விட்டது. நரேன்தாஸ் இரண்டு நாட்கள் பெஞ்சியிலிருந்து எழுந்திருக்கவே இல்லை அவனுடைய தங்கை அந்த வீட்டில் வண்ணத்துப் பூச்சி போல் வளைய வந்துகொண் டிருந்தாள். நாள் பூராவும் திரிந்து கொண்டே இருப்பாள். மர நிழலில், குளத்தங்கரையில், மஞ்சத்தி மரத்தின் கிளைகளில் நீலகண்ட பறவையைத் தேடுவதைப் போல் அலைந்து திரிவாள் அவள். அப்போதெல்லாம் சாமுவும் ரஞ்சித்தும்

அவளுக்கு மிகவும் வேண்டியவர்கள். ஒரு சமயம் அவர்கள் பலிசப்பழம் பறிக்கப் போய் வழி தவறிவிட்டார்கள்.

மாலதி விதவையாகித் திரும்பி வந்த பிறகு சாமுவால் அவளுடன் பேச முடியவில்லை. காரணம், டாக்காக் கலகத்தில் அவளுடைய கணவனைக் குத்திக் கொன்றுவிட்டார்கள்.

வீட்டுக்குள் நுழைந்ததும் சசி கூப்பிட்டார்: ''அம்மா, தண்ணி கொண்டா!''

சிற்றப்பாவின் குரல் கேட்டு லால்ட்கு கூடத்திலிருந்து வெளியே வந்தான். சந்திரநாத்தும் வந்தார். இவ்வளவு நேரம் தன் கணவனின் காலருகில் உட்கார்ந்திருந்த சசிபாலாவும் சசீயின் குரல் கேட்டு வெளியே வந்தாள். மகேந்திரநாத், தம் பிள்ளைக்காக மிகவும் கவலைப்பட்டுக்கொண் டிருந்தார். மணியின் வியாதியில் புதிய வக்கிரங்கள் ஏற்பட்டுக்கொண் டிருக்கின்றன. இப்போதெல் லாம் ஒன்றுமே சொல்லாமல் வீட்டைவிட்டு வெளியே போய் விடுவது அவருடைய வழக்கமாயிற்று. இதுவரையில் அவர் சும்மா கூடத்தில் உட்கார்ந்துகொண் டிருந்தார், அல்லது குளத்தங்கரை யில் உலவிக்கொண்டே மரஞ்செடிகளுடனும் பறவைகளுடனும் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார். பையன் திரும்பி வந்துவிட்ட செய்தி கேட்டதும் மகேந்திரநாத் கம்பளியைத் தலைக்குமேல் போர்த்துக்கொண்டு படுத்துக்கொண்டுவிட்டார். இதுவரை அவரை ஆட்கொண்டிருந்த தீவிரக் கவலை மறைந்துவிட்டது.

வெளியே வந்த சசிபாலா நிறையப் பேர் நிற்பதைக் கண்டு, ''நீங்களா?'' என்று கேட்டாள்.

''நான்தான் சாமு, அம்மா!''

''நான் மன்சூர், அம்மா!''

பெரிய மாமி ஜன்னல் வழியே எல்லாவற்றையும் பார்க்கிறாள். கணவனின் ஆஜானுபாகுவான தோற்றம், பலம் பொருந்திய முகம், அதற்குள்ளிருந்த தன்னம்பிக்கையின் ஒளி - அந்த ஒளி இடை யிடையே காற்றில் அசைந்தது. அவள் கைகளைத் தூக்கிக் கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டாள்: ''பகவானே, நீதான் இந்த மனுஷரைக் காப்பாத்தணும்!''

வாசலில் நிறைய ஜனங்கள் இருந்ததால் அவள் வெளியில் வரவில்லை.

சசிபாலா எல்லோரையும் உட்காரச் சொல்லிவிட்டுப் பூஜை யறைக்குள் நுழைந்தாள். கொஞ்சம் பகவானின் அபிஷேக தீர்த்தமும் துளசிதளமும் எடுத்து மணியின்மேல் தெளித்தாள். ஒரு வாளி தண்ணீர் கொண்டுவரச் செய்தாள். சந்திரநாத்

மடிவேஷ்டி எடுத்து வந்தார். காயம் பட்ட இடத்தில் துலுக்க ஜவந்தி இலேயின் சாற்றைப் பிழிந்து கட்டிவிட்டார்.

"போயிட்டு வரேன், அம்மா!" என்றான் சாமு.

"போயிட்டு வாப்பா! ராத்திரி ரொம்ப நேரமாயிடுத்து. ஜாக்கிரதையாப் போயிட்டு வா!"

பிறகு ஏதோ நினைத்துக்கொண்ட சசிபாலா முன்னால் வந்து, "என்ன சாமு, நாலைந்து நாளா உன்னோட அம்மாவைப் பார்க்கவே இல்லையே?" என்றாள்.

"அம்மாவுக்கு இடுப்பு வலி. எழுந்திருக்கவே முடியல்லே. வாயுக்கோளாறு போலேயிருக்கு."

சசிபாலா அவனை இருக்கச் சொல்லிவிட்டு உள்ளே போய் ஒரு பழைய சீசாவை எடுத்துக்கொண்டு வந்தாள். "இதை எடுத்துக் கிட்டுப் போ, சாமு. இந்த எண்ணெயை நல்லா இடுப்பிலே தேச்சு மாலிஷ் பண்ணச் சொல்லு."

அவர்கள் போய்விட்டார்கள். ஈசம் கையில் விளக்குடன் தர்முஜ் வயலுக்குப் போய்விட்டான். அவன் இரவு முழுதும் அங்கே காவல் காத்துக்கொண் டிருப்பான். முயல்களும் எலிகளும் இளந் தர்முஜ் கொடிகளைக் கடித்துவிடும். அவன் இரவில் தகரத்தைக் குச்சியால் அடித்துக்கொண்டே யிருப்பான். வெகுதூரத்தில் நள்ளிரவில் விழித்துக்கொள்பவர்கள் அந்த ஒலியைக் கேட்டுப் புரிந்து கொள்வார்கள், டாகுர் வீட்டு வேலைக்காரன் ஈசம் தர்முஜ் வயலில் தகரத்தைத் தட்டிக்கொண் டிருக்கிறானென்று; தகரத்தில் தட்டி எலியையும் வெளவாலையும் விரட்டிக்கொண் டிருக்கிறானென்று.

சசீந்திரநாத் தம் அறையில் உட்கார்ந்துகொண்டு வீட்டுக் கணக்கு எழுதுகிறார். பெரிய பாபுவின் கைகளையும் முகத்தையும் கழுவிச் சமயலறைக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள். அவர் தமக்குப் பரிமாறப்பட்ட பருப்பைத் தனியே சாப்பிட்டார், சாதத்தைத் தனியே சாப்பிட்டார், மீனையும் இறைச்சியையும் சாப்பிடும்போது எலும்புகளையும் விழுங்கிவிட்டார். கண்களை அகல விரித்துச் சமையலறையைப் பார்த்துக்கொண்டே இருந்தார் அவர்.

சசிபாலா சொன்னாள்: "எனக்கு இன்னும் கஷ்டத்தைக் கொடுக் காதேயப்பா, மணி. சாததோடே காய்கறிகளைத்தொட்டுக் கொண்டு சாப்பிடு!"

தாயின் பேச்சைக் கேட்ட மணீந்திரநாத் கீட்சின் காதல் கவிதை யொன்றைக் கம்பீரமான குரலில் பிசகில்லாமல் ஒப்பிக்க ஆரம் பித்தார். அம்மாவுக்கும் சந்திரநாத்துக்கும் அதன் ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை. கவிதையை ஒப்பிக்கும்போது அவர் இமை மூடாமல் தம் மனைவியைப் பார்த்துக்கொண் டிருந்தார். ஏதோ

ஒரு கொடிய வேதனையை அவர் இக்கவிதை மூலம் வெளிப்படுத்த முயன்றார் போலும். இடையருமல் பொறுமையின்றித் தவிக்கும் உலகத்தின் சோகத்தை எதிரொலித்தார் போலும்.

அவர் தம் நெற்றியையும் தலையையும் கையால் தடவிக்கொண்டார். 'அம்மாமார்களே, என்னைக் கொஞ்சுங்கள்!' என்ற பாவம் அவருடைய முகத்தில். அவருடைய இமையாத பார்வை சொல்கிறது; 'எனக்கு மிகவும் கஷ்டம், மிகவும் வேதனை!'

ஜோட்டன் ஆபேத் அலியின் அண்ணி.

அவள் நாணல் தட்டையாலான சிறு கதவைத் திறந்து தன் குடிசைக்கு வெளியே எட்டிப் பார்த்தாள். இன்னும் பொழுது புலரவில்லை. இரவு முழுதும் அவளுக்குத் தூக்கமில்லை. சாமு மசூதியிலிருந்து தொழுகைக்கு அழைக்கிறான். ஜோட்டன் இருட்டில் கிழிந்த சாக்கையும் கிழிந்த போர்வையையும் மடித்து வைத்தாள். இன்னும் இருட்டாயிருப்பதால் அறைக்குள்ளிருந்த சாமான்கள் தெளிவாகத் தெரியவில்லை. உறியில் இரண்டு பாத்திரங்கள், இரண்டு பானைகள். இரண்டு நாட்களாக அவளுக்குச் சோறு இல்லை. இரண்டு நாட்களாக அவள் அல்லிக்கிழங்கை வேகவைத்துச் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறாள். அவள் மூடியைத் தூக்கிப் பாத்திரத்துக்குள் கையை விட்டுப் பார்த்தாள். இன்னும் கொஞ்சம் வெந்த கிழங்கு இருக்கிறது. அவள் இருட்டிலேயே அதைச் சாப்பிடத் தொடங்கினாள். உலர்ந்துவிட்டதால் அது தொண்டையில் அடைத்தது. அவள் கொஞ்சம் தண்ணீர் குடித்தாள். மறுபடியும் கதவைச் சற்று திறந்து ஆகாயத்தைப் பார்த்தாள். ஆகாயம் நிர்மலமாக இருக்கிறது. கோழிகள் கூவத் தொடங்கிவிட்டன. அவள் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்து நின்றாள்.

மசூதியின் மறுபக்கத்தில் சூரியன் உதித்துக்கொண்டிருக்கிறான். ஆபேத் அலி கையில் ஒரு பாத்திரத்துடன் வயலிலிருந்து வந்தான். அவனுடைய பீவி ஜாலாலி வாசலில் ஒரு மூலையில் இலைகளைப் பற்றவைத்துச் சமையல் செய்துகொண்டிருக்கிறாள். ஆபேத் அலி திண்ணையில் உட்காருவதைப் பார்த்த ஜோட்டன், "அந்த ஆள் நேத்திக்கு வரல்லியே!" என்றாள்.

"வரலேன்னா நான் என்ன செய்வேன்?"

ஜோட்டனின் ஆசையைப் பார்த்து எரிச்சலாக இருந்தது ஆபேத் அலிக்கு. மூணு கல்யாணம் ஆயிடுத்து, இவளுக்கு இன்னும் கல்யாண ஆசை!

இரண்டு நாள் சாப்பிடாமல் இருந்ததால் ஜோட்டனும் சுமுகமான மன நிலையில் இல்லை. அவள் சொன்னாள்: ''தந்தி போறபோது அந்த ஆளைப் பத்தி விசாரிச்சுட்டு வா. மனுசன் உசிரோடே இருக்கானு இல்லையான்னு பாத்துட்டு வந்து சொல்லு!''

''சொல்றேன், சொல்றேன்!''

ஜோட்டனின் முகம் வாடிக் கிடப்பதை ஆபேத் அலி கவனித்தான். இரண்டு நாட்கள் சாப்பிடாததால் அவளுடைய கண்கள் இடுங்கிக் கிடந்தன

''பகலுக்கு நீ நம்ம வீட்டிலே சாப்பிடு!''

இப்போது ஆபேத் அலி ஜாலாலியைப் பார்த்தான். உதிக்கும் சூரியனின் கிரணங்களால், இயற்கையிலேயே ஜாலாலியின் 'சிடுசிடு' முகம் இன்னும் 'சிடுசிடு' வென்று காட்சியளித்தது. ஆபேத்அலியின் பேச்சைக் கேட்டு அவளுடைய முகம் புட்கா மீனைப் போல் உப்ப ஆரம்பித்தது.

''அடடே! என்ன செய்யறே நீ? உன் கன்னம் வெடிச்சுப் போயிடப் போறது'' என்று ஆபேத்அலி சொன்னான்.

விஷயத்தைப் புரிந்துகொண்ட ஜோட்டன் சொன்னாள்: ''வேண்டாம், வேண்டாம்! என் சாப்பாட்டைப்பத்தி என்ன?''

ஜோட்டன் சாப்பிடமாட்டாளென்று ஆபேத் அலிக்குப் புரிந்தது.

ஜோட்டன் வாசலிலிருந்து பாதையில் இறங்கினாள். ஆனால் பாதை வழியே போகாமல், இன்னும் தண்ணீர் தேங்கியிருந்த வயல்களின் நடுவே எதையோ தேடிக்கொண்டு நடக்க ஆரம்பித்தாள்.

அவள் வரப்புக்களின் மிருதுவான ஈரமணலில் ஆமை முட்டைகளைத் தேடுகிறாள். இந்தச் சமயத்தில்தான் வரப்பு மணலில் ஆமைகள் முட்டையிடும். முட்டைகளைப் பொறுக்கிக்கொண்டு போய்ப் பச்சிம்பாடாவில் கொடுத்து அதற்குப் பதிலாகக் ஒரு தொன்னை அரிசி வாங்கிக்கொள்வது அவளுடைய திட்டம். அவள் ஒவ்வொன்றாக வரப்புக்களைத் தோண்டிப் பார்க்கத் தொடங்கினாள். சூரியன் பிஸ்வாஸ்பாடாவுக்கு மேலே மிக உயரத்துக்கு வந்துவிட்டான். பயிர்களின் மேல் விழுந்த பனி, புற்களின் மேலிருந்த பனி இவையெல்லாம் ஒன்று சேர்ந்து துளிகளாகி இங்குமங்கும் வெயிலில் கலந்துகொண் டிருக்கின்றன.

அந்த மனுஷன் நேற்று வரவில்லை. அவள் மூட்டை முடிச்சுக்களைக் கட்டிக்கொண்டு தயாராக இருந்தாள். மௌல்வி சாயபுவுக்குச் சொல்லிவைத்திருந்தார்கள். சாட்சியும் தயாராக இருந்தது. ஆனால் அந்த ஆள் வரவில்லை!

ஒரு நாள் அந்த மனிதர் *முஸ்கிலாசானைக் கையிலெடுத்துக்

* முஸ்கிலாசான் - மூன்று முகங்களுள்ள ஒரு விசேஷ ரக விளக்கு. முஸ்லிம் பக்கிரிகள் அதை எடுத்துக்கொண்டு 'முஸ்கிலாசான்' என்று கூவிக்கொண்டு ஊர்களில் பிச்சை எடுப்பார்கள். 'முஸ்கிலாசான்' என்ற வார்த்தைக்கு 'பிரச்னைகள் தீர்ந்துவிடும்' என்று அர்த்தம்.

கொண்டு அவர்களுடைய வீட்டுவாசலுக்கு வந்து, "இது ஆபேத் அலி வீடுதானே?" என்று கேட்டார்.

அவர் பீரின் தர்காவில் இருப்பவர். ஆபேத் அலி, ஜாலாலி, ஜோட்டன் எல்லாரும் அவரிடம் போய்ப் பொட்டு இட்டுக்கொண்டார்கள்.

அவர் நல்ல உயரம்; பெரிய பெரிய கண்கள். வெள்ளைத் தாடி தொப்புளுக்குக் கீழே இறங்கிவந்திருக்கிறது. ஆயிரம் கிழிசல் உள்ள ஜிப்பா. தலையில் ஒரு சிறு தலைப்பாகை, கழுத்தில் வித விதமான மாலைகளும் தாயத்துக்களும். ஜோட்டன் முதல் சந்திப்பிலேயே அவரிடம் காதல் கொண்டுவிட்டாள். அன்று இரவு வெகு நேரம் வரை குளிர்காலத்தின் மென்மையான சூடுபோன்ற ஓர் இதமான உணர்வு அவளை ஆட்கொண்டிருந்தது.

ஜோட்டன் வரப்புப் பக்கம் கவனமாகப் பார்த்தவாறே நடக்கிறாள். ஆமை முட்டையைக் காணோம். அவள் இங்குமங்கும் பார்த்து விட்டுச் சட்டென்று சில தானியக் கதிர்களைப் பிடுங்கித் தன் துணிக்குள் ஒளித்து வைத்துக்கொண்டாள். வயல்களில் வேலை செய்பவர்கள் அவளைக் கடந்து வேறு வயல்களுக்குச் சென்றார்கள். அவள் இப்போது தரையில் உட்கார்ந்துகொண்டு உண்மையிலேயே ஆமை முட்டை சேகரிக்கத் தொடங்குகிறாள். வயல் வேலைக்காரர்கள் தானியத்தை அறுவடை செய்கிறார்கள். அவள் தன்னிடமிருந்த கூர்மையான கத்தியை வயிற்றுக்குக் கீழே துணிக்குள் செருகிக்கொண்டாள். அவள் எம்பி நின்றுகொண்டு பார்த்தாள், வயல் வேலைக்காரர்கள் யாருடைய வயல்களில் வேலை பார்க்கிறார்கள் என்று. தூரத்தில் மாடுகள் தண்ணீருக்குள் இறங்கிக்கொண்டிருந்தன.

மனுஷனைக் காணோமே! முஸ்கிலாசான் மனுஷன்!

பதின்மூன்று குழந்தைகளின் தாயான ஜோட்டன் மறுபடியும் தாயாகும் ஆசையுடன் வயல்வரப்பின் மேல் துடித்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள். நாற்பது வயதான ஜோட்டன் தானிய வயலில் கடவுளைத் தேடிக்கொண்டிருக்கிறாள். கடவுள் கட்டளையிட்ட விளைச்சல் தன் உடம்பிலிருந்து உண்டாகவில்லையே என்ற கவலை அவளுக்கு.

இரண்டு நாட்களாக வயிற்றில் சோறு விழவில்லை. கிராமத்தின் மற்ற ஏழைபாழைகளுடன் அவளும் இரண்டு நாட்களாக ஹாஜார்தி ஏரியில் அல்லிக்கிழங்கு பொறுக்கிக்கொண்டு வந்தாள். துக்கம் வந்தால் சாமி ஞாபகம் வரும் என்பது ஜோட்டனின் நம்பிக்கை. அவள் தன்னுடைய கூர்மையான கத்தியால் ஒரு தானியக் கதிரைச் சட்டென்று நறுக்கி அதைத் தன் மடியில் ஒளித்து வைத்துக்

கொண்டாள். வயிற்றுப் பசி பொறுக்க முடியாத வேதனே. அவள் தான் செய்யும் குற்றத்துக்காக அல்லாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். "சாமியே, வயித்துப் பசிதான் காரணம்." அவள் வயலின் சொந்தக்காரனிடம் சொல்ல விரும்பினுள் : 'பயப்படாதே. எங்கிட்டே வேறே என்ன இருந்தாலும் இல்லாவிட்டாலும் நாணயம் இருக்கு. ஒன்னுேட வயல்லே இருக்கிற கதிரை நறுக்கல்லே நான். வரப்பு மேலே சாஞ்சு கெடக்கற கதிரைத்தான் எடுத்துக்கறேன்.'

ஹாசியின் தகப்பன் தயாபாடா வேப்பமரத்தைத் தாண்டியதும் ஜோட்டன் சட்டென்று இன்னெரு தானியக் கதிரை நறுக்கித் தன் மடியில் ஒளித்து வைத்துக்கொண்டாள்.

இந்த நேரத்தில் அவளுக்கு மாலதியின் நினைவு வந்தது. நரேன்தாஸின் தங்கை மாலதி விதவையாகிப் பிறந்த வீட்டுக்குத் திரும்பி வந்திருக்கிருள். மாலதி படும் வேதனையை நினைத்து ஜோட்டன் கிழக்குப் பக்கமாகப் போன்ஞ மரத்தின் இடுக்கு வழியே நரேன்தாஸின் நெசவுக் கூடத்தைப் பார்த்தாள். தறி இயங்கும் சப்தம் கேட்கிறது. ஜோட்டன் சட்டென்று இன்னெரு கதிரை நறுக்கினுள். அப்போது அவளுக்குப் பின்னுலிருந்து யாரோ கத்தினுன் : "ஜ-ெட்டி, மண்டையை உடைச்சுடுவேன் !"

ஜோட்டன் திரும்பிப் பார்த்தாள். ஈசம் வந்துகொண் டிருந்தான். அவள் விதிர் விதிர்த்துப்போய், "நான் ஒன்றும் பண்ணல்லியே !" என்ருள்.

"ஆமாமா, நீ ஆகாசத்தைப் பார்த்துக்கிட்டிருக்கே. அநாவசியமாப் பேச்சை வளக்காமே வீட்டுக்குப் போய்ச் சேரு."

வீட்டுக்குப் போகும் பாவனேயில் அவள் நடக்கத் தொடங்கினுள். ஆனுல் ஈசம் மசூதிக் கிணற்றில் தண்ணீரெடுக்க வாளியை இறக்கிய போது அவள் சட்டென்று வயலுக்குள் இறங்கிப் பயிர்களுக்குப் பின் ஒளிந்துகொண்டாள். தவழ்ந்துகொண்டே வயலுக்குள் முன்னேறிய அவள் ஓர் இடத்தில் மண் சரிந்து உருண்டை உருண்டையாக வெள்ளே முட்டைகள் வெளியே வந்து கிடப் பதைக் கண்டாள். மலர்ந்த முகத்துடன் அவள் எழுந்து நின்ருள். முஸ்கிலாசான் விளக்கின் நினைவு அவளுக்குக் கதகதப்பான உணர்வைத் தருகிறது. தூரத்தில் வயல்களில் அறுவடை நடக்கிறது ஆட்கள் காஜியின் பாட்டுக்களேப் பாடிக்கொண்டே அறுவடை யான கதிர்களேக் கட்டிக்கொண் டிருக்கிருர்கள். தூரத்திலிருந்து மிதந்து வந்த பாட்டின் ஒலியலேகள், மாலதி படும் கஷ்டத்தின் நினைவு, முதல் நாள் இரவு முழுதும் காத்திருந்தது—இவை எல்லாம் சேர்ந்து ஜோட்டனே வேதனேக்குள்ளாக்குகின்றன. மாலதிக்கு மறுபடியும் கல்யாணம் நடக்காது. அவளுடைய சரீரத்திலிருந்து

விளைச்சல் உண்டாகாது. அல்லாவுக்கு இதனால் கோபம் வரும். மனித உடல் மண்ணைப் போல. அதைத் தரிசாக விட்டுவைப்பது குற்றம். மாலதியின் வாழ்க்கையைப் பற்றி நினைத்தவாறே சோம்பல் முறித்துக்கொண்ட ஜோட்டன் போன்று மரத்தடியில் மாலதி, மௌனமாக, தனியாக நிற்பதைக் கண்டாள். மாலதி அணிந்திருந்த வெள்ளைப் புடைவையின் தலைப்புக் காலைக் காற்றில் அசைந்தது. மாலதியைப் பார்த்ததும் ஜோட்டன் அவசர அவசரமாக எல்லா முட்டைகளையும் ஈரமண்ணிலிருந்து எடுத்துத் தன் முன்றானையில் கட்டி வைத்துக்கொண்டாள்.

வேறு நாளாக இருந்தால் ஜோட்டன் மாலதியுடன் ஏதாவது பேசியிருப்பாள். ஆனால் இன்று மாலதியின் இந்தத் தனிமை உண்மையிலேயே ஜோட்டனைத் துன்புறுத்தியது. காரணம் தெரியாத ஒரு குற்ற உணர்வு காரணமாக அவளால் மாலதியுடன் பேச முடியவில்லை. அவள் அந்த வழியாக நடந்துபோய்ப் புகையிலை வயலை அடைந்தாள். அவள் திரும்பிப் பார்த்தபோது மாலதி போன்று மரத்தைக் கடந்து, மஞ்சித்தி மரத்தடி வழியே குளத்தங்கரைக்கு வந்து, வாத்துக்கள் குளத்து நீரில் நீந்துவதைப் பார்த்தவாறே ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

ஜோட்டன் அப்புறம் தாமதிக்கவில்லை. தாமதித்தால் அவளுடைய வேதனைதான் அதிகமாகும். தவிர, வெறும் அல்லிக் கிழங்கே சாப்பிட்டு அவளுடைய தேகம் பலவீனமாயிருந்தது. அவள் அவசர அவசரமாக நரேன்தாஸின் வீட்டைக் கடந்து கிராமத்துப் பாதையில் நடக்கத் தொடங்கினாள். மகிழமரத்தைத் தாண்டினால் டாகுர் வீட்டுப் பாக்குத் தோப்பு. அவள் மெதுவாகத் தோப்புக்குள் நுழைந்து மரத்தடியில் பாக்குத் தேடத் தொடங்கினாள். எவ்வளவு தேடியும் ஒரு பாக்குக்கூடக் கிடைக்காமல் போகவே அவள் மரத்தை நோக்கி அண்ணாந்து பார்த்து, பிரார்த்தனை செய்யத் தொடங்கினாள். "அல்லா, ஒரு பாக்குத் தா". எல்லா மரங்களிலும் பாக்கு மஞ்சளாக, குலை குலையாகத் தொங்குகிறது. பாக்கின் மஞ்சள் நிறத்தோலை உரித்து விட்டுக் கொட்டையை வாயில் போட்டுக்கொள்ள ரொம்ப ஆசை ஜோட்டனுக்கு. ஒரு மரங்கொத்திப் பறவை ஒவ்வொரு மரமாகப் போய்க்கொண்டிருப்பதை அவள் கண்டாள். "அல்லா அல்லா ஒரு பாக்குத் தாயேன்!"

அப்போது கிழவியம்மாளின் குரல் கேட்டது. அவள் சப்தம் செய்யாமல் பாக்குத் தோப்புக்குப் பக்கத்திலிருந்த சடுயிமரக் காட்டுக்குள் ஒளிந்துகொண்டாள். பறவை ஒரு பாக்கைக் கடித்துக் கீழே போடாதா என்ற ஆசையில் ஜோட்டன் வெகுநேரம் அங்கேயே உட்கார்ந்திருந்தாள். பறவை இங்கு மங்கும் பறப்ப

தைப் பார்த்து அவள் தவித்தாள். மரங்கொத்தி பாக்குக் குலையின் மேல் உட்கார்ந்து இரண்டு கொத்துக் கொத்தியது. கூடவே சில பாக்குக் கொட்டைகள் மரத்தடியில் விழுந்தன, மாணிக்கங்கள் போல. ஜோட்டனின் நெடுங்கால விருப்பம் இப்போது மரத்தடியில் உருவம் பெற்றுவிட்டது. அவள் நாற்புறமும் நன்ருகப் பார்த்துக் கொண்டாள். குளத்துப் படித்துறையில் கிழவியம்மா ஸ்நானம் செய்துகொண் டிருக்கிருள். ஜோட்டனல் எல்லாவற்றையும் பார்க்க முடிகிறது. ஆனல் யாராலும் அவளைப் பார்க்க முடியவில்லை. அவள் வேகமாக மரத்தடிக்கு ஓடினுள். மூன்று பாக்குகளையும் பொறுக்கித் தலைப்பில் முடிந்துகொண்டாள். பிறகு டாகுர் வீட்டுக்குள் நுழைந்து கூப்பிட்டாள். "பெரிய மாமி இருக்காங்களா?" கூப்பிட்டுக் கொண்டே அவள் பிரசவ அறைக்கு முன்னல் போய் நின்ருள். "தனமாமி, மாணிக்கத்தை ஒரு தடவைக் காட்டுங்க, பார்ப்போம்! மாணிக்கத்துக்காக ஆமை முட்டை கொண்டு வந்திருக்கேன்" என்ருள். பெரிய மாமியைப் பார்த்துச் சொன்னுள்: "ஆமை முட்டையை எடுத்துக்கிட்டு ஒரு தொன்னை அரிசி கொடுங்க!" அரிசியை வாங்கிக்கொண்டு சொன்னுள்: "ரெண்டு வெத்தலை கொடுங்க, பெரிய மாமி!"

"எடுத்துக்கோயேன். செடிக்குக் கீழே நிறைய வெத்தலை விழுந்து கிடக்கு."

ஜோட்டன் அரிசியைத் தலைப்பில் முடிந்துகொண்டு பெரிய அறைக்குப் பின்னே போனுள். பூனையவரைக் கொடி படர்ந்த புதரைத் தாண்டிப் போய்க் கள்ளிச்செடிக்கு அருகில் நின்ருள். வெற்றிலைக் கொடி கள்ளிமேல் படர்ந்திருந்தது. கைகள் இரண்டும் கொள்ளும் அளவுக்கு வெற்றிலைகளை கொடியிலிருந்து பறித்துக் கொண்டாள். பிறகு மறுபடியும் டாகுர் வீட்டுக்குள் நுழையாமல் பூனையவரைப் புதரைக் கடந்து வயலில் இறங்கிவந்தாள். நீரிலும் சேற்றிலும் நடந்து மறுபடி கிழக்குவீட்டுக் குளத்தங்கரை வழியே தானிய வயலுக்கு வந்துசேர்ந்தபோது மாலதி ஆகாயத்தை அண்ணுந்து பார்த்துக்கொண் டிருப்பதைக் கண்டாள். இப்போது ஜோட்டனல் மாலதியுடன் பேசாமல் போக இயலவில்லை. அவள் மாலதிக்கு அருகில் வந்து உட்கார்ந்துகொண்டு கூப்பிட்டாள்: "மாலதி!"

மாலதி பேசவில்லை, அழுதாள். அவளுடைய முகம் திரும்பி யிருந்ததால் ஜோட்டனல் அவளுடைய முகத்தைப் பார்க்க முடிய வில்லை. ஆனல் மாலதியின் கண்களிலிருந்து நீர் பெருகுவது புரிந்தது ஜோட்டனுக்கு.

ஜோட்டன் சொன்னாள்: ''மாலதி, அழாதே! அழுது என்ன பிரயோசனம்? எல்லாம் தலையெழுத்து, மாலதி!''

ஜோட்டன் எழுந்து நின்றாள். பாவம், அழுகிறாள், அழட்டும்! தன்னுடைய மூன்றாவது கணவனின் நினைவு வந்தபோது ஜோட்டனுக்குத் துக்கத்தால் தொண்டை அடைத்துக் கொண்டது.

பொழுது ஏறுகிறது. வயிற்றில் அகோரப் பசி. அவளிடம் உள்ள அரிசி இரண்டு வேளைக்குக் காணும். அவள் போகும் வழியில் ஆற்றுப் படுகையிலிருந்து கொஞ்சம் கீரை பறித்துக்கொண்டாள். அவள் ஆபேத் அலியின் குடிசையைக் கடந்து தன் குடிசையின் வாசலை அடைந்தபோது ஆச்சரியத்துக்குள்ளானாள். நேற்று வராத மனிதர், அவள் நேற்றிரவு முழுதும் யாருக்காக விழித்துக் கொண்டு காத்திருந்தாளோ அந்த மனிதர், ஒரு கிழிந்த தடுக்கின் மேல் தொழுகை செய்யும் பாவனையில் உட்கார்ந்துகொண்டு தம் லுங்கியைத் தைத்துக்கொண் டிருக்கிறார். நீலநிறமான நீளப்பை, முஸ்கிலாசான் விளக்கு, விதவிதமான தாயத்துகள் கோத்த மாலை, குன்றிமணி மாலை, கண்ணாடிக் கற்கள் கோத்த மாலை— இவற்றுடன் அவரைப் பார்க்கக் குதிரைப் பந்தயத்துப் பீர் மாதிரி இருந்தது.

ஜோட்டன் சொன்னாள்: ''சலாமாலேகும்!''

பக்கிரிசாயபு இப்போதுதான் ஜோட்டனைக் கவனித்துவிட்டுச் சொன்னார்: ''ஆலேகும் சலாம்!''

தன் குடிசை மூலையில் முக்காட்டைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாள் ஜாலாலி. தானும் தன் குடிசைக்குள் முக்காடு போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்க ஆசைதான் ஜோட்டனுக்கு. ஆனால் விருந்தாளியை உபசரிக்கவேண்டிய கடமை இருந்ததால் அவளால் தன் நாணத்துக்கு இடங்கொடுக்க முடியவில்லை. அவள் ஜாலாலியின் வீட்டுக்குள் நுழைந்து சொன்னாள்: ''மனுஷர் சாப்பிடப் போறார். நான் அவருக்கு என்ன சமைச்சுப் போடப் போறேன்?''

தாழ்ந்த குரலில் ஜோட்டன் பேசிய பேச்சு பக்கிரிசாமியின் காதில் விழுந்துவிட்டது. அவர் சொன்னார்: ''எனக்காகக் கவலைப் படாதீங்க. ரெண்டு சோறும் கீரையும் போட்டாப் போதும். எவ்வளவு கவலையில்லாமல் சாப்பிடறேன், பாருங்க!''

ஜோட்டன் ஜாலாலியிடம் சொன்னாள்: ''பூன்ட்டி மீன் வத்தல் ரெண்டு கொடு, ஜாலாலி!''

ஜோட்டன் ஒரு கட்டு நாணல் குச்சி எடுத்துக்கொண்டு வந்தாள் அடுப்பெரிக்க. குச்சிகளை மளமளவென்று முறித்து வீட்டுக்குள் எடுத்துக்கொண்டு வரும்போது பக்கிரி சாயபு இன்னும் துணிக்கு ஒட்டுப் போட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவள் வேலி இடுக்கு வழியே அவருடைய அகன்ற மார்பையும் மணிக்கட்டையும்

பார்த்தாள். அவளுடைய உடலிலிருந்து கடவுளின் வரிவதூலாக நேரமாகாது. இந்த நினைப்புடன் அவள் உற்சாகமாகச் சமையலில் ஈடுபட்டாள். இரண்டு வருடங்களாக அவளுடைய உடம்பு கொஞ்சமும் வெட்கமில்லாமல் துஷ்டத்தனம் செய்யத் துடிக்கிறது. எவ்வளவோ தடவை அவள் இரவில் கிழிந்த தடுக்கின் மேல் உட்கார்ந்துகொண்டு அல்லாவை நினைத்து அதன் மூலம் தன் உடலின் கெட்ட ஆசைகளைத் துரத்த முயன்றிருக்கிறாள். தன் தேகத்தின் ஆசையைத் தணிக்கும் சக்தி எந்த ஆணுக்கும் இல்லை என்பதுதான் மூன்று தலாக்குகளுக்குப் பிறகு ஜோட்டன் புரிந்து கொண்ட உண்மை. அதனால் தான் தலாக்குக் கொடுத்தாள் அவள். அவள் சொல்லுவாள்: ''இந்தச் சனியன் பிடித்த உடம்புக்கு எப்போதும் பசி'' என்று.

அவள் மறுபடி இன்னும் கொஞ்சம் குச்சிகளை அடுப்புக்குள் திணித்துவிட்டு வேலியிடுக்கு வழியே பக்கிரி சாயபுவின் உடம்பைப் பார்த்தாள். எல்லா அரிசையையும் சமைத்துவிட்டாள் அவள். இரண்டு பேர் சாப்பிடப் போதும். வற்றல் மீன் இரண்டையும் நெருப்பில் சுட்டு வைத்தாள். நிறையச் சிட்டகாங் மிளகாயை எடுத்து அரைத்து வைத்தாள். இரண்டு பெரிய வெங்காயங்களை நறுக்கி வெங்காயத் துண்டுகளுடன் சுட்ட மீன்களைக் கலந்து பிசைந்து பீங்கான் தட்டில் வைத்தாள். மீன் துவையல் தயார் செய்தபோது அவளுக்கு நாக்கில் நீர் ஊறியது. அவள் விரும்பி யிருந்தால் எல்லாச் சமையலையும் அவள் ஒருத்தியே சாப்பிட்டுத் தீர்த்திருக்க முடியும். ஆனால் வீட்டில் விருந்தாளி. அவள் தன் பசியைச் சற்றுநேரத்துக்கு அடக்கிக்கொண்டாள். பாத்திரத்தில் சோறு தளதளவென்று கொதிக்கிறது. சோறு வேகும் மணம். அவள் கஞ்சியை ஒரு பாத்திரத்தில் வடித்து அதில் கொஞ்சம் உப்புப் போட்டு, சற்றுப் பின்பக்கம் திரும்பிக்கொண்டு அவ்வளவு கஞ்சியையும் கடகடவென்று குடித்துவிட்டாள். இப்போதுதான் அவளுடைய கண்களுக்குப் பார்வை வந்தது அவளால் எல்லாப் பொருள்களையும் தெளிவாகப் பார்க்க முடிந்தது. இப்போது பக்கிரி சாயபு அவள் கண்களுக்குப் பீர் போலவே காட்சியளிக்கிறார். சாட்சாத் தர்காவோட பீர்தான் பக்கிரி சாயபு! அவள் தன் சரீரத்தையும் ஒரு தடவைப் பார்த்துக்கொண்டாள். இந்த உடம்பிலும் நல்ல தெம்பு இருக்கிறது. பக்கிரி சாயபுவை வசப்படுத்துவது பெரிய காரியமில்லை. ஜோட்டன் தனக்குள் சிரித்துக்கொண்டாள். வேலியிடுக்கு வழியே கூப்பிட்டாள். ''பக்கிரி சாகேப், குளிச்சுட்டு வாங்க! சமையல் தயாராயிடுச்சு.''

பக்கிரி சாயபு தன் சாமக்கிரியை – முஸ்கிலாசான் உட்பட எல்லா வற்றையும் எடுத்துக்கொண்டு படித்துறைக்குப் போனூர். காகம் கரையும் ஒலியைக் கேட்டுக்கொண்டு, வானத்து வெயில் மரக் கிளைகளில் விழுவதைப் பார்த்துக்கொண்டு வீட்டில் உட்கார்ந் திருந்தாள் ஜோட்டன். வீட்டுக்குப் பின்புறம் மஞ்சள் நிறநிழல். பிரம்புப் புதரில் குளவிக் கூடு. கீழே போன்ற மரங்கள் அடர்ந்த காடு. பக்கிரிசாயபு ஹாசிம் வீட்டுக் குளத்தில் குளிக்கிருர். ஜோட்டன் காஜியின் பாட்டுக்களைப் பாடத் தொடங்கினுள் தனக்குள். அவளுடைய கண்களில் கனவு பிறந்தது. புதரில் பழுக்கும் பிறப்பம்பழம் போல இக்கனவிலும் ரசம் ஊறி நிரம்பும். இனிய எதிர்காலத்தின் வண்ணச் சித்திரத்தை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை அவளால். கனவு, காஜி பாட்டுப் பாடும் பாடகனின் கையிலுள்ள கோல் போலத் தோற்றமளிக்கிறது. அது சந்திரனின் உருவெடுத்துச் சப்பட்டை மூக்குடன் ஜோட்டனின் சுகத்தை யெல்லாம் பார்க்கிறது.

அவள் அவசர அவசரமாகப் பக்கத்திலிருந்த ஒரு குட்டையில் முழுகிவிட்டு வந்தாள். தலையைத் துவட்டிக்கொண்டு கட்டம் போட்ட புடைவை அணிந்துகொண்டு உடைந்துபோன கண்ணுடி யில் தன் அழகிய முகத்தைப் பார்த்துக்கொண்டாள். தன் வெள்ளை வெளேரென்ற பல் வரிசையைப் பார்த்த அவளுக்குப் பீரின் தர்காவில் இரவில் ஒலிக்கும் ஹீராமன் பட்சியின் நினைவு வந்தது. இந்நினைவில் அவள் உணர்ச்சி வசப்பட்டாள். பக்கிரி சாயபு கிழிந்த தடுக்கில் சம்பிரமமாக உட்கார்ந்துகொண்டார். அவருடைய ஈர லுங்கி அவரைப் பந்தலில் காய்ந்துகொண் டிருந்தது. அவர் இரண்டு தடவை அல்லாவின் பெயரை உச்சரித்துவிட்டு ஆகாயத்தைப் பார்த்தார். நிர்மலமான ஆகாயம், சுத்தமான முற்றம். அவரால் சாப்பாட்டை அவசர அவசரமாக விழுங்க முடியவில்லை. அவர் நிதானமாக ஒரு தட்டுச் சோற்றையும் மீன் துவையலுடன் கலந்து கலந்து உருட்டி உருட்டி ரசித்துச் சாப்பிட ஆரம்பித்தார். கீழே விழுந்த ஓரிரண்டு சோற்றுப் பருக்கைகளையும் விரல் நுனியால் லாகவமாகப் பொறுக்கி வாயில் போட்டுக்கொண்டார், 'இது அல்லா வின் மிகச் சிறந்த பிரசாதம். இது தீர்ந்து போய்விட்டால் மறுபடி கிடைக்காது' என்று நினைத்தவர் போல.

அவர் ஒரு தட்டுச் சோற்றைக் காலி செய்ததும், ஜோட்டன் இன்னொரு தட்டில் சோறு கொண்டு வந்து வைத்தாள். அவர் அதை யும் சாப்பிட்டு முடித்தார். முடித்துவிட்டு இன்னும் சோற்றை எதிர் பார்த்து உட்கார்ந்திருந்தார். திடீரென்று அப்போதுதான் கண்டு பிடித்தவர் போல ஆசனத்திலும் தட்டு விளிம்பிலும் ஒட்டிக்கொண்

டிருந்த சோற்றுப் பருக்கையையும் விரலால் பொறுக்கி வாயில் போட்டுக்கொண்டுவிட்டு உட்கார்ந்திருந்தார். தொழுகை செய்ய உட்காருவதுபோல் இப்படி உட்காருவது அவருக்கு மிகவும் பிடித்த மானது. இதையெல்லாம் குடிசைக்குள்ளிருந்து கவனித்துக்கொண் டிருந்த ஜோட்டன் வெட்கத்தால் குன்றிப் போனாள். அவள் சோற்றுப் பாத்திரத்துக்குள் கையைவிட்டு அதில் மிச்சமிருந்த இரண்டு கை சாதத்தையும் மிச்சமிருந்த எல்லாத் துவையலையும் தட்டில் வைத்துப் பக்கிரி சாயபுவுக்கு முன்னால் வைத்தாள். அவர் சொன்னார் : "போதும், இப்ப நீங்க போய்ச் சாப்பிடுங்க !"

ஜோட்டன் குடிசையின் ஒரு மூலையில் உட்கார்ந்தாள். அவளுடைய தலை சுற்றியது. சுவரின்மேல் சாய்ந்துகொண்டாள். புடைவை இடுப்பிலிருந்து நழுவி விழுந்தது. ஆபேத் அலியும் இல்லை, ஜப்பரும் இல்லை. இருந்திருந்தால் அவர்களிடம் சொல்லியிருப்பாள் : 'இந்தக் குடிசையை அடகு வச்சுக்கிட்டு எனக்கு ஒரு வயித்துச் சோறு போடு' என்று. பசி வேதனை பொறுக்க முடியாமல் அவள் கொஞ்சம் பருப்புக் கீரையை வேகவைத்துச் சாப்பிட்டாள். பருவத்துக்கு முன்பே பழுத்துவிட்ட சில பிரப்பம் பழங்களைப் பறித்துச் சாப்பிட்டாள். இப்போது முற்றத்தில் மரங்களின் நிழல் நீள்கிறது. காகங்களும் மைனாக்களும் கிளைகளிலும் புதர்களிலும் உறங்கிக் கிடக்கின்றன. பக்கிரி சாயபு கிழிந்த தடுக்கில படுத்துக்கொண்டு தூங்குகிறார். ஜோட்டனால் மேலும் உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவள் சோர்வுடன் தன் புடைவைத் தலைப்பைத் தரையில் விரித்து அதன் மேல் குப்புறப் படுத்துக்கொண்டு தூங்கிப் போய் விட்டாள்.

மாலை நேரம். பறவைகள் கூவிக்கொண்டு பறந்தன. சாத்-பாயி-சம்ப பறவைகள் சுரைக்காய்ப் பந்தலின் கீழே கீச்கீச்சென்று கத்தின. வயல் வேலைக்காரர்கள் பாதையில் நடந்து வந்துகொண் டிருந்தார்கள். ஜோட்டன் தன் சோர்ந்த உடலைக் கஷ்டப்பட்டு நிமிர்த்தினாள். பக்கிரி சாயபு உட்கார்ந்துகொண்டு ஹுக்கா பிடித்துக்கொண் டிருக்கிறார். அவருடைய மூட்டை முடிச்சுக்கள் கவனமாகக் கட்டிவைக்கப்பட் டிருக்கின்றன. ஹுக்கா குடித்து முடித்ததும் அவர் புறப்பட்டுவிடுவார் போல் இருந்தது

ஜோட்டனால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. அவள் உள்ளிருந்தே கேட்டாள் : "பக்கிரி சாகேப், என்னைக் கூட்டிக் கிட்டுப் போகமாட்டீங்களா ?"

பக்கிரிசாயபு மூட்டைகளைத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டே சொன்னார் : "இன்னிக்கு இல்லே, இன்னொரு நாள்.

இப்போ கோர்பான் ஷேக்கோட படையலுக்குப் போறேன். எப்போ திரும்புவேனோ தெரியாது!''

அவர் புறப்படும்போது கதவின் இடைவெளி வழியே ஜோட்டனின் சோர்ந்த முகத்தில் பொறுக்க முடியாத வேதனையின் அடையாளத்தைக் கவனித்துவிட்டுச் சொல்லிக்கொண்டார்: ''அல்லா ரசூல்! ஐயோ! ஆசை நிறைஞ்ச இந்த உலகத்திலே நாம் எவ்வளவு தூரம் போக முடியும்?''

அவர் நடந்து சென்றபோது தன்னை ஜோட்டனின் கண்கள் பின்னாலிருந்து பார்த்துக்கொண் டிருப்பதை உணர்ந்தார்.

ஜோட்டனுக்குத் தோன்றியது. அன்னத்தின் சிறகு போன்ற மாலதியின் உடலிலிருந்து ஆசையாகிய நீர் உருண்டு விழுகிறது. பீரின் உடல் காஜிப் பாட்டுப் பாடும் பாடகனின் கோல் போல் அசைகிறது, நடக்கிறது. சந்திரனைப் போல் உருவெடுத்துக் கொண்டு சப்பட்டை மூக்குடன் ஜோட்டனின் துக்கத்தையெல் லாம் பார்த்துக்கொண் டிருக்கிறது. ஜோட்டன் விக்கி விக்கி அழுதாள். ''அல்லாவே! உன்னுடை உலகத்திலே எனக்காக ஒருத்தருமே இல்லையா?''

ஒரு ஹாட்கிலாப் பறவை வெகுநேரமாகத் தொடர்ந்தாற் போல் கூவிக்கொண் டிருக்கிறது. வீட்டுக்கு வடக்கே கோரைப் புல் காடு. இப்போது அங்கே பலவிதப் பூச்சிகள் பறந்துகொண் டிருக் கின்றன. முதலை போல் பெரிய இரண்டு உடும்புகள் புதருக்குள் போய் மறைந்தன. பருந்து கத்திக்கொண் டிருக்கிறது. மாலதி சீதாப்பழ மரத்துக்குக் கீழே நின்றுகொண்டு எல்லாவற்றையும் கேட்டுக்கொண் டிருந்தாள். இன்னும் கீழே இறங்கிவரத் துணிவு வரவில்லை அவளுக்கு. ஏகாதசிக்கு மறுநாள். நல்ல உறைப்பாக ஏதாவது சாப்பிட ஆசையாயிருக்கிறது. பிரம்புக் கொழுந்தை வேகவைத்துச் சாப்பிடவேண்டும் போலிருக்கிறது. கொழுந்துடன் கடுகெண்ணெயும் பச்சை மிளகாயும் சேர்த்துச் சாப்பிட்டால் பிரமாதமாயிருக்கும். மாலதி பிரம்புக் கொழுந்தைப் பறிப்பதற் காகச் சீதாப்பழ மரத்தடியில் நின்றாள். பிரம்புப் புதரில் குளவிக் கூடு. புதருக்குள்ளிருந்து பறவையின் ஒலி. உள்ளே பாம்பு, பறவையையோ குஞ்சையோ விழுங்கிக்கொண் டிருக்கும் என்று

பயந்து அவள் புதரை அணுகவில்லை. அவளுடைய கையில் ஒரு நீண்ட குச்சி. குச்சியின் நுனியில் அவள் ஒரு சிறிய அரிவாளைக் கட்டிவைத்திருந்தாள். அவள் தயங்கினுள். எங்கும் சீதாப்பூவின் மணம்.

ஒரு சிறிய கத்தரித் தோட்டத்தைத் தாண்டினுல் ஆபாராணியின் சமையலறை. நரேன்தாஸ் இருக்குமிடம் தெரியவில்லை. நெசவு அறையில் அமூல்யன் துணி நெய்துகொண் டிருக்கிருன். இடையிடையே அவனுடைய பாட்டு காதில் விழுகிறது. நரேன்தாஸின் மனைவி ஆபாராணி வராந்தாவில் உட்கார்ந்துகொண்டு கீரைத் தண்டு நறுக்கிக்கொண் டிருக்கிருள் மாலதி இன்னும் பிரம்புக் கொழுந்து பறித்துக்கொண்டு வரவில்லை. அவள் கூப்பிட்டாள். "மாலதி! ஏ மாலதி! நேரமாகல்லியா?"

சீதாப்பூ மணத்தை முகர்ந்துகொண் டிருந்த மாலதிக்குக் காதில் விழுந்ததோ என்னவோ? புதருக்குள்ளிருந்து பறவையின் ஓலம் விட்டுவிட்டுக் கேட்டது. தூரத்தில் ஜப்பர் வயலில் உழுது கொண்டிருக்கிருன். இது என்ன மாதம்? பால்குனுக இருக்கலாம், மாக மாதக் கடைசியாகவும் இருக்கலாம். மாலதி நின்றவாறே கணக்குப் போட்டுப் பார்த்தாள். இப்போது ஜப்பர் அங்கே வந்து அவளைக் கேட்டாலும் கேட்கலாம், "மாலதி அக்கா, ஒரு குவளை தண்ணி கொடு!" என்று.

மாலதி உரக்கச் சொன்னுள். "அண்ணி, எனக்குப் புதருக்குள்ளே நுழையப் பயமாயிருக்கு. ஒரு ஹாட்கிலா அப்பவே பிடிச்சுக் கத்திக்கிட்டிருக்கு."

"ஹாட்கிலா கத்திக்கிட்டிருந்தா உனக்கு என்ன?"

"அதைப் பாம்பு முழுங்கிக்கிட்டிருக்கு போலே இருக்கு."

"ஒங்கிட்ட சொல்லிச்சாக்கும்?"

மாலதி இதற்குப் பதில் சொல்லவில்லை. ஆற்றுப்படுகை வழியே சாமு வருவதைக் கண்டாள். அவன் கூடவே பேலு. சாமு, பேலுவை விட்டு ஒரு பெரிய காகிதத்தை மரத்தின் அடிப்பாகத்தில் ஒட்டச் செய்தான்.

மாலதி கூப்பிட்டாள், "சாமு, ஓ சாமு!"

மாலதி தனக்கேற்பட்ட துன்பத்தை மறந்துகொண் டிருக்கிருள் என்று சாமுவுக்குப் புரிந்தது. சிறுவயதில் அவள் அவளுக்குப் புதர்களிலிருந்தும் மரங்களிலிருந்தும் பிரம்பம்பழம், பலிசப்பழம், அந்தந்தப் பருவத்துக்குரிய வெவ்வேறு பழங்கள், பூக்கள் இவையெல்லாம் பறித்துக்கொண்டு வந்து தருவான். இப்போதும் அவளுக்கு ஏதோ தேவைப்படுகிறது. அவன் மரத்தடியிலிருந்தே

கையைத் தூக்கிக்கொண்டு சொன்னான்: "வரேன், வரேன்! இந்த நோட்டீசை ஒட்டிட்டு வரேன்."

"அது என்ன நோட்டீஸ்?"

"லீக் நோட்டீஸ்."

"ஆமா, பிரமாத லீக்! முதல்லே நான் சொல்றதைக் கேளு. அப்புறம் லீகைக் கட்டிக்கிட்டு அழு!"

சாமு அருகில் வந்ததும் அவன் அவளிடம் அரிவாள் கட்டிய குச்சியைக் கொடுத்துவிட்டுச் சொன்னாள்: "எனக்கு ரெண்டு பிரம்பங்கொம்பு பறிச்சுத் தா!"

சாமு அரிவாளைக் குச்சியில் இறுகக் கட்டிக்கொண்டு புதருக்கு அருகில் வந்தான். ஹாட்கிலா இப்போது முன்போல் அடிக்கடி கத்தவில்லை. அதன் ஓலம் நீண்ட இடைவெளிக்குப் பிறகே கேட்கிறது. சாமு புதருக்குள் நுழைந்ததும் சில பூச்சிகள் பறந்து வந்து அவனுடைய முகத்திலும் உடம்பிலும் உட்கார்ந்தன. அவன் அவற்றைத் தட்டிவிட்டுவிட்டு இரண்டு இளங்கொம்புகளை ஒடித்துக்கொண்டு வந்தான். "பாரு, இன்னும் வேணுமா?"

"வேண்டாம்!"

மாலதி சாமுவை அரிவாளையும் குச்சியையும் தரையில் வைக்கச் சொன்னாள். அவன் வைத்ததும் குச்சியை மட்டும் எடுத்துக் கொண்டு நடக்கத் தொடங்கினாள். பின்னால் திரும்பிப் பார்க்கா விட்டாலும் சாமு தன் பின்னே வந்துகொண் டிருப்பது அவளுக்குத் தெரிந்தது. அரிவாளைச் சாமுவே வீட்டுக்குக் கொண்டு வரவேண்டு மென்பது அவளுடைய ஆசை. போகும்போது மாலதிக்கு நினைவு வந்தது, அவளுடைய உடலில் ரவிக்கை இல்லை, கைகளில் வளையல் இல்லை என்று. அவள் எவ்வளவு முயன்றும் புடைவையால் தன் உடம்பை முற்றும் மறைத்துக்கொள்ள முடியவில்லை. அவளுக்குப் பின்னால் வரும் மனிதன் அவளுடைய உடலிலிருந்து சீதாப்பூவின் மணத்தை நுகர்கிறான். ஆனால் எவ்வளவு தூரம் அவன் போவான் என்று அவளுக்குத் தெரியவில்லை. அவள் அவசர அவசரமாகத் தன் புடைவைத் தலைப்பைப் போர்வை போல் பிரித்து அதனால் உடலைப் போர்த்துக்கொண்டாள். சாமு தன்னைப் பின்தொடர்கிறான் என்பதை நினைக்கும்போதே அவளுடைய உடலில் வாசம் செய்யும் கிரௌஞ்ச பட்சி, வேளை நேரம் பாராமல் கூவத் தொடங்கிவிடுகிறது. அதன் குரலைக் கேட்டதும் அவளுடைய சரீரத்தின் ரோமங்கள் குத்திட்டு நிற்கின்றன. ஆகவே அவள் பின் பக்கம் திரும்பாமலேயே சொன்னாள்: "சாமு, இனிமே நீ கூட வரவேண்டாம். வீட்டுக்குப் போ!"

சாமு ஒன்றும் பேசாமல் அரிவாளை நரேன்தாஸின் வீட்டு வராந்தாவில் வைத்துவிட்டுப் போய்விட்டான். மாலதி ஏதேதோ

நினைவில் ஆழ்ந்தவளாகப் பிரம்புப் பட்டையை உரிக்க ஆரம்பித்தாள். ரொம்பப் பிஞ்சு. வேக வைத்தால் வெண்ணெயைப் போல் ஆகிவிடும். மணம் மிகுந்த பச்சரிசிச் சாதம், கொஞ்சம் நெய், வேக வைத்த இளம் பிரம்பு இவை எல்லாம் விதவைப் பருவத்துக்கு ஏற்ற உணவு. ஏகாதசிக்கு மறுநாள் இத்தகைய பிஞ்சுப் பிரம்புக் கிடைத்ததில் அவளுடைய நாக்கில் நீர் ஊறியது. கூடவே அவளுடைய இளமைப் பருவத்தின் சில காட்சிகள் அவள் மனக் கண்ணில் தோன்றின. சாமுவும், ஏஸோவும், ரஞ்சித்தும் எவ்வளவு நாட்கள் அவளுக்கு வயலிலிருந்து மெஜந்தா நிறமுள்ள பலிசப் பழங்களைப் பறித்துக்கொண்டு வந்து கொடுத்திருக்கிறார்கள். பிரப்பம்பழம் மஞ்சித்திப்பழம், மகிழம்பழம் என்று அந்த அந்தப் பருவத்துக்கேற்ற பழங்களை அவளுக்குக் கொண்டுவந்து கொடுக்கத் தங்களுக்குள் போட்டி போட்டுக்கொண் டிருந்திருக்கிறார்கள்.

இத்தகைய இன்ப நினைவுகளில் மாலதி பகலைக் கழிக்க முடிகிறது. ஆனால் இரவுதான் கழிவதில்லை. இரவில் ஜன்னலைத் திறந்து வைத்துக்கொண்டு வெள்ளி நிலவு படர்ந்த வயல்களைப் பார்த்துக் கொண்டே இருக்க அவளுக்கு மிகவும் பிடிக்கும். சில சமயம் அந்த நிலவொளியில் ஒரு ராட்சசனின் உருவம் தோன்றும். அவன் என்ன சொல்கிறானோ? எப்படித் திறக்கிறான் வாயை! செம்பருத்தி போல் ரத்தச் சிவப்பான லட்சம் கண்கள் அவனுக்கு! உதடுகளைத் திறக்கிறான். ஒரு ராட்சசி அவனைத் துரத்திக்கொண்டு போய் அடிக்கிறாள்.

அப்போது மாலதிக்குத் தூக்கம் வருவதில்லை. கடைசி ஜாமத்தில் தான் அவள் தூங்குவாள். அவளுடைய உறக்கம் கலையும்போது சூரியன் உதித்து வெகு நேரமாயிருக்கும். ஆபாராணி அவளை எழுப்பி எழுப்பி அலுத்துப் போவாள். நெசவு அறையிலிருக்கும் நரேன்தாஸ் சொல்லுவான்: "போனால் போறது, தூங்கட்டும். அவளோட இவ்வளவு பெரிய சோகத்தைக் கொஞ்சம் மறக்கட்டும்." மாலதியின் தூக்கத்தில் ஒரு பறவை ஓலமிடும்; 'என்னை ஏற்றிக் கொண்டு படகை விடு. ஏரி நீரில் இருளில் முழுகப் போகிறேன் நான்.'

மாலதி சீத்தா மரங்களின் இடுக்கு வழியே பார்த்தாள். சாமு எப்போதோ போய்விட்டான். நெசவு அறையிலிருந்து தறி இயங்கும் சப்தம் கேட்கிறது. தன் வீட்டு வாசலில் உளுந்து மிதித்துக் கொண்டிருக்கிறான் மன்சூர். நான்கு பெரிய மாடுகள் இந்த வேலையில் ஈடுபட்டிருக்கின்றன.

இரண்டு நீண்ட மாதங்களுக்குப் பிறகு இன்று மாலதிக்கு ஆகாயமும் பூமியும் அன்பினால் நிறைந்திருப்பவையாகத் தோற்று

கின்றன. ஆகையால் தான் அவளால் சாமுவைக் கூவியழைக்க முடிந்தது. நீண்ட காலத்துக்குப் பிறகு அவளுக்குத் தானும் இந்த மண்ணைப் போல் நல்ல நீர் நிறைந்தவள், இனிய கனிகள் நிறைந்தவள் என்ற உணர்வு ஏற்பட்டது. அவள் வெகு நாட்களுக்குப் பின் முதல் தடவையாக உற்சாகத்துடன் புடைவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக்கொண்டாள். அவள் குளத்தங்கரையிலிருந்த கொய்யா மரத்தடிக்கு ஓடினாள். கட்டாரி மர நிழலில் நின்றுகொண்டு மரத்தில் ஏதாவது பழுத்த பழம் இருக்கிறதா என்று தேடினாள். இருந்தால் தொறட்டியால் பழம் பறிக்கலாம். பிறகு அதன் கொட்டையைச் சப்பிட்டுக்கொண்டே — அவளுடைய கணவனின் உதடுகளிலும் நாக்கிலும், ஆகா! என்ன ருசி! — ஒரு பழம் கிடைத்தால் அதைத் தின்றுவிட்டுக் கொட்டையைக் காற்றில் துப்பலாம். கட்டாரிப் பழத்தின் வழுவழுப்பான கொட்டையும் கணவனின் ஜில் லென்று குளிர்ச்சியான நாக்கும் ருசியில் ஒன்றுதான். ஒரு கட்டாரிப் பழம் சாப்பிட ஏங்கினாள் அவள். ஏக்கத்தில் அவளுடைய முகம் சிவந்துவிட்டது. அவள் மரத்தைப் பார்க்கிறாளா, அல்லது ஏதாவது பறவையைப் பார்க்கிறாளா என்று புரியவில்லை.

மரத்தில் ஒரு பழங்கூட இல்லை. குளிர்காலம் கழிந்துவிட்டால் கட்டாரி மரத்தில் பழங்கள் இருக்காது. மாலதி வீட்டுக்குள் நுழைந்தாள். விதவை மாலதி என்ன என்ன சாப்பிடலாம், அவளுக்கு என்ன என்ன சாப்பிடப் பிடிக்கும் என்றெல்லாம் யோசித்து ஆபாராணி அக்கறையோடு அவளுக்காக வெள்ளைக் கல்லின் மேல் காய்கறி நறுக்கிக் கொண்டிருந்தாள்.

மாலதி அண்ணிக்குப் பக்கத்தில் நெருங்கி உட்கார்ந்துகொண்டு சொன்னாள்: "சாமு முந்தி மாதிரியேதான் இருக்கான், அண்ணி. கூப்பிட்டதும் ஓடிவந்தான், பிரம்புக் கொப்பு பறிச்சுக் கொடுத்தான். அவன் என்னவோ பாஸ் பண்ணினானே ?"

"ஆமா, மாமா வீட்டிலே இருந்துகொண்டு பரீட்சை பாஸ் பண்ணினான். ஒரு வேலை கிடைக்கணும்னு உன்னோட மாப்பிள்ளைக் கிட்டே எவ்வளவோ தடவை வந்தான். அவரும் அவனுக்காக வேலை பார்த்துக்கொண்டிருந்தார். ஆனா இப்போ என்ன ஆயிடுத்து, பார் அண்ணி !" மாலதியால் மேலே பேச முடியவில்லை. அவள் விம்மி விம்மியழத் தொடங்கினாள். "எனக்கு இனிமே உசிரோடிருக்க பிடிக்கலே, அண்ணி !"

ஆபாராணி சொன்னாள், "அழாதே !" என்று.

மாலதி அண்ணிக்கு உதவி செய்யத் தொடங்கினாள். பிரம்புத் தண்டை நறுக்கிக் கொடுத்தாள். வேலை செய்துகொண்டிருக்கும்

போது அவல சம்பவங்களின் நினைவுகள் மனத்துக்குள் எட்டிப் பார்க்கும், அவள் மௌனமாகி விடுவாள். அவள் தன் அகன்ற கண்களால் உலகத்தை வெறித்து வெறித்துப் பார்ப்பாள். எல்லாமே அர்த்தமற்றவையாகத் தோன்றும் அவளுக்கு. கணவனுடன் ஏற்பட்ட சின்னஞ்சிறு தகராறுகள் அவளுடைய நினைவுக்கு வரும். கண்களில் நீர் நிரம்பும். அப்போது அவளுக்கு ஒன்றுமே பிடிக்காது.

ஆகையால் அவள் வராந்தாவை விட்டு எழுந்து, கத்தரித் தோட்டத்தைத் தாண்டி, முன்பு ஹாட்கிலாப் பறவை கூவிக்கொண்டிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தாள். நிர்ஜனமான இந்த இடம் அவளுக்குப் பிடித்திருந்தது. அவள் ஏதோ நினைத்துக்கொண்டே எலுமிச்சை மரத்திலிருந்து இரண்டு இலைகளைப் பறித்து அவற்றைக் கசக்கி முகர்ந்தாள். காரணமின்றி அவளுக்குத் தன் கணவனின் நினைவு வந்தது. அவனுடைய கண்கள்! விதவிதமான இனிய நினைவுகள்! நினைக்க நினைக்கக் கடைசியில் மிஞ்சுவது வேதனை தான்.

இங்கிருந்து பார்த்தால் செங்கடம்பு மரம் நன்றாகத் தெரிந்தது. அந்த வழியே சென்றவர்கள் மரத்தில் ஒட்டியிருந்த விளம்பரத்தைப் பார்த்தார்கள். படிக்கத் தெரிந்தவர்கள் நின்று அதைப் படித்தார்கள். சாமுவுக்கு வேலையில்லை. ஆகையால் அவன் லீக் கட்சிப் பிரமுகன். அவன் மரங்களிலும் முஸ்லிம் கிராமங்களிலும் இந்த விளம்பரத்தை ஒட்டி அமைதி தேடிக் கொள்கிறான். சாமு விளம்பரத்தில் என்ன எழுதியிருக்கிறான் என்று தெரிந்துகொள்ள மாலதிக்கு மிகுந்த ஆவல். ஒருவருக்கும் தெரியாமல் அதைக் கிழித்தெறிந்து விட ஆசை. கிழித்தெறிந்துவிட்டால் யாராலும் கண்டுபிடிக்க முடியாது.

சாமுவுக்குத் தெரிந்தால் அவளைக் கேட்பான், "ஏன் இப்படிச் செய்தே?" என்று.

"ஏன் செய்யக் கூடாது? தேசம் உங்க ஆட்களுக்கு மட்டுந்தான் சொந்தமா?"

"ஏன், எல்லோருக்குந்தான் சொந்தம்!"

"அப்படீன்னா ஏன் இஸ்லாம், இஸ்லாம்னு கத்திக்கிட்டு இருக்கே?"

"ஏன்னா, எங்க ஆளுக குதிரை மாதிரி ஆயிட்டாங்க. ஒரு தடவை கண்ணைத் திறந்து பாரு. உத்தியோகம் உங்களுக்கு, நிலம் உங்களுக்கு, ஜமீந்தார் நீங்க! படிப்பு கிடிப்பு எல்லாம் இந்துக்களுக்கு."

"சரிதான்."

மனசுக்குள் தீர்மானம் செய்துகொண்டு மாலதி விளம்பரத்தை நோக்கி நடந்தாள். இரண்டு வயல்களைக் கடந்தால் அந்த மரம். நரேன்தாஸுக்குச் சொந்தமான மரம். சாமு இந்த மரத்தில் விளம்பரம் ஒட்டியதன் நோக்கம், மாலதி அதைப் படிக்க வேண்டும் என்பதுதான்.

"இஸ்லாமுக்கு ஆபத்து. இந்த ஆபத்துக் காலத்தில் நாம் நம் மதத்தைக் காப்பாற்ற வேண்டும்."

இப்போது வயல்கள், பயிர் வயல்கள், நெல், உளுந்து, பட்டாணி வயல்கள், புகையிலை, வெங்காயத் தோட்டங்கள் காலியாக இருக்கின்றன, உழப்பட்ட நிலந்தான், உலர்ந்து கிடக்கிறது. மண் கட்டியாக இறுகிக் கிடக்கிறது. அவள் வரப்பு மேலே நடக்கவில்லை.

வயல்களின் குறுக்கே நடக்கிறாள். வேகமாக நடப்பதற்காகப் புடைவையை முழங்காலுக்கு மேலே தூக்கிக்கொண்டு போகிறாள். தரையில் அவளுடைய காலடி பதிகிறது. நெடுநாட்களுக்குப் பிறகு இன்று ஆகாயம் நிர்மலமாக, நீலமாக இருக்கிறது. அவள் கொஞ்சம் கொஞ்சமாக மரத்தை நெருங்குகிறாள். அவளுடைய கேசம் காற்றில் பறக்கிறது. பக்கத்து நிலத்தில் ஒரு காலத்தில் ரஸோவும் பூடியும் முழுகி இறந்து போய்விட்டார்கள் என்ற நினைவு வந்ததும் அவள் அங்குச் சற்று நேரம் நின்றாள்.

கண்ணீர் தேவைப்படாத அன்புச் சுழல் ஒன்று இங்கு நீண்ட காலமாக இருந்து வருகிறது போலும்.

அவள் நடந்தாள். விளம்பரம் காற்றில் அசைகிறது. விளம்பரத்தைப் படித்து அவள் உணர்ச்சி வசப்பட்டாள். ஹக்சாகேப் புதிய புதிய பேச்சுக்கள் பேசினார். விளம்பரத்தின் ஒரு மூலையில் நஜீமுத்தீன் சாகேப்பின் படம். தூரத்தில் உழவு நடக்கிறது. உழவர்கள் உழுதுகொண்டே பாடுகிறார்கள்.

சாமுவின் துவேஷ மனப்பான்மை மாலதிக்குப் பிடிக்கவில்லை. அவள் இங்கும் மங்கும் பார்த்துவிட்டு யாருக்கும் தெரியாமல் விளம்பரத்தைக் கிழித்தெறிந்தாள். பிறகு கிடுகிடுவென்று நடந்து ஹாட்கிலாப் பறவை ஓலமிட்டுக் கொண்டிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தாள். தன் கணவனின் முகம் நினைவுக்கு வந்தபோது அவள் உரத்த குரலில் கத்த விரும்பினாள். 'நான் பண்ணினது சரிதான். சாமு உன்னோட பெரிய மனுஷத்தனம் எனக்குப் பிடிக்கல்லே. நீ முன்னே நல்லவனாகத்தானே இருந்தே.'

ஹாட்கிலா மறுபடி கூகூவென்று கூவத் தொடங்கிவிட்டது. புதருக்குள் எங்கிருந்து அந்தச் சப்தம் வருகிறது, அது ஏன் இப்படிக் கத்துகிறது என்று மாலதிக்குப் புரியவில்லை. அந்த ஒலி வெகுதூரத்திலிருந்து காற்றில் மிதந்து வருவது போலிருக்கிறது.

கோரைப்புல் காட்டில் தண்ணீர் இல்லை. தண்ணீர் இறங்கிவிட்டது. அடிமரத்தில் மஞ்சள் நிறச் சுவடை விட்டுச் சென்றிருக்கிறது. மாலதி கத்தரித் தோட்டத்தில் நின்றுகொண்டு புதருக்குள் எட்டிப் பார்த்தாள். பட்சி தொடர்ந்து ஓலமிட்டுக்கொண் டிருந்தது. அதற்கு ஏதோ ஒரு பொறுக்கமுடியாத வேதனை. அவள் உள்ளே பார்க்கப் பலவிதமாக முயற்சி செய்தாள். பிரம்பு இலைகளை விலக்கிப் பருத்திக் கிளைகளின் மேல் சாய்ந்து, தரையில் ஊர்ந்த வண்ணம், இவ்வாறெல்லாம் அந்தப் பறவையைக் கண்டுபிடிக்க முயற்சி செய்தாள். கோரைப்புல் காட்டுக்குள் நுழைந்து குதிகாலைத் தூக்கிக்கொண்டு எம்பிப் பார்த்தாள். பறவையைக் காணேம். அதன் ஓலம் மட்டும் புதரின் அடிக்குள்ளிருந்து வந்துகொண்டிருக்கிறது. அவள் தன் வீட்டிலிருந்து தொறட்டி எடுத்து வந்து புதருக்குள் குத்திப் பார்க்கும் எண்ணத்துடன் திரும்பியபோது ஒரு பானசப் பாம்பு புதருக்குள் நுழைய முயற்சி செய்வதையும் ஆனல் அதனல் நகர முடியாமல் இருப்பதையும் கண்டாள். பாம்பின் மாதுளை முத்துப் போன்ற சிவந்த கண்கள் அவளைப் பார்க்கின்றன. பட்சியின் பாதி உடல் பாம்பின் வாய்க்குள் இருக்கிறது. இவ்வளவு பெரிய பறவையை எப்படித்தான் விழுங்குகிறதோ இந்தப் பாம்பு?

மாலதி பயந்துபோய்க் கத்தினள். "அண்ணி, வந்து பாரு இந்த அதிசயத்தை! பானசப் பாம்பு ஹாட்கிலாவை முழுங்கறது பாரு!"

"ஐயோ, உன்னையும் கடிச்சுடுண்டி!" என்று சொல்லிக் கொண்டே ஆபாராணி ஓடி வந்து மாலதியை அழைத்துக்கொண்டு போனள்.

வீட்டு வாசலுக்கு வந்துகொண் டிருந்த மாலதி சாமு தன்னை நோக்கி வேகமாக வருவதைக் கண்டாள். கார்த்திகேயனுக்கு இருப்பதுபோல் அவனுக்கும் மெல்லிய கோடு போன்ற மீசை. முகத்தில் கோபத்தின் சாயை. அவன் மாலதிக்கு முன்னே சென்று நின்றன். ஆபாராணி பயந்துபோய்ச் சற்றுத் தூரத்தில் நின்றள். சாமு கோபத்துடன், ஆனல் பணிவு குன்றமல் கேட்டான், "நீ விளம்பரத்தை ஏன் கிழிச்செறிஞ்சே?"

"கிழிச்சா உனக்கென்ன?"

'டாக்காவிலேருந்து இதையெல்லாம் கொண்டு வர்றது எவ்வளவு கஷ்டம்னு உனக்குத் தெரியாதா? இனிமே ஒரு நாளும் கிழிக்காதே!"

'கிழிப்பேன், ஒரு தடவை இல்லே, நூறு தடவை கிழிப்பேன்!' என்று சொல்ல விரும்பினள் மாலதி. ஆனல் அவனுடைய முகத்தைப் பார்த்து அப்படிச் சொல்ல மனம் வரவில்லை அவளுக்கு,

பிறகு ஏதோ நினைத்துவிட்டுச் சொன்னாள், "எவ்வளவு பெரிய ஹாட்கிலாப் பறவையைப் பாம்பு முழுங்கறது, பாரு!"

சாமு வேகமாகத் திரும்பிப் பார்த்தான். பாம்பு பறவையை முக்கால்வாசி விழுங்கிவிட்டது. பூரா விழுங்கியதும் தன் தேகத்தை அசைத்து அசைத்துக்கொண்டு இந்தப் பக்கம் வரும். எந்தக் காரணத்தாலாவது பறவை பாம்பின் வாயிலிருந்து தப்பிவிட்டால், வேறு வினை வேண்டாம்!

சாமு அதட்டினான். "ஏய். உனக்குக் கொஞ்சங்கூடப் பயமில்லே? போ, வீட்டுக்குப் போ!"

'என்னை அடக்க வந்துட்டியாக்கும்!' என்று அடங்காப்பிடாரி போல் பதில் சொல்ல விரும்பினாள் மாலதி. அது முடியாமல் போகவே 'ஹோ ஹோ' என்று சிரித்துவிட்டாள்.

"விளையாடாதே, மாலதி. பாம்போட வாயிலிருந்து ஆகாரம் நழுவிப் போயிட்டா அதுக்கு வெறி பிடிச்சுடும்."

"மனுஷங்களுக்கு வெறி பிடிக்கிறதில்லையா?"

சாமு கண்களை இடுக்கிக்கொண்டு மாலதியை உற்று நோக்கினான். கிழக்கிலிருந்து வரும் வெள்ளத்தால் பெருக்கெடுத்து ஓடும் நதியைப் போல் அவளுடைய உடலில் இளமையும் அழகும் பொங்கிக் கொண்டிருந்தன. விதவையாகி விட்ட ஓர் இளம் பெண்ணின் உடலில் இப்படியா அழகு பொங்கும்!

சாமு கடைசியாகச் சொன்னான். "போ வீட்டுக்கு! காட்டிலே நின்னுக்கிட்டிருக்காதே!"

மாலதி நகரவில்லை. அவள் மறுபடி புதருக்குள் எட்டிப் பார்த்தாள். பாம்பு ஒரு மொட்டை மரத்தில் தன் உடலைச் சுற்றிக் கொண்டிருந்தது. அதன் கண்கள் மாதுளை முத்தைப் போல் சிவப்பாக ஜொலிக்கின்றன. அவர்கள் சற்றுத் தூரத்தில் போய் நின்றுகொண்டு பறவை பாம்பின் வாய்க்குள் அந்தர்த்தியான மாவதைக் கவனித்தார்கள். பாம்பின் கழுத்து உப்பிப் போய்ப் பிறகு மறுபடி பழைய நிலைக்கு வந்துவிட்டது. அப்புறம் பாம்பு சவம்போல் கிளையில் தொங்கத் தொடங்கியது.

மறுநாள் அதிகாலையில் மாலதி எழுந்திருந்து வாத்துக்களை விரட்டிக்கொண்டு போய்க் குளத்தில் விட்டாள். ஒரு மரத்தின் கணுவின் மேல் உட்கார்ந்துகொண்டு தண்ணீரில் தன் பிரதி பிம்பத்தைப் பார்த்தாள். அவளுடைய உடலில் வெள்ளைப் புடைவை. அந்த அசட்டு நிறத்தாலும் அவளுடைய அழகை மறைக்க முடியவில்லை. பொன்னான மேனி, வண்ணத்துப் பூச்சி போன்ற மென்மையான மனம். இரவில் ஆழ்ந்த உறக்கத்தில் இந்த மனம் மரக்கணுவைப் போல் உணர்வற்று இருக்கிறது.

தண்ணீரில் கால்களைப் போட்டுக்கொண்டு மரக்கணுவின் மேல் உட்கார்ந்திருக்கிருள் மாலதி. வாத்துக்கள் தண்ணீரில் நீந்தும், விளையாடும், மிதந்து மிதந்து போகும். தண்ணீருக்குள் மூழ்கி வெகு தூரத்துக்குச் சென்று மேலே வரும். மேலே வந்ததும் ஆண் வாத்து மற்ற வாத்துக்களை விரட்டும். இருட்டிய பிறகு அவளு டைய கணவன், வீட்டுக்குள்ளும் தோட்டத்திலும் அவளைத் துரத்திக்கொண்டு வருவானே, கண்ணுமூச்சி விளையாடுவானே, அதுபோல. அவள் ஓடிக் களைத்துவிட்டால் அவன் அவளை அப்படியே பிடித்துத் தூக்கிக்கொண்டு போவான், ஏதோ ஒரு மலைக்கோ, நதிக்கரைக்கோ அவளை எடுத்துச் செல்பவன் போல. என்ன இனிய விளையாட்டுக்கள்! அந்த மாதிரிதான் இந்த வாத்துக் களும் விளையாடுகின்றன. மாலதியின் கால்கள் கொஞ்சங் கொஞ்ச மாக மரத்துப் போய்க்கொண் டிருக்கின்றன. தேகம் கட்டையாகிக் கொண்டிருக்கிறது. அவளுடைய அழகிய பாதம் மாச்ராங்கா மீனைப் போல் தண்ணீரில் மூழ்கிக்கொண் டிருந்தது.

அடிக்கடி ரஞ்சித்தின் நினைவு வருகிறது அவளுக்கு. ரஞ்சித், டாகுர் வீட்டுப் பெரிய மாமியின் தம்பி. அவன் இப்போது எங்கே இருக்கிருனே, யார் கண்டார்கள்? அவன் எங்கோ ஓடிப் போய் விட்டான். எங்கே போனுனென்று ஒருவருக்கும் தெரியாது.

குளத்தின் மறுபக்கத்தில் புதருக்குள் பெரிய மீன் ஒன்று அசைந் தது. சிறு வயதில் மாலதி மீன் பிடிப்பாள். மழைக்காலத்தில் கொய்னுப் படகுகளின் பாய்கள் காற்றில் அசையும். புதர்களிலும் காடுகளிலும் பூக்கள் மலர்ந்திருக்கும். அப்போது இங்கே நிறையச் சேலா மீன்கள், டார்க்கீனு மீன்கள், புடைவை கட்டிய பூன்ட்டி மீன்கள் எல்லாம் இருக்கும். மாலதி சிறிய தூண்டிலில் போட்டுப் பூன்ட்டி மீன் பிடிப் பாள் அப்போது.

ஒரு நாள் மாலையில் தனிமையில் ரஞ்சித் அருகில் நின்றுகொண்டு மீன் பிடித்தவாறே கிசுகிசுத்தான். "வரியா- மாலதி? என்னோட வரியா?"

ரஞ்சித் என்ன சொல்கிருன் என் அவளுக்குப் புரிந்தது. ஆனுல் அவள் ஒன்றும் புரியாதவள் போல் நடந்துகொண்டாள். மேலும் பேசத் துணிவு ஏற்படவில்லை ரஞ்சித்துக்கு.

அவள் மரக்கணுவின்மேல் உட்கார்ந்திருந்தாள். எழுந்திருக்கவே மனமில்லை அவளுக்கு. குளத்து நீர் கீழே இறங்கிவிட்டது. ஆகையால் மரக்கணுவையும் கீழே இறக்கி வைத்திருந்தார்கள். குளத்தில் இறங்குவதற்குப் படியாக பயன்பட்டது அது. எவ்வளவோ கால மாக இங்கே இருக்கிறது இந்தக் கட்டை. ரஸோ, ரஞ்சித், சாமு எல்லாரும் மழைக்காலத்தில் இதன்மேல் ஏறித் தண்ணீரில் குதிப்

பார்கள், முழுகுவார்கள், மிதிப்பார்கள். நீந்திக்கொண்டு புதர்களில் போய் மறைந்துகொண்டு மாலதியைப் பயமுறுத்துவார்கள்.

இரவில் அவள் கண்ட சில கனவுகள், குளத்து நீர், வாத்துக் களின் இன்பமயமான வாழ்க்கை, எதிரிலிருந்த வயல்வெளி, சோள கோதுமை வயல்கள், உழவர்கள் ஒன்ருகப் பாடும் அறுவடைப் பாட்டு இவையெல்லாம் சேர்ந்து அவளை ஆட்கொள்ளுகின்றன. இரவுக் கனவுகள் தெளிவற்ற நினைவுகளைப் போல் மறைகின்றன. காதலனின் முகம் கந்தப்பாதால் செடிப்புதரிலிருந்து எட்டிப் பார்க் கிறது. இயற்கையின் நிசப்தமும் காலை நேரத்தின் இனிமையும் மாலதியை வேதனைக்குள்ளாக்குகின்றன. மரத்தில் சாமுவின் விளம் பரம் தொங்குகிறது. நாளுக்கு நாள் தேசம் எப்படி ஆகிக்கொண்டு வருகிறது.

மாலதி தண்ணீரில் இறங்கிக் கைகளையும் முகத்தையும் கழுவிக் கொண்டாள். நினைவின் ஆழத்திலிருந்து காதலனின் முகத்தை மேலே கொண்டு வந்து, கடவுளின் பெயரை ஜபித்தாள். அவள் கண்களில் நீர் நிறைந்தது.

நரேன்தாஸ் மேற்குப் பாடாவிலிருந்து திரும்பி வந்துகொண் டிருக்கிருன். அவன் கையில் ஒரு கலதா சிங்டி மீன். மாலதி தன் சுற்றுப்புறத்தையே மறந்துவிட்டு வாத்துக்கள் நீரில் நீந்துவதைப் பார்த்துக்கொண் டிருக்கிருள். தான் வந்திருப்பதைத் தெரிவிக்கும் முறையில் ஒரு தடவை கனைத்துக்கொண்டான் நரேன்தாஸ். ஏதோ குற்றம் செய்து அகப்பட்டுக்கொண்டது போல் குறுகிப் போனுள் மாலதி. வாத்துக்களின் விளையாட்டு – இந்த மாதிரி விளையாட்டு மாலதிக்கு இந்தப் பிறவியில் கிடையாது. அவளைப் பொறுத்த வரையில் எல்லாமே முடிந்துவிட்டது. அவள் சங்கடத் துடன் பார்த்தாள். நரேன்தாஸும் அப்பாவிச் சிறுவன்போல் அவளைப் பார்த்துச் சொன்னுன். “பாரு, எவ்வளவு பெரிய மீன் கொண்டு வந்திருக்கேன்! சமைச்சுச் சாப்பிடு!”

அப்போதுதான் அவனுக்கு நினைவு வந்தது. அவனுடைய தங்கை மாலதி, விதவை. அவன் தனக்கு வந்த பெருமூச்சை அடக்கிக் கொண்டு வீட்டுக்குள் போனுன். மாலதி அவனுடன் கூட வந்து கொண்டே சொன்னுள்: “அண்ணு, சாமு மரத்திலே நோட்டீஸ் ஒட்டருன். நீ ஒட்டக்கூடாதுன்னு சொல்லு!”

“ஒரு இடத்திலே ஒட்டக்கூடாதுன்னு இன்னெரு இடத்திலே ஒட்டுவான்.”

நரேன்தாஸுக்குச் சாமுவைத் தடுக்கத் துணிவில்லை என்று மாலதிக்குப் புரிந்தது.

சுமார் ஒரு மாதத்துக்குப் பிறகு சாமு அந்தப் பக்கம் நோட்டீஸ் ஒட்ட வந்தபோது மாலதி அவனிடம் சொன்னுள் : "சாமு, நோட்டீஸ் ஒட்டாதே ?"

"ஏன் ?"

"இது என் அண்ணனோட மரம்."

"அதனுலே என்ன ?"

"உன் மரம் இருந்தா அதிலே ஒட்டிக்கோ."

"இது என் மரந்தான். நீ என்ன பண்ண முடியுமோ பண்ணிக்கோ."

"பெரிய பெரிய பேச்செல்லாம் பேசாதே, சாமு."

"நேற்றுப் பொறந்தவன் நீ. அதுக்குள்ளே பெரிய மனுஷன் வேஷம் போடாதே! நீ குடிச்ச பால் வாசனை கூட மறையல்லே இன்னும்."

"ஏ குட்டி ! உன்கிட்டே மட்டும் என்ன வாசனை இருக்கு ?" என்று சொல்லிக்கொண்டே சாமு மரத்திலேறி உயரத்தில் நோட்டீஸைத் தொங்கவிட்டான். "எங்கே இப்போ கிழி. உன் சாமர்த்தியத்தைப் பார்க்கறேன்."

"சரி" என்று சொல்லிவிட்டு மாலதி தன் வீட்டுப் பக்கம் போய்க் கட்டாரி மரத்தடியில் நின்ருள்.

மாலதியின் கோபத்தைப் பார்த்து மனத்துக்குள் சிரித்துக்கொண் டான் சாமு. அவளுடைய பிடிவாத குணம் மாறவில்லை. சாமு முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு கிராமத்தை நோக்கிப் போனுன். ஆனுல் கிராமத்தின் பசுஞ்செடி கொடிகளைப் பார்க்கப் பார்க்க அவனுடைய மனத்தில் மாலதிக்காக அநுதாபம் பொங்கியது. மாலதியின் தேகத்தின் நிறம் தானியத்தின் நிறத்தைப் போல் இருந்தது. அவளுடன் சம்பந்தப்பட்ட குழந்தைப் பருவ நினைவுகள், வகுப்புக் கலவரத்தில் அவளுடைய கணவனின் மரணம், அவளது விதவைக் கோலம்—எல்லாம் சேர்ந்து சாமுவின் மனத்தில் வேதனையை உண்டாக்கின. இப்போது அவனுக்கே தன்னுடைய வகுப்பு வெறி பிடிக்கவில்லை. அவன் இனி அந்த மரத்தில் நோட்டீஸ் ஒட்டுவதில்லை என்று தீர்மானித்தான். வேறு எங்காவது ஒட்டிக் கொள்ளலாம். அவன் திரும்பிப் பார்த்தபோது மாலதி ஒரு பெரிய குச்சியை வைத்துக் கொண்டு, அவன் அவளுக்குப் பிரப்பங் கொப்பு பறித்துக் கொடுக்க உபயோகித்தானே, அதே குச்சி—நோட்டீஸைக் கீழே இறக்கிக் கொண்டிருந்தாள். கோபத்தில் சாமுவுக்குக் கால் ரத்தம் தலைக் கேறியது. உணர்ச்சி வசப்பட்டவனுக அவன் படபடப்புடன் அவள் அருகே ஓடி வந்தபோது அவள் அவனைப் பார்த்துச் சிரித்து விட்டாள்.

''பாரு, என்னுலே நோட்டீஸைக் கீழே இறக்க முடியுமான்னு பாரு!''

மாலதியின் இந்தக் கொம்மாளத்துக்கு முடிவு கட்ட விரும்பினுன் சாமு. அவன் அவளிடம் தனக்கேற்பட்ட அநுதாபத்தை அடக்கிக் கொள்வதற்காக வலிந்து மேற்கொண்ட கடுமையுடன் சொன்னுன். ''நீ இப்போ ஒரு விதவை, மாலதி. இப்படி நீ சிரிக்கறது நல்லா யில்லே.''

''ஏ சா...மு...!'' என்று சொல்லிக்கொண்டு மாலதி நோட்டீசும் கையுமாகக் கீழே விழுவதுபோல் மரத்தின் மேல் சாய்ந்தாள். குழந்தை போல் பொருமிப் பொருமி அழ ஆரம்பித்தாள். விதவைக்குச் சிரிக்க உரிமை இல்லை! மாலதி விதவை என்பதைச் சாமு அவளுக்கு ஞாபகப்படுத்திவிட்டான். சாமு மாலதியின் நிலையைக் காணப் பொருதவனுக அங்கிருந்து போய்விட்டான். கொஞ்சங் கொஞ்சமாகத் தள்ளிவிட்டு வந்தாள் மாலதி. அவள் காலடியில் அந்த விளம்பரம் கிடந்தது. அவள் தலையை உயர்த்திப் பார்த்தபோது வயல் வெளியில் வேறு யாரும் இல்லை.

சாமு கிராமத்தை நோக்கிப் போய்க்கொண் டிருக்கிருன். சந்தை மாடுகள் போய்க்கொண் டிருக்கின்றன. அவற்றின் கழுத்து மணிகள் ஒலிக்கின்றன. அருகில் சில மஞ்சித்தி மரங்கள். வசந்த காலமாதலால் அவற்றில் பழங்கள் இல்லை. அந்தப் பக்கத்தில் பலவிதப் பறவைகள் பறந்துகொண் டிருக்கின்றன. ஏரியில் தண்ணீர் மிகவும் குறைந்துவிட்டது. இந்தப் பருவத்தில் ஏரிக்கு நிறைய வாத்துக்கள் பறந்துவரும். மூடாபாடா யானையின் மணியோ சையை அவள் கேட்டு வெகு நாளாயிற்று என்பது மாலதிக்கு நினைவு வந்தது. அதைப் பார்க்கும்போது அவளுக்குத் தைரியம் வரும்.

இந்தப் பிராந்தியத்துப் புல்லும், பூக்களும், பறவைகளும் சைத்ர மாதத்து அனல்காற்றைப் பொறுத்துக்கொண்டு கால வைசாகிக் காகக் காத்திருந்தன. வயல் வெளி சூனியமாகக் கிடக்கிறது. ஆகாயம் வெண்கலப் பாத்திரம் போல் பழுப்பு நிறமாகக் காண்கிறது. பறவைகளும் பூச்சிகளும் பறக்கும்போது குப்பை செத்தை காற்றில் பறப்பது போல தோன்றுகிறது. வயல்வெளி, ஆறு, தர்மூஜ் வயல் எல்லாமே எரிந்து சாம்பலாகிவிடும் போலிருக்கிறது. ஆரஞ்சுத் தோலின் நிறத்தில் சூரியன் காட்சியளிக்கிருன். பூவரசமரம் மொட்டை யாக நிற்கிறது. இலவ மரத்தில் தளிர் விடுகிறது. நெல் வயல்களும் உளுந்து வயல்களும் இப்போது விவசாயத்துக்குத் தயாராயிருக் கின்றன. இந்தச் சமயத்தில் உழுது வைத்தால் நல்ல விளைச்சல் இருக்கும்; களை வளராது. டாகுர் வீட்டுச் சின்னபாபு உழவு எப்படி நடக்கிறது என்று பார்த்துக்கொண் டிருக்கிருர். மாலதி தனபாபுவின் சின்னக் குழந்தை சோனுவை மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சு

கிருள். கொஞ்சிக்கொண்டே மரத்தடியில் மாலை நேரத்துக் காற்றை வாங்கிக்கொண்டு நிற்கிருள். ஸ்ரீசசந்தா, தந்தி சந்தைக்குப் போகப் போகிருன். அங்கிருந்து நரேன்தாஸுக்கு நூல் கட்டு வாங்கிவரப் போகிருன். அது பற்றிக் கேட்டுக்கொண்டு போவதற்காக இந்தப் பக்கம் வருகிருன்.

அவன் மாலதியைப் பார்த்துக் கேட்டான், "அண்ணு எங்கே?"

"நூல் சுத்தருர். நீங்க சௌக்கியந்தானே, சித்தப்பா?"

"ஏதோ இருக்கேன். சந்தையிலே இப்போ நிலைமை சுகமில்லே. பராபர்தி மார்க்கெட்டிலே எல்லா முசல்மான்களும் ஒண்ணு சேர்ந்துக் கிட்டிருக்காங்க. இந்துக்களோட கடையிலேருந்து ஒரு சாமானும் வாங்கமாட்டாங்களாம்!"

பூவரச மரத்தைப் பார்த்துக்கொண்டே மாலதி நினைத்தாள், ஊரெல் லாம் எவ்வளவு கெட்டுப் போச்சு என்று. சோணு அவளுடைய மார்பைக் கட்டிக்கொண் டிருக்கிருன். இப்போது தூங்கிவிடுவான். எங்கும் குளிர்காற்று வீசுகிறது. சரீரமும் குளிர்ந்துவிட்டது. தேகம், மனம் இரண்டுமே லேசாகிவிட்டன போல் தோன்றுகின்றன.

சாமு டாக்கா போயிருக்கிருன். வெகு நாட்களாக இந்தப் பக்கம் வரவில்லை அவன். பச்சாதாபம் காரணமாக இருக்கலாம்.

ஒரு வயது முதிர்ந்த முஸ்லிம் அந்தப் பக்கம் வருவதைக் கண்டாள் மாலதி. அவன் செங்கடம்பு மரத்தில் ஒரு நோட்டீசைத் தொங்க விட்டுவிட்டு நின்ருன். அவன் லுங்கியும் ஜிப்பாவும் அணிந்திருந் தான். முகத்தில் தாடி.

மாலதி தன் வீட்டு ஓரம் வரை வந்தாள். ஆனுல் வயல் வெளிக்கு இறங்கி வரத் தைரியம் வரவில்லை அவளுக்கு. அந்த மனிதன் தன் கிராமத்துக்குத் திரும்பிப் போகவில்லை. இந்த ஆள் யார்? தூரத்தி லிருந்து அவளால் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடிய வில்லை. அவன் நரேன்தாஸின் வீட்டை நோக்கி வந்தான். மாலதி தன் அண்ணனைக் கூப்பிட்டு ஒரு மியான் அவனைத் தேடிக்கொண்டு வருவதைத் தெரிவிக்க நினைத்தாள். அந்த ஆள் அருகில் வந்தபோது, 'அடே! என்ன ஆச்சரியம்! சாமுவா இது! கார்த்திகேயன் மாதிரி அரும்பு மீசை வைத்திருந்த சாமு இப்போது மௌல்வி சாயபு மாதிரி தாடி வளர்த்துக்கொண் டிருக்கிருன். அவனை அடையாளமே தெரியவில்லை. முற்றும் அந்நியன் போல ஆகிவிட்டான் அவன்.'

மாலதியால் அவனுடன் பேசமுடியவில்லை. அவனும் அவளை அடையாளம் கண்டுகொண்டதாகக் காட்டிக்கொள்ளவில்லை. அவன் நேரே நடந்து வந்தான். அவளுடன் பேசவில்லை அவனுடைய கண்களிலும் முகத்திலும் ஒரு கடுமையான பாவம்

மாலதிக்கு வேதனையும் கோபமும் ஒருங்கே ஏற்பட்டன. அவள் உரக்கக் கூவினாள், "அண்ணா, யாரோ மியான் நம்ம வீட்டு வழியே போனார்."

நரேன்தாஸ் நூல் சுற்றிக்கொண்டிருந்தான். தூரத்திலிருந்து அவனுக்கும் சாமுவை அடையாளம் தெரியவில்லை. அவன் நூல் சுற்றும் சட்டத்தைக் கீழே வைத்துவிட்டுப் பார்த்தான், ஒரு மியான் கோரைப்புல் காட்டைத் தாண்டிக்கொண்டு அவன் வீட்டுப் பாதையில் போவதை. அவன் கத்தினான், "என்ன மியான்! போக வழி எங்கேன்னு தெரியல்லியா? காலை முறிச்சுடுவேன், ஆமா! வீட்டுக்கும் ரோட்டுக்கும் வித்தியாசம் தெரியல்லே உனக்கு?"

மாலதி கட்டாரி மரத்தின் மேல் சாய்ந்துகொண்டு 'ஹோ ஹோ' வென்று சிரித்தாள். அவளுடைய முகத்திலும் நின்ற நிலையிலும் பழி வாங்கும் பாவம் தொனித்தது. தூங்கிக்கொண்டிருந்த சோனா அவளுடைய சிரிப்பொலியில் திடுக்கென்று விழித்துக்கொண்டு அழத் தொடங்கினான். இந்தப் புதரில்தான் ஒரு பானசப் பாம்பு ஒரு ஹாட்கிலாப் பறவையை விழுங்கிவிட்டு மொட்டை மரத்தின் கிளையில் சுருண்டு கிடந்தது, சில மாதங்களுக்கு முன். இந்த நினைவு வந்ததும் அவளுக்கு வானத்தைப் பார்க்கத் தோன்றியது. கீழே வயல்வெளி, உலகத்தின் சுகதுக்கங்கள், காய்ந்த பூவரச மரக்கிளை, மடியில் தனபாபுவின் சிறிய பிள்ளை சோனா – எல்லாமாகச் சேர்ந்து மாலதியை ஓர் இனம் புரியாத பலவீனத்தில் ஆழ்த்தின. இதற்குள் சாமு சாலைக்குப் போய்ச் சேர்ந்துவிட்டான். ஒரு தடவைகூடத் திரும்பிப் பார்க்கவில்லை அவன். வெகுநாட்களாகி விட்டதால் வயல்வெளியைக் கடக்கும்போது சாமுவுக்கு வழி மறந்து விட்டது போலும்.

மழைக்காலம் வந்துவிட்டது. மழைக்காலம் வந்தால் வயல், ஏரி ஆறு, குளம் எல்லாம் தண்ணீரில் முழுகிவிடும். கிராமங்கள் மட்டும் தீவுகள் போல் தண்ணீரில் மிதக்கும். மழைக்காலத்தில் பெரிய பெரிய படகுகள் ஆற்றில் போகும். ஏரிகளிலும் வயல் நீரிலும் பெரிய பெரிய மீன்கள் கிடைக்கும். நெல் வயல்களில் கிரௌஞ்ச பறவைகள் முட்டையிடுவதற்காகக் கூடுகட்டும். இந்தக் காலத்தில் தான் உறவினர்கள் வெளியூர்களிலிருந்து வருவார்கள். அல்லியும்

தாமரையும் நீரில் மலரும். நீர்ப்பறவை பூக்களின் மேல் ஜாக்கிரதை யாக ஒரு காலே வைத்துக்கொண்டு மீன் பிடிப்பதற்காகத் தண்ணீரையே பார்த்துக்கொண் டிருக்கும்.

மழைக்காலம் வந்துவிட்டால் கிழவர் மகேந்திரநாத்தால் தம் அறைக்குள் அடைந்துகிடக்க முடியாது. அவர் மெதுவாக வந்து வராந்தாவில் உட்காருவார். ஒரு மான்தோலின் மேல் உட்கார்ந்து கொண்டு மாலேப் பொழுதைக் கழித்துவிடுவார். அவருக்கு வயது எண்பதுக்கு மேலாகிவிட்டது. இப்போதெல்லாம் கண் கொஞ்சங் கூடத் தெரியவில்லே. இருந்தாலும் அங்கு உட்கார்ந்தவாறே தோட் டத்தில் என்னென்ன மரம் இருக்கிறது, என்னென்ன பூ பூத்திருக் கிறது என்று தெரிந்துவிடும் அவருக்கு. தனமாமி சோனுவை அவருக்கு அருகில் கொண்டுவந்து விடுவாள். ஒரு துணியின் மேல் படுத்துக்கொண்டு கை காலே ஆட்டிக்கொண்டு விளேயாடுவான், சோனு. மகேந்திரநாத் இடையிடையே அவனுடன் பேசுவார். அவனுடைய இடுப்பில் வெள்ளி அரைஞாண், கையில் பொன் வளேயல். அவனுடைய சிரிப்பு கிழவருக்குக் கடந்த காலத்தின் பல காட்சிகளே நினேவுறுத்தும். தமக்கு மிகவும் பழக்கமாகிவிட்ட இந்த மாலே நேரத்தின் மணத்தை முகர்ந்தவாறே பழைய நாள் கதைகளேச் சொல்லிக்கொண் டிருப்பார் கிழவர், சோனுவும் தம் வயதுதான் என்று எண்ணியவர் போல், தம்முடைய தனிமை அவனுக்குப் புரிந்திருப்பதுபோல. சோனு 'ஆ... ஆ ...தா ... தா' என்றெல்லாம் சொல்லிக்கொண் டிருப்பான். திண்ணேப் பக்கம் சுவரோரம் சணல் தட்டைக் கட்டு சாய்த்து வைக்கப்பட்டிருக்கும். திண்ணேயைக் கடந்ததும் தென்பக்கத்து அறை.

மேக மூட்டமாயிருக்கிறது. இன்று நிச்சயம் பூச்சிகள் நிறைய வரும். இது சரத் காலம். சரத் காலம் வந்துவிட்டால் பூபேந்திரநாத் மூடா பாடாவிலிருந்து படகை அனுப்புவார். அஷ்டமியன்று துர்க்கைக்குப் பலியிடப்பட்ட முழு ஆட்டின் மாமிசம் தோலுரிக்கப்பட்டுப் படகில் வரும் டாகுர் வீட்டுக்கு.

பெரிய மாமி கையில் சூடான பாலுடன் வந்தாள். பால் டம்ப்ளரைக் கிழவருக்கு முன்னுல் வைத்துவிட்டு அவரது காலடியில் உட்கார்ந் தாள். எதிரில் குளம், மா, நாவல் மரங்களின் நிழல். அதற்குப் பின்னுல் வயல்வெளி. மழைக் காலமாயிருந்ததால் எங்கும் தண்ணீர்மயம். அறுவடையான சணல் வயல்கள் நீர் நிறைந்து சமுத்திரம் போல அல்லது ஒரு பெரிய ஏரி போலக் காட்சியளிக்கும். கர்ணபரம்பரைக் கதைகளில் வரும் ராஜகுமாரி இந்த நீரில்தான் மிதந்து வருவாள். தண்ணீரைப் பார்த்ததும் பெரிய மாமிக்கு இதெல்லாம் நினேவு வரும்.

கல்யாணமான பிறகு, தான் ஒரு பெரிய படகில் இங்கே வந்தது நினைவுக்கு வரும். இவ்வளவு பெரிய ஏரியில் படகு வரும்போது அவளுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. யாரோ இந்த ஏரியின் கதையைச் சொல்வது போல் இருந்தது. நாடோடிப் பாடல்களில் வரும் கதை அது. ராஜகுமாரி, அவள் பெயர் ஸோனுயி மீமி – அந்த ஏரியில் படகில் வந்துகொண் டிருந்தபோது படகு முழுகி விட்டதாம். பொன் படகு, அதன் துடுப்பு வெள்ளி.

அந்த முதல் நாள், தன் கணவனின் முகம் அந்தக் கதையை நினைவு படுத்தியது என்பது இப்போது ஞாபகம் வந்தது பெரிய மாமிக்கு. அவள் சற்று நேரம் தன்னையே மறந்துவிட்டாள். அவளுடைய கணவனுக்கு அப்போதே மூளைக் கோளாறு ஏற்பட்டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அன்று நாடோடியைப் போல இப்படிப்பட்ட கதையைச் சொல்லியிருப்பாரா ?

சோனுவின் முகத்தை உற்றுப் பார்த்தபோது பெரிய மாமிக்குத் தோன்றியது, அவன் தன் தாயின் ஜாடையுமில்லை ; தந்தையின் ஜாடையுமில்லை என்று. அவளுடைய பைத்தியக்காரக் கணவனின் ஜாடைதான். பெரிய மாமி கல்கத்தாவில் வளர்ந்தவள், சிறிது காலம் கான்வென்ட் பள்ளியில் படித்தவள். இப்போதெல்லாம் அவள் தன் கணவனைப் பைத்தியமாகக் கருதுவதில்லை. அவளுக்கு அவர் புனித மோஸஸ் மாதிரி அல்லது கிரேக்கப் புராணத்து வீரனொரு வன் மாதிரி–யுத்த களத்தில் வழி தவறிவிட்ட வீரன்.

பெரிய மாமி சொன்னாள். "அப்பா, சோனுவுக்கு உங்க பெரிய பிள்ளையோட ஜாடை."

மகேந்திரநாத் மெல்லச் சிரித்தார், பிறகு ஏதோ வருத்தம் தோன்றியது அவர் முகத்தில்.

" மணியை எங்கே காணோம் ?"

"குளத்தங்கரையிலே உட்கார்ந்திருந்தார்."

கிழவர் தன் பெரிய நாட்டுப் பெண்ணிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டுமென்று வெகு காலமாக நினைத்துக் கொண்டிருந்தார். அவளு டைய பிறந்தகத்தாருக்கு ஓர் அபிப்பிராயம். அவர் தம் பெரிய பிள்ளையின் மூளைக் கோளாற்றை மறைத்துக் கல்யாணம் செய்து வைத்துவிட்டதாக. அவளும் அப்படி நினைக்கிறாளோ, என்னவோ ? அவர் சொல்ல விரும்பினார் அவளிடம், 'நான் என் வாழ்க்கையிலே பொய் சொன்னதில்லே, யாரையும் ஏமாத்தினதில்லே. நான் சொல் றேன். நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி."

இவ்வாறு யோசித்துவிட்டு அவர் சொன்னார். "என் காலம் முடியப் போகிறது. அதுக்கு முன்னாலே உங்கிட்டே ஒரு விஷயம் சொல் லணும், அம்மா !"

அவள் மெல்லச் சிரித்தாள். ''சொல்லுங்க ! மணி லீவிலே வீட்டுக் வரபோதெல்லாம் என்னுடை நெஞ்சு சந்தோஷத்தாலே பூரிக்கும். இந்தப் பிராந்தியத்திலேயே அவனைப் போலக் கெட்டிக்காரப் பையன் இல்லே. அதனுல்தான் உங்கப்பாவோடே கல்யாணப் பேச்சு நடத்தினேன். இப்ப சில பேர் சொல்ருங்க, நான் என் பிள்ளை பைத்தியம்னு தெரிஞ்சுக்கிண்டே அவனுக்குக் கல்யாணம் பண்ணி வச்சதாக !'

பெரிய மாமி பதில் பேசவில்லை. அவள் சோனுவை மடியில் வைத்துக்கொண்டு அவர் அருகில் உட்கார்ந்திருந்தாள்.

''தெரியுமா அம்மா? மணி 'என்ட்ரன்ஸ்' பரீட்சையிலே முதலா வதா வந்து அவனுக்கு ஸ்காலர்ஷிப் கிடைச்சபோது எல்லார்கிட் டேயும் சொன்னேன், பகவான் என் மானத்தைக் காப்பாத்திட் டான்னு. கல்யாணத்துக்கப்பறம் அவனுக்குப் பைத்தியம் பிடிச்ச போது பகவான் என்னை வச்சுக்கிட்டு விளையாட்டுப் பண்ருர் அப்படீன்னேன்.''

அவர் எதையோ தேடுவது போல் கையை நீட்டினுர். அவரது குழம்பிய கண்கள் அசையாமல் நின்றன. ஒரேயடியாக வெளுத்த தலைமயிரும் தாடியும் அவருக்குச் சாந்தாகிளாசின் தோற்றத்தை யளித்தன. சுருங்கிக் கிடந்தது தோல்.

''உங்க தடியை எடுத்துக் கொடுக்கவா?''

''இல்லேயம்மா, உன் கையைக் கொடு.''

அவள் கையை நீட்டியதும் கிழவர் அதைத தம் இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக்கொண்டு சொன்னுர்: ''அம்மா, மணிக்குக் கல்யாணத்துக்கு முன்னுலே பைத்தியம் பிடிக்கல்லேன்னு நீயாவது நம்பணும். நான் உன்னை ஒரு பைத்தியத்துக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்துக் கூட்டிக்கிண்டு வரல்லே.''

கிழவர் மௌனமானுர். அவருடைய கண்களிலிருந்து நீர் வழிந் தது. அவரது முகத்தில் சோகம் கட்டிக் கிடந்தது. நம்பிக்கை யின் சுவடே இல்லை, அதில். சாவை நோக்கிப் பிரயாணம் செய்யும் பிரயாணி அவர். வழியில் சிறிது காலம் ஒரு தண்ணீர்ப் பந்தல் அமைத்துக்கொண்டு வாழ்நாள் பூராவும் எல்லாருக்கும் தண்ணீர் வழங்கிவிட்டுக் கடைசியில் மிஞ்சியிருந்த தண்ணீரால் கைகால்களையும் முகத்தையும் அலம்பிக்கொண்டு பெரும் பயணத் துக்குத் தயாராகிவிட்டார்.

அவருடைய பேச்சு எங்கோ வெகு தூரத்திலிருந்து வருவது போலிருக்கிறது. ''மணியோடட அம்மா பேச்சைக் கேட்டிருந்தா இப்படி ஆயிருக்காது. இதோ பாரு அம்மா ! நான் வீட்டு எஜமான்,

மணி என்னோடே பெரிய பிள்ளை. அவன் ஒரு மிலேச்சப் பெண்ணை கல்யாணம் பண்ணிக்கறதா? அது சரியல்லேம்மா, சரியில்லே."

கிழவரின் பேச்சைக் கேட்கப் பெரிய மாமிக்குப் பொறுக்கவில்லை. அவளுடைய கண்களைச் சோகம் கப்பிக்கொண்டது. கிழவரின் அருமைப் பிள்ளை, அவளுடைய கணவர், காதலால் பைத்தியமாகி விட்டார். கிழவர் தொடர்ந்து பேசினால் அவளுக்கு அழுகை வந்து விடும். அவள் பேச்சை மாற்றுவதற்காகச் சொன்னாள். "வாங்கோ அப்பா, உங்களை உங்க ரூமிலே கொண்டு விடறேன்."

"நான் இன்னும் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருக்கேன், அம்மா. இங்கே உட்கார்ந்திருந்தா ஆறுதலா இருக்கு. மழைக்காலத்துப் பயிர் பச்சைகளோட வாசனை வருது. அப்போ கடவுளுக்கு ரொம்பக் கிட்டே இருக்காப்பலே தோன்றது. உன் மாமி எங்கே?"

"அவர் பத்மபுராணம் கேட்கப் போயிருக்கார். உங்களுக்குப் பத்ம புராணம் கேட்க ஆசையா இல்லையா, அப்பா?"

"நானே பத்மபுராணந்தானே! வாழ்க்கை பூராவும் நான் *சாந்த் ஸதாகரோட பாத்திரத்திலே நடிக்கிறேன். நீ பேஹுலா பாத்திரத் திலே நடிக்கிறே."

கிழவர் இப்போது வார்த்தைகளை நீட்டி நீட்டிக்கொண்டு பேசினார். வரம் கொடுக்க உரிமையுள்ள வயது வந்துவிட்டது அவருக்கு. கடவுளுக்குச் சமானமாகத் தோற்றமளித்தார் அவர். அவருடைய பேச்சு வெகு தூரத்திலிருந்து வந்தாற்போல் இருந்தது. "அம்மா, நீ பதிவிரதை சாவித்திரிதான் நீதான் பேஹுலா! நீ சங்கும் சிந்தூரமுமா தீர்க்க சுமங்கலியா இருக்கணும்."

ஆழ்ந்த இரவில் பெரிய மாமி தூங்கிக்கொண் டிருக்கிறாள். ஒரு விளக்கு அணையும் தறுவாயில் இருக்கிறது. ஜன்னல் திறந்திருக் கிறது. மழைக் காலத்தின் ஈரக்காற்று ஜன்னல் வழியே உள்ளே நுழைந்து அவளுடைய உடைகளைக் கலைத்து விடுகிறது. அவளு டைய இரு கைகளும் நெஞ்சுக்கு மேலே அஞ்சலி செய்யும் பாவத்தில் சேர்ந்திருக்கின்றன. அவள் உறக்கத்தில் கூடக் கடவுளிடம் தன் கணவருக்காகப் பிரார்த்தனை செய்வதுபோல் இருக்கிறது.

அப்போது மணீந்திரநாத் அறைக்குள் உலவிக்கொண் டிருக்கிறார். அவருக்கு உறக்கம் இல்லை. திடீரென்று அறைக் கதவைத் திறக்கிறார். அவர். ஆற்றில் அக்கரையில் யாரையோ விட்டு விட்டு வந்திருப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது.

வானத்தில் இன்னும் சில நட்சத்திரங்கள் விழித்திருக்கின்றன. பூஜையறைக்கு அருகிலேயே ஒரு பவழமல்லிகை மரம். அதன்

---

* சாந்த்ஸதாகர், பேஹுலா-வங்காள நாடோடிக் கதைகளில் வரும் பாத்திரங்கள்.

பெரும்பாலான பூக்கள் கீழே உதிர்ந்துவிட்டன, உதிர்ந்துகொண் டிருக்கின்றன. ஒரு சில மட்டும் காம்புகளுடன் ஒட்டிக்கொண் டிருக்கின்றன. காலேக்காகவோ வெயிலுக்காகவோ காத்துக்கொண் டிருக்கின்றன போலும்! மணீந்திரநாத் சில பூக்களைப் பொறுக்கி, அவற்றின் காம்புகளின் மஞ்சள் சாற்றைக் கைகளிலும் முகத் திலும் தேய்த்துக்கொண்டார். இரவு கழிந்து வந்தது.

அவர் ஏதோ நினைத்துக்கொண்டு மூங்கில் புதருக்கருகே வந்து நின்ருர். எதிரில் படகுத் துறை. மழை நீர் வீட்டு வாசலுக்கு வந்துவிட்டது. அவர் சிறிய கோஷாப் படகில் ஏறி உட்கார்ந்து கொண்டு துடுப்பை வலித்ததும் படகு நகரத் தொடங்கியது.

கிராமங்கள், வயல்வெளிகளைத் தாண்டி ஆற்றுக்குப் போய்ச் சேரப் போகிருர் அவர். அவருடைய இன்னேர் உலகம் ஆற்றங் கரையில் விளையாடிக்கொண் டிருக்கிறது.

கண்ணுக்குத் தெரியாத வேதனை ஒன்று அவருடைய மூளையைத் துளைத்துக்கொண் டிருக்கிறது. அவர் வேண்டுவது தனிமை.

கிராமத்தையும் வயல்வெளிகளையும் கடந்து ஏரிக்குப் போய்ச் சேர்ந்துவிடுகிறது கோஷாப் படகு. படகிலிருந்து பார்த்தபோது நாற்புறமுமுள்ள கிராமங்கள் மிகவும் சிறிதாகத் தெரிகின்றன. எங்கும் நிசப்தம். பயங்கரமான, ஆளரவம் அற்ற தனிமை. தூரத்தில் ஸோனுலி பாலி ஆறு கோடுபோல் தெரிகிறது.

மணீந்திரநாத் பத்மாஸனம் போட்டுக்கொண்டு துறவியைப் போல் உட்கார்ந்திருக்கிருர். ஏரி நல்ல ஆழம்; துடுப்பின் நீளத்தைவிட ஆழம். அவர் தண்ணீருக்குள் பாலினுடைய முகத்தைப் பார்க்கிருர். பாலின் எப்படி ஆற்று நீரில் காணுமல் போய்விட்டாள்? ஆற்றங் கரையில் எவ்வளவு விளையாட்டுக்கள் விளையாடியிருக்கிருர்கள் அவர்கள்!

அந்தக் கோட்டை நினைவுக்கு வருகிறது. பெரிய மைதானம்; மைதானத்துக்கருகே கோட்டை. கோட்டையிலிருந்து கொண்டைப் புருக்கள் பறக்கும். மணீந்திரநாத் உரக்கக் கவிதை சொல்ல ஆரம்பித்தார்: 'கீட்ஸ் என்று ஒரு கவி; இப்போது அவன் உயிருடன் இல்லை.'

மணீந்திரநாத் கவிதை சொல்லும்போது பாலின் கோட்டைச் சிகரத்தைப் பார்த்த வண்ணம் தன்னை மறந்துவிடுவாள்.

சில செங்கடம்பு மரங்களைத் தாண்டிய பிறகு நந்தி விட்டாரின் படகுத் துறை. பிறகு முசல்மான் கிராமம். வெகு நாட்களுக்குப் பிறகு அவர் இந்தப் பக்கம் வந்திருக்கிருர். எங்கும் சணல் ஊறிக் கொண்டிருக்கிறது. ஊறிய சணல் தட்டையின் மணம். இங்கு

மங்கும் ஆகாசத் தாமரைச் செடிகள் மண்டிக் கிடக்கின்றன. அவற்றின் வெளிர் நீலப் பூக்களும், கரையிலிருக்கும் வாத்துக்களும் அசைகின்றன. ஒவ்வொரு படகுத் துரையிலும் பறங்கி, பூசணிப் பந்தல்கள்; கொடிகள் பந்தலுக்குக் கீழே தொங்குகின்றன. அவர் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே கவனமாகக் கால் வைத்துக் கரை ஏறிவந்தார். அப்போது ஒரு களஞ்சியத்தின் பின்னுலிருந்து வந்தான் ஹாமீத். அவன் அவரிடம் சொன்னுன். பேசுவது அர்த்தம் இல்லேதான். இருந்தாலும் அவர் பெரிய மனிதர். ஒரு தடவை அவன் அவரை ஹாஸான்பீரின் தர்க்காவில் பார்த்திருக்கிறுன். அவன் கண்முன்னே அவர் குழந்தையிலிருந்து இளேஞுக வளர்ந்திருக்கிருர். ஆனுல் இளமை இன்னும் மாருமல் இருக்கிறது. கட்டுமஸ்தான தேகம், விரைந்தோடும் குதிரையைப் போல.

ஹாமீத் சொன்னுன்: "இவ்வளவு நாள் கழிச்சு எங்க ஞாபகம் வந்ததா, அண்ணே?"

மணீந்திரநாத் கண்களே அகல விரித்து அவனேப் பார்த்துச் சிரித்தார்.

"கொஞ்சம் உக்காந்துக்குங்க, அண்ணே!"

ஹாமீத் அவருக்கு உட்கார ஓர் ஆசனம் கொடுத்தான். பிறகு 'அண்ணன் வந்திருக்காரு' என்று சொல்லி எல்லாரையும் கூப்பிட்டான். உடனே அவனுடைய தாயார், இரண்டு மனேவிகள் குழந்தைகள் எல்லாரும் வந்தார்கள். கிராமத்துக்குள் செய்தி பரவியது. எல்லாரும் வந்து அவரைச் சூழ்ந்துகொண்டார்கள்; அவருக்குச் சலாம் செய்தார்கள். மணீந்திரநாத் ஒன்றும் பேச வில்லே. பேசாமல் இருக்கும் வரை நல்லது. அவர் எல்லாரையும் விழித்து விழித்துப் பார்த்துக்கொண் டிருந்தார்.

ஹாமீத் தன் இரண்டாம் பீபியிடம் சொன்னுன்: "அண்ணனேட படகிலே ஒரு நல்ல பூசணிக்காய் எடுத்து வை!"

கிராமத்து விளேச்சலில் நல்லது எதுவோ, புதியது எதுவோ அதை அவருக்குக் கொடுக்காமல் சாப்பிடக் கூடாது என்று நினேத்தார்கள் கிராமவாசிகள்.

கிராமத்துக்குள் நடந்தார் அவர். அம்மணமான சிறு குழந்தை களும் கரும்பைக் கடித்துக்கொண் டிருந்த சிறுவர் சிறுமியரும் அவரைத் தொடர்ந்தார்கள். அவர் அவர்களே ஒன்றும் சொல்ல வில்லே.

சிறிய பெரிய பள்ளங்கள், மூங்கில் காடு, சேறு நிறைந்த வழுக்கல் பாதை இவற்றைக் கடந்து ஹாஜி சாகேபின் வீட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தார் அவர். ஹூக்காக் குழாயை வாயில் வைத்துக்கொண்

டிருந்த ஹாஜிக் கிழவர் வாசலிலிருந்து வந்த கொம்மாளத்தைக் கேட்டதுமே பைத்தியக்கார டாகுர் வந்திருப்பதை ஊகித்தறிந்து கொண்டார். அவர் ஹுக்காவை எறிந்துவிட்டு ஓடிவந்து அவரை வரவேற்றார். "வாப்பா, வா! இப்பல்லாம் நீ இந்தப் பக்கமே வரதில்லே!"

மணீந்திரநாத்துடன் பேசுவதில் பயன் இல்லை என்று அவருக்குத் தெரியும். இருந்தாலும் இவ்வளவு பெரிய மனிதர் இந்தப் பக்கம் வந்திருக்கும்போது அவரிடம் பேசாமல் இருக்க முடியவில்லை ஹாஜி சாயபுவால்.

மணீந்திரநாத் உட்காரவில்லை. ஹாஜி சாயபுவைப் பல தடவை திரும்பித் திரும்பிப் பார்த்தார். பிறகு அவர் வாயிலிருந்து வெளிவந்தது அந்தப் பழைய வார்த்தையே – காத்சோரத்சாலா!

ஹாஜி சாயபு சிரித்துவிட்டுத் தம் வேலையாளைக் கூப்பிட்டுச் சொன்னார்: "டாகுரோட படகிலே ரெண்டு குலை மர்த்தமான் வாழைப்பழம் எடுத்து வச்சுட்டுவா." அவர் மணீந்திரநாத்திடம் சொல்ல விரும்பினார். "டாகுர் பழத்தை எடுத்துக்கிட்டுப் போய், பழுத்தப்புறம் சாப்பிடு. உனக்குக் கொடுக்காமே சாப்பிட எனக்கு மனசு வராது!"

ஹாஜி சாயபு அல்லாவிடம் புகார் செய்யும் தொனியில் சொல்லிக் கொண்டார். "உம், பாவம், கிழவரோட தலையெழுத்து இப்படியா இருக்கணும்!"

மழைக் காலம். கடும் மழையால் பாதைகளில் எல்லாம் ஒரே சேறு. சில இடங்களில் முழங்கால் வரையில் சேற்றில் அமுங்குகிறது. ஆகையால் நடப்பது கஷ்டமாயிருக்கிறது, மணீந்திரநாத்துக்கு. பாதையின் இருபக்கமும் குப்பை, ஆபாசம், நாற்றம். இதையெல் லாம் அவர் கவனிக்கவேயில்லை. கிராமத்திலிருந்த முஸ்லிம் பெண்கள் அவரைக் கண்டதும் வீட்டுக்குள் நுழைந்து ஒளிந்து கொண்டார்கள். ஏழைகளாதலால் அவர்களிடம் தேகத்தை மூடப் போதிய துணி இல்லை. கிராமத்து ஆண்களில் பெரும்பாலோர் வயல் வேலைக்கோ சணல் அறுவடைக்கோ போயிருக்கிறார்கள்; மாலையில் தான் திரும்புவார்கள். மணீந்திரநாத் கிராமத்தை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு மறுபடி தம் படகில் வந்து உட்கார்ந்தார். தமக்கு அளிக்கப்பட்டிருந்த பொருள்களை ஒரு பக்கத்தில் அடுக்கிவைத்து விட்டுப் படகை ஓட்டத் தொடங்கினார். அம்மணமான குழந்தை களும், சிறுவர் சிறுமியரும் படகுத் துறையில் நின்றுகொண்டு வருத்தத்துடன் அவருக்கு விடையளித்தார்கள்.

இப்போதுதான் அவருக்கு நினைவு வந்தது, தம் மனைவி தமக்காகக் காத்துக்கொண் டிருப்பாளென்று. அவளுக்காக அவர் மனத்தில்

பரிவு சுரந்தது. அவளுடைய ஆழ்ந்த கண்கள் அவரை வீட்டுப் பக்கம் இழுத்தன. ஆனால் ஏரிக்குள் படகு நுழைந்ததுமே வீடு திரும்பும் அவருடைய ஆவல் வற்றிவிட்டது. அவர் படகுக்குள் சும்மா உட்கார்ந்திருந்தார். அவர் எவ்வளவு நேரம் இப்படி உட்கார்ந்திருந்தார், எவ்வளவு நேரம் காலை நேரத்துச் சூரியனைப் பார்த்துக்கொண் டிருந்தார், பிஸ்வாஸ் பாடா, நயாபாடாவில் காகங்களின் கத்தல், நெல்வயல்களில் கிரௌஞ்ச பட்சியின் 'டுப், டுப்' சப்தம், இவை எல்லாம் அவரை எவ்வளவு நேரம் தன்னிலை மறக்கச் செய்தன—ஒன்றுமே தெரியாது அவருக்கு. அவர் தண்ணீரில் இறங்கி நீந்தத் தொடங்கினார். அவரது உடலெங்கும் மிகவும் சூடாக இருந்தது. எவ்வளவு தடவை நீரில் முழுகினாலும் அவரால் தம் மன வேதனையைப் போக்கிக்கொள்ள முடியவில்லை. ஆளரவம் அற்ற ஏரிகரையில் மௌனமாக உட்கார்ந்திருப்பதன் மூலம் அவர் தமக்குப் பழக்கமில்லாத பேச்சுக்களிலிருந்தும் ஆபாசங்களிலிருந்தும் விடுதலைப் பெற எத்தனையோ தடவை முயன்றிருக்கிறார். ஆனால் அவ்வாறு விடுதலைப் பெற முடியவில்லை அவரால். எல்லாமே குழம்பிப் போய்விடுகின்றன ; நினைவின் ஆழத் தில் போய் விழுந்துவிடுகின்றன. அவர் எவ்வளவு யோசித்தும் தாம் வாழ்க்கை நடத்த என்ன செய்யவேண்டும் என்பதைத் தீர்மானிக்க முடியவில்லை. அவருடைய எரிச்சல் அப்போது தீவிர மாக வெளிப்படுகிறது. அவர் இருகைகளையும் உயரத் தூக்கிக் கொண்டு கத்துகிறார்: "நான் ராஜா ஆகப்போகிறேன்!"

மாலையில் பூபேந்திரநாத் கிராமத்துக்கு வந்தார். வேலைக்கு நடுவில் அடிக்கடி தந்தையின் நினைவால் சலனமடைந்துவிட்டார் அவர். அவருக்குத் தம் கிழத் தந்தையிடம் ரொம்பப் பாசம். கிழவரே இன்னும் குடும்பத்தைச் சமாளித்துக்கொண் டிருக்கிறார். ஆரம்பத் தில் பூபேந்திரநாத்துக்கும் சில லட்சியங்கள் இருந்தன.—நாட்டுக்கு விடுதலை கிடைக்கும். சுதந்தர பாரதத்தின் சித்திரம் அவரது மனக் கண்ணில் தோன்றும். இப்போது அந்த லட்சியங்களெல்லாம் இல்லை. அண்ணன் பைத்தியமாகிவிட்டார். வெறும் புரோகிதத்தால் இந்தப் பெரிய குடும்பத்தைப் பராமரிக்க முடியவில்லை. பூபேந்திர நாத் கனவு காண மறந்துவிட்டார். கிழத் தந்தைக்காக, தம் பெரிய குடும்பத்துக்காகப் பொருளீட்ட முற்பட்டார் அவர். குடும்பத்துக் காக அவர் தம் சொந்த சுகத்தைத் தியாகம் செய்துவிட்டார். அவருக்குக் கல்யாணம் செய்துகொள்ள வாய்ப்புக் கிடைக்க வில்லை. சந்திரநாத்துக்குக் கல்யாணம் செய்துவைத்தார். இப்போது வேலையிலிருந்து ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் கிராமத்துக்கு

வருவார். தந்தையுடன் உட்கார்ந்துகொண்டு குடும்பத்தைப் பற்றியும் விவசாயத்தைப் பற்றியும் அவருடன் பேசி அவருடைய ஆலோசனையைக் கேட்பார். அவருக்கு வாழ்க்கையில் இதைத் தவிர வேறோர் அக்கறையும் இல்லை.

பூபேந்திரநாத் படகிலிருந்து இறங்கும்போதே அவருடைய குடும்பத்தினருக்குத் தெரிந்துவிட்டது, மூடாபாடாவிலிருந்து படகு வந்திருக்கிறது, அதில் அரிசி, ஜீனி, * கத்மா — மழைக் காலமாதலால் பெரிய பெரிய கரும்பு எல்லாம் வந்திருக்கின்றன என்று.

பூபேந்திரநாத் வரக் கூடிய பாதையில் நின்றுகொண் டிருந்த தன மாமி முக்காட்டை இழுத்துப் போட்டுக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்துவிட்டாள்.

அவர் வீட்டுக்குள் நுழைந்ததுமே கைத்தடியை வராந்தாவில் வைத்துவிட்டுத் தந்தை இருந்த இடத்துக்குச் சென்றார். சாஷ்டாங்க மாக விழுந்து தாய்தந்தையரை வணங்கினார். கிழவர் பிள்ளையின் சுகத்தைப் பற்றிக் கேட்டார், அவருடைய எஜமானரைப் பற்றி விசாரித்தார். அவர்கள் பேசிக்கொண் டிருந்தபோது யாரோ வெளியில் வந்து நிற்பதுபோல் இருந்தது. 'பெரிய மாமி பெரிய மாமி, அண்ணிக்கு வணக்கம் செய்யவேண்டும்.'

வாசல் பக்கம் இறங்கி வீட்டைச் சுற்றிப் பார்த்தார். வீட்டில் ஒரு மாறுதல் தென்பட்டது. வீட்டின் நாற்புறமும் முன்பிருந்த வறட்சி இல்லை ; எங்கும் செடிகொடிகள் நிறைய வளர்ந்திருக்கின்றன. வடக்குப் பக்க அறையைத் தாண்டியதும் சகட மரத்துக்கருகில் ஒரு வெள்ளரிப் பந்தல். கொடியில் மஞ்சள் நிறப் பூக்கள் ஒன்றிரண்டு வெள்ளரிப் பிஞ்சுகள் பந்தலில் தொங்குகின்றன. பக்கத்தில் பீர்க்கைப் பந்தல், பாகற்பந்தல். சந்திரநாத் வைத்தவை யாக இருக்கும்.

பூபேந்திரநாத் சிறுவர்களைத் தேடினார். அவர்கள் எங்கே? அவர்களை வீட்டில் காணோம். சிறுவர்கள் லால்ட்டுவும் பல்ட்டுவும் தங்கள் கொம்மாளங்களாலும் சத்தங்களாலும் வீட்டையே கலகலப் பாக்குவார்கள். பூபேந்திரநாத் அவர்களுக்காக நல்லரகக் கரும்பு தடியான, சாறு நிறைந்த, மஞ்சள்நிறக் கரும்பு கொண்டு வந்திருந் தார். இந்தக் கரும்பு அவர்களுக்கு மிகவும் விருப்பமானது. அவர் அதைத் தாமே முறித்து அவர்களுக்குக் கொடுத்தால்தான் அவருக் குத் திருப்தியாயிருக்கும். அவர்கள் எங்கே போனார்கள்?

மூடாபாடாவிலிருந்து படகு வந்திருக்கும் செய்தி கேட்டு லால்ட்டுவும் பல்ட்டுவும் ஓடி வந்துகொண் டிருந்தார்கள். படகு வந்திருக்கிறதென்றால் அவர்களுக்காகக் கரும்பு வந்திருக்கிறதென்று

* கத்மா - ஒரு தின்பண்டம்.

அர்த்தம். ஆரஞ்சுப் பருவத்தில் ஆரஞ்சு, எள்ளுருண்டை— கத்மா முதலிய தின்பண்டங்களும் அந்த அந்தப் பருவத்தில் கிடைக்கும். பருவத்துக்கேற்றபடி மாம்பழம், நாவற்பழம்.

அவர்கள் படகுத் துறையை அடைந்தபோது அலிமத்தி கூடைகளை இறக்குவதைக் கண்டார்கள். அரிசி, பருப்பு, எண்ணெய், பாகற்காய், பீர்க்கங்காய், பெரிய மீன் எல்லாம் கொண்டுவந்திருந்தார் பூபேந்திரநாத். சிறுவர்கள் இருவரும் பலகைக்கடியிலிருந்து அதை வெளியே தூக்கினார்கள்.

வீடு இப்போது திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. பெரியமாமி மட்டும் சோகம் ததும்பும் கண்களுடன் யாரையோ தேடிக்கொண்டிருக்கிறாள் நாள்முழுதும். அவளுடையவர் எங்கோ போனார். வர வேண்டியவர், இன்னும் வரவில்லை. அவளுடைய விசாலமான கண்களைப் பார்த்ததுமே பூபேந்திரநாத்துக்குப் புரிந்தது, தம் அண்ணன் எங்கோ மறுபடியும் போய்விட்டாரென்று. அவருடைய மனசு சங்கடப்பட்டது. அவரால் தம் அண்ணியை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை.

சாயங்காலம் வராந்தாவில் பூபேந்திரநாத், கிழவருக்கு அருகில் உட்கார்ந்துகொண்டு பேசிக்கொண்டிருந்தார். மூடாபாடாவிலிருந்து வந்ததும் எல்லாச் செய்திகளையும் தந்தைக்குத் தெரிவிப்பது அவரது வழக்கம். அவருடைய எஜமானர்கள் ஆனந்தபஜார் வாரப் பத்திரிகை படிப்பார்கள். அவர்கள் படித்து முடித்ததும் பூபேந்திர நாத் அதை வாங்கி ஆதியோடந்தம் படிப்பார். இவ்வாறு உலக விவகாரங்களை யெல்லாம் தெரிந்து வைத்துக்கொண்டு அவற்றைப் பற்றித் தம்மைச் சந்திக்க வருபவர்களிடம் பேசுவார். வீட்டுக்கு வந்தால் நாட்டு நிலைமையைப் பற்றி விவரமாகப் பேசுவார். "இப்போது லீக் பண்ற காரியங்களைப் பார்த்தா மறுபடியும் கலகம் வரும்போல இருக்கு" என்று சொன்னார் தந்தையிடம்.

கிழவர் மெதுவாகச் சொன்னார். "ஹாபிஜத்தியின் பையன் சாமு வைத்தான் உனக்குத் தெரியுமே! அவன் தோடார்பாகிலே லீக்கோட கிளை ஒண்ணு ஆரம்பிச்சிருக்கானும். மரத்துக்கு மரம் நோட்டீஸ் தொங்கவிடறானும். உம், நாளுக்கு நாள் தேசம் என்ன ஆயிட்டிருக்குன்னு எனக்கும் புரியல்லே!"

"பத்திரிகையிலே ஒரு விளம்பரம் பார்த்தேன், அப்பா. காரோ மலையிலேருந்து ஒரு சந்நியாசி வந்திருக்காராம். கடந்தகாலம், எதிர்காலம் எல்லாத்தையும் சொல்றாராம். அவர்கிட்டே அண்ணாவைக் கூட்டிக்கிண்டு போய்ப் பார்க்கலாம்னு..."

"கூட்டிக்கிண்டு போயேன். உனக்கு எது சரின்னு தோன்றதோ அதைப் பண்ணு."

"ஈசமும் கூடவே வரட்டும்."

வீட்டுக்குள்ளே பெரிய மாமி அரிசியை - சுமார் இரண்டு மூட்டை இருக்கும் – எடுத்து வைக்கிருள். காய்கறிகளை எடுத்துவைக்கிருள். அவளுடைய கணவரைச் சந்நியாசியிடம் கூட்டிக்கொண்டு போகப் போகிருர்கள்.

சிறு நம்பிக்கையொளி அவளுக்குள்ளே தோன்றி மறு நிமிஷமே மறைந்துவிட்டது. அவரைக் குணப்படுத்துவதற்குப் பத்து வருடங்களாக எவ்வளவு முயற்சிகள் நடந்திருக்கின்றன! அவருக்குக் குணமாகவில்லையே!

இப்போதெல்லாம் மணி நாள் கணக்கில் வீட்டுக்கே வருவதில்லை. எங்கே இருக்காளுே, என்ன சாப்பிடருளுே? கடவுளுக்குத் தான் தெரியும்.

பூபேந்திரநாத் சொல்ல விரும்பினுர், "அண்ணன் சாப்பாடில்லாமே சுத்தருர், எங்கே இருக்கார், எங்கே இராப்பொழுதைக் கழிக்கிருர், ஒண்ணும் தெரியல்லே. இப்படி விடறதைவிட அவரைக் கட்டிவைக்கறது தேவலை" என்று. ஆனுல் வாயைத் திறந்து அவர் பேசவில்லை. காரணம் பக்கத்தில் அவருடைய தாய் இருந்தாள், அண்ணி இருந்தாள். இம்மாதிரி பேச்சை அவர்கள் பொறுக்க மாட்டார்கள். அவ்வாறு நேர்ந்தால், இன்னும் சிறிது நாட்கள் உயிர் வாழக்கூடிய அவருடைய தந்தையும் மனமுடைந்து விரைவில் உயிரை விட்டுவிடுவார். ஆகையால் பூபேந்திரநாத் பேச்சை மாற்றினுர். "சோனுவைக் கூட்டிக்கிண்டு வாங்க, பார்ப்போம்!"

அண்ணி சோனுவைக் கொண்டு வந்து அவருடைய மடியில் விட்டாள். அவனைப் பார்த்து ஆச்சரியமடைந்தார் பூபேந்திரநாத். அப்படியே அவருடைய அண்ணனின் ஜாடை குழந்தைக்கு! அவனைத் தூக்கிக்கொண்டு அவர் வெளியறைக்கு வந்தார். சோனு, "ஆ...ஆ...தா ..தா .." என்று மழலை பேசினுன். வேற்று முகத்தைப் பார்த்துக் கொஞ்சங்கூட அழவில்லை. அவன் அடிக்கடி பல்லைக் கடித்துக்கொண்டான். சுண்டெலியின் சின்னஞ்சிறு பற்களைப் போல் பற்கள் முளைத்திருந்தன அவனுக்கு. "டேய், பையா, உனக்கு ஏதாவது உடம்புக்கு வந்துடப்போறது" என்று சொல்லிக் கொண்டே அவனுடைய பற்களை மெதுவாகத் தட்டினுர் பூபேந்திரநாத். அவர் இப்படித் தட்டுவதன் மூலம் அவனுக்கு வரவிருந்த நோயிலிருந்து அவனைக் காப்பாற்ற விரும்பினுர். சோனு உரக்க அழத் தொடங்கினுன்.

பக்கத்து வீட்டுத் தீனபந்து அவரைப் பின்னுலிருந்து கூப்பிட்டார். "என்ன தம்பி, டாக்காவிலே மறுபடி கலகம் நடக்கப் போறதாமே?"

"நடக்கலாம்."

"யார் ஜயிப்பாங்கன்னு தோணறது?"

"எப்படிச் சொல்ல முடியும்?"

"என்ன அக்கிரமம் பாரு! அம்மாகிட்டே பால் குடிக்கற பசங்க கூடக் கத்தியை எடுத்துக்கிட்டுக் கிளம்பிட்டாங்க."

"நீ பார்த்தியா என்ன?"

"பார்க்காமே என்ன? மாலதியோட கல்யாணத்தின்போது டாக்கா போயிருந்தேனே! ஊரைச் சுத்திப் பார்த்தேன். எவ்வளவு பெரிய ஊரு! ரமண மைதானம் பார்த்தேன், பீரங்கி பார்த்தேன்."

மாலை ஆனதும் தனமாமி மேற்குப் பக்க அறையில் ஒரு ஹரிக் கேன் விளக்கு வைத்துவிட்டுப் போனாள். கைகால் கழுவத் தண்ணீர், ஒரு துண்டு, ஆசனம் எல்லாம் கொண்டு வந்து வைத்தாள். பூபேந்திரநாத் கைகால்களைக் கழுவிக்கொண்டு அறையில் உட்கார்ந்துகொண்டு விடுவார். இனி வெளியில் போகமாட்டார். அவர் கிராமத்துக்கு வந்திருக்கும் செய்தி ஊரில் பரவிவிட்டது. அவருக்கு உலகத்தில் நடக்கும் சமாசாரங்கள் எல்லாம் தெரியும். ஆகையால் இவரைப் பார்க்க எல்லாரும் வருவார்கள்.

பால் வீடு, மாஜி வீடு, சந்தா வீடு - எல்லா இடங்களிலிருந்தும் வயது முதிர்ந்தவர்கள் ஒரு கையில் தடி, ஒரு கையில் லாந்தர், கால்களில் பாதரட்சைக் கட்டை சகிதம் அங்கு வந்து கூப்பிட்டார்கள், "பூபேன் இருக்கிறானா?" என்று.

பூபேன் பெஞ்சியின் மேல் உட்கார்ந்து ஜபம் செய்துகொண்டும் ஈசமுடன் நலம் விசாரித்துக்கொண்டும் இருந்தார். பாதரட்சைக் கட்டைகளின் ஓசை அவருடைய காதில் விழுந்தது. வந்தவர்கள் அவரைச் சுற்றி உட்கார்ந்தார்கள். ஊர் வம்பு, பத்திரிகைச் செய்திகள், நாட்டு நிலைமை, வெளிநாட்டு விவகாரங்கள், காந்திஜியின் பேச்சு—எல்லாவற்றைப் பற்றியும் கேட்க அவர்களுக்கு ஆவல். இப்போது இந்தக் குழுவின் உயிர் அவர்தாம். அவர்கள் அவரை எல்லாம் அறிந்தவராகக் கடவுளைப் போலவே நினைத்தார்கள்.

அவர் சொன்னார். "ஊர் நிலைமை ரொம்ப மோசமாயிருக்கு ஹாரான்!"

"ஏன் சித்தப்பா?"

"நேத்திக்குப் பாபிர்ஹாட் சந்தை பூராச் சுத்திப் பார்த்தேன். ஒரு புடைவை கூடக் கிடைக்கல்லே."

"ஏன் அப்படி?"

"ஜமீந்தாரியிலே வசூலே இல்லே. காந்திஜி சட்டமறுப்பு இயக்கம் நடத்திக்கிட்டிருக்கார். இங்கிலீஷ்காரங்களும் சும்மா

இல்லே ; தடியடி செய்யருங்க, குண்டு போடருங்க. இங்கிலாந்துப் பிரதம மந்திரி லீக்கை ஆதரிக்கிருர். லீக்குக்கு நல்ல காலம் இப்போ."

மாஜி வீட்டைச் சேர்ந்த ஸ்ரீ சசந்தா சொன்ஞன். "கலிகாலம் வந்துடுத்து, தம்பி."

"நாலுபக்கமும் சதி நடக்கிறது. காட்டுக்குள்ளே ஆனந்தமாயி காளி கோயிலுக்குப் பக்கத்திலே ஒரு பழைய கட்டடம் இருக்கு. ஒரு குளம் இருக்கு. இவ்வளவு நாள் அதை ஒருத்தரும் சீந்தல்லே. இப்போ மௌல்வி சாயபு சொல்ருர், அது மசூதியாம். அங்கே முஸ்லிம் ஜனங்க தொழுகை செய்யப் போருங்களாம்."

"அப்போ கலகம் வரத்தான் போகுது."

"இந்து ஜனங்க சும்மா விடுவாங்களா? இடம் அமர்த்த பாபு வோடது. பக்கத்திலே காளிகோயில். கலகம் உண்டாக எவ்வளவு நேரமாகும்?"

"என்ன அநியாயம்? தேசத்திலே சட்டம், நியாயம் ஒண்ணும் கிடையாது. ஜாதி, மதம், பூஜை, புனஸ்காரம் ஒண்ணுமில்லே. காளிமாதா மணிதப் பூண்டையே அழிச்சுடப் போருள்."

ஸ்ரீசசந்தா அப்போதுதான் கவனித்தான், ஈசம் வாசலில் உட்கார்ந்துகொண்டு ஹுக்கா பிடித்துக்கொண் டிருப்பதை. அவன் நாக்கைக் கடித்துக்கொண்டான். ஈசம் இருப்பதை இவ்வளவு நேரம் வரை அவன் கவனிக்கவே இல்லே. அவன் இப்போது தன் குரலேத் தாழ்த்திக்கொண்டு சொன்ஞன். "தம்பி, இப்போ முசல் மான்கள் என் கடையிலே சாமான் வாங்கறதில்லே. எவ்வளவு நாளேய வாடிக்கைக்காரங்க! இப்போ அவங்க எல்லாரும் சரிபத்தி யோட கடையிலே சாமான் வாங்கிக்கருங்க."

எல்லாரும் மௌனமாஞர்கள். யாருக்கும் பேசத் தோன்ற வில்லே. பூபேந்திரநாத் ஹுக்கா பிடித்துக்கொண் டிருந்தார். பெருங் காற்றில் விளக்கின் சுடர் சற்று அசைந்தது. தூரத்தில் ஸோஞலி பாலி நதியில் கொய்ஞப் படகுகளின் ஒலி. சசீந்திரநாத் பூஜையறை யில் நைவேத்தியம் செய்கிருர். பூஜைமணி, கொய்ஞப் படகின் ஒலி, ஈசமின் சோகம் நிறைந்த கண்கள் - இவை எல்லாரையும் வேதனேக்குள்ளாக்குகின்றன. கிழவர் தம் அறையில் படுத்துக் கொண்டு கண்ணீர் விடுகிருர். அவருடைய பைத்தியக்காரப் பிள்ளே எங்கே சுற்றிக்கொண் டிருக்கிருனே? எந்த மரத்தடியில் படுத்திருக்கிருனே? பெரிய மாமி கிழக்குப் பக்க அறையின் ஜன்னலேத் திறந்துகொண்டு அதனருகில் நின்றுகொண்டிருக் கிருள். எதிரில் சகட மரம், அதன் பின் பிரம்புப் புதர், பிறகு அத்திமரம், அதைக் கடந்துவிட்டால் வயல்வெளி. மரத்தின்

உச்சியில் முழு நிலா. வெள்ளிநிலவில் மரங்கள் தெளிவாகத் தெரிகின்றன. வயல்களில் பயிர்கள் மட்டும் பனியால் சற்றே மூடப்பட்டிருக்கின்றன.

அவள் வெளியே பாதையைப் பார்த்துக்கொண்டு நிற்கிருள், ஒரு மனிதனின் நிழல் விழாதா என்று எதிர்பார்த்துக்கொண்டு. கைத்தடியின் ஓசையைக் கேட்டால், அல்லது ஏரியில் படகின் அரவம் கேட்டால் அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிருள், சாது, சந்நியாசி போன்ற அந்த மனிதர் வந்துவிட்டாரா என்று!

அவரை நினைத்தபோது அழுகை அழுகையாக வந்தது பெரிய மாமிக்கு.

கொஞ்ச தூரம் படகில் வந்ததுமே மணீந்திரநாத்துக்கு வீடு திரும்பும் ஆசை வற்றிவிட்டது. அவர் படகை நினைத்தபடி திருப்பினுர். இடையிடையே துடுப்பை எடுத்துச் சிலம்பம் விளையாடுபவர் போல் தம் தலைக்கு மேலே சுழற்றினுர். இந்த நட்சத்திரக் கூட்டம், இந்த ஆகாயம், ஏரி நீரில் கிரௌஞ்ச பட்சியின் அழைப்பு—எல்லாவற்றுடனும் போராட்டம் - கண்காணுத போராட்டம் நிகழ்த்துகிருர் அவர். படகின் மேற்பலகையின் மேல் குதிக்கிருர். எதையோ கைகளால் இறுகப் பிடித்து அதன் கழுத்தை நெறிக்கிருர். அவர் துடுப்பைச் சுழற்றும்போது ‘விர் - விர்’ என்று சப்தம் கேட்கிறது. வயல்களில் சணல் அறுத்துக்கொண் டிருப்பவர்கள் அந்த ஒலியைக் கேட்டுத் திரும்பிப் பார்க்கிருர்கள். பைத்தியக்கார டாகுர் படகில் நின்றுகொண்டு தடியைச் சுழற்றுவதைப் பார்த்துவிட்டுச் சொல்லிக்கொள்கிருர்கள். "எப்படிப்பட்ட மனிதர் எப்படி ஆகிவிட்டார்" என்று.

அவர் படகில் வெகுதூரம் வந்துவிட்டார். ஆகவே வீடு திரும்ப வெகு நேரம் ஆகும். தன் மனைவியின் அகன்ற, ஆழமான கண்கள் அவரை வேதனைக்குள்ளாக்குகின்றன. வீட்டுக்கு விரைவில் திரும்பும் ஆர்வம் முனைக்கிறது. அப்போது அவர் ஏரியில் ஒரு பான்ஸிப் படகைப் பார்க்கிருர். அதில் பாலின் உட்கார்ந்திருப்பதாக அவருக்குத் தோன்றுகிறது. படகு பாலினை ஏற்றிக்கொண்டு கண்காணுத உலகத்துக்குப் போய்விடப் போகிறது. மணீந்திரநாத் பலகைக்கு அடியிலிருந்து சிறிய துடுப்பை எடுத்து வேகமாக வலிக்கிருர். பெரிய பெரிய அலைகள் எழும்புகின்றன. படகு மேலுங்கீழும் ஆடிக்கொண்டு ஆற்றுக்கு வந்து சேர்ந்துவிடுகிறது. இப்போது அது ஆற்றின் பிரவாகத்தில் தானே மிதந்து செல்கிறது. அவர் துடுப்பு வலிக்கத் தேவையில்லை. அவர் சும்மா சுக்கானைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிருர்.

பான்சிப் படகில் இருந்த மனிதர்கள் தங்களுக்குப் பின்னால் ஒரு படகு வருவதைப் பார்க்கிறார்கள். அதில் மேலாடை அணியாத ஆஜானுபாகுவான ஒரு மனிதர். நல்ல சிவப்பு நிறம், வெயில் காரணமாகச் சற்றுக் கறுத்திருக்கிறது. அவர் சுக்கானைப் பிடித்துக் கொண்டு, கண்களை முக்கால்வாசி மூடிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார். படகுக்காரர்களுக்கு அவரைப் பார்த்துச் சிரிப்பு வருகிறது.

படகுக்குள் ஓர் அறையில் ஒரே படுக்கையில் உட்கார்ந்திருக்கிறார்கள் ஜமீந்தார் வீட்டு மைனரும், பாட்டுக்காரி விலாஸியும். பாட்டு, அதன் பிறகு வேடிக்கைப் பேச்சு. விலாஸி கையில் சரோத் வாத்தியத்தை வைத்துக்கொண்டு கால்களை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாள். சரோதின் 'டுங், டாங்' ஒலி. 'ஆ, சஜனியா' என்று பாடும் பாவத்தில் அமர்ந்திருக்கிறாள் அவள். அவர்களுடைய கண்கள் போதையில் கிறங்கிக் கிடக்கின்றன. அவர்களால் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளக்கூட முடியவில்லை.

மணீந்திரநாத் நீண்ட தூரம் வரை அப்படகைப் பின்தொடர்ந்தார். சரோதின் ஒலி அவருக்கு ஒரு பெண்ணின் முகத்தை நினைவுறுத்துகிறது. அவர் வயல்வெளிகளில், ஆற்று நீரில், மணலில்—எங்கும் பாலினுடைய முகத்தை, உருவத்தை, அவளுடன் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளைக் காண்கிறார். திடீரென்று அவருக்கு எல்லாம் குழம்பிவிட்டது. பான்சிப் படகைத் தொடர்ந்து வந்ததில் தாம் போகவேண்டிய வழியை மறந்துவிட்டார் அவர். கரையை நோக்கி அவர் படகைத் திருப்பினார். ஆனால் நாணற் புல் காட்டுக்குள் படகு நுழைந்த பிறகு அதிலிருந்து வெளியேவரத் தெரியவில்லை அவருக்கு.

சூரியன் மேற்குத் திசையில் சாய்ந்துவிட்டான்; சற்று நேரத்தில் அஸ்தமித்துவிடுவான். கிரௌஞ்ச பட்சியின் சோகக் குரல் வானத்தில் ஒரு மூலையிலிருந்து கேட்கிறது. சந்தையிலிருந்து ஆட்கள் திரும்பி வந்துகொண் டிருக்கிறார்கள்.

அவர் படகின் மேற்பலகையில் படுத்துக்கொண்டார். உடம்பில் ஏதோ வேதனை, பசி, தாகம். அந்த வேதனையிலிருந்து எப்படி விடுபடுவது என்று புரியவில்லை அவருக்கு. படுத்தவாறே கிரௌஞ்ச பட்சியின் ஓலம் வரும் திசையைப் பார்த்துக் கொண்டிருந்தார். வானத்தில் எங்கும் சூனியம். ஒரு பூச்சி கூடப் பறக்கவில்லை.

சோர்ந்த குரலில் அவர் சொல்ல விரும்பினார், "பாலின், நான் உன் கிட்டே வரேன்!" என்று.

தூரத்தில் ஏதோ ஒரு கிராமம். அங்கிருந்து வெண்கல மணியின் ஓசை கேட்கிறது. ஏதோ ஒரு முசல்மான் கிராமத்திலிருந்து தொழுகைக்கு அழைக்கும் ஒலி. ஆகாயத்தில் சில நட்சத்திரங்கள் மலர்ந்

திருக்கின்றன. இப்போது வானம் சூனியமாகத் தெரியவில்லை. நட்சத்திரங்களின் உலகந்தான் எவ்வளவு தூரம்? வேண்டுமென்றால் அதைப் பிடிக்க முடியாதா? இந்த நட்சத்திர உலகத்தில் — அல்லது பனி மூட்டத்தில் — படகின் பாயை விரித்துக்கொண்டு தூங்கிப் போய்விட்டால் எப்படி இருக்கும்!

விசித்திரக் கற்பனைகளில் தம்மை மறந்து கிளர்ச்சி வசப்பட்டார் மணீந்திரநாத்.

நெற்பயிர்களின் இடைவெளிகளில் சில மின்மினிகள் மினு மினுக்கின்றன. நிலவொளியில் உலகம் அமைதியாக இருக்கிறது.

மெல்லக் காற்று வீசுகிறது. நாள் முழுதும் ஏற்பட்ட சிரமம், காற்றின் இனிமையில் மறைந்துவிட்டது. மறுபடி பாலினின் முகம் தோன்றுகிறது. மணீந்திரநாத் படுத்துக்கொண்டே ஏதோ முணு முணுத்தார். அவரைப் பார்ப்பவர்களுக்குத் தெரியாது, அவர் இப்போது கல்கத்தாவில் ஓர் ஐரோப்பியக் குடும்பத்துடன் பேசிக் கொண்டிருக்கிறார் என்று. அவர் ஏதோ உளறிக்கொண் டிருக்கிறார் என்றுதான் தோன்றும். அவர் உரக்கப் பேசியிருந்தால் அவர் ஆங்கிலம் பேசுவது புரிந்திருக்கும். கையின் மேலே தலையை வைத்துக்கொண்டு அவர் முணுமுணுப்பது அவரைப் பைத்திய மாகவே தோற்றுவிக்கிறது.

தம் குடும்பத்தினரின் முன்னே போய் நின்றுகொண்டு, "நான் பாலினைக் காதலிக்கிறேன்!" என்று உரக்கக் கத்த முடிந்திருந்தால் திருப்தியாக இருந்திருக்கும் அவருக்கு. ஆனால் நடக்கக்கூடாதது நடந்துவிட்டது. மணீந்திரநாத் தந்தையின் கட்டளையை ஏற்றுக் கொண்டு வனவாசம் செய்ய நேர்ந்தது.

அவருடைய வாயிலிருந்து வெளிப்பட்டது. "காத்சோரத்சாலா!"

அவர் எழுந்து நின்றுகொண்டு சொல்ல விரும்பினார். "பாலின், நான் பைத்தியம் இல்லை. என்னை எல்லாரும் அநியாயமாப் பைத்தி யம்னு சொல்றாங்க. உன்கிட்டே வந்துட்டா நான் நன்னா ஆயிடுவேன்."

அவருடைய வார்த்தைகள் வயல்களிலும், காடுகளிலும், நீரிலும் எதிரொலித்துத் திரும்பின. "நான் பைத்தியம் இல்லை! எல்லாரும் அநியாயமா என்னைப் பைத்தியம்னு சொல்றாங்க!"

இரவு நேரம். லால்ட்டுவும் பால்ட்டுவும் தெற்குப் பக்கத்து அறையில் படித்துக்கொண் டிருக்கிறார்கள். ஈசம் இன்று தர்முஜ் வயலுக்குப் போகப் போவதில்லை; போவதானால் நேரங் கழித்துப் போவான். தனமாமி சமயலறையில். பெரியமாமி கதவருகில் உட்கார்ந்திருக்கிறாள். சோனா அவளுடைய மடியில் தூங்கிப் போய்

விட்டான். பெரிய மாமி பனைவிசிறியால் விசிறிக்கொண் டிருக்கிருள். ரொம்ப உஷ்ணமாக இருக்கிறது. மேற்குப் பக்க அறையில் இவ்வளவு நேரம் சொக்கட்டான் விளையாடிக்கொண் டிருந்த வர்கள் ஒவ்வொருவராகப் போய்விட்டார்கள். தீனபந்து மட்டும் பூபேந்திரநாத்தின் காலடியில் உட்கார்ந்துகொண்டு ஹுக்கா பிடித்தவாறே அவர் பேச்சைக் கேட்டுக்கொண் டிருந்தார். தீனபந்து பூபேந்திரநாத்தைத் தாஜா செய்ய விரும்பிஞர். அவர், குத்தகையில் சாகுபடி செய்துகொண் டிருந்த ஜமீந்தாரின் நிலத்தைத் தமக்கே சொந்தமாக்கிக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார். அதற்கு ஜமீந்தாரின் சிரஸ்ததார் பூபேந்திரநாத்தின் தயவு வேண்டியிருந்தது அவருக்கு.

சமையலானதும் சசிபாலா எல்லாரையும் சாப்பிடக் கூப்பிட்டாள். பூபேந்திரநாத்துக்குப் பலாக்கட்டையால் செய்த பெரிய ஆசனமும், லால்ட்டுவுக்கும் பால்ட்டுவுக்கும் சிறிய ஆசனங்களும் போட்டாள். தண்ணீர் எடுத்துவைத்தாள்.

இரட்டைச் சார்பு போட்ட பெரிய அறை. மூங்கில் சுவர். சிமெண்ட் போட்ட தரை. சசிபாலா நிலையின்மேல் சாய்ந்து கொண்டு குழந்தைகள் சாப்பிடுவதைக் கவனிப்பாள். பெரியமாமி பரிமாறுவாள். தனமாமி சமையலறையில் முக்காட்டை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பாள். அவ்வப்போது சமைத்த பண்டங்களைப் பெரியமாமியிடம் கொடுத்துவிட்டு அவளுடன் கிசுகிசுக் குரலில் பேசுவாள்.

சாப்பிட உட்கார்ந்ததும் பூபேந்திரநாத்தின் மனம் துக்கத்தால் கனத்தது அண்ணனின் ஆசனம் காலியாயிருந்தது. அந்தப் பக்கம் பார்த்துவிட்டு அவர் கேட்டார், "அண்ணு எப்போ வெளியே போஞர்?" என்று.

சாதத்தைப் பரிசேஷனம் செய்துவிட்டுக் கையிலிருந்த நீரை ஆசமநம் செய்யப் போன சசீந்திரநாத் அண்ணனின் கேள்வி யைக் கேட்டுத் தலையைத் தூக்கிஞர். பதில் பேசாமல் ஜலத்தை ஆசமநம் செய்துவிட்டுப் பிறகு சொன்ஞர். "முந்தாநாள் அதிகாலை யில் அண்ணி தூங்கி எழுந்தபோது அறைக் கதவு திறந்திருந்தது. படகுத் துறைக்குப் போய்ப் பார்த்தா, நம்ம கோஷாப் படகை அங்கே காணேம். ராத்திரி ரெண்டாம் ஜாமத்துலே அவர் படகிலே புறப்பட்டுப் போனதா ஹாசிமோட அப்பா சொல்ருன்."

"நாளைக்குப் போய்த் தேடிப் பார்க்கறேன். அலிமத்தியையும் கூட்டிக்கொண்டு போறேன்."

"போங்க. ஆனு கண்டுபிடிக்கறது கஷ்டம். அவர் எங்கே இருக்கார், எங்கே போஞர்னு ஒருத்தருக்கும் தெரியாது."

பெரிய மாமி ஒன்றும் பேசாமல் அவர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண் டிருந்தாள். கண்களில் நீர் ஊறியது ; முக்காட்டுத் துணியால் அதை மெதுவாகத் துடைத்துக்கொண்டாள். தனக்கு எவ்விதக் குறைவுமில்லை என்பது போன்ற பாவம் அவளுடைய முகத்தில். அவளை மணந்துகொண்ட சுந்தர புருஷர் ஒரு நாளும் அவளுடன் அன்பாகப் பேசியதில்லை. அன்பு நிகழ்ச்சி எதுவும் சமீபகாலத்தில் அவர்களுடைய வாழ்வில் நிகழவில்லை. நடுவில் எப்போதாவது அவர் அவளை ஆவேசத்துடன், ஒரு மிகப் பழைய வெறியால் உந்தப்பட்டு – கொள்ளைக்காரனைப் போல்—தெளிவிழந்த கண்களுடன்— தம்முடன் இணைத்துக்கொள்வார். அப்போது அவரைப் பார்த்தால் மனிதராகவே நினைக்கத் தோன்றுது. அவர் அவளை மார்புடன் அணைத்துக்கொண்டு வனவிலங்கு போல் நடந்துகொள்வார். பெரிய மாமி தன் தேகத்தை அவரிடம் விட்டுவிடுவாள், அவரைக் குழந்தையாக நினைத்துக்கொண்டு அல்லது ஆதிமனிதனைப் பாவித்துக்கொண்டு. அவர் அவளை வைத்துக்கொண்டு எப்படி வேண்டுமானுலும் விளையாடட்டும்!

ஆனுல் இத்தகைய நிகழ்ச்சிகளையும் பெரிய மாமியால் விரல் விட்டு எண்ண முடியும். எவ்வளவு தடவை, இவை நிகழ்ந்த எந்த இரவுகளில் நிலவு இருந்தது, எந்த இரவுகள் இருட்டாக இருந்தன என்பதையெல்லாம் சொல்ல முடியும் அவளால்.

இரண்டு நாட்களுக்கு மேலாகிவிட்டன, அவளுடைய கணவர் திரும்பவில்லை. அவர் அவளுடைய சொத்து. மணையில் மண நாளன்று அவரை முதலில் பார்த்தது நினைவுக்கு வருகிறது. அமைதியற்ற மனிதர். வாழ்க்கையில் தம் பொன்மானை இழந்துவிட்டாற் போன்ற பாவம். இமை கொட்டாமல் அவளைப் பார்த்துக்கொண் டிருக்கிறுர். எதையோ யாரையோ சபிக்க விரும்புபவர் போலத் தோன்றியவர் இப்போது அவளை, அவளது அழகைப் பார்வையாலேயே விழுங்கிக்கொண் டிருக்கிறுர். எவ்வளவு ஜனங்கள், எவ்வளவு வெளிச்சம், எவ்வளவு கொண்டாட்டம்—அப்படியும் அன்று பெரிய மாமிக்குப் பயமாயிருந்தது. அவள் இரவில் தன் தமக்கையிடம் சொன்னுள். "அக்கா, எனக்குப் பயமாயிருக்கு. இந்த மனுஷர் என்னை முழுங்கிடுவார் போலேயிருக்கு. நீங்க என்னத்தைப் பார்த்து என்னை இவருக்குக் கல்யாணம் செஞ்சு வச்சீங்க? அந்தப் பட்டிக்காட்டிலே நான் எப்படி இருப்பேன்?"

பிற்பாடுதான் அவள் புரிந்துகொண்டாள். மனிதர் சாதுதான், ஆனுல் மூளையில் ஏதோ கோளாறு என்று. இதற்குள் அவள் இந்தச் சுந்தரப் புருஷரை நேசிக்க ஆரம்பித்துவிட்டாள். சாதாரணமாக

அல்ல, தன் உயிருக்கும் மேலாக. இப்போது அவள் துக்கத்தைத் தன் வாழ்க்கைத் துணையாகக் கருதப் பழகிவிட்டாள். ஆகவே தனக்காக வருத்தப்படுவதை விட்டுவிட்டாள். அவருக்காக அவள் உறக்கமிழந்து இரவு பூராவும் காத்திருக்கிருள்.

இரவு வெகு நேரமாகிவிட்டது. துறையில் பெரிய மாமி பாத்திரம் தேய்க்கிருள். சோனு அழுததால் தனமாமியை வீட்டுக்கு அனுப்பி விட்டாள். துறையில் அவள் இப்போது தனியாக இருக்கிருள்.

சசிபாலா சாப்பிட்டுவிட்டுப் பெரிய அறைக்குப் போய் விட்டாள். ஆள் இல்லாத அமைதியான இரவில் கிழவரின் இருமல் ஒலிகூடக் கேட்கவில்லை. எல்லாரும் தூங்கிப் போயிருப்பார்கள். அலிமத்தி படகைத் துறையில் நிறுத்திவைக்கவில்லை; தண்ணீரி லேயே நிறுத்தி வைத்துவிட்டுத் தூங்கிப் போய்விட்டான். பாத் திரங்களைத் தேய்த்தாகிவிட்டது. ஆனுலும் பெரிய மாமிக்கு எழுந் திருக்க மனம் வரவில்லை. விளக்கின் ஒளியில் அவளுடைய முகம் சோகம் நிறைந்ததாகத் தெரிகிறது. நிலவு காய்வதால் தூரத்தில் செல்லும் படகுகளும் தெளிவாகத் தெரிகின்றன. இன்று மூடுபனி இல்லை. பெரிய மாமி காணுமற் போய்விட்ட அந்த மனிதருக்காக உட்கார்ந்திருக்கிருள். அவர் வந்துகொண் டிருக்கலாம், இப்போதே வந்துவிடலாம். பெரிய மாமியின் கண்கள் நினைவுக்கு வந்து விட்டால் அந்த மனிதர் வெறிபிடித்தவர் போல் வீட்டுக்குத் திரும்பி வந்துவிடுவார்.

நேரம் இரவில் முன்னேறுகிறது. தனியாகத் துறையில் உட்கார்ந் திருக்கத் தைரியம் இல்லை பெரிய மாமிக்கு. செடிகளிலும் புதர் களிலும் பரிசயமில்லாத பறவைகள், பூச்சிகள் இரவு வேளையை அறிவிக்கின்றன. பூனையவரைக் கொடிப் புதரில் 'டுப் டுப்' என்ற ஒலி; கந்தபாதாலச் செடிக்குள்ளிருந்து சுவர்க்கோழி கத்துகிறது. இரவு நேரமாக ஆக நடுநிசிப் பிராணிகள் ஆயிரக் கணக்கில் கத்து கின்றன. நள்ளிரவில் விழித்திருக்கும் பெரிய மாமிக்குத் தோன்றும், அவளுடைய கணவரும் ஒரு நிசிப் பிராணி போல் நீரிலும், காட்டிலும் சுற்றுகிருர் என்று.

அவள் சமையலறையில் பாத்திரங்களை வைத்துவிட்டுக் கிழக்குப் பக்க அறைக்குள் நுழையும்போது துறையிலிருந்து துடுப்போசை கேட்பதுபோல் தோன்றியது. அவளுடைய நெஞ்சு நடுங்கியது. அவள் வேகமாகத் துறைக்கு ஓடினுள்.

அவர் குனிந்துகொண்டு படகிலிருந்து இறங்குகிருர். படகு கரைக்கு இழுக்கப்பட்டிருக்கிறது. வேறு எந்தப் பக்கமும் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை அவர். எவ்வளவு உயரம்! ஏதோ இரகசியம்

ஒளிந்திருக்கும் கண்கள்! இந்த அழகிய நிலவில் ஆகாயத்திலிருந்து ஒரு தேவதூதன் வந்து இறங்கிஞற் போலிருக்கிறது. அவருடைய உடம்பில் ஆடை இல்லே. அநேகமாக அம்மணமாக இருந்த அம் மனிதர் குழந்தையைப் போல், அவள் விழித்திருப்பதைப் பார்த்துச் சிரிக்கிருர். படகில் சேப்பங்கிழங்கு, பூசணிக்காய், வாழைப்பழம். எல்லாரும் தங்கள் தங்கள் மரங்களில் முதலில் காய்த்ததை அவருக் குப் படைத்திருக்கிருர்கள்.

முதலில் பெரிய மாமிக்குப் பேச நாவெழவில்லே. ஒரு துறவி வெகுகாலம் தீர்த்தயாத்திரை செய்துவிட்டுத் தம் குடிலுக்குத் திரும்பியிருக்கிருர். வேறு நாளாக இருந்திருந்தால் அவள் அவசர அவசரமாக வீட்டுக்கு ஓடி அவருக்கு உடுக்க உடைகளே எடுத்துக் கொண்டு வந்திருப்பாள். இன்று அவ்வாறு செய்யத் தோன்றவில்லே. வெள்ளி நிலவில், குழந்தை போன்ற இந்த இளேஞருடன் விளேயாடித் திரியத்தான் தோன்றுகிறது.

அப்போது மாலே நேரம். வயல்களில் மழை நீர் தளும்பி நிற்கிறது. ஜோட்டன் ஆற்று நீரில் நீந்திக்கொண்டு போகிருள். நீர்ச்செடி களேயும் புல்லேயும் நீந்திக் கடக்கிருள். பக்கத்துக் கிராமத்துக்குப் போய்க்கொண் டிருக்கிருள் அவள். டாகுர் வீட்டுப் பாக்குத் தோட்டத்தை அடைந்ததும் அவள் கரையிலேறிப் பார்த்தாள், ஏதாவது பாக்கு விழுந்து கிடக்கிறதா என்று. ஒரு பாக்குக்கூட இல்லே. துறையில் ஒரு மூன்று தட்டுப் படகு நிறுத்தப்பட்டிருக்கிறது. அதன் கூரைக்குக் கீழே இரண்டு படகோட்டிகள் குறட்டை விட்டுக் கொண்டு தூங்குகிருர்கள். வெகுநேரம் நீந்தியிருக்கிருள் அவள். அவள் செம்பரத்தை மரத்தடியில் மறைவாக நின்றுகொண்டு தன் ஈரப் புடைவையை அவிழ்த்துப் பிழிந்தாள். அதைத் திரும்பக் கட்டிக்கொள்ளும்போது எங்கோ, யாரோ அவல் இடிக்கும் சப்தம் அவளுக்குக் கேட்டது. யாரோ பனங்காயை வடை சுடுகிருர் கள். அவள் மூச்சை இழுத்து அந்த வாசனேயை முகர்ந்தாள். அவல் இடிக்கப்படும் அரவம். இது பாத்ர மாதம். மழைக்கால நெல்லால் அவல் தயார் செய்யும் பருவம். தானும் அவல் இடித்துக் கொடுத் தால் நல்ல வரும்படி கிடைக்கும் என்று அவள் நிளேத்தாள்.

ஜோட்டன் டாகுர் வீட்டுக்குள் நுழைந்தாள் இரண்டாவது பாபு மேற்குப் பக்க அறையில் பெஞ்சியின் மேல் உட்கார்ந்து

கொண்டு ஒரு பெரிய புத்தகத்தைப் படித்துக்கொண் டிருக்கிருர் அவரைக் கண்டதும் ஜோட்டன் அறை வாயிலில் வந்து நின்ருள்.

"யார் நிக்கறது?"

பாபு தலையைத் தூக்கிப் பார்த்தார். ஆபேத் அலியின் அக்கா ஜோட்டன். அவளுடைய உடல் மெலிந்து காணப்படுகிறது. தலை மயிர் இல்லையென்றே சொல்லலாம்; இருப்பதும் சணல் மாதிரிதான் இருக்கிறது. முகத்தில் எவ்வித மென்மையும் இல்லை உடல்கட்டுக் குலைந்துபோய்விட்டது. கன்னத்தில் பரு, முகம் அவலட்சணம்.

பூபேந்திரநாத் கேட்டார், "ஜோட்டியா?" என்று.

"ஆமா! நான்தான். திரும்பி வந்துட்டேன்."

"உனக்குத் தலாக் கொடுத்துட்டாஞ?"

"ஆமா. நாசமாப் போறவன் ஒரு புள்ளே கூடக் கொடுக்கல்லே; ஒரு முழத்துணி கூடக் கொடுக்கல்லே."

"புள்ளே கொடுக்காட்டா நல்லதுதான். கொடுத்திருந்தா அதுக்குச் சோறு எப்படிப் போடுவே?"

பாபு கேட்டது சரிதான் என்று உணர்ந்த ஜோட்டன் பதில் பேசவில்லை. அவர் மறுபடி புத்தகம் படிக்கத் தொடங்கினுர். பாபுவின் மூக்குக் கண்ணுடிக்குப் பின்னே அவருடைய கண்களில் இரக்கம் பிரதிபலிப்பதைக் கண்டு அவளுக்குச் சொல்லத் தோன்றியது. 'எசமான், பழசோ கிழசோ ஏதாவது ஒரு ஆள் பார்த்துக் கொடுங்க எனக்கு' என்று. ஆனல் பேச வாய் வரவில்லை அவளுக்கு. பேச முடிந்திருந்தால் சொல்லியிருப்பாள்.

பக்கிரி சாயபு வந்தார். அவள் கஷ்டப்பட்டுச் சம்பாதிச்சதையெல் லாம், காஞ்ச மீன் துவையலைத் தொட்டுக்கிட்டு முரட்டு அரிசிச் சாதம் எல்லாததையுமே சாப்பிட்டுட்டுப் போயிட்டார். போனவர் போனவர்தாம்; திரும்பியே வரல்லே. இப்போதும் அக்காட்சி அவளுடைய மனக்கண்முன் நிற்கிறது. பக்கிரிசாயபு ஹூக்கா பிடித்துக்கொண் டிருக்கார். பக்கததிலே மூட்டைகள் கட்டி வச்சிருக்கு. ஹூக்கா பிடிச்சு முடிச்சதும் புறப்பட்டுடுவார் போலேயிருக்கு. ஜோட்டனல் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. அவள் சொன்னுள். "பக்கிரி சாகேப், என்னைக் கூட்டிக்கிட்டுப் போகமாட்டீங்களா?"

பக்கிரி சாயபு மூட்டைகளைத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டே சொன்னுர். "இன்னிக்கு வேண்டாம். இன்னெரு நாள். இப்போ சொர்பான் ஷேக்கோட படையலுக்குப் போயிக்கிட் டிருக்கேன். எப்போ திரும்புவேன்னு நிச்சயமில்லே."

போனவர் போனவர்தாம். திரும்பித்தான் வருவாரோ இல்லையோ, தெரியாது. அவள் தனக்கு ஒரு புருஷனைத் தேடிக்கொண்டு வீடு வீடாக அலைகிறாள்.

'எனக்குப் பழசோ கிழசோ ஒரு ஆளைப் பார்த்துக் கொடுங்க' என்று கேட்க அவளுக்குத் தைரியம் வரவில்லை. மூன்று தடவைகள் தலாக் ஆனதால் அவளுடைய தேகம் அசுத்தமாகிவிட்டதோ?

பாபு கேட்டார். "ஏதாவது சொல்லணுமா?"

"என்ன சொல்லுவேன், எசமான்? என் பொழப்பு எப்படி நடக்கும்?"

"உனக்கு மறுபடி பைத்தியம் பிடிச்சுடுத்தா? இது சரியில்லே!"

ஜோட்டனின் ஆசை அவருக்குப் புரிந்துவிட்டது.

அவருடைய பேச்சைக் கேட்ட பிறகு ஜோட்டன் அங்கு நிற்கவில்லை. அவள் சீதாமர வேலியைத் தாண்டிக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்துவிட்டாள்.

பெரியமாமியும் தனமாமியும் நிற்கிறார்கள்; கூடவே மாலதி. ஹாரான்பாலின் மனைவி அவல் இடிக்கிறாள்.

ஜோட்டன் சொன்னாள், "கொடுங்க, நான் இடிக்கிறேன்!" என்று.

அவள் வெகுவிரைவில் அவல் இடித்து அதை முறத்தில் பரப்பிக் காண்பித்தாள். அவளால் நன்றாக அவல் இடிக்க முடியும். அவள் இடிக்கும் அவல் அகலம் அகலமாக இருக்கும் என்று எல்லாருக்கும் காண்பிக்க விரும்பினாள் அவள். அவள் தான் இடித்த அவலைத் தனியாக ஒரு பிரம்புத் தட்டில் போட்டாள். அதைப் பார்த்தால் சசிபாலா அம்மாள் சந்தோஷப்படுவாள். அவளுடைய முந்தானையில் ஒரு சட்டி அவலைக் கொட்டிக் கொடுப்பாள்.

தனமாமி கேட்டாள். "ஏண்டி, உனக்கு மறுபடி கல்யாணம் பண்ணிக்கிற ஆசை வந்துடுத்தாமே?"

"ஏ அல்லா! இது இவ்வளவு நாள் கழிச்சுத்தான் தெரிஞ்சுதா உங்களுக்கு? ஆனா, புருசன் எங்கே கிடைக்கறான்?"

"உனக்கு நிறையக் கொழுப்பு இருக்கு, ஜோட்டி!"

"நீங்க என்னவெல்லாம் சொல்றீங்க? வெக்கக்கேடு. இது தேகத்தோட சமாசாரம். உங்களுக்கும் இது இருக்கு, எனக்கும் இருக்கு. உங்களுக்குச் சுகம் கிடைக்கிறது, எசமான் வந்துட்டுப் போறார். நீங்க வாய்விட்டுச் சொல்றதில்லே. எனக்குப் புருசன் இல்லே, சுகமில்லே. அதனாலே வாயைத் தொறந்து பேசறேன்."

இவ்வளவு பேசிவிட்டு அவள் அவல் இடிக்கத் தொடங்கினாள். அப்போது அவளுடைய வாயிலிருந்து கிரௌஞ்ச பட்சியின் ஒலி போன்ற சப்தம் வந்தது. பாத்ர மாதமாதலால் வீட்டுக்கு வீடு பனம்பிட்டு தயார் செய்துகொண் டிருந்தார்கள். ஊர் பூராவும்

அதன் மணம். ஹாரானின் மனைவி சட்டியில் நெல்லை வறுக்கிருள். சசிபாலா அடுப்பில் உலர்ந்த விறகைத் திணிக்கிருள்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரியம் செய்கிருர்கள். ஜோட்டன் குடிக்கத் தண்ணீர் கேட்டாள். பெரிய மாமி தண்ணீர் எடுத்துவரக் கிணற்றடிக்குப் போனுள். இந்தச் சமயத்தில் நாவல் மரத்தில் ஒரு இஷ்டி குடும் பறவை கூவிற்று. இரண்டு பக்கமும் சாக்கை விரிக்கும் போது ஜோட்டன் பறவையின் கூவலைக் கேட்டுச் சொன்னுள். "தன மாமி, இஷ்டி குடும் மரத்துலே கத்தறது. விருந்து வரப் போகுது"

சமையலறையில் பவன்பாபுவின் மனைவி. அவளும் அவளுடைய குழந்தைகளும் அங்கு வந்திருக்கிருர்கள். சசிபாலா ஒவ்வொரு வருடமும் தன் பிறந்த வீட்டுக்காரர்களை எதிர்பார்ப்பாள். மழைக் காலம் முழுதும் குடும்பம் குடும்பமாக உறவினர்கள் வருவார்கள்.

அப்போது தன மாமிக்கு மூச்சுவிட நேரம் இருக்காது. பெரிய மாமி நாள் முழுதும் சமயலறையில் இருப்பாள். வாய் தவறி வார்த்தை வந்துவிடும் போலிருந்தது. "போதும், போதும், விருந்து போதும்!" ஆனல் சமையலறையில் பவன்பாபுவின் மனைவி இருக்கிருளே! ஆகையால் அவளால் சொல்ல முடியவில்லை, "பட்சியை விரட்டிவிடு ஜ டெட்டி!" என்று.

மழைக்காலம் முழுதும் விருந்துதான். இரவும் பகலும் விருந்தினர் வருவதும் போவதுமாக இருக்கும். சசிபாலா அம்மாவுக்கு உறவுக் காரர்களென்ருல் ரொம்பப் பிரியம். யாருக்கு என்ன சாப்பிடப் பிடிக்கும் என்பதெல்லாம் அவளுக்கு அற்றுப்படி. இந்தச் சமயத் தில் மேக்ன — பத்மா நதிகளில் இலிஷ் மீன்கள் கூட்டங் கூட்டமாக வரும். சசிபாலா அம்மா விருந்தினருக்காக விதவிதமாகச் சமைப் பாள். உறவினர்கள் வீடெங்கும் சுற்றித் திரிவார்கள். வீட்டு வாசலில் குழந்தைகளின் கும்மாளம். படகுத் துறைகளில் எல்லாம் படகுகள் கட்டப்பட்டிருக்கும்.

ஹாரான்பால், படகுத் துறையில் ஒரு கூடை இலிஷ் மீனை இறக்குவதைக் கவனித்தாள் ஜோட்டன். பெரிய பெரிய மீன்கள், மாலை வெயிலில் வெள்ளியைப் போல் பளபளக்கின்றன.

ஜோட்டனல் அந்த மீன்களிலிருந்து கண்களை அகற்ற முடிய வில்லை. மீன்களையே பார்த்துக்கொண்டு நின்ருள் அவள். இந்த மீன்களின் ருசிகூட மறந்துவிட்டது அவளுக்கு.

அவளுடைய ஏக்கத்தை உணர்ந்த சசிபாலா சொன்னுள். "ராத்திரி இங்கே சாப்பிட்டுட்டுப் போ, ஜ டெட்டி!"

ஜோட்டனின் கண்கள் மகிழ்ச்சியால் விரிந்தன. அவள் சொன் னுள் "மீன் வயத்திலே முட்டையிருக்கு, பெரியம்மா, அப்படின்ன முட்டையை வறுத்துத் தரச்சொல்றேன்."

ஜோட்டன் வேறொன்றும் பேசத் தோன்ருமல் அவல் இடிக்கத் தொடங்கினுள். கிரௌஞ்ச பட்சியின் ஒலி இன்னும் வருகிறது அவளிடமிருந்து. அவள் அணிந்திருந்த கிழிசல் புடைவை இதற்குள் காய்ந்துவிட்டது. பெரிய மாமி அவளுக்கு ஒரு தொன்னை அவல் தின்பதற்குக் கொடுத்தாள். ஆனல் அவள் அதைச் சாப்பிடாமல் முந்தானையில் முடிந்து வைத்துக்கொண்டாள். பல்ட்டு அவளுக்குக் கொஞ்சம் பச்சைப் பாக்கு கொண்டுவந்து கொடுத்தான். அதையும் முந்தானையில் கட்டிக் கொண்டாள். இரவு வெகுநேரமாகிவிட்டது.

அவள் வாழையிலையை அலம்பி வைத்துக்கொண்டு உட்கார்ந் திருந்தாள். சமையலானதும் அவளுக்குச் சாப்பாடு கிடைக்கும்.

ஜோட்டன் நன்ருக ரசித்துச் சாப்பிட்டாள். ஒன்று கூட விடாமல் சோற்றுப் பருக்கைகளைக் கவனமாகப் பொறுக்கிச் சாப்பிட்டாள்.

வதக்கிய கத்தரிக்காயுடன் இலிஷ் மீனின் ருசி, மழைக் காலத்து முரட்டு அரிசிச் சாதம்—இவை அக்குடும்பத்தின் இரக்க உணர்வை ஜோட்டனுக்கு உணர்த்தின. கிழவியம்மா, பெரியமாமி, தனமாமி இவர்களெல்லாருமே உதார குணத்தில் பைத்தியக்கார டாகுரைப் போல. இந்த விருந்து சாப்பாட்டுடன் இரவின் நிலவு, பைத்தியக் கார டாகுரின் நினைவு, கிழ எசமானரின் நல்ல மனசு, பூபேந்திரநாத் தின் நற்குணம் — இவையெல்லாம் ஜோட்டனுக்கு ஒரு தனிப்பட்ட சுகத்தைக் கொடுக்கின்றன. இந்தக் குடும்பத்தோடு அவளுக்கு எவ்வளவு காலமாகப் பரிச்சயம்!

அவள் பெரிய மாமியிடம் சொன்னுள். "ரொம்ப நாளைக்கப்பறம் இன்னிக்கு வயிறு நிறையச் சாப்பிட்டேன், பெரிய மாமி. இந்தச் சாப்பாட்டை என்னிக்கும் மறக்கமாட்டேன்."

அவளுடைய சோகக் கதையைக் கேட்டுவிட்டுப் பெரியமாமி சொன்னுள். "ஏதோ தர்காவிலே இருக்கிற பக்கிரி சாயபு உன்னை நிக்காஹ் பண்ணிக்கப் போறதாச் சொன்னியே!"

"என்ன சொல்றீங்க, மாமி? சொப்பனம் எவ்வளவோ பார்த்தேன். ஆனு அல்லா கண் திறந்து பார்க்கல்லேன்னு நான் என்ன பண்ணு வேன்?"

"ஏன்? பக்கிரி சாயபு வந்ததா ஆபேத் அலி சொன்னுனே!"

"வந்தார். வந்து வயிறு நிறையச் சோத்தை முழுங்கினுர். முழுங்கி விட்டு, சொர்பான் ஷேக்கோட படையலுக்குப் போறேன், திரும்பி வந்ததும் உன்னைக் கூட்டிக்கிட்டுப் போறேன், அப்படீன்னுட்டுப் போனுர். போனவர் போனவர்தான். எவ்வளவு நாளாயிடுச்சு?"

"சொல்லிட்டுப் போயிருக்கார்னு நிச்சயம் வருவார்."

ஜோட்டன் வேறெதுவும் பேசாமல் தன் எச்சில் இலையைத் திரட்டி எடுத்துக்கொண்டு நாவல் மரத்தைக் கடந்துபோய், கந்தபாதாலப்

புதருக்கு மறுபுறம் அதை எறிந்தாள். நிலவு வெளிச்சத்தில் புதர்கள், காடு, தூரத்து வயல் வெளி, பச்சைப் பயிர்களின் மங்கலான காட்சி – எல்லாமே அவளுக்கு மகிழ்ச்சியளித்தன. அவள் கணக்குப் போட்டுப் பார்த்தாள். அவளுடைய தேகம் அல்லாவுக்கு வரி கொடுத்து, ஏறக்குறைய இரண்டு வருஷமாகிவிட்டது. குறிப்பாக இந்த இரவும், புதர்களிடையே இங்குமங்கும் பரவியிருந்த இருளும், தொண்டை வரை நிரம்பியிருந்த விருந்துச் சாப்பாடும் ஜோட்டனின் மனசில் ஒரு தீவிர ஆசையைக் கிளப்பிவிட்டு அவளைத் துன்புறுத்தின. பக்கிரி சாயபு இந்தச் சமயத்தில் மிகவும் அதிகமாகவே நினைவுக்கு வந்தார்.

அவள் பெரிய மாமியிடமிருந்து ஒரு வெற்றிலையைக் கேட்டு வாங்கிக்கொண்டாள். பச்சைப் பாக்கு ஒன்றை முழுசாக வாயில் போட்டுக்கொண்டு தோப்புக்குள் நுழைந்தாள். ஒரு மந்திரசக்தி அவளைத் தோப்புக்குள்ளேயே நிறுத்திவைத்தது. பழுத்த பாக்கு ஏதாவது மரத்திலிருந்து கீழே புல்லில் விழுந்தால் 'டுப்' என்று சப்தம் கேட்கும். வௌவால்கள் பறந்துவரும். அந்தச் சப்தத்துக்காகக் காதைத் தீட்டிக்கொண்டு நின்றாள் அவள். ஆனால் 'டுப்' சப்தம் எழவில்லை. ஒரு வௌவாலும் பறந்து வரவில்லை. பச்சைப் பாக்கின் ரசம் போதையைப் போல் அவளுடைய தலையைக் கனக்க வைத்தது.

நீரில் வெள்ளி நிலவு பிரதிபலித்தது. அவள் நீரில் இறங்கினாள். கொஞ்சங் கொஞ்சமாகப் புடைவையை முழங்காலுக்குமேல் தூக்கிக் கொண்டு முன்னேறினாள். தண்ணீரின் ஆழம் அதிகமாக ஆக அவள் துணியை மேலே தூக்கிக்கொண்டே போய் ஒரு சமயம் இடுப்பு வரைக்கும் கொண்டுவந்துவிட்டாள். தண்ணீரின் ஆழம் இன்னும் அதிகரித்துக்கொண்டே இருந்தது. கடைசியில் அவள் தன் துணியை அவிழ்த்துத் தலைக்கு மேல் வைத்துக்கொண்டு உடும்பைப் போல் தண்ணீரில் மிதக்க ஆரம்பித்தாள். அவளுக்கு இருப்பது அந்த ஒரே துணிதான். ஈரத் துணியைக் கட்டிக்கொண்டு இரவைக் கழிப்பது ரொம்பச் சிரமம்.

தண்ணீரில் நீந்திக்கொண்டே புதர்களின் இடுக்கு வழியே அவள் பார்த்தாள். நரேன்தாஸ் வீட்டு வராந்தாவில் சிம்னி விளக்கு எரிந்தது. கிழக்குப் பக்க அறையிலிருந்து தறி இயங்கும் அரவம் கேட்கவில்லை. தறியை இயக்குவது அமூல்யன். அவன் தன் வீட்டுக்குப் போய்விட்டால் தறி இயங்காது. தவிரவும் இப்போது மார்க்கெட்டில் நூல் கிடைப்பதில்லை. அதன் காரணமாகவும் நரேன் தாஸ் தறியை மூடி வைத்திருக்கலாம். இப்போதெல்லாம் ஜோட்டனால் நூல் சுற்றும் கதிர் நிறைய நூல் நூற்க முடிவதில்லை. அவள் மிகவும் கஷ்டப்பட்டு ஒரு சர்க்கா வாங்கியிருந்தாள். நூல் நூற்றுப் பணம்

சேர்த்து இந்துப் பெண்கள் உபயோகப்படுத்தும் வெண்கலத் தட்டுப் போல் ஒரு தட்டைத் தானும் வாங்கிப் பெரிய மனுஷி ஆக வேண்டும் என்று கோட்டைக் கட்டிக்கொண்டிருந்தாள் அவள். இந்தச் சமயத்தில் நூல்கண்டு விலை அரையணுவிலிருந்து ஒரு அணு ஆகிவிட்டது. ஒரு பக்கிரியையும் வைத்துப் பராமரிக்கும் வசதி அவளுக்கு ஏற்படும் சமயத்தில் வந்தது அனர்த்தம், நூலே மார்க்கெட்டில் கிடைக்காமல் போய்விட்டது.

ஜோட்டன் தண்ணீரில் தவளையைப் போல் மிதந்துகொண்டே நீந்துகிருள். அவளுடைய கைகால்களின் அசைவில் கொப்பளங்கள் கிளம்புகின்றன. வெப்பத்தினிடையே நீரின் இந்தக் குளிர்ச்சி, நிர்மலமான ஆகாயம், கிழக்கிலிருந்து சிரித்துக்கொண்டிருக்கும் பெரிய சந்திரன் இவையெல்லாம் சேர்ந்து ஜோட்டனின் தேகத்தை வரி கொடுக்கத் தூண்டுகின்றன. தொண்டை வரையில் சாப்பிட்டதில் அவளுள்ளே எவ்வளவோ விதமான ஆசைகள் பிறக்கின்றன. தூரத்து வயல் வெளியில் ஓர் ஒளிப்பொறி. எதிரில் சணல் வயல்கள். சணல் சாகுபடியாகிவிட்டது. நீர் தெளிந்திருக்கிறது. காற்றில் நாற்புறமும் நீர் சலசலக்கிறது. தெளிந்த நீரில் ஜோட்டன் தன் உடலின் உஷ்ணத்தைத் தணித்துக்கொண்டிருந்தாள். வாய் நிறைய நீரை எடுத்துக்கொண்டு ஆகாயத்தைப் பார்த்துக் கொப்புளித்து உமிழ்ந்தாள். "ஒன்னுடை உலகத்திலே எனக்கு என்ன வேலை இருக்கு, சொல்லு!"

வானத்தில் இன்னும் வெளிச்சம் இருக்கிறது. தண்ணீரில் அல்லியும் ஆம்பலும் இருக்கின்றன. வயல் வெளியின் முடிவில் மாமரங்களும் நாவல்மரங்களும் நிழலாகத் தெரிகின்றன. எல்லாம் பார்க்க அழகாக இருக்கிறது. அவள் அல்லிப்பூவைப் போல் நீரிலிருந்து முகத்தைத் தூக்கி, இரண்டு கல்யாண முருங்கை மரங்களைக் கடந்த பின் கவனித்தாள். ஆற்றுப் படுகையில் ஆலமரத்தடியில் ஓர் அரிக்கேன் விளக்கு, அதற்கருகில் ஒரு படகின் நிழல், ஒரு மனிதனின் நிழலுங்கூட. அவள் அவசர அவசரமாகத் தண்ணீருக்குள் அமுங்கித் தன்னை மறைத்துக்கொள்ள முயறசி செய்தாள். தண்ணீரில் ஒலி கேட்டது. ஒரு மீன் ஓடுகிறது போலும்; அல்லது போயால் மீனுக்கான பெரிய தூண்டிலில் போயால் மீன் அகப்பட்டுக்கொண் டிருக்கலாம். படகுக் கருகில் இருந்த மனிதன் மீனைப் பார்க்க வந்தான். புதர்களுக்குப் பின்னல் நீரில் மனித உருவம் மிதந்துகொண் டிருப்பதைக் கவனித்தான். ஜோட்டன் கழுத்துவரை தண்ணீரில் அமுங்கித் தன்னை மறைத்துக்கொள்ளப் பார்த்தாள், முடியவில்லை.

மன்சூர்—அவன்தான் அந்த மனிதன்—அவளுக்கு நேரே விளக் கைக் கொண்டு வந்து பார்த்து, "ஜோட்டனு?" என்ருன்.

ஜோட்டன் வெட்கத்தால் கண்களை மூடிக்கொண்டாள். மூடிய கண்களுடனேயே அவள் பதில் சொன்னுள். "ஆமா!"

"எங்கே போயிருந்தே?"

"டாகுர் வீடு. வழிவிடு, நான் போறேன்."

மன்சூர் அவளது நிலையை உணர்ந்து முகத்தைத் திருப்பிக்கொண்டு சொன்னுன். "பெரிய மீன் ஒண்ணு தூண்டில்லே ஆப்பிட்டுக்கிட்ட தாக்கும்னு நினைச்சேன்."

"வேருெண்ணும் நினைக்கல்லியே?"

"வேறே என்ன நினைப்பேன்?" என்று கேட்டுக்கொண்டே அவன் படகின்மேல் ஏறி உட்கார்ந்தான்.

"ஏன்? வேறே ஒண்ணும் நினைக்க முடியாதா? நீ இந்தப் பக்கம் எங்கே வந்தே?" என்று கேட்டுக்கொண்டே ஜோட்டன் கண் களைத் திறந்தாள். பேசியதில் அவளுடைய வெட்கம் மறைந்து விட்டது. மன்சூரின் மேலுடம்பு திறந்து கிடக்கிறது. இடுப்பில் மிகவும் சன்னமான துண்டு. அதுவும் தண்ணீரில் நனைந்து கொஞ்சம் மேலே தூக்கிக்கொண் டிருக்கிறது. அவன் ஜோட்டன் இருக்கும் பக்கம் திரும்பவேயில்லை. ஜோட்டனுக்கு ஒரே சிரிப்பாக வந்தது. அவள் கேட்டாள். "உங்கிட்டதான் நிறையக் காசு இருக்கே. பெரிய துண்டு ஒண்ணு வாங்கிக்கக் கூடாதா?"

"சரி, சரி, நீ போ!"

"போகல்லேன்ஞ நீ என்ன பண்ணுவே?" ஜோட்டனை ஆசை தூண்டியது.

"என்ன பண்ணுவேன்?"—அவன் தான் அங்கே இருப்பதற்குக் காரணம் தேடிச் சொன்னுன். "ஹாயிஜாதி போயிருந்தேன், மருந்து வாங்க. திரும்பறத்துக்குள்ளே ராத்திரி ஆயிடுச்சி. தூண்டில்லே மீன் சிக்கியிருக்கான்னு பார்க்க இங்கே வந்தா, நீ கொம்மாளம் போடறே. இருக்கற நிலாவை ஒரேயடியா இருட்டாக்கிக்கிட்டு உக்கார்ந்திருக்கே. நீ இங்கே இருப்பேன்னு தெரிஞ்சிருந்தா நல்ல லுங்கி கட்டிக்கிட்டு வந்திருப்பேன்."

மன்சூரும் ஜோட்டனும் சம வயது. இளமைப் பருவத்து நிகழ்ச்சி களில் சில அவர்களுடைய ஞாபகத்துக்கு வந்தன. சிறுவயதில் அவர்கள் இந்தச் சணல் வயல்களில் அலைந்து திரிந்திருக்கிருர்கள். ஜோட்டன் அந்தச் சம்பவங்களை நினைவூட்ட விரும்பினுள். ஆனுல் சங்கோசம் காரணமாக அவர்கள் இருவருக்குமே பேச்சு வரவில்லை. இரண்டு வருடங்களுக்கும் மேலாக அவளுடைய உடம்பு காய்ந்து

போய் ஏங்குகிறது. அவள் கெஞ்சும் குரலில் சொன்னாள். "நான் போகணும், வழி விடு."

"நான் வழி மறிச்சுக்கிட்டு நிக்கறேனா?"

இந்தத் தண்ணீர், இந்த நிலவு, வயிறு நிறைய நல்ல சாப்பாடு சாப்பிட்ட திருப்தி—எல்லாமாகச் சேர்ந்து அவளை நீந்திக்கொண்டு அங்கிருந்து போக விடவில்லை. அவள் மெதுவாகத் தண்ணீரின் மேலே மிதந்து வந்தாள். அவள் தண்ணீரில் உடலைப் பரப்பிக் கிடந்த விதம் மின்மினியைப் பிடிக்க வாய் திறந்தவாறு நீரில் மிதக்கும் தவளையை நினைவூட்டியது. மன்சூர் ஒன்றும் பேசாமல் இருப்பதைப் பார்த்து அவளே சொன்னாள். "உன் மூஞ்சியைப் பார்த்தா சந்திரன் மாதிரி இருக்கும். ஆனா இப்போ அது அமாவாசை ராத்திரி மாதிரி ஆயிடுச்சு. காஞ்சு போயிடுச்சு."

"காஞ்சு போயிடுச்சா? உங்கிட்ட சொல்லிச்சா?"

மன்சூர் தன் நோயாளி மனைவியை நினைத்துச் சற்று அலுத்துக் கொண்டான். வெகு காலமாகவே அந்த நோயாளியின் உடம்பு அவனுடைய நெஞ்சின் தாகத்தைத் தணிக்கவில்லை. மன்சூரைத் தாகம் வாட்டிக்கொண்டே இருந்தது. இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளும் ஆசை அவனுக்கு இல்லவேயில்லை என்று சொல்ல முடியாது. ஆனால் அவன் தன் நோயாளி மனைவியை உண்மையிலேயே நேசித்தான். அவன் மிகவும் கஷ்டப்பட்டுச் சொன்னான். "இருட்டு ராத்திரிக்கு வெளிச்சம் போட முடியுமா உன்னாலே?"

மன்சூர் அவள் பக்கம் திரும்பியதும் அவள் மறுபடி தண்ணீருக்குள் தன் உடம்பை மறைத்துக்கொண்டாள். அவளுக்கு முன்னும் பின்னும் இருந்த நீர்ப் புல் அவளுடைய மானத்தைக் காத்தது. மன்சூரையும் தன்னுடன் இழுத்துக்கொண்டு தண்ணீருக்குள் முழுக விரும்பினாள் அவள். இனியும் பொறுத்துக்கொள்ள முடியாத மன்சூர் தன் இருகைகளாலும் அவளை, ஒரு பெரிய செத்த மீனை நீரிலிருந்து படகின் மேல் ஏற்றுவது போல, இழுத்துப் படகின் தட்டில் போட்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு கிராமத்திலிருந்து அழுகையொலி சணல் வயல்கள் வழியே மிதந்து வந்தது. அதை ஜோட்டனும் மன்சூரும் கேட்டார்கள். படகின் மேல் சில பூச்சிகள் பறந்தன. வயல் வெளியில் நிலவு ஒரு மாயத்தைப் பூசியிருந்தது. சுகமும் மகிழ்ச்சியும் படகில் கட்டிப் பிடித்து விளையாடின. வேதனைகள் யாவும் தண்ணீரில் கரைகின்றன. வெப்பமெல்லாம் நிலவைப் போல் உருகியோடுகின்றன. இச்சையின் உலகத்தில் விளையாட்டுப்

பொம்மை போலிருந்த மன்சூர் தன் பீபியின் வற்றிய முகத்தை நினைத்துக்கொண்டவனாகக் கேட்டான். "யார் அழறது?"
"உன் வீட்டிலேருந்துதான் அழுகைச் சத்தம் வராப்பலே இருக்கு."
"அப்போ என்னோடை பீபி செத்துப்போயிட்டா போலே இருக்கு."
மன்சூரின் முகம் பட்சவாதம் பிடித்த நோயாளியின் முகம் போல் ஆகிவிட்டதை ஜோட்டன் கவனித்தாள். மன்சூர் தன் வெப்பத்தையெல்லாம் இங்கே கொட்டிவிட்டுக் கேவிக் கேவி அழுதுகொண்டு படகை வலிக்கத் தொடங்கினான்.
யாரோ நாயைத் தண்ணீருக்குள் வீசியெறிந்து விட்டுப் படகில் ஓடிப் போய்விட்டார்கள். நாய் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக நீந்துகிறது. எப்படியோ மிகவும் சிரமப்பட்டுத் தன் மூக்கை மட்டும் தண்ணீருக்கு வெளியே நீட்டிக்கொண் டிருக்கிறது அது. ஆழமற்ற இடத்தையடைந்து சற்று நிதானித்து நின்றது. ஊஹூம், வெகுதூரம் வரை கிராமமொன்றும் தென்படவில்லை அதன் முகத்திலும் கண்களிலும் நிராசை.
மழைக் காலத்தின் கடைசி நாட்கள். நெல் வயல்களிலிருந்தும் சணல் வயல்களிலிருந்தும் நீர் இறங்கிக்கொண் டிருக்கிறது.
பைத்தியக்கார டாகுர் படகை வரப்புகளின் மேலே தள்ளிக் கொண்டு வந்தார். சோனா படகுத் தட்டில் தவழ்ந்துகொண் டிருக்கிறான். நெற்கதிர்கள் தண்ணீரில் சாய்ந்து கிடக்கின்றன.
சிராவண — பாத்ர மாதங்களில் இருந்த தெளிவு இல்லை தண்ணீரில். குழம்பிக் கிடந்த நீரிலிருந்து அழுகின செடிகளின் நாற்றம் வருகிறது. இரு பக்கமும் சேறு, அழுகின நத்தைகள், நாற்றமடிக்கும் நீர்ப்பாசி.
டாகுர், சர்க்கார் வீட்டு நிலத்தில் படகைக் கொண்டு வந்து நிறுத்தியபோது அங்கு ஒரு நாய் நிற்பது தெரிந்தது. அதன் முகத்தில் கலக்கம். அது பைத்தியக்கார டாகுரைப் பார்த்து 'குர்' என்று உறுமியது.
அவர் தம் வழக்கப்படி கைகளைக் கசக்கிக்கொண்டு சொன்னார். "கேத்சோரத்சாலா!"
நாய் மறுபடி உறுமியது.
மறுபடியும், "கேத்சோரத்சாலா!"
தண்ணீர் கொஞ்சமாக இருந்ததால்தான் நாயால் வரப்பின் ஒரு புறம் நிற்க முடிந்தது. அது ஒரு புறமாக நகர்ந்துகொண்டு டாகுர் போக வழிவிட்டது. அதனுடைய இந்தப் பண்பு டாகுருக்குப் பிடித்திருந்தது. ஆகையால் அவர் அதை அப்புறம் திட்டவில்லை.

நாய் விட்ட வழியில் படகை இழுத்துக்கொண்டு போன டாகுர் ஏதோ நினைத்துக்கொண்டு பின்னல் திரும்பிப் பார்த்தார். நாய் சூதுவாது அறியாத குழந்தை போல அவர் பக்கம் பார்த்துக்கொண்டு நின்றது. அவர் அதை அன்புடன் அழைக்கும் பாவனையில் வாயால் ஏதோ ஒரு சப்தம் செய்தார். நாய் நீரில் 'சப், சப்' என்று ஒலி எழுப்பிக்கொண்டு நடந்து அவருக்கருகில் வந்து நின்றது. அவர் அதைத் தூக்கி எடுத்துக்கொண்டு அதன் முகத்தில் முத்தமிட்டார். அதைப் படகில் ஏற்றிக்கொண்டு சொன்னர். "கேத்சோரத்சாலா!"

நாய் படகின் ஒரு புறத்தில் நின்றுகொண்டு தன் உடலைச் சிலிர்த்துக்கொண்டது. பிறகு சோம்பல் முறித்துக்கொண்டு சற்று நேரம் நாக்கை நீட்டிக்கொண்டு நின்றது. பைத்தியக்கார டாகுரையும் சோனுவையும் பார்த்தவாறே அது இறைக்க இறைக்க மூச்சு விட்டது.

மணீந்திரநாத் அல்லி விதையைப் பறித்துத் தின்றுர். அதைப் பிய்த்துச் சோனுவுக்கும் கொடுத்தார். சோனுவால் கெட்டியான எதையும் கடித்துத் தின்ன முடியாது. அவன் அதைக் கடித்துவிட்டுக் கத்தத் தொடங்கினன். அவனுடைய கண்களும் முகமும் சிவந்து விட்டன. அவர் அவனை மடியில் போட்டுக்கொண்டு சமாதானம் செய்தார்.

இரண்டு வயல்களைத் தாண்டிவிட்டால் ஹாஸான்பீரின் தர்கா வந்துவிடும். சென்ற குளிர்கால முடிவில் ஒரு தடவை இந்தப் பக்கம் வந்திருந்தார். அப்போது பீரின் திருவிழாவும் படையலும் இருந்தன வெவ்வேறு கிராமங்களிலிருந்து மக்கள் வந்தார்கள். பீரின் தர்காவில் மெழுகுவர்த்தி ஏற்றி வைததுவிட்டு, திருவிழாக் கடைகளில் சாமான்கள் வாங்கிக்கொண்டு திரும்பினூர்கள். இப்போது மனித அரவமே இல்லை இங்கே. இடிந்த மசூதியின் மேலும் பீர்சாயபுவின் சமாதிச் சுவரின் மேலும் சில காகங்கள் எப்போதும் பறந்துகொண் டிருக்கின்றன. சோனுவின் அழுகை ஓயவில்லை. அவர் ஒரு கையால் சோனுவை மார்புடன் அணைத்துக் கொண்டு மற்றொரு கையால் துடுப்பை வலித்தார். ஹாசான்பீரின் தர்காவில் படகைக் கொண்டுவந்து நிறுத்திவிட்டு அவர் கரை யேறினூர்.

காகங்கள் சுவர்மேல் உட்கார்ந்துகொண்டு கூச்சலிட்டன. பீர்சாகேபின் சமாதிக்கு அருகில் பூவரச மரம் இன்னும் இருக்கிறது. டாகுரைக் கண்டதும் காகங்கள் அந்த மரத்தின்மேல் உட்கார்ந்தன. புதர்களின் இடைவெளி வழியே வெகுதூரத்தில் ஆரம்பப் பள்ளிக் கூடம் தெரிகிறது. மணீந்திரநாத் ஒரு காலத்தில் படிப்பதற்கு இந்தப் பள்ளிக்கூடத்திற்கு நடந்து வந்ததுண்டு.

வீட்டு மனைகள் போல் இந்த நிலமும் மேடாக இருக்கிறது. சில மாமரங்கள், சில பறவைகள், பிரம்புப் புதர்கள், நண்டுகள், பாம்புகள், கோரைப்புல் காடு—இவற்றின் நடுவில் தன் புதைக் குழிக்குள் உறங்கிக்கொண் டிருக்கிறார் பீர்சாகேப். சாதாரண மழையானால் நீர் அவருடைய சமாதி வரை வராது. அப்போது பக்கத்திலுள்ள ஆறுகள், வாய்க்கால்களிலுள்ள ஆமைகள் மிருது வான மண்ணைத் தேடிக்கொண்டு பீர்சாகேபின் சமாதி அருகில் வந்து விடும். அவற்றுக்கு முட்டையிட, முட்டையை அடைகாக்க, பாது காப்பான இடம் தேவை.

அக்ராண் மாதம். பொழுது சாய இன்னும் வெகு நேரமில்லை. சோனா இன்னும் அழுகிறான். நாய் அவர்களுடன் நடந்து வருகிறது. சமாதியின் மேல் சில சருகுகள் விழுகின்றன. பின் பனிக்காலத் தின் இலேசான குளிர் புல்லிலும் தர்காச் சுவற்றிலும் வியாபித்து நிற்கிறது. சுவருக்குக் கீழே வித விதமான பள்ளங்கள். சமாதி மேடையிலிருந்து உடைந்த கண்ணாடித் துண்டுகள் நீட்டிக்கொண் டிருக்கின்றன.

மணீந்திரநாத் சோனாவை இடுப்பில் வைத்துக்கொண்டு சுவரின் நாற்புறமும் சுற்றினார். ஆளரவம் அற்ற தர்காவில் பறவைகள் இப்போது திடீரென்று மனிதர்களைக் கண்டு சஞ்சலமடைந்தன. அவை அவருடைய தலைக்கு மேல் சுற்றிச் சுற்றிப் பறந்தன.

வெகு நாட்களுக்குப் பிறகு தர்காவுக்கு வந்திருக்கிறார், மணீந்திர நாத். இவ்வளவு காலங்கழித்து அவருக்குத் தோன்றியது, பீர்சாகேப் கழுத்தில் சுருக்குப் போட்டுக்கொண்டு இறந்த காரணத்தைக் கேட்க வேண்டுமென்று.

சோனாவின் அழுகை நின்றுவிட்டது. அவர் அவனைப் புல்லில் படுக்க வைத்துவிட்டுக் கொஞ்ச தூரம் உலாவினார். நாய் சோனா வுக்கு அருகில் உட்கார்ந்துகொண்டது. கொஞ்சங்கூட நகரவில்லை. சோனா கைகால்களை ஆட்டிக்கொண்டு விளையாடுகிறான். மணீந்திர நாத் தர்காவின் கதவின் மேல் ஏறிக் குதித்து உள்ளே நுழைந்து, "கேத்சோரத்சாலா !" என்று சொன்னார்.

'பீர்சாகேப்! உங்க தர்காவிலே திருவிழா நடக்கிறது. நீங்க இந்து முஸ்லீம் எல்லாருக்கும் பீராயிருக்கீங்க. நீங்க ஏன் சுருக்குப் போட்டுக்கிட்டுச் செத்துப் போனீங்க?' எனறு கேட்க விரும்பியவர் போல அவர் மேடைக் கருகே போய் நின்றார். சுவரின் மீது ஒரு காய்ந்த கிளை முறிந்து விழுந்தது. சப்தபர்ணி மரத்தின் உச்சாணிக் கிளையில் சில பருந்துகள் கூடு கட்டிக்கொண் டிருப்பதை அவர் கவனித்தார்.

"கேத்சோரத்சாலா!"

நாய் விட்ட வழியில் படகை இழுத்துக்கொண்டு போன டாகுர் ஏதோ நினைத்துக்கொண்டு பின்னல் திரும்பிப் பார்த்தார். நாய் தூதுவாது அறியாத குழந்தை போல அவர் பக்கம் பார்த்துக்கொண்டு நின்றது. அவர் அதை அன்புடன் அழைக்கும் பாவனையில் வாயால் ஏதோ ஒரு சப்தம் செய்தார். நாய் நீரில் 'சப், சப்' என்று ஒலி எழுப்பிக்கொண்டு நடந்து அவருக்கருகில் வந்து நின்றது. அவர் அதைத் தூக்கி எடுத்துக்கொண்டு அதன் முகத்தில் முத்தமிட்டார். அதைப் படகில் ஏற்றிக்கொண்டு சொன்னார். "கேத்சோரத்சாலா!"

நாய் படகின் ஒரு புறத்தில் நின்றுகொண்டு தன் உடலைச் சிலிர்த்துக்கொண்டது. பிறகு சோம்பல் முறித்துக்கொண்டு சற்று நேரம் நாக்கை நீட்டிக்கொண்டு நின்றது. பைத்தியக்கார டாகுரை யும் சோனவையும் பார்த்தவாறே அது இறைக்க இறைக்க மூச்சு விட்டது.

மணீந்திரநாத் அல்லி விதையைப் பறித்துத் தின்றார். அதைப் பிய்த்துச் சோனவுக்கும் கொடுத்தார். சோனவால் கெட்டியான எதையும் கடித்துத் தின்ன முடியாது. அவன் அதைக் கடித்துவிட்டுக் கத்தத் தொடங்கினன். அவனுடைய கண்களும் முகமும் சிவந்து விட்டன. அவர் அவனை மடியில் போட்டுக்கொண்டு சமாதானம் செய்தார்.

இரண்டு வயல்களைத் தாண்டிவிட்டால் ஹாஸான்பீரின் தர்கா வந்துவிடும். சென்ற குளிர்கால முடிவில் ஒரு தடவை இந்தப் பக்கம் வந்திருந்தார். அப்போது பீரின் திருவிழாவும் படையலும் இருந்தன. வெவ்வேறு கிராமங்களிலிருந்து மக்கள் வந்தார்கள். பீரின் தர்காவில் மெழுகுவர்த்தி ஏற்றி வைத்துவிட்டு, திருவிழாக் கடைகளில் சாமான்கள் வாங்கிக்கொண்டு திரும்பினர்கள். இப்போது மனித அரவமே இல்லை இங்கே. இடிந்த மசூதியின் மேலும் பீர்சாயபுவின் சமாதிச் சுவரின் மேலும் சில காகங்கள் எப்போதும் பறந்துகொண் டிருக்கின்றன. சோனவின் அழுகை ஓயவில்லை. அவர் ஒரு கையால் சோனவை மார்புடன் அணைத்துக் கொண்டு மற்றொரு கையால் துடுப்பை வலித்தார். ஹாசான்பீரின் தர்காவில் படகைக் கொண்டுவந்து நிறுத்திவிட்டு அவர் கரை யேறினர்.

காகங்கள் சுவர்மேல் உட்கார்ந்துகொண்டு கூச்சலிட்டன. பீர்சாகேபின் சமாதிக்கு அருகில் பூவரச மரம் இன்னும் இருக்கிறது. டாகுரைக் கண்டதும் காகங்கள் அந்த மரத்தின்மேல் உட்கார்ந்தன. புதர்களின் இடைவெளி வழியே வெகுதூரத்தில் ஆரம்பப் பள்ளிக் கூடம் தெரிகிறது. மணீந்திரநாத் ஒரு காலத்தில் படிப்பதற்கு இந்தப் பள்ளிக்கூடத்திற்கு நடந்து வந்ததுண்டு.

வீட்டு மனைகள் போல் இந்த நிலமும் மேடாக இருக்கிறது. சில மாமரங்கள், சில பறவைகள், பிரம்புப் புதர்கள், நண்டுகள், பாம்புகள், கோரைப்புல் காடு—இவற்றின் நடுவில் தன் புதைக் குழிக்குள் உறங்கிக்கொண் டிருக்கிருர் பீர்சாகேப். சாதாரண மழையாஞல் நீர் அவருடைய சமாதி வரை வராது. அப்போது பக்கத்திலுள்ள ஆறுகள், வாய்க்கால்களிலுள்ள ஆமைகள் மிருது வான மண்ணைத் தேடிக்கொண்டு பீர்சாகேபின் சமாதி அருகில் வந்து விடும். அவற்றுக்கு முட்டையிட, முட்டையை அடைகாக்க, பாது காப்பான இடம் தேவை.

அக்ராண் மாதம். பொழுது சாய இன்னும் வெகு நேரமில்லை. சோனு இன்னும் அழுகிருன். நாய் அவர்களுடன் நடந்து வருகிறது. சமாதியின் மேல் சில சருகுகள் விழுகின்றன. பின் பனிக்காலத் தின் இலேசான குளிர் புல்லிலும் தர்காச் சுவற்றிலும் வியாபித்து நிற்கிறது. சுவருக்குக் கீழே வித விதமான பள்ளங்கள். சமாதி மேடையிலிருந்து உடைந்த கண்ணுடித் துண்டுகள் நீட்டிக்கொண் டிருக்கின்றன.

மணீந்திரநாத் சோனுவை இடுப்பில் வைத்துக்கொண்டு சுவரின் நாற்புறமும் சுற்றினுர். ஆளரவம் அற்ற தர்காவில் பறவைகள் இப்போது திடீரென்று மனிதர்களைக் கண்டு சஞ்சலமடைந்தன. அவை அவருடைய தலைக்கு மேல் சுற்றிச் சுற்றிப் பறந்தன.

வெகு நாட்களுக்குப் பிறகு தர்காவுக்கு வந்திருக்கிருர், மணீந்திர நாத். இவ்வளவு காலங்கழித்து அவருக்குத் தோன்றியது, பீர்சாகேப் கழுத்தில் சுருக்குப் போட்டுக்கொண்டு இறந்த காரணத்தைக் கேட்க வேண்டுமென்று.

சோனுவின் அழுகை நின்றுவிட்டது. அவர் அவனைப் புல்லில் படுக்க வைத்துவிட்டுக் கொஞ்ச தூரம் உலாவினுர். நாய் சோனு வுக்கு அருகில் உட்கார்ந்துகொண்டது. கொஞ்சங்கூட நகரவில்லை. சோனு கைகால்களை ஆட்டிக்கொண்டு விளையாடுகிருன். மணீந்திர நாத் தர்காவின் கதவின் மேல் ஏறிக் குதித்து உள்ளே நுழைந்து, "கேத்சோரத்சாலா!" என்று சொன்னுர்.

'பீர்சாகேப்! உங்க தர்காவிலே திருவிழா நடக்கிறது. நீங்க இந்து முஸ்லிம் எல்லாருக்கும் பீராயிருக்கீங்க. நீங்க ஏன் சுருக்குப் போட்டுக்கிட்டுச் செத்துப் போனீங்க?' என்று கேட்க விரும்பியவர் போல அவர் மேடைக் கருகே போய் நின்ருர். சுவரின் மீது ஒரு காய்ந்த கிளை முறிந்து விழுந்தது. சப்தபர்ணி மரத்தின் உச்சாணிக் கிளையில் சில பருந்துகள் கூடு கட்டிக்கொண் டிருப்பதை அவர் கவனித்தார்.

"கேத்சோரத்சாலா!"

'பீர்சாகேப் உள்ளே இருக்காரா?' என்று கேட்க விருப்பம் அவருக்கு. அவர் மேடைக் கருகில் உட்கார்ந்துகொண்டு காதைத் தரையோடு சேர்த்து வைத்துக்கொண்டார். பீர்சாகேபின் முகம் அவருக்கு நினைவில் தெரிகிறது. அவர் பார்த்த காலத்தில் பீர்சாகேப் கிழவராகித் திராணியற்று இருந்தார்.

மணீந்திரநாத் பள்ளிக்கூடத்தில் படித்துவிட்டுத் திரும்பும் வழியில் தர்காவுக்கு வந்து பீர்சாகேபின் மீசையையும் தாடியில்லாத முகத்தையும் பார்த்துக்கொண்டே நிற்பார்.

ஒரு நாள் இரவு பீர்சாகேப் கழுத்தில் சுருக்கு மாட்டிக்கொண்டு சப்தபர்ணி மரத்திலிருந்து தொங்கினார். பாவம்! அவரைப் போன்ற மனிதர் உலகத்தில் இல்லை. அவருக்குச் சாப்பாடே தேவையில்லை என்று சொல்வார்கள். அவர் எப்போதும் ஹுக்காவையும் ஹுக்காக் குடுவையும் தன் இடுப்பிலேயே கட்டி வைத்துகொண் டிருப்பார். தர்காவில் எங்கும் சுற்றிக்கொண் டிருப்பார். இரவில் தூரத்தில் கொய்னாப் படகுகளின் விளக்குகள் கண் சிமிட்டும். கிராமங்கள் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும். அப்போது பீர்சாகேப் கீரையைத் தேடிப் பறிப்பார் அல்லது சப்தபர்ணி மரத்தின் மேல் ஏறிப் பருந்து முட்டைகளைத் தேடுவார். ஆமைகள் தர்காவிலும் வாய்க் கால் ஓரங்களிலும் பின் பனிக்கால முடிவிலும், குளிர்காலத்தின் ஆரம்பத்திலும் முட்டைகள் போடும். பீர்சாகேப் அந்த முட்டை களையும் தேடி எடுத்து வைப்பார்.

இப்போது அந்தக் கீரைச் செடிகளெல்லாம் தர்காவில் இல்லை; எல்லாம் செத்துப் போய்விட்டன. மழைக்காலம் அப்போதுதான் முடிந்திருந்ததால் தர்காவின் நாற்புறமும் களைகளும், சில இடங்களில் புல்லும் மண்டிக் கிடந்தன.

சோனாவின் நினைவு வந்ததும் அவர் சுவருக்கருகே வந்து நின்றார். சோனா தூங்குவதையும், நாய் அவனுக்குக் காவலாயிருப்பதையும் பார்த்துவிட்டு அவர் அங்கிருந்து நகன்றார். சுவருக்கு உட்புறம் விசாலமான இடம். பெரிய பெரிய பள்ளங்கள், புதை குழிகளைத் தோண்டி யாரோ சவங்களை எடுத்துக்கொண்டு போய்விட்டாற் போல. பெரிய பெரிய பாறைகள் கிடக்கின்றன. ஒவ்வொரு பாறையைப் போட்டு ஒரு மனிதனை முழுவதும் மறைத்துவிடலாம். பாறைக்கடியில் ஒரு மனிதர் நசுங்கிக் கிடக்கிறான் என்பதே தெரியாது. விசாலமான இடத்தைப் பார்த்து, இங்கேயே தர்காவில் வீடு கட்டிக் கொண்டு வசிக்கலாமா என்று தோன்றியது மணீந்திரநாத்துக்கு. திருவிழாக் காலத்தில் மெழுகுவர்த்தி ஏற்றும் இடமும், படையல் படைக்கும் இடமும் மட்டுமே சுத்தமாயிருக்கின்றன. அந்த இடத்தில் அருகம் புல் வளர்ந்திருந்தது. பாழடைந்த ஒரு குடிசையும், உடைந்த

மண்சட்டிகளும் இருந்தன. பீர்சாகேபிடம் ஏதோ சக்தி இருந்தது. அதன் காரணமாகத்தான் திருடனுக இருந்த ஹாஸான் பக்கிரியாகி, பிறகு பீரும் ஆகிவிட்டார். மாலைகள், தாயத்துகள், பலதரப்பட்ட எலும்புகள் இவற்றையெல்லாம் சேகரித்து வைப்பார் பீர்சாகேப். அவரைப் புதைக்கும்போது இவற்றையெல்லாம் அவருடனேயே சேர்த்துப் புதைத்துவிட்டார்கள்.

நீண்ட மேடையின் மேல் பருந்துகள் எச்சமிட்டிருக்கின்றன. காகங்களும் மற்றப் பறவைகளும், முக்கியமாக மைனுக்களும், தர்காவில் கூட்டம் போடுகின்றன.

இந்த ஹாசான் பீர்தான் அவரிடம் சொன்னுர். அந்தக் காலத்தில்; "உன் கண்ணுேட பாப்பாவைப் பார்த்தா நீ பைத்தியமாயிடு வேன்னு தெரியுது."

"நீங்க என்ன சொல்றீங்க, பீர்சாகேப்?"

"நான் சரியாகத்தான் சொல்றேன். உன்னுேட படிப்பெல்லாம் வீண். பீர், சாமியார் ஆறதுக்கு உனக்கு இருக்கிற மாதிரி கண் இருக்கணும், முகம் இருக்கணும். உன் மாதிரி கண் இல்லேன்னுப் பைத்தியம் ஆகமுடியாது, பைத்தியமாப் பண்ணமுடியாது."

போர்ட் வில்லியமின் மதில்சுவரின் மேல் உலவும்போது பாலின் சொல்லுவாள். "உன் கண்கள் எவ்வளவு ஆழமா, எவ்வளவு சோகமா இருக்கு! 'யுவர் ஐஸ் ஆர் க்ளுமி!"

பொட்டானிக்கல் பூங்காவில் பெரிய ஆலமரத்தடியில் உட்கார்ந்து கொண்டு பாலின் தன் பாப் செய்த தலை மயிரைக் கைகளால் அளைந்தவாறே ஆங்கிலத்தில் கிசுகிசுப்பாள். "வரியா, நாம் இரண்டு பேரும் கீட்சோட கவிதையைச் சொல்வோம்! — There's none I grieve to leave behind, but only, only thee !"

அப்போது தூரத்திலுள்ள தென்ன மரங்கள், கங்கையில் மிதக்கும் கப்பல்களின் சங்கொலி, சமுத்திரததிலிருந்து வரும் பறவைகளின் இறக்கைகளின் படபடப்பு—இவை இருவரையும் ஏதேதோ நினைவு களில் ஆழ்த்தும். அப்போது அவர்கள் தங்களது சூழ்நிலையை மறந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். கவிதை சொல்லி முடித்த பிறகு இருவரும் பறவையின் இறகு போன்ற மெல்லிய ஒரு சோகததில் ஆழ்ந்துபோய்ச் சற்று நேரம் மௌனமாக இருப்பார்கள்.

பாலின் சொல்லுவாள். "வா, நாம் இந்தக் கப்பல்லே ஏறிக்கிண்டு வேறொரு சமுத்திரத்துக்குப் போயிடலாம்!"

இந்நினைவுகள் மணீந்திரநாத்தை உணர்ச்சி வசப்படச் செய்தன. அவருடைய ஆசைக்குரிய பாலின் ... 1925-26ஆம் ஆண்டு. பாலின்

அப்போது யுவதி. முதல் உலக யுத்தத்தில் அவளுடைய அண்ணனின் மரணம், அவர்களுடைய வீட்டில் ஏதோ ஓர் இரவின் இருளில் ஏசு கிறிஸ்துவின் சித்திரத்துக்கு முன் எரியும் மெழுகுவர்த்தி, முழங் காலிட்டு உட்கார்ந்திருக்கும் பாலின் - இந்த நினைவுகள் மாறி மாறி அவருடைய மூளையில் மிதக்கின்றன, பிறகு மறைகின்றன. இப்போது அவரால் எதையும் தெளிவாக நினைவு கூற முடியவில்லை. தர்காவின் பீரைக் கேட்கத் தோன்றுகிறது. "நான் மறுபடி அந்த இடத்துக்கு அந்தக் காலத்துக்குப் போக முடியாதா ?"

ஆனால் பேச முயற்சி செய்தால் அந்த ஒரு வார்த்தைதான் வாயி லிருந்து வருகிறது.

பறவைகள் பறந்துகொண் டிருந்தன. பின்பனிக் காலத்து வெயில் இறங்கிவிட்டது. தாழ் நிலத்தில் மழைநீர் முழங்கால் அளவுதான் நிற்கிறது. சின்னஞ்சிறு சாந்தா மீன்களும், பொய்ச்சா மீன்களும் பயிர்களுக்கிடையில் வாலையாட்டிக்கொண்டு பாசியைத் தின்கின்றன. இலேசான குளிரின் வருகை பிராணிகளுக்கு ஒரு கெட்ட செய்தி யைக் கொண்டுவருகிறது.

கோரைப் புற்களைத் தாண்டி, காடுகளைக் கடந்து, பல நதிகளையும் வாய்க்கால்களையும் கடந்து, ஃபோர்ட் வில்லியமில், அதன் மைதானத்தில், அதன் ஸ்தூபியின் உச்சியில் கொண்டைப் புறாக்கள் பறக்கின்றன. தர்கா மேடையின் மேல் உட்கார்ந்திருக்கும் மணீந்திர நாத் மணக்கண்ணால் போர்ட் வில்லியம் கோட்டையின் மேல் சூரியன் பிரகாசிப்பதைப் பார்க்கிறார். குளிர்காலத்து மைதானத்தில் பாலினும் சூரியனின் ஒளியும் பரந்திருப்பதை உணர்கிறார்.

சோனா உட்கார்ந்திருக்கவில்லை, தவழ்ந்து நகரவுமில்லை, அவன் தூங்கிப் போய்விட்டான். நாயும் நகராமல் உட்கார்ந்திருக்கிறது. அதற்கும் தூக்கம் வந்துவிட்டது போலும். அதன் கண்களும் மூடியி ருக்கின்றன. பின்பனிக் காலத்து வெயில் அவற்றின் மேல் விழுகிறது, மெல்லிய கோடாக. உருக்கிய தங்கம் போல் பளபளக்கிறது அது. மணீந்திரநாத் பூவரச மரத்துக் கிளைகளை விலக்கிக்கொண்டு ஒளி வரும் அந்த திசையை உற்றுப் பார்க்கிறார். அந்த ஒளி ஊற்றுப் பெருகும் இடத்தைத் தன் இரு கைகளாலும் பிடிக்க முயற்சி செய் கிறார். உள்ளே இருட்டு சுடுவதுபோலிருக்கிறது. அவர் சுவர்மேல் ஏறி வெளியே குதித்தார். பிறகு கைகளை நீட்டி ஒளியின் இருப்பிட மான சூரியனைப் பிடிக்க ஓடினார். அவர் ஓட ஓடச் சூரியனும் பின் வாங்குகிறான். கொஞ்சங் கொஞ்சமாக வயலுக்குள் இறங்கினார் அவர். அங்கு முழங்கால் வரை நீர். சூரியன் தேரிலேறி ஓடிப் போய்க்கொண் டிருக்கிறான். அவர் அந்த தேரில் ஏறிக்கொண்டு

குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொள்வார். பிறகு பாலின் தூங்கிக்கொண்டே கனவு காணும் இடத்துக்குச் சூரியனை இழுத்துக் கொண்டு போவார். அது முடியாவிட்டால் சூரியனை அரசமரத்துக் கிளையில் கட்டித் தொங்கவிட்டு விடுவார். பூமியின் கஷ்டத்தைக் களைவதற்கு, அதன் இருளைப் போக்குவதற்கு, அவர் சூரியனைப் பிடித்துக்கொண்டு வருவார். பூமியைக் களங்கத்திலிருந்து காப்பாற்று வதற்காக, தன் அன்பின் அடையாளத்தைப் பதிப்பதற்காக, அவர் வெறி பிடித்தவர்போல் தண்ணீரில் நீந்திக்கொண்டு போய் மேட்டு நிலத்திலுள்ள குளத்தங்கரைக்கு வந்து சேர்ந்தபோது சூரியன் ஓடியொளிபவன் போல் மரங்களுக்கு மறுபக்கம் இறங்கிப் போயிருந் தான். சூரியன் ஏரித் தண்ணீருக்குள் அமுங்கி மறைவதைப் பார்த்து அவர் இடிந்துபோய்விட்டார். தோல்வியடைந்த ஒரு போர்வீரன் துப்பாக்கிக் குழாயைக் கையால் பிடித்துக்கொண்டு நிற்கும் பாவனை யில் அவர் ஒரு மரத்தின் மேல் சாய்ந்துகொண்டு நின்ருர். நாற் புறமும் இரவில் சஞ்சரிக்கும் பூச்சிகளின் ஒலி. தூரத்திலிருந்து வரும் குழந்தையின் அழுகை ஒலி. அவருடைய மூளைக்குள் ஏதோ வலித்தது. எதையோ பின்னுல் விட்டு விட்டு வந்தாற்போன்ற உணர்வு. ஆனுல் 'எதை' என்பது மட்டும் நினைவுக்கு வரவில்லை. தூரத்திலிருந்து வந்த அழுகையொலி வயல்வெளி முழுதும் ஆயிரக் கணக்கான குழந்தைகள் உரத்த குரலில் கத்துகிருற் போன்ற பிரமையை உண்டாக்கியது. அவருக்கு ஒன்றும் நினைவுக்கு வர வில்லை. சேறு நிறைந்த பாதை வழியே அவர் வீடு திரும்ப வேண்டும். அவருக்கு நன்கு தெரிந்த பாதைதான் அது. நாற் புறமும் இருள் சூழ்ந்து வந்தது. குழந்தையின் அழுகையொலி அவரை வேதனைக்குள்ளாக்கியது.

அன்று சாயங்காலம் சோனு தனியே வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு விளையாடிக்கொண் டிருந்தான். மணீந்திரநாத் அவனைத் தூக்கி வைத்துக்கொண்டு கொஞ்சிக்கொண்டே தெருவில் உலாவப் போனுர். அவர் அவனைப் படகில் தூக்கி வைத்துக்கொண்டு, "சோனு, பார்! இது பூமி, இது வயல், இந்த நிலத்திலேதான் நீ பெரியவனுவே. இது உன்னுடை பிறந்த மண், இது தாயைவிட உசத்தி. இந்த மண்ணும் பூவும் புல்லும் சாமியைவிட உண்மை யானவை" என்றெல்லாம் சொல்லிக்கொண்டே படகை வெகுதூரம் கொண்டு போய்விட்டார்.

ஆனுல் இப்போது, அவர் எப்போது வீட்டைவிட்டுக் கிளம்பினுர், அப்போது அவருடன் யார் இருந்தார்கள்—ஒன்றுமே அவருக்கு நினைவு வரவில்லை.

நாயும் சோனுவும் சிறிய படகும் தர்காவிலேயே கிடந்தன. தர்காவின் மண்ணில் ஹாஸான்பீரின் ஸ்பரிசம் அவர்களைத் தழுவிக் கொண்டிருந்தது. சப்தபர்ணி மரக்கிளையில் பருந்துகளின் ஒலி.

மணீந்திரநாத் வீடு திரும்பியபோது எல்லாரும் பரபரப்புடன் இங்குமங்கும் அலைந்துகொண் டிருப்பதைக் கண்டார். சோனு எங்கே மாயமாக மறைந்து போய்விட்டான்? ஏன் தன மாமி கேவிக் கேவி அழுகிறாள். பைத்தியக்கார டாகுர் திரும்பி வந்துவிட்டார். ஆனால் சின்னப் படகைக் கொண்டு வரவில்லை. தனமாமி, பெரிய மாமி எல்லாருமே அழுதார்கள். கிழவர் வாசலில் கட்டை போல் நின்று கொண்டிருந்தார். சோனுவைக் காணும் என்பதும் எல்லாரும் அவனைத் தேடுகிறார்கள் என்றும் மணீந்திரநாத்துக்குப் புரிந்தது. இப்போது கொஞ்சங் கொஞ்சமாக அவருக்கு நடந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. ஒருவருக்கும் தெரியாமல் அவர் தண்ணீரில் இறங்கி நடக்கத் தொடங்கினார். அவர் போகப் போக, நாயின் ஓலம் அவர் காதில் தெளிவாக விழத் தொடங்கியது. அவர் சொல்லிக் கொண்டார். "ஹாஸான் பீர்! நீ இருக்கே, உன் தர்கா இருக்கு; என் சோனு உன் பொறுப்பிலே இருக்கான்!"

அவர் இருட்டில் சேற்றுப் பாதையில் ஓடினார். உடம்பில் வியர்வை வழிகிறது. உடம்பெல்லாம் சேறு. நாயின் ஓலம் வரும் திசையை நோக்கி அவர் முன்னேறுகிறார். அவரது கையில் விளக்கு இல்லை. தூரத்தில் ஓநாய்களின் ஊளை. ஒரு நாய் இவ்வளவு ஓநாய்களுக்கு ஈடு கொடுக்க முடியுமா?

மணீந்திரநாத் பைத்தியம் தெளிந்தவர் போல் உணர்ச்சி பெருகக் கத்தினார். "சோனு! சோனு! உன்னைக் காட்டிலே விட்டுவிட்டு வந்துட்டேனே!" அதற்கு மேல் ஒன்றும் சொல்லமுடியவில்லை அவரால். வெளிச்சம் இல்லை. இருந்தாலும் நட்சத்திரங்களின் ஒளியில் அவரால் வழியை அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது.

அவர் தர்காவை நெருங்கியதும் கத்தினார். கேத்சோரத்சாலா! திருப்பித் திருப்பி அதே வார்த்தையை உச்சரித்தார். ஆனால் நாய் அவருக்கருகில் வரவில்லை. அதன் குரல் ஏதோ ஒரு பள்ளத்திலிருந்து வருவது போல் கேட்கிறது. அவர் உள்ளே போனார். சோனு தவழ்ந்து நகர்ந்துகொண்டே அழுகிறான். பக்கத்திலேயே நாய் இருக்கிறது. அழுது அழுது குழந்தையின் தொண்டை அடைத்துவிட்டது. நடுநடுவே விக்கல் ஏற்படுகிறது. மணீந்திரநாத் அவசர அவசரமாகச் சோனுவைத் தூக்கிக் கொஞ்சினார். அவனுடைய உடம்பைத் தடவிப் பார்த்தார். நல்லவேளை அவனுக்கு ஆபத்து ஒன்றும் ஏற்படவில்லை. அவருக்கு அபார மகிழ்ச்சி. நன்றி பொங்க அவர் நாயை மீண்டும் மீண்டும் முத்தமிட்டார்.

சோனுவுடனும் நாயுடனும் அவர் சின்னப் படகில் உட்கார்ந்து கொண்டபோது சுவரின் மறுபுறத்திலிருந்து ஓநாய்கள் சேர்ந்து ஊளையிடுவது கேட்டது. அவர் ஆகாயத்தின், தர்காவின், கண்ணாடி களின் தெளிவைக் கலக்கிக்கொண்டு பெரிதாகச் சிரித்தார். நாயிடம், ''ஆகாயத்தைப் பார்!'' என்றார். சோனுவிடம் சொன்னார்: ''நட்சத்திரத்தைப் பார்! புல், பூ, பூச்சி, பறவைகளைப் பார்! உன் பிறந்த மண்ணைப் பார்!'' பிறகு தாமே வானத்தை நிமிர்ந்து பார்த்தார். அதில் வரையப்பட்டிருந்தன, சோனுவின் முகமும், பாலினின் கண்களும்.

நாய் படகின் மேல்தட்டில் நின்றுகொண்டு மௌனமாக வாலை ஆட்டியது.

சிறிது காலத்துக்குப் பிறகு...

சோனு தர்மூஜ் வயலில் உட்கார்ந்துகொண்டு முழுமனசுடன் மண்ணைத் தோண்டிக்கொண் டிருந்தான். மணற்பாங்கான இடமாத லால் நிறைய மண்ணைத் தோண்டிவிட்டான். ஸோஹ்லி பாலி ஆற்றின் படுகை அப்போது உலர்ந்திருந்தது. அதைக் கடந்து வந்தால் ஆற்று நீர் மெல்லிய போர்வை போல் காற்றில் சலசலத் தது. தெளிந்த நீரில் சின்னஞ்சிறு மாலினி மீன்கள் நீந்தித் திரிகின்றன. சோனு ஒரு சிறிய தேங்காய்ச் சிரட்டையில் ஆற்றுத் தண்ணீர் கொண்டுவந்து, தான் தோண்டியிருந்த பள்ளத்தில் ஊற்றி னான். ஆற்றில் தண்ணீர் முழங்காலளவுதான். மாடுகளும் வண்டி களும் ஆற்றைக் கடக்கமுடியும். சோனு தண்ணீரில் இறங்கி ஒரு மாலினி மீனைப் பிடித்தான். அதைக் கையில் எடுத்துக்கொண்டு வந்து பள்ளத்துத் தண்ணீரில் விட்டான். பிறகு தர்மூஜ் இலைகளுக்குள் ளிருந்து தலையை மட்டும் முயலைப் போல் வெளியே நீட்டிப் பார்த் தான். படகின் கூரைக்குக் கீழே உட்கார்ந்துகொண்டு ஈசம் புகை பிடித்துக்கொண் டிருப்பதைக் கவனித்தான்.

சோனுவையும் தர்மூஜ் வயலையும் கவனித்துக்கொண் டிருந்தான் ஈசம். சோனு தன்னைத் தர்மூஜ் இலைகளுக்குப் பின்னால் இன்னும் நன்றாக மறைத்துக்கொண்டான். அவனுக்கு மிகச் சிறிய உடம்பு. ஆற்றுமணலைப் போன்ற நிறம்; வெறுங்கால்கள் வசந்தகாலம். வசந்தகாலக் காற்று வீசுகிறது. காற்று பலமாக வீசுவதால் தர்மூஜ் இலைகள் விலகுகின்றன. விலகும்போது சோனுவின் உடம்பு

தெளிவாகத் தெரிகிறது. இலைகளின் நடுவே சோனு ஏதோ கவனமாக உட்கார்ந்திருப்பதைக் கண்டு ஈசமுக்குக் கவலை ஏற்பட்டது. "சோனு தர்முஜ் கொடிகளைப் பிடுங்கிக்கிட்டிருக்காரே?" அவன் மண்டியிட்டு நகர்ந்து படகுக் கூண்டுக்கு வெளியே வந்து, "சோனுபாபு, எங்கே இருக்கீங்க?" என்று அழைத்தான்.

சோனு அவசர அவசரமாகத் தன்னை இலைகளுக்குப் பின்னால் இன்னும் மறைத்துக்கொண்டான். ஒன்று, அவன் தனியாக வீட்டைவிட்டு வெளியுலகத்துக்கு வந்திருக்கிறான். இரண்டாவதாக, மணலில் பள்ளம் தோண்டி அதில் தண்ணீர் நிரப்பி ஒரு குளம் தயார் செய்திருக்கிறான். குளம் வெட்டும்போது இரண்டு தர்முஜ் கொடிகள் வேரோடு வந்துவிட்டன. இந்தக் குற்ற உணர்வு அவனுள்ளே வேலை செய்கிறது. மறுபடியும் இலைகளை விலக்கிக் கொண்டு தலையை நீட்டிப் பார்த்த அவன், ஈசம் தன்னைத் தேடிக் கொண்டு அந்தப் பக்கம் வருவதைப் பார்த்தான். அவன் உடனே தரையோடு தரையாகக் குனிந்துகொண்டு தவழ்ந்தவாறே நகர்ந்து போக ஆரம்பித்தான். ஈசம் தன்னை நெருங்கி வரவர அவன் கொஞ்சங் கொஞ்சமாக நகர்ந்துபோய்ச் சோளக் கொல்லையை அடைந்து அதற்குள் ஒளிந்துகொண்டுவிட்டான்.

ஈசம், சோனுவை முன்பு பார்த்த இடம் இப்போது காலி. இரண்டு தர்முஜ் கொடிகள் பிடுங்கப்பட்டுக் கிடந்தன. ஒரு பள்ளத்தில் கொஞ்சம் தண்ணீரில் ஒரு மாலினி மீன் மிதந்து திரிந்தது. தண்ணீர் கொஞ்சங் கொஞ்சமாக வற்றிக்கொண் டிருந்தது. மீன் ஈசமைக் கண்டதும் கலங்கிய தண்ணீருக்குள் ஒளிந்துகொண்டது. ஈசம் மறுபடி கூப்பிட்டான்: "சோனு எசமான்! எங்கே போயிட்டீங்க?"

ஆற்றின் படுகை மேடாகிக் கிராமத்துடன் சேரும் இடத்தில் சோள வயல்கள், கோதுமை வயல்கள். இப்போது அறுவடைக் காலம். சில மைனுக்கள் தானியங்களைக் கொத்திக்கொண்டு பறக்கின்றன. ஈசம் மறுபடியும் கத்தினான்: "சோனு பாபு, எங்கே போயிட்டீங்க? உங்களுக்கு ஈடுகொடுக்க முடியுமா என்னாலே? வாங்க. வந்தீங்கன்னு உங்களைத் தோளிலே வச்சுக்கிட்டு அக்கரைக்குக் கூட்டிக்கிட்டுப் போவேன்."

அவன் சொல்வது காதில் விழுந்தும் சோனு அசையவில்லை. ஈசமோடு ஓடிப் பிடித்து விளையாடும் ஆசை அவனுக்கு. அவன் சோளக் கொல்லைக்குள் இன்னும் மறைவாக உட்கார்ந்தான். உட்கார்ந்துகொண்டே அங்கிருந்த புல்லைப் பிடுங்கினான். அப்போது சோளப் பயிர் அசைந்தது. பயிர் அசைவதைப் பார்த்த ஈசம் அங்கு வேகமாக வந்து சோனுவைப் பிடித்துக்கொண்டு சொன்னான்: "இப்போ எங்கே போவீங்க, எசமான்?"

சோனு அவனுடைய பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் தன் கைகால்களை உதறிக்கொண்டு திமிறினான். அவன் போட்ட கூச்சலில் வயல்களிலிருந்த மைனாக்களெல்லாம் மாலை வெயிலில் பறந்தோடின. அவை பறந்துபோய் ஆற்றுப் படுகையில் இறங்கின.

"நான் வரமாட்டேன். என்னை விட்டுடு!" என்று சோனு கத்தினான்.

"உங்களை ஏதாவது சொன்னேனா? வாங்க, படகிலே உட்கார்ந்து கிட்டு மானத்தைப் பார்க்கலாம்" என்று சொல்லிக்கொண்டு ஈசம் சோனுவைத் தோளில் போட்டுக்கொண்டு நடந்தான்.

சோனுவுக்கு இப்போது தோல்வியடைந்த வருத்தம் இல்லை. அவன் ஈசமின் தோளில் உட்கார்ந்துகொண்டு கால்களை ஆட்டினான். ஸோனாலி பாலி ஆற்றின் நீர், சில படகுகள், ஒரு சில கிராமவாசிகள். வசந்த காலத்துக் காற்று பயிர்களுக்குள் நுழைந்து மறைகிறது. ஆற்றங்கரையிலிருந்து பார்த்தால் பார்வை செல்லும் தூரம் வரை ஒரே சோள, கோதுமைக் கதிர்கள். சில சிவப்பு அலரிச் செடிகள். அவற்றின் பூக்கள் தரையில் ஜமுக்காளத்தைப் போல் பரவலாக விழுந்திருக்கின்றன.

சோனு கேட்டான்: "ராத்திரி உங்களுக்குப் பயமா இருக்காதா?"

"இல்லே எசமான்! அல்லாதான் துணை. பயமாயிருந்தா அல்லா பேரைச் சொல்லுவேன்."

"ராப்பிசாசு தூக்கிட்டுப் போயிட்டா?"

"என்னைத் தூக்கிக்கிட்டுப் போகாது."

"தூக்கிக்கிட்டுப் போயிடும், பாருங்க! உங்களுக்குத் தெரியா மலேயே தூக்கிக்கிட்டுப் போயிடும்."

"ஊஹூம்! என்னைத் தூக்கிக்கிட்டுப் போகாது! ராப்பிசாசு என்னோட சிநேகிதன்."

"பின்னே அம்மா ஏன் சொல்றுங்க, 'சோனு, நீ எந்த இடத்துக்கும் தனியாப் போகாதே, ராப்பிசாசு உன்னைத் தூக்கிட்டுப் போயிடும்'னு? அது வந்து அம்மா மாதிரி வேஷம் போட்டுக்கிட்டு வருமாம், உன் மாதிரி வருமாம். அப்படியா?"

"ஆமாம்."

"அப்போ நான் ஒரு இடத்துக்கும் தனியாகப் போகமாட்டேன்."

"போக வேண்டாம்."

இப்போது சோனு ஈசமின் முகத்தைப் பார்த்தான். நாற்புறமும் வயல்கள். பயமுண்டாக்கும் கதைகள் அவன் நினைவுக்கு வந்தன. கதிர்கள் அவனுடைய உடம்பில் உரசின. உரசிய இடத்தில் அரிக்கின்றது. அவன் ஈசமின் தோளிலிருந்து இறங்கித் தர்மூஜ் வயலுக்குள் ஓடியபடி சொன்னான்: "நான் தனியா வீட்டுக்குப்

போகமாட்டேன். உங்களோடேயே வரேன், ஈசம் அண்ணே.''

பிறகு அவன் தன் அன்புக்குரிய மீனைத் தேடினான். அவன் ஈசமிடம், ''நீங்க படகிலே உட்காருங்க, இதோ வரேன்'' என்றான்.

அவன் ஒரு தர்மூஜ் பழத்தின்மேல் உட்கார்ந்துகொண்டு மீனைத் தேடிக் கண்டுபிடித்தான். அது தண்ணீருக்குள் கண்ணாமூச்சி விளையாடியது. அவன் கிராமத்துப் பக்கம் பார்த்தான். பொழுது சாய்ந்துகொண் டிருந்தது. தர்மூஜ் இலைகளின் இடுக்குகள் வழியே ஒளிக்கதிர்கள் நீர்க்கோடுகள் போல் கீழே இறங்குகின்றன.

ஒரு பெரிய தர்மூஜ் பழம் இலைகளுக்கு மேலே நீட்டிக்கொண் டிருந்தது. அவன் வெகுநேரம் சூரிய ஒளி ஆற்றுநீரின் மேல் விழுவதைப் பார்த்துக்கொண் டிருந்தான். தர்மூஜ் பழத்தின் மேல் உட்கார்ந்தவாறே அவன் வானத்தில் மூலைக்கு மூலை மிதந்த மேகங்களையும், கிராமத்தை நோக்கிப் பறந்துகொண் டிருந்த பறவைகளையும் பார்த்தான். அவனுக்கு எழுந்திருக்கவே மனமில்லை. ஈசம் படகுக்குள் இருந்துகொண்டு அவனைக் கூப்பிட்டுக்கொண்டே இருந்தான். புகையிலை நாற்றம் காற்றில் வந்தது. கறுப்பு வாத்துக்களின் ஒலி கேட்டது.

சோனா எழுந்திருக்கவில்லை. அவனது முழுக்கவனமும் ஆற்றுமணல் மேலே இருந்தது. மிகவும் ஆளரவமற்ற பிரதேசம். அவன் வயலுக்கு நடுவில் ஒரு கரடியைப் பார்த்துவிட்டான். அவன் வேகமாகப் படகை நோக்கி ஓடி வரும்போது நினைவுக்கு வந்தது, அவன் பார்த்த கரடியின் முகம் ஏதோ ஒரு படப் புத்தகத்தில் பார்த்தது போன்று. ஆகையால் அவன் பயப்படக் காரணமே இல்லை. அவன் படகில் நுழைந்து சொன்னான்: ''ராப்பிசாசு என் சிநேகிதனுக்கும்! எனக்கு யார் கிட்டேயும் பயம் இல்லே!''

அவன் படகுக்குள் சற்று நேரம் குதித்து விளையாடினான். ஓர் ஓரத்தில் ஒரு சிறிய சட்டியில் ஈசம் ஹுக்கா குடிப்பதற்காக நெருப்பை வைத்திருந்தான். அதிலிருந்து புகை வந்துகொண் டிருந்தது.

''வெளியே வாங்க! ஆகாசத்துக்குக் கீழே எவ்வளவு சுகமாயிருக்கு, பாருங்க!'' என்று ஈசம் சொன்னான்.

ஈசம் கால்களை நீட்டிக்கொண்டு தர்மூஜ் சாப்பிட உட்கார்ந்தான். அவனுடைய மடியில் உட்கார்ந்துகொண்டு, ''என்னைத் தோளிலே தூக்கிக்கிட்டு அக்கரைக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன்னீங்களே, கூட்டிக்கிட்டுப் போகல்லியே!'' என்று கேட்டான் சோனா.

ஆற்றைக் கடந்து போக அவனுக்கு வெகு நாட்களாக ஆசை. ஈசம் அவனுடைய பேச்சைக் கேட்கவில்லையென்று அவனுக்குக் கோபம். தூரத்தில் ஆற்று நீர் மெல்லிய போர்வையைப் போல்

சலசலத்தது. முகத் திரையணிந்த இரண்டு பெண்கள் ஆற்றுப் படுகையில் நடந்து வந்தார்கள். சோனுவுக்கு நிஜமாகப் பயம் பிடித்துவிட்டது. அவன் ஈசமோடு ஒட்டிக்கொண்டு உட்கார்ந் தான். ஈசம் சொல்லிய பிசாசுக் கதை அவனுக்கு நினைவு வந்தது: 'பிசாசுக்கு இரண்டு கண்களும் வெள்ளை. வேறு அவயவமே இல்லை.'

இரவு வேளைகளில் அம்மா சொல்லும் கதைகளில் வரும் ராக்ஷசர்கள் ஆற்று மணலில் மெதுவாக நடந்து வருவதுபோல் இருந் தது. அவன் மிகுந்த பணிவுடன் சொன்னான்: "ஈசம் அண்ணே, நான் அம்மா கிட்டேப் போறேன்."

"போகலாம். என் கூடப் போகலாம்."

"எனக்கு இப்பவே போகணும்."

இரண்டு பெண்கள், முகத்திரை அணிந்தவர்கள் நடந்து வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் புது வீட்டுப் பெரிய மியான். அவர்கள் இருவரும் மியானுடைய பீபிகள். ஈசம் கையைத் தூக்கிக் கூப்பிட்டான்: "பெரிய மியான்! பெரிய மியா... ஆ ஆ...ன்!" பெரிய மியானை அணுகுவதற்காக அவன் சோனுவைத் தோளில் தூக்கிக்கொண்டு தர்முஜ் வயலைக் கடந்தான்.

ஈசம் பெரிய மியானை அணுகுவதைப் பார்த்துச் சோனுவுக்குப் பயமாயிருந்தது. "நான் அம்மா கிட்டே போகணும்! நான் அம்மா கிட்டே போகணும்!" என்றான் சோனு.

ஈசமின் குரலைக் கேட்டுக் கண்களைத் தவிர வேறு அவயவமே இல்லாத அவ்விரண்டு கறுப்பு உருவங்களும் பொம்மைகளைப் போல் அசையாமல் நின்றன. சோனு மறுபடியும் சொன்னான்: "எனக்குப் பயமா இருக்கு. நான் வீட்டுக்குப் போகணும்."

ஈசம் சொன்னான்: "ஏ பெரிய மியான், கொஞ்சம் நில்லு! உன் பீபிகளோட மூஞ்சியைச் சின்ன பாபுவுக்குக் காண்பிச்சுட்டுப் போ! அவங்க முகத்திரை போட்டிருக்கறதைப் பார்த்துச் சின்ன பாபு பயப்படறார்."

பெரிய மியானுக்கு அவலட்சணமான முகம், அம்மைத் தழும்புகள் நிறைந்த முகம். ஒரு கண் வெளுத்துப்போய் ஒளியின்றி இருக் கிறது.

சோனு இப்போது ஈசமைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "நான் இனிமே துஷ்டத்தனம் பண்ணமாட்டேன். என்னை விட்டுடுங்கோ!" என்றான்.

சோனுவின் பேச்சைக் கேட்டுப் பெரிய மியானுக்கு வந்த சிரிப்பை அடக்கிக்கொள்ள முடியவில்லை. "இது தன பாபுவின் பிள்ளையா?" என்று கேட்டான்.

"ஆமாம்." ஈசம் சிரித்தான். பிறகு சோனுவிடம், "ஏன் பயப்பட றீங்க? இவன் அந்தக் காலத்திலே நம்ம வீட்டிலே வேலை பார்த்தவன்தான்" என்றான்.

இப்போது ஸோனுலி பாலி நதியில் அஸ்தமிக்கும் சூரியனின் ஒளி தங்க அன்னம் போல் பிரகாசித்தது. அவயவம் இல்லாத அந்த இரண்டு கரிய உருவங்களும் மௌனமாக, அசையாமல் நின்றன. ஒரு மந்திரவாதி தன் மந்திர பலத்தால் இரண்டு ஆவிகளைக் கட்டுப் படுத்தி அவற்றைக் கொண்டு விளையாட்டுக் காட்டுவது போல் தோன்றியது. சர்க்கஸில் சிங்கம் வரும்போது உண்டாகுமே அதுமாதிரி பயம் ஏற்பட்டது சோனுவுக்கு. ரோமங்கள் குத்திட்டு நிற்க அவன் ஈசமைக் கட்டிக்கொண்டான். கரிய உருவங்கள் இரண்டும் அவனை அணுகின.

"சோனுபாபு எப்படிப் பயந்து போயிட்டார் பாரு! இப்போ உன் பீபிகளைக் காட்டி அவரோட பயத்தைப் போக்கு" என்றான் ஈசம்.

நாற்புறமும் சோள வயல்கள். கோதுமை வயல்கள். வயலோரங் களில் மஞ்சித்தி மரங்கள். அவற்றில் நீலகண்ட பறவைகளைப் போல் மைனாக்கள் தங்கியிருக்கின்றன. அவற்றின் 'கிசிர் மிசிர்' ஒலி. தூரத்தில் பசுவின் குரல் கேட்கிறது. சூரிய ஒளி இன்னும் தங்க அன்னமாகக் காண்கிறது. வியப்பில் மயங்கிய இயற்கையின் மௌனத்தினிடையே பெரிய மியான் தன் பீபிகளின் முகத் திரைகளைத் தூக்கினான். அவர்களுடைய உடல்வாகு ஒற்றை நாடி, அழகான முகங்கள். துர்க்கையைப் போல் அவ்வளவு அழகு. மூக்கில் மூக்குத்தி. கால்களில் கொலுசுகள் 'ஜல் ஜல்' என்று ஒலிக் கின்றன. இப்போது சோனுவின் கண்கள் இருண்ட இரவில் படகின் விளக்கைப் போல, வியப்பால் ஜொலிக்கின்றன.

சிறிய பீபி சொன்னாள்: "வாங்க பாபு, என்கிட்டே வாங்க!" அவள் சோனுவை ஈசமிடமிருந்து வாங்கித் தன் இடுப்பில் வைத்துக்கொண் டாள். அவனுடைய முகத்துக்கருகே தன் முகத்தை வைத்துக் கொண்டு, "என்ன பாபு, அப்படிப் பார்க்கறீங்க முழிச்சு முழிச்சு?" என்று கேட்டாள்.

சோனுவால் பதில் பேசமுடியவில்லை. அவன் சிறிய பீபியிடமிருந்து முகத்தைத் திருப்பிக்கொண்டு ஈசமைப் பார்த்தான். ஈசம் பெரிய மியானுடன் பயிர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான்.

பெரிய பீபி, "பாபு, என் கூட வந்துடுங்க" என்றாள்.

சோனு மறுபடி சிறிய பீபி பக்கம் திரும்பவே, அவள், "என்னை உங்களுக்குப் பிடிச்சுப் போச்சா? பாருங்க பெரிய மியான்! சோனு

பாபு என்னைப் பார்த்துக் கண் சிமிட்டரூர்!'' என்று சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரித்தாள்.

அவளுடைய சிரிப்பைக் கேட்டு ஈசம் சொன்னுன்: ''உன் சிரிப்பு முந்தி மாதிரிதான் இருக்கு.'' பிறகு ஏதோ நினைவுக்கு வந்தவனுக, ''ஜாபிதா, உன் அம்மாவோட உடம்பு எப்படி இருக்கு?'' என்று விசாரித்தான்.

''நல்லாத்தான் இருக்கு, அண்ணே!''

சிறிய பீபி சோனுவின் மோவாயைப் பிடித்துக்கொண்டு, ''பாபு, என்னை நிக்காஹ் பண்ணிக்கனுமின்ஞ நீண்ட தாடி வெச்சுக்கணும். தாடியில்லேன்னு என்னைத் திருப்திபடுத்த முடியாது. உங்களுக்குப் பெரிய பெரிய கண் இருக்கு, மூக்கு, முஞ்சியெல்லாம் அளகாயிருக்கு. ஆத்துமணல் மாதிரி நிறம் இருக்கு ரொம்ப அளகாயிருக்கீங்க. ஆனு தாடி இல்லையே கன்னத்துலே!'' என்று சொல்லிவிட்டு அவள் ஓரக்கண்ணுல் பெரிய மியானைப் பார்த்தாள்.

இதைக் கேட்டு ஜாக்கிரதையாகிவிட்டான் பெரிய மியான். அவனுக்குக் குருட்டுக் கண். சிறிய பீபியின் கண்கள் வைரமாக ஜொலித்தன. அவள் சிரித்துக்கொண்டே, ''பயப்பட வேண்டாம்'' என்ருள். பிறகு சோனுவை மார்போடு கட்டிக்கொண்டு, 'அல்லா, சோனு பாபு மாதிரி எனக்கு ஒரு புள்ளே கொடு' என்று வேண்டிக் கொண்டாள்.

பெரிய மியான், ''அப்போ வரேன் ஈசம் அண்ணே! நேரம் ஆயிடுச்சு. வீடு போய்ச் சேர ராவாயிடும். நேரங் கிடைச்சா வீட்டுக்கு வாயேன்'' என்ருன்.

''இந்தா அண்ணே, பாபுவை எடுத்துக்குங்க!'' என்று சொல்லிச் சிறிய பீபி சோனுவைக் கீழே இறக்கிவிட்டுவிட்டுத் தன் முகத் திரையை அணிந்துகொண்டாள். பிறகு அவர்கள் புறப்பட்டு ஆற்றைக் கடந்து மறுகரைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். முன்னுல் பெரிய மியான், பின்னுல் சிறிய பீபியும் பெரிய பீபியும், அவர்களுக்குப் பின்னுல் அவர்களுடைய நிழல்.

சோனு ஈசமின் கையைப் பிடித்துக்கொண்டு வெகுநேரம் அங்கேயே நின்ருன். இரண்டு பீபிக்களின் நிழல் தண்ணீரில் மிதந்தது. அவர்கள் அக்கரையில் நடந்து வெகுதூரம் போய் விட்டார்கள். சோனுவுக்கு வருத்தமாயிருந்தது. பெரிய பெரிய கண்கள், துர்க்கையின் முகம் போன்ற அழகான முகம், மூக்கில் மூக்குத்தி. கால்களிலிருந்த கொலுசுகளின் 'ஜல் ஜல்' சப்தம் இன்னும் அவன் காதுகளில் ஒலிக்கிறது. பிறகு படத்தில் பார்த்த அந்தக் கரடி அவன் கண் முன்னே தோன்றியது. அவன் ஈசமிடம்

''எனக்கு ஒரு துப்பாக்கி வாங்கித் தரேன்னு அம்மா சொல்லி யிருக்கா'' என்ருன்.

ஈசம் ஏதோ நினைத்துக் கொண்டிருந்தான். பெரிய பீபியின் இளமைக் காலமோ அல்லது வேருெரு சிறு நிகிழ்ச்சியோ சிறிது நேரத்துக்கு அவனைத் தன்னை மறக்கச் செய்தன. அல்லது இப்படியும் இருக்கலாம். சூரியன் அஸ்தமித்துக்கொண் டிருந்தான். பசுமாடு களின் முக்காரம் இப்போது கேட்கவில்லை, வயல்களிலிருந்து புற் கட்டுகளை எடுத்துக்கொண்டு வயல் வேலைக்காரர்கள் திரும்பு கிருர்கள். ஆகவே, வீடு திரும்பும் நேரமாகிவிட்டதால் அவனுக்குத் தன் நொண்டி பீபியின் நினைவு வந்திருக்கலாம். பெரிய மியான் அதிருஷ்டக்காரன், இரண்டு பீபிகளை வைத்துக்கொண்டு குடித் தனம் நடத்துகிருன்.

''துப்பாக்கியாலே ஒரு கரடியைச் சுடப்போகிறேன்'' என்ருன் சோனு.

ஈசம் பதில் சொல்லவில்லை. அவன் சோனுவின் கையைப் பிடித்துக் கொண்டு தர்மூஜ் வயலுக்குள் நுழைந்தான். ஒரு சில பெரிய தர்மூஜ் பழங்களைப் பறித்துப் படகுக்குள் வைத்துவிட்டுப் படலையை மூடி விட்டு, ''வாங்க, போகலாம்!'' என்ருன்.

சோனு பரணிலிருந்து இறங்கியபடி, ''என்னைத் தோளிலே வச்சுத் தூக்கிக்கிண்டு அக்கரைக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன்னீங்களே'' என்று கேட்டான்.

''இன்னிக்கு வேணும். பொழுது சாஞ்சிடுச்சு. தனமாமி தேடுவாங்க. சீக்கிரம் வாங்க, போகலாம்.''

தர்மூஜ் வயலைக் கடக்கும்போது சோனுவுக்கு ஞாபகம் வந்தது, அவனுடைய மாலினி மீன் தனியாக இருக்கிறது என்று. ''கொஞ்சம் இருங்க, நான் மீனைக் கொண்டுபோய் ஆத்துத் தண்ணியிலே விட்டுட்டு வரேன்'' என்ருன் சோனு.

சோனு குதித்துக்கொண்டே தர்மூஜ் இலைகளையும் பழங்களையும் தாண்டிக்கொண்டு ஓடினுன். எவ்வளவு தேடியும் தான் பள்ளந் தோண்டிய இடத்தைக் காணுமல் நிராசை மேலிட நின்ருன். ஈசம் அவனைத் திரும்பத் திரும்பக் கூப்பிட்டும் அவன் பதில் சொல்ல வில்லை. ஈசம் அவன் அருகில் வந்தபோது, ''மாலினி மீனைக் காணேம்!'' என்ருன் சோனு.

ஈசம் சோனுவின் கையைப் பிடித்துப் பள்ளத்துக் கருகில் கொண்டு சென்ருன். பள்ளத்தில் இப்போது தண்ணீர் இல்லை. மீன் பள்ளத்து மணலில் தலை குப்புற விழுந்து கிடந்தது. சோனு பள்ளத்துக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். தன் உள்ளங்கையில் மீனை வைத்து அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

அது இறந்துவிட்டது என்று உணர்ந்ததும் வருத்தம் மேலிட நாற்புறமும் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். எழுந்திருக்கப் பிடிக்கவில்லை அவனுக்கு. மீனின் கண் அவனைத் துன்புறுத் தியது. பெரிய மியானின் சிறிய பீபியை நினைவுறுத்தியது, மீனின் கண். அவன் மெதுவாக மீனை மணலில் கிடத்தினுன். பக்கத்தி லிருந்த மணலை எடுத்து மீனை நன்ருக மூடினுன். அந்த இடத்தில் ஒரு கூரை போலத் தர்மூஜ் இலையொன்றைப் பறித்து ஊன்றி வைத்தான். பிறகு அந்தச் சிறிய மீனுக்காகக் கடவுளிடம் பிரார்த்தனை செய்தான். அப்போது பெரிய மியானின் வெண்மை யான, பொட்டைக் கண் பயிர்களின் இடுக்கு வழியே அவனைப் பார்ப்பதுபோல் இருந்தது. 'ஆங் ஊங்... மனிசன் வாசனை அடிக் குது!' என்று அது சொல்வது போலிருந்தது.

அந்தப் பொட்டைக் கண், முகத்தில் தாடியுடன், சப்தம் செய் யாமல் அவனை நெருங்குகிறது. அவன் எல்லாவற்றையும் விட்டு விட்டு, ஈசமையும் விட்டுவிட்டு மணல் வெளியைக் கடந்து ஓடத் தொடங்கினுன். ராப் பிசாசு அவனைப் பிடித்துக்கொண் டிருக் கிறது. அதுதான் அவனை இந்த ஆளில்லா இடத்துக்கு அழைத்துக் கொண்டு வந்திருக்கிறது. ஈசமைக் கூட ஒரு கன்றுக்குட்டி என்று நினைத்துவிட்டான் சோனு. அவன் ஓடினுன். ஆனுல் வெகுதூரம் ஓட முடியவில்லை, அவனுல். வயல் வரப்புகளின் மேல் ஓடும் போது அவனுக்கு வழி தவறிவிட்டது. பயத்தால் அவனுடைய தொண்டை உலர்ந்துவிட்டது. உரத்த குரலில் அழக்கூட முடிய வில்லை அவனுல். பயத்தால் வெளிறிப் போனுன் அவன். நாற் புறமும் தானியக் கதிர்கள் அவனை மறைத்துவிட்டன.

அவன் பயத்தால் கண்களை மூடிக்கொண்டான். வயல்களில் இருள் சூழ்ந்துவிட்டது. ஓநாய்கள் இங்குமங்கும் ஓலமிட ஆரம் பித்தன. ஈசம் சோனுவைத் தன் மார்புடன் அணைத்துக்கொண்டு, "எசமான், என்னை விட்டுட்டு எங்கே ஓடினீங்க?" என்று கேட்டான்.

இப்போது சோனு கண்களைத் திறந்தான். அவன் முன்னே இருந்தது, அவனுக்கு மிகவும் பழக்கமான இடம். அவனுக்கு மிகவும் பிடித்தமான அந்த மகிழமர மரத்தடியில் ஏராளமான மகிழம்பூக்களின் மணம். சோனு பயம் தெளிந்தவனுக, "நான் ஓர் இடத்துக்கும் போகமாட்டேன், ஈசம் அண்ணே! உங்களை விட்டுட்டு எந்த இடத்துக்கும் போகமாட்டேன்" என்ருன்.

சில வருடங்கள் சென்றுவிட்டன.

சைத்ர மாதத்தின் நடுப்பகுதி. வயல்களிலிருந்து தானியங்கள் அறுவடையாகி வீட்டுக்கு வந்துவிட்டன. காலியாகக் கிடந்த வயல்களில் வெயில் காய்ந்தது. காய்ந்த தரையில் கலப்பைக்கு வேலையில்லை. விவசாயத்தைப் பொறுத்தவரையில் இது ஒரு மலட்டுப் பருவம். கண்ணுக்கெட்டிய தூரம் வரை எங்கும் வெண்ணிற மங்கல். உலர்ந்த மண் கல்லாக இறுகி மேடாகியிருக்கிறது. பறவைகளையே காணோம். வெயிலில் காய்ந்து பொசுங்கி விட்டனவோ என்னவோ? இப்போது பார்த்தால், 'இந்த வயல்களிலும் பொன்னுக விளையும், இந்த வயல்களிலும் தண்ணீர் வெள்ளமாக வந்து நிரம்பும்' என்று நம்ப முடியாது. புதர்கள் கூடப் பொட்டலாகி விட்டன. ஏழைகள் கீழே விழுந்து கிடக்கும் சருகுகளைச் சேகரிக்கிறார்கள். முஸ்லீம் குடியானவப் பெண்கள் சருகுகளைச் சேகரிக்கும்போது வானத்தை அடிக்கடி பார்த்துக் கொள்கிறார்கள்.

ஜோட்டனும் ஆகாசத்தைப் பார்த்தாள். அவளுக்கு இது கஷ்ட காலம். பக்கிரி சாயபு ஐந்து வருடங்களுக்கு முன் அவள் வீட்டில் உணவு சாப்பிட்டுவிட்டுப் போனவர்தாம், அப்புறம் வரவே இல்லை. ஆபேத் அலி ஆகாசத்தைப் பார்த்தான். காரணம், விவசாயமும் இல்லை, படகு வேலையும் இல்லை. கொய்னாப் படகில் வேலை குளிர்காலத்திலேயே நின்றுபோய்விட்டது. மழை பெய்தால் தரையிலிருந்து கீரைச் செடிகள் கிளம்பும். அதற்காக ஆகாசத்தைப் பார்த்தாள் ஜோட்டன். இந்தப் பிராந்தியத்தில் ஆகாசத்தைப் பார்க்கும் வழக்கம் எல்லாருக்கும் உண்டு. தரையில் இளம்புல், செடிகளில் தளிர்கள், மழையால் நனையும் மண்ணின் மணம். ஆகா, ஆற்றில் தண்ணீர் வந்துவிட்டால் புருசன் வீட்டுக்குப் போகலாம்.

ஜோட்டன் ஆபேத் அலியிடம், "மழைக்காலம் வந்தப்பறம் என்னைப் புக்ககத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போ" என்று கூறினாள்.

"உன் புக்ககம் எங்கே இருக்கிறது?"

"ஏன், என் புள்ளைகள் இல்லியா?"

"எல்லாரும் இருக்காங்க. ஆனா உன்னைப்பத்தி ஒருத்தனும் கவலைப்படறதில்லே!"

ஆபேத் அலியின் இந்தச் சங்கடந் தரும் பேச்சுக்கு ஜோட்டன் பதில் சொல்லவில்லை.

முந்தைய நாள் ஆபேத் அலிக்கு வேலை ஒன்றும் கிடைக்க

வில்லை. இன்று நாள் முழுதும் இந்துபாடாவில் சுற்றிச் சுற்றி வந்தும் ஒரு வேலையும் கிடைக்கவில்லை.

சைத்ரமாதம், எங்கும் வறட்சி. ஆபேத் அலி கௌர் சர்க்காரின் வீட்டுக்குப் புதுக் கூரை வேய்ந்து கொடுத்தான். ஏதோ கொஞ்சம் கூலி கிடைக்கும். அவன் கூலியைப் பற்றிப் பேசவில்லை. வேலைக்கு நிறைய ஆட்கள் இருந்தார்கள். முசல்மான் பாடாவில் ஜீவனோ பாயத்துக்கு வழியில்லை. மாடு கன்று வைத்திருந்தவர்கள் பாலை விற்று ஒரு வேளை சாதமும், இன்னொரு வேளை வேகவைத்த சர்க்கரை வள்ளிக்கிழங்குமாகச் சாப்பிட்டார்கள். ஆபேத்அலி யிடம் மாடும் இல்லை, நிலமும் இல்லை. உழைக்க உடல் மட்டுமே இருந்தது. உடலை விற்றாலும் காசு கிடைக்கவில்லை. நாள் முழுதும் உழைத்தபின் கூலி விஷயமாகக் கௌர் சர்க்காருடன் தகராறு ஏற்பட்டுவிட்டது. அசிங்கமாக அவனைத் திட்டிவிட்டு வந்து விட்டான் ஆபேத் அலி.

அவனுடைய பீபி ஜாலாலி வீட்டில் வயிற்றைத் தரையில் அமுத்திக் கொண்டு படுத்திருக்கிறாள். நாள் முழுதும் வயிற்றில் எதுவும் விழவில்லை. ஜப்பர் பாட்டுக் கச்சேரி கேட்க ஆஸ்மாந்திக்குப் போயிருக்கிறான்.

ஜாலாலி வயிற்றைத் தரையிலிருந்து உயர்த்தாமலேயே, ''ஒன்றும் கிடைக்கலியா ?'' என்று கேட்டாள்.

ஆபேத் அலி பதில் சொல்லவில்லை. அவன் தன்னிடமிருந்த மூட்டையை எடுத்துத் தரையில் தூக்கி எறிந்தான். எதிரில் ஜோட்டனின் குடிசை. அதன் படல் மூடியிருந்தது. மூட்டையைப் பார்த்ததும் ஜாலாலி வேகமாக எழுந்து, அவிழ்ந்திருந்த தன் துணியை வயிற்றைச் சுற்றி இறுக்கிக் கட்டிக்கொண்டாள். சருகுகளை முற்றத்தில் கொட்டிவிட்டுப் பாத்திரங்களைக் கழுவப் போனாள். ஆபேத் அலி தன் கவலையை மறக்க ஹுக்காவை எடுத்துக்கொண்டு உட்கார்ந்தான்.

அவன் எவ்வளவு நேரம் ஹுக்கா பிடித்துக்கொண்டு உட்கார்ந் திருந்தானோ தெரியாது. ஜாலாலி அடுப்பின் மறுபக்கம் உட்கார்ந்து கொண்டு பாத்திரத்தில் அரிசி போடுவதை அவன் கவனித்தான். அவள் குட்டைத் துணி அணிந்திருந்தாள். முழங்கால்களுக்கு இடையே வயிற்றின் ஒரு பகுதி தெரிந்தது. வயிற்றைக் காட்டிக் கொண்டிருப்பது இந்தப் போக்கிரியின் வழக்கம். இப்போதெல்லாம் அவள் தன் உடம்பைக் கொடுப்பதில்லை. ஆயினும் அவளுடைய திறந்த வயிறு அவனுடைய ஆசையைக் கிளப்பியது. தன் பீபி இப்படி உட்கார்ந்திருப்பதை வெகுநேரம் பார்த்துக்கொண் டிருந் தால் அவனுக்குப் பருப்பு வயலோ, காலி மைதானமோ நினைவுக்கு

வரும். அவன் அதை மறக்க முயற்சி செய்தபடி, "ஜப்பர் எங்கே? அவனை நேத்திலேருந்து பாக்கல்லியே?" என்று கேட்டான்.

ஜாலாலி அவனுடைய கெட்ட எண்ணத்தைப் புரிந்துகொண்டாள். "குனுயி பீபியோட பாட்டுக் கேட்கப் போயிருக்கான் ஜப்பர்" என்றவள், சாதத்தை மரக்கரண்டியால் கிளறிவிட்டுக்கொண்டே, "குனுயி பீபி பாட்டுக் கேட்க எனக்கும் ஆசையா இருக்கு" என்றாள்.

இவ்வளவு கஷ்டத்துக் கிடையிலும் ஆபேத் அலிக்குச் சிரிப்பு வந்தது. "ஆத்திலே வெள்ளம் வரட்டும், உன்னைத் தண்ணி மேலே கூட்டிக்கிட்டுப் போறேன்" என்றான்.

ஜாலாலியின் வார்த்தைகள் ஆபேத் அலிக்கு அனுமதி, வயலில் இறங்கி உழ அனுமதி.

ஜோட்டன் தாழ்வாரத்தில் உட்கார்ந்துகொண்டு அவர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண் டிருந்தாள். அவர்களுடைய உல்லாசப் பேச்சு அவளுக்குப் பொறுக்கவில்லை. அவள் தன் வீட்டுப் படலை இன்னும் நன்றாக மூடிவிட்டு மௌனமாக உட்கார்ந்திருந்தாள். ஒரு வேலையும் இல்லை. உடல் முழுவதும் சோம்பல். கூந்தலிலிருந்து பேனைத் தேடி எடுத்துக்கொண் டிருந்தாள். பழி வாங்கும் ஆசை அவளுக்கு. கல்யாண முருங்கை மரத்துக்குக் கீழே மன்சூரின் முகம் தோன்றியது. அவள் தன் கையில் அகப்பட்ட பேனை இரண்டு நகங்களுக்கு நடுவில் வைத்துக்கொண்டு படலின் இடுக்கு வழியே எட்டிப் பார்த்தாள். புலி தன் வேட்டையைக் கவ்விக்கொண்டு ஓடுவதுபோல் ஆபேத் அலி ஜாலாலியைக் கட்டிப் பிடித்துக்கொண் டிருந்தான். ஜாலாலி கொடி போல் அவனுடைய கால்களுக்கிடையில் தொங்கினாள்.

இப்போது சைத்ர மாதமானதால் நினைத்து நினைத்துச் சுழல் காற்று அடிக்கிறது. காற்று புழுதியை வாரி அடித்ததால் ஆபேத் அலி தன் வேட்டையை என்ன செய்கிறானென்று அவளால் பார்க்க முடியவில்லை. அவள் கோபமும் வருத்தமுமாக வெளியே வந்து வயல்வெளியில் புழுதியுடன் புழுதியாக மறைந்து விட்டாள்.

சைத்ர மாதமாதலால் வயல்களில் வெயில் தகிக்கிறது. குளங்கள் வற்றிவிட்டன. ஸோனுலி பாலி நதியில் மட்டும் மெல்லிய போர்வை மாதிரி கொஞ்சம் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கிறது. மசூதிக் கிணற்றில் தண்ணீர் இல்லை. கிராமவாசிகள் கஷ்டப்பட்டு வெகுதூரத்தி லிருந்து தண்ணீர் கொண்டு வருகிறார்கள். ஆற்று நீரில் தண்ணீர்க் குடங்கூட முழுவதும் அமுங்காது. நமசூத்திரபாடாவைச் சேர்ந்த

பெண்கள் வரிசை வரிசையாகத் தண்ணீர் கொண்டுவரச் செல்கிறார்கள். அவர்கள் ஒரு லோட்டாவால் தண்ணீர் இறைத்துக் குடத்தில் நிரப்புகிறார்கள். மேட்டுக் குளத்திலும் சர்க்கார் வீட்டுக் குளத்திலும் தண்ணீர் குழம்பிக் கிடக்கிறது. மாடுகள் இறங்கி இறங்கித் தண்ணீர் பாசி பிடித்துப் பச்சையாக இருக்கிறது. ரொம்பக் கஷ்டகாலம் இப்போது.

ஜோட்டன் வீட்டைவிட்டுப் புறப்படும்போது குடத்தை எடுத்துக் கொண்டு கிளம்பியிருந்தாள். அவள் ஆற்றிலிருந்து குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு கிழட்டு ஹாஜிசாயபு வீட்டுக்குப் போவாள். அவள் இவ்வளவு கஷ்டப்பட்டுத் தண்ணீர் எடுத்து வந்ததற்காக அவளுக்கு ஏதாவது கூலி கிடைக்கும். காசு கிடைக்கா விட்டாலும் ஒரு தொன்னை நெல்லாவது கிடைக்கும்.

சிலபேர் வெயிலில் வயல்களின் வழியே ஓடிக்கொண் டிருந்தார்கள். அவர்கள் தலையில் வாந்திபேதி சாமி. பிஸ்வாஸ்பாடாவில் வாந்திபேதி ஏற்பட்டிருக்கிறதாம். இந்தத் தூரத்திலிருந்து அவளால் ஓடிக்கொண் டிருப்பவர்களை அடையாளங் கண்டுகொள்ள முடியவில்லை.

வயலில் நடந்தபோது ஜோட்டனுக்கு நினைவு வந்தது, ஜாலாலி இப்போது அம்மணமாக விட்டுக்குள் இருப்பாள் என்று. அடுப்பில் சோறு வெந்துகொண்டு இருக்கிறது. சருகுகளிலோ, வைக்கோலிலோ நெருப்புப் பிடித்துக்கொண்டு பற்றியெரிய எவ்வளவு நேரமாகும்! நடக்கும்போது இத்தகைய எண்ணங்கள் ஏற்பட்டன அவளுக்கு.

சைத்ர மாதத்தில் கூரையிலும் மூங்கிலிலும், எங்கே பார்த்தாலும், நெருப்பு பிசுக்கென்று பிடித்துக்கொண்டு விடுமே!

அவளுடைய மனசு சரியாக இல்லை. அவள் வேகமாக நடந்தாள். எல்லாரும் தண்ணீர் எடுத்துக்கொண்டு திரும்புகிறார்கள். அவளும் சீக்கிரம் திரும்பவேண்டும். கிராமத்துக்குக் கிராமம் வாந்திபேதி பரவிக்கொண் டிருக்கிறது.

வாந்திபேதி சாமியை எடுத்துக்கொண்டு வந்தவர்கள் அவள் அருகில் எதிரே வந்துவிட்டார்கள். அவள் உடனே குடத்தைக் கீழே வைத்துவிட்டு முழங்காலிட்டுக்கொண்டு உட்கார்ந்தாள். கழுதையின் முதுகின் மேல் ஊர்வலமாகப் போகிறாள் வாந்திபேதி அம்மன். சிலர் அம்மனைத் தலையில் வைத்துக்கொண்டு தம்பட்டை அடித்துக்கொண்டு போகிறார்கள். ஜோட்டன் வெகுதூரம் அவர்களுடன் போகவில்லை. பாதை ஓரத்தில் கல்யாண முருங்கை மரங்கள். அவற்றில் லீக் நோட்டீஸ்கள் தொங்குகின்றன. ஜோட்டன் மரங்களின் நிழலில் கிராமத்துப் பக்கமாக நடந்தாள்.

வழியில் பேலு ஷேக்கைச் சந்தித்தாள். அவன், ''ஜமெட்டி, தண்ணீ யாருக்காக எடுத்துக்கிட்டுப் போறே?'' என்று கேட்டான்.

ஜோட்டன் தரையில் துப்பினாள். அந்த ஆளுடன் பேசினாலே பாவம். அவன் ஆன்னுவின் புருசனை ஒரே வெட்டாக வெட்டிக் கொன்றுவிட்டு ஆன்னுவுடன் குடித்தனம் நடத்துகிறான். ஒரு நாள் உட்கார்ந்துகிட்டு விவரமா எல்லாக் கதையையும் ஆபேத்அலி கிட்டே சொல்றான். என்ன தைரியம் இவனுக்கு? யார் கிட்டேயும் பயமில்லே. இப்போ சாம்சுத்தீனோடே சேர்ந்துகிட்டு லீக் வேலை யெல்லாம் செய்யறான்.

ஜோட்டன் அவனுக்குப் பதில் சொல்லாமல் அவன் போக வழி விட்டுவிட்டு வரப்போரமாக நின்றாள்.

ஆனால் பேலு நடந்துகொள்ளும் விதம் சரியில்லை. அவன் விஷம மாகச் சிரித்துக்கொண்டு அவளுக்கு முன்னால் நின்றுகொண டிருந்தான். வைசூரியால் ஒரு கண் குருடாகிவிட்டது அவனுக்கு. பயங்கரமான அருவருப்பை உண்டாக்கும் முகம். இப்போது தாடி பாதி முகத்தை மறைத்திருக்கிறது. சடுகுடு விளையாட் டெல்லாம் இப்போது இல்லை. உடம்பில் சக்தி குறைந்துவிட்டது போலும். இருந்தாலும் கண் மட்டும் பயங்கரமாக ஜொலிக்கிறது. பேலு விஷமச் சிரிப்புடன், ''ஜமெட்டி, உன்னோட பக்கிரி சாயபு அப்பறம் வரல்லியா?'' என்று கேட்டான்.

''அதுக்கு என்ன பண்ணச் சொல்றே?'' ஜோட்டன் மறுபடியும் காறித் துப்பினாள்.

பேலு இப்போது பேச்சை மாற்றினான். புதர்களுக்கிடையில் இப்படி நின்றிருப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை என்று, அவ ளுடைய முகபாவத்திலிருந்தே அவனுக்குப் புரிந்துவிட்டது. அவன் மிகவும் நல்லவன் போல, ''இவங்க என்னத்தை எடுத்துக்கிட்டுப் போறாங்க?' என்று கேட்டான்.

''வாந்திபேதி அம்மனை.''

''மண்டையை உடைச்சுட்டா எப்படியிருக்கும்?''

ஜோட்டன் பல்லைக் கடித்துக்கொண்டு சொல்ல விரும்பினாள்; 'நாசமாப் போறவனே, உன் மண்டையை உடைச்சுடுவேன்!' என்று. ஆனால் வாயிலிருந்து வார்த்தையொன்றும் வரவில்லை. எல்லாருக்குமே அவனிடம் பயம். யார் தலையை எப்போ வெட்டு வானோ தெரியாது. சிரித்துக்கொண்டே அநாயாசமாகத் தலையை வெட்டறதிலே அவனுக்கு நிகர் யாரும் இல்லை. ஆகையால் யாருமே அவனைச் சீண்டுவதில்லை. சீண்டினால் அன்று ராத்திரியே, 'பிஸ்மில்லா ரஹ்மானே ரஹீம்'னு ஆட்டைப் பலிகொடுக்கிற மாதிரி

கழுத்தை வெட்டிவிடுவான். பலி கொடுக்கிற அன்னிக்கு இந்த ஆளைப் பார்த்தால் இன்னும் பயமா இருக்கும். ஆகையால் ஜோட்டன் எப்படியாவது அவனிடமிருந்து தப்பித்துக்கொண்டு புதர் வழியே ஓடிவந்துவிட முயற்சி செய்தாள்.

சைத்ர மாதத்தின் இறுதி வெயில் மூங்கில் காட்டுக்கு மேலே காய்ந்துகொண் டிருப்பதைக் கவனித்தான் பேலு. சாம்சுத்தீன் தன் கோஷ்டியுடன் வெகுதூரம் முன்னால் போய்விட்டான். இப்போது வயல்வெளியில் யாரும் இல்லை. கள்ளிச் செடிகளும் புதர்களும் நிறைந்த இடத்தில் அவர்கள் இருவர் மட்டுமே நின்றார்கள். அவளுடன் சரசம் செய்பவன் போல் அவன் அவள் அருகில் குனிந்து கொண்டு, "ஒரு குத்து விடவா?" என்று கேட்டான்.

ஜோட்டன் பயந்துபோய், "நாசமாப் போறவனே, உன்னை வாந்திபேதி கொண்டு போயிடும். வழியை விடு, இல்லாட்டாக் கத்துவேன்" என்றாள்.

இப்படி ஓர் ஆபத்து நேரும் என்று எதிர்ப்பார்க்கவே இல்லை அவள்.

பேலு சிரித்துக்கொண்டே சொன்னான்: "கோவிச்சுக்காதே. சும்மா விளையாட்டுப் பண்ணினேன்." பிறகு நாற்புறமும் பார்த்துக் கொண்டு சிரித்தபடி, "வைசூரிச் சாமி, வாந்திபேதி சாமி அப்படீன்னெல்லாம் சொல்லி என்னைப் பயமுறுத்த முடியாது. வேணுமின்னா சொல்லு, இன்னி ராத்திரியே சாமி தலையை வெட்டிக் கிட்டு வந்துவிடுவேன்" என்றான்.

சாம்சுத்தீன் தன் குழுவுடன் போனான். லீக்கின் கூட்டம் நடக்கப் போகிறது. பட்டணத்திலிருந்து மௌல்வி சாயபு வரப் போகிறார்.

ஆகையால் அரசியல் தலைவனைப் போல் உடையணிந்திருக்கிறான் பேலு. கட்டம் போட்ட லுங்கி. மேலே கையில்லாத கருப்புக் கலர் பனியன். கழுத்தில் துண்டை மப்ளரைப் போல் சுற்றிக் கொண்டிருக்கிறான். அவன் ஜோட்டனுக்கு வழிவிட்டான். மற்றவர்கள் வெகுதூரம் முன்னால் போய்விட்டார்கள். போய் அவர்களைப் பிடிக்கவேண்டும். அவன் வரப்பு வழியே வேகமாக ஓடினான். வாந்திபேதி அம்மன் கிராமத்துக்குள்ளே நுழைந்து விட்டாள். அப்போது ஒரு புகைப் படலம் உருண்டையாக மேலே எழுந்தது. அவள் பயந்தது நடந்துவிட்டது. ஆற்றில், வாய்க்கால்களில் தண்ணீர் இல்லை. வயல்கள் காய்ந்திருக்கின்றன; இலைகள் உலர்ந்திருக்கின்றன. நாள் முழுவதும் காயும் வெயிலில் கூரைகளும் சணல் தட்டையாலான வேலிகளும் காய்ந்து கிடக் கின்றன.

ஜோட்டன் இடுப்பில் குடத்தை வைத்துக்கொண்டு ஓடினுள். பக்கத்துக் கிராமத்திலிருந்தும் ஜனங்கள் ஓடிவருவதைப் பார்த்தாள் அவள். ஸோனுலிபாலி ஆற்றிலிருந்து குடிதண்ணீர் எடுத்து வந்தவர்கள் கூட அந்தத் தண்ணீரை நெருப்பின்மேல் ஊற்றினுர்கள்.

நெருப்பு காற்றுடன் சேர்ந்துகொண்டு தேர்ச்சியில்லாதவர்கள் கட்டிய குடிசைகளைப் பொசுக்கிச் சாம்பலாக்கியது. ஜோட்டனின் குடிசை எரிந்துகொண் டிருந்தது. ஆபேத் அலியின் வீடு முன்னுலேயே எரிந்துவிட்டது. ஆபேத் அலி ஜாலாலியின் அலங்கோலமான சரீரத்தைக் கட்டிப் பிடித்து வைத்திருந்தான். இல்லாவிட்டால் நெருப்பில் போய் விழுந்திருப்பாள் அவள். அவளுடைய துணிகள், தலையணை, ஜமுக்காளம், ஈயம் பூசின தட்டு, பீங்கான் பாத்திரம் எல்லாம் போய்விட்டன. நெருப்பு கிராமம் பூராவும் பரவிவிட்டது. ஆகையால் பச்சை மூங்கில், வாழைமரம், சேறு நிறைந்த தண்ணீர் எல்லாமே நெருப்பை அணைக்கப் பயன்பட்டன. நாற்புரமும் பயங்கரக் காட்சிகள். தலையணையும் ஜமுக்காளமும் வைத்திருந்தவர்கள் அவற்றை வீட்டுக்கு வெளியே கொண்டுவந்து போட்டார்கள். ஜாலாலி மாமரத்தடியில் உட்கார்ந்துகொண்டு தலையிலடித்துக் கொண்டிருந்தாள். கிழக்கு வீட்டு நரேன்தாஸ் அரிவாள் எடுத்து வந்திருக்கிருன். நெருப்பு கூரைக்குக் கூரை தாவும் வாய்ப்பு இருக்கும் இடங்களில் கூரையை வெட்டித் தள்ளி நெருப்புப் பரவாமல் பார்த்துக்கொண்டான். ஜனங்கள் குனிந்து கொண்டு நெருப்பை அணைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். கிணற்று நீர் தீர்ந்துவிட்டது. ஹாஜி சாயபுவின் குளத்திலிருந்த கொஞ்சநஞ்சம் தண்ணீரும் காலி. மன்சூர் வீட்டுக் குளத்தில் சேறுதான் பாக்கி. மக்கள் சேற்றை மண்வெட்டியால் எடுத்துக் கூரைகளின் மேல் எறிந்தார்கள்.

தூரத்தில் வாந்தி பேதி அம்மனுக்கு முன்னுல் தாரையும் தப்பட்டையும் முழுங்குகின்றன. பிஸ்வாஸ்பாடாவில் ஹரிபாத பிஸ்வாஸ் விக்கி விக்கிச் செத்துப் போய்விட்டான். கோபால் டாக்டர் சைக்கிளை ஓட்டிக்கொணடு விட்டுக்கு வீடு ஓடினுன், நோயாளியைப் பார்க்க, பணம் சம்பாதிக்க. போகும்போது நெருப்பு எரிவதைப் பார்த்து விட்டு இந்தப் படிப்பறிவற்ற மக்களைத் திட்டினுன்.

ஒவ்வொரு வருஷமும் ஏதாவதொரு கிராமததில் இப்படி நெருப்புப் பற்றிக்கொள்வது வழக்கமாகிவிட்டது. கற்றுக்குட்டி கோபால் டாக்டருக்கு நல்ல அதிர்ஷ்டம் இப்போது. நோயாளிகளைக் கவனிப்பதில் பணம், கஷ்டகாலததில் ஏழைகளுக்குக் கடன் கொடுப்பதில் வட்டி வரும்படி. கோபால் டாக்டர் வரப்பின்மேல் சைக்கிளை நிறுத்திக்கொண்டு மணியை அடித்தான், ‘வாங்க, வாங்க. பணம்

வேணும்னு பணம், மருந்து வேணும்னு மருந்து வாங்கிட்டுப் போங்க !' என்பது போல்.

சசீந்திரநாத் பாதரட்சைக் கட்டையைப் போட்டுக்கொண்டு ஓடி வந்தார் ஜோட்டன். ஆபேத் அலி, மற்றும் கிராமவாசிகள் எல்லாரும் ஆறுதலுக்காக அவரைச் சூழ்ந்துகொண்டார்கள் அவர் எல்லாருடைய முகத்தையும் பார்த்தார். எல்லாரும் ஆபேத் அலியைக் குற்றம் சொன்னார்கள். ''எல்லாம் விதி !'' என்றார் சசீந்திர நாத்.

சாம்சுத்தீனின் கோஷ்டி இரவு வெகுநேரம் கழித்துத் திரும்பி வந்தது, கூட்டத்தை முடித்துக்கொண்டு. அவர்களும் இங்குமங்கும் அலைந்து எல்லாருக்கும் ஆறுதல் சொன்னார்கள். தீயை அணைக்கும் முயற்சியில் பெரிய பெரிய பச்சை மூங்கில்களையும் சேற்றையும் நெருப்பில் போட்டும் தீ அணையவில்லை. நெருப்பு அணையாது என்பது புரிந்ததும் அவர்கள் மசூதியை நோக்கிப் போனார்கள். மசூதியும் எரிந்துகொண் டிருந்தது.

ஊரே எரிந்துகொண் டிருந்தது, கண் முன்னால். பிஸ்வாஸ்பாடாவில் இப்போதும் வாந்திபேதி அம்மனுக்கு அர்ச்சனை நடந்து கொண்டிருந்தது. நெருப்பிலிருந்து காப்பாற்றி வெளியில் கொண்டு வரப்பட்ட துணிமணிகளையும் சாமான்களையும் காத்துக்கொண் டிருந்தார்கள், அவற்றின் உடைமையாளர்கள். தீயின் ஒளியில் அவர்களுடைய முகம் தெளிவாகத் தெரிந்தது.

கடைசியில் தீ சற்றுத் தணிந்தது. ஜோட்டன் வருத்தத்தில் ஆழ்ந்திருந்தாள். நாற்புறமும் ஒரே இருட்டு. விட்டுவிட்டுப் புகை கிளம்பியது. அவள் இருட்டில் சப்தம் செய்யாமல் ஹாஜீசாயபுவின் களஞ்சிய வீட்டுக்குப் போனாள். ஏதாவது சாமான்கள் கிடைத்தால் எடுத்துக்கொள்ளும் ஆசையில் தாண்டித் தாண்டி நடக்க வேண்டியிருந்தது. கொஞ்சம் சுற்று வழியாகவும் போகவேண்டியிருந்தது. எங்கும், பொசுங்கல் நாற்றம். பக்கத்தில் விபத்துக்குள்ளான மக்களின் ஓலம் கேட்டது. இருட்டில் தனக்குப் பழக்கமான குரலைக் கேட்டு ஜோட்டன் சொன்னாள் : '' என் வீடு எரிஞ்சு போச்சு, அணணே ! நல்லதுதான். கண்ணு போகிற இடத்துக்குப் போறேன். வீடு இருந்த அந்தப் பாசம் விடாது.''

அவள் சொல்ல விரும்பியது, ஆனால் சொல்லாமல் இருந்தது, 'பக்கிரி சாயபுவும் வரல்லே. அவரும் வராதபோது யாருக்காகக் காத்துக்கிட்டு இங்கே உட்கார்ந்திருக்கணும் ?' என்பதே.

ஜோட்டன் பேசிய அந்த ஆளுக்கு அவளுடைய கஷ்டம் புரிந்தது. ''ஆபேத் அலிக்கு வேலை பொழுது இல்லே'' என்று சொன்னான் அவன்.

"யாரை என்ன சொல்றது சொல்லுங்க! அவன்தான் ஆம்பிளே அவனுக்கு வேலை போது கிடையாது. பகல் இல்லே ராவில்லே, எப்பவும் வேணும். இந்தப் பொம்பளையாவது வேலைபோது பாக்கவேண்டாம்? இவ அம்மணமா நின்னு எப்படி?"

அதன் பிறகு ஜோட்டன் நிற்கவில்லை. ஏதோ முணுமுணுத்துக் கொண்டே இருட்டில் ஹாஜி சாயபுவின் களஞ்சிய வீட்டுக்குள் நுழைந்தாள். பெரிய பெரிய களஞ்சியங்கள் எரிந்துவிட்டன. நெல்லும் பருப்பும் எரிந்த நாற்றம் வீசியது. எங்கிருந்தோ ஒரு தவளை 'க்ளப், க்ளப்' என்று சப்தம் செய்தது. ஜோட்டன் கனிந்திருந்த நெருப்புக் குவியலைக் கிளறிப் பார்த்தாள். ஒன்றும் கிடைக்கவில்லை. சாம்பல் மூடிக் கிடந்த நெருப்பு குபீரென்று எரிந்து மறுபடி அணைந்துவிட்டது. அதன் வெளிச்சத்தில் ஜோட்டனின் முகம் கர்ப்பிணியின் முகம் போல், பேராசையும் சாப்பாட்டு வெறியும் கொண்டு தோற்றம் அளித்தது. அவ்வொளியில் அவள் தான் போக வேண்டிய வழியைப் பார்த்துக்கொண்டாள். வாந்திபேதி அம்மனுக்கு முன்னால் ஒலிக்கும் தாரை, தப்பட்டைகளின் ஒலி கேட்டது.

அப்போது ஹாஜி சாயபு தன் மூன்று பீபிக்களின் மடியில் கால்களை வைத்துக்கொண்டு தலையிலடித்துக் கொண்டிருந்தார். அவருடைய மூன்று பிள்ளைகளின் மூன்று மனைவிகளும் வயலில் படுக்கையை விரித்துக்கொண்டு, ஏதோ ஒரு நல்ல தருணத்துக்காகக் காத்திருப்பவர்கள் போல் உட்கார்ந்திருந்தார்கள். 'நடந்தது நல்லதுதான். எல்லாம் உருண்டு போகட்டும்!' என்று சொல்வது போல் இருந்தது, அவர்களுடைய முகபாவம்.

இருட்டில் தான் மட்டும் தனியாக இல்லை என்று ஜோட்டனுக்குத் தோன்றியது. இன்னும் சிலரும் கையில் கட்டையை வைத்துக் கொண்டு நெருப்பைக் கிளறிக்கொண்டிருந்தார்கள். தூரத்தில் ஓர் அறை நெருப்புக்கு இரையாகாமல் இருந்ததாகத் தோன்றியது. அவள் அந்தப் பக்கம் ஓடினாள். பாத்ர மாதத்து மழை போல் அவளிடம் ஆசை பெருக்கெடுத்தது. அவளுடைய காலடிச் சப்தம் கேட்டு இருட்டில் யாரோ கேட்டார்கள், "யாரு?" என்று.

"நான் ... நான்தான்!"

யாரோ ஒருவன் இருட்டில் எதையோ தேடுவது அவளுக்குத் தெரிந்தது. "நீ யாரு?"

அவன் பேலு ஷேக்கோ என்று அவளுக்குத் தோன்றியது. அவன் ஏதாவது சாமான் திருட வந்திருக்கலாம், அல்லது ஹாஜி சாயபுவின் இரண்டாம் பீபியுடன் காதல் செய்ய வந்திருக்கலாம். எல்லாரும் வயலில் இறங்கிப் போய்விட்ட பிறகு, எல்லாரும் தூங்கின

பிறகு, மறந்து போய்விட்ட எதையோ எடுத்து வரும் சாக்கில் ஹாஜி சாயபுவின் இரண்டாம் பீபி இருட்டில் அங்கு வரலாம், பேலுவைச் சந்திக்க. யார் கண்டுபிடிக்க முடியும்? பேலுவின் வெறியைத் தணித்துக்கொள்ள... எப்பேர்ப்பட்ட வெறி அது?

ஹாஜி சாயபு பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது எங்கிருந்தோ இந்தப் பீபியைக் கூட்டி வந்திருந்தார்.

அப்போது பேலு அவருடன் இருந்தான். பேலு தான் காசு கொடுத்து ஆசை காட்டி மயக்கி அவளை ஹாஜிசாயபுவின் படகுக்கு அழைத்து வந்தவன். ஹாஜிசாயபு அப்போது ஹாஜியாகவில்லை. பேலுவுக்கு நல்ல இளமை, புகழ் வேறு. அவன் அவளுடன் காதல் செய்யத் தருணம் பார்த்துக்கொண் டிருந்தான். அவள் சீதாமர வேலிக்கருகில் உட்கார்ந்துகொண்டு பாடுவாள். பேலு படகுத் துறையில் உட்கார்ந் திருப்பான். அவன் ஹாஜிசாயபுவின் பெரிய படகில் படகோட்டி யாக இருந்தான். சந்தைக்குப் படகில் போவான், சாமான்கள் கொள் முதல் செய்துகொண்டு வருவான். அவளுடன் காதல் புரிவதற்காகத் துறையில் உட்கார்ந்திருப்பான் அவன்.

கலிமுத்திசாயபு ஹாஜ் யாத்திரைக்குப் போய்விட்டு ஹாஜிப் பட்டத்துடன் திரும்பி வந்த பிறகு அவருக்கு இந்த விஷயம் தெரிந்து விட்டது. "அப்படியா சமாசாரம்!" என்று பேலுவை விரட்டி விட்டார். எவ்வளவோ காலத்துக்கு முந்தைய சமாசாரம் இது. அதன் பிறகு பேலு ஹாஜிசாயபு வீட்டுக்குப் போவதில்லை. ஆனால் இடையிடையே அவளுடைய முகம் நினைவுக்கு வந்து அவனுக்கு வெறியூட்டும்.

அப்போது அவனுக்குப் பைத்தியம் பிடித்தாற்போல் இருக்கும், பைத்தியக்கார டாகுரைப்போல. அவன் ஆற்றுப் படுகையில் இறங்கிவந்து அரசமரத்தடியில் புதர்களுக்குப் பின்னால் சப்தம் செய்யாமல் உட்கார்ந்திருப்பான், சீதாமர வேலிக்குப் பின்னால் அவளுடைய முகம் எப்போது தெரியும் என்று காத்துக்கொண்டு.

பேலுவின் பீபி ஆன்னு அடிக்கடி ஹாஜிசாயபுவின் வீட்டுக்குப் போவதுண்டு. ஆன்னுவும் ஹாஜிசாயபுவின் சிறிய பீபியும் ரொம்பச் சிநேகம். சிறிய பீபி ஆன்னுவுக்கு எண்ணெய், பருப்பு, பருப் புருண்டை எல்லாம் தருவாள். சிறிய பீபி தருவதாக ஆன்னு சொல்லுவாள். ஆனால் உண்மையில் தருவது இரண்டாவது பீபிதான் என்று நினைத்தாள் ஜோட்டன்.

சிறிய பீபிக்குத் தன்னிடம் ரொம்பப் பிரியம் என்று காட்டிக் கொள்வாள் ஆன்னு. ஜோட்டனுக்கு எல்லாம் தெரியும்.

வெறிபிடித்து விட்டால் பேலுவால் பொறுத்துக்கொள்ள முடியாது. அவன்தான் இப்போது இருட்டில் இரண்டாவது பீபிக்காகக்

காத்திருக்கிறன். எங்கும் சத்தம், குழப்பம். யார் எங்கே இருக்கிறன் என்று யாருக்குத் தெரியும்? இதுதான சரியான சமயம் என்று இங்கு வந்து காத்துக்கொண்டிருக்கிறன் பேலு. அவளுடைய கண்களில் அப்படி என்னதான் மாயம் இருக்கிறதோ! மனசில்தான் என்ன இருக்கிறதோ! மனம் எப்போதும் எதையாவது விரும்பிக் கொண்டே இருக்கிறது. பேலுவுக்கு எப்போதும் ஏதாவது வேண்டி யிருக்கிறது. அவன் வீட்டில் அழகான பீபி ஆன்னு இருக்கிருள். அவனுக்கும் வயது நாற்பதுக்கு மேலாகிவிட்டது. அப்படியும் அவன் மனம் எதற்கோ ஏங்குகிறது, இத்தனை வறுமையிலும்! ஆன்னுவுக்காக அவன் என்னதான் செய்யவில்லை! ஆல்தாப் சாயபுவின் தலையை அப்படியே வெட்டிவிட்டானே!

ஆல்தாப் சாயபு அறுவடை எப்படி நடந்திருக்கிறது என்று பார்க்கச் சணல் வயலுக்கு வந்திருந்தார். கிழவர் ஆல்தாப் சாயபுவின் கடைசி பீபியைப் பக்ரீத் பண்டிகையின்போது ஊரின் தர்காவில் பார்த்ததும் பேலுவுக்குக் காதல் பைத்தியம் பிடித்துவிட்டது. என்ன செய்வது என்று புரியவில்லை அவனுக்கு. அப்போது இளமையின் கடைசிக் கட்டத்தில் இருந்தான் அவன். அவன் அடுத்த பக்ரீதுக்கு ஆல்தாப் சாயபுவின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான், அவருடைய விருந் தாளியாக. தான் ஒரு பெரிய வியாபாரிபோல் நடந்துகொண்டான். ஆல்தாப் சாயபுவைச் சணல் வியாபாரத்தில் இறங்கச் சொன்னன். அந்தக் காலத்தில் அவன் தன் தாடியில் அத்தர் பூசிக்கொள்வான். பாபுர்ஹாட்டிலிருந்து நல்ல லுங்கி வாங்கிக்கொண்டு வந்து உடுத்திக் கொள்வான். குஷி ஏற்பட்டால் தன் மெடல்களைக் கழுத்தில் தொங்க விட்டுக்கொள்வான்.

கிழவர் ஆல்தாப் சாயபு விளையாட்டுகளுக்கு உற்சாகம் அளிப் பவர். பிரபல விளையாட்டுக்காரன் பேலு தமக்கு எவ்வளவு வேண்டியவன் என்று காட்டிக்கொள்ள விரும்பினர். தன் பீபி களிடமும் குழந்தைகளிடமும் அவனைத் தம் அந்தப்புரத்துக்கே கூட்டிக்கொண்டு போய்விட்டார் அவர். காதல் கலை பேலுவுக்குக் கைவந்த ஒன்று. மலர் மொட்டுப்போல் இருந்த கிழவரின் சிறிய பீபிக்கு அவன் தருணம் பார்த்து ஆமை போன்ற தன் அகன்ற மார்பைத் திறந்து காட்டினன். அதில் மெடல்கள் மின்னின. அப் போது ஆன்னுவுக்குத் தன் பால்யப் பருவம் நினைவுக்கு வந்தது.

சிறுமி ஆன்னு விளையாட்டுப் பார்க்கப் போயிருந்தாள். சடுகுடு விளையாட்டு. பராபர்திஹாட்டில் விளையாட வந்திருந்தான் பேலு.

அன்று சந்தை நாள் அல்ல. இருந்தாலும் என்ன கூட்டம்! என்ன கூட்டம்! ஏழெட்டு மைல் தூரத்துக்குள் அன்று இளைஞன் ஒருவன் கூட வீட்டில் இல்லை.

அன்று பக்ரீத் திருவிழாவைப் போல் வீட்டுக்கு வீடு கொடி பறந்தது. திருவிழாவின் நாயகனாக இருந்தான் பேலு. அன்று விளையாட்டிலும் ஜயித்துவிட்டான். சிறுமி ஆன்னு அன்றே பேலுவிடம் காதல் கொண்டுவிட்டாள்.

அந்தப் பேலு இன்று ஆல்தாப் சாயபுவின் விருந்தாளியாக வந்திருக்கிறான். ஆன்னு பீபி தன்னையே கேட்டுக்கொண்டாள், 'இப்படியா இருக்கு உன் மனசு?' என்று.

அதன் பிறகு சமயம் பார்த்துப் பேலு சணல் வயலில் ஆல்தாப் சாயபுவின் கழுத்தை வெட்டிவிட்டான். பலியிடும்போது பிஸ்மில்லா ரஹ்மானே என்று சொல்லிக்கொண்டு எட்டுப் பத்துப் பலிகளை ஒரே ஆயாசமாக இடுவதுபோல் அவன் ஆல்தாப் சாயுபுவின் கழுத்தை வெட்டிவிட்டான். அவன் ஆன்னுவுக்கு முகத்திரை அணிவித்துத் தன் வீட்டுக்குக் கூட்டி வந்த அன்றுதான் ஆல்தாப் சாயுபுவைக் கொலை செய்த விஷயத்தை முதல் முதலாக அவளிடம் கூறினான். இதைக் கேட்டு ஆன்னு சொன்னாள், "இதுவா உன் எண்ணம்?" என்று. சொல்லிவிட்டு அந்தப் பரந்த வயல்வெளியில் "ஹோ...ஹோ" வென்று சிரித்தாள்.

ஆன்னுவைப் பார்த்தால், அவள் பேலுவுக்காக இவ்வளவு பெரிய கொலையைக் கூடச் சகித்துக்கொண்டிருக்கிறாள் என்று தோன்றவே தோன்றாது.

பேலு இருட்டில் அந்தப் பக்கம் வரும் ஓர் உருவத்தைக் கண்டு ஹாஜி சாயபுவின் இரண்டாவது பீபி தான் சப்தம் செய்யாமல் வந்திருக்கிறாளென்று நினைத்தான்.

ஆனால் இது யார் குரல்? ஜோட்டன் மாதிரியல்லவா இருக்கிறது. திருட வந்திருக்கிறானென்று யாராவது பிடித்துக்கொண்டால்? அவனுக்குப் பயம் பிடித்தது.

ஜோட்டன் எரிச்சலுடன் கேட்டாள்: "என்ன மியான்! உன் பேரைக் கூடச் சொல்லக் கூடாதோ?"

பேலு பொய் சொன்னான். "நான் மதிஉர்."

"உன்னோட மத்த ஆளுக எங்கே?"

"அவங்க நெருப்பைப் பார்த்துட்டுப் பயந்து ஓடிட்டாங்க."

"நீ இங்கே என்ன செய்யறே?"

"பீங்கான் தட்டு தேடறேன்."

"இந்த அறையிலே நெருப்புப் பிடிக்கல்லேன்னு ஹாஜி சாயபுவுக்குத் தெரியல்லே."

"ஹாஜி சாயபுவுக்கு நெருப்புன்னா ரொம்பப் பயம்."

அந்த ஆள் தூரத்திலிருந்தே பேசினான். குரல் தெளிவாகக் கேட்கவில்லை. ஒரு சமயம் அந்தக் குரல் பக்கிரி சாயபுவின் குரலைப்

போல் இருக்கிறது; இன்னொரு சமயம் பேலுவே மதிஉரைப் போல் பேசுவது போலிருக்கிறது. அந்த ஆள் இருட்டில் எதையோ எடுத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தான்.

'பிடி, பிடி' என்று கத்த விரும்பினுள் ஜோட்டன். ஆனுல் கத்த முடியவில்லை. அவளே திருட வந்தவள்தானே! ஏதாவது தட்டு, நெல், பாதி எரிந்த துணிகள், எது கிடைத்தாலும் சரி, தான் எடுத்தவற்றை அவள் மாமரத்தடியில் கொண்டுவந்து சேர்த்தாள். ஜாலாலி அவற்றுக்குக் காவல் இருந்தாள். பொறுக்கிய சாமான்களை அங்கே போட்டுவிட்டு மறுபடி இருட்டுக்குள் புகுந்தாள், ஜோட்டன் இன்னும் சாமான்கள் எடுக்க.

பிஸ்வாஸ்பாடாவிலிருந்து அழுகையொலி காற்றில் மிதந்து வந்தது. அப்போது வாந்திபேதி அம்மனுக்குத் தீபாராதனை நடந்தது. யாராவது வாந்திபேதியில் இறந்துபோயிருக்கலாம். ஜோட்டன் இருட்டில் தட்டு, பாத்திரம், பித்தளைக் குவளை இவற்றைத் தேடிக் கொண்டே அந்த அழுகையொலியைக் கேட்டாள். யாரோ ஆற்றங்கரைப் பக்கம் ஓடினுர்கள். மரத்தடியில் இங்குமங்கும் எரிந்துகொண் டிருந்த விளக்குகள் காற்றில் அணைந்துகொண்டிருந் தன. வயலில் ஹாஜி சாயபுவின் ஒரே ஒரு அரிக்கேன் விளக்கு மாத்திரம் எரிந்தது.

ஊரில் வைசூரி பரவியிருந்தால் ஒரு கெட்ட ஆவி காற்றில் வளைய வரும். அதுபோல் ஜோட்டன் இருட்டில் திரிந்துகொண் டிருந்தாள். அவள் சப்தம் போடாமல் அடிமேலடி எடுத்துவைத்தாள். வயலில் ஹாஜி சாயபு, "சோபான் அல்லா, சோபான் அல்லா!" என்று கத்திக்கொண் டிருந்தார். அவரால் தூங்க முடியவில்லை. அவருக் கருகில் அவருடைய சிறிய பீபி. யார் எப்போது, என்ன செய்து விடுவானே என்ற பயத்தில் அவருக்குத் தூக்கம் வரவில்லை.

பாழடைந்த குடிசையை மட்டும் இழந்தவர்கள் கோரைப் புல்லைப் படுக்கையாக விரித்துக்கொண்டு தூங்கிப் போய்விட்டார்கள். பொழுது விடிந்ததும் எல்லாரும் வயிற்றுப் பிழைப்புக்காக இந்து பாடாவுக்குப் போகவேண்டும். மூங்கிலெல்லாம் இந்துபாடாவில் தான் கிடைக்கும். சணல் வயல்களும் இந்துக்களுக்குத்தான் சொந்தம். அவர்களிடமிருந்து சாமான்கள் கேட்டு வாங்கிவந்து குடிசை கட்டி முடிப்பதற்குள் மழை வந்துவிடும்.

ஜோட்டன் தன் வீட்டைப் பற்றி நினைத்தாள், மழைக் காலத் தைப் பற்றி நினைத்தாள், பேலுவைப் பற்றி நினைத்தாள். பேலு எப்போது பார்த்தாலும் உதைக்க வருகிறுன். மன்சூரைப் போல் அழகாகவும் இல்லை அவன். "இருக்கட்டும், ஒரு நாள் அவனுக்கு

ஒரு குத்து விடுகிறேன் !' என்று நினைத்துக்கொண்டாள் அவள். ஒரு பித்தளைக் குவளை அவளுக்குக் கிடைத்தது. அதை எடுத்துக் கொண்டு ஒரே ஓட்டமாக ஓடிப் போய் ஜாலாலியிடம் அதைக் காட்டினாள். "என்ன கொண்டுவந்திருக்கேன், பாரு!" என்றாள்.

ஜாலாலி அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். எவ்வளவு பெரியபித்தளைக் குவளை! அவளால் கண்களை நம்ப முடியவில்லை.

ஆபேத் அலி பக்கத்திலேயே கழுத்தை நீட்டிக்கொண் டிருந்தான். அவன் பாத்திரத்தைக் கையால் தடவிப் பார்த்தான். அதைப் பார்த்ததுமே அவனுக்குத் தாகம் ஏற்பட்டுவிட்டது.

'இந்தக் குவளை நிறையத் தண்ணி கடகடன்னு குடிக்கணும்.'

ஜாலாலி இன்னும் ஏதாவது கிடைக்கிறதா என்று தேடப் புறப் பட்டாள். ஜோட்டன் தண்ணீர் எடுத்துவரப் போனாள். பக்கத்தில் வேறு யாரும் இல்லை. ஆபேத் அலி ஜாலாலியை அறையப் போனான்; "திருடவா போறே? உனக்கு என்ன தைரியம்?" அவன் துணியால் முகத்தைத் துடைத்துக்கொண்டான். வியர்வை யில் முகமெல்லாம் அரித்தது. அவன் மாமரத்தின் மேல் சாய்ந்து கொண்டான.

தண்ணீருக்கும் பஞ்சம். ஜோட்டன் தண்ணீர் திருடிக்கொண்டு வரப் போயிருக்கிறாள்.

ஜாலாலி சற்று நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு ஆமையைப் போல் கழுத்தை உயர்த்திக்கொண்டு, "நாசமாப் போறவனே! உன்னாலேதான் வீட்டிலே நெருப்புப் பிடிச்சது" என்று கத்தினாள்.

அவளுடைய கூச்சலைக் கேட்டுப் பயந்துவிட்டான் ஆபேத் அலி. "என்னாலேயா?"

"நான் எல்லார்க் கிட்டேயும் சொல்றேன், பாரு!"

"என்ன சொல்லுவே?"

"நீ என்னைப் பிடிச்சு இழுத்துக்கிட்டேன்னு."

"ஆமா, இழுத்தேன். நீ சமையல் செய்யறபோது ஏன் வயத்தைக் காட்டினே?"

"உனக்கு வேலை போது கிடையாதா?"

எல்லாமே நெருப்புப் பிடித்தாற் போல் திடீரென்று நடந்து விட்டது. ஆபேத அலி மரத்தின்மேல் இன்னும் நன்றாகச் சாய்ந்து கொண்டான்.

எனக்கு மட்டும் ஆசையிருக்காதா?

பக்கிரிசாயபு வேப்பமரத்தடியில் உட்கார்ந்திருந்தார். மரத்தின் மேல் ஒரு காகங்கூடப் பறக்கவில்லை. அவர் கிராமத்து வீடுகளைப் பார்த்தார். வைசாக மாதம் முடியும் சமயம். மாமரங்களில் நல்ல விளைச்சல். அவர், தம் தாயத்து மூட்டையிலிருந்து ஒரு பெரிய

பொட்டலத்தை எடுத்தார். அதிலிருந்த மாமிசத்தைப் பார்த்தபோது அவருக்கு நினைவு வந்தது. இந்தத் தடவை பலிகளின் எண்ணிக்கை மிகவும் குறைந்துபோய் விட்டதென்று.

எவ்வளவு பலிகள் நடந்திருக்கிறதென்று அவரால் விரல்விட்டு எண்ணிவிட முடியும். வேறெந்த வருடமும் பக்ரீதில் இவ்வளவு குறைந்த பலிகள் நடந்ததில்லை. ஆகையால்தான் மாமிசம் கிடைக்காமல் காகங்கள் தவிக்கின்றன. எவ்வளவு பறந்தும் எங்கும் அவற்றுக்கு மாமிசம் கிடைக்கவில்லை. அவை இங்குமங்கும் பறந்துபோய்விட்டன. ஆகையால் அவருக்குக் கவலை விட்டது. பொட்டலத்துக்குள் கையை விட்டு வெற்றிலைபாக்கு எடுத்துக் கொண்டு, சுண்ணும்பு டப்பியிலிருந்து சுண்ணும்பு எடுத்து உதட்டில் வைத்துக்கொண்டபோது அவருக்குத் தாம் முன்பொரு நாள் கொடுதத வாக்குறுதி நினைவுக்கு வந்தது.

எதிரில் பாதை. தூரத்தில் எங்கேயோ இந்துக்களின் திருவிழா ஒன்று நடக்கிறது. நயாபாடாவைத் தாண்டிப் போனுல் குதிரைப் பந்தய மைதானத்தில் இந்தச் சீசனின் கடைசிப் பந்தயம் நடக்கும். அங்கே போனுல் தேவலை.

வெகுநாட்களுக்குப் பிறகு இந்தப் பக்கம் வந்ததில் பழைய வாக்குறுதி ஞாபகத்துக்கு வந்துவிட்டது. பாதையில் கழுத்து மணியை ஆட்டிக்கொண்டு குதிரை போகிறது. பிஸ்வாஸ்பாடாவைச் சேர்ந்த காலூரபிஸ்வாஸின் அருமைக் குதிரை. நல்ல கறுப்பு, நெற்றி மட்டும் வெள்ளை. கழுத்தில் தங்கநிறச் சோரி மாலை தொங்கியது. குதிரை பாதையில் வெகுதூரம் சென்றுவிட்டது.

கோடைக் காலத்தின் முடிவில் ஏற்பட்ட மழையும் புயலும் சில விடுகளை இடித்துத் தள்ளிவிட்டன. வயலில் சணலின் இளம் பயிர் கள் காற்றில் அசைந்தன. வயல்களில் இங்குமங்கும் உழவர்கள் தலையில் தொப்பி அணிந்துகொண்டு, 'அல்லா, மேகத்தைக் கொடு! தண்ணியைக் கொடு!' என்று பாடியவாறே களையெடுத்துக் கொண் டிருந்தனர். சைத்ரமாதத்தின் தகிப்பும் வரட்சியும் போய்விட்டன. இப்போது வயல்கள் பசுமையாக இருக்கின்றன. 'வருடம் முடிந்து விட்டது, துக்கமும் முடிந்துவிட்டது' என்ற பாவம் மக்களின் முகத்தில். பஞ்சத்தின் கொடுமை அவ்வளவு இல்லை. ஏழைகள் இலைகளையும் கீரைகளையும் தின்று பிழைத்துக்கொள்ளலாம். வெயில் வேளையில் சணல் தளிர்களைக் கீரையாகச் சமைத்து ஒரு தட்டுச் சாதத்துடன் சாப்பிட்டால் சுகமாக இருக்கும்.

மூஸ்கிலாசான் பாத்திரத்துக்கு அடியில் பலியிட்ட ஆட்டின் மாமி சத்தை எடுத்து வைத்துக்கொண்டபோது அவருக்குத் தோன்றியது.

'கடைசிக் காலத்துக்கு ஆதரவாக ஜோட்டனைக் கூட்டி வைத்துக் கொண்டால் ... மாமிசத்தைப் போல் அவளும் பலிவுதான்.' கிராமத் துக்குப் போகத் தீர்மானித்தார் அவர்.

முஸ்கிலாசானில் எண்ணெய் இல்லை. அவர் தர்காவில் பூண்டு நனைத்து வைத்திருந்தார். அதன் எண்ணெயை எரித்தால் நல்ல வெளிச்சம் வரும். தர்காவுக்குத் திரும்பிப் போனால்தான் எண்ணெயை நிரப்பிக்கொள்ள முடியும். முஸ்கிலாசான் விளக்கை ஏற்றிக்கொண்டு, குழந்தைகளுக்குக் கண்களில் மையிட்டுக் கொண்டு ஆஸ்தானு சாகேபின் தர்காவில் ரசூலிடம் ஜோட்டனுக் காகப் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று நினைத்திருந்தார் அவர். ஆனால் ஒன்றுமே நடக்கவில்லை.

அவர் மசூதிக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கால்களைக் கழுவிக்கொண்டார். நூறு இடங்களில் கிழிந்த ஒரு ஜோடி துணிச் செருப்புக்களை அணிந்துகொண்டார். அதில் கால் நுழைக்கும் போது கட்டைவிரல் ஆமையின் கழுத்தைப் போல் செருப்புக்கு வெளியே நீட்டிக்கொண்டது. அப்போது ஓர் இஷ்டி குடும் பறவை கூவியதைக் கேட்டுப் பக்கிரி சாயபு, இன்று நாள் நன்றாக போகும் என்று சொல்லிக்கொண்டார்.

ஆபேத்அலியின் வீட்டு வாசலுக்கு வரும்போது, முஸ்கிலாசான் எல்லாம் கைகூடச் செய்துவிடும் என்று சொல்லிக்கொண்டே வந்தார். திருவிழா நாளில் ஜோட்டன் வீட்டில் இல்லை என்று அவருக்குப் புரிந்தது. அவர் வீட்டுப் பக்கம் பார்த்துக்கொண்டு, ''அவங்களைக் கொஞ்சம் கூப்பிட்டாத் தேவலை. ரொம்பத் தூரத்தி லிருந்து வரேன் அப்புறம் எப்போ மறுபடி வருவேன்னு சொல்ல முடியாது. அதனாலே அவங்களைக் கூட்டிக்கிட்டுப் போகலாம்னு நினைக்கிறேன்'' என்றார்.

பிறகு அவர் யார் தயவையும் எதிர்பாராமல் தம் கிழிந்த லுங்கியைப் புல்லின்மேல் விரித்து அதில் உட்கார்ந்துகொண்டார். மாலைகளை யும் தாயத்துகளையும் கழற்றிப் பத்திரமாக முட்டைகளுக்கு அருகில் வைத்தார். வேறொரு பக்கமும் திரும்பிப் பார்க்கவில்லை அவர்.

கல்யாணத்துக்கு வக்கீல், சாட்சி, மௌல்வி சாயபு எல்லாருமே தயாராயிருப்பதுபோல் இருந்தது, அவர் நடந்துகொண்ட விதம். அவர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு முகத்தை உயர்த்திய போது, ஜாலாலி ஜோட்டனுக்குச் செய்தி சொல்வதற்காக ஹாஜி சாயபுவின் வீட்டை நோக்கி ஓடுவதைக் கண்டார்.

ஜாம்ருல் மரத்தின் இடுக்கு வழியே பக்கிரி சாயபுவுக்கு ஜோட்டனின் முகம் மங்கலாகத் தெரிந்தது. அவளுடைய உடம்பில் முன்பிருந்த பலம் இல்லை. அவள் தன் குடிசைக்குள்

நுழைந்தாள். இப்போது பக்கிரி சாயபுவால் அவளைப் பார்க்க முடிய வில்லை. ஆனால் குடிசைக்குள்ளிருந்து வந்த சப்தங்களிலிருந்து அவள் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக்கொண் டிருக்கிறாள் என்று புரிந்துகொண்டார். நனைந்த சணலைப் போன்ற தலை மயிர். எவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டை போட்டுக்கொண்டிருக் கிறாள்! ஜோட்டன் வேலி இடுக்கு வழியே தம்மைப் பார்த்து மயங்குகிறாள் என்பதை அவர் திரும்பிப் பார்க்காமலேயே உணர்ந்து கொண்டார்.

அவர் மரத்தின் பக்கம் பார்த்துக்கொண்டு, "சீக்கிரம், சீக்கிரம்!" என்றார்.

ஜோட்டன் வெட்கத்தால் குன்றிப் போய் வீட்டுக்குள்ளிருந்து கிசு கிசுத்தாள், "ஆபேத் அலி வரட்டும்" என்று.

"வக்கீலைக் கூப்பிடணுமே!"

ஜோட்டனுக்கு இப்போது கொஞ்சம் துணிவு வந்தது. "ஆபேத் அலி வந்து எல்லாம் ஏற்பாடும் பண்ணுவான். நீங்க கவலைப் படாதீங்க!" என்றாள் அவள்.

பக்கிரி சாயபு தாம் சேர்த்து வைத்திருந்த மாமிசத்தின் மேல் கையை வைத்துக்கொண்டு, "பொழுது சாயறதுக்குள்ளே புறப் படணும். இல்லாட்டி மாமிசம் வீணாப் போயிடும்" என்று கூறியபடி, மாமிசப் பொட்டலத்தை மூக்கால் முகர்ந்தவாறே அவர், "மாமிசத்துக்கு மசாலா, உப்பெல்லாம் நல்லாப் போடத் தெரியுமா உனக்கு?" என்று கேட்டார்.

குடிசைக்குள்ளிருந்து 'களுக்' கென்று சிரித்துவிட்டாள் ஜோட்டன்.

"ஏன், கூட்டிக்கறதுக்கு முன்னாலே பரிசோதிச்சுப் பாக்கலா மேன்னு தோணுதா?"

"தோணுதுதான். ஆனா பொழுதாயிடுச்சே!"

ஜோட்டன் பல் விளக்கினாள். நன்றாக வாயைக் கொப்புளித்து விட்டுப் பானையிலிருந்து வெற்றிலைப் பாக்கு எடுத்து வாயில் போட் டுக் கொண்டாள். ஜாலாலி வருவது புதரிடுக்கு வழியே தெரிந்தது. அரசமரத்து உச்சியிலிருந்து வெயில் இறங்கிக்கொண் டிருந்தது.

வயல் வேலையாட்கள் தலையில் புல்கட்டும், சணல் பயிர்கட்டுமாக வந்துகொண் டிருந்தார்கள். திருவிழா நாளாயிருந்தும் ஆபேத்அலி டாகுர் வீட்டில் வேலைக்குப் போயிருந்தான். இப்போது அவன் திரும்பும் நேரந்தான். ஜோட்டன் தன் உதடுகளை வெற்றிலைச் சாற்றால் சிவப்பாக்கிக்கொண்டு கட்டம் போட்ட புடைவையை — அவள் பாபூர்ஹாட்டில் வாங்கியது — எடுத்துக் கட்டிக்கொண்டாள்

அப்போது தன் நெஞ்சே உலர்ந்துவிட்டதாகத் தோன்றியது அவளுக்கு. அவள் தன் உதட்டிலிருந்து கொஞ்சம் எச்சிலை எடுத்து

நெஞ்சில் தடவிக்கொண்டாள், தன் உலர்ந்த உடம்பை மிருதுவாக ஆக்கிக்கொள்ள. அவளுக்குத் தோன்றியது, பக்கிரி சாயபுவின் கிழட்டு எலும்புகள் ஆக்ராண் மாதத்து நெல்லைப் போல என்று. அவை புகலிடம் அளிக்கும், நிக்காஹ் செய்துகொள்ளும், திறந்த வெளிபோல் அம்மணமாக விளையாடும்.

அவளுடைய நெடுங்கால ஆசை நிறைவேறப் போகிறது. அல்லாவுக்கு வரி கொடுக்க இந்த வயதிலும் சரீரம் பாடுபடும்.

பொழுது இருக்கும்போதே ஆபேத் அலி வந்துவிட்டான். உடனேயே செய்யவேண்டிய காரியங்களைச் செய்து முடித்தான். கிராம மக்கள் சிலர் வாசலில் கூடினார்கள்.

ஆபேத் ஆலி எல்லாருக்கும் வெற்றிலை, பாக்கு, புகையிலை கொடுத்தான். ஹாஜிசாயபுவின் சிறிய பீபி ஜோட்டனுக்கு ஒரு கிழிந்த முகத் திரை கொடுத்தாள். ஜோட்டன் தான் நெருப்பிலிருந்து எடுத்து வந்த பித்தளைக் குவளையைக் கொண்டு வந்து பக்கிரி சாயுபுவுக்கு அருகில் வைத்தாள்.

ஜோட்டன் லாங்கல்பந்து சந்தையிலிருந்து இரண்டு மண் குடங்கள் வாங்கி வைத்திருந்தாள். அவற்றையும் மற்றச் சாமான்களையும், இரண்டு சட்டிகள், அவள் கோடைக் காலத்தில் சேர்த்து வைத்திருந்த சருகுகள், சணல் தட்டைகள் எல்லாவற்றையும் ஜாலாலிக்குக் கொடுத்துவிட்டாள். ஒரு கிழிந்த துணியில் தன் உடைந்த கண்ணாடி, டாகுர் விட்டுப் பெண்கள் தூக்கியெறிந்த மரச்சீப்பு, பீங்கான் தட்டு, சாப்பிட ஒரு சேவைப் பொட்டலம் இவற்றை எடுத்து வைத்துக்கொண்டாள். புறப்படும்போது வழக்கம்போல் ஆபேத் அலியின் கையைப் பிடித்துக்கொண்டு அழத் தொடங்கிவிட்டாள்.

இது நாலாவது நிக்காஹ். நான்காவது தடவையாக ஜோட்டன் தன் பிறந்தகத்தை விட்டு விட்டுக் கணவனுடன் புறப்படுகிறாள், கடவுளுக்கு உடலால் வரி கொடுக்க. பக்கிரி சாயபு எல்லாச் சாமான்களையும் கவனமாக மூட்டை கட்டினார். பித்தளைக் குவளையைத் திருப்பித் திருப்பிப் பார்த்துவிட்டு அதிலிருந்த தண்ணீரை உறிஞ்சிக் குடித்தார். மிச்சம் இருந்த தண்ணீரைக் கீழே கொட்டினார். இடக் கையில் பித்தளைக் குவளை, தோளில் துணி மூட்டை, வலக் கையில் முஸ்கிலாசான், வாயில் அல்லா அல்லது ஈசூவின் பெயர் — இவ்வாறாக அவர் புறப்பட்டார். ஜோட்டன் ஒரு கையில் ஒரு மூட்டையை எடுத்துக்கொண்டாள். ஆபேத் அலியின் வீட்டுக்குள் நுழைந்து முகத்திரையை அணிந்துகொண்டாள். பிறகு ஆபேத் அலியிடம், ''ஜாலாலியை அடிச்சி இம்சிக்காதே'' என்றாள். பிறகு ஜாலாலியிடம், ''அவனுக்கு வேள வேளைக்குச் சமைச்சுப் போடு'' என்று கூறினாள்.

இதையெல்லாம் சொன்னபோது ஜோட்டனின் கண்களில் நீர் வந்துவிட்டது. எவ்வளவு காலத்துக்குப் பிறகு இந்தக் கல்யாணம்! அவளுக்குத் தன் பதின்மூன்று குழந்தைகளின் நினைவு வந்தது. இந்தக் கண்ணீர் அவர்களுக்காகத்தானே? அவளுடைய அதிருஷ்டம், அவளுக்கு எங்கும் நிலையான புகலிடம் கிடைப்ப தில்லை. அவள் நான்காவது தடவையாகக் கணவன் வீடு போகிருள். அல்லாவுக்கு வரிகொடுக்கப் போகிருள். ஏதாவது ஒரு காரணத்தால் அல்லாவின் கருணை தீர்ந்துவிட்டால் அவள் மறுபடி திரும்பி வருவாள். ஸோனு லிபாலி நதியிலும் ஏரியிலும் அல்லிக்கிழங்கு பிடுங்கி, வீட்டுக்கு வீடு அவல் இடித்துக் கொடுத்து விசேஷங் களுக்குச் சம்சாரி வீடுகளில் உதவி வேலை செய்து.... இன்பமாகவோ துன்பமாகவோ தன் காலத்தைக் கழிப்பாள்.

முகத்திரை அணிந்துகொண்டு ஜோட்டன் நடந்துசென்ருள். அவள் மறுபடி குடித்தனம் செய்யப் போவதை அப்பிராந்தியத்தில் இருந்தவர்கள் பார்த்தார்கள். குடித்தனம் செய்து சில குழந்தைகள் பெற்றுவிட்டு அவள் திரும்பிவருவாள். ஆபேத்அலி மறுபடியும் அவளுக்குத் தென்பக்கத்துக் குடிசையைத் திறந்து கொடுத்துவிட்டு அவளோடு தகராறு செய்வான் என்று எல்லாருக்கும் தெரியும். அவள் போவதைப் பார்த்துவிட்டு இந்துபாடாவிலுள்ள பெண்கள் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து சிரித்தார்கள்.

புதருக்குள் பிரம்புப் பழம் தேடிக்கொண்டிருந்த மாலதி ஜோட்டனைப் பார்த்துவிட்டுத் தன் அண்ணியைக் கூப்பிட்டாள். "அண்ணி, இங்கே வந்து பாருங்க. ஜோட்டன் ஒரு பக்கிரியோட போரு." தீனபந்துவின் மனைவியும் ஜோட்டனைப் பார்க்க சப்தபர்ணி மரத்தடிக்கு ஓடிவந்தாள். டாகுர் வீட்டுப் பெண்களும் குளக் கரைக்கு ஓடிவந்தார்கள்.

கையில் முஸ்கிலாசானும், தோளில் மாமிசப் பொட்டலமும், கழுத்தில் தாயத்து மாலையுமாகப் பக்கிரிசாயபு நிமிர்ந்து பார்த்துக் கொண்டு நடந்தார். நூறு கிழிசல்களுக்கு ஒட்டுப் போட் டிருந்தது, அவர் அணிந்திருந்த நீண்ட அங்கியில். கிடைத்த துணித் துண்டுகளைக் கொண்டு ஒட்டுப் போட்டிருக்கிருர் அவர். அங்கியும் அல்லா படைத்த உலகத்தைப் போல, உலகத்தில் எது எங்கே

கிடைக்கிறதோ அது அங்கேயே வைக்கப்பட்டிருக்கிறது அல்லவா அதைப்போல!

வயல்கள், செடிகொடிகள், பறவைகள், ஆற்றங்கரை, தர்மூஜ் வயல் — எல்லாமே ஒரு பெரிய அங்கியில் போடப்பட்டுள்ள ஒட்டுக்கள் தாம். ஆச்சரியமான செழிப்பு மண்ணாலும் தண்ணீராலும் உலகத்தை அழகாக்கியிருக்கிறார் அல்லா.

முகத்திரை அணிந்துகொண்டு வழி நடக்க ஜோட்டன் சிரமப்படுவதைக் கண்டார் பக்கிரி சாயபு. ஆனால் இந்தப் பழக்கமான இடத்திலாவது முகத்திரை யணிந்துகொண்டு போகாவிட்டால் மரியாதையாக இருக்காது. அவர் அவளை வேகமாக நடக்கச் சொன்னார்.

ஜோட்டன் முகத்திரைக்குள் பித்தளைக் குவளையை வைத்துக் கொண்டு வேகமாக நடக்க முயன்றாள். கிராமத்தை விட்டுப் போகுமுன் நரேன்தாஸின் விதவைத் தங்கை மாலதியிடம் ஏதோ சொல்லிவிட்டுப் போக ஆசை அவளுக்கு. மாலதியின் வாத்துக்கள் 'க்வாக், க்வாக்' என்று கத்திக்கொண் டிருந்தன. 'ஆண் வாத்து ஒன்று இல்லாமல் மாலதிக்கு ரொம்பக் கஷ்டம். மாலதி தன் உடம்பால் அல்லாவுக்கு வரி கொடுக்கமாட்டாள்' என்பது குறித்து ஜோட்டனுக்கு வருத்தமாயிருந்தது.

ஆறு, வாய்க்கால்களைக் கடந்தபோது ஜோட்டனின் கையைப் பிடித்து மூங்கில் பாலத்தின்மேல் ஏற்றிவிட்டார் பக்கிரிசாயபு. கொள்முதல் செய்துகொண்டு வருகிறார் அவர். கையிலிருந்த முஸ்கிலாசான், சிங்காடாப் பழம் போல் மூன்று பக்கத்தில் மூன்று முகங்களாக இருக்கிறது. மை சேர்த்து வைக்கப்பட்டிருந்த குழியில் ஒரு மெல்லிய குச்சி இருக்கிறது. நான்கு கோசதூரம் போகவேண்டும். ஜேஷ்டமாதமாதலால் ஆற்றில் நீர் பெருகத் தொடங்கிவிட்டது.

பக்கிரிசாயபு ஜோட்டனை ஒரு பூவரச மரத்தடியில் நிறுத்திவைத்து விட்டு, எதிரிலிருந்த சந்தையில் சாமான் வாங்கப் போனார். அவர் வீட்டுக்கு விருந்தாளி வந்திருக்கிறாள். அவள் வீட்டில் விளக்கேற்றி வைப்பாள்.

தூரததில் தர்காவுக்குப் பக்கத்தில் பக்கிரி சாயபுவின் குடிசை. திருவிழாக் காலத்தில் தர்காவில் புதைகல்லுக்கு மேலே நிறைய மெழுகுவர்த்திகள் எரியும். அவற்றின் வெளிச்சத்தில் புதர்களெல்லாம் வெள்ளையாகத் தெரியும். அவர் கறுப்பு அங்கி அணிந்து கொண்டு முஸ்கிலாசான் விளக்கை ஏற்றிக்கொண்டு இருட்டில் வயல்களைக் கடந்து சம்சாரிகளின் வீட்டுக்குப் போவார்.

தடித்த குரலில், "முஸ்கிலாசான் காரியம் கைகூட வைக்கும்!" என்று கத்துவார். அதைக் கேட்ட மக்கள் பயப்படுவார்கள். அவருடைய கண்கள் செம்பரத்தைப் போலச் சிவந்திருக்கும். பூண்டு

எண்ணெயைக் கண்ணில் விட்டு அதைச் சிவப்பாக வைத்துக்கொள்ளாவிட்டால் அவரைப் பார்த்து யாரும் பயப்படமாட்டார்கள். அவருக்குக் காசு போடமாட்டார்கள். இப்படி வெளியில் புறப்பட்டு விட்டால் பிறகு வீடு திரும்பவே மனம் இருக்காது அவருக்கு. இருட்டில் விதவிதமான புற்களில், வயல்வரப்புகளில் ஒரு பயங்கர ரகசியம் இருப்பது அவருடைய உணர்வில் படும். இந்த அதிசய ரகசியத்துக்குள் அல்லா மறைந்திருக்கிறார் என்று தோன்றும் அவருக்கு.

சந்தையிலிருந்து திரும்ப வெகு நேரமாகவில்லை அவருக்கு. சந்தையைத் தாண்டினால் லோக்நாத் பிரம்மசாரியின் ஆசிரமம். அவர் ஜோட்டனைக் கேட்டார், "பாபா லோக்நாத்தைத் தரிசனம் பண்ணிட்டுப் போகலாமா?" என்று.

ஜோட்டன் முகத்திரைக்குள்ளிருந்து பதில் சொன்னாள்: "அப்போ ஒரு அணுவுக்குக் கல்கண்டு வாங்கிக்கங்க."

பக்கிரி சாயபு, திடீரென்று நினைவு வந்தவர்போல், "பலி மாமிசத்தை எடுத்துக்கிட்டு அவர்கிட்டே போகலாமா? ஜேஷ்ட மாசம், பாபாவோட திருவிழா நடக்குமே, அதுக்கு வாலாம். இனியும் தாமதிக்க வேண்டாம். காலா காலத்திலே போய்ச் சேரணும். இன்னும் ஒரு கோச தூரம் இருக்கு. கொஞ்ச வேகமாக நட."

அவர்கள் வேகமாக நடந்தார்கள்.

பக்கிரி சாயபு சொன்னார்: "பீ ரொம்ப நாளாகவே நினைச்சுக்கிட்டிருந்தேன், உங்கிட்டே வரணுமின்னு. ஆனா தைரியம் வரல்லே."

"ஏன் இப்படியெல்லாம் சொல்றீங்க?"

"என் குடிசை ரொம்பச் சின்னது. சுத்தி ஒரே காடு. புதைகல். பெரிய பெரிய காட்டு வாகைமரம். அங்கே வசிக்க உனக்குப் பயமாயிருக்கும் ராத்திரியிலே."

'நீங்க என் கண்மணி!' என்று சொல்ல ஜோட்டனுக்கு ஆசை. ஆனால் இவ்வளவு சீக்கிரம் காதல் பேச்சுப் பேச வெட்கமாயிருந்தது அவளுக்கு.

பொழுது சாய்ந்துகொண்டிருந்தது. சூரியன் மேகனா நதியின் மறுகரையில் அஸ்தமித்துக்கொண்டிருந்தான். பக்கிரிசாயபு ஒரு குளத்தில் கைகால்களைக் கழுவிக்கொண்டு தொழுகை செய்ய உட்கார்ந்தார். அவருக்கு அருகில் ஜோட்டனும் உட்கார்ந்தாள். சூனியமான வயல்வெளி, அஸ்தமிக்கும் சூரியன். எதிரில் தெரியும் கிராமந்தான் சுல்தான்பூர் என்று தோன்றியது ஜோட்டனுக்கு. அவளுக்கு மிகவும் பிடித்தமான கிராமம் சுல்தான்பூர். அவளுடைய முதல் கல்யாணத்தின் நினைவு வந்தது. அந்தக் கிராமத்தில் பெரிய பிஸ்வாஸின் சிறிய பீபியாக இருந்தாள் அவள். பேகம் மாதிரி இருந்தாள். இப்போது அவளுடைய குழந்தைகள் வயல்களில் சுற்றிக்

கொண்டிருக்கலாம். தன் முதல் கல்யாணத்தின் நினைவு அவளைச் சோகத்தில் ஆழ்த்தியது.

அவர்கள் ஆஸ்தாஞ சாகேபின் தர்காவை அடைய இரவாகி விட்டது. எங்கும் சமாதிகள். செடிகளுக்கும் புதர்களுக்கும் நடுவில் கற்கள் பதித்த பெரிய மேடை. பிணத்தைப் புதைக்க வந்த யாரோ எல்லாச் சமாதிகளின் மேலும் மெழுகுவர்த்திகள் ஏற்றிவைத்துப் போயிருக்கிறார்கள். இருட்டில் கைத்தடியால் தரையைத் தட்டிக் கொண்டு தன் குடிசையில் நுழைந்தவாறே பக்கிரி சாயபு, "பயப் படாதே பீபி! இப்போ நீ முகத்திரையை எடுத்துட்டுக் காத் தாட இருக்கலாம். நான் போய் மெழுகுவர்த்தி விளக்கிலேருந்து முஸ்கிலாசானை ஏத்திக்கிட்டு வரேன்" என்றார்.

பக்கிரி சாயபு போனதும் ஜோட்டன் முகத் திரையைக் களைந்தாள். இருட்டில் அவளுக்கு ஒன்றும் தெரியவில்லை. இப்படிப்பட்ட கும்மிருட்டை அவள் தன் வாழ்க்கையில் ஒருபோதும் கண்டதில்லை. ஒரு நாயின் குரைப்பு ஒலியோ, கோழி கூவும் ஒலியோகூடக் கேட்க வில்லை. தூரத்துக் கிராமங்களில் விளக்கு எரிவது கூடத் தெரிய வில்லை. மக்கள் வசிக்கும் இடங்களிலிருந்து பல யோசனை தூரம் வந்துவிட்டதாகத் தோன்றியது அவளுக்கு. பயத்தால் அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது. காட்டில் உலர்ந்த சருகுகளின் சரசர ஒலி, இறந்துபோனவர்களின் ஆவிகள் யுத்தததுக்கு ஒத்திகை பார்ப்பதற்காக இறங்கிவந்திருப்பது போல் இருந்தது.

தூரததில் முஸ்கிலாசானின் வெளிச்சம்; ஓநாயின் ஓலம். மரஞ் செடிகளுக்கிடையே தெரியும் பக்கிரி சாயபுவின் தோற்றம் யாரோ ஒரு ரதுலை நினைவுறுத்தியது. எதிரில் பல மருதமரங்கள் கிளைகளை உயரே நீட்டிக்கொண்டு நின்றன. அவற்றுக்குக் கீழே புதிதாகக் குழி தோண்டுகிறார்கள். புதிய சவப் பெட்டியின் மணம ஜோட்டனை எட்டியது. ஜனங்கள் பேசிக்கொண்டார்கள், சுலதான்பூரின் பெரிய பிஸ்வாஸுடைய சின்ன பிபியின் முதல் பிள்ளை செத்துப் போய் விட்டான் என்று

சவபெட்டியைக் குழிக்குள் இறக்கியவர்களை ஜோட்டனால் பார்க்க முடியவில்லை. பக்கிரிசாயபு முஸ்கிலாசான் வெளிச்சத்தில் எதையோ தேடித் திரிந்தார். இப்போதுதான் இங்கே முதல் முறையாக மனித அரவம் கேட்டது ஜோட்டனுக்கு. புதைக்க வந்தவர்கள் திரும்பிப் போனார்கள். கையில் அரிக்கேன் விளக்குடன் அவர்கள் கீழே இறங்கி வயலுக்குள் நடந்தார்கள். 'பாவம், பெரிய பிஸ்வாஸ்! கடவுள் தயவு பரிபூர்ணமா இருந்தது அவருக்கு. இப்போ அவரோட அன்பு மகன் செத்துப்போயிட்டான்.'

பெரிய பிஸ்வாஸின் பெயரைக் கேட்டதும் ஜோட்டனின் முகம் உலர்ந்துவிட்டது. அவள் பக்கிரி சாயபுவுக்காகக் காத்துக்கொண் டிருந்தாள். அவர் வந்தால் செய்தி தெரியும். அவர்கள் சுல்தான்பூரின் பெரிய பிஸ்வாஸைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்கள். ஆனால் அவர்கள் பேசியது பூராவும் தெளிவாக அவள் காதில் விழவில்லை.

இப்போது மக்கள் கண்ணுக்குத் தெரியவில்லை. அரிக்கேன் விளக்கின் ஒளி மட்டும் இருட்டில் தெரிந்தது.

செத்துப் போனது யார் என்று ஜோடடன் கேட்டதும் பக்கிரி சாயபு விளக்கை ஜோட்டனின் முகத்துக்கு எதிரே உயர்த்தி உற்றுப் பார்த்தார். பிறகு அவளோடு உராய்வது போல் நெருங்கி நின்றுகொண்டு சொன்னார்: "நீ இப்படிக் கேட்கிறது நல்லாயில்லே, பீபி! இப்ப நீ பக்கிரி சாயபுவோட கடைசி பீபி!"

பிறகு அவர் தம் முகத்தை அவள் முகத்தருகே கொண்டுவந்து, தன்னை மறந்து அவளைப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு உணர்ச்சி பொங்கச் சொன்னார்: "என்னை விட்டுட்டுப் போகமாட்டேன்னு சத்தியம் பண்ணு."

"போகமாட்டேன்."

"சரி, இப்போ மாமிசத்தைச் சமைச்சுப் போடேன்."

குடிசையில் பலவிதப் பாத்திரங்கள் இருந்தன. நல்லவை, உடைந்தவை இரண்டு வகையும். வெளியில் குளம். குடிசைக்குப் பின்புறம் உப்பரித்த பழைய செங்கல் மசூதி. பக்கிரி சாயபு விளக்கை ஒரு மூங்கிலில் தொங்கவிட்டார். உடைகளையும் தாயத்து மாலை களையும் கழற்றி ஒரு கௌபீனத்தை மட்டும் அணிந்துகொண்டார். குளத்திலிருந்து தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தார். சமையலான தும் மாமிசத்தைச் சாப்பிட்டுவிட்டு இருட்டில் ஜோட்டனுக்கு எதிரில் உட்கார்ந்துகொண்டு கதை பேச ஆரம்பித்தார்.

இருட்டு, இந்தச் சைத்தானின் ராஜ்யத்தை விழுங்கிக்கொண் டிருந்தது. புதர்களிலும் காடுகளிலும் ஆவிகளும் தேவதைகளும் உலாவிக்கொண்டிருப்பது போல் தோன்றியது. சில ஓநாய்கள் மெதுவாகப் புதிய புதைகுழியை அணுகிக்கொண் டிருந்தன. புதிய மாமிசம் தின்னும் ஆசையில் அவை 'க்யாங்க், க்யாங்க்' என்று ஒலியெழுப்பின.

"எனக்கு ரொம்பப் பயமா இருக்கு" என்று ஜோட்டன் சொன்னாள். பக்கிரி சாயபுவுக்குத் தெரியும், சுல்தான்பூரின் பெரிய பிஸ்வாஸின் சிறிய பீபியின் பெரிய பிள்ளை காலராவில் இறந்துவிட்டான். அவனுடைய பிணத்தைத் தோண்டியெடுக்கத்தான் ஓநாய்கள் வருகின்றன என்று. அவர் அவளுக்கு ஆறுதல் சொன்னார்:

"ஓநாய்கிட்டே இவ்வளவு பயமா? பயப்படாதே! அதுக பசியிலே இப்படித்தான் செய்யும். உனக்கு ஞாபகம் இருக்கா? அஞ்சு வருஷத்துக்கு முன்னலே எனக்கும் ஒரு தடவை இந்த மாதிரி பசி வந்தது. நீ மீன்வத்தலேக் குழம்பு பண்ணி வயிறு நிறையச் சாப்பாடு போட்டியே! வயிறு நிறைஞ்சுட்டா அதுக இது மாதிரி கத்தாது."

ஜோட்டனுக்குப் பழைய நினைவுகள் வந்தன. அன்று பக்கிரி சாயபு கம்பீரமாகக் கிழிந்த ஜமக்காளத்தில் சாப்பிட உட்கார்ந் தார். இரண்டு தடவை அல்லாவின் பெயரைச் சொல்லிவிட்டு ஆகாயத்தைப் பார்த்தார். ஆகாயம் தெளிவாக இருந்தது. சுத்த மான திண்ணையில் உட்கார்ந்துகொண்டு தெளிவான ஆகாயத் துக்குக் கீழே, சாப்பாட்டைக் 'கப, கப' என்று விழுங்க முடிய வில்லை அவரால். சம்பிரமமாக உட்கார்ந்தார். ஒரு தட்டு முரட்டுச் சோற்றையும் மீன் குழம்புடன் கலந்து கலந்து நிதானமாக ரசித்து ரசித்துச் சாப்பிட்டார். இங்கே சாப்பிடுவது போல் கொஞ்சமும் அவசரம் இல்லை. கீழே இரண்டொரு பருக்கைகள் விழுந்து விட்டன. அவற்றை அவர் ஜாக்கிரதையாக விரல் நுனியால் எடுத்து வாய்க்குள் போட்டுக்கொண்டார். ஒவ்வொரு பருக்கையும் அல்லா அளித்த விலையுயர்ந்த செல்வம், அது தீர்ந்துவிட்டால் பின்னல் கிடைக்காது.

இப்போது ஜோட்டனுக்கு ஞாபகம் வந்தது, ரசித்து ரசித்துச் சாப்பிடுவது பக்கிரி சாயபுவின் நெடுங்கால வழக்கம். இப்போது இருட்டில் அவளேயும் ரசித்து ரசித்து அநுபவித்தார். அவருடைய சரீரததில் சக்தி இல்லை. ஆயினும் பொக்கை வாயால் மாமிசத்தைக் கடித்துத் தின்பதுபோல் அவர் கைகளால் இங்குமங்கும் தடவிப் பார்த்தார். கொஞ்சங் கொஞ்சமாக ஜோட்டனும் அவருக்கு அடங்கிப் போனுள். இப்போது ஓநாய்களின் கூக்குரல் காதில் விழவில்லை; சுலதான்பூரின பெரிய பிஸ்வாஸ் நினைவுக்கு வரவில்லை.

ஜோட்டன் பதின்மூன்று குழந்தைகள் பெற்றவள் என்று இந்த இருட்டில் சொல்ல முடியாது. அவளுடைய பெரிய பிள்ளை கை கால்கள் மரமாகிச் சவப்பெட்டிக்குள் படுத்துக் கிடக்கிருன். ஆனுல் அவளுக்கோ தாயாகும் சபலம் குறையவில்லை. அவள் பக்கிரி சாயபுவின் மடியில் படுத்துக்கொண்டு, "சந்திரன் போன்ற உங்க மூஞ்சியைக் கொஞ்சம் பாக்கிறேனே, பக்கிரிசாயபு!" என்ருள்.

ரசித்து ரசித்துச் சாப்பிடுவதில் மூழ்கியிருந்தார் பக்கிரிசாயபு. 'உன் முகம் சந்திரன் மாதிரி இருக்கு. நீ என் கண்மணி! தண்ணி மாதிரி உன்னேக் கட்டிக்க ஆசையா இருக்கு!' என்பன போன்ற காதல் வார்த்தைகள் கூட அவர் வாயிலிருந்து வரவில்லை. ஜோட்டனும்

அவரிடமிருந்து தன் பேச்சுக்குப் பதிலை எதிர்பார்க்கவில்லை. அவளும் ரசித்து ரசித்துச் சாப்பிடுவதில் ஈடுபட்டாள்.

சின்னச் சிற்றப்பா லால்ட்டுவையும் பல்ட்டுவையும் அவர்களுடைய படிப்பறையில் அதட்டிக்கொண் டிருந்தார். சோனுவின் படிப்பு முடிந்துவிட்டது. இப்போது அவனுக்கு ஓய்வு. ஆனால் அவனுக்கு வெளியறையில் தனியாக உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. அவன் பைத்தியக்காரப் பெரியப்பாவை மானசீகமாகத் தேடத் தொடங்கினான்.

அம்மா சமையலறையில் பச்சரிசி சமைத்துக்கொண் டிருந்தாள். பச்சரிசி சாதம், கொய்மீன் வதக்கல், வாசனையான நெய். அவனுக்கு இப்போதே பசி எடுப்பதுபோலிருந்தது. அவன் செம்பரத்தை மொட்டைப் பறித்துக்கொண்டான். லால்ட்டுவும், பல்ட்வும் படித்து முடித்துவிட்டால் எல்லாருக்கும் ஒன்றாகச் சாப்பாடு போடுவாள்.

அவன் நாற்புறமும் பெரியப்பாவைத் தேடிக்கொண்டு நடந்தான். தோட்டத்தில் காசித் தும்பைப் பூக்கள் பூக்கின்றன. மல்லிகைப் பூவின் மணம் வந்தது. தொங்கட்டான் கொடிகள் மரங்களிலிருந்து தொங்கிக்கொண் டிருந்தன. இந்தத் தோட்டத்தில் விதவிதப் பூக்கள். செம்பரத்தைப் பூவில்தான் எவ்வளவு வகை! சிவப்பு வெள்ளை, சந்தன நிறம்.

விடியற்காலையில் அவன் பெரியம்மாவுடன் பூப்பறிக்க வருவதால் பூக்களின் பெயர் மனப்பாடமாகிவிட்டது. காசித் தும்பைச் செடிகளுக்குக் கீழிருந்த புல்லில் பெரியப்பா படுத்துக்கொண் டிருப்பதை அவன் பார்த்தான். அவன் அங்கே போய்ப் பெரியப்பாவின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டான். அவர் ஒரு கையைத் தலைக்குக் கீழே வைத்துக்கொண்டு இன்னொரு கையை முகத்துக்கு நேரே கண்ணாடியைப் போல் வைத்துக்கொண் டிருந்தார், அந்தக் கைக்குள் உலகத்தையே பார்க்க விரும்புபவர்போல. சோனு மெதுவாக வந்து அவருடைய வயிற்றின் மேலே உட்கார்ந்துகொண்டு இலைகளின் இடுக்கு வழியே பார்த்தான். பலவேறு வண்ணத்துப் பூச்சிகள் செடிகளின் மேல் உட்கார்ந்திருந்தன. பெரியப்பா கையைப் பார்க்கவில்லை, வண்ணத்துப் பூச்சிகளைத்தான் பார்த்துக்கொண் டிருக்கிறார் என்று அவனுக்குப் புரிந்தது. அவன் அவரை, 'பெரியப்பா!'' என்று கூப்பிட்டான்.

மணீந்திரநாத் பதில் பேசாமல் சும்மா சிரித்தார்.

சோனு கேட்டான்: ''ஹுக்கா பிடிக்கறீங்களா? ஹுக்கா கொண்டுவந்து தரவா?''

''கேத்சோரத்சாலா!''

''உங்களுக்குப் பசிக்கவே பசிக்காதா?''

"கேத்சோரத்சாலா!"

சோனுவுக்குக் கோபம் வந்துவிட்டது. "அப்போ நானும் உங்களைக் 'கேத்சோரத்சாலா' என்று சொல்லுவேன்."

மணீந்திரநாத் இப்போதும் சிரித்தார். செடிக்கிளையில் உட்கார்ந்திருந்த வண்ணத்துப் பூச்சிகளைச் சோனுவுக்குக் காண்பித்துவிட்டு இரண்டு மூன்று புற்களை எடுத்து வாயில் போட்டுக்கொண்டார். அப்புறம் வெகுநேரம் வாயை 'ஆ'வென்று திறந்து வைத்துக்கொண்டிருந்தார். 'என் வாயைப் பார், தொண்டையைப் பார், உள்நாக்கைப் பார்!' என்று சொல்வதைப் போல இருந்தது அவர் செய்கை.

சாம்சுத்தீன் ஏதோ காரியமாய் இந்தப் பக்கம் படகோட்டிக்கொண்டு வந்தான். ஈசம் அதிகாலையிலேயே படகை எடுத்துக்கொண்டு பயிர் அறுவடைக்குப் போய்விட்டான். இது பாத்ரமாதம்.

மணீந்திரநாத் பெரிய பெரிய காசித் தும்பைச் செடிகளுக்குப் பின்னல் தம்மை மறைத்துக்கொண் டிருந்தார். வெளியிலிருந்து யாரும் அவரைப் பார்க்க முடியாது. அங்கே நுழைந்துவிட்டதால் சோனுவும் கண்ணுக்குத் தெரியவில்லை. அங்கு வெறும் செடிகளும் ஏராளமான பூக்களும் — சிவப்பு, நீலம், மஞ்சள் ஆகிய பலநிறப் பூக்கள் — மட்டுமே பூத்துக் கீழே விழுந்து கிடப்பதாகத் தோன்றும். படகுத் துறையைக் கடந்தால் வாய்க்கால். அதில் படகுகள் சென்றன. பாபூர்ஹாட்டின் புடைவைகள் படகில போகின்றன. அவை பாயை விரித்துக்கொண்டு ஸோனலி நதியில் போய்ச் சேரும்.

சாமு பாதிமாவின் கையைப் பிடித்துக்கொண்டு சிறிய பாபுவிடம் போனன். "பாபுஜி, உங்க பெட்ரோமாக்ஸ் விளக்கை வாங்கிக்கிட்டுப் போகவந்தேன்."

"பெட்ரோமாக்ஸ் எதுக்கு?"

"பூலனுக்கு நிக்காஹ் பண்ணப் போறேன்."

"எந்த ஊரிலே?"

"புஸ்பாந்தியிலே."

"வெளியறையிலே உட்காரு. விளக்குச் சரியா இருக்கான்னு பார்க்கிறேன்."

சாமு தோட்டத்தைக் கடந்தபோது பெரிய பாபு செடிகளுக்குக் கீழே படுத்திருப்பதைப் பார்த்தான். அவருடைய கை தலைக்குக் கீழே இருந்தது. சோனு அவரைக் கட்டிக்கொண் டிருந்தான். அவர்கள செடிகளில் எதையோ கவனமாகத் தேடினர்கள்.

பாதிமா சோனுவைப் பார்த்ததும் சாமுவிடம் சொன்னள், "நான் போறேன், பாபாஜி!" என்று.

"எங்கே போவே?"

"பெரிய பாபுகிட்டே."

“போ. ஆனா அவரைத் தொட்டுடாதே! சோனு பாபுவையும் தொடாதே.”

இந்தப் பூச்செடிகள், பாதாபஹார் மரங்கள், எலுமிச்சை மரங்கள் இவற்றைக் கடந்தால் கிராமத்துக்குப் போகும் வழி வரும். பாதிமா திரும்பிப் போய் அந்த வழியில் உட்கார்ந்துகொண்டாள். “சோனு பாபு!” என்று கூப்பிட்டாள்.

சோனு செடிகளுக்குள்ளிருந்து விழித்து விழித்துப் பார்த்தான். “நீயா?”

பாதிமா ‘களுக்’கென்று சிரித்தாள். “பாபாவோட வந்திருக்கேன்.”

அவள் இடையில் பாபூர்ஹாட் புடைவையொன்றை அணிந்திருந்தாள். மூக்கில் மூக்குத்தி. மை தடவிய சிறிய கண்கள். கால்களில் கொலுசு. நடந்தால் ‘ஜல் ஜல்’ என்று ஒலிக்கும். உடலின் நிறம் பசுமை. அழுத்தமான இலையின் நிறத்தில் முகம்.

சோனு “உள்ளே வரியா?” என்று கேட்டான்.

“எப்படி வருவேன்?”

“ஏன், செடிகளை விலக்கிட்டு வாயேன்.”

அவள் தவழ்ந்து தவழ்ந்து, மலர்களைக் கடந்து உள்ளே வந்தாள். எலுமிச்சை மரப் புதரில் நுழைந்து சோனுவின் பக்கத்தில் உட்கார்ந்து, வளர்ப்புப் பறவைபோல முகத்தை வைத்துக்கொண்டு வண்ணத்துப் பூச்சிகளைப் பார்த்தாள். அவளுக்கு ஆச்சரியம், அவள் இதுவரை பார்த்ததேயில்லை. அவள் காலடியில் ஒரு கந்தராஜச் செடி. வெள்ளைப் பூக்கள் செடி முழுவதும் பூத்திருந்தன. செடிக்குக் கீழே அந்த நாய் படுத்துக்கொண்டு வாலை ஆட்டியது. பாதிமா தனக்குப் பழகியவளாகத் தோன்றவில்லை. ஆகையால் அது வாயைத் திறந்து உறுமலாமா என்று பார்த்தது. ஆனால் அவளுக்கும் சோனு பாபுவுக்கும் இருந்த சிநேகத்தைப் பார்த்துவிட்டுப் பேசாதிருந்தது.

மணீந்திரநாத் அப்படியே படுத்திருந்தார். கிளைகளுக்கு மேலே முடிவற்ற வானம். அங்கே மேகங்களுக்குப் பின்னால், வெகுநாட்களுக்கு முன் ஸோனாலி பாலி நதியில் கண்ட படகைப் போல், ஒரு முகம் மிதந்துகொண்டிருந்ததைக் கண்டார் அவர். வழக்கம் போல் அவருடைய கவிதைப் பறவைகள் அம்முகத்தின் மேல் பறந்துகொண்டிருந்தன. அவர் முணுமுணுத்தார்: “I have examined and do find of all that favour me, there's none I grieve to leave behind, but only, only thee!”

மூக்குத்தி அணிந்த பாதிமா வளர்ப்புப் பறவை போல் உட்கார்ந்துகொண்டு மணீந்திரநாத் முணுமுணுப்பதைக் கேட்டுச் சிரித்தாள். அவளுக்கு அது ஒன்றும் புரியவில்லை. ஒன்றும் புரியாவிட்டால்

அவள் சிரிப்பாள். "பெரியப்பா இங்கிலீஷ் பேசுரு. நானும் பெரியப்பா மாதிரி பெரியவனு ஆனப்பறம் இங்கிலீஷ் பேசுவேன். இப்பவே நான் ஏ, பி, சி, டி படிப்பேனுக்கும்!" என்று சோனு சொன்னுன்.

பாதிமா பதிலுக்கு, "என்னுடை பாபா என்னையும் படிக்க வைக்கறேன்னு சொல்லியிருக்கார். நானும் படிப்பேன்" என்ருள்.

சோனு சொன்னுன். "நான் காலம்பற வாழையிலையிலே நாணல் குச்சியாலே ஏ, பி, சி, டி எழுதினேன்." 'நிர்மல சரணே, ரத்னே விபூஷித குண்டலகர்ணே' சொன்னேன்" என்றும் சொல்ல நினைத்தான் அவன்.

ஒவ்வொரு நாளும் படிப்பு முடிந்ததும் சோனு படகுத் துறையில் நின்றுகொண்டு எழுதிய இலைகளைக் கிழித்து எறிவான். அவற்றைத் தண்ணீரில் மிதக்கவிட்டு, சரஸ்வதியை வணங்கிக்கொண்டே பாடுவான். "வாங்க வாங்க சரஸ்வதி, போயிடாதீங்க! உங்க கையைக் காலைப் பிடிச்சுப் படிப்புக் கத்துக்கறேன்."

ஆனால் சோனு இதையெல்லாம் பாதிமாவிடம் சொல்லவில்லை. காரணம், அவனுடைய பெரியப்பா கண்களை அகல அகல விரித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். எங்கேயாவது புறப்பட்டுப் போவதற்கு முன்னல் இப்படி மலர மலர விழிப்பது அவர் வழக்கம். சோனுவும் பாதிமாவும் பேசிக்கொண்டிருந்தது அவருக்குப் பிடிக்கவில்லை. பாதிமா ஒரு வார்த்தை சொன்னுல் இரண்டு வார்த்தை சொல்கிருன் சோனு.

"பாபா சொல்ருர், தந்திர்ஹாட்டிலேருந்து எனக்குப் புஸ்தகம் வாங்கிக்கிட்டு வருவாராம். நான் மசூதி வராந்தாவிலே உட்கார்ந்துகிட்டுப் படிப்பேன்!"

பைத்தியக்கார டாகுர் சொன்னுர். "கேத்சோரத்சாலா!"

சோனு சொன்னுன். "நீங்கதான் கேத்சோரத்சாலா!"

இப்போது பைத்தியக்கார டாகுர் சோனுவைக் கட்டிப் பிடித்துக்கொண்டு வெளியே வந்து ஒரு வண்ணத்துப் பூச்சியை அவன் பிடிக்க உதவி செய்தார். பாதிமாவும் அவர்களுடன் கூட நடந்தாள். வண்ணத்துப் பூச்சியை ஒரு டப்பாவில் அடைத்து வைத்துக்கொண்டு சோனு, "இது உனக்கு வேணுமா?" என்று பாதிமாவைக் கேட்டான்.

"வேணும்."

"எப்படி எடுத்துக்கிட்டுப் போவே?"

பாதிமா கழுத்தில் கல்மாலை அணிந்திருந்தாள். அவள் இடுப்பில் செருகியிருந்த புடைவை நுனியை அவிழ்த்துவிட்டுக்கொண்டாள். ஒரு சேம்பு இலையைப் பறித்துவந்தாள். மரநிழலில் நின்றுகொண்டு

இருவரும் வண்ணத்துப் பூச்சியை இலையில் வைத்து மூடினார்கள். சோனா அதைப் பாதிமாவின் முன்றானையில் கட்டித் தந்துவிட்டுப் பெரியப்பாவைத் தொடர்ந்து ஓடினான். மணீந்திரநாத் அவர்களைக் கூட்டிக்கொண்டு மருதமரம் வரையில் நடந்துபோனார். இப்போது மழைக் காலம். ஆகையால் படகும் ஆறுமே கண்ணுக்குத் தெரிந்தன. ஏராளமான படகுகள், நுங்கு ஏற்றிச் செல்லும் படகுகள், அன்னாசிப் படகுகள், பாகற்காய் ஏற்றிச் செல்லும் படகுகள் எல்லாம் ஆற்றில் சென்றன. இந்த ஆற்றையும் படகுகளையும் பார்த்தாலே எங்கோ பாலின் படுத்திருக்கிறாள் என்று தோன்றியது. பாலினின் முகமும் நினைவும், அவரைக் கயிற்றால் இழுக்கப்படும் படகுபோல் இழுக்கின்றன.

தெற்குப் பக்க அறையில் லால்ட்டுவும், பல்ட்டுவும் இன்னும் படிக்கிறார்கள். அவர்களுக்கு இன்னும் ஓய்வு கிடைக்கவில்லை. சோனா குளத்தங்கரையில் சுற்றுவதைப் பார்த்து அவர்களுக்கு எரிச்சலாக இருந்தது. குளத்தங்கரையில் சோனா, பெரியப்பா, தோடர்பாகைச் சேர்ந்த அந்தச் சிறிய பெண், மான்குட்டி போல் குதிப்பாள், ஆடுவாள். சோனாவைப் பார்த்துவிட்டால் கேட்கவே வேண்டாம்! மழைக் காலமாக இல்லாதிருந்தால் அவளும் சோனாவும் சோள, கோதுமை வயல்களில் சுற்றப் போய்விடுவார்கள். இன்னும் லால்ட்டுவுக்கும் பல்ட்டுவுக்கும் விடுதலை கிடைக்கவில்லை. சோனாவுக்குக் கிடைத்துவிட்டது. அவர்களுக்குக் கோபம் கோபமாக வந்தது. சோனா அந்தப் பெண்ணின் புடைவைத் தலைப்பில் எதையோ வைத்துக் கட்டினான்.

பல்ட்டு சொன்னான். "பார்த்தியா, சோனா பாதிமாவைத் தொட்டுட்டான்!"

மருதமரத்தின்மேல் முதுகைச் சாய்த்துக்கொண்டு நின்றார் மணீந்திரநாத். எதிரில் தாழ்நிலம். அதில் தண்ணீர் தழும்பி நின்றது. தூரத்தில் வயலுக்குள்ளிருந்து ஒரு சக்கரவாகப் பறவை கூவியது. நதியில் படகு. 'ஆறே, என்னைக் கூட்டிக்கொண்டு போ!' என்று கிராமபோன் பாடியது. மழையின் தோற்றத்திலும் இதே பிரார்த்தனை தான். இந்தச் சிறுமியுடன் நீரில் மிதந்துகொண்டே போகத் தோன்றுகிறது மணீந்திரநாத்துக்கு.

பாதிமா கூப்பிட்டாள்: "சோனா பாபு!"

"என்ன?"

"எனக்கு ஒரு சேப்பு அல்லிப்பூ தருவீங்களா?"

"தரேன்."

இதற்குள் சாமு திரும்பிவந்துவிட்டான். அவன் கையில் பெட்ரோமாக்ஸ். அவன் நரேந்திரதாஸின் வீட்டுப் பக்கமே போகவில்லை.

நேரே குளத்தங்கரைக்கு வந்துவிட்டான். அவன் மரங்களின் இடுக்கு வழியே நரேன்தாஸின் வீட்டைப் பார்த்தபோது அது களையிழந்திருப்பதாகப் பட்டது அவனுக்கு. ''மாலதி இல்லையா? மாமனூர் வீட்டுக்குப் போயிருக்கிருளோ?'' அவனுக்கு வெட்கத்தைத் துறந்து மாலதியின் வீட்டு வாசலில் போய் நிற்கத் தோன்றியது. ஆனால் முடியவில்லை. ஏதோ ஒரு தயக்கம் அவனைத் தடுத்தது. அவன் இந்த நினைவைத் தவிர்ப்பதற்காகப் பாதிமாவைக் கூப்பிட்டான், ''பாதிமா! எங்கே போயிட்டே?''

பாதிமா சோனுவிடம் விடைபெற்றுக்கொண்டு சாமுவிடம் ஓடி வந்தாள். சாம்சுத்தீன் படகில் உட்கார்ந்துகொண்டு அதை ஓட்ட ஆரம்பித்தான். ''பாபா, சோனு பாபு எனக்கு ஒரு சேப்பு அல்லிப்பூ தரேன்னிருக்கார்'' என்று பாதிமா சொன்னுள். சாமு பதில் சொல்லாமல் அவளுடைய முகத்தைப் பார்த்தான். அவனுடைய பெண் ரொம்பத் துறுதுறுப்பு. அவளுடைய கண்களில் எப்போதும் விஷமச் சிரிப்பு. அவள் இன்னும் மருத மரத்தடியில் எதையோ தேடினுள். ஆனல் அங்கே யாரும் இல்லை. அவளுடைய முகம் வருத்தமாயிருந்தது.

சோனு பசி மேலிட்டவனுக ஒரே குதியில் சமையலறைக்குள் போய்த் தன் தாயைக் கட்டிக்கொண்டான். ''அம்மா, ரொம்பப் பசிக்கிறது, சாதம் போடு!''

அவள் பித்தளைச் சட்டியிலிருந்து பச்சரிசிச் சாதத்தை எடுத்துச் சோனுவுக்காகத் தட்டில் போட்டாள். ''வா, பலகையைப் போட்டுக்கிண்டு உட்காரு!''

லால்ட்டு சாப்பிட்டபடி பார்த்துக்கொண்டே இருந்தான். சோனுவிடம் அம்மா காட்டும் பரிவு அவனுக்குப் பிடிக்கவில்லை. அதைத் தவிர அம்மா சோனுவுக்குப் பெரிய கொய்மீன் வதக்கிக் கொடுத்திருக்கிருள். லால்ட்டுவால் தன் பொருமையை அடக்கிக் கொள்ள முடியவில்லை. ''சோனு பாதிமாவோட புடைவையிலே எதையோ கட்டிக் கொடுத்தான்!'' என்று அவன் சொன்னுன்.

சோனு பயந்துபோய்க் கத்தினுன். ''இல்லேம்மா!''

லால்ட்டுவும கத்தினுன். ''பொய் சொல்லாதே! பல்ட்டு சாட்சி!''

பல்ட்டு சொன்னுன். ''ஆமா, நீ பாதிமாவுக்கு வண்ணத்துப்பூச்சி பிடிச்சுக் குடுத்தியே!''

சசிபாலா சமையலறைக்கு வெளியில் பெரிய சிங்மீனின் தலையை நறுக்கிக்கொண் டிருந்தவள், குழந்தைகளின் பேச்சைக் கேட்டுச் சப்தம் போட்டுக்கொண்டு ஓடிவந்தாள். தனமாமி பயந்துபோய் விட்டாள். ஏனென்ருல் மாமியார் இந்த விஷயத்தைப் பெரிது செய்து களேபரம் பண்ணுவாள். 'ஆசாரம் போச்சு, சுத்தம் போச்சு'

என்று ஒப்பாரி வைப்பாள். அநாசாரத்தால் கெடுதல் வரும் என்றெல்லாம் சொல்வாள். ஆகையால் தனமாமி சோனுவின் தட்டை எடுத்துக்கொண்டு அவனிடம், "சோனு, வெளியிலே போ! ஸ்நானம் பண்ணிட்டுவா" என்று கூறினாள்.

"நான் ஸ்நானம் பண்ணமாட்டேன்! எனக்குப் பசிக்கறது. எனக்குச் சாதம் போடு."

தனமாமிக்குக் கோபம் வந்தது. "சோனு, நீ போ வெளியிலே, சொல்றேன்."

"எனக்குப் பசிக்கறதே. எனக்குச் சாதம் போடு."

லால்ட்டு சொன்னான். "ஊஹூம், உனக்குச் சாப்பாடு கிடையாது. ஸ்நானம் செய்யலேன்னு சாப்பாடு கிடையாது."

தனமாமி லால்ட்டுவை அதட்டிவிட்டுப் பித்தளைப் பாத்திரத்தில் மிஞ்சியிருந்த சாதத்தையும், சோனுவின் தட்டிலிருந்த சாதம், மீன் எல்லாவற்றையும் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டாள்.

சோனுவுக்குத் துக்கம் துக்கமாக வந்தது. அம்மா அவனை ஸ்நானம் செய்யச் சொல்கிறாள். அவனுடைய சாதத்தை எடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டாள். அவனுக்குப் பிடிவாதம் அதிகரித்தது. அவன் பலகையின்மேல் உட்கார்ந்து கைகால்களை உதறிக்கொண்டு அழத் தொடங்கினான்.

தனமாமி சொன்னாள். "சோனு, நீ செய்யறது நன்னாயில்லே. எழுந்திரு! இல்லாட்டா முதுகிலே விழும்."

வெளியே மாமியாரின் தொணதொணப்பு அதிகரித்தது. சோனுவோ பலகையைவிட்டு எழுந்திருக்கவேயில்லை. இவ்வளவு களேபரத்துக்கும் சோனுதானே காரணமென்று ஆத்திரம் கொண்ட தனமாமி பிசாசுத்தனமாக அவனை அடிக்க ஆரம்பித்தாள். சோனுவுக்கு மூச்சுத் திணறியது. அப்படியும் அவன் எழுந்திருக்கவில்லை. கூட்டுக் குடும்ப வாழ்க்கையின் வெவ்வேறு தொந்தரவுகள் இப்போது தனமாமியின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டன. அவள் சோனுவின் தலைமயிரைப் பிடித்து அவனை வெளியே இழுத்துக் கொண்டு வந்தாள். தானும் ஸ்நானம் செய்துவிட்டு அவன் தலையிலும் ஒரு குடம் தண்ணீரைக் கொட்டினாள். "சீ, வாயை மூடு!" என்று அதட்டினாள்.

அப்போது காபிலா மரத்துக்குக் கீழே நாயுடன் நின்றார் மணீந்திரநாத். சோனுவின் கஷ்டத்தைப் பார்க்க அவருக்குப் பொறுக்கவில்லை. துக்கம் பொறுக்க முடியாமல் அவர் தம் கையையே கடித்துக்கொண்டார். கையிலிருந்து ரத்தம் வழிந்தது.

துறையில் படகிலிருந்து இறங்கியபோது பாதிமா தன் தந்தையிடம் சொன்னாள்: "பாபா, சோனு பாபு எனக்கு ஒரு வண்ணத்துப் பூச்சி பிடிச்சுக் கொடுத்திருக்கிறார்."

ஏதோ நினைவில் ஆழ்ந்திருந்த சாமு, "ஒரு ஜீவனை இம்சை பண்ணுதே! விட்டுடு!" என்று கூறினன்.

பூச்சியை விட்டுவிடுவதற்காக முடிச்சை அவிழ்த்த பாதிமா அது அசையாமல் கிடப்பதைக் கண்டாள். அது இறந்துபோயிருந்தது.

வெளியில் இங்குமங்கும் கோழிகள் மேய்ந்துகொண் டிருந்தன. ஜாலாலி வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தாள். சாம்சுத்தீன், அவனுடைய கோஷ்டி, உள்ளே அலிஜான் சமைத்துக்கொண் டிருந்த மாமிசம் எல்லாமே அவளுக்குப் பிடிக்கவில்லை. ஜாலாலி சேப்பங்கிழங்குச் செடிகளுக்கு அப்பால் பார்வையைச் செலுத்தினள். வயலில் சில வாத்துக்கள் 'க்வாக் க்வாக்' என்று கத்திக்கொண் டிருந்தன. அவளுடைய வயிற்றைப் பசி குடைந்தது.

மக்பூல் வீட்டுச் சீதாபர வேலியில் சணல் தட்டைகள் காய்ந்தன. நாலைந்து நாட்களாக மழை இல்லாததால் மண்ணும், புல்லும் காய்ந்திருந்தன. பண்ணை வீட்டில் ஜாம்ருல் மரத்தில் பழங்கள் தொங்கின. வெயிலில் அவை பறவைகள் போலத் தோற்றின.

கிராமம் முழுதும் வெங்காயம், பூண்டு இவற்றின் வாசனை பரவி யிருந்தது. வயல்களில் வாத்துக்களின் கூப்பாடு. ஜாலாலியால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவை மாலதியின் வாத்துக்கள். மியான்களும் பெரிய மனிதர்களும் கூட்டம் முடிந்து போய்க்கொண் டிருந்தார்கள். வற்றின முகமும் கெஞ்சும் குரலுமாக அலிஜான் வீட்டுக் கொல்லையில் ஜாலாலி உட்கார்ந்திருந்தாள். சமையலின் சம்பிரமம் அவளுடைய பார்வையில் விழுந்தது. விருந்தாளிகள் குளித்துவிட்டு வந்தார்கள். பிறகு தொழுகை செய்துவிட்டு ஆசனங்களில் வட்டமாகச் சாப்பிட உட்கார்ந்தார்கள். நல்ல சாப்பாடு. மீன் குழம்பு, கோழி மாமிசம், பூண்டு தாளித்த பாசிப் பருப்பு. அவர்கள் சாப்பிட்டுவிட்டுத் தட்டிலேயே வாயைக் கொப்புளித்தார்கள். ஒரே குவளையிலிருந்து தண்ணீர் குடித்தார்கள். கொஞ்சங்கூடச் சாப்பாடு மிச்சம் வைக்கவில்லை. உட்கார்ந்து உட்கார்ந்து ஜாலாலிக்குக் கால் மரத்துவிட்டது. அவள் எச்சிலை விழுங்கிக்கொண்டு தன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள். எல்லாரையும் அல்லாவையும் சேர்த்துத் திட்டுவதன் மூலம் அவள் தன் ஆத்திரத்தைத் தணித்துக்கொண்டாள்.

வயலிலிருந்து மாலதியின் வாத்துக்களின் குரல் கேட்டது. ஜாலாலி ஒரு துண்டை உடுத்திக்கொண்டு தண்ணீரில் இறங்கினுள், அல்லிக்கிழங்கு பறிக்க.

விருந்தாளிகள் போய்விட்டார்கள். படகுத் துறையில் சாம்சுத்தீன் அவர்களுக்கு விடையளித்தான். சணல் வயல்களைக் கடந்தபின், படகுகள் கண்ணுக்கு மறைந்துவிட்டன. நீண்ட துடுப்புகளின் நுனிகள் மட்டும் மேலே வருவதும் கீழே போவதுமாகத் தெரிந்தன. படகுகள் கிழக்குப் பக்கத்து வீட்டைத் தாண்டிப் போயின. சாம்சுத்தீனுக்குக் கிழக்கு வீட்டு மாலதியின் நினைவு வந்தது. செங்கடம்பு மரத்தில் நோட்டீஸ் ஒட்டுவது பற்றி அவர்கள் தகராறு செய்துகொண்டு ஒருவரையொருவர் அவமானப்படுத்திக் கொண் டது அர்த்தம் இல்லாததாகத் தோன்றியது சாமுவுக்கு.

அந்த நோட்டீஸ் இப்போதும் தொங்கிக்கொண் டிருந்தது. அதில் எழுதியிருந்த விஷயம், 'இந்தத் தேசம் சாமுவின் ஜாதிக்குச் சொந்தம்' என்பதே.

அவன் எவ்வளவோ தடவை கட்டாரி மரத்துக்குக் கீழே மாலதி யைச் சந்தித்திருக்கிறுன். ஆனுல் அவள் அவனுடன் பேசுவதில்லை. இளமை நினைவுகள் தோன்றிச் சாமுவை வேதனைக்குள்ளாக்கின,

"பாபா!" என்று பாதிமா கூப்பிட்டாள்.

சாமு திடுக்கிட்டுத் தன் நினைவுகளிலிருந்து விடுபட்டான். "என்ன சொன்னே?"

"அம்மா கூப்பிடருங்க."

சாமு பாதிமாவின் முகத்தைப் பார்த்து, தண்ணீரின் நீலநிறத் தைப் பார்த்து இஸ்லாம் பக்தியாகிய ஆழ்ந்த உணர்வில் அமுங்கிப் போனுன். அப்போது அவனுக்குத் தோன்றியது. ஒரு பக்கிரி சாயபு இஸ்லாம் கொடியைத் தூக்கியபடி, முஸ்கிலாசானின் ஒளியில் வழிப் பார்த்துக்கொண்டு முன்னுல் போகிருர். ஒளி வட்டத்தில் கிழவரின் முகம் தெரிகிறது. தெளிவற்ற ஏதோ ஒரு ஆசையால் பீடிக்கப்பட்டுக் களைத்திருக்கிருர் அவர். எவ்வளவு கூப்பிட்டும் சாமுவால் அவரைத் திருப்ப முடியவில்லை. அவர் நடந்துகொண்டே போகிருர். தன்னைப் பின்பற்றும்படி சாமுவிடம் சொல்கிருர்.

பாதிமா சாமுவுக்கு முன்னுல் வந்து நின்று, "பாபா, அம்மா உங்களைக் கூப்பிடருங்க!" என்ருள்.

அவன் வீட்டுக்குள் நுழைந்தான். அவனுடைய பீபியின் கண்கள் சிறியதாக, மை தீட்டப்பட்டிருந்தன. மூக்கில் மூக்குத்தி, கைகளில் நீலக்கண்ணுடி வளையல்கள். கட்டம் போட்ட புடைவை அணிந்திருந் தாள். உள்பாவாடையோ, மேலே ரவிக்கையோ இல்லை. உடம்பை ஒரு சுற்றுச் சுற்றத்தான் புடைவை போதுமானதாக இருந்தது.

ஆகையால் அவயவங்கள் எல்லாம் தெளிவாகத் தெரிந்தன அலிஜானின் உடல் கர்ப்பிணிப் பசுவைப் போல் இருந்தது படுத்துக் கொண்டே இருக்க விரும்பினாள் அவள். மைதீட்டப்பட்ட கண்களில் ஆசையைவிட உணர்ச்சியே அதிகமாகத் தெரிந்தது. அவள் கேட்டாள் : "நேரமாகலியா? நீ சாப்பிடப் போறதில்லையா?"

சாமு பலகையில் சாப்பிட உட்கார்ந்தான். அவள் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அவனுக்குச் சாப்பாடு போட்டாள். அவனுடைய முகத்தில் கவலை தேங்கியிருப்பதைப் பார்த்து, "என்ன கவலைப்பட்டுக் கொண்டிருக்கே?" என்று கேட்டாள்.

சாமு பதில் பேசாமல் சாப்பிட்டுக்கொண் டிருந்தான்.

"ஏன் பேசமாட்டேங்கறே?"

சாமுவுக்கு எரிச்சல் வந்தது. "அதைப் பத்தியெல்லாம் உனக்கென்ன? நீ ரெண்டு சோறு போட்டுட்டுப் போ! அநாவசியமா வார்த்தையை வளக்காதே!"

"நான் என்ன வார்த்தையை வளத்துட்டேன்?"

சாமு பார்வையை உயர்த்தி அலிஜானின் முகத்தைப் பார்த்தான், கண்களைப் பார்த்தான். கோபம், ஆத்திரம் எல்லாவற்றையும் தணிக்கக்கூடிய ஏதோ ஒன்று அலிஜானின் கணகளில் தெரிந்தது.

"நான் லீக் கட்சி சார்பிலே வோட்டுக்கு நிக்கலாம்னு பார்க்கிறேன்; சின்ன டாகுருக்கு எதிரா" என்று அவன் சொன்னான்.

"உன் மூளையிலே என்னதான் நுழைஞ்சிருக்கோ எனக்குப் புரியல்லே! இந்தக் காரியமெல்லாம் உனக்கெதுக்கு? சின்ன டாகுர் உன்னை என்ன பண்ணினார்? அவர் ரொம்ப நல்லவராச்சே!"

"நான் என்ன அவர் கெட்ட மனுஷர்னு சொல்றேன்?" என்று சொல்லிக்கொணடே சாமு எழுந்தான். கையையும் வாயையும் கழுவிக்கொண்டான். பொழுது சாய இன்னும் வெகுநேரம் இல்லை.

தனுஷேக் சணல் தட்டைகளை வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்த்து விட்டான். சாமு, தனுஷேக்கையும் கூட்டிக்கொண்டு படகில் புறப்பட்டான். படகு செடிகளையும் புதர்களையும் குளத்தையும் கடந்து வயல்வெளியை அடைந்தது. மசூதியின் கூரையில் கோழிகள் உலவின. மாடுகளும், ஆட்டுக்குட்டிகளும் வீட்டு முற்றங்களில் நின்றன. ஊரிலுள்ள ஆண்பிள்ளைகள் வயல் வேலைக்குப் போய்விட்டார்கள். மன்சூர் ஒருவன்தான் தன் சொந்த வயலை உழுதான். ஹாஜி சாயபுவுக்கும் கொஞ்சம் நிலம் இருந்தது. நயாபாடாவிலிருக்கும் இஸ்மதாலி நல்ல வசதியுள்ளவன். தான் அலிஜானை மணந்துகொண்ட பிறகு இஸ்மதாலி தன்னுடன் பேசிப் பழகுவான் என்று நினைத்திருந்தான் சாமு. ஆனால் இஸ்மதாலி எப்போதும் இந்துக்களுடனேயே பழகினான். இதை நினைத்ததுமே

சாமுவின் முகம் இறுகியது. இந்தச் சமயத்தில் புதருக்குள் ளிருந்து ஒரு வாத்தின் குரல் கேட்கவே அவன் தலை நிமிர்ந்து பார்த்தான். புதருக்குள் மனித உருவம் ஒன்று தெரிந்தது. ''புதருக் குள்ளே யாரு?'' என்று அவன் கேட்டான்.

புதருக்குள்ளிருந்து யாரும் எட்டிப் பார்க்கவில்லை. பக்கத் தில் பிரம்புப் புதர்களும் கள்ளிச் செடிகளும். கொடிகள் கள்ளி களின் மேல் படர்ந்திருந்தன. ஒரு வாத்துக் கூட்டம் பயத்தில் 'க்வாக், க்வாக்' என்று கத்திக்கொண்டு கிழக்கு வீட்டுப் பக்கம் ஓடியது. தண்ணீருக்குள்ளிருந்து சேறு மேலே வருவதைக் கவனித் தான் சாமு. உடும்பு ஒரு பெரிய பாம்பைப் பிடித்துக்கொண்டு தண்ணீருக்கடியில் அதைச் சமாளிக்க முடியாமல் திணறிக்கொண் டிருக்கலாம். சரித்திர காலத்துக்கு முந்தைய ஒரு பிராணி தண்ணீ ருக்குள் நடமாடிக்கொண் டிருக்கலாம்.

சாமு படகின் மேல்தட்டின் மேல் நின்றான். தனுஷேக் படகைத் திருப்பிப் புதர் இருந்த பக்கம் செலுத்தினான். அல்லி இலைகளுக்கு நடுவில் முகத்தைத் தூக்கிப் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்த ஜாலாலியைக் கவனித்தான் சாமு.

''நீங்க இங்கே என்ன செய்யறீங்க?'' என்று சாமு கேட்டான்.

ஜாலாலி கழுத்தைச் சற்று உயர்த்திக்கொண்டு, ''அல்லிக்கிழங்கு பிடுங்கறேன்'' என்றாள்.

''இங்கே நிறைய இருக்கா?''

''கொஞ்சங் கொஞ்சம் இருக்கு'' என்று சொல்லி ஒரு கிழங்கைக் காண்பித்தாள் ஜாலாலி. ''இன்னும் பதமாகல்லே. கல்மாதிரி இருக்கு. உன்னோட சித்தப்பா பலசாவுக்குப் போற கொய்னாப் படகிலே வேலை பாக்கப் போனாலும் போனார். அவர் கிட்டேருந்து கடுதாசும் இல்லே, காசும் இல்லே நான் என்னத்தைச் சாப்பிடறது, சொல்லு! அதுதான் அல்லிக்கிழங்கைப் பறிச்சுத் திங்கறேன்'' என்றாள் மேலும்.

ஜாலாலியின் கழுத்து தண்ணீரில் அழுங்கியிருந்தது. கண்களில் பயம் அவளுடைய வற்றிப்போன முகத்தைப் பார்க்க வேதனையாக இருந்தது சாமுவுக்கு. அல்லிச் செடிகளைக் கடந்தால் வயல்கள். வயலிலிருந்த வாத்துகள் மிரண்டுபோய்க் கத்தின. மேலே பருந்து எதையும் காணவில்லை. புதர்களில் ஓநாய் எதுவும் நடமாடுவ தாயும் தெரியவில்லை. ஜாலாலியின் முகம் மட்டும் பேராசையால், கெட்ட எண்ணத்தால் அவலட்சணமாக, பயங்கரமாகக் காட்சி யளித்தது. உண்மையில் ஓநாயைப் போலவே இருந்தது அவ ளுடைய முகம்.

ஜாலாலி அவளுடைய இடத்திலிருந்து சற்றும் நகரவில்லை. அவள், இரண்டு கைகளாலும் ஆண்வாத்தின் கழுத்தைத் தண்ணீருக்கடியில் இறுக்கி அமுக்கிக்கொண்டிருந்தாள். இத்தனை நேரம் போராடியதால் அவள் களைத்துப் போய்விட்டாள். சாமுவின் வேலைக்காரன் படகை ஓட்டிக்கொண்டு போனான். அவள் கொண்டு வந்திருந்த மண்சட்டி தண்ணீரில் மிதந்து வெகுதூரம் போய்விட்டது. சாமு அரசமரத்துக்கு மறுபுறம் போய் மறைந்த பிறகு, ஜாலாலி அவனைத் திட்டினாள். "நாசமாப் போறவன்! 'நீங்க என்ன செய்யறீங்க இங்கே?' ஆமா, நான் உன் மண்டையை மெல்லறேன்!" என்று சொல்லிக்கொண்டே அவள் ஓர் ஓணானைப் போல் தண்ணீரில் நீந்தினாள். அவளுடைய வலக்கையில் வாத்து. வாத்தை எப்போதும் தண்ணீருக்கடியில் வைத்துக்கொள்வதற்காக அவள் ஒரு கையாலேயே நீந்தி ஒரு வழியாகத் தன் மணசட்டியைப் பிடித்தாள். அதற்குள் சாமு வெகுதூரத்துக்குப் போய்விட்டான். மாலைநேர வெயில் போய்க்கொண்டிருந்தது. ஆகாயத்தில் பலநிற மேகங்கள் குவிந்து வடகிழக்கு மூலையைக் கறுப்பாக்கின.

அவள் இப்போது வாத்தைச் சட்டிக்குள் போட்டாள். நல்ல கொழுத்த வாத்து. அதன் வயிறு இன்னும் மிருதுவாகவும் கதகதப்பாகவும் இருந்தது. அவள் அதன் வயிற்றின் மேல் கையை வைத்து அந்தக் கதகதப்பைக் கவனித்தபோது கிழக்கு வீட்டுக் கட்டாரு மரத்தடியில் மாலதி நின்றிருப்பதைப் பார்த்தாள். அவள் தன் உடலைத் தண்ணீருக்கு மேலே தூக்கி எட்டிப் பார்த்தாள். தூரத்திலிருந்து மனித அரவமும் கேட்டது அவளுக்கு. அவள் பயந்து போய்த் தான் உடுத்தியிருந்த துண்டை அவிழ்த்து அதைக் கொண்டு சட்டியின் வாயை மூடினாள். தூரத்திலிருந்து மாலதியின் குரலும் கேட்டது.

பொழுது சாய்ந்துவிட்டது. சணல் வயலின் மறுபக்கம் கண்ணுக்கே தெரியவில்லை. அரசமரத்தைக் கடந்தால் மன்சூரின் வீடு. தனுவின் அம்மா பூடி சப்தபர்ணி மரத்துக்கடியில் உட்கார்ந்துகொண்டு ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருந்தாள்.

தன் வீட்டை நோக்கித் தண்ணீரில் நீந்திக்கொண்டே அவள் எங்கிருந்தாவது யாராவது தன்னைக் கவனிக்கிறார்களா என்று பார்த்துக்கொண்டாள். இருட்டு அதிகரித்தது. அவள் மறுபடி வாத்தின் வயிற்றில் கையை வைத்துப் பார்த்தாள். துண்டைச் சற்றுத் தூக்கி வாத்தை எட்டிப் பார்த்தாள். கும்மிருட்டில் அந்தச் செத்த வாத்தின் வயிற்றில் கையை வைத்துப் பார்த்துவிட்டு, வாத்து மாமிசம் சாப்பிடும் ஆசையில் எச்சிலை விழுங்கினாள்.

தண்ணீருக்கு வெளியிலிருந்து மாலதியின் குரல வந்தது, "வா வா ! தொய், தொய் !" என்று.

வயலில் வாத்துக்கள் முன்போல் மிரண்டு போய்க் கத்தின. அவை பயிர்களுக்குப் பின்னுல் ஒளிந்துகொண் டிருந்தன. மாலதி முழங்கால் வரையில் புடைவையைத் தூக்கிக்கொண்டு நீரில் இறங்கிக் கூப்பிட்டாள், "வா, வா !.... தொய், தொய் !"

நாற்புறமும் இருட்டு. சந்தைக்குப் போனவர்கள் திரும்பி வந்தார்கள். ஏரி ஓரத்தில் நீளத் துடுப்பின் ஒலி ; படகின் அரவம். இருட்டில் மாலதிக்குத் தெரிந்த முகம் ஒன்றும் தெரியவில்லே. அமூல்யன் நூல் வாங்கி வரச் சந்தைக்குப் போயிருந்தான். சோபாவும் ஆபுவும் வீட்டில் விளக்கேற்றி வைத்துவிட்டு வாசலில் தண்ணீர் தெளித்தார்கள். நரேன்தாஸின் மனைவி மழைவரும் என்று பயந்து, காய்ந்த சணல் தட்டைகளை உள்ளே கொண்டுவந்து வைத்தாள். புயலும் மழையும் வந்துவிட்டால் வாத்துக்களுக்கு வீடு திரும்ப முடியாது. அவை வழி தவறிப் போகும். அவற்றுக்கு ஏதாவது ஆபத்து வரலாம். மாலதி உயிரைப் பிடித்துக்கொண்டு உரக்கக் கூப்பிட்டாள். "வா, வா ! தொய்,... தொய் !"

சோபாவும் ஆபுவும் கட்டாரி மரத்துக்குக் கீழே அத்தையின் குரலேக் கேட்டார்கள். அத்தை வெகுநேரமாக வாத்துக்களைக் கூப்பிட்டுக்கொண் டிருந்தாள். அவர்கள் காபிலா மரத்தைத் தாண்டிச் சென்று தாங்களும் அத்தையுடன் சேர்ந்து வாத்துக்களைக் கூப்பிடத் தொடங்கினர்கள். தூரத்தில் சாமுவின் படகு போய்க் கொண்டிருந்தது. மழை வரப் போகிறது என்று தெரிந்தும் சாமு வீடு திரும்பவில்லே.

ஜாலாலி மழை வரப்போகும் அறிகுறிகளை ஆகாயத்தில் கவனித் தாள். தண்ணீருக்கு அருகில் முட்செடிப் புதரைக் கடந்தால் கல்யாண முருங்கை மரத்துக்குக் கீழே சணல் தட்டை வேலி போட்ட அவளுடைய குடிசை வரும். ஈரமண்ணின் வாசனை வந்தது.

ஜோட்டன், பக்கிரி சாயபுவுடன் தர்காவுக்குப் போய்விட்டாள். வீடு முற்றிலும் காலி. ஹாஜி சாயபுவின் பண்ணை வீட்டைத் தாண்டிய பின்பே மற்ற வீடுகள். இருட்டும் தனிமையும் இருந் தாலும் ஜாலாலி பத்திரமாக வாத்தைச் சட்டியில் துணியால் மூடி வைத்திருந்தாள். மழை வந்துவிட்டது. மழைக் காலமாதலால் எங்கும் பலவிதச் செடிகள் காடாக மண்டிக் கிடந்தன. எங்கும் ஒரு பசுமை மணம். சட்டியை மூடத் துண்டை எடுத்துக்கொண்டு விட்டதால் அவள் அம்மணமாக இருந்தாள். இங்குமங்கும்

பார்த்துவிட்டு அவள் வீட்டுக்குள் ஓடினாள். இருட்டும் மழையுமாக இருந்ததால் கட்டாரி மரத்துக்குக் கீழே மாலதியின் குரல் கேட்க வில்லை. பக்கத்தில் பூச்சிகளின் அரவம் மட்டுமே கேட்டது.

மாலதியின் மூன்று பெண் வாத்துக்கள் திரும்பி வந்துவிட்டன. ஆண் வாத்தைக் காணோம். மாலதிக்கு நெஞ்சு படபடத்தது. எவ்வளவு கஷ்டப்பட்டு அதை வளர்த்துக்கொண் டிருக்கிறாள், அவள்! தனக்கு மிகவும் பிரியமான ஆண் வாத்தைக் காணமல் அவள் தன் அண்ணியைக் கூப்பிட்டு, "அண்ணி, என்னோட ஆண் வாத்தைக் காணோம். மூணு பெண் வாத்துந்தான் வந்திருக்கு!" என்றாள்.

மாலதியின் அண்ணி உலர்ந்த சணல் தட்டைகளை உள்ளே கொண்டுபோய்க் கொண்டிருந்தாள். அவற்றின் சப்தத்தின் காரண மாக அவளுக்கு மாலதியின் குரல் மட்டுமே கேட்டது. அவள் சொல்வது தெளிவாகக் கேட்கவில்லை. அவள் தட்டைகளை உள்ளே போட்டுவிட்டு மரத்தடிக்குப் போய், "என்ன வந்துடுத்து உனக்கு?" என்று கேட்டாள்.

மாலதிக்கு அழுகை வந்துவிட்டது. "நீயே பாரு, என்ன ஆச்சுன்னு! மூணு பெண் வாத்தும் இருக்கு, ஆண் வாத்தைக் காணோம்!"

"இங்கேதான் எங்கேயாவது ஓடிப்போயிருக்கும். நன்னாப் பாரு!"

"நீ என்ன சொல்றே, அண்ணி? அது எங்கே ஓடும் இந்த இருட்டிலே? அதுக்குப் பயம், கியம் கிடையாதா?"

"இருக்கு, இருக்கு. அமூல்யன் வரட்டும்! படகிலே ஏறிப் போய்த் தேடிப் பார்க்கலாம். நீ தண்ணியிலேருந்து எழுந்திருந்து வா!"

மாலதி நீரிலிருந்து வெளியே வந்தாள். அவளுடைய மனசில் வருத்தம் நிரம்பியிருந்தது. அழவேண்டுமென்ற ஆசை தீவிரமாகியது. ஆண்வாத்தின் மேல் அவளுக்கு உயிர். எவ்வளவோ கஷ்டப் பட்டு அதை வளர்த்தாள். அந்த இளம் விதவையின் ஒரே ஆதாரம் இதுதான். மழையிலும் புயலிலும் ஒரு நாள் நரேன்தாஸ் நான்கு வாத்துகளையும் ஒரு கூண்டில் வைத்துக்கொண்டு எடுத்து வந்ததிலிருந்து அவள் அவற்றை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டாள். மிகவும் சிறியதாக இருந்ததால் முதலில் அவற்றால் இளம்புல்லைத் தின்னமுடியாது, சாதம் சாப்பிட முடியாது, சின்னஞ்சிறு டார்க்கினா மீன் கூடப் பிடிக்கமுடியாது. மாலதி அப்போது அவற்றின் வாயைத் திறந்து அவற்றுக்கு உணவூட்டி வளர்த்தாள். அவள் நீரிலிருந்து வெளியே வரும்போதும் கூப்பிட் டாள், "வா...வா! தொய்...தொய்."

இருட்டாக இருந்ததாலும் மழைவரும்போல் இருந்ததாலும் அவளால் கட்டாரி மரத்தடியில் வெகுநேரம் நிற்க முடியவில்லை.

ஜாலாலி வீட்டில் விளக்கேற்றினுள். வீட்டில் ஒரு கிழிந்த பாய். நாங்கல்பந்துச் சந்தையிலிருந்து வாங்கி வந்த சட்டியும் தட்டும் உறியில் வைத்திருந்தன. விளக்கு எரிந்துகொண் டிருந்தது. அவள் ஈரத்துண்டைக் கீழே விரித்து அதன்மேல் செத்த வாத்தை வைத்தாள். தன் வீட்டுக் கதவைச் சாத்தினுள். சிம்னியின் வெளிச்சத்தில் அவளுடைய அடிவயிறு பளபளத்தது. வாயிலிருந்து பசியேப்பம் வந்தது. அவள் வாத்தின் அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தபோது அதில் கதகதப்பு இல்லை. அவள் உடனே வாத்துக்கு மேலே குனிந்து உட்கார்ந்துகொண்டு அதன் இறக்கைகளைப் பிடுங்கினுள். அவளுடைய உடலிலிருந்து இன்னும் தண்ணீர் சொட்டியது. சொட்டிய தண்ணீரால் தரை ஈரமாகிவிட்டது. அவள் ஜாக்கிரதையாக வாத்தைத் துண்டுடன் உலர்ந்த தரைக்கு இழுத்து வந்து, மண்டியிட்டவாறே அதை நெருப்பில் வாட்டத் தொடங்கினுள். வெளியே மழை பெய்துகொண டிருந்தது.

பல நாட்களாக அவளுடைய வயிற்றில் சோறு விழவில்லை. பல நாட்களாக அவள் நாவல்பழமும் ஜாம்ருல் பழமும் அல்லிக் கிழங்கும் தின்று பசியைத் தீர்த்துக்கொண் டிருந்தாள். அவள் நாள் முழுவதும் நல்ல சாப்பாட்டுக்காகக் கனவு கண்டுகொண் டிருந்தாள். இந்த வாத்து அவளுடைய கனவை நனவாக்கிவிட்டது. அல்லா தனக்கு இவ்வளவு தூரம் கருணை காட்டியது பற்றி அவளுக்கு ரொம்பச் சந்தோஷம். ஆனந்த மிகுதியின் காரணமாகவோ, பசிவெறி காரணமாகவோ அல்லது பேராசை காரணமாகவோ அவள் துணி அணிந்துகொள்ள மறந்துவிட்டாள். தேசத்தின் வரைபடத்தில் ஆறுகள் கோடுகளாகத் தெரிவதுபோல் அவளுடைய அடிவயிற்றின் வெள்ளை மடிப்புகளில் நீர் கோடு கோடாக மின்னியது. ஜாலாலி தன் அடிவயிற்றைத் தடவிக்கொண்டு நினைத்தாள் : "இதில மறுபடி கொழுப்பு வளரும். ஆபேத் அலி கொய்னுப் படகில் வேலை பார்த்துவிட்டு வீடு திரும்புவான்."

அவள் வாத்தின் வயிற்றுக்கடியில் நகங்களால் பிராண்டிப் பிராண்டி அங்கிருந்த அசுத்தங்களைக் களைந்தாள். அப்போது அவள் ஆபேத் அலியின் துக்கத்தைப் பற்றி நினைத்துக்கொண்டாள். ஆபேத் அலி சொல்வான், "ஜப்பர் பொறந்தப்பறம் உன் வயிறு இடுங்கிப் போயிடுச்சு, பெருக்கவே இல்லை. அதிலே கொழுப்பு வைக்கவேயில்லை!"

அவள் இப்போது மனசுக்குள் சொல்லிக்கொண்டாள். "நீ மட்டும் எனக்கு வாரவாரம் வாத்து மாமிசம் சாப்பிடக் கொடு. கொஞ்ச நாளிலே என் தேகத்தில் எவ்வளவு கொழுப்பு வைக்கறது பாரு!" அவளுக்கு இப்போது மாலதியின் நினைவும் வந்தது. மாலதி

இளம் விதவை. அவளுடைய அழகு நாளுக்கு நாள் அதிகமாகியது. 'அல்லா, எனக்கு நீ ஏன் அவளோட அழகைக் கொடுக்கல்லே?'

வெளியில் மழை கனத்தது.

இப்போது அவள் வாத்தின் தோலே உரித்துவிட்டாள். மூங்கில் குப்பியில் கடுகெண்ணெய் இல்லே. மழை காரணமாக அவளால் எண்ணெய் வாங்கிவர வெளியே போக முடியவில்லே. அவள் வெகுநேரம் வாத்தை நெருப்பில் வாட்டியதால் கருகிய நாற்றம் ஏற்பட்டது. அவள் வெந்த மாமிசத்துடன் உப்பையும் மிளகாயை யும் போட்டு வதக்கி இரண்டு தட்டுகளில் வைத்தாள். அவள் ஒரு துண்டை எடுத்து வாயில் போட்டுக்கொண்டாள். பிறகு சட்டென்று எலும்பை வாயிலிருந்து எடுத்துச் சப்பிச் சப்பிச் சாப்பிடத் தொடங்கினாள்.

அறை முழுதும் வாத்துச் சிறகுகள் காற்றில் பறந்துகொண் டிருந்தன. சிம்னி விளக்கு தபதபவென்று எரிந்துகொண் டிருந்தது. வெளிச்சத்தையும், அறை முழுதும் வாத்துச் சிறகுகள் பறப்பதையும் பார்த்து, வாத்தைத் திருடித் தின்பது பற்றிய ஒரு குற்ற உணர்வு அவளேப் பிடித்தது. ஆபேத் அலிக்குத் தெரிந்தால் அவளே உதைப் பான். அவள் சாப்பாட்டை நிறுத்திக்கொண்டு, வாத்துச் சிறகுகளேப் பொறுக்கி யெடுத்துக்கொண்டு, மழையைப் பொருட்படுத்தாமல் தண்ணீரில் இறங்கி நடந்தாள்.

அரசமரத்தடியிலிருந்த புதர்களுக்கருகில் அவள் வாத்துச் சிறகுகளே எறிந்துவிட்டுச் சொன்னாள்: "அல்லா, எனக்குப் பசிக்குது. நான் போறேன்!"

மழையில் நனைந்ததில் அவளுடைய துக்கங்கள் கரைந்து விட்டன. வருத்தம் நீங்கியவளாக அவள் வீடு திரும்பினாள். தண்ணீரில் சணல் பயிர் சாய்ந்துகிடப்பது மின்னல் வெளிச்சத்தில் தெரிந்தது. அவள் சணல் வயல்களேக் கடந்தபோது தண்ணீரின் மேல் ஒரு விளக்கின் வெளிச்சம் அசைவது தெரிந்தது. கவன மாகக் கேட்டதில் மாலதி தன் வாததைக் கூப்பிடுவது காதில் விழுந்தது. "வா...வா! தொய்..தொய்!" அவள் மேலும் தாமதிக் காமல் சட்டென்று வீட்டுக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டாள். ஒரு மரக்கட்டையின் மேல் உட்கார்ந்துகொண்டு வாத்து மாமிசத்தைக் கடித்துச் சுவைத்துச் சாப்பிடத் தொடங் கினாள். மாலதி கூப்பிடுவதைப் பார்த்தால் தட்டிலிருக்கும் வாத்து அந்தக் கூப்பாட்டுக்குப் பதில் ஒலி எழுப்பும்போல் இருந்தது. அவள் இப்போது அவசர அவசரமாக மாமிசத்தைச் சாப்பிட

ஆரம்பித்தாள். தட்டிலிருந்த வாத்துக்குக் கத்தும் வாய்ப்பைத் தர அவள் விரும்பவில்லை.

மழை நின்றதும் சாமு வீடு திரும்பிக்கொண் டிருந்தான். தனுஷேக் படகை ஓட்டிக்கொண் டிருந்தான். தூரத்தில் தெரிந்த விளக்கொளியும், மாலதியின் குரலும் இன்னும் வாத்து கிடைக்க வில்லை என்பதை அவளுக்கு உணர்த்தின. மாலதியும் அமூல்யனும் கத்துகிறார்கள்: "வா! தொய்...தொய்!" துக்கம் நிரம்பிய இந்தக் கூப்பாடு வயல்வெளியையும் கிராமத்தையும் தாண்டி வெகுதூரம் சென்றது. மாலதி எதையோ தேடுவதை வெகு நாட்களுக்குப் பிறகு இப்போதுதான் பார்த்தான் சாமு. அமூல்யன் படகோட்டினான். நெல் வயல்களிலோ, சணல் வயல்களிலோ, புதர்களிலோ வாத்து பயந்துகொண்டு மறைந்திருக்கிறதா என்று பார்த்தாள் மாலதி.

இப்போது மாலதி சாமுவின் படகைப் பார்த்தாள். சாம்சுத்தீன் அவளிடம் ஏதோ சொல்ல விரும்பினான். அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் அவனுடைய முகம் தெளிவாகத் தெரிந்தது. மாலதி, அவன் வேறு ஜாதிக்காரன் என்ற அருவருப்பில் அவனுடன் முதலில் பேசவில்லை. அவளுக்கு வாத்தை நினைத்து அழுகை வந்தது. அவள் சாமுவைப் பார்த்தும் ஒன்றும் பேசாமல் தலையைக் குனிந்துகொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய நடத்தையால் அவமான உணர்வு ஏற்படவில்லை சாமுவுக்கு. ஏனெனில் மாலதி பரிதாபத்துக்குரிய அபலையாகக் காட்சியளித்தாள் இப்போது. "உன் வாத்தெல்லாம் வீடு வந்து சேரல்லியா?" என்று அவன் கேட்டான்.

"பெண்வாத்தெல்லாம் வந்துடுத்து. ஆண் வாத்தைக் காணோம்!" குனிந்துகொண்டே சுருக்கமாகப் பதில் சொன்னாள் மாலதி.

நாற்புறமும் ஈரக்காற்றின் மணம். இருட்டு மேலும் அதிகரித்து வந்தது. சாமு, அமூல்யன் இருவருமே இப்போது வாத்தைக் கூப்பிடத் தொடங்கினார்கள். ஓர் இடத்திலிருந்தும் வாத்தின் பதில் ஒலி கேட்கவில்லை. அரசமரத்தில் பல மின்மினிகள் ஒளிர்ந்தன. அதன் அடியில் வாத்துச் சிறகுகள் பறந்தன. படகுபோல் சில நீரில் மிதந்தன.

சாமு, அமூல்யன், மாலதி மூவரும் சேர்ந்து வாத்தை அழைத்தார்கள். அவர்கள் விளக்கைத் தூக்கி வயல்களுக்குள் பார்த்த போது வாத்துச் சிறகுகள் தண்ணீரில் மிதப்பதைக் கண்டார்கள். அரசமரத்தடிக்கு வந்ததும் அங்கே சிதறிக் கிடந்த சாம்பல் நிறச் சிறகுகளைப் பார்த்து, மாலதி வாத்து இறந்துபோய்விட்டதென்று ஊகித்துக் கேவிக் கேவி அழத் தொடங்கினாள்.

இந்த அழுகையும் வாத்துச் சிறகுகளும் சாமுவுக்கு அன்று மாலையில் நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைவுறுத்தின. புதர்களின் இடுக்கில் அவன் கண்ட ஜாலாலியின் முகம் அவன் மனசில் தோன்றியது. அவன் அப்புறம் வாத்தைத் தேடவில்லை. மாலதி விதவை. அந்த இளம் விதவையின் ஒரே ஆதாரம் அந்த வாத்து. அதைத் தன் பிள்ளையைப் போல் செல்லமாக வளர்த்து வந்தாள் மாலதி. கோபத்தாலும் வருத்தத்தாலும் அவனால் பேசக்கூட முடியவில்லை. போக்கிரி ஓநாயின் முகத்தையொத்த ஜாலாலியின் முகம் அவன் நினைவில் தோன்றியது. மாலதியின் வேதனை சாமுவுக்கு ஜாலாலியிடம் ஆத்திரத்தைக் கிளப்பியது.

''வீட்டுக்குப் போ, மாலதி!'' என்று அவன் சொன்னான்.

அமூல்யனும் சொன்னான், ''ஆமா அக்கா! வீட்டுக்குப் போவோம்'' என்று.

''அழாதே, மாலதி!'' என்று சாமு சொன்னான்.

மாலதி கண்களை உயர்த்திச் சாமுவைப் பார்த்துவிட்டு நினைத்தாள். இவன் அதே பழைய சாமுதான். அவன் கண்கள் சின்னதாக இருக்கும், கன்னங்கள் உருண்டையாக இருக்கும், மிகவும் அமைதி யாக இருப்பான். இளம் வயதில் மாலதி துக்கப்படுவதைப் பார்த்தால் துடித்துப் போவான். இன்று சாமு மீசை, தாடி இல்லாமல், ஓர் இந்து இளைஞனைப் போலத் தன் உதவிக்கு வந்து நிற்பதாக அவளுக்குத் தோன்றியது. நெடுங்காலமாக அவளுக்கு அவனிட மிருந்த வெறுப்பு மறைந்துவிட்டது. அவள் ஓர் அப்பாவிப் பெண்ணைப் போல் பதில் பேசாமல் அவனைப் பார்த்தவாறே நின்று கொண்டிருந்தாள்.

இரண்டு படகுகளும் அருகருகே நின்றிருந்தன.

அரிக்கேன் விளக்கொளியில் அவர்களுடைய முகங்கள் தெளி வாகத் தெரிந்தன. கிராமத்துக்குள்ளிருந்து நாய்களின் குரைப்பொலி காற்றில் மிதந்து வந்தது. பிஸ்வாஸ்பாடாவில் பெட்ரோமாக்ஸ் விளக்கொளி. ஆகாயத்தில் மேகங்களின் நிழல். நட்சத்திரங்கள் மாலதியின் வேதனையை மிகுதியாக்கின. இவ்வேதனை யுணர்வு சாமுவையும் பீடித்தது.

சிறுவன் சாம்சுத்தீன் தன் தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு வயல்வெளிகளைக் கடந்து போனான். நாற்புறமும் தாரை தப்பட்டைகள் ஒலித்தன. நாற்புறமும் ட்வாலி போட்ட சேவகர்கள். அவனுடைய அப்பா துர்க்கைச் சிலைக்கு முன்னால் சிலம்பம் விளையாடினார். சாமுவுக்குத் தோன்றியது, அந்தக் காலத்துப் புகழ்வாய்ந்த மனிதர்கள் இப்போது வலுவிழந்து போய்

விட்டார்கள். புதிய சிந்தனையும், புதிய மதவெறியும் அவர்களைக் குறுகிய நோக்குள்ளவர்களாக ஆக்கிவிட்டன. அவனுக்கு ஜாலாலி யின் மேல் ஆத்திரம் வந்தது. 'அந்த ராட்சசியின் வயிற்றைக் கிழித்து மாமிசத்தை வெளியே கொண்டுவந்துடறேன்!' என்று சொல்லிக்கொண்டான் சாமு.

அவனுடைய படகு கொஞ்சங் கொஞ்சமாக நகர்ந்து கடைசியில் மறைந்துவிட்டது. அமூல்யனும் மாலதியும் அரிக்கேன் விளக்குடன் பின்தங்கிவிட்டார்கள். சற்றுத் தூரம் வரை அரிக்கேனின் ஒளி இருட்டை ஓரளவு ஒதுக்கிவைத்திருந்தது. தூரத்தில் செல்லச் செல்ல மாலதியின் முகம் மங்கிக்கொண்டே வந்தது. மர்மம் நிறைந்த பெண் மாலதி! மழைநீர் பயிர்களிலிருந்து தண்ணீரிலும் படகின் மேல்தட்டிலும் சொட்டுச் சொட்டாக விழுந்தன, மாலதியின் கண்களிலிருந்து விழும் கண்ணீரைப் போல.

சாமு தூரத்திலிருந்து, "மாலதி, நீ வீட்டுக்குப் போ! அமூல்யா படகைத் துறைக்குக் கொண்டு போ! ராத்திரி வேளையிலே இப்படிச் சுத்தக்கூடாது!" என்று கூறினான்.

மாலதியின் வேதனை சாமுவை மிகவும் துன்புறுத்தியது.

ஆபேத் அலியின் வீட்டுப் படகுத் துறைக்குப் படகைச் சப்தமில்லாமல் கொண்டுபோகும்படி தனுஷேக்கிடம் சொன்னான், சாமு. படகுத் துறையை அடைந்ததும் அவன் அதிலிருந்து இறங்கிக் கரையேறினான். முழங்கால் வரையில் சேறு. மழைத் தண்ணீர் இன்னும் புதர்களிலிருந்து இறங்கிக்கொண்டிருந்தது. கொஞ்சம் காற்று அடித்தாலும் மரங்களிலிருந்து நீர்த்துளிகள் விழுந்தன.

ஆபேத் அலியின் வீட்டுக்குள் மங்கலான ஒளி. அரவம் ஒன்றும் இல்லை. ஆபேத் அலி இல்லை, ஜப்பர் பாபூர்ஹாட் போயிருந்தான். ஜோட்டனும் இல்லை. பூதம் வாழும் வீடுபோல் தோன்றியது, அந்த வீடு. சாமு பிரம்புச் செடி வேலியைச் சற்று விலக்கிக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தான். உள்ளே ஒரு சிம்னி விளக்கு எரிந்தது. ஜாலாலி முக்கால் நிர்வாணமாக ஒரு பலகையின் மேல் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு முன் இரண்டு தட்டுகளில் எலும்புத் துண்டுகள். அவற்றில் மாமிசம் ஒட்டிக்கொண்டிருக்கவில்லை. ஜாலாலி அவற்றை எடுத்து எடுத்துச் சப்பினாள். பற்களுக்கிடையில் எலும்புகளை வைத்து மடமடவென்று கடித்தாள். தண்ணீர் குடித்தாள்.

அன்று மாலையில் அவன் தண்ணீருக்கு மேல் கண்ட முகம் - போக்கிரி ஓநாயைப் போல் அருவருப்பாக இருந்த ஜாலாலியின் முகம் - மாமிசத்தைச் சாப்பிட்ட பிறகு இப்போது இயற்கையாக,

அழகாகக்கூட இருப்பதாகச் சாமுவுக்குத் தோன்றியது. அல்லாவின் கருணைக்காக நன்றியுணர்வு அம்முகத்தில் தோன்றியது. தண்ணீர் குடித்தபோது அவள் இருமுறை அல்லாவை நினைத்துக்கொண்டாள். இந்த ஏழை மக்களுக்காகக் காட்டுக்குப் போகவும் தயாராயிருக் கிறான் சாமு. ஆகையால் மாலதியின் வாத்து கெட்டுப் போனதும் அவன் ஜாலாலியின் வயிற்றைக் கிழிக்க விரும்பியதும் இப்போது அவனுக்கு மறந்துவிட்டன. ஜாலாலி இப்போது ஒரு கிழிந்த பாயின் மேல் உட்கார்ந்து தொழுகை செய்தாள். அவளுடைய முகம் ரசூலின் முகத்தைப் போல் தூய்மையாக இருந்தது. அவள் தன்னுடைய இரு கைகளையும் முன்னே நீட்டிக்கொண் டிருந்தாள்.

சாம்சுத்தீனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. வீணை இலங்கை யைப் பங்கிட முற்பட்ட காலநேமியைப் போல் அவனும் வாழ்க்கையாகிய தெருக் கூத்தில் ஒரு வீண் முயற்சியில் ஈடுபட்டிருந் தான். அவன் நகராமல் நின்றுகொண் டிருந்தான். அவனுடைய கால்கள் பூமியில் புதைந்துவிட்டாற் போன்ற உணர்வு.

குளிர்காலம் வந்துவிட்டால் இந்த மனிதர் சில நாட்கள் நன்றாக இருக்கிறார். குளிர் காரணமாக இப்போது மணீந்திரநாத் மேலே ஒரு சால்வையைப் போர்த்துக்கொண் டிருந்தார். முன்பு போல் வெறும் மேலுடம்புடன் நிற்கவில்லை. இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாக முன்னேறி ஒரு நாள் உண்மையிலேயே சொஸ்த மாகிவிடுவார். அப்போது இருவரும் ஒன்றாகப் போய்விடுவார்கள். எங்கேயாவது ஒரு புண்ணியதலத்துக்கோ அல்லது ஏதாவதொரு பெரிய பட்டணத்துக்கோ போய்விடுவார்கள். பெரியமாமி கதை களில் கேட்டிருக்கிறாள். ஒரு பெரிய மைதானம் இருக்கிறது; அதன் அருகில் ஒரு குளம் இருக்கிறது; அதில் ஒரு பெரிய தாமரை மலர்ந் திருக்கிறது. பெரிய மாமி கிரேக்கப் புராணக் கதாநாயகனை இவரைக் கூட்டிக்கொண்டு அங்கே போய்விடுவாள். அவர் சொஸ்தமாகிவிட் டால் ஒரு தண்ணீர்ப் பந்தலில் தண்ணீர் வழங்கிக்கொண்டு நிற்பார். அப்போது தூரத்தில் மாதாகோவில் மணி அடிக்கும். புரோகிதர் கள் மந்திரம் சொல்வார்கள். மணீந்திரநாத் நெல்லி மரத்தடியில் நின்றுகொண்டு பொன்மானைப் பற்றிக் கனவு காண்பார்.

அவர் இயற்கையாக இருப்பதைப் பார்த்துவிட்டுப் பெரிய மாமி அவருக்கு ஒரு டம்ளர் சூடான பால் கொண்டுவந்தாள். கூடவே புது வெல்லம், மர்த்தமான் வாழைப்பழம், சூடான முட்டைப் பொரி எல்லாம் எடுத்துவந்தாள். அவள் ஒரு பெரிய ஆசனத்தைப் போட்டு அவருக்காகக் காத்திருந்தாள்.

நாய் மணீந்திரநாத்தைச் சுற்றிச் சுற்றி வந்தது. சோனா தென்பக் கத்து வராந்தாவில் படித்தான். நாய் இடையிடையே 'உர்' 'உர்'

என்று உறுமியது. செம்பரத்தைச் செடிக்கடியில் குளிர்காலத் தவளை 'கிளப், கிளப்' என்று ஒலித்தது. மணீந்திரநாத் பாலைக் குடித்து விட்டு வெல்லத்தைத் தடவி வாழைப்பழத்தைத் தின்றார். கொஞ்சம் நாய்க்கும் கொடுத்தார். அவர் அங்கிருந்து புறப்படும் நேரத்தில் சோனா சப்தம் செய்யாமல் படிப்பை விட்டுவிட்டு அங்கே வந்தான். மணீந்திரநாத்துக்கு மிகவும் மகிழ்ச்சி. அவர் நாயையும் சோனாவையும் கூட்டிக்கொண்டு வயல்களுக்குள் இறங்கினார்.

அவர்கள் ஸோனாலி பாலி ஆற்றுக்குள் இறங்கினார்கள். இப்போது தண்ணீரில் வேகம் இல்லை. தண்ணீரும் அதிகம் இல்லை. விரும்பினால் நடந்தே ஆற்றைக் கடந்துவிடலாம். ஆற்றங்கரையில் இருந்தவர்கள் மணீந்திரநாத்துக்கும் சோனாவுக்கும் சலாம் செய் தார்கள்.

பக்கத்தில் எல்லாம் முகமதியர் வசிக்கும் கிராமங்கள். அவர் களைக் கண்டதும் படகோட்டி படகை மறுகரையிலிருந்து இக் கரைக்குக் கொண்டுவந்தான். நாய் எல்லாருக்கும் முன்னால் படகில் ஏறிக்கொண்டது. என்றாவது ஒரு நாள் அதிகாலை வேளையில் பைத்தியக்காரப் பெரியப்பாவுடன் வயல்களையும் கிராமங்களையும் பார்க்கப் புறப்படவேண்டுமென்று சோனாவுக்கு வெகு நாளைய ஆசை. பெரியப்பா தினந்தோறும் பல கோசதூரம் நடந்துபோய் விட்டு நடுப்பகலிலோ மாலையிலோ களைப்புற்ற போர்வீரனைப் போல வீடுவந்து சேருகிறார். அவருடைய கால்களில், அவர் கடந்த ஆறு, வாய்க்கால்களின் அடையாளங்கள் தெரிந்தன. அவர் கோடையில் தர்முஜ் பழமும் குளிர்காலத்தில் கரும்புக் கட்டும் கொண்டுவருவார். அவரைக் காட்டில் வாழும் இளவரசனாகக் கருதினான் சோனா. அவரிடம் விதவிதமான கதைகள் கேட்க சோனாவுக்கு மிகவும் பிடிக்கும். எவ்வளவு விசித்திரமான கதைகள் சொல்லுவார் அவர்! ஆளரவம் அற்ற வயல்வெளிக்கோ மைதானத் துக்கோ வந்துவிட்டால் அவர் கதை சொல்லத் தொடங்கிவிடுவார். பைத்தியக்காரரானதால் அவருடைய கதைகளுக்கு ஆரம்பமும் இருக்காது, முடிவும் இருக்காது.

''தாமரைக் குளத்துக்குப் போவோமா?'' என்று அவர் சோனாவைக் கேட்பார்.

சிலசமயம், ''இலிஷ்மீனோட வீடு பார்க்கலாமா?'' என்பார்.

சோனா பதில் சொல்லாவிட்டால், ''ரூப்சாந்த் பட்சி பார்க்கிறியா?' என்பார்.

சோனா பதில் சொல்வதில்லை. பதில் சொன்னால், ''கேத்சோரத் சாலா!'' என்பார் அவர்.

ஒரு தடவை அவன் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு,

“நான் பட்சிராஜாக் குதிரை பார்க்கணும். காட்டுவீங்களா?” என்று கேட்டான்.

மணீந்திரநாத்துக்குச் சொல்லத் தோன்றும்: ‘நீ தாமரைக்குளம் பார்க்க ஆசைப்படல்லே. இலிஷ்மீனோட வீட்டைப் பார்க்க விரும்பலே. ரூப்சாந்த் பட்சியைப் பார்க்கறதில்லே. உனக்கு எப்போதும் பட்சிராஜக் குதிரைதான் பார்க்கணும். எனக்கும் ஒரு பட்சிராஜாக் குதிரை வேணும். ஆனா எங்கே கிடைக்கிறது அது?’ கேள்வி கேட்கும் பாவனையில் அவர் சோனாவைப் பார்ப்பார்.

இன்று சோனாவுக்குப் பட்சிராஜாக் குதிரை பார்க்கத் தோன்ற வில்லை. அவன் படிப்பை விட்டுவிட்டு ஓடி வந்துவிட்டான் அம்மாவும் சின்னப் பெரியப்பாவும் அவனைத் தேடிக்கொண் டிருப்பார்கள். ‘சோனா எங்கே போயிட்டான்? எங்கே போயிட் டான்?’ என்று எல்லாரும் தேடுவார்கள்.

இதெல்லாம் ரொம்ப வேடிக்கையாக இருந்தது சோனாவுக்கு. பாதிமாவைத் தொட்டதற்காக அம்மா அவனை அடித்தாள். ‘ஜாதி போயிடுத்து, ஆசாரம் போயிடுத்து’ என்று பாட்டி கத்தினாள். எல்லாரும் அவனை ரொம்ப நாள் இளப்பம் செய்தார்கள். அவன் ஏதாவது தவறு செய்துவிட்டால் லால்ட்டுவும் பல்ட்டுவும் அவனைத் தோப்புக்கரணம் போடச் செய்வார்கள். இப்போது எல்லாரும் கவலைப்படட்டும்.

இந்த எண்ணத்துடன்தான் அவன் திருட்டுத்தனமாக வீட்டை விட்டு வந்து பெரியப்பாவுடன் சேர்ந்துகொண்டான்.

பைத்தியக்காரரானதால் அவர் அவனுக்கு உற்சாகம் அளித்தார். “பட்சிராஜாக் குதிரை எங்கேயாவது ஆகாயத்தில் பறந்துகொண் டிருக்கும். எங்கேயாவது சங்ககுமாரன் சங்குக்குள் ஒளிந்துகொண் டிருப்பான். எங்கோ ஓர் இடத்தில் சம்பகநகரத்து இளவரசி ஒரு கிளிஞ்சலுக்குள் பாம்பின் விஷத்தால் மயங்கிக் கிடப்பாள். சோனா, நீயும் நானும் அங்கே போகலாம். வயலிலிருந்து எல்லாருக்கும் பொன்னிறத் தானியக் கதிர்கள் எடுத்துக்கொண்டு வருவோம்!”

அவர்கள் எவ்வளவோ கிராமங்களையும் வயல்களையும் கடந்து வந்துவிட்டார்கள். அவர்கள் போகப் போக ஆகாயமும் நகர்ந்து கொண்டே போயிற்று. நிறைய நடந்ததால் பசியால் களைத்துப் போய்விட்டான் சோனா. அவன் எவ்வளவு முயன்றும் அவனால் ஆகாயத்தைத் தொடமுடியவில்லை. பெரியப்பாவுடன் வெளியே போகவேண்டும்; நதியின் மறுகரையில் இறங்கி வந்திருக்கும் ஆகாயத்தைத் தொட்டுவிட வேண்டும் என்பது அவனுடைய வெகுநாளைய ஆசை. ஆனால் ஏதோ மந்திர பலத்தால் ஆகாயம் விலகிக்கொண்டே போகிறதே!

அவர்களுக்குத் தெரிந்த சிலர் சோனு பெரியப்பாவுடன் நடந்து செல்வதைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக் கேட்டார்கள். "சோனு பாபு, நீங்க பெரியப்பாவோடே எங்கே போறீங்க? நடக்கக் கஷ்டமா இல்லியா?"

சோனு பெரிய மனிதனைப்போல் தலையாட்டிக்கொண்டு, "இல்லே!" என்றான்.

ஆனால் மணீந்திரநாத்துக்குப் புரிந்தது, சோனுவால் நிஜமாகவே நடக்க முடியவில்லையென்று. அவர் அவனைத் தம் தோளில் தூக்கி வைத்துக்கொண்டார். இப்போது வெயில் அதிகமாக இருந்தது. புல்லின் மேலிருந்த நீர்த்துளிகள் உலர்ந்துவிட்டன. சூரியன் தலைக்கு மேலே இருந்தான். இந்தச் சமயத்தில் எங்கோ ஒரு மணி யடிப்பது அவர்களுடைய காதில் விழுந்தது.

பட்சிராஜாக் குதிரைதான் வருகிறது என்று நினைத்தான் சோனு. அவன் கைகளைக் கொட்டிக்கொண்டு, "பெரியப்பா, பட்சிராஜாக் குதிரை!" என்று கூவினான்.

மணீந்திரநாத்துக்கு வீடு திரும்பும் நினைவு வந்தது. மணியோசை அவருக்கு வீட்டை நினைவு படுத்தியிருக்கலாம். வலப்பக்கம் வெகு தூரத்துக் காடு. அதற்குள் புகுந்து நடந்தால் ஸோனாலி பாலி நதியையும் அதன் கரையிலுள்ள தர்முஜ் வயலையும் அடைந்து விடலாம். இப்போது ஈசம் தர்முஜ் வயலில் இரண்டொரு கொடிகளை பிரித்துப் போட்டுக்கொண்டிருப்பான். காட்டில் பலவித மரங்கள். மணியோசை நெருங்கிவந்தது. பலவிதப் பழமரங்கள். எல்லாம் தெரிந்தவை அல்ல. ஆனால் நாவல்பழத்தின் மணமும் மஞ்சித்தியின் வாசனையுமே மிஞ்சி நின்றன. இப்போது பழங்களின் பருவம் முடிந்துவிட்டது. சோனு மரத்துக்கு மரம் எங்கெங்கே பழம் பழுத்திருக்கிறது என்று பார்த்துக்கொண்டே வந்தான்.

அவர்கள் மைதானத்துக்கு வந்து சேர்ந்தபோது எதிரில் ஓர் அதிசயப் பிராணியைப் பார்த்தார்கள். மலைபோன்ற உடல். அதன் கழுத்தில் மணி ஒலித்தது. "இதோ பாருங்க, பெரியப்பா!" சோனு கூவினான்.

நாய் ஓடிப் போக விரும்பி 'உர், உர்' என்றது. மணீந்திரநாத் அதைப் பிடித்து வைத்துக்கொண்டார். சோனுவை இறக்கிவிட்டார். மூவரும் அந்தப் பிராணிக்காகக் காத்திருந்தார்கள். அது அருகில் வந்தால் இவர்கள் ஓடிவிடலாம். அது வேறு பக்கம் போய்விட் டால் இவர்களுக்குப் பயம் இல்லை.

ஆச்சரியத்தில் சோனுவுக்குப் பேச வரவில்லை. அவன் இரண்டா வது பெரியப்பாவிடம் இந்த யானையைப் பற்றி நிறையக் கேள்விப்

பட்டிருக்கிறுன். இது ஜமீந்தார் வீட்டு யானை. அது ஆடியசைந்து இவர்களுக்கு அருகில் வந்தது. சோளுவின் வயதை யொத்த ஒரு சிறுவன் அதன்மேல் உட்கார்ந்துகொண்டு அதை ஓட்டிவந்தான். இதைப் பார்த்துச் சோளுவின் பயம் பறந்துபோய்விட்டது. அவன் உற்சாகத்துடன் பெரியப்பாவைக் கூப்பிட்டான்.

அவர் இப்போதுதான் வாயைத் திறந்தார். "இது யானை.... யானை."

"ஆமா. முடாபாடாவிலேருந்து வந்திருக்கு."

இது என்ன? யானை அவர்கள் இருக்கும் பக்கம் ஓடிவருகிறதே! தன் பெரிய பெரிய கால்களைத் தூக்கி வைத்துக்கொண்டு வந்தது அது. இவ்வளவு பெரிய பிராணி தங்களை நோக்கி வருவதைக் கண்டு சோளு பயத்தால் சுருண்டு போய்விட்டான். அது அவர் களுக்கு எதிரில் வந்துவிட்டது. பெரியப்பா நகராமல் நின்ருர். நாய் மட்டும் இங்குமங்கும் ஓடியது. ஓடுவதா, வேண்டாமா என்று யோசித்துக்கொண் டிருந்தான் சோளு. பின்னுல் திறந்த மைதானம், முன்னுல் புதர்கள். அவன் எந்தப் பக்கம் ஓடுவதென்று தீர்மானிக்க முடியாமல் தவித்தான். அவன் பெரியப்பாவை இறுகக் கட்டிக் கொண்டு, "பெரியப்பா, நான் வீட்டுக்குப் போறேன்" என்ருன்.

அவர் பதில் பேசாமல், இமை மூடாமல் யானையைப் பார்த்துக் கொண்டே நின்ருர். அது அருகில் வர வர அவருடைய மனசில் ஏதோ குழப்பம் ஏற்பட்டது.

'இவர் என்ன தன் பேச்சையே காதில்வாங்காமல் இருக்கிருரே, இவர் கையைக் கடித்துவிடலாமா?' என்று சோளுவுக்குத் தோன்றியது. அவன் அழுதுகொண்டே, "நான் அம்மா கிட்டே போகணும்" என்ருன்.

என்ன ஆச்சரியம்! யானை அவர்கள் அருகில் வந்ததும் அவர் களுக்குக் கீழ்ப்படிந்தது போல அப்படியே உட்கார்ந்துவிட்டது. மாவுத்தன் பெரியப்பாவுக்குச் சலாம் செய்துவிட்டு யானையையும் சலாம் செய்யச் சொன்னுன். யானையும் தும்பிக்கையை உயர்த்திச் சலாம் செய்தது.

மாவுத்தன் ஜசீம் பின்னுல் உட்கார்ந்திருந்தான். முன்னுல் அவ னுடைய பிள்ளை உஸ்மான்.

"யானை முதுகிலே ஏறி உட்காருங்க! உங்களை வீட்டிலே கொண்டுபோய் விடறேன்" என்று ஜசீம் சொன்னுன்.

அவர்கள் வீட்டைவிட்டு வெகுதூரம் வந்துவிட்டிருந்தார்கள். ஜசீமுக்குக் கூடப் புரிந்தது, அவர்கள் வேளாவேளைக்கு வீடு போய்ச் சேரமுடியாதென்று. அவன் அவர்களை யானையின் முதுகின்மேல்

ஏற்றிவிட்டான். இரண்டாவது பெரியப்பா இந்த யானையை பற்றி எவ்வளவோ கதைகள் சொல்லியிருப்பது இப்போது சோனுவுக்கு ஞாபகம் வந்தது. மூடாபாடாவிலிருந்து வீட்டுக்கு வரும்போதெல்லாம் அவர் யானையைப் பற்றிச் சொல்லுவார். ஒரு தடவை அவர் யானைமேல் ஏறிக்கொண்டு சீதலக்ஷா நதியைக் கடந்து காளிகஞ்சுக்குப் போனாராம். வழியில் புயல் வந்துவிட்டதாம். புயல் ஒரு மரத்தை வேரோடு பிடுங்கிவிட்டது. அவர் மேலே விழவிருந்த மரத்தைத் தடுத்து நிறுத்தி யானை அவரைக் காப்பாற்றியதாம்.

இம்மாதிரி கதைகளைக் கேட்டுச் சோனுவுக்கு யானைகளின் மேல் பிரியம் ஏற்பட்டது. தான் இந்த யானையின் மேல் ஏறிச் சென்றால் எதிரில் இறங்கிவரும் ஆகாயத்தையே கடந்துவிடலாம் என்று தோன்றியது சோனுவுக்கு. யானை நடந்தது, மணி அடித்துக் கொண்டு. பின்னால் நாய் ஓடி ஓடிவந்தது. அவர்கள் பல கிராமங்களை, வயல்களை, காடுகளைக் கடந்து போனார்கள். வியாபாரம் செய்யத் தொலைதூரம் செல்லும் வியாபாரி போல், ஏழு படகுகளில், எழுநூறு படகோட்டிகள் புடைசூழ, யுத்தத்தில் வெற்றிப் பெற்றுத் திரும்பும் வீரனைப் போல் வீடு திரும்பினான் சோனா.

''நீங்க எப்போ வீட்டிலேருந்து புறப்பட்டீங்க?'' என்று ஜசீம் சோனாவைக் கேட்டான்.

''விடியற்காலையிலே.''

''உங்க முகம் வதங்கிக் கிடக்கு.''

''பசிக்கறது. இன்னும் ஏதும் சாப்பிடல்லே.''

''சாப்பிடறீங்களா?'' என்று கேட்டுக்கொண்டே ஜசீம் தன் மடியிலிருந்து பால்போல் வெண்மையான வெள்ளை நாவற்பழங்களை எடுத்துக் கொடுத்தான்.

நாவற்பழங்கள் இனிமையாக, ருசியாக இருந்தன. சோனா அவற்றைச் சாப்பிட்டானா, அப்படியே விழுங்கினானா என்று சொல்வது கஷ்டம்.

யானையைப் பார்த்துக் கிராமத்துத் தெரு நாய்கள் குரைக்கத் தொடங்கின. கிராம மக்கள் யானையைப் பார்க்கக் கூடினார்கள். ஒவ்வொரு வருடமும் ஜசீமுத்தின் அந்த யானையைக் கூட்டிக் கொண்டு பனிக்கால இறுதியில் அல்லது குளிர்கால ஆரம்பத்தில் அந்தப் பிராந்தியத்துக்கு வந்து யானையைக் கொண்டு வீட்டுக்கு வீடு விளையாட்டுக் காட்டுவது வழக்கம்.

''என்ன பாபு, பைத்தியக்காரப் பெரியப்பாவோட வெளியே கிளம்பிட்டீங்களே! அவர் உங்களை எங்கேயாவது விட்டுட்டுப் போய்ட்டாரா?'' என்று ஜசீம் சோனாவிடம் சொன்னான்.

"போகமாட்டார். அவருக்கு என் மேலே ரொம்பப் பிரியமாக்கும்!"

"பைத்தியக்கார மனுஷரோடு கிளம்ப உங்களுக்குப் பயமா இல்லையா?"

"இல்லே. பெரியப்பா என்னை எவ்வளவு இடத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போயிருக்கார், தெரியுமா? ஒரு தடவை அவர் என்னை ஹாஸான் பீரோட தர்காவிலே விட்டுட்டு வந்துட்டார், இல்லையா பெரியப்பா?"

மணீந்திரநாத் தலையைத் திருப்பிச் சோனுவைப் பார்த்தார். இப்போது அவன் தமக்குச் சற்றும் அறிமுகம் இல்லாதவனாகத் தோன்றியது. அவனுடன் தாம் பேசுவதே கௌரவக் குறைவாகத் தோன்றியது அவருக்கு.

அவர் எதிரிலிருந்த ஆகாயத்தைப் பார்த்தார், ஆகாயத்தைக் கடந்துபோக முடியுமா? கடந்து போக முடிந்தால் எதிரில் ஒரு பெரிய கோட்டை இருக்கும். அதற்குள் பாலின் இருப்பாள். இப்படியெல்லாம் நினைத்த அவர் அங்குசம் வைத்துக்கொண் டிருந்த சிறுவன் உஸ்மானிடமிருந்து அங்குசத்தைப் பிடுங்கிக்கொண்டு அவனை இறக்கி விட்டுவிட்டு, தம் இஷ்டப்படி யானையைச் செலுத்திக்கொண்டு போக விரும்பினார். "யானையே, என்னைப் பாலினின் தேசத்துக்கு அழைத்துக் கொண்டுபோ! அந்தக் கோமளமான முகத்தை நான் வேறெங்கும் காணவில்லை!" என்று கத்தினார்.

ஜசீம் கூவினான்: "நீங்க என்ன பண்றீங்க எசமான்?" உஸ்மான் அவரைப் பார்த்துப் பயந்துவிட்டான். அவர் அங்குசத்தைப் பிடுங்கிக்கொள்ள வருகிறாரே!

சோனு பின்னாலிருந்து அவருடைய காலைப் பிடித்துக்கொண்டான், அவர் கீழே விழுந்துவிடாதிருக்க. மணீந்திரநாத்தால் நகர முடியவில்லை. அவர் பரிதாபமாகச் சோனுவைப் பார்த்தார். சோனுவின் கண்ணில் ஏதோ ஒரு மாயம் இருந்தது. அவரால் அவனை மீறிக்கொண்டு போக முடியவில்லை.

அவர்கள் வயல்களைக் கடந்து சென்றார்கள். கிழக்கு வீட்டு நரேன்தாஸ் தலையில் துணி மூட்டையை வைத்துக்கொண்டு பாபுர் ஹாட்டுக்குப் போனான். யானையின் மணியோசை கேட்டுக் கிராமத்துச் சிறுவர் சிறுமியர் அதைப் பார்க்க ஓடிவந்தார்கள்.

கள்ளிச் செடிகளுக்குப் பக்கத்தில் பெரிய பந்தல் ஒன்று போட்டிருப்பதைப் பார்த்தாள் மாலதி. பந்தலுக்குள் ஜமுக்காளம் விரித்திருந்தது. மியான்களும் மௌல்விகளும் அங்கே வந்து கூடினார்கள். சாம்சுத்தீனும் அவனுடைய வலக் கையாகிய பேலு

ஷேக்கும் கிராமங்களில் எல்லா இடங்களிலும், மரங்களின் மேலும் விளம்பரங்கள் ஒட்டிவைத்திருந்தார்கள். அவற்றில், 'பாகிஸ்தான் ஜிந்தாபாத் ! சண்டை போட்டுப் பாகிஸ்தான் பெறுவோம் ! நாராயே தக்தீர் !'' என்று எழுதியிருந்தது.

'நாராயே தக்தீர் !' என்ற வாக்கியத்துக்கு அர்த்தம் தெரியவில்லை, மாலதிக்கு. சாம்சுத்தீனிடம் இதற்குப் பொருள் கேட்க வேண்டும் என்று நினைத்தாள் மாலதி.

மாலதி தன்னைப் பார்த்துக்கொண்டாள். அவளுடைய அழகு வளர்ந்துகொண்டே வந்தது. அவளுடைய கணவனின் மரணத் துக்குப் பின் இன்னொரு தடவை டாக்காவில் கலகம் ஏற்பட்டு விட்டது. கிராமத்துக்கு வந்திருந்த அவளுடைய மாமனர் டாக்காவில் சங்கு வேலை செய்யும் தொழிலாளிகள் மாற்று ஜாதியினரைப் பழிவாங்கியதாகச் சொல்லிவிட்டுப் போனர். மாலதிக்கு அதில் சந்தோஷம். அவள் தனக்குத் தானே சொல்லிக்கொண்டாள் : "ஏ சாமு ! நீ மரத்துக்கு மரம் நோட்டீஸ் ஒட்டி என்ன பண்ண முடியும் ?''

பந்தலுக்கடியில் முசல்மான் கிராமங்களைச் சேர்ந்த மக்கள் வந்து கூடினர்கள். அவர்களுடைய சாப்பாட்டுக்காகப் பெரிய பெரிய அடுப்புகள் எரிந்தன. பெரிய பெரிய தாமிர அண்டாக்களில் அரிசி மாவும் பாலும் கொதித்தன.

அப்போதுதான் பைத்தியக்கார மனிதர் ராஜாவைப் போல் யானை மேலேறி வீடு திரும்பிக்கொண் டிருந்தார். யானையின் மணியோசை ஒரு நல்ல செய்திபோல் எல்லார் காதுகளிலும் ஒலித்தது. ராசியான அந்த யானை லக்ஷ்மி மாதிரி ஏதோ நல்ல செய்தி கொண்டு வருவதாகக் கிராமவாசிகள் நினைத்தார்கள். இதுவரை தன்னந் தனியாக விட்டை விட்டு வெளியே வந்திராத குடும்பப் பெண்கள் கூடச் சிறுவர்களைத் தொடர்ந்து டாகுர் வீட்டை நோக்கி நடந்து வந்தார்கள், யானையைப் பார்ப்பதற்காக.

மறுநாள் இந்த யானை அவர்கள் வீட்டு வாசலுக்கு வந்து, 'அம்மா, அம்மா !' என்று கத்தும். அப்போது குடும்பப் பெண்கள், 'இந்த யானை நமது செல்வம். இந்த யானை லக்ஷ்மிதேவி ! இந்த யானை நம் வீட்டுக்கு வந்தால் நம் நிலத்தில் பொன் விளையும்' என்று நினைப்பார்கள்.

அவர்கள் யானையின் நெற்றியில் சிந்தூரம் இடுவார்கள். அதற்கு நெல்லும் அருகம்புல்லும் கொடுப்பார்கள்.

யானையின் மீது உட்கார்ந்தவாறே கை தட்டினர் மணீந்திரநாத். பாதிமா யானைக்குப் பின்னலேயே ஓடினள். அவள் கீழேயிருந்து, ''என்னையும் ஏத்திக்குங்க சோனபாபு !'' என்று கூறினள்.

அந்த நேரத்தில் பாதிமாவின் தகப்பன் சாம்சுத்தீன் பந்தலுக்குள் பெரிய பெரிய எழுத்துக்களில் விளம்பரம் எழுதிக்கொண் டிருந் தான். 'இஸ்லாமுக்கு ஆபத்து! பாகிஸ்தான் ஜிந்தாபாத்!'

இதையெல்லாம் பார்த்துக்கொண்டு சப்தபரணி மரத்தடியில் உட்கார்ந்திருந்த மாலதி உணர்ச்சிமேலிட்டு அழுதுவிட்டாள். அவள் உரக்கக் கூவ விரும்பினுள், "சாமு! நம்ம தேசத்துக்கு அனர்த்தத் தைக் கொண்டுவராதே!" என்று.

குளத்தங்கரை வழியே சென்றபோது யானை, மாமரம், மருதமரம், நாவல்மரம், இன்னும் எந்தெந்த மரங்களின் கிளைகள் அதற்கு எட்டியனவோ அவற்றையெல்லாம் முறித்து வாயில் போட்டுக்கொண்டது. செம்பரத்தை மரத்தின் அடியில் உட்கார்ந்து நிர்மலமான ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருக்க, ரொம்பப் பிடிக்கும் பைத்தியக்கார டாகுருக்கு. அதையும் மட மடவென்று முறித்து வாயில் போட்டுக்கொண்டது யானை. அது மரத்தின் கிளையை வாயில் வைத்துக் கடித்தபோது ஒரு மனிதன், தேங்காய்த் துண்டைக் கடிக்கும் ஒலி எழுந்தது. ஐசீம் அடிக்கடி அங்குசத்தை உபயோகித்தும் யானையை அடக்க முடியவில்லை. யானை மரத்தைத் தின்று முடித்துவிட்டது. சோகமாகக் கையைப் பிசைந்துகொண்டார் மணீந்திரநாத். அவருடைய பிரியத்துக்குரிய, மௌன நண்பனுன அந்த மரத்தின் மறைவு எழுப்பிய சோகத்தில் அவர், "கேத்சோரத்சாலா!" என்று கத்தினுர்.

வயல்களுக்கு நடுவில் பந்தல். முல்லாக்களும் மௌல்விகளும் வர ஆரம்பித்துவிட்டார்கள். அறுவடை ஆகிவிட்டதால் வயல்கள் காலியாகக் கிடந்தன. சில பருப்புப் பயிர்கள் மட்டும் வயல்களில் இருந்தன. பேலுஷேக் கூட்டாளிகளுடன் சேர்ந்து அடுப்புகளுக் காகப் பெரிய குழிகள் வெட்டியிருந்தான். ஹாஜி சாயபுவின் வேலைக்காரன் பாலைக் காய்ச்சினுன். பெரிய பெரிய தாமிர அண் டாக்களில் பால், தண்ணீர், தண்ணீரில் கரைந்த அரிசிமா, ஜீனி, லவங்க இலை, லவங்கப்பட்டை, அக்ரோட்டுக் காய், ஏலம் கிராம்பு, குங்குமப்பூ எல்லாம் இருந்தன. பழைய பெஞ்சியின் மேல் ஒரு கிழிசல் போர்வை விரித்திருந்தது. ஹாஜி சாயபுவின் மூன்று பிள்ளைகளும் அறுவடைக்காகப் போய்விட்டு வரும்போது ஒரு நல்ல ஜமுக்காளம் வாங்கி வந்திருந்தார்கள். அதை விரித்து மௌல்வி சாயபுவுக்கு ஆசனம் போட்டிருந்தது. முகமதிய உழவர் கள் பந்தலுக்கடியில் வந்து சேர்ந்தார்கள்.

இந்த மாதிரி நடக்கும் என்று சசீந்திரநாத்துக்குத் தெரியும். இந்தத் தடவையும் சாம்சுத்தீன் தேர்தலில் தோற்றுவிட்டான்.

அவனுல் லீக்கின் பெயரைச் சொல்லி எல்லா முஸ்லீம் வோட்டர்களின் வோட்டையும் பெறமுடியவில்லை. காங்கிரசின் சார்பில் நின்ற சசீந்திரநாத் இந்தத் தடவையும் யூனியனுக்குப் பிரசிடெண்ட் ஆகிவிட்டார். சாம்சுத்தீன் டாக்கா போயிருந்தான். அங்கிருந்து ஷாஹாபுத்தீன் சாகேப் வருவதாகப் பேச்சு அடிபட்டது. அவ்வளவு பெரிய மனிதர் ஒருவர் தம் ஊருக்கு வருகிருர், அவரைப் பார்க்கப் பந்தலுக்குப் போகவேண்டும் என்று நினைத்தார் சசீந்திரநாத். ஆனுல் எல்லாமே மத விவகாரமாகிவிட்டதே! அழைப்பு வந்தால்கூட அவரால் போக முடியாது, அந்தக் கூட்டத்துக்கு.

ஜசீம் இப்போது யானையை வீட்டு வாசலுக்குக் கொண்டு வந்து நிறுத்திவிட்டான். யானை அருகில் வந்ததும் சசீந்திரநாத், "ஜசீம், சௌக்கியமா?" என்று ஜசீமைக் கேட்டார்.

"இருக்கேன் எசமான்."

ஜசீம் யானையை அவருக்குச் சலாம் செய்ய வைத்தான்.

"ரெண்டாவது அண்ணு நல்லா இருக்காரா?"

"நல்லா இருக்கிருங்க."

"ரொம்ப நாள் கழிச்சு இந்தப் பக்கம் வந்திருக்கே."

"வந்தேன். உங்களையெல்லாம் பார்க்கணும்னு தோணிச்சு புறப்பட்டு வந்தேன்."

"ஜமீன்தார் வீட்டிலே பாபுவெல்லாரும் இல்லையா?"

"எல்லாரும் டாக்கா போயிருக்கிருங்க."

"ஏ, சோனு! உனக்குப் பசிக்கல்லையா? ஜசீம், அவனை இறக்கி விடு! அவனேட அம்மா அவனைக் காணுமே கன்னத்திலே கையை வச்சுக்கிண்டு உட்கார்ந்திருக்கா."

யானை கால்களை மடக்கிக்கொண்டு உட்கார்ந்தது. சோனு கீழே இறங்கினுன்.

கிராமமே யானையின் வருகையால் ஒரு திருவிழாவைப் போல் காட்சியளித்தது. ஜசீமின் பையன் உஸ்மான் யானைமேலிருந்து இறங்கினுன். எல்லாரும் யானையைச் சுற்றிக் கூட்டமாகக் கூடினுர்கள்.

ஜசீம் மணீந்திரநாத்திடம் சொன்னுன்: "நீங்க இறங்குங்க எசமான்!"

பைத்தியக்கார மனிதர் சும்மா சிரித்தார். கீழே இறங்க எவ்வித முயற்சியும் செய்யவில்லை. இந்த யானை அவருடைய செம்பரத்தை மரத்தைத் தின்றுவிட்டது! எவ்வளவோ காலமாக அந்த மரம் அவருடைய பாலினின் நினைவைத் தாங்கிக்கொண் டிருந்தது.

அதன் அடியில் உட்கார்ந்து அவரால் கப்பலின் அதிசய ஒளியைக் கேட்க முடிந்தது. கப்பல் தலைவன் பாய்மரத்தில் கொடியைப் பறக்கவிடுகிறுன். கப்பல் பாலினை ஏற்றிக்கொண்டு நீரில் மிதந்து செல்கிறது.

அவருடைய நினைவுகள் எல்லாவற்றையும் மரத்தோடு சேர்த்துச் சாப்பிட்டுவிட்டு இப்போது கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந் திருக்கிறது யானை.

சசீந்திரநாத்தும் யானையிலிருந்து இறங்கும்படி அண்ணனைக் கேட்டுக்கொண்டார். ஆனல் அவரோ யானையின்மேல் துறவி யைப் போலப் பத்மாசனம் போட்டுக்கொண்டு உட்கார்ந்து கொண்டே இருந்தார். யாராவது அவரைப் பலவந்தமாக இறக்க முயற்சி செய்தால் அவனுடைய கையைக் கடித்துவிடுவார்; அல்லது அவனைக் கொன்றேவிடுவார் என்பதுபோல இருந்தது, அவர் இருந்த நிலை. மொட்டையாக நின்ற செம்பரத்தை மரத்தின் மிஞ்சிய பாகத்தைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தார் அவர். அவருடைய வாய் எதையோ முணுமுணுத்துக்கொண் டிருந்தது. சசீந்திரநாத்தும், இன்னும் அங்கு வந்து கூடியிருந்த சில பெரிய மனிதர்களும் திருப்பித் திருப்பி அவரைக் கீழே இறங்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவரோ அவர்களுடைய வார்த்தையைப் பொருட் படுத்தாமல் யானையின் காதுக்குக் கீழே காலைவைத்து அமுத்தினர்.

ஜாடையைப் புரிந்துகொண்டு யானை எழுந்து அவரைத் தூக்கிக் கொண்டு நடக்கத் தொடங்கியது. "எசமான், எசமான்! என்ன செய்யறீங்க, எசமான்!" என்று ஜசீம் கூவினன்.

எல்லாரும் பயந்துபோய் யானைக்குப் பின்னே ஓடினர்கள். இதற்குள் யானை குளத்தங்கரை வழியே கீழே இறங்க ஆரம்பித்து விட்டது. பைத்தியக்கார டாகுரைத் தூக்கிக்கொண்டு மூடாபாடா வுக்கு யானை போவதை மாலதி பார்த்தாள்.

நரேன்தாஸின் நிலத்தைத் தாண்டினல் அந்தக் கள்ளிமரம். அதன் மேலும் மற்ற மரங்களின் மேலும் விளம்பரங்கள் தொங்கின. "பாகிஸ்தான் ஜிந்தாபாத்! போரிட்டுப் பெறுவோம் பாகிஸ்தானை! நாராயே தக்பீர்!"

இவ்வாறு விஷம் போன்ற பல விஷயங்கள் அவற்றில் எழுதி யிருந்ததை மாலதி பார்த்தாள். மாலதிக்குக் கத்தவேண்டும் போல் இருந்தது, "சாமு, உனக்கு ஏன் காலரா வரல்லே?" என்று.

யானை நரேன்தாஸின் நிலத்தைத் தாண்டிக்கொண்டு மைதானத் துள் ஓடியது. அதற்குப் பின்னல் சின்ன டாகுரும், ஜசீமும், ஜசீமின் பிள்ளை உஸ்மானும் ஓடினர்கள். கிராமத்துப் பெரியவர்

களும் சிறுவர்களும் ஓடினார்கள். ஒரு பைத்தியக்காரர் யானையின் மேல் உட்கார்ந்துகொண்டு குதிரைப் பந்தயத்தில் குதிரையை விரட்டிக்கொண்டு போவதுபோல் போவதைப் பார்த்து அவர்கள் கூச்சல் போட்டார்கள்.

சற்றுத் தூரத்தில் சாம்சுத்தீன் ஏற்பாடு செய்திருந்த பந்தல். பந்தலுக்கு வெளியே வெட்டவெளியில் பெரிய பெரிய அண்டாக் களில் சமையல் செய்துகொண் டிருந்தான் பேலு. மௌல்வி சாயபு இப்போதுதான் தொழுகைக்கான அழைப்பை முடித்து விட்டு மேடையிலேறித் தொழுகையை நடத்தினார். வெகுதூரக் கிராமங்களிலிருந்து 'இஸ்லாமுக்கு ஆபத்து' என்று நினைத்துச் சமையலை ருசி பார்க்க நிறையப் பேர் வந்தார்கள். அவர்கள் காதுகளைத் தீட்டிக்கொண்டு மௌல்வி சாயபு, பெரிய மியான், பராபர்த்தியைச் சேர்ந்த பெரிய பிஸ்வாஸ் ஆகியோருடைய ஆவேச மூட்டும் பேச்சுக்களைக் கேட்டார்கள். "இஸ்லாமியர்களே, ஒன்று சேருங்கள்! நாம் இந்துக்களின் காலடியில் கிடக்கிறோம்! நம்மிடம் என்ன இருக்கிறது? பூமி அவர்களுடையது, ஜமீந்தாரி அவர் களுடையது. அவர்கள்தான் வக்கீல்கள், டாக்டர்கள் எல்லாம்!" இம்மாதிரி கிளர்ச்சியூட்டும் பேச்சுக்கள் எழுந்தன, தொழுகைக்குப் பிறகு.

பேச்சைக் கேட்டுக்கொண் டிருந்தவர்கள் பின்னால் பேலு ஷேக்கின் கூக்குரலைக் கேட்டுப் பயந்துபோய் ஒருவர்மேல் ஒருவர் விழுந்தடித்துக்கொண்டு ஓடினார்கள். "பைத்தியக்கார டாகுர் ஒரு யானையின் மேல் உட்கார்ந்துகொண்டு இந்தப் பக்கம் வருகிறார்!" அவரோ பைத்தியக்கார மனிதர். நாள்முழுதும் அலைந்ததில் யானைக்கு மதம் பிடித்துவிட்டது போலும். அது பைத்தியம் பிடித்தது போல் தும்பிக்கையைத் தூக்கிக்கொண்டு பாய்ந்து வந்து பந்தலுக்குள் நுழைந்து எல்லாவற்றையும் நாசம் செய்தது.

பேலு ஷேக் அண்டாக்களுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டான். அண்டாக்களில் பாலும் தண்ணீரும் அரிசி மாவுடன் கொதித்துக் கொண்டிருந்தன. யானை பந்தலுக்குள் நுழைந்ததும் அங்கிருந்த வர்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள வயல்களுக்கு ஓடினார்கள். சாம்சுத்தீன் ஒரு பெஞ்சிக்கடியில் ஒளிந்துகொண்டான். ஓட முயன்ற பேலு துரதிருஷ்டவசமாக யானைக்கு முன்னால் அகப்பட்டுக் கொண்டான். யானை அவனைத் தன் தும்பிக்கையால் இறுகப் பிடித்துக்கொண்டது. அந்தப் பிடியின் அழுத்தத்தில் அவனுடைய ஒரு கை முறிந்துவிட்டது. எல்லாரும் தூரத்திலிருந்தே கூக்குர லிட்டார்கள். யாருக்கும் யானையை அணுகத் தைரியம் வரவில்லை.

யானையின் முதுகில் உட்கார்ந்திருந்த மணீந்திரநாத், யானையால் என்ன செய்ய முடியும் என்று பார்க்க விரும்பியவர் போல, கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அவர் யானைமேலிருந்து வேடிக்கை பார்ப்பது போல் இருந்தது. பேலுவுக்கு ஏற்பட்ட விபத்து அவனுக்கு வேண்டியதுதான் என்று நினைப்பதுபோல் இருந்தது. அவர் இப்போது யானையின் காதுக்குக் கீழே காலை வைத்துக் குத்தினார். அது அவருக்கு மிகவும் அடங்கியது போல் பேலுவைப் பொம்மைபோல் தரையில் நிற்க வைத்து விட்டது. அவர் உடனே இடம், நேரம், பாத்திரம் எல்லாவற்றையும் மறந்து ஓடும்படி யானைக்கு உத்தரவிட்டார். அதுவும் அவ்வாறே ஓடத் தொடங்கியது.

சூரியன் மறையத் தொடங்கினான். ஈசம் தர்மூஜ் வயலில் களையெடுத்து அதைச் சுத்தம் செய்துகொண் டிருந்தான். பின் பனிக்காலம் முடிவடையும் பருவம். சூரியன் மேற்கே மறையும் போதே புற்களின் மேல் பனி விழத் தொடங்கியது. ஜசீம் கூச்சல் போட்டுக்கொண்டே யானைக்குப் பின்னால் ஓடினான்.

'ஜமீந்தார் வீட்டு யானையை இந்தப் பிராந்தியத்துக்குக் கொண்டு வந்தது எவ்வளவு ஆபத்தாகிவிட்டது! பைத்தியக்கார மனிதரை யானை மேலே ஏற்றியிருக்கக் கூடாது! ஏறி உட்கார்ந்தவர் கீழே இறங்க மறுத்துவிட்டாரே! இப்போது என்ன ஆகும்?' யானை வயலைத் தாண்டிக் கிராமத்துக்குள் நுழைந்தது. அதைக் கடந்து மீண்டும் வயல், கிராமம், வயல் என்று போயிற்று.

மணீந்திரநாத் அதைப் பார்த்து ஆனந்தமாகக் கைகொட்டினார். கிராமத்து மக்கள் யானையைத் தொடர முடியாமல் நின்றுவிட்டார் கள். யானை ஆற்று மணல்வெளியைத் தாண்டி இருட்டில் கண்ணுக்கு மறைந்துவிட்டது. இனிமேல் பயமில்லை என்று நினைத்த மணீந்திரநாத், "நீ பாவம், இனி ஓடவேண்டாம். மெது வாக நட. இனி யாரும் நம்மைப் பிடிக்க முடியாது" என்று யானையிடம் கூறினார்.

இரவாகிவிட்டது. இது தாமோதர் தீ மைதானம் மாதிரி இருந்தது. இன்னும் கொஞ்சதூரம் போனால் மேக்னா நதி. நதிக் கரையில் ஒரு பெரிய மடம். இருட்டில் மடம் கண்ணுக்குத் தெரியவில்லை. மடத்தின் சிகரத்திலிருந்த திரிசூலத்தின் உச்சியில் விளக்கு எரிவது மாத்திரம் தெரிந்தது.

சசீந்திரநாத் வீட்டிலிருந்தார். ஊர்மக்கள் பலர் வந்திருந்தார்கள். ஜசீம் வாசலில் நின்றுகொண்டு அழுதான். இவ்வளவு பெரிய யானையுடன் பைத்தியக்கார டாகுர் எங்கே போய் மறைந்து விட்டார்! ஜமீந்தார் வீட்டு யானை; ராசியான யானை! இப்போது

என்ன செய்வதென்று புரியவில்லை அவனுக்கு. என்ன செய்வ தென்று கிராம மக்கள் விவாதித்தார்கள். கிராமத்துக்குக் கிராமம் செய்தி பரவியது. ஈசமும் மற்றவர்களும் விளக்குகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள். ஸோனலி பாலி ஆற்று மணலில் இறங்கி அவர்கள் உரக்கக் கூவினர்கள். ஜசீம் உஸ்மானை அங்கேயே விட்டுவிட்டு, துண்டைத் தோள்மேலே போட்டுக் கொண்டு அவர்களுடன் போய்ச் சேர்ந்துகொண்டான்.

சாம்சுத்தீன் கையில் லாந்தருடன் மைதானத்தில் நின்றான். பேலு இந்தத் தடவை பிழைத்துவிட்டான். அவனைத் தூக்கிக் கொண்டுபோய் வீட்டில் போட்டிருந்தார்கள். பைத்தியக்கார டாகுர் வேண்டுமென்றே இப்படியெல்லாம் செய்ததாகச் சாமுவுக்குத் தோன்றியது. அவன் இப்படி விளம்பரம் ஒட்டுவது, இந்தச் சமூகத்திலிருந்து பிரிந்து போக அவன் விரும்புவது, இதெல்லாம் அவருக்குப் பிடிக்கவில்லை. எவ்வளவு பெரிய விழாவை நாசம் பண்ணிவிட்டார் அவர்! சாம்சுத்தீன் எவ்வளவோ சிரமப்பட்டு இந்தக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தான். இவ்வளவு பெரிய கூட்டத்துக்குப் பட்டணத்திலிருந்து முல்லா, மௌல்விகள் எல்லாரும் வந்திருந்தார்கள். இப்போது அவர்கள் ஹாஜிசாயபுவின் வீட்டில் உட்கார்ந்துகொண்டு, 'இதென்ன அச்சானியமாக நடந்துவிட்டது?' என்று வருந்தினர்கள். சாம்சுத்தீனுக்குத் தன் கையையே கடித்துக்கொள்ள வேண்டும்போல் இருந்தது. நடந்ததெல்லாம் ஒரு பெரிய சதி என்று அவனுக்குத் தோன்றியது.

'சின்ன டாகுர் மறுபடி யூனியன் பிரசிடெண்டு ஆகப் பார்க்கிறர். அவர் மறுபடி காங்கிரஸ் சார்பில் தேர்தலுக்கு நிற்பார். கபீர் சாயபு வைக் கூட்டி வந்து காங்கிரஸ் சார்பில் சொற்பொழிவு செய்யச் சொல்வார். அப்போது இவனுக்கும் இந்த மாதிரி ஒரு யானை கிடைக்காதா? இன்று போல் யானையின் மேல் பேலுவை உட்கார்த்தி வைக்கவேண்டும். அல்லது பேலுவை விட்டுப் பந்தலுக்கு நெருப்பு வைக்கச் சொல்லிப் பழி வாங்க வேண்டும்.' சீர்குலைந்து கிடந்த பந்தல் மேடையிலிருந்து உடைந்த பெஞ்சி, மேஜைகள் ஜமுக்காளங்கள் இன்னும் மற்றச் சாமான்களை ஜப்பார் மூலம் வீட்டுக்குக் கொடுத்தனுப்பும்போது இவ்வாறெல்லாம் நினைத்தான் சாம்சுத்தீன்.

டாகுர் வீட்டுப் பெரியவர் தம் அறையில் விளக்கு அருகில் உட்கார்ந்துகொண்டு சற்று இருமுக்கொண் டிருந்தார். இப்போ தெல்லாம் அவர் அதிகமாக அறைக்கு வெளியே வருவதில்லை. அறைக்குள்ளேயே படுக்கையில் ஒரு பெரிய தலையணையின் மேல் சாய்ந்துகொண்டு படுத்திருப்பார். வாசலிலிருந்து வந்த சப்தத்

தைக் கேட்டு அவர் பெரிய மாமியைக் கேட்டார். "வாசல்லே என்ன சத்தம்?"

பெரிய மாமி விளக்கைச் சற்றுத் தூண்டிவிட்டாள். மரத்தாலும் தகரத்தாலும் ஆன அறை. ஜன்னல் வழியே குளிர்ந்த காற்று வீசியது. தன் கிழ மாமனுருக்குப் பணிவிடை செய்யும்போதெல்லாம் ஜன்னல் வழியே வயல் வெளியெல்லாம் பெரிய மாமியின் கண்ணில் படும். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பைத்தியக்கார மனிதர் அந்த வயல்கள் வழியே எங்கோ போய்விட விரும்புகிறுர். வாசலிலிருந்து வந்த சப்தம், மனிதர் இந்த மாதிரி யானையின் மேல் ஏறிக்கொண்டு கண்ணுக்குத் தெரியாமல் போய்விடுவது இவையெல்லாம் அவளை வேதனைக்குள்ளாக்கின.

இன்று அதிகாலையில் அவள் அவருக்கு ஆகாரம் கொடுத்தாள். நல்ல மனிதர் போல் அதைச் சாப்பிட்டுவிட்டு வழக்கம்போல் எங்கேயோ மறைந்துவிட்டார். கூடவே சின்னப் பையன் சோனு வையும் கூட்டிக்கொண்டு வயல்களிலும் கிராமங்களிலும் சுற்றி யிருக்கிறுர். பிறகு அவர் சோனுவின் கையைப் பிடித்துக்கொண்டு வீடு திரும்பும்போது யானையுடன் வந்த ஜசீம் அவர்களைப் பார்த் திருக்கிறுன்.

இந்தப் பிராந்தியத்திலேயே எல்லாருக்கும் அவரிடம் ஒரு பரிவு; அவர் தர்காவிலுள்ள பீரைப்போல் ஒரு மகான் என்ற எண்ணம். ஜசீம் அவர்களை யானையின் மேல் ஏற்றிக்கொண்டு வந்திருக் கிறுன். வீடு வந்ததும் இந்த விபத்து. பெரிய மாமி வருத்தத்துடன் எல்லாக் கதையையும் கிழவரிடம் சொன்னுள். வேதனை மேலிட்டது கிழவருக்கு. தம் வருத்தத்தைப் பெரிய மாமியிடமிருந்து மறைப் பதற்காக அவர் திரும்பிப் படுத்துக்கொண்டு ஜன்னல் வழியே இருட்டைப் பார்த்தார். இந்த இருளில் அவருடைய பைத்தியக்காரப் பிள்ளை எங்கோ அலைந்துகொண் டிருக்கிறுன்! இதற்குக் காரணம் அவர்தாம், அவருடைய பிடிவாதந்தான். இவ்வாறு நினைத்தபோது அவருக்கு ஏற்பட்ட வருத்தத்துக்கு அளவில்லை. "எனக்கு ரொம்பக் குளிராயிருக்கு, அம்மா! ஜன்னலை மூடு!" என்றுர்.

"ஒரு கம்பளி எடுத்துப் போர்த்திக்குங்களேன்."

"வேண்டாம். ஜன்னலை மூடினுப் போதும்."

ஜன்னலை மூடப் போன சமயத்தில் சகடமரத்துக்கு மறுபக்கத்தில் புதர்களின் இடுக்கு வழியே பல லாந்தர்கள் அசைவதைக் கண் டாள் பெரிய மாமி. பைத்தியக்கார மனிதரையும் யானையையும் எல்லாரும் தேடுகிறுர்களென்று அவளுக்குப் புரிந்தது.

ஜசீம் இருட்டில், "லக்ஷ்மி! ஏ லக்ஷ்மி!" என்று கூப்பிட்டுக் கொண்டு எல்லாருக்கும் முன்னுல் ஓடினுன். தன் பீபியைப்

போல் தனக்கு மிகவும் பிரியமான வளர்ப்பு யானை காணமற் போய்விட்டது. பைத்தியக்கார டாகூர் – சிறந்த மனிதர்களில் ஒருவர், பார்க்க ஆஜானுபாகுவாக இருப்பவர், பீரைப் போன்ற மகான் – அவரும் காணமற் போய்விட்டார். அவன் கத்தினன்: "லக்ஷ்மி! ஏ லக்ஷ்மி! நான் உனக்காக அவலும் பொரியும் வச்சிருக்கேன். நீ எங்கே இருக்கியோ அங்கேயிருந்து ஒரு குரல் கொடு. நான் உன்னைப் பிடிச்சு கட்டிக் கூட்டிக்கிட்டு வரேன்!"

ஈசம் சொன்னன்: "ஏன் மியான் இப்படி அலட்டிக்கரே? பெரிய எசமான் பெரிய மனுஷர். யானை ஒரு வாயில்லாப் பிராணி, வளர்ப்புப் பிராணி. அவர் அதுமேலே ஏறிக்கிட்டுப் பாலினைத் தேடப் போயிருக்கார்."

"பாலினு? அது யாரு பாலின்?" என்று ஜசீம் கேட்டான்.

"ஆமா, பாலின்தான்! அது ஒரு பொண்ணு."

"அம்மா, நடக்கக் கஷ்டமா இருக்கு. கதையைச் சொல்லு, கேட்டுக்கிட்டே நடக்கறேன்" என்று ஜசீம் சொன்னன்.

"பெரியவரோட கதையை என்னலே சரியாச் சொல்ல முடியுமா?" என்ருன் ஈசம்.

அவன் சொல்ல விரும்பினன்: "மியான், யாருக்குத்தான் தெரியாது அவரோட கதை! எசமான் சமயம் கிடைத்தபோதெல்லாம் படகிலோ, நடந்தோ எங்கேயோ போய்விடுவார்."

அப்புறம் ஈசம் ஒரு மழைக்காலத்தில் நிகழ்ந்த சம்பவத்தைப் பற்றி ஜசீமுக்குச் சொன்னன். அப்போது பைத்தியக்கார டாகுர் மூன்று நாட்கள் காணமற் போயிருந்தாராம். அப்போது ஸோனலி பாலி ஆற்றில் நல்ல வெள்ளம். அவர் வெள்ளத்தில் படகில் உட்கார்ந்துகொண்டு படகை அதன் வழிக்கு விட்டுவிட்டார். அந்தப் படகு அவரை ஃபோர்ட் வில்லியமுக்கோ, கங்கையில் நிற்கும் ஏதாவதொரு கப்பலுக்கோ கொண்டுபோய் விடுமென்று நினைத்தார் போலும். பைத்தியக்காரராதலால் அவர் அங்கேயே ஒரு கல்கத்தாவை மானசீகமாகக் கற்பனை செய்துகொண்டு நாள் முழுதும் அங்கே பாலினைத் தேடினர்.

தண்ணீரில் ஒரு கனவு மிதக்கிறது. கனவில் பெரிய கல்கத்தா நகரம் – வண்டிகள், குதிரைகள், ஃபோர்ட் வில்லியம், கோட்டைக் கருகில் விக்டோரியா மெமோரியல், கர்ஸன் பார்க், கோட்டைப் பக்கத்து மைதானத்தில் வெள்ளைக்காரச் சிப்பாய்கள் அணிவகுப்புச் செய்கிருர்கள். பைத்தியக்கார டாகுர் 'ஹா, ஹா' என்று சிரித்துக் கொண்டே 'கேத்சோரத்சாலா!' என்கிருர். காரணம், தண்ணீரில் அவருடைய நிழல் மட்டும் தெரிகிறது, வேறென்றும் காணேம்.

நகரம் கணநேரத்தில் மறைந்துபோய்விட்டது. நிழல் அவரைப் பார்த்துச் சிரிக்கிறது. பேஹலொ தேவி தண்ணீரில் மிதந்து போகிருள். எல்லாமே தண்ணீரில் மிதந்து போவது போல் இருக்கிறது. பெரிய ஏறி, நாற்புறமும் இருள், மின்மினிகள் பளபளத்தன. அவை மணீந்திரநாத்தையும் யானையையும் சூழ்ந்துகொண்டன. ஏரிகரையில் யானையின் மேல் போய்க்கொண் டிருந்தார் மணீந்திரநாத்.

பின்பனிக் காலமாதலால் குளிர்ந்த காற்று வீசியது. வயல்களில் முதிர்ந்த நெல்லின் மணம். ஆகாயத்தில் ஆயிரம் ஆயிரம் நட்சத்திரங்கள். யானையின் மேல் உட்கார்ந்தவாறே அவர் நட்சத்திரங்களைப் பார்த்தார். அவற்றில் ஒன்று பாலினின் முகம் என்று அவருக்குத் தோன்றியது. யானை மேல் ஏறிப் போனலும் படகில் ஏறிப் போனலும் அவரால் பாலினை அடைய முடியவில்லை. அவர் யானையைக் கேட்டார்: "லக்ஷ்மி! என்னை உன்னலே பாலின் கிட்டே கூட்டிக்கிண்டு போக முடியாதா? அந்த நீரூற்றுக் கிட்டே, அந்த அழகிய முகத்துக்கிட்டே என்னைக் கூட்டிக்கொண்டு போக முடியாதா உன்னலே!"

பழைய நினைவுகள் அவரை அலைக்கழித்தபோது அமைதியாக இருக்க முடியவில்லை அவரால். அவருக்குத் தோன்றும், கொஞ்சத் தூரம் சென்றுல் அவருக்குப் பிரியமான அந்த நெல்லிமரம் கண்ணுக்குத் தெரியும், அதனடியில் பொன்மான் கட்டப்பட்டிருக்கும் என்று, இப்படி நினைத்து நினைத்து இந்தப் பிராந்தியத்தில் அவர் சுற்றுத வயல்கள் இல்லை, கிராமங்கள் இல்லை. இதுமாதிரி எவ்வளவோ நாட்கள். தாம் ஒருபோதும் அந்த இடத்துக்குப் போய்ச் சேர முடியாது என்றும் சில சமயம் அவருக்குத் தோன்றும். தம் மனைவியின் முகமும் சோகமயமான உருவமும் அவர் மனத்தில் தோன்றி அவரைச் சஞ்சலப்படுத்தும். அவர் மெதுவாக வீடு திரும்புவார். ஆம், படகிலோ யானை மேலோ ஏறி அவரால் அங்கே போய்ச் சேர்ந்துவிட முடியாது. பொன்மான்கள் மிக வேகமாக ஓடிவிடுகின்றன.

ஜசீம், ஈசம், நரேன்தாஸ் இவர்களுடைய கோஷ்டி இரவு முழுதும் விளக்கு வைத்துக்கொண்டு தேடியும் யானையையோ மணீந்திரநாத்தையோ கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்கள் அதிகாலையில் வீடு திரும்பி விட்டார்கள். சசீந்திரநாத் இன்னும் இரண்டு குழுக்களைக் கிழக்கிலும் மேற்கிலும் தேட அனுப்பியிருந்தார். சிலர் யானையை வடக்கே பார்த்ததாகச் சொன்னர்கள், சிலர் தெற்கே பார்த்ததாகச் சொன்னர்கள், பலர் பலவிதச் செய்திகளைக் கொண்டு வந்தார்கள். சிலர் சொன்னர்கள், அவர்களை அரச

மரத்தடியில் பார்த்ததாக. சிலர் பார்தி மைதானத்துக்கு வடக்கே பார்த்ததாகச் சொன்னார்கள். வடக்கேயிருந்து செய்தி வந்தது: மணீந்திரநாத் யானையை விட்டு வயல்களிலிருந்த கரும்பையெல்லாம் சாப்பிடச் செய்கிறாரென்று, ஆனால் ஒரு வாரமாகியும் யானை கண்டுபிடிக்கப் படவில்லை.

வீட்டில் சோகம் பரவியிருந்தது. யாரும் உரக்கப் பேசுவதில்லை. லால்ட்டு, பல்ட்டு, சோனா எல்லாரும் வீட்டிலேயே இருந்தார்கள். அவர்கள் குளத்தங்கரையிலிருந்த மருத மரத்தடியில் நின்று கொண்டு மணீந்திரநாத் யானையின் மீது ஏறிக்கொண்டு திரும்பி வருகிறாரா என்று பார்த்தார்கள். அந்த நாயும் அவர்கள் கூடவே இருந்தது. தங்களுக்குப் பிரியமான அந்த மனிதருக்காக அவர்கள் மாலைநேரம் முழுதும்—மைதானத்திலிருந்த பெரிய அரசமரத்தை இருள் வந்து சூழும்வரை—காத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பார்கள்.

ஒரு நாள் நாய் குரைக்கத் தொடங்கியது. அப்போது சூரியன் இன்னும் மறையவில்லை. நாய் குரைத்துக்கொண்டே ஓடியது, பிறகு மறுபடியும் சோனாவுக்கருகில் திரும்பி வந்தது. அவர்கள் கிழக்குப் பக்கத்தில் அடிவானத்தில் ஒரு சிறு கறுப்புப் புள்ளி அசைவதைக் கவனித்தார்கள். புள்ளி கொஞ்ச கொஞ்சமாகப் பெரியதாகிக்கொண்டு வந்தது. அது யானைதான்! சோனா உரக்க, "பெரியப்பா வந்துட்டார்" என்று கத்திக்கொண்டே வீட்டுக்கு ஓடினான்.

மணீந்திரநாத் களைத்துப் போயிருந்தார். முகம் சோர்ந்திருந்தது. முகத்திலும் கண்களிலும் பட்டினியின் அடையாளம். அவர் யானையின் முதுகோடு ஒட்டிக்கொண்டுவிட்டாரோ என்று தோன்றியது. யானை வாசலில் கால்களை மடக்கிக்கொண்டு உட்கார்ந்தது, 'இனிமேல் எங்கும் போகமாட்டேன், இங்கேயே உட்கார்ந்திருப்பேன்' என்னும் பாவனையில்.

"இறங்குங்க, எசமான்! லக்ஷ்மியை இன்னும் ஏன் கஷ்டப் படுத்தறீங்க?" என்று ஜசீம் சொன்னான்.

கிராமத்தார் எல்லாரும் கேட்டுக்கொண்டும் அவர் கீழே இறங்கவில்லை.

சசீந்திரநாத் அவர்களை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டுத் தாமே அவரிடம் சென்று மெல்லக் கூறினார், "அண்ணி இவ்வளவு நாளாச் சாப்பிடல்லே. அண்ணிக்கு இன்னும் எவ்வளவு கஷ்டம் கொடுப்பீங்க?"

அப்படியும் அவர் நகராமல் போகவே, சசீந்திரநாத் அண்ணியைக் கூட்டிவரச் சொன்னார்.

முகத்திரையை இழுத்து விட்டுக்கொண்டு செம்பரத்தை மரத்துக் கருகில் வந்து நின்ற அண்ணியிடம் சசீந்திரநாத் சொன்னுர். "நீங்க ஒரு தடவை முயற்சி பண்ணிப் பாருங்க, அண்ணி!"

பெரிய மாமி ஒன்றும் பேசாமல், நீர் நிறைந்த, உணர்ச்சி மிகுந்த, கண்களுடன் யானைக்கு முன்னே போய் நின்ருள். உடனே மணீந்திரநாத் ஒரு சாதுப் பையன் போல் யானையிலிருந்து இறங்கி அவளைப் பின்தொடர்ந்து வீட்டுக்குள் சென்ருர். இப்போது அவருக்கு, அவளுடைய இரண்டு பெரிய கண்களைத் தவிர வேறெதுவும் நினைவில் இல்லை.

வீட்டில் நுழைந்த அவர் தமக்குப் பிரியமான ஜன்னல் திறந்திருப்பதைக் கவனித்தார். அங்கு நின்ருல் அவருடைய அன்புக்குரிய வயல்வெளியைப் பார்க்க முடியும். அப்போது அவருக்குத் தோன்றும், தூரத்தில் ஒரு நெல்லிமரம் இருக்கிறது, அதனடியில் பாலின் நிற்கிருள் என்று. இவ்வளவு நாட்களாக ஆற்றிலும், காட்டிலும், வயல்களிலும் அவர் பாலினைத் தேடித் திரிந்திருக்க வேண்டியதில்லை.

பெரிய மாமி பூஜைக்காகப் பூப்பறித்துக் கொண்டிருந்தாள். குளிர் காலம். தோட்டத்தில் குளிர்காலப் பூக்களெல்லாம் பூத்திருந்தன. மிகவும் அதிகாலையில் மாலதி ஸ்நானம் செய்யத் துறைக்கு வந்திருந்தாள். துறையில் சிறிது பனி இருந்தது, படிகளில் வெயில் இல்லை. கிரணியும் ஆபுவும் கரையில் உட்கார்ந்துகொண்டு விரத கதை சொல்லிக் கொண்டிருந்தார்கள் 'உட்டோ, உட்டோ, சூர்ஜ்ஜி டாகுர் ஜிகிமிகிதியா!' மாலதி தண்ணீரில் இறங்கிஞள். பெரிய மாமி துறைக்கு வந்தபோது மாலதி தண்ணீரில் மூழ்கிக் குளிப்பதைக் கண்டாள். இந்தக் குளிரில் மாலதி நீந்தி நீந்திக் குளித்தாள்.

மாலதி சற்று நேரங்கழித்துத் தண்ணீரிலிருந்து வெளியே வந்தாள். ஈரத்துணியில் அவளது உடல் குளிரால் நடுங்கியது. அவள் பெரிய மாமிக்குப் பூப்பறித்துக் கொடுக்கும் சாக்கில் ஈரத்துணியுடனேயே ஆளிச் செடிக்குக் கீழே சற்று நேரம் நின்ருள்.

"ஏன் இன்னிக்கு இவ்வளவு சீக்கிரம் ஸ்நானம்?" என்று பெரிய மாமி கேட்டாள்.

மாலதி பதில் சொல்லவில்லை. அவள் பூச்செடிக்குள்ளும் புதர்களிலும் எதையோ தேடிப் பார்ப்பது போல் எட்டிப் பார்த்தாள்.

அவள் எதையோ தொலைத்துவிட்டாற் போல் அவள் முகம் வருத்தமாக இருந்தது கட்டம் போட்ட மெல்லிய புடைவையை அணிந்திருந்தாள் அவள். அந்தப் புடைவையைப் பார்த்தால் அவளுக்கு அந்தக் கனவு நினைவு வந்தது.

கனவில் அவள் கட்டம் போட்ட புடைவை அணிந்துகொண்டு மதுமாலா வேடத்தில் உட்கார்ந்திருந்தாள். அவளுடைய மதன குமாரன் வருவான், அவனுக்கு அவள் மேல் கொள்ளை ஆசை. அவன் கடைக்கோ, சந்தைக்கோ போனால் அவளுக்காகக் கட்டம் போட்ட புடைவை வாங்கிவருவான். எவ்வளவோ நாட்களுக்குப் பின் அந்த மனிதன் இரவில் வந்து அவள் அருகில் உட்கார்ந்திருந்தான். கலகத்தைப் பற்றிச் சொன்னபோது அவனுடைய முகத்தில் வருத்தம் தோய்ந்திருந்தது. பிறகு அவன் பேசிக்கொண்டே எல்லாம் மறந்து அவளுடைய மோவாயைத் தடவினான். கடைசியில் அவளை அப்படியே தூக்கிக்கொண்டு போய் மெத்தையின் மேல் 'தொபுக்' என்று போட்டுவிட்டான். அப்புறம் என்ன? என்னென்ன செய்தான் கனவில்? அவனுடன் சகவாசம்! அதன்பின் அவள் நேரே துறைக்கு வந்துவிட்டாள் குளிக்க. மாலதி தன் தேகத்தின் வெப்பத்தை யெல்லாம் தண்ணீரில் கொட்டிவிட்டுத் தண்ணீரிலிருந்து எழுந்தபோது அவளுடைய காதில் விழுந்தது, தென்பக்கத்து அறையில் யாரோ தலையை ஆட்டிக்கொண்டே படிப்பது. 'பாதாய் பாதாய் பொடே *நிசிர் சிசிர்!'*

குளிர்காலக் காலைநேரம். குளத்தின் மறுகரையில் மாக்மண்டலின் விரத கதையைக் கேட்டுவிட்டுப் பால் வீட்டுப் பெண்கள் இருவரும் குதித்துக் குதித்துக்கொண்டு நடந்து சென்றார்கள். அவர்கள் பாடிக்கொண்டு போனார்கள்: 'உட்டோ உட்டோ சூர்ஜ்ஜி டாகுர் ஜிகிமிகிதியா, நா உட்டிதே பாரி ஆமி இயலேர் லாகியா!'

சோனு படித்துக்கொண் டிருந்தான், "பாதாய் பாதாய் பொடே நிசிர் சிசிர்,..." லால்ட்டு படித்துக்கொண் டிருந்தான். "அட்லாஸ் தி செல்ஃபிஷ் ஜயண்ட் கேம். ." பல்ட்டு படித்தான். "ஏ ப்ளஸ் பி ஹோல் ஸ்கொயர்...."

அங்கே படிப்புப் போட்டி நடந்தது. மூவரும் உரக்கப் படித்தார் கள். அந்த இளைஞன் தொலைவிலிருந்து அந்த வீட்டுக்குத் திரும்பி வந்திருக்கலாம். தாங்கள் எவ்வளவு நன்றாகப் படிக்கிறோம், எவ்வளவு நிறையப் படிக்கிறோம் என்பதைப் புதிதாக வந்திருப் பவனுக்குத் தெரிவிக்கவே பையன்கள் இப்படிப் போட்டி

போட்டுக்கொண்டு உரக்கப் படித்தார்கள். மாலதிக்கு முதல் நாள் மாலையே செய்தி கிடைத்துவிட்டது. ஆயினும் தயக்கம் காரணமாக அங்கே போகவில்லை. அவனைப் பார்க்க அவளுக்கு ரொம்ப ஆசை. அநேகமாக இரவு பூராவும் அவனுக்காக விழித்திருந்தாள்.

லால்ட்டு ஒரே வரியைத் திருப்பித் திருப்பிப் படித்தான்.

"அட்லாஸ்ட் தி செல்ஃபிஷ் ஜயண்ட் கேம் ..."

செல்ஃபிஷ் ஜயண்ட்! வார்த்தைகளை மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள் மாலதி. அவள் பயந்து ஓடிப்போய்விட்டாள் அன்று. எவ்வளவு நாட்களுக்கு முன்பு நடந்தது அது!

அப்போது ஏரிக்குள் முதலை மிதந்து வரவில்லை. மாலதி ஃபிராக் அணிந்துகொண் டிருந்தாள். ஒரு நாள் கண்ணாமூச்சி விளையாடும் போது அந்த 'செல்ஃபிஷ் ஜயண்ட்!' அவளைக் கட்டிக்கொண்டு முத்தமிட்டுவிட்டான். மாலதிக்குக் கோபம், வருத்தம். இல்லை, கோபம், வருத்தம் என்று சொல்ல முடியாது. தன்னிடம் ஒன்றும் சொல்லாமல் கொள்ளாமல் ரஞ்சித் இப்படித் தன்னை முத்தமிட்டது ஒரு தப்பான காரியம் என்று நினைத்தாள் அவள். அவனைக் கண்டிப்பது, பயமுறுத்துவது அவள் கடமை. அப்படிச் செய்யா விட்டால் அவளுடைய கௌரவம் போய்விடும். பெரிய மாமியிடம் சொல்லிவிடப் போவதாக ரஞ்சித்தைப் பயமுறுத்தினாள் மாலதி.

தாய் தந்தையற்ற அந்த அநாதை — செல்ஃபிஷ் ஜயண்ட் — மறு நாள் காலையில் ஒருவருக்கும் சொல்லாமல் கொள்ளாமல் ஊரை விட்டே ஓடிப் போய்விட்டான்.

பெரிய மாமிக்கே ஓடிப் போன தன் தம்பியைப் பற்றிய தகவல் எதுவும் தெரியவில்லை.

அதன் பிறகு ஸோனாலி பாலி நதியில் எவ்வளவு தண்ணீர் ஓடி விட்டது, எவ்வளவு குளிர் காலங்கள், வசந்தங்கள் கழிந்துவிட்டன! ஏரியில் முதலை அகபபட்டுக்கொண்ட வருடந்தான் மாலதிக்குக் கல்யாணமாயிற்று. அவள் ஒரு நாள் பெரிய மாமியைக் கேட்டாள், "ரஞ்சித் உங்களுக்குக் கடிதாசு எழுதினானா அண்ணி?" என்று.

"எழுதறான்."

"என்ன எழுதறான்?"

"ஒண்ணுமில்லே விசேஷமா. சௌக்கியமா இருக்கேன்னு எழுதறான்."

"விலாசம் எழுதியிருக்கானா?"

"எழுதக் கூடாது."

"ஏன்?"

"தேசசேவை பண்றான். அதனாலே விலாசம் தெரியக்கூடாது."

குளிர்காலச் சூரியனுக்கு உதிக்கவே மனம் இல்லை; வெயில் கொடுக்கவே மனம் இல்லை. மரங்களின் நிழல் வீடுகளை மறைத்திருந்தது. கிழவர்கள் வெயிலுக்காகத் தவித்தார்கள். விடியற்காலைக்குச் சற்று முன்னல், இருட்டும் இல்லை, வெளிச்சமும் இல்லை. மாலதி, சப்தம் செய்யாமல் துறைக்கு வந்தபோது நெசவு அறைக்கு வெளியே அமூல்யன் நெருப்புக்கருகில் குளிர் காய்வதைப் பார்த்தாள். குளிர் காலமாதலால் அமூல்யன் சருகுகள், குப்பை செத்தைகளைச் சேர்த்து வைத்திருந்தான். அவன் நெருப்பில் சருகுகளைப் போட்டுக் கொண்டிருந்தான். சோபா, ஆபு, நரேன்தாஸின் மனைவி எல்லாரும் நெருப்பைச் சுற்றி வட்டமாக உட்கார்ந்திருந்தார்கள்.

மாலதி கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தபோது அமூல்யன் தன்னைக் கவனிப்பதைப் பார்த்தாள். அவள் அங்கே வராமல் நிலைக்கட்டையில் சாய்ந்துகொண்டு நின்றுள். நெருப்புக் கருகில் அமூல்யனின் முகம் பயங்கரமாகத் தெரிந்தது. இப்போது அவள் கனவில் கண்ட மனிதனின் முகம் அவள் மனக் கண்ணில் தோன்றவில்லை. அமூல்யனின் முகந்தான் எதிரில் தெரிந்தது. தன் உடல் முழுவதும் அசுத்தமாகிவிட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது மாலதிக்கு. அவள் அமூல்யனுக்கு அருகில் உட்கார்ந்து நெருப்படியில் குளிர்காய விரும்பாமல் ஸ்நானம் செய்யக் குளத்துக்கு ஓடிவந்துவிட்டாள். இறந்த கணவனின் முகத்தை நினைத்துக்கொண்டே வெகுநேரம் தண்ணீருக்குள் அமுங்கிக் கிடந்தாள். அமூல்யனின் முகத்தை மறப்பதற்காக, கெட்ட நினைவுகளை மறப்பதற்காக, அவள் பனிக்கட்டிபோல் குளிர்ந்திருந்த நீரில் முழுகி முழுகி எழுந்தாள்.

குளித்தபின் செம்பரத்தைச் செடிக்கருகில் வந்து நின்றபோது தான் ஏன் தண்ணீரில் வந்து விழுந்தோம் என்பது அவளுக்கு மறந்துபோய்விட்டது. அவள் பூஜையறைக்குப் போய் மந்திரங்களை முணுமுணுத்துக்கொண்டு சாமிக்கு நமஸ்காரம் செய்தாள். தன்னையே வைதுகொண்டாள். பூஜையறைக் கதவில் தலையை முட்டிக்கொண்டாள். விதவைக்கு இளமை கூடாது, சுகம் கூடாது, காதல் கூடாது என்பதுதான் கடவுளின் விருப்பம். இளமையிருந்தால் பாவம், காதல் இருந்தால் பாவம், சுகத்தை விரும்பினுல் பாவம். மாலதி தலையால் முட்டிக்கொண்டு சொல்ல விரும்பினுள்: "சாமி, என் இளமையை எடுத்துக்கொண்டுவிடு. நான் அதிருஷ்டக்கட்டை! எனக்கு அதிருஷ்டமிருந்தால் என் புருஷன் உயிரோடிருந்திருப்பான். கலகத்தில் செத்துப் போயிருக்கமாட்டான்!" அவள் கண்ட கனவு மீண்டும் அவள் ஞாபகத்துக்கு,

வந்தது. எவ்வளவோ காலங்கழித்து அந்த மனிதன் அவளிடம் தண்ணீர் கேட்டு வந்திருந்தான். ஆனால் அவள் தண்ணீர் எடுத்து அவன் கையில் கொடுத்தபோது அவனது முகம் மாறிப் போய் விட்டது. அமூல்யனுடைய முகம் போல ஆகிவிட்டது. நெசவு அறையில் அமூல்யன் சிரித்துச் சிரித்துப் பேசுவான். ஒன்றுந் தெரியாத அப்பாவி போல் பேசுவான். "அக்கா! மாலதி அக்கா" என் அறைக்குக் கொஞ்சம் தண்ணி கொடுத்தனுப்புங்க? அக்கா உங்களுக்காகப் பிரப்பம்பழம் பறிச்சுக்கிட்டு வந்திருக்கேன், அல்லிக்கிழங்கு கொண்டு வந்திருக்கேன். அல்லித்தாமரைக் கொட்டை கொண்டு வந்திருக்கேன். உங்களுக்காக நான் என்னென்ன செய்யறேன் பாருங்க!" கனவில் தன் கணவனுக்குத் தண்ணீர் கொடுக்கவந்த அவள் படுக்கையில் அமூல்யன் உட் கார்ந்திருப்பதைக் கண்டாள்.

வீடு திரும்பிய அவள் ஈரத்துணியைக் களைந்துவிட்டு ஒரு வெள்ளைப் புடைவையைக் கட்டிக்கொண்டாள். கைத்தறிச் சால்வை ஒன்றை மேலே போர்த்துக்கொண்டாள். கொய்யா மரத்தடியில் அடுப்பைக் கொண்டுபோய் அதைப் பற்றவைத்தாள். இன்று அவள் வேண்டுமென்றுதான் குளிர்காய அமூல்யனுக்கு அருகில் போகவில்லை. அமூல்யனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தால் அவளு டைய தேகத்தில் எரிச்சல் அதிகமாகும். அவள் ஆபுவைக் கூப்பிட்டாள். சோபாவைக் கூப்பிட்டுக் கொஞ்சம் பலாச்சுள்ளி கொண்டுவரச் சொன்னாள். குளிரால் அவளுடைய கைகால்கள் மிகவும் வெளுத்துப் போயிருந்தன. ஆபுவைக் கொஞ்சிக்கொண்டே அவள் கன்னத்தில் தன் கையை வைத்துத் தேய்த்தாள். வெப்பத்துக் காகச் சோபாவின் கன்னத்தில் தன் கையை வைத்தாள். இந்தக் குளிரிலும் இந்தப் பெண்கள் எவ்வளவு சூடாக இருக்கிறார்கள்!

குளிர்கால வெயில் நீளமாக விழுந்தது. எதிரிலிருந்த வயலில் உயரமாக வளர்ந்திருந்தது புகையிலைப் பயிர். பின்னால் தோட் டத்தில் வெங்காயம், பூண்டு, உருளைக்கிழங்கு, முட்டைக்கோசுச் செடிகள். நரேன்தாஸ், நிலத்திலும் தறியிலும் மாதம் பூராவும் உழைத்து இந்தக் குடும்பத்தைக் காப்பாற்றுகிறான். குடும்பத்தில் தனக்கு இருக்கும் பாசம் காரணமாக அவன் எப்போதும் நிலத்திலோ தறியிலோ ஏதோ வேலை செய்துகொண்டே இருப்பான். இப்போது அவன் வெங்காய வயலில் செடிகளின் வேர்க்கணுவில் மண்ணைப் போட்டுக்கொண் டிருந்தான். அவன் மண்ணைக் கையிலெடுத்து அதைத் தங்கத்தைப் பார்ப்பதுபோல் இமை மூடாமல் பார்ப்பதை மாலதி கவனித்தாள். மண்ணுக்குள் என்ன சத்து இருக்கிறது, அது

எப்படிச் செடியில் காயாக, பயிரில் தானியமாக வருகிறது, யாருடைய புண்ணியத்தால் வயல் பொன்னாக விளைந்து அந்த விளைச்சல் வீட்டுக்கு வருகிறது என்றெல்லாம் மண்ணின் ரகசியத்தைக் கண்டுபிடிக்க முயல்கிறான் நரேன்தாஸ். அவன் தன்னைச் சுற்றி வளர்ந்திருந்த புகையிலைப் பயிருடனே, கடலைச் செடிகளுடனே, மண்ணுடனே ஏதோ பேசிக்கொண்டிருந்தான். எவ்வளவு கஷ்டப்பட்டுத் தண்ணீர் இறைத்து இந்தப் பயிர்களை வளர்த்திருக்கிறான் அவன்! அவனுக்குப் பயிர்களின் மேல், செடிகளின் மேல் ரொம்பப் பிரியம். ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் நரேன்தாஸ் வயலுக்கு வந்துவிடுவான். செடிகளின் வேர்களுக்கு மேல் மண்ணைப் போட்டுக்கொண்டு அவற்றுடன் பேசத் தொடங்கி விடுவான். பேச்சுச் சுவாரசியத்தில் சாப்பிடக்கூட மறந்துவிடுவான். வாழ்க்கையின் சுகதுக்கங்களை மறந்துவிடுவான்.

மாலதி ஒரு பானையில் தண்ணீர் எடுத்துக்கொண்டாள். கொஞ்சம் எண்ணெய் தடவிய பொரி, இரண்டு பெரிய வெங்காயத் துண்டுகள், கொஞ்சம் உப்பு, பச்சை மிளகாய் எடுத்துக்கொண்டு நரேன் தாஸுக்குக் கொடுக்கப் போனாள். அவள் திரும்பி வரும்போது, கிராமத்து மக்கள் அவர்களுடைய அன்புக்குரிய வயலில் வேலை செய்யப் போவதைப் பார்த்தாள்.

சிறிய டாகுர், ஈசம் பின்தொடர ஆற்றுப்படுகையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். நிலத்திலிருந்து தண்ணீர் இறங்காதது கவலையாயிருந்தது ஈசமுக்கு. இந்தத் தண்ணீரை வடிப்பது எப்படி என்பதைப் பற்றிச் சிறிய டாகுருடைய யோசனையைக் கேட்கவே அவன் அவரை நிலத்துக்கு அழைத்துக்கொண்டு போனான். மன்சூர், ஜப்பர், நயாபாடாவின் பிஸ்வாஸ், ஹாசிமின் தந்தை ஜய்னல், ஆபேத் அலி இன்னும் பலர் கடைத்தெருப் பக்கம் போய்க்கொண்டிருந்தார்கள். பலர் எருது, பசுக்கள் கன்றுகளைக் கூட்டிக்கொண்டு போனார்கள். பேலுஷேக், ஹாஜி சாயபுவின் கோவில் மாட்டை விரட்டிக்கொண்டு திரிந்தான். எல்லாரும் விவசாய வேலையில் மூழ்கியிருந்தார்கள். அவர்களுடைய கனவுகள், ஆசாபாசங்கள், அன்பு எல்லாமே விவசாயத்தில் அடங்கியிருந்தன. அதற்குப் பிறகு மனிதனுக்கு வேறென்ன வேண்டும்? அவன் கொஞ்சம் கடவுளைப் பற்றி நினைக்க விரும்புகிறான். இந்துக் குடியிருப்புகளில் ஜாத்ரா நடக்கும், கூத்து நடக்கும், ராமாயண நாடகக் கூத்து, ராவணவதம். லோக்நாத் பால் ராமன் வேஷம் போடுவான். மாஜி வீட்டுப் பந்தலில் மிருதங்கம் முழங்கும். ஊரிலுள்ள கிழவர்களும் கிழவிகளும் அங்கே போய்விடுவார்கள். ஒருவர்கூட வீட்டில் தங்கமாட்டார்கள்.

குளிர்காலத்தில் சந்தா வீட்டில் பாட்டுப் போட்டிகள் நடக்கும். பெரிய பெரிய பெட்ரோமாக்ஸ் விளக்குகள் எரியும். கிராமம் முழுதுமே உற்சவம் மாதிரி இருக்கும். பராபர்திச் சந்தையிலுள்ள தன் கடையை மூடிவிட்டுக் கிராமத்துக்குத் திரும்பிவருவான் ஸ்ரீசந்திரன். குளிர்காலம் வந்துவிட்டால் திருவிழாக்கள் நடக்கும். மக்கள் தொலை தூரங்களுக்குப் பிரயாணம் செய்வார்கள். குதிரைப் பந்தயம் நடக்கும். பந்தயத்தில் ஜயிப்பதற்காகப் பிஸ்வாஸ் பாடாவில் தினமும் ஒத்திகை நடக்கும்.

அமூல்யனும் நெசவு அறையில் ஒத்திகை பார்க்கிறனென்று மாலதிக்குத் தோன்றியது. முன்பு எவ்வளவு அப்பாவியாக இருந்தான் இவன்! நாள் பூராவும் நெய்துகொண் டிருப்பான், வெளியே வந்தால் தலைநிமிர்ந்து பார்க்கமாட்டான். மாலதி இட்ட வேலையைச் செய்வான். அந்த அமூல்யன் போன வருஷத்து மழைக் காலத்தில்...

சென்ற வருஷம் அவர்கள் எல்லாரும் நாங்கல்பந்துத் திருவிழாவின் அஷ்டமி ஸ்நானத்துக்குச் சென்றிருந்தார்கள். பெரிய படகில், மூன்று தட்டுப் படகு, பெரிய அத்தை, தனமாமி, மாஜிவீட்டுக் காலாபாகாடின் தாய் இன்னும் எவ்வளவோ பேர் படகில் ஏறிப் போனார்கள். ஒரு நாளைப் பயணம். அஷ்டமி ஸ்நானத்துக்கு எவ் வளவு கூட்டம்! ஆற்றின் இருகரையிலும் எவ்வளவு மூர்த்திகள்! பைரவரின் மண் சிலையில் நீலநிறமாக இருந்த வயிற்றைப் பார்த்து வேடிக்கையாகப் பேசினான் அமூல்யன்.

அகலமான நதி. இருகரைகளும் கண்ணுக்குத் தெரியவில்லை. எவ்வளவோ படகுகள், எவ்வளவோ ஸ்டீமர்கள் வந்திருந்தன. பாவத்தைக் களைந்துவிட்டுப் புண்ணியம் சம்பாதிக்க நிறைய மக்கள் வந்து குழுமியிருந்தார்கள். ஆற்றில் எள்போட இடமில்லை. மாலதியும் ஸ்நானம் செய்ய இறங்கினாள். கரையில் அமூல்யன். அவன் சட்டைப் பையில் காசு. அவன் மாலதியின் சார்பில் புரோகிதருக்குத் தட்சிணை, எள், துளசி எல்லாம் எடுத்துக் கொடுத் தான். அவன் மாலதியை அழைத்துக்கொண்டு போய்க் கடை களைக் காட்டினான். அவளுக்காக ஒரு லட்சுமி படம் வாங்கிக் கொடுத்தான். அவளுக்காகப் பணம் செலவு செய்ய முடிந்த சந்தோஷத்தில் அவன் வாயிலிருந்து பாட்டு வந்தது. பணம் செலவு செய்ததால் தானே மாலதிக்குப் பொறுப்பாளி என்று நினைத்துவிட்டான் அமூல்யன். அவன் அவளிடம் சொன்னான். "நாம் நீந்தி அக்கரைக்குப் போகலாம், வரீங்களா, அக்கா?"

"அக்கரைக்குப் போக ஆசையா இருக்கா?"

"ஆமா, ரொம்ப ஆசை!"

"தண்ணீரிலே முதலை இருக்குங்கிறது ஞாபகம் இருக்கா?"

"இருக்கு."

"எனக்கு முதலைகிட்டே ரொம்பப் பயம்."

"பயப்படாதீங்க, மாலதி அக்கா!"

அமூல்யனுக்குப் பயமில்லை. பயம் இல்லாததால்தான் அவன் நாள் முழுதும் திருவிழாவில் மாலதியுடன் சுற்றினன். அஷ்டமி ஸ்நானத்தில் வேறு யாரும் இவ்வளவு அக்கரையுடன் மாலதிக்குத் திருவிழாவைச் சுற்றிக் காட்டியதில்லை. சோபா, ஆபு யாரும் கூட இல்லை. நரேன்தாஸ் திருவிழாவில் ஒரு துணிக்கடை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அப்போதிலிருந்து அமூல்யன் முன்போல் சாது வாக இல்லை. அவனுடைய ஆசை வளர்ந்துகொண்டே போயிற்று.

இப்போது சூரியன் சற்றுமேலே எழும்பியிருந்தான். கைகால்கள் இப்போது அவ்வளவு ஜில்லிப்பாக இல்லை. பள்ளத்துக்குள் வாத்துக்கள் சப்தம் செய்துகொண் டிருந்தன. மாலதி தகரமூடியைத் திறந்துவிட்டாள். வாத்துக்கள் முதலில் பள்ளத்திலிருந்து தலையை வெளியே நீட்டிப் பார்த்தன. பெரிய ஆண் வாத்து மற்ற வாத்துக்களைத் தள்ளிக்கொண்டு முதலில் வெளியே வந்தது. அமூல்யன் அதைப் பார்திச் சந்தையில் மாலதிக்கு வாங்கிக் கொடுத் திருந்தான். போன மழைக்காலத்தில் அவளுடைய ஆண்வாத்து காணுமல் போய்விட்டது. இரவின் இருளில் அவளும் அமூல்யனும் ஏரிகரையில் புதர்களிலெல்லாம் தேடியும் அதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்த இரவு அவர்கள் வாத்தைத் தேடிக்கொண்டு இருட்டில் வயல்களில் எல்லாம் சுற்றினர்கள். படகில் திரும்பி வந்து கொண்டிருந்த சாமு அவர்களைப் பார்த்து அமூல்யனிடம் சொன்னுன். "அமூல்யா, வீட்டுக்குப் போ! இருட்டு வேளையிலே இப்படியெல்லாம் சுத்தக்கூடாது, மாலதி. வீட்டுக்குப் போ! வாத்து எங்கேயிருக்குன்னு நான் பார்க்கிறேன்!" என்றான் மாலதியிடம்.

ஆனல் கடைசி வரையில் சாமுவாலும் வாத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை. வாத்து காணுமற் போனதிலிருந்து மாலதி சோர்வுற்றுக் காணப்பட்டாள். அமூல்யன் வாங்கிக் கொடுத்திருந்த வாத்து கறுப்பும் பழுப்பும் கலந்த நிறம். அவன் மிகவும் சிரமப் பட்டுச் சந்தை முழுவதும் தேடிக் கடைசியில் இந்த வாத்தை வாங்கி வந்திருந்தான். 'தான் எவ்வளவு கஷ்டப்பட்டு இந்த வாத்தைப் பொறுக்கி வாங்கினன், ஒரு நல்ல ஆண்வாத்துக்காக அவன் எவ்வளவு பேரிடம் சொல்லிவைத்திருந்தான்!' என்பதையெல்லாம் அவன் அடிக்கடி அவளிடம் சொல்ல முயற்சி செய்தான். வாத்து வாங்கிக் கொடுத்த பிறகு அவள் மேல் அதிக உரிமை

எடுத்துக்கொள்ள ஆரம்பித்தான் அமூல்யன். மாலதி சொல்ல விரும்பினாள். "அமூல்யா! நீ தறி நெய்து பிழைப்பவன். உனக்கு விதவையின் கடமையைப் பற்றி என்ன தெரியும்? விதவையின் கௌரவம் அவளுடைய விதவைத் தன்மையில் இருக்கிறது. அவள் சாப்பிடும் வெறும் அரிசிச் சோற்றிலும் கீரையிலும் இருக்கிறது, அமூல்யா! நாள் பூராவும் தறியில் உட்கார்ந்துகொண்டு அதன் கடகட சப்தத்தை கேட்டு உன் காதுகள் மந்தமாகிவிட்டன. உன் மூக்கில் முகரும் சக்தி இல்லை. கண்களால் கனவு மட்டும் காண்கிறாய். விதவையான நான் நாள் முழுவதும் வீட்டு வாசலை மெழுகிக் கழுவி, வீட்டுவேலை செய்து, கதிரில் நூல் சுற்றி, சாதத்தையும் கீரையையுமே விருந்தாகக் கருதிச் சாப்பிடுகிறேன். என் பக்கத்தில் மீன் நாற்றம் வந்தால் என் மானம் போய்விடும். நீ ஆண்வாத்தைப் போல் காட்டில், தண்ணீர்த் துறையில், இரவின் இருட்டில் என் கழுத்தைக் கடித்துச் சுகம் பெற விரும்புகிறாய். அதனால் என் மானம் போய்விடும். என்னிடம் நீ அன்பாயிருக்கலாம். ஆனால் மாமிசத்துக்கு ஆசைப்பட்டு என்னைச் சுற்றினால் கடித்துவிடுவேன், ஜாக்கிரதை! என் பிரியம் மாமிச வெறியை அணுகவிடாது!"

கனவு கண்ட பிறகு ஏனோ மாலதிக்கு அமூல்யன் மேல் வெறுப்பு அதிகரித்தது. அமூல்யனும் ஜப்பரும் அவளை அடிக்கடி உறுத்துப் பார்த்தார்கள். அண்ணனிடம் சொல்லிவிடலாமா என்று தோன்றியது மாலதிக்கு. ஜப்பரும் லேசுப்பட்டவன் இல்லை. ஜப்பரின் நினைவு வந்ததும் மாலதியின் முகம் வெறுப்பில் சுருங்கியது.

மாலதி வாத்துக்களைக் கூட்டிக்கொண்டு துறைக்குச் சென்றாள். அமூல்யன் தறி நெய்துகொண் டிருந்தான். கட்டை இந்தப் பக்கம் ஒரு முறை, அந்தப் பக்கம் ஒருமுறை போய்க்கொண் டிருந்தது. ஆண் வாத்து மற்ற வாத்துக்களைத் தண்ணீரில் இறங்க விடவில்லை. அது அவற்றின் மூக்கைக் கடித்து அவற்றுடன் சச்சரவு செய்தது. அதன் கொம்மாளத்தைப் பார்த்து மாலதி வழக்கம்போல் தன் முகத்தைச் சேலைத் தலைப்பால் மூடிக்கொண்டாள். வழக்கம் போல் அந்த விஷமச் சிரிப்பு அவளுடைய முகத்தில் விளையாடியது. 'உனக்குப் பொருக்கல்லியாக்கும்!'

இந்த மாதிரி காட்சிகளைக் காணும்போது அவளுடைய மனமும் தறிக்கட்டை போல இங்குமங்கும் அலைபாயும். அவளுக்கு உள்ளூற ஓர் ஆசை தோன்றும், 'அவளை யாராவது இறுக்கக் கட்டிக்கொண்டு சாப்பிடட்டும்!' என்று. உடனே தோன்றும், 'விதவைக்கு இப்படி ஆசை ஏற்படுவது பாவம்!'

அவளுக்கு உடனே போய் ஸ்நானம் செய்து தன் பாவங்களைக்

கழுவிவிடும் வெறி தோன்றும். ஸ்நானம் செய்யாவிட்டால் ஜாதி போய்விடும். அப்புறம் தோன்றும் விதவைக்கு ஜாதி வேறு?

யுவதி மாலதியின் அங்கங்களில் அழகு சொட்டியது. அவளுடைய உதடு வெங்காயத் தோல் போல் மிருதுவாக இருந்தது. அவளுடைய ஆசையாகிய வீட்டில் அமூல்யன் ஒரு குரங்குதான். அவன் எப்போதும் வாலை உயர்த்திக்கொண்டு உட்கார்ந்திருக்கிறன். அந்த அமூல்யனைக் கனவில் கண்டது அவளுக்கு அருவருப்பை உண்டாக்கியது.

வாத்துக்கள் தண்ணீரில் இறங்கிய பிறகு மாலதி நாற்புறமும் திரும்பிப் பார்த்தாள் வாத்துக்கள் முழுகி முழுகிக் குளித்தன. பக்கத்தில் யாரும் இல்லை. புகையிலை வயலைத் தாண்டினால் மேட்டு நிலம். அங்கே ஜப்பர் வேலை செய்கிறன். நரேன்தாஸ் பூமியிலிருந்து சத்தை எடுத்து வெங்காயத்தையும் பூண்டையும் வேர்க் கடலையையும் கொழுக்கவைக்க முயற்சி செய்கிறன். வேறு ஒரு காட்சியும் தெரியவில்லை. டாகுர் வீட்டில் சோனு படிக்கிறன், 'பாதாய் பொட நிசிர் சிசர் ..' லால்ட்டு படிக்கிறன். 'அட்லாஸ்ட் தி செல்ஃபிஷ் ஜயண்ட் கேம்.'..., ஜப்பர் உழுதுகொண டிருக்கிறன். மாலதியைப் பார்த்துவிட்டால் அவன் மாட்டையும் கலப்பையும் விட்டுவிட்டு அவளிடம் ஓடிவருவான். "மாலதி அக்கா, கொஞ்சம் தண்ணீ கொடுங்க! தொண்டை உலர்ந்துபோச்சு" என்பான்.

ஜப்பர் வந்தால் சாம்சுத்தீனைப் பற்றி அவனை விசாரிக்கலாம் என்று மாலதி நினைத்தாள். சாமு இப்போது இங்கே இல்லை. அவன் டாக்கா போயிருந்தான். பைத்தியக்கார டாகுர் யானையை வைத்துக் கொண்டு அவன் ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தைக் கலைத்துவிட்டார். பேலுவின் கையை ஒடித்துவிட்டார். அதன் பிறகு சாமு இந்துக் குடியிருப்புக்கு வருவதையே விட்டுவிட்டான் போல் இருந்தது. சின்ன டாகுருக்கும் சாமுவுக்குமிடையே எதைப் பற்றியோ தகராறு ஏற்பட்டுவிட்டது. ஆற்றுப் படுகையில் நின்றுகொண்டு அவர்கள் சச்சரவு செய்தார்கள். அதிலிருந்து சாமு இந்தப் பக்கம் வருவதில்லை. சாமுவின் பெண் எப்போதாவது ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு அந்தப் பக்கம் வருவாள்.

பாதிமா அன்று டாகுர் வீட்டு மருத மரத்தடியில் யாருக்காகவோ காத்துக் கொண டிருந்தாள். அவள் பெரிய மூக்குத்தி அணிந்திருந்தாள். மாலதி அவளிடம் சப்தம் செய்யாமல் நடந்து போய்க் கேட்டாள், "பாதிமா, நீயா?" என்று.

பாதிமாவுக்குச் சிறிய கண்கள்; மூக்கில் பெரிய மூக்குத்தி. சிறுமியின் முகத்தில் அழகு விளையாடியது. பின்னிய அழகிய கூந்தல்.

''அத்தை, இதைச் சோணு பாபுவுக்குக் கொடுங்க!'' என்று சொல்லி அவள் தன் மடியிலிருந்து இரண்டு கொத்து மஞ்சித்திப் பழங்களை எடுத்து மாலதியிடம் கொடுத்தாள்.

''இந்தப் பருவத்தில் மஞ்சத்திப் பழமா!'' மாலதிக்கு வியப்பா யிருந்தது.

பாதிமா தானுகவே விளக்கினுள். ''ஆபேத் அலி சித்தப்பா வெளி யூரிலிருந்து கொண்டுவந்தார்.''

ஏனே மாலதிக்கு அந்தப் பெண்ணை அப்படியே இறுகத் தழுவிக் கொள்ளவேண்டும் போல் இருந்தது. ஆனுல் பாதிமா இஸ்லாமியப் பெண்; அவளைத் தொட்டால் மாலதிக்கு ஜாதி போய்விடும். அவள் பாதிமாவைத் தொடாமல் ஜாக்கிரதையாகப் பழங்களை வாங்கிக் கொண்டாள். ''சோணு பாபுவுக்காக எவ்வளவு சிரமப்படறே நீ? நீ பெரியவளானதும் உன்னை அவனுக்குக் கல்யாணம் பண்ணி வச்சுடறேன்'' என்று கூறிச் சிரித்தாள்.

சின்னப் பெண்தான். இருந்தாலும் இந்தக் கேலிப் பேச்சு பாதிமாவை நாணமுறச் செய்தது. அவள் அப்புறம் அங்கு நிற்க வில்லை. அவள் ஆற்றுப்படுகை வழியே ஓடத் தொடங்கினுள். கிராமத் திலும் வயலிலும் வளர்ந்திருந்த செடிகள், மரங்களின் நிழல் நளின உணர்வை எங்கும் பரப்பிக்கொண் டிருந்தது. இந்த நளினம், அன்பின் மென்மையான உணர்வு, அந்தப் பெண்ணின் அங்கங் களைத் தழுவியது, அன்று பின்பனிக் காலத்தின் கடைசி நாள் சிறுமி கொஞ்சங் கொஞ்சமாக அந்த நளினத்துக்குள் ஒன்றி மறைந்து விட்டாள்.

இந்த நளின உணர்வு நெடுநேரம் மாலதியையும் ஆட்கொண்டது. சோணு இன்னும் படித்துக்கொண் டிருந்தான். 'பாதாய் பாதாய் பொடே நிசிர் சிசிர்.' வாத்துக்கள் நீரில் முழுகி எழுந்துகொண் டிருந்தன. கரையில் நின்றிருந்த மாலதியின் நீண்ட நிழல் தண்ணீரில் விழுந்தது. அவளால் தண்ணீரில் தன் முகத்தைப் பார்க்க முடிந்தது. எவ்வளவோ நினைவுகள் வந்தன அவளுக்கு. சாமுவின் நினைவு, ரஸோ, பூடி ஆகியோரின் நினைவு, 'அந்த' மனி தனின் நினைவு. இளம் வயதில் பாம்பைப் பிடித்து அதை முத்தமிடத் துணிந்த மனிதன் பயந்துபோய் ஊரைவிட்டே ஓடிவிட்டானே! அவன் நேற்று இரவு திரும்பி வந்துவிட்டான். அவன் இப்போது சின்னப் பையன் அல்ல. வார்த்தைக்கு வார்த்தை சண்டைக்கு வர மாட்டான். இப்போது அவன் ஒரு பெரிய மனிதன், மகான். தேச சேவை செய்கிறுன். கொஞ்சகாலம் ஜெயிலில் இருந்தான். அவனைப் பற்றிய செய்தி கற்பனைக் கதைபோல் இருக்கும் கேட்க. இப்போது

மாலதி நீரில் வாத்துக்கள் நீந்துவதைப் பார்க்கவில்லை. அவள் கண் களுக்கு நீருக்கு மேலே தெரிந்தது அந்த மனிதனின் முகந்தான். அந்த மனிதனைப் பார்ப்பதற்காகவே அவள் பைத்தியக்காரியைப் போல் காலைநேரம் பூராவும் டாகுர்வீட்டுத் துறையில் குளித்துக் கொண்டிருந்தாள். பெரிய மாமிக்குப் பூப்பறித்துக் கொடுத்தாள். டாகுர் வீட்டுக்குப் பக்கத்தில் அவன் எங்காவது கண்ணில் படுவா னென்ற நினைப்பில் அங்கு வெகுநேரம் நின்றாள். ஆனால் ஆளைக் காணோம்! அமூல்யனின் முகம் நினைவுக்கு வந்தது. அமூல்யனும் ஜப்பரும் ஒன்று சேர்ந்துகொண்டு அவளை விழுங்க வருகிறார்கள்.

யாராவது தன்னைப் பார்த்துவிடுவார்களோ என்ற பயத்தில் அவள் வெகுநேரம் டாகுர் வீட்டு வாசலில் தாமதிக்கவில்லை. அவள் பெரிய மாமியைக் கூடக் கேட்கத் துணியவில்லை, "அண்ணி, ரஞ்சித் நேத்து ராத்திரி வந்தானாமே?" என்று. அன்பின் நளினம் அவளது கண்களில் குடியிருந்தது. அவள் ரஞ்சித்தைப் பார்ப்பதற் காக ஸ்நான கட்டத்துக்கருகில் செடிகளுக்குப் பின்னால் ஒளிந்து கொள்ள நினைத்து உட்கார்ந்துகொண்டாள். அப்போது ஒரு குரல் கேட்டது, "மாலதி, நீயா இங்கே தனியா?" என்று.

மாலதியின் இருதயம் பட படவென்று அடித்துக்கொண்டது. அவள் திரும்பிப் பார்த்தபோது அங்கே ரஞ்சித் நின்றிருந்தான். அவனுடைய கையைப் பிடித்துக்கொண் டிருந்தான் சோனா. அவளுடைய திருட்டுத்தனம் வெளிப்பட்டுவிட்டது. நாணத்தால் அவளால் தலையை நிமிர்த்த முடியவில்லை. இப்போது ஒருவரும் படிக்கவில்லை, 'பாதாய் பாதாய் பொடே நிசிர் சிசிர்' என்று. எங்கும் ஒரே அமைதி. புழு பூச்சிகளின் அரவங்கூடக் கேட்க வில்லை. மாலதி பயந்துகொண்டே, "வாத்துக்களைத் தண்ணீரிலே விடவந்தேன்" என்று சொல்லிவிட்டு, தலைநிமிர்ந்து ரஞ்சித்தைப் பார்த்தாள். இப்போது எதுவும் எங்கும் மௌனமாக இல்லை என்று அவளுக்குத் தோன்றியது. எல்லாமே கூச்சலிடுகின்றன. வாத்து, கோழி, மாடு, கன்று, பறவை எல்லாமே ஒலியெழுப்பு கின்றன. நெசவறையிலிருந்து அமூல்யனின் 'டக், டக்' ஒலியும் அவள் காதில் விழுந்தது.

ரஞ்சித்தைப் பார்த்ததும் மாலதியின் வெகுநாளையப் பயம் மறைந்துவிட்டது. ஜப்பரோ அமூல்யனோ யாரும் இனிமேல் அவளை விழுங்கிவிட முடியாது.

எங்கோ இன்னும் யாரோ படித்துக்கொண் டிருந்த ஒலி கேட்டது. "அட்லாஸ்ட் தி செல்ஃபிஷ் ஜயண்ட் கேம்!" அந்த ஒலி காதில் விழுந்ததும் மாலதி ரஞ்சித்தைப் பார்த்து மெல்லச் சிரித்தாள். ரஞ்சித்தாலும் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

மாலதிக்கு நாட்கள் நன்ருகவே கழிந்தன. ரஞ்சித் வருவதற்கு முன்ஞல் மாலதிக்கு வாழ்க்கையில் ஒரு வெறுமையுணர்வு, எதையோ இழந்துவிட்ட உணர்வு இருந்தது. ரஞ்சித் வந்த பிறகு இழந்துவிட்ட அதைத் திரும்பப் பெற்ற மாதிரி உற்சாகமும் மகிழ்ச்சியும் அவளை ஆட்கொண்டன.

குளிர்காலமாதலால் பொழுது சீக்கிரம் கழிந்துவிட்டது. குளிர்கால மாதலால் தண்ணீரில் மூங்கில் அழுகும் நாற்றம் அவ்வளவு தீவிர மாகத் தெரியவில்லை குளிர்காலமாதலால் கிராமத்தார் சீக்கிர மாகவே கிணற்றங்கரைக்குத் தண்ணீர் எடுக்க வந்தார்கள்.

கிணற்றின் சுற்றுச் சுவர் நல்ல உயரம். நின்றுகொண்டு கழுத்தை நீட்டிப் பார்த்தால்தான் மறுபக்கம் தெரியும். கிணற்றைத் தாண்டி ஞல் மூங்கில் தோப்பு. ஈசம் நல்ல கெட்டியான மூங்கிலாகத் தேடிப் பொறுக்கினுன். ரஞ்சித் அதை ஒரே அடியில் வெட்டி வீழ்த்தினுன். ஈசம் அதை வெளியே கொண்டுவந்து அதன் கணுக்களையும் இலைகளையும் செதுக்கி எறிந்தான். கிணற்றில் தண்ணீர் எடுக்க வந்த பெண்கள் அங்கு வெகுநேரம் தாமதிக்கவில்லை. பெரிய மாமியின் தம்பி, எங்கோ ஓடிப் போயிருந்தவன், திரும்பி வந்து விட்டான். மெல்லிய மீசை, நீண்ட கண்கள். வெளியூரில் வெகு காலம் தங்கியதால் தேகத்தில் ஓர் அழகு. கச்சம் வைத்து வேட்டி கட்டிக்கொண் டிருந்தான், சுருள் கேசம், நெற்றியில் நட்டநடுவில் ஒரு திலகம், ஆஜானுபாகுவான உடல்வாகு. இப்போது ரஞ்சித் தைப் பார்ப்பவர்களுக்கு அடையாளமே தெரியாது. தாய்தந்தை யற்ற அந்த அநாதைப் பையன் எவ்வளவு பெரியவஞ வளர்ந்து விட்டான்!

கிணற்றில் நீர் எடுக்க வந்த எல்லாரும் வாளியைக் கிணற்றுக்குள் போட்டு அதை வெளியே இழுக்கும்போது ரஞ்சித்தைப் பார்த்தார் கள். பழைய நினைவுகள் வந்து அவர்கள் ரஞ்சித்தைக் கூப்பிட்டு அவனுடன் பேசினுர்கள். அவன் அவர்களை 'அண்ணி' என்று அழைப்பான். அந்தக் காலத்தில் அக்கம்பக்கத்தார் அவனிடம் பிரியமாக இருந்தார்கள். தாய் தந்தையற்றவன் என்று அவனிடம் பரிவுகாட்டித் தங்கள் வீட்டில் செய்த தின்பண்டங்களைச் சாப்பிடக் கொடுத்தார்கள். அவர்கள் இப்போது அவனிடம் பேசிவிட்டு வீட்டுக்குப் போனுர்கள்.

மாலதி கடைசியில் வந்தாள். அவள் ஒரு கைத்தறிப் புடைவை அணிந்திருந்தாள். அவளுடைய கையில் குடம். அவள் இந்தப் புடைவை அணிந்துகொண்டால் அவள் விதவை என்றே நினைக்கத் தோன்ருது; அவள் ஒரு குமரி என்றே நினைக்கத் தோன்றும். ரஞ்சித்துக்கு முன்ஞல் கரையில்லாத வெள்ளைப் புடைவையைக்

கட்டிக்கொள்ள அவளுக்குத் தயக்கம். அவள் வந்ததும் கிணற்றங் கரையில் குடத்தை வைத்துவிட்டு ரஞ்சித் மூங்கில் வெட்டும் இடத் தில் போய் நின்ருள். "எதுக்கு இவ்வளவு மூங்கில்?"

"இதையெல்லாம் தண்ணீலே ஊறப்போடணும். இதிலேருந்து முரட்டுத் தடி தயார் பண்ணப் போரேம்" என்ருன் ரஞ்சித்.

சோனு இங்குமங்கும் அலேந்தான். இந்தப் புதிய மனிதனை அவன் ஒரு கணமும் விட்டு விலகுவதில்லே. புதிய மனிதன் அவனுக்கு எவ்வளவு விசித்திரக் கதைகள், நம் நாட்டுக் கதைகள், வேறு நாட்டுக் கதைகள் சொன்னன்!

"அத்தை, ரஞ்சித் மாமா ராத்திரியிலே மாஜிக் காண்பிக்கிருர்!" சோனு சொன்னன்.

மாலதி இன்னும் சற்று நெருங்கி வந்தாள். அங்கேதான் ஈசம் வெட்டிய மூங்கில்களை வெளியே கொண்டுவந்து கொண்டிருந்தான். "உன் மாமா பேச்சே பேசாதே!" என்ருள் மாலதி.

மூங்கில்களை இப்போது செதுக்கிக்கொண் டிருந்தான் ரஞ்சித். அவன் அவள் பக்கம் திரும்பிப் பார்க்காமலேயே சிரித்தான். காரணம், மாலதி ஏதாவது மர்மமாகப் பேசிஞல் அவனுக்கு அந்தக் காட்சிதான் ஞாபகம் வருகிறது.

அன்று மாலதி கோபத்தாலோ வருத்தத்தாலோ உடல் நடுங்கிக் கொண்டிருந்தாள். கண்களும் முகமும் சிவந்து கிடந்தன, கண்கள் ஈரமாய் இருந்தன, ரஞ்சித் அவளுடைய கற்பையே கெடுத்து விட்டதுபோல அழும் நிலேக்கு வந்துவிட்டாள் அவள். இதெல்லாம் நினைவுக்கு வந்தது ரஞ்சித்துக்கு. "உனக்கு ஞாபகமிருக்கிறதா, மாலதி? நீ அக்காகிட்ட ஒண்ணும் சொல்லிடல்லியே?" என்று கேட்டான் ரஞ்சித்.

அவன் மாலதியின் பக்கம் திரும்பி, "ஏன் மாமா பேச்சுப் பேசிஞ என்ன?" என்ருன்.

மாலதிக்கும் அந்த நிகழ்ச்சியை நினைவூட்ட விரும்புபவன் போல அவன் அவளைப் பார்த்தான். ஆகையால் அவள் அங்கே தாமதிக் காமல் தண்ணீர் எடுத்துக்கொண்டு போய்விட்டாள். போய்விடுவ தால் எல்லாம் முடிந்துவிடுவதில்லேயே! போகும் வழியில் பெரிய மாமியுடன் சற்று வம்பளந்தாள். பெரிய மாமியுடன் தனமாமியும் சுவாமி நைவேத்தியத்துக்காக நெல் பொரித்துக்கொண் டிருந்தார் கள். பொரியைச் சசிபாலா புடைத்துச் சலித்தாள். பைத்தியக்கார டாகுர் இன்று வெளியில் போகவில்லே. வாசலில் தம் இஷ்டப்படி உலவிக்கொண் டிருந்தார். மூங்கில்களை வெட்டும் சப்தம் அங்கும் கேட்டது. மூங்கில் எதற்கு?

தடி தயார் செய்ய. அந்த மனிதனின் தேகம், கை, கால், முகம் எல்லாம் எப்போதும் அவளுக்குள்ளே வளைய வந்தன. அவனைப் பார்க்கத்தான் அவள் இங்கு வந்தாள். அவளுக்கு வேறு வேலை இல்லை. நரேன்தாஸ் விட்டில் இல்லை. அவனும் அமூல்யனும் ஒரு கட்டுப் புடைவைகளை எடுத்துக்கொண்டு பாபுர்ஹாட் போயிருந் தார்கள். இப்போது விட்டில் சோபா, ஆபு, மாலதி மூவர்தான். ஆபாராணியுந்தான் இருக்கிறாள். ஆனால் அவள் வீட்டில் இருப்பதே தெரியாது; அவ்வளவு சாது அவள்.

ரஞ்சித் ஆபாராணியை அண்ணி என்று அழைப்பான்.

இரவில் குளிர்காலமாதலால் எல்லாரும் சீக்கிரமே படுத்துவிடு வார்கள். சசீந்திரநாத் லால்ட்டு, பல்ட்டுவுக்குப் பாடங் கற்பிக்க உட்காருவார். அப்போது ரஞ்சித் தன் அறையில் உட்கார்ந்து கொண்டு அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் பெரிய பெரிய புத்த கங்கள் படிப்பான். எவ்வளவு படிக்கிறான் அவன்! இப்போது அவன் அதிகம் பேசுவதில்லை. அவள் அதிகம் பேசினால் அவளைப் பார்த்துச் சிரிப்பான், அவளுடைய அசட்டுப் பேச்சுக்காகச் சிரிப்பது போல. அப்போது மாலதியின் முகம் கோபத்தால் சிவக்கும். உடனே குற்றவாளியைப் போல் அவன் அவளைப் பார்ப்பான். அப்போது அவளுக்கு ஞாபகம் வரும், இவன் ஒரு காலத்தில் பயந்து போய் ஓடிவிட்டான் என்று.

மாலதி ஒரு நாள் சொன்னாள். "இவ்வளவு பயம் ஆண்பிள்ளைக்கு நன்னாயில்லே!"

"எனக்கு என்ன பயம்?"

"பயமில்லையோ? வாயாலே சொன்னால் நிசமாகவே சொல்லிடு வேன்னு அர்த்தமா? எல்லா விஷயத்தையும் சொல்ல முடியுமா?"

"எனக்கென்னவோ, நீ நிசமாகவே அக்காகிட்டே சொல்லிடு வேன்னு தோணித்து."

"வேறே ஒண்ணும் தோணல்லியே?"

"வேறே என்ன தோணும்?"

"ஏன்? மாலதின்னு பேரைக் கேட்டா எவ்வளவோ விஷயம் ஞாபகத்துக்கு வரலாமே!"

"எனக்கு ஒண்ணும் நினைவுக்கு வரல்லே, மாலதி. நான் ரொம்பத் தொலைவிலே போயிட்டேன். அஸ்ஸாமுக்குப் போனேன். அங்கேயிருந்து இரண்டு வருஷத்துக்கப்பறம் திரும்பி வந்தேன். கல்கத்தாவிலே லாகிரி பாபுவைப் பார்த்தேன். அவர்தான் என்னை இந்த வழியிலே கொண்டுவந்தார்."

பேசும்போதே மௌனமாகிவிடுவான் ரஞ்சித். ''கனவு காணக் கத்துக்கிட்டேன். இப்போது எல்லாம் ரொம்பச் சின்னதா, அலபமா தோணரது'' என்பான்.

அதிகம் பேசிவிட்டோமென்று அவனுக்குத் தோன்றும். தன் ரகசிய வாழ்க்கையைப் பற்றிச் சொல்லிவிட்டதாகத் தோன்றும். அவன் திடீரென்று மௌனமாகிவிடுவான். தன் விஷயத்தை மறந்து விட்டு அவளைக் கேட்பான். ''நீ எப்படி இருக்கே. சொல்லு! உன்னைப்பத்தி எல்லா விஷயமும் அப்பப்போ விசாரிச்சுக்கிண்டு தான் இருந்தேன். நீ திரும்பி வந்ததும் தெரியும். அப்புறம்?''

''அப்புறம் என்ன?'' பதில் கேள்வி கேட்டாள் மாலதி. அவள் சொல்ல விரும்பினாள், 'அப்புறம் என்னன்னுதான் பார்த்தாலே தெரியறதே! இப்படித்தான் இருக்கேன்!'

''சாமுவை எங்கே காணோம்?''

''அவன் டாக்கா போயிருக்கான். இப்போ 'லீக், லீக்'னு நாட்டைப் பாழாக்கிட்டு இருக்கான்.''

''சாமு அரசியல்லே இறங்கிட்டானா?''

''ஆமா, பெரிய அரசியல்!'' எரிச்சலுடன் சொன்னாள் மாலதி. ''நிறையத் தடி தயார் பண்றியே எவ்வளவு மண்டையை உடைக்க முடியும் உன்னாலே?'' என்று அவனைக் கேட்டாள்.

''தடி மண்டையை உடைக்க இல்லே. மண்டையைக் காப்பாத்திக்க. சிலம்பப் பயிற்சிக்கூடம் ஒண்ணு இங்கேயே தயார் பண்ணலாம்னு நினைச்சுக்கிட்டிருக்கேன். அப்புறம் இதோட கிளைகள் மூணு ஆரம்பிக்கப் போறேன். ஒண்ணு பாம்மந்தியிலே, இன்னொண்ணு சம்மாந்தியிலே, மூணாவது பார்தியிலே. அங்கே பயிற்சி பெற்றவங்க ஆளுக்கு மூணு மூணு புதுக் கிளை ஆரம்பிக்கணும். கிராமத்துக்குக் கிராமம் பயிற்சிக்கூடம் ஆரம்பிச்சு, எல்லாருக்கும் கத்தி வீச்சு, சிலம்பம் எல்லாம் கத்துக் கொடுக்கணும். இதெல்லாம் நாம நம்பளைக் காப்பாத்திக்கறதுக்காக; இன்னொருத்தர் மண்டையை உடைக்கறதுக்காக இல்லே.''

மாலதிக்கு இதைக் கேட்க வெட்கமாகிவிட்டது. ''எனக்கும் இதெல்லாம் கொஞ்சம் கத்துக்கொடேன்! எனக்குக் கத்துக் கொடுத்தா உனக்குப் பாவம் வந்துடாதே? ஜாதி போயிடாதே?'' என்று கேட்டாள் அவள்.

''ஜாதி போவானேன்?''

''நான் பொண்ணு! அபலை! அதனால்தான்.''

''அபலைகள்தான் முக்கியமாக் கத்துக்கணும்.''

''முதல்லே எல்லாம் ஏற்பாடாகட்டும்''

''இதெல்லாம் யாரு சொல்லித் தருவாங்க?''

"நான்தான்."

"நீ இதெல்லாம் எப்போ கத்துக்கிண்டே?"

"ஏதோ சமயம் கிடைச்சபோது கத்துக்கிண்டேன்."

"உனக்கு என்னதான் தெரியாது! என்னதான் செய்ய முடியாது?"

"நான் இதுவரையிலே ஒண்ணும் செய்யலே, மாலதி. இன்னும் எவ்வளவு செய்ய வேண்டியது இருக்கு. உனக்கு எல்லாம் தெரிஞ்சா ஆச்சரியப்படுவே!"

"என்னையும் உன் கூட்டத்திலே சேர்த்துக்கோயேன்."

"கூட்டமா? அது எங்கே இருக்கு?"

"சிலம்பம் பயிற்சிக்குத் தயார் பண்ணறியே, அந்தக் கூட்டத்தைத் தான் சொல்றேன்."

'கூட்டம்' என்ற வார்த்தையைக் கேட்டுச் சற்று அதிர்ந்துபோய் விட்டான். "இல்லேயில்லே, கூட்டம்'னு ஒண்ணுமில்லே, நான் ஒண்ணும் கூட்டம் சேர்க்கல்லே. கூட்டம் சேர்த்து என்ன ஆகணும் எனக்கு?" என்றான் அவன்.

சற்று மறைவாகக் காலம் கழிக்க விரும்பி அங்கு வந்திருந்தான் ரஞ்சித்.

"ஏன்? அண்ணி கூடச் சொன்னாங்களே நீ தேச சேவை செய்யற தாக!"

"அப்போ, அக்கா உங்கிட்டே எல்லாம் சொல்லியிருக்காங்களா?" சற்று நேரம் சும்மா இருந்தான் ரஞ்சித். காலை வெயில் அவர் களுடைய முதுகில் விழுந்தது. அவர்கள் தீனபந்துவின் வீட்டுக்குப் பக்கத்தில் நின்று பேசிக்கொண் டிருந்தார்கள். லால்ட்டு, பல்ட்டு, சோனா எல்லாரும் அவர்களைச் சூழ்ந்து நின்றார்கள். ரஞ்சித் மாமா மாலதி அத்தையின் முகத்தைப் பார்த்துக்கொண்டு பேசினார். மாலதி அத்தை தரையைப் பார்த்துக் குனிந்துகொண்டே பேசினாள். மாலதி இன்னும் என்னவோ சொல்ல நினைத்தவள், சிறுவர்களுக்கு முன்னால் பேசுவது சரியில்லை என்று நினைத்து அங்கிருந்து போய் விட்டாள்.

மிகவும் ரகசியமாகச் செயற்பட்டான் ரஞ்சித். இரவு வேளையில் வீட்டு முற்றத்தில், நிலா வெளிச்சத்தில் அல்லது அரிக்கேன் விளக் கின் மங்கிய ஒளியில் குச்சி விளையாட்டைக் கற்பித்தான், வேறு யாருக்கும் தெரியாமல் இருப்பதற்காக. பெரியமாமி, தனமாமி, பைத் தியக்கார டாகுர், இவர்கள் மூவர்தான் விளையாட்டைப் பார்ப்பார்கள். சோனா, லால்ட்டு, பல்ட்டு எல்லாரும் தூங்கிய பிறகுதான் விளையாட்டு தொடங்கும். ஆனால் ஒரு நாள் இரவில் தூக்கத்திலிருந்து விழித்த சோனா தன் பக்கத்தில் தாயைக் காணமல் திகைத்தான்.

அம்மா எங்கே? அறைக் கதவு திறந்திருந்தது. முற்றத்திலிருந்து கம்புகள் மோதும் 'டக் டக்' சப்தம் கேட்டது. சோனு நிலாவெளிச் சத்தில் அம்மா ஒரு மூலையில் நிற்பதைப் பார்த்துவிட்டான். கிராமத்து இளைஞர்கள் ஏழெட்டுப் பேர் ரஞ்சித் மாமாவிடம் சிலம்பம் கற்றுக் கொண்டார்கள். மாலதி அத்தை, கிரணி அக்கா, நனீ சோபா, ஆபு. அவர்கள் மரக்கத்திகளை வைத்துக்கொண்டு கத்தி வீச்சுப் பழகிக்கொண் டிருந்தார்கள். அவனுடைய அம்மாவும் பெரியம்மா வும் இதைப் பார்த்துக்கொண்டு, வேறு யாரும் அங்கு வந்துவிடாமல் காவல் காத்துக்கொண் டிருந்தார்கள். தடிகள் மோதும் ஒலி, 'சிர், பகேரா, கொட்டி' போன்ற ஒலிகள்.

சிறிய மாமா இந்த வார்த்தைகளை மந்திரம் போல் தாளந் தவறாமல் சொல்லிக்கொண்டு போனார். நடு நடுவே சிறிய மாமா தடியை வேகமாகச் சுழற்றிக்கொண்டு இந்தப் பக்கம் ஓடிவந்தார். சுழற்றும் வேகத்தில், அவர் கையில் தடி இருப்பதே தெரியவில்லை. 'பன் பன்' என்று தடி சுழலும் சப்தம் மட்டும் கேட்டது. அவர் சுற்றிச் சுற்றி, சில சமயம் வலக்காலையும் சில சமயம் இடக்காலையும் தூக்கிக்கொண்டு, தம் இஷ்டப்படி தடியை வீசினார், தாம் பிழைத் திருக்கும் ரகசியத்தை அந்தத் தடிக்குள் கண்டுபிடித்தவர் போல. அந்தத் தடி அவருடைய கையாகவே ஆகிவிட்டது போன்றிருந்தது. தடிக்குப் பின்னால் சிறிய மாமாவின் முகங்கூட இடையிடையே சோனுவின் கண்ணுக்கு மறைந்துவிட்டது.

சோனுவுக்கும் பரபரப்பு ஏற்பட்டது. மங்கலான நிலவொளி, சகடமரத்துக்கு மறுபுறத்தில் வயல்வெளி தனிமையில் படுத்துக் கிடந்தது. பைத்தியக்காரப் பெரியப்பா திண்ணையில் உட்கார்ந்து கொண்டு கையைப் பிசைகிறார்; நடுநடுவே அவருடைய வழக்க மான வார்த்தையை உச்சரிக்கிறார், உலகத்தை எப்போதும் ஒரு ஆபத்து சூழ்ந்திருப்பது போல. யாரும் யாரையும் நம்பக்கூடாது என்ற பாவனையில். சிறிய மாமா இடையிடையே மாலதி அத்தை யிடம் போகிறார்; மாலதி அத்தை மரக்கத்தியைக் கீழே கொண்டு வரும்போது செய்த பிசகைத் திருத்துகிறார். திண்ணையில் பெரிய பெரிய தடிகள் வரிசையாகச் சாத்தி வைக்கப்பட் டிருக்கின்றன. எண்ணெய் தடவப்பட்டிருந்ததால் அவை இந்த மங்கிய நிலவிலும் பளபளக்கின்றன. சிலம்பம் விளையாடிக் களைத்துப் போனவர்கள் தடிகளைத் திண்ணைச் சுவர்மேல் சாத்தி வைத்துவிட்டுக் கால் களைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்தார்கள். கையில்லாத பனியன் போட்டுக்கொண் டிருக்கும் சிறிய மாமா எல்லாரையும் கவனித்துக் கொண்டார்.

சோனு சற்றுநேரம் காமிலா மரத்தருகில் நின்றுகொண் டிருந்தான். ஆனால் வெகுநேரம் அங்கேயே இருக்க முடியாமல் அம்மாவிடம் ஓடிவந்து நின்றான்.

தனமாமி சொன்னாள், "சோனுவா?"

"நேக்குப் பயமாயிருக்கு."

இருட்டில் தனியாகப் படுத்திருக்க, அவனுக்குப் பயம். பிறகு அவன் தன் தாயைக் கேட்டான், "இது என்னம்மா?"

"சிலம்பு விளையாட்டு."

சோனு விழித்துக்கொண்டு வந்திருப்பதை ரஞ்சித் கவனித்தான். அவன் சோனுவைத் தன் பக்கத்தில் கூப்பிட்டு வைத்துக்கொண்டு கேட்டான், "நீ விளையாட்டு கத்துக்கறியா?"

ஆர்வத்துடன் பதில் வந்தது, "கத்துக்கறேன்!"

"ஆனுக் கத்துக்கறது ரொம்பக் கஷ்டமாக்கும்! அதுக்கு ரொம்பப் பயிற்சி பண்ணணும்."

'பயிற்சி' என்ற வார்த்தைக்கு அர்த்தம் தெரியவில்லை சோனுவுக்கு. அவன் தன் தாயைக் கேட்டான், "பயிற்சின்னு என்ன அம்மா?"

ரஞ்சித் சொன்னான்: "தன அக்காவுக்கு என்ன தெரியும்? என்னைக் கேளு, சொல்றேன். நீ எதைச் செஞ்சாலும் அதை ஒரே மனசோட செய்யணும். அதுதான் 'பயிற்சி' சரி, என்னோட ஆசையை ஒருத்தருக்கும் சொல்லக்கூடாது."

"நான் சொல்லமாட்டேன்."

"ஆமா, சொல்லக்கூடாது! சொல்லல்லேன்னு, நான் உனக்குக் கத்துத் தரேன்."

"நான் சொல்லவே மாட்டேன், பாருங்களேன்!"

குழந்தைகளின் இம்மாதிரி பேச்சுக்களுக்கு அர்த்தமில்லை என்று ரஞ்சித்துக்குத் தெரியும். இருந்தாலும் அவன் சிறுவர்களையும் சிலம்பப் பயிற்சியில் சேர்த்துக்கொண்டான். அவர்கள் பிறருக்குச் சொல்லலாம், சொல்லாமலும் இருக்கலாம். அவர்களுக்கு ஒரு முனைப்பாட்டை உண்டாக்குவதற்காக அவன் அடிக்கடி அவர்களுக்கு உபதேசம் செய்தான். சோனு, லால்ட்டு, பல்ட்டு எல்லாரும் சிலம்பப் பயிற்சியில் சேர்ந்துகொண்டார்கள். ஆனால் பயிற்சி செய்வதைவிட அந்தக் குழுவுக்கு உதவியாகக் கூடமாட வேலை செய்வதில்தான் அவர்களுக்கு ரொம்ப உற்சாகம்.

இரவு வெகுநேரமாகிவிட்டால் சில சமயம் சோனு சிலம்பப் பயிற்சியை மறந்து தூங்கிப் போய்விடுவான். காலையில் எழுந்ததும் அவன் தன் தாயிடம் சொல்வான், "அம்மா, இனிமேல் உன்னோட பேசமாட்டேன்."

"ஏன்?"

''நேத்திக்கு என்னைக் கம்பு விளையாட எழுப்பல்லியே!''

''நீதான் தூங்கிப் போயிட்டியே!''

சோனு சில சமயம் தன் மாமாவைப் போல் அல்லது பெரியம் மாவைப் போல் பேச முயற்சி செய்வான். மாமா எவ்வளவு தெளி வாக, கணீரென்ற குரலில் பேசுகிருர்! ரஞ்சித் மாதிரி பேச மாலதிக்கும் ஆசை. பெரிய மாமியும் ரஞ்சித்தும் பேசிக்கொண்டால் அந்தப் பேச்சு மிகவும் இனிமையாக இருக்கும், கேட்பவர்கள் மனத்தில் எதிரொலித்துக்கொண்டே இருக்கும். அவர்கள் பேச்சில் கரகரப்புத் தன்மை இருக்காது. தன் குரல் கரகரப்பாயிருப்பதாக மாலதிக்குத் தோன்றும். ஆகையால் அவள் முடிந்த வரையில் ரஞ்சித்துடன் மிகவும் குறைவாகத்தான் பேசுவாள். இப்போதெல்லாம் ரஞ்சித்தும் அவசியமான பேச்சைத் தவிர, வேறெதுவும் பேசுவதில்லை. அவன் அவளை அவள் வீட்டுக்குக் கொண்டுபோய் விடும்போது சொல்வான்: ''உங்கிட்டே ஒரு முனைப்பாடே இல்லை, மாலதி! நீ ஏதோ நினைவில் உன்னை மறந்துவிடுகிருய். பயிற்சி பெறும்போது இப்படி இருந்தால் உடம்பில் அல்லது தலையில் நன்ருக அடிபட்டு விடும்.''

மாலதி பதில் ஒன்றும் சொல்வதில்லை, அவள் என்ன சொல்வாள்? அவள் சிலம்பம் பழகுவது அவனுக்கு அருகில் இருப்பதற்காகததான். அவன் அவளுடைய மனிதன். அவன் வந்த பிறகு அவளுக்கு என்ன பயம்? ஆகையால் அவன் என்ன சொன்னுலும் பேசாமல் கேட்டுக் கொள்வாள் அவள். சில சமயம் மாலதிக்குப் பழக்கமானது என்பதற்காக அவன் கிராமத்தில் வழங்கும் கொச்சை மொழியில் அவளுடன் பேசுவான். இது அவளுக்குப் பிடிக்காது. இந்தப் பேச்சு இனிமையற்றதாக அவளுக்குத் தோன்றும். ரஞ்சித் அவளிடமிருந்து எதுவும் எதிர்ப்பார்க்கவில்லை என்று அப்போது மாலதிக்குத் தோன்றும். அவள் எரிச்சலுடன் சொல்வாள்: ''நீ ஒண்ணும் எனக்காக இந்தக் கொச்சைப் பேச்சு பேசவேண்டாம், நினைச்சா என்னுலும் உன்மாதிரி வக்கணையாய்ப் பேச முடியும். உனக்குக் கொச்சைப் பேச்சு நன்னுப் பேச வராதபோது அதை ஏன் பேசறே? உன் வாயிலே அந்தப் பேச்சைக் கேட்கப் பிடிக்கல்லே எனக்கு சின்ன வயசிலேருந்து உன்னுேடேயே வளந்தவ நான்.''

அவளுடைய பேச்சைக் கேட்டுத் திகைப்பான் ரஞ்சித், ''உன் பேச்சைக் கேட்டாக் கிராமத்துப் பொண்ணு மாதிரியே தெரியல் லியே?''

''யார் யாருக்கு எது பழக்கமோ, அப்படித்தான் பேசணும். நீ பேசற பேச்சை நான் பேசினு நன்னு இருக்குமா? கிராமத்துப்

பேச்சு உனக்கு வராது; அதைப் பேசாதே. கேட்க நாராசமா இருக்கு'' என்பாள் அவள்.

சோனு தன் தாயிடம், "ஏன் என்னை ராத்திரி எழுப்பல்லே?' என்று கேட்டான்.

"போனுப் போறது, இன்னிக்கு எழுப்பறேன். ஆனால் ஒரு நிபந்தனை.''

"நிபந்தனையா? அப்படீன்னு என்ன, மாமா?'' என்று சோனு ரஞ்சித்தைக் கேட்டான்.

"நீ வயல் பார்த்திருக்கிருயா?''

"பார்த்திருக்கிறேனே!'' சோனு தன் மாமாவைப் போல் இலக்கண சுத்தமாகப் பேச முயற்சி செய்தான்.

"பூ பார்த்திருக்கிருயா?''

"உம், பார்த்திருக்கிறேனே!''

"ஸோனுலி பாலி ஆற்றுப் படுகையைப் பார்த்திருக்கிருயா?''

"பார்த்திருக்கிறேன். தர்மூஜ் வயலைப் பார்த்திருக்கிறேன். ஆனு நிபந்தனை பார்த்ததில்லே?''

"நிபந்தனைங்கறது ஒரு பெரிய ராட்சசன். அவன் மனுஷன் தோள் மேலே உட்கார்ந்துண்டுட்டா, மனுஷன் மிருகமா ஆயிடுவான். சில சமயம் மிருகமும் மனுஷனு ஆறதுண்டு.''

"மாமா, உன்னுடை ராட்சசன் என்ன சொல்ருன்?''

"என்னுடை ராட்சசன் மிருகத்தை மனுஷனு ஆகச்சொல்ருன்.''

"எங்கே அந்த ராட்சசனைக் கொண்டுவந்து காட்டு பார்க்கலாம்.''

"பெரியவனுப் போ! அப்போ உனக்குக் கொண்டுவந்து காண்பிக்கிறேன்.''

இவ்வாறு சொல்லிச் சோனுவைத் தோள்மேல் வைத்துக்கொண்டு சுற்றினுன் ரஞ்சித்.

பெரிய முற்றத்தில் சிலம்புப் பயிற்சியும், கத்திப் பயிற்சியும் நடக்கும். முற்றத்தைச் சுற்றி மரத்தாலும் தகரத்தாலும் ஆன அறைகள். பால் வீட்டு வாசலிலிருந்து அந்த இடம் கண்ணுக்குத் தெரியாது. இரவானதும் அந்த முற்றத்தில் கூட்டம் சேர்ந்துவிடும்.

சீதாமரத்து வேலிக்கு மறுபுறத்திலிருந்து ஒரு கண் ரஞ்சித்தை இமைகொட்டாமல் பார்த்துக்கொண் டிருந்தது. ரஞ்சித்தின் கட்டுமஸ்தான தேகம் அந்தக் கண்ணில் வியப்பை உண்டாக்கியது. திறந்த மேலுடம்புடன் அவன் சோனுவைத் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு சுற்றினுன். சோனுவுக்கு ரொம்ப மகிழ்ச்சி; அவனுக்குத் தலை சுற்றியது. ரஞ்சித் சற்றுநேரங் கழித்துச் சோனு

வைக் கீழே விட்டான். சோனுவுக்குக் கிறுகிறுத்தது. அப்படியும் 'இன்னும், இன்னும்' என்று கையை நீட்டினுன். ரஞ்சித் சோனுவுடன் விளையாடுவதைச் சசீந்திரநாத் பார்த்தார். ஆனுல் ஒன்றும் சொல்ல வில்லை.

காலை நேரம், படிப்பு நேரம். ஆனுல் சோனுவுக்குப் பரீட்சை முடிந்து விட்டது. அவன் பரீட்சை நன்ருக எழுதியிருந்தான். அவனுக்கு நல்ல ஞாபகசக்தி. மாமாவும் மருமகனும் விளையாடுவதைப் பார்க்கச் சசீந்திரநாத்துக்குச் சந்தோஷமாகத்தான் இருந்தது. அவர்கள் குளிர் காலத்தில் மாமா வீடு போவது வழக்கம். குழந்தைகளுக்குப் பரிட்சை முடிந்ததும் தனமாமி தன் பிறந்த வீடு போவாள்.

குளிர்காலத்தில் வயல்களில் பனி மூடியிருக்கும். பருப்புப் பயிரில் பருப்பு முதிர்ந்திருக்கும். கடுகுப் பூக்களால் வயல்களுக்கு மஞ்சள் பூசினுற் போல் இருக்கும்.

குளிர்காலம் பலவிதமான திண்பண்டங்களுக்கு ஏற்ற பருவம். வீட்டுக்கு வீடு பிட்டும் பாயசமும் தயாராகும். பெரிய குடும்பங் களில் *வாஸ்து பூஜை நடக்கும்; ஆட்டுப்பலி நடக்கும். கத்மா, எள்ளுருண்டை முதலிய வெவ்வெறு ரகத் தின்பண்டங்கள். எள் சேர்த்த புளிக்குழம்பு. கடைத் தெருவுக்குப் போனுல் அந்தப் பருவத்தில் பெரிய பெரிய பாப்தா மீன் கிடைக்கும். மீன்கள் தங்க நிறத்தில் பெரிது பெரிதாக இருக்கும். காலி பாவுஷ் மீன், பாக்தா மீன், பால்.

குளிர்காலம் வந்துவிட்டால் பசுக்கள் பாலைக் கொட்டும். கிராமங்களில் வறுமையும் அவ்வளவாகத் தாண்டவமாடாது. குடும்பத்துக்குக் குடும்பம் ஆனந்தம் தவழும். ஏழைகளுக்குச் சம்சாரி வீடுகளில் வேலை கிடைக்கும். சாமான்களின் விலையும் மிகவும் குறையும். அப்போது லால்ட்டுவும் பல்ட்டுவும் கிராமத்தின் மற்றச் சிறுவர்களும் 'கோல்லாச் தூட்' எிளையாட்டு விளையாடு வார்கள். வயல்களில் அறுவடை முடிந்திருக்கும். பயிர்கள் காய்ந்த அடித் தண்டு மட்டும் நீட்டிக்கொண் டிருக்கும், தரைக்கு வெளியே. அங்கே கால் வைத்தால் 'சர, சர' வென்று சப்தம் கேட்கும். மண் மிருதுவாக இருக்கும். அப்போது எவ்வளவு வேண்டுமானுலும் வயல்களில் ஓடலாம்; கீழே விழலாம். விழுந்தால் கொஞ்சங்கூடக் காயம் ஏற்படாது.

சசீந்திரநாத் சீதாமர வேலிக்கருகில் போனபோது மாலதி அங்கே நின்றுகொண் டிருப்பதைப் பார்த்தார். அவள் காபிலா மரத்தடியில்

---

* வாஸ்து பூஜா — வீட்டு மனைக்குச் செய்யப்படும் பூஜை.

நின்றுகொண்டு என்னவோ செய்துகொண் டிருந்தாள். "நீ இங்கே? என்ன செய்றே?" என்று அவர் கேட்டார்.

"கோந்து எடுக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே மாலதி காபிலா மரத்திலிருந்து கோந்து எடுப்பது போல் பாவனை செய்தாள். உண்மையில் அவள் நின்றுகொண் டிருந்தது வேலிக்கு மறுபக்கம் இருந்த ஒரு மனிதனைப் பார்க்கத்தான். ஆனால் வேறு யாராவது அவளைக் கவனித்துவிட்டால் மரத்திலிருந்து கோந்து எடுப்பதுபோல் பாவனை செய்வாள். இவ்விதம் அவள் தன் ஆசைதீர ரஞ்சித்தைப் பார்த்தாள். காலையில் எழுந்ததும் வாசல் கூட்டுவது, பாத்திரங்களைத் தேய்க்கத் துறைக்கு எடுத்துச் செல்லுவது, வாத்துக்களைக் குளத்தில் விடுவது போன்ற வேலைகளைச் செய்துவிட்டாள். வேறு வேலை பாக்கியில்லை. ஆபாராணி அவளுக் காக நெல் ஊறப் போட்டிருந்தாள். மாலதி சப்தம் செய்யாமல் டாகுர் வீட்டுப் பக்கம் வந்தாள். வேலிக்கருகில் சற்று நேரம் நின்றாள். நிற்க ஏதாவதொரு காரணம் வேண்டுமே! வேலியை ஒட்டிக் காபிலாமரம். அதில் கொஞ்சம் கொஞ்சம் கோந்து வழிந்து கொண்டிருந்தது. அவள் ஓர் இலையைக் கையில் எடுத்துக்கொண் டாள். யாராவது அவளைக் கவனித்துவிட்டால் கோந்து எடுப்பது போல் பாவனை செய்தாள். வேலி யிடுக்கு வழியாக ரஞ்சித்தைப் பார்த்துக்கொண் டிருந்தாள். இது வெளியே தெரிந்தால் பலவித மான பேச்சு ஏற்படும் என்பதைக்கூட அவள் மறந்துவிட்டாள்.

நரேன்தாஸ் வீட்டில் இல்லை; அமூல்யன் பாபூர் ஹாட்டுக்குத் துணி விற்கப் போயிருந்தான். இப்போது நெசவு வேலை இல்லை. ஆகையால் மாலதிக்கும் ஓய்வுதான். அவள் எங்கும் ஓடித் திரிந்துகொண்டு, புளி ஊறுகாயைச் சப்பிச் சுவைத்துக்கொண்டு இந்த நாட்களைத் தன்னிஷ்டப்படி கழிக்கலாம். இதற்குப் பிறகு பூரி பூஜா உற்சவம். அவள் இந்தத் தடவை உற்சவத்துக்கு ரஞ்சித்தோடு போவாள். உற்சவ மைதானத்தில் சர்க்கஸ் யானை, சிங்கம், புலி, குதிரைப் பந்தயம், கோயிலின் ஒரு மூலையில் டோம் ஜாதிக்காரர்களின் பன்றி பலி ஆகியவற்றைப் பார்த்துக்கொண்டு ஜிலேபியும் ரசகுல்லாவும் தின்றுகொண்டு சுற்றுவாள். எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும் அப்போது! அவளுடைய வாழ்க்கையின் மகிழ்ச்சி எல்லாமே இப்போது ரஞ்சித்திடந்தான். அவள் வேலி யிடுக்கில் கண்ணை வைத்துக்கொண்டு நின்றிருந்தாள்.

மாலை கழிந்து இருள் சூழத் தொடங்கியது. சோனா, லால்ட்டு, பல்ட்டு மூவரும் ஒவ்வொன்றாக மூங்கில்களைக் கொண்டுவந்து கிழக் குப் பக்க அறையில் அடுக்கிவைத்தார்கள். அப்போதுதான் அந்தக்

குரல் கேட்டது. குளத்தங்கரையிலிருந்து குரல் கொடுத்துக் கொண்டே வருவது யார்?

அந்த ஆள் வீட்டு வாசலுக்கு வந்துவிட்டான், ''ரஞ்சித் வந்திருக் காணுமே?''

சசீந்திரநாத் சாமுவைப் பார்த்துச் சற்று வியப்படைந்தார். சில நாட்களுக்கு முன்னுல் நிலம் சம்பந்தப்பட்ட ஒரு தகராறில் அவர் சாமுவைத் திட்டியிருந்தார். இருவரிடையேயும் பெருத்த வாக்கு வாதம் நடந்தது. அந்தச் சாமு இப்பொழுது இங்கு வந்திருப்பது அவருக்குத் திக்கென்றிருந்தது. தன் தயக்கத்தை மறைப்பதற்காக அவர் ஏதேதோ பேசினர். ''உன் அம்மா படுத்த படுக்கையாக இருக்காளாமே?''

''ஆமாம்.''

''தாரிணி கவிராஜ்கிட்டே ஒரு தடவை கூட்டிக்கிட்டுப் போயேன்.''

''போய் என்ன பிரயோசனம்? இந்தக் குளிர்காலம் தாண்டாது போல இருக்கு.''

''எதுக்கும் ஒரு தடவை போய்ப் பார்த்துட்டுவா. நான் உனக்குக் கடுதாசு தரேன்.''

''கொடுங்க, பார்ப்போம் என்ன ஆறதுன்னு!''

''என்ன ஆகலேன்னு பாரு. என் அத்தையை இந்த மாதிரி கவனிப்பில்லாமே சாக விடமாட்டேன் நான்.''

சாமுவின் முகத்தில் ஒரு புன்னகை தோன்றியது. நறுக்கிவிட்ட மீசை, மிகச் சிறிய மோவாய்த் தாடி. உற்றுக் கவனித்தால் அதைச் சாமு மிகவும் அக்கரையோடு வளர்ப்பது தெரியும். ஒரு தடவை சாமு பெரிய தாடி வைத்திருந்தான். அப்போது சசீந்திரநாத், ''உன்னைப் பார்த்தால் உன் அப்பாவோட ஞாபகம் வருது'' என்ருர்.

இவ்வாறு சசீந்திரநாத், சாமுவுக்கு அவன் அப்பாவின் நினைவூட்டி அவனுக்கும் பெருமையளித்திருந்தார். அதன் பிறகு எவ்வளவோ நாளாகிவிட்டது. சாமு மாலதிக்குத் தன் நீண்ட தாடியைக் காண்பித்து அவளைப் பழிவாங்க நினைத்திருந்தான். ஆனுல் அவனுக்கு ஒவ்வொரு சமயம் தோன்றியது, ''பழிவாங்கும் உணர்வு யாருக் காகவும் காத்திருப்பதில்லை, சமயம் வந்தால் அது தண்ணீரைப் போல் சாதாரணமாக ஆகிவிடுகிறது, கேலிக்குரியதாக ஆகிவிடுகிறது'' என்று. தன் சிறு பிள்ளைத்தனம் குறித்து அவனுக்கே வெட்கம் ஏற்பட்டது. மறுபடி கண்ணியமாகத் தோற்றம் அளிக்கத் தொடங் கினுன் அவன். கட்டம் போட்ட லுங்கி, பயிரின் நிறம் அதற்கு. மேலே மெல்லிய பனியன், முழுக்கை சட்டை. அவன் சசீந்திர நாத்தை ஏறிட்டுப் பார்க்காமலேயே கேட்டான். ''ரஞ்சித் வந்திருக் கறதாகக் கேள்விப்பட்டேனே!''

"ஆமாம், வந்திருக்கான். இவ்வளவு நாள் கல்கத்தாவிலே இருந்தான். இப்போ திரும்பி வந்திருக்கான்."

இப்போது சாமு சசீந்திரநாத்துக்காகக் காத்திராமல் தானே ரஞ்சித்தைக் கூப்பிட்டான், "டாகுர், எங்கே போயிட்டே? கொஞ்சம் வெளியிலே வா! உன் மூஞ்சியைப் பார்க்கிறேன். உன்னுலே என்ஜே அடையாளம் கண்டுக்க முடியறதா, பார்க்கிறேன்."

ரஞ்சித் வாசலுக்கு வந்து சற்று நேரம் அவனை உற்றுப் பார்த்துக் கொண்டு நின்ருன். "நீ சாமு இல்லே?"

"அப்போ என்னை உனக்கு ஞாபகமிருக்கு."

"மறப்பேனு?"

"யாரு கண்டாப்பா? நீ எங்கேயோ போயிட்டே. உன்கிட்டேயிருந்து லெட்டர், கிட்டர் ஒண்ணுமில்லே. பெரிய மாமியைப் பார்த்தாக் கேட்பேன், உன் கிட்டேயிருந்து லெட்டர் வந்ததான்னு. லெட்டர் இல்லேம்பாங்க. ஒரேயடியா இப்படிக் கண்காணுமப் போயிட்டியே!"

"சரி, உள்ளே வந்து உட்காரு."

"சாயங்கால வேளையிலே வீட்டுக்குள்ளே என்ன? வயல் பக்கம் போகலாம், வா."

இதுவும் நல்ல யோசனைதான். வயல் என்ருல் ஸோணுலி பாலி நதியின் படுகை. எல்லையற்ற காலமாகப் பெருகிக்கொண் டிருக்கும் நதி.

ரஞ்சித் சாமுவுக்குப் பல விஷயங்களைப் பற்றிச் சொன்னுன். அவற்றுக்கு நடுவில் மாலதியைப் பற்றியும் சொன்னுன்.

நிலவு கிளம்பிவிட்டது. தெளிவான வானம். அவர்கள் வரப்புக்களின் மேல் நடந்துகொண் டிருந்தார்கள். கோதுமை, சோள வயல்களைக் கடந்தால் நதிக்கரை. கரை பாம்பைப் போல் நீளமாக வயல்களுக்கும் ஆற்று நீருக்குமிடையே படுத்துக் கிடந்தது. மங்கலான நிலவொளியில் சின்னஞ்சிறு தர்பூஜ் கொடிகள் காற்றில் அசைவது ஒரு முயல் கூட்டம் அசைவது போலிருந்தது. அந்த முயல்கள் எப்போதும் ஆற்று மணலில் ஓடிக்கொண்டிருப்பது போலத் தோன்றியது. ஆற்றில் தண்ணீர் குறைந்துவிட்டது. இப்போது ஆற்றை மாடும் கடக்கலாம், வண்டியும் கடக்கலாம். அவர்கள் தங்கள் உடையை முழங்கால் மட்டும் தூக்கிக்கொண்டு நீரைக் கடந்தார்கள். படிகம் போன்ற நீர், கீழே கூழாங்கற்கள், தலைக்கு மேலே ஆகாயம். பால் போன்ற நிலவு நதியைக் கடந்தால் கிராமம், அடர்த்தியான காடு, இன்னும் கிழக்கே நடந்து போனுல் ஒரு மூங்கில் பாலம் வரும்.

முன்பொரு நாள் சாமுவும் ரஞ்சித்தும் மாலதியைக் கூட்டிக்கொண்டு அந்த மூங்கில் பாலத்தைக் கடந்து போனார்கள். நதியைக் கடந்து வயல்களைத் தாண்டிப் பலிசப் பழங்கள், புளிப்பும் இனிப்பு கலந்த பழங்கள், பறித்துவரப் போனார்கள். திரும்பி வரும்போது அவர்கள் வழி தெரியாமல் வயல்களில் நாள் முழுதும் அலைந்து சாயங்காலம் வீடு திரும்பினார்கள். நரேன்தாஸ் அவர்களைக் கண்டித்தான். தடியை எடுத்துக்கொண்டு அவர்கள் இருவரையும் விரட்டினான். அதன் பிறகு அவர்கள் எப்போதாவது அவன் வீட்டுக்கு வந்தால் அவன் மாலதிக்கு ஏதாவது வேலை கொடுத்து அவளை நெசவரைக்கு அனுப்பிவிடுவான். அவர்கள் மாலதியைச் சந்திக்கவே வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. "டாகுர், ஒரு நல்ல வழி சொல்லேன்" என்று சாமு ரஞ்சித்தைக் கேட்டான்.

ரஞ்சித் சொன்னான்: 'நரேன்தாஸுக்கு மீன் பிடிக்கும்."

"என்ன மீன்?"

"இச்சா மீன்."

அப்போது பாத்ர மாதமோ, ஆஸ்வின் மாதமோ, இப்போது நன்றாக நினைவு இல்லை. மழை நீர் கீழே இறங்கத் தொடங்கிவிட்டது. தண்ணீரில் வளரும் புற்கள் அழுக ஆரம்பித்துவிட்டன. தண்ணீரில் ஒரே நாற்றம். அதிலிருந்த மீன்கள் பெரிய ஏரிக்கோ, ஆற்றுக்கோ, சமுத்திரத்துக்கோ போய்ச் சேர்ந்துவிடத் துடித்துக்கொண்டிருந்தன. தண்ணீரோடு தண்ணீராக அவை ஓடிப்போய் விடும். சரியான இடத்தில் மூங்கில் வலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்தால் வெகுசீக்கிரம் வலை நிறைய மீன்கள் நிரம்பிவிடும். பெரிய பெரிய கல்தா சிங்கிடி மீன்கள். ஆனால் அதில் பெரிய ஆபத்து – பாம்புகள், அட்டைகள், தண்ணீர்ப் பூச்சிகள் இவற்றால் ஆபத்து நேரலாம். அவர்கள் இந்த ஆபத்துக்களைப் பொருட்படுத்தாமல் உடம்பு முழுதும் பூண்டு எண்ணெயைத் தடவிக்கொண்டு மீன் பிடிப்பதற்காக நீந்திக்கொண்டு போனார்கள்.

நாற்றத் தண்ணீரில் நீந்திப் போய்ப் பெரிய ஆலமரத்தடியில் மூங்கில் வலையை வைத்துவிட்டு இரவு முழுதும் ஆலமரத்துக் கிளையிலேயே உட்கார்ந்திருந்துவிட்டு, மறுநாள் அவர்கள் இரண்டு கூடை நிறையக் கல்தா சிங்கிடி மீன்களை எடுத்துக்கொண்டு நரேன் தாஸிடம் போனார்கள்.

நரேன்தாஸ் திகைத்துப் போய், "இதென்னடா, என்னடா பண்ணியிருக்கீங்க?" என்று சொன்னான். அவனுடைய மீன் ஆசை அவனை கோபம் கொள்ளச் செய்யவில்லை. அதன் பிறகு ஒரு தடவை கூட அவன் மாலதி அவர்களுடன் பழகுவதைத் தடுக்கவில்லை. மாலதி

அவர்களுடன் இந்தப் பிராந்தியம் முழுதும் சுற்றுவாள். இவ்வாறு மாலதிக்காக அவர்கள் எவ்வளவோ துணிச்சலான காரியங்களைச் செய்துகொண்டு திரிவார்கள்.

அந்த மாலதி இப்போது எவ்வளவு பெரியவளாகிவிட்டாள்! நடந்துகொண்டே நினைத்தான் ரஞ்சித். நினைத்தவன் ஒரு தடவை சொல்லியேவிட்டான்: "மாலதி ரொம்ப அழகா ஆயிட்டா. எவ்வளவு நாள் கழிச்சுப் பார்க்கறேன் அவளை! நல்ல உயரமாவும் வளர்ந்துட்டா!"

சாமு நிமிர்ந்து பார்த்தான். "அவளை நினைச்சா எனக்கு ரொம்பப் பயமா இருக்கு. ஒரு நாள் ராத்திரி நல்ல இருட்டிலே வாத்தைத் தேடிக்கிட்டு வயல்லே சுத்தரு."

சாமு சொன்னது ரஞ்சித்தின் காதில் விழுந்ததோ, இல்லையோ? அவன் திரும்பி வந்தபிறகு மாலதியை முதல் முதலாகப் பார்த்த போது திகைத்துப் போய்விட்டான். தன்னையறியாமல் அவன், "நீ எவ்வளவு அழகா இருக்கே!" என்று சொல்லப் போனான். நல்ல வேளை; வார்த்தை வெளியில் வரவில்லை. தான் தியாகி என்ற பெருமித உணர்வு அவனுக்கு உண்டு. இருந்தாலும் தனக்குப் பிடித்த விஷயங்களில் விருப்பம் அவன் மனசைச் சில சமயம் சலனப்படுத்துவதுண்டு. சாமுவைப் பார்த்ததும் அவனுக்குத் தோன்றியது, தனக்குப் பிடித்த விஷயங்களைப் பற்றி இவனிடம் சொல்வதில் தவறு இல்லையென்று. அவன் தண்ணீர் ஓரமாக நடந்தபோது மாலதியைப் பற்றிப் பேசினான். தெளிந்த நீரைப் போல மாலதியும் தூய்மையாக இருந்தாள். நிலவு தண்ணீரில் பளபளத்தது. அவர்கள் நடக்கும் அரவம் கேட்டு மீன்கள் அவர்களுடைய கால்களை நோக்கிப் பாய்ந்துவந்தன. அவர்கள் நின்றால் அந்தச் சின்னஞ்சிறு மீன்கள் அவர்களுடைய கால்களைக் கொத்தின. சில சமயம் இருவரும் திடீரென்று மௌனமானார்கள். திடீரென்று பல விஷயங்களைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள்.

பேச்சு நடுவில் ரஞ்சித் சொன்னான்: "நீ லீக்கிலே பெரிய தலைவனாயிருக்கியாமே?"

சாமு இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. காரணம் ரஞ்சித்தின் பேச்சில் ஓரளவு குத்தல் இருந்தது. இப்போது அவன் பேச்சு சசீந்திரநாத்தின் பேச்சைப் போல் இருந்தது. சசீந்திரநாத்தும் மற்ற இந்துப் பெரியவர்களும் அவனுடைய கட்சியைப் பற்றி ஏளனமாக நினைத்தார்கள். ரஞ்சித்தும் அவர்கள் மாதிரியே நடந்து கொண்டான்.

சாமு பேச்சை மாற்ற விரும்பி, "வா, மணல்லே போய் உட்கார்ந்துகிட்டுக் காத்து வாங்கலாம்" என்றான்.

ரஞ்சித் முன்னல் போனன். பிறகு அவனுக்கு எதிரில் நின்று கொண்டு கேட்டான்: "என்ன, பதில் சொல்லல்லியே நீ?"

"அந்தப் பேச்சை விட்டுடு, டாகுர்!"

"ஏன் விடணும்?" இன்னும் ஏதோ சொல்ல ஆரம்பித்தான், ரஞ்சித். சாமு, "அது எங்கள் மதத்தைப் பற்றிய விஷயம்" என்று சொல்லி, ரஞ்சித்தின் கையைப் பிடித்து அவனைக் கீழே உட்கார வைத்தான். "நான் உன்னைத் தொட்டுட்டேனே! நீ ஸ்நானம் பண்ணவேண்டாமா?"

சாமுவின் பேச்சைக் கேட்டு ரஞ்சித் 'ஹா ஹா'வென்று சிரித்தான். ஆனல் சிரிக்கும்போதே ஒரு சோக உணர்வு அவனைத் தாக்கியது. இருவரும் உணர்ச்சித் ததும்ப ஒருவரையொருவர் பார்த்துக்கொண் டார்கள். எங்கோ ஒரு தவறு நேர்ந்திருக்கிறது.

சாமு மெல்லிய குரலில், "இன்னும் எவ்வளவு நாள் இங்கே இருப்பே டாகுர்?" என்று கேட்டுவிட்டு அவன் தூரத்தில் தெரிந்த ஆற்று நீரைப் பார்த்தான்.

"நிச்சயமில்லே. எவ்வளவு நாள் இருக்க முடியுமோ, அவ்வளவு நாள் இருப்பேன். நான் இப்போ ஒளிவுமறைவா இருக்கேன். நீ என்னைக் காட்டிக் கொடுக்காட்டா ரொம்ப நாள் இங்கே இருக்கலாம்னு நினைக்கிறேன்."

சாமு இப்போது ரஞ்சித்தைத் திரும்பிப் பார்த்தான். இப்போது அவன் ஆற்று மணலைப் பார்க்கவில்லை, ஆற்றைப் பார்க்கவில்லை, மர்ம அழகு நிறைந்த கிராமத்தை, வயல்களை, பயிர்களைப் பார்க்க வில்லை; ரஞ்சித்தின் முகத்தை மட்டுமே பார்த்தான். அவன் ரஞ்சிதத்தின் முகத்தில் தியாகத்தின் கர்வத்தைப் பார்த்தான். ரஞ்சித்துக்குப் பிறரது கடமையுணர்வில் கொஞ்சங் கூட நம்பிக்கை யில்லை. அவன் ரஞ்சித்தின் முகத்துக்கருகில் தன் முகத்தைக் கொண்டுவந்து சொன்னன்: "உனக்கு என் பெண்ணைக் கூட்டிக் கிட்டுவந்து காண்பிக்கிறேன், டாகுர்! சின்ன வயசிலே மாலதி இருந்தாளே, அந்த மாதிரியே இருக்கா என் பெண். எப்பவும் ஆத்தங்கரையிலே திரிஞ்சுக்கிட்டு இருப்பா. அவளைப் பார்த்தால் உன் ஞாபகம் வரும் எனக்கு, டாகுர். என் மேலே சந்தேகப் படாதே, என்னை அலட்சியம் செய்யாதே!" வருத்தத்துடன் சிரித் தான் சாமு.

"மாலதி சொன்ன, நீ டாக்காவிலே இருக்கே, கட்சி வேலை செய்யறேன்னு."

"மாலதி என்னை ரொம்ப அலட்சியம் பண்ணரு, டாகுர்! அவ முன்மாதிரி மனம் திறந்து பேசறதில்லே."

"உன் மேலே சந்தேகப்படரு."

"அது எனக்குத் தெரியாது. நம்பிக்கை, சந்தேகம் இதைப் பத்தியெல்லாம் எனக்குத் தெரியாது."

அப்போது ஒரு பைத்தியக்கார மனிதர் நிலவொளியில் ஆற்றைக் கடப்பது தெரிந்தது கிராமத்தில் விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. அவற்றின் பிரதிபிம்பங்கள் தண்ணீரில் மிதந்தன. பைத்தியக்கார மணீந்திரநாத் ஆற்றைக் கடந்தபோது அவர் கால்பட்டு நீரில் சிறிய அலைகள் எழுந்தன. விளக்குகளின் பிரதிபிம்பங்கள் அலைகளால் சிதறுண்டன.

பேலு திண்ணையில் உட்கார்ந்துகொண்டு முணுமுணுத்துக்கொண்டிருந்தான். அவனுடைய இடக்கையில் இப்போது கொஞ்சங் கூடச் சக்தி இல்லை. அந்தக் கையைப் பார்க்கும்போதெல்லாம் அவன் நெஞ்சில் ஆக்ரோஷம் பிறக்கும்: 'டாகுர், பைத்தியக்கார டாகூர், உன் பைத்தியக்காரத்தனத்தை முறிச்சுப் போடறேன்!'

இடக்கை மணிக்கட்டில் பலம் இல்லை. மணிக்கட்டின் தோல் கறுத்துப் பொசுங்கித் தழும்பாகியிருந்தது. இரண்டு பக்கமும் சதை வீங்கிக் கரடு தட்டிப் போயிருந்தது. ஒரு கறுப்புக் கயிறு அதில் கட்டியிருந்தது. அதில் மந்திரிக்கப்பட்ட ஒரு வெள்ளைச் சோழி தொங்கியது.

பேலு முணுமுணுத்துக் கொண்டிருந்தான். மேலே சில காகங்களும் மைனுக்களும் பறந்தன. அவனுடைய பீபி ஒரு சீசா எண்ணெய் கடன் வாங்கப் பச்சிம்பாடாவுக்குப் போயிருந்தாள். அவன் மீன் வதங்கலுக்குக் காவல். குளிர்கால வெயில், காபிலா மரத்துக் கிளைகளின் இடுக்குகள் வழியே கீழே இறங்கியது. இந்தச் சாதாரண வெயிலில் மீன்களைப் பரத்தி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான் பேலு. முன்னால் பள்ளம், குட்டை. பயிர் விளையாத தரிசு நிலம். வீட்டுக்கு வடக்கே இருந்த இந்தத் துண்டு நிலம் பேலுவினுடையது. மூங்கில் தோப்பின் நிழல் அந்த நிலத்தை விவசாயத்துக்கு லாயக்கில்லாமல் செய்துவிட்டது.

அவன் தன் கழுத்தில் ஒரு கறுப்புக் கயிறு கட்டிக்கொண்டிருந்தான். அதில் ஒரு வெள்ளி மெடல் தொங்கியது. எப்போதும் ஒரு பயில்வான் போல் காட்சியளிக்க ஆசை பேலுவுக்கு. பேலு

இப்போது இளைஞன் அல்ல. இருந்தாலும் இந்த வயதிலும் அவனுடைய கழுத்தையும் கையையும் பார்த்தால் ஆச்சரியமா யிருக்கும். அவனுடைய முகம் பயிர் விளையாத நிலம் போல் இருக்கும், காய்ந்து கிடக்கும், நெருப்பில் கருகிவிட்டாற் போல. அவன் ஒரு கண்ணால் பார்த்தால் யாருக்கும் நடுக்கமேற்படும். கண்ணுக்குள்ளிருக்கும் பாப்பாவில் எப்போதும் ஒரு கொடூரம் கூத்தாடும். ஒரு புறா சந்தோஷமாக வானத்தில் பறப்பதைப் பார்த்தால் அதைப் பிடித்து அதன் சிறகுகளைப் பிய்த்துப் போடத் தோன்றும் அவனுக்கு. அதன் காலை முறித்துவிட முடிந்தால் காஜிப் பாட்டில் பின்பாட்டுப் பாடுபவனைப் போல் 'சந்திரனைப் போல் உன் முகம்' என்று பாடுமளவுக்குக் குஷி பிறந்துவிடும் அவனுக்கு.

சடுகுடு விளையாட்டில் வல்லவனாயிருந்தான் பேலு. அப்போது அவனுடைய கைகளின்மேல் எதிர்க் கட்சிக்காரர்களுக்கு எவ்வளவு கோபம்! எப்படியாவது அவனுடைய கைகளை முறித்துவிட வேண்டும்போல் இருக்கும் அவர்களுக்கு. அவன் கைகளால் அடித்தால், புலியிடம் பயப்படுவது போல் நடுங்குவார்கள், எதிர்க் கட்சிக்காரர்கள்.

மைதானத்தில் விளையாட்டு நடந்தது. கோபால்தி பாபுக்களின் கட்சி பேலுவுக்கு எதிராக விளையாடியது. அவர்களுக்குப் பத்து ரூபாய் முன்பணம் கொடுத்திருந்தது. விளையாட்டில் பேலுவின் கையை முறித்துவிட்டால் இன்னும் பத்து ரூபாய் பரிசாக அவர்களுக்குக் கிடைக்கும். ஆனால் யார் கையை யார் முறிப்பது?

பேலு இந்த மூலைக்கும் அந்த மூலைக்கும் ஓடினான். வேகமாக ஓடுட பேலுவுக்குப் பிடிக்கும். கோட்டில் கால் வைத்ததுமே ஆகாயத்தைத் தொடுவது போல் உயரத் தாவுவான் அவன். அது அவனுடைய வழக்கம். அவனுடைய உருண்டு திரண்ட கைகால்களின் மேல் வெயில் பளபளக்கும். குட்டையான கறுப்புப் பாண்ட், கறுப்புப் பனியன். கழுத்தில் வெள்ளி மெடல். உயரமான ஆகிருதி. அவலட்சணமான முகம், உடல். 'ஜய்மா!' என்று சொல்லிக்கொண்டு அல்லது அல்லா, அல்லா!' என்று கூவிக்கொண்டு விளையாட்டில் குதிப்பான்.

அவனுடைய கால்களைத் தட்டிவிட்டால் அவன் அப்படியே குப்புற விழுவான். அப்போது அவன் இடுப்பின்மேல் உட்கார்ந்து கொண்டு கைகளைத் திருகிவிட வேண்டும். அப்படி செய்தால் அவனுடைய புலிப் பிடி பூனைப் பிடியாகிவிடும். ஆனால் கடைசியில் முன்பணம் கொடுத்தது வீணாகிவிட்டது. விளையாட்டு முடிந்தபோது பேலுவுக்குச் சிறுகாயங்கூடப் படவில்லை.

அப்படிப்பட்ட பேலு இப்போது உட்கார்ந்துகொண்டு தன் கையைப் பார்த்துக்கொண் டிருக்கிறான். காகங்களை ஓட்டுகிறான்.

தன் உடைந்த கையைப் பார்த்துப் பொருமிக்கொண்டு பைத்தியக் கார டாகுரைத் திட்டினன். "உன் பைத்தியக்காரத்தனத்துக்கு வேறே இடம் கிடைக்கல்லியா, டாகுர்? இரு, இரு, உன் மகாத்மா வேஷத்தைக் கலைக்கிறேன் ஒரு நாள்!" — பிறகு அவன் காக்கையை விரட்டினன். ஒரு காகம் கூரைமேல் வந்து உட்கார்ந்து வெகுநேரமாகப் பிராணனை எடுத்தது. ஒரு காகம் இல்லை, நிறையக் காகங்கள். 'இவன் கையாலாகாதவன்னு அதுகளுக்குத் தெரிஞ்சுபோச்சு. அவன் கொஞ்சங் கொஞ்சமா முடமாப் போய்க் கிட்டிருக்கான். மூட்டுக்கு மூட்டு வலி. யானையோட தும்பிக்கை அவனோட சக்தியை யெல்லாம் எடுத்துக்கிட்டுப் போயிடுச்சு.'

அவனுடைய இருகண்களும் — குறிப்பாகப் பூச்சி குதறிய ஒரு கண் — பயங்கரமாக ஜொலித்தன. காகம் அவனுடைய அந்தக் கண்ணைப் பார்க்கவில்லை போலும்! அவன் காகத்துக்கு அந்தக் கண்ணைக் காட்டுவதற்காகத் திரும்பிக்கொண்டு நின்றான். காகம் பறந்து வந்து அருகில் உட்கார்ந்தது. அது அவனுடைய கண்ணைக் கவனிக்கவில்லை. பேலு அதை விரட்டிக்கொண்டு ஓடினன் "நீ என்னைப் பைத்தியக்கார டாகுர்னு நினைச்சுட்டியா?" வலக் கையைத் தூக்கப் போனவன் அது இன்னும் குணமாகவில்லை என்று உணர்ந்தான். இடக்கை முடமாகிவிட்டது. வலக்கை குணமாக வில்லை. பெண்டாட்டி எண்ணெய் கடன் வாங்கப் போயிருந்தாள். அவனே பெண்பிள்ளை மாதிரி வீட்டில் உட்கார்ந்துகொண் டிருக்கிறன், மீனுக்குக் காவலாக!

அவனுக்குத் தன் பீபியின் மேல் கோபங் கோபமாக வந்தது. ஒரு சணல் தட்டையை வைத்துக்கொண்டு காகங்களையும் மைனக் களையும் எவ்வளவுதான் விரட்ட முடியும்? காகம், மைன மட்டும் என்ன, பருந்துகூட மீனுக்கு ஆசைப்பட்டு வரலாம். பருந்தின் நினைவு வந்ததும் கௌர்சர்க்காரின் நினைவு வந்தது அவனுக்கு. அப்புறம் ஹாஜிசாயபு. அவருக்குத் தம் இரண்டாம் பீபியின் மேல் சந்தேகம் வரும்போதெல்லாம் அவளைத் தடியால் குத்துவார். பிரதாப் சந்தா — அவருக்குத் தம் தொந்தியில் எண்ணெய் தடவிக் கொள்ளும் வழக்கம். இவர்களுடைய நினைவுவந்ததும் அவன் நினைத்தான். 'அவர்கள் வெறும் காகம், பருந்து அல்ல, ராஜாளி கூட அல்ல, சிவப்பு நதியின் ராட்சசப் பருந்துகள்; பெரிய பெரிய மீன் களைத் தவிர மற்ற மீன்களை அவை லட்சியம் கூடச் செய்யாது.'

ஊரிலுள்ள நிலபுலன்களெல்லாம் இந்தப் பெரிய மனிதர் களுடையது. நல்ல காலத்திலோ கஷ்ட காலத்திலோ அவர்களுடைய நிலத்தில் உழைத்தால் காசு கொடுப்பார்கள் கூலியாக. கௌர்

சர்க்காருக்குப் பேலுவிடம் பயம். பேலுவின் கட்டுமஸ்தான உடல் வாகுக்காக அல்ல; இந்த மாதிரி உடல்வாகுள்ள எவ்வளவோ பேரை அவர் தம்மிடம் வேலேக்கு வைத்திருந்தார். பயம என்னவென்ருல், பேலு இளம் வயதில் — ஏன், இப்போதுங் கூட — ராத்திரி வேளேகளில் எங்கோ போகிருன். அவன் நினேத் தால் பத்து ரூபாய்க் காசுக்காகப் பத்துத் தலேகளே வெட்டி வந்து விடுவான், கொஞ்சமும் தயக்கமில்லாமல்!

என்ன ஆச்சரியம்! அப்பேர்ப்பட்ட பேலுவால் இப்போது ஒரு காகத்தை விரட்ட முடியவில்லே. பேலு கோபத்துடனும் சோர் வுடனும் தன் வலக் கையால் லுங்கியைத் தட்டிவிட்டுக் கொண்டான்.

வெயிலில் மீன்கள் காய்ந்தன. சிறிய திண்ணே. ஒரு கொய்யாமரம். புதிய பீபி வீட்டுக்கு வந்திருந்தாள். அவளே அவன் பிடித்துக் கொண்டு வந்து இரண்டு மூன்று வருடங்கள்தான் ஆகின்றன. அவளுக்கு வயது அதிகமில்லே, இருபது இருக்கலாம், ஒன்று இரண்டு கூட இருக்கலாம். ரொம்ப இளசு. ஊர் பூராவும் இதைப் பற்றிக் கேலி. அவள் ஆல்தாப் சாயபுவின் பீபியாக இருந்தாள். யாரோ ஒரு நாள் ஆல்தாப் சாயபுவின் பிணத்தைச் சணல் வயலில் கண்டார்கள். அதன் பிறகு ஒரு வருடங்கூட ஆகவில்லே. பேலு ஆல்தாப் சாயபுவின் அழகான பீபியைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டான். யாருக்கும் ஆட்சேபிக்கத் துணிவில்லே. பேலு சண்டைக்கார ஆள். அவனேடு யார் தகராறு செய்வது? அப்பேர்ப்பட்ட பேலுவால் ஒரு காகத்தை, ஒரு சாதாரண காகத்தை, சமாளிக்க முடியவில்லே.

சட்டென்று ஒரு காகம் வந்து ஒரு மீனேக் கொத்திக்கொண்டு பறந்தது. எரிச்சலுடன் அதைத் துரத்திக்கொண்டு போனுன் பேலு. இடுப்பிலிருந்து அவனுடைய லுங்கி அவிழ்ந்துவிட்டது. அநேகமாக அம்மணமாகக் காகத்தைத் துரத்திக்கொண்டு ஓடிய அவன் பின்னல் திரும்பியபோது எல்லாக் காகங்களும் மீன்களேத் தின்றுகொண் டிருப்பதைக் கண்டான். லுங்கியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு நடக்க முடியவில்லே அவனல். அவன் முழங்கால்களே மடக்கிய வாறே திரும்பிவந்தான். அந்தச் சாதாரண காகங்களுக்குக் கூடத் தெரிந்துவிட்டது, பேலு கையாலாகாதவன் என்று! அவன் தன் பூச்சி அரித்தக் கண்ணுல் மீன்களேப் பார்த்துக்கொண்டு அங்கேயே நின்ருன். அங்கிருந்து நகரவில்லே. நகர்ந்தால் மிஞ்சியிருக்கிற கொஞ்சநஞ்ச மீன்களும் மிஞ்சாது. வலக்கை ஒன்றுதான் அவனுக்கு ஆதாரம். பீபியின் தயவில்தான் குடும்பம் நடந்தது. மீன் இருக்கும் நிலேயைப் பார்த்தால் அவள் அவனே வெட்டி விடுவாள்.

பேலு மீன்களை நன்ருகப் பரப்பிவைத்தான். பூன்ட்டி மீனையும் சேலா மீனையும் நன்ருகப் பரப்பிவைத்தால் மீன்கள் குறைந் திருப்பதைக் கவனிக்கமாட்டாள். காகம் வந்து மீனைக் கொத்திக் கொண்டுபோன விஷயத்தைக் கண்டு பிடிக்கமாட்டாள்.

சாமு டாக்கா போயிருந்தான்; இன்னும் திரும்பவில்லை. பேலு சாமுவின் தாயாரிடமிருந்து ஒரு கூடை நெல் கடன் வாங்கி வந்திருந்தான். அதை எப்படித் திருப்பிக் கொடுக்கப் போகிருனே எப்போதுதான் கொடுக்கப் போகிருனே, அவனுக்கே தெரியாது, எல்லா விஷயங்களையும் அவனுடைய பீபி ஆன்னுதான் கவனித்துக் கொள்கிருள்.

ஆன்னுவிடம் பரிவு ஏற்பட்டது அவனுக்கு. அவன் லுங்கியை எடுத்துக் கட்டிக்கொண்டான். ஆன்னு பேகம்-அழகான பெயர்! ஆனல் அவளுடைய உடலில் ரொம்ப வீரியம்-சர்க்கார் வீட்டு முரட்டுக்குதிரை மாதிரி. மைதானத்தைக் கண்டால் ஓடத் துடிக் கிறது. ஆனல் இப்போதெல்லாம் பேலுவால் இவ்வளவு வீரிய முள்ள குதிரைமேல் சவாரி செய்ய முடியவில்லை. இடுப்புப் பிடிக் கிறது. குதிரைக்கு ஈடு கொடுக்க முயற்சி செய்தால் சரீரம் அயர்ந்து போகிறது. ஆன்னு எரிச்சலடைந்து, 'நல்ல ஆம்பிளை' என்று கேலி செய்கிருள். அவனைத் தன் மேலிருந்து கீழே தள்ளிவிடுகிருள். தரையில் முகம் நசுங்கிக் கீழே விழுந்துவிடுகிருன் அவன். அப்போது சந்தேகமாகிய சக்கரவாகப் பறவை அவனைக் குதறிக் குதறித் தின்கிறது. அவன் மிகவும் கஷ்டப்பட்டுச் சொல்கிருன்: "ஆன்னு, ஆன்னு! பைத்தியக்கார டாகுர் என்னை நொண்டியாக்கி விட்டார்!"

சிறிய கிராமம். சில முஸ்லிம் குடும்பங்கள். ஹாஜி சாயபுவின் வீட்டில் நான்கு புதிய அறைகளை—தகரம் வேய்ந்தவை - கட்டியிருக் கிருர்கள். அவருக்குக் கொஞ்சம் மாடுகன்று உண்டு. இரண்டு பெரிய மாடுகள் இருந்தன. அதற்கு அப்பால் சாமுவின் நிலம். நயாபாடாவில் சாமுவுக்குக் கொஞ்சம் நிலம் இருக்கிறது. அதன் விளைச்சல் சாமுவின் குடும்பத்துக்கு வருடம் பூராவும் காணும். நல்ல சணல் நிலம் இரண்டு ஏக்கர் இருந்தால் வேறென்ன வேண்டும்!

சாமுவின் உறவுக்காரர்கள் நல்ல வசதியுள்ளவர்கள். ஆகையால் அவனுக்குத் தட்டு ஏற்பட்டால் நெல், பொரி, அவல் எல்லாம் அவர்களிடமிருந்து வந்துவிடும். இவர்களைத் தவிரக் கிராமத்தி லுள்ள மற்றவர்கள் அல்லாவின் அடிமைகள். உடலுழைப்பால் தான் ஜீவனம் நடந்தவேண்டும். ஆபேத் அலிக்கு நிலம் கிடை யாது. மன்சூர் முக்கால்வாசி நிலம் பங்குக்காக உழுகிருன். "ஈசம்,

அவன் ஒரு ராஸ்கல்!" என்று சொல்லி ஆபாசமாகத் திட்டினுன் பேலு. ஈசமின் பீபி நொண்டி. சாமு வீட்டுச் சீதாமர வேலியைத் தாண்டினுல் ஹாஜி சாயபுவின் களஞ்சியம். அதற்கும் அப்பால் பிரம்புப் புதர், ஒரு பெரிய சீதாமரம். அந்த மரத்தடியில் ஓர் இடிந்த குடிசை. அதற்குள் முனகிக்கொண்டு படுத்துக் கிடக்கிருள் ஈசமின் பீபி. ஏதோ வியாதி அவளுக்கு. ஈசமினுல் ஒரு நாளும் தன் பீபியுடன் பிரியமாய் இருக்க முடியவில்லை. அவன் தர்மூஜ் வயலே சரணமாகக் கிடக்கிருன். இப்போது குளிர்காலம். பிறகு கோடை காலம் வரும். கோடைகாலம் வந்துவிட்டால் ஈசம் ஒரு வியாபாரி யாகிவிடுவான். அவன் தர்மூஜ் விற்று எல்லாக் காசையும் சின்ன டாகுரின் கையில் கொடுத்துவிடுவான். தான் தர்மூஜ் வயலிலிருந்து இத்தனை பணம் சம்பாதித்துச் சின்ன டாகுரிடம் கொடுப்பது குறித்து அவனுக்கு ரொம்பப் பெருமை.

கிராமத்துக்கு அப்பால் கிராமம் அல்லது விஸ்தாரமான மைதானம். முஸ்லிம் கிராமங்களில் எப்போதும் வறுமை. ஒவ்வொரு கிராமத்தில் ஹாஜிசாயபுவைப் போன்ற பணக்காரர்கள் இருக்கிருர்கள். அவர் களுக்கு வேறுவித சுகம். அவர்களுடைய பிள்ளைகள் ஆற்றைக் கடந்து சென்று தொழில் செய்வார்கள், சிலர் சணல் வியாபாரம் செய்வார்கள். அவர்கள் மசூதியில் பெரிய பெரிய தொட்டிகளில் படையல் படைப்பார்கள். இதையெல்லாம் பார்த்துவிட்டுப் பேலு வுக்குத் தானும் ஒரு படகு கட்டிக்கொள்ள வேண்டுமென்று ஆசை தோன்றும். அந்தப் படகை வைத்துக்கொண்டு சணல் வியாபாரம் செய்ய ஆசை. சணல் வியாபாரமோ, தரகோ செய்தால் நல்ல வரும்படி. அதன் மூலம் ஹாஜி சாயபு ஹாஜ்யாத்திரை கூடச் செய்துவிட்டார்.

இந்துக் கிராமங்களைப் பார்த்தால்...நரேன்தாஸ் – அவருக்கு நிலம் இருக்கிறது, நெசவுத் தொழில் இருக்கிறது. தீனபந்துவிடம் இரண்டு தறிகள், இரண்டு மனைவிகள். ரொம்பச் சுகமாக இருக்கிருன். டாகுர் வீட்டுக்காரர்கள் அந்தப் பிராந்தியத்திலேயே அதிகம் படித்தவர்கள் என்ற வகையில் செல்வாக்கு பெற்றவர்கள். பெரிய டாகுர்தான் பைத்தியம். இரண்டாவது டாகுரும் மூன்ருவது டாகுரும் அங்கிருந்து பத்துக் கோசத் தூரத்திலுள்ள மூடாபாடா ஜமீந்தாரிடம் காரியஸ்தர்கள். ஜமீந்தாருக்கு அவர்களிடம் அபார நம்பிக்கை. அவர்களது குடும்பம் வசதியாக இருக்கிறது. அப்புறம் பால் வீடு — அவர்களுக்கு நிலம் இருக்கிறது. மில் வேலை இருக்கிறது அதன் பிறகு மாஜி வீடு, அவர்களிடம் பெரிய பெரிய மாடுகள் இருக்கின்றன. திருவிழாவில் நடக்கும் பந்தயங்களில் பெரும்பாலும் அந்த மாடுகள்

தான் ஜயிக்கும். ஒரு தடவை இரண்டு தடவை நயாபாடா மியான்களின் மாடுகள் ஜயித்துவிட்டால் அதற்குக் காரணம் மாஜி விட்டாரின் தாட்சணியந்தான். ஒவ்வொரு தடவையும் மாஜி வீட்டு மாடுகளே ஜயித்தால் மக்கள் ஏதாவது சொல்லமாட்டார் களா? அவர்கள் திருவிழாவுக்கு மாடு கொண்டு போகா விட்டால் மியான்களின் மாடு ஜயித்துவிடும்.

கடைசியில் கவிராஜின் வீடு. பிரதாப் மாஜி பெரிய பணக்காரர். பிஸ்வாஸ்பாடாவிலும், பாவுசாவிலும் நிலம் உண்டு அவருக்கு. சுல்தான் சாதியில் உள்ள நல்ல நிலமெல்லாம் அவருடையதுதான். அப்புறம் கௌர் சர்க்கார் — அவருக்குத் தம் மைத்துனிமேல் காதல். அவர் வீட்டுக்குக் கூரை வேயப் போனால் தண்ணீர் குடிக்கவிட மாட்டார். வட்டியாலும் பேராசையாலும் பெரிய மனிதராகிக் கொண்டு வருகிறார். பிறருடைய சுகதுக்கத்தைப் பற்றிக் கவலையே இல்லை, அந்த ஆளுக்கு. எப்போது பார்த்தாலும் பணம், பணந் தான்! காசு கிடைத்தால் தம் இருதயத்தைக் கூட விற்றுவிட்டு வந்துவிடுவார் மனிதர்.

பேலு பல்லைக் கடித்துக்கொண்டு சொன்னான். "உன் மாதிரி பெரிய மனுஷங்களை மண்ணைக் கவ்வ வச்சாத்தான் எனக்கு நிம்மதி!" அவன் கத்தினான்: "டாகுர்! நீ பைத்தியம்! உன்னோடைப் பைத்தி யத்தை...!" அவனால் மேலே பேசமுடியவில்லை. அவன் எங்கோ கவனமாயிருப்பதைப் பார்த்துக் காகங்கள் கீழே இறங்கிவந்து விட்டன. அவன் அவற்றை 'உஷ், உஷ்' என்று விரட்டினான். என்ன கஷ்டம்! என்ன கஷ்டம்! அவனுடைய பீபியை இன்னும் காணோம்! என்ன செய்கிறாள் இவ்வளவு நேரம்? ஹாஜி சாயபுவோட சின்னப்பிள்ளை, ஆன்னுவோட வயத்திலே முழங்கால் வைக்கப் பாக்கறானா?

அவன் கூவினான்: "நாசமாப் போன காக்கா என்கிட்டே பயப் படல்லே! மூதேவி பெண்டாட்டி என்கிட்டே பயப்படல்லே!"

அவன் தன் பீபியைக் கொன்றுவிட வேண்டுமென்று நினைத்து உரக்கச் சிரித்தான். தன் கைகள் இரண்டையும் பார்த்துச் சொல்லிக் கொண்டான்: "என் கை சரியாப் போகாதா, அல்லா?" அவன் மிகவும் கஷ்டப்பட்டு இடக் கையை வலக் கையால் தூக்கித் தன் கண்ணுக்கு நேரே கொண்டுவந்தான். மணிக்கட்டின் தோல் சுருங்கிக் கிடந்தது. வீங்கின மணிக்கட்டில் சோழி கட்டிய கறுப்புக் கயிறு தொங்கியது. அவனும் ஈசமின் பீபியைப் போல் நொண்டியாகிக்கொண் டிருக்கிறானென்று அவனுக்குத் தோன்றியது. அவன் திண்ணையிலிருந்தே கத்தினான்: "ஆன்னு! ஏ ஆன்னு!...."

அப்போது ஆபேத் அலியின் பீபி ஜாலாலி பேலுவின் குடிசைக்குக் கீழ்ப்பக்கமாகப் போய்க்கொண் டிருந்தாள். மூங்கில் புதருக்குக் கீழே போய்க்கொண் டிருந்தாள் ஜாலாலி. மெலிந்திருக்கிருள். ஏரியை நோக்கிப் போகிருள் போலத் தோன்றியது. ஏழை பாழைகள் அல்லிக்கிழங்கு பறிக்கும் சமயம் இது. ஆஸ்வின் — கார்த்திக் மாதமாயிருந்தால், அல்லது அக்ராண், பௌஷ் மாதமானுல் தாழ்நிலத்தில் பயிரிலிருந்து வளரும் நெல்கதிரை அரிவாளால் திருட்டுத்தனமாக வெட்டி மடியில் நிரப்பிக்கொள்ளலாம். இப்போது வயலில் ஒன்றும் இல்லே. சோளம், கோதுமை விளேச்சல் இல்லே. இப்போது அல்லிக் கிழங்குக்காகத் தண்ணீரில் இறங்குவதைத் தவிர வேறு வழியில்லே. ஜாலாலி அல்லிக்கிழங்கு பறிக்க ஏரிப்பக்கம் போய்க்கொண் டிருந்தாள். பேலு அவளேக் கேட்டான்: "அண்ணி, ஆன்னுவைப் பார்த்தீங்களா?"

ஜாலாலி ஒரு துண்டைக் கட்கத்தில் இடுக்கிக்கொண் டிருந்தாள். அவள் தலேமேல் ஒரு சிறிய கூடை. கூடை அவள் முகத்தை மறைத்தது. கூடை தலேமேல் இருந்ததால் பேலு சொல்வது அவள் காதில விழவில்லே. அல்லது விழுந்தாலும் தெளிவாக விழவில்லே. ஆகையால் ஜாலாலி தலேயிலிருந்து கூடையை எடுத்துவிட்டு, "என்ன சொன்னே, மியான்?" என்று கேட்டாள்.

"வேறே என்ன சொல்லுவேன்?" ஆனுனப்பட்ட பேலு மாடு மாதிரி அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு அவளேப் பார்த்தான்.

"நீ என்ன சொல்றே?"

"ஆன்னு ஒரு சீசா எண்ணெய் வாங்கிட்டு வரப்போனு. இன்னும் வரல்லே."

"எல்லாம் வருவா" என்று சொல்லிவிட்டு ஜாலாலி கூடையை மறுபடி தலேமேல் வைத்துக்கொண்டு வயலுக்குள் இறங்கிவிட்டாள். எதிரில் விசாலமான வயல்வெளி. இடப பக்கம் ஸோனுலிபாலி ஆறு. ஆற்று மணல். மணலேத் தாண்டி நேரே வடக்கில் சென்ருல் அந்த ஏரி, பாவுசா ஏரி. அங்கே ஒரு தடவை ஈசமை ஒற்றைக் கண் பிசாசு பிடித்துக்கொண்டு விட்டது. இவ்வளவு பெரிய ஏரி இந்தப் பிராந்தியத்திலேயே, இந்த ஜில்லாவிலேயே கிடையாது. ஒரு சமயம் இந்த ஏரி நீரில் ஒரு முதலே வந்தது. ஒரு பெரிய மலேப் பாம்பு மிதந்துவந்தது. இந்த ஏரியிலுள்ள விதவிதமான ஆமைகளேப் பற்றி, கஜார் மீனேப் பற்றி, இரவில் மிதந்துவரும் ஏழு படகுகளில் ஒன்ருன 'மதுகர்' என்ற படகைப் பற்றி - பல கதைகள் வதந்திகளாக இந்தப் பிராந்தியத்தில் பரவியுள்ளன. அந்த ஏரியில்தான் ஜாலாலி அல்லிக்கிழங்கு பறிக்கப் போகிருள். ஜாலாலி மட்டும் அல்ல, இன்னும் எவ்வளவோ ஆயிரக்கணக்கானவர்கள் போகிருர்

கள். அவர்கள் அதிகாலையில் கிளம்பிப் போவார்கள், மாலை நேரத்தில் திரும்புவார்கள். பேலு திண்ணையில் நின்றுகொண்டு இதையெல்லாம் பார்த்துக்கொண் டிருப்பான்.

ஆபேத் அலி இந்தச் சமயம் வீடு திரும்புவான். மழைக் காலம், சரத்காலம், பின்பனிக் காலம், இந்தக் காலங்களில் அவன் கொய்னுப் படகில் வேலைப் பார்ப்பான். குளிர், வசந்த, கோடைக் காலங்களில் வீட்டுக்கு வந்து இந்துக் குடியிருப்பில் கூலி வேலை செய்வான். இதுதான் கிராமம். இந்தக் கிராமத்தில் சாமு ஒருவன்தான் பெரிய மனிதனுக வளைய வர முடிகிறது. சாமு பெரிய மனிதனுக ஆக ஆக, இந்து இளைஞர்கள் அவனுக்கு மதிப்புத் தரத் தரப் பேலுவும் சாமுவின் பக்கம் ஈர்க்கப்பட்டான். கொஞ்சங் கொஞ்சமாகச் சாமுவின் அடிமையாகிக்கொண்டு வந்தான் பேலு.

கண்ணியமான இந்துக் குடும்பங்களைச் சேர்ந்த மனிதர்களுக்குச் சமமாகச் சொல்லத் தக்க பெரிய மனிதன் அவர்களுடைய முஸ்லிம் சமூகத்திலும் ஒருவன் இருக்கிருன்—சாமு! சாமு டாக்காவிலிருந்து திரும்பி வந்துவிட்டால் பேலு அவனையே சுற்றிச் சுற்றி வருவான். பேலு தன் முறிந்த கையைப் பற்றி அழாக்குறையாகப் புகார் செய்வான் சாமுவிடம். வசதியாக வாழும் இந்துக் குடும்பங்களின் மேல் அவனுக்கிருந்த ஆக்ரோஷம் அவனை வருத்தும்போது சாமுவும் முல்லா மௌல்விகளைப் போல அதற்கு ஒரு வழி சொல்லலாம். சாமுவின் லீக் கட்சி 'ஜிந்தாபாத்! நமக்காக ஒரு தனி நாடு வேண்டும்! நாங்கள் நல்ல முறையில் வாழத் தனிநாடு வேண்டும்!'

ஒருநாள் இத்தேசம் ஏழை மக்களுக்குச் சொந்தமாகிவிடும் என்று கேட்டால் பேலுவுக்கு நல்ல தூக்கம் வரும். தன் ஜாதியினர் எல்லாரையுமே ஏழை மக்களாகத்தான் கருதினன் பேலு. சொந்த நாட்டை அடைய ஜிஹாத் — தர்மயுத்தம் — செய்ய வேண்டும். அதற்காகப் பலவிதமான புரட்சிகள் செய்யவேண்டும். பேசப் பேச ஆவேசம் வந்துவிடும் சாமுவுக்கு நமக்காகத் தேசம், இந்தத் தேசம், இந்த மண், இதன் விளைச்சல் எல்லாம் நமக்காக, நம் தேவைக்காக நாமே இங்கே பெரும்பாலானவர்கள் ; ஆகையால் இந்த நாடு நம்முடையது.

சாமு புத்தக மொழியில் வாக்கியங்களை நீட்டி நீட்டிச் சொற்பொழிவு செய்யும்போது அதைக் கேட்கும் பேலுவுக்குத் தோன்றும், இந்த மனிதன் விரும்புகிறபடி சேவை செய்தால் அதன் மதிப்பு மௌல்வி முல்லாக்களின் சாதனையைவிடக் குறைவாக இருக்காது என்று.

ஆனல் கை உடைந்துவிட்டதே! காகங்கள் மீன்களுக்கு ஆசைப் பட்டு மேலே பறந்தன. அவன் அவற்றை 'உஷ்' என்று விரட்டி

ஞன். அவன், ''மூதேவிக் காக்கா, என் பேரு பேலுஷேக்காக்கும்!' என்று கத்திக்கொண்டே சணல் குச்சியைத் தன் தலைக்கு மேலே வலக்கையால் சுழற்றினான்.

அப்போதுதான் கன்றுக்குட்டி 'ஹாம்பா' என்று கத்தியது. குளிர் காரணமாக அதன் மூக்கிலிருந்து சளி வழிந்தது. அதற்கு ஜலதோஷம். குளிரில் அதன் வயிறு உப்பி டமாரம்போல் ஆகிவிட்டது. அதை வெயிலுக்குக் கொண்டுபோனால் வயிற்று உப்புசம் குறையும். அவனுக்கும் ஒரு வேலை பார்த்தமாதிரி இருக்கும். இவ்வளவு நேரமாகியும் ஆன்னு இன்னும் திரும்பவில்லை. கன்று பசியால் கத்தியது. அதை மேய்க்கக் கூட்டிக்கொண்டு போக வேண்டும். புல்வெளியில் ஒரு முளையடித்துக் கட்டிப் போட்டால் கொஞ்சம் புல்லாவது தின்னும். அதற்குக் கொஞ்சம் பலமாவது வரும்.

ஆன்னு வரவில்லை. என்ன செய்வது? அவன் வலக் கையால் மீன்களை யெல்லாம் குவித்து அவற்றை வீட்டுக்குள் வைத்துக் கதவை மூடினான். ஒரு முளையை அடித்துக் கன்றுக்குட்டியை அதில் கட்டினான். அப்போது வரிசை வரிசையாக மக்கள் அல்லிக்கிழங்கு பொறுக்கப் போவதைப் பார்த்தான். எல்லாரும் முஸ்லிம் பெண் கள், விதவைகள். இந்தப் பிராந்தியத்திலுள்ள முகம்மதிய கிராமங் களைச் சேர்ந்தவர்கள். எதிரில் விஸ்தாரமான ஏரி மைதானம். ஹாயி ஜாதியைச் சேர்ந்த சர்க்கார் வீட்டார் குளத்தங்கரையில் வாஸ்து பூஜா செய்தார்கள். ஆடு பலி நடந்தது. தாரை, தம்பட்டங்கள் ஒலித்தன.

டாகுர் வீட்டுச் சிறிய டாகுர் வாஸ்து பூஜைக்காக வெளியே புறப்பட்டார். அவர் இந்துக் குடும்பங்களுக்கு வாஸ்து பூஜை செய்ய எள்ளும் துளசியும் கொண்டுபோய்க் கொடுப்பார். பூஜையில் மத்தளம் முழங்கும். டாகுர் இங்குமங்கும் போவார், மந்திரம் சொல்லுவார். ஈசம் இன்று டாகுர் வீட்டுக்குப் போகமாட்டான். அவன் நாளை அங்கே போய் அரிசி, வாழைக்காய் இன்னும் மற்றச் சாமான்கள் எல்லாவற்றையும் துணியில் முடிந்துகொண்டு வீட்டுக்குப் போவான்.

சர்க்கார் வீட்டு வாஸ்து பூஜை பார்க்க நிறையக் கன்னிகைகள், கல்யாணமான பெண்கள் வந்திருந்தார்கள், புதிய புடைவைகள் அணிந்துகொண்டு. நெற்றியில் சிந்தூரத் திலகம், கைகளில் பொன் வளையல்கள், பட்டுப்புடைவைகள். எவ்வளவு அழகாக இருந்தார் கள் பார்க்க! பின்பனிக் காலத்தில் ஸோனாலிபாலி மணல் ஜொலிப் பதைப் போல் அவர்கள் ஜொலித்தார்கள். பூஜை நடந்தது. உறவுக் காரர்களைப் போல் டாகுர் வீட்டுப் பெரிய மாமியும் தனமாமியும்,

குளத்தங்கரைக்கு வந்தார்கள். மண்ணில் ஒரு சிறிய வாழைமரத்தைப் புதைத்திருந்தார்கள். அதற்கடியில் ஒரு சிறிய மண்குடம், அதன் மேல் ஒரு தேங்காய். நாற்புறமும் விதவிதமான நைவேத்தியச் சாமான்கள். அவற்றைப் பார்த்தால் சாப்பாட்டுப் பொருளுக்குப் பஞ்சமேயில்லையென்று தோன்றும். கத்மா, எள்ளுருண்டை இன்னும் மற்றக் குளிர்காலத்தின் பண்டங்கள் எல்லாம் இருந்தன.

என்ன எரிச்சல்! தண்ணீரால் தணிக்க முடியாத எரிச்சல்! ஜாலாலி தண்ணீரில் இறங்கப் போகிருள். இப்போது அவள் பார்வைக்கு மறைந்துவிட்டாள். என்ன எரிச்சல். கன்றுக்குட்டி புல்லில் வாய் வைத்து எவ்வளவு நாளாயிற்று! குளிர்காலப் புல் பனியில் நனைந்திருந்தது. நன்ருக வெயில் வரும்வரை, புல்லின் பனி நன்ருக உலரும்வரை, கன்று புல்லில் வாயை வைக்காது. அது புல் தின்னுததற்காகக் கோபமும் வருத்தமும் கொண்ட பேலு அதன் வயிற்றில் ஓர் உதை கொடுத்தான். அது முழங்கால்களை மடக்கிக் கொண்டு கீழேவிழ இருந்து கடைசியில் சமாளித்துக்கொண்டது. பேலுவுக்குப் பயம் இருக்கும், நல்ல புல்லைக் கன்று தின்னு விட்டால் ஹாஜி சாயபுவின் சாமி மாடோ, கௌர் சர்க்காரின் முரட்டுமாடோ வந்து அதையெல்லாம் சாப்பிட்டுப் போய்விடும் என்று. பேலுவுக்கு அந்தப் புல்லைத் தானே கண்டுபிடித்துவிட்ட தாக நினைப்பு. அதைத் தன் கன்று சீக்கிரம் தின்றுவிட்டால் வேறொரு மிருகமும் அதில் பங்கு கொண்டாடாது. இந்த மூதேவி ஆன்னு தன் பங்காகக் கொண்டு வந்தது இந்த ஒரு கன்றுதான்! வத்தல் தொத்தல் கன்றுக்குட்டி; அதுக்கு அதிர்ஷ்டமில்லே. தேகத்திலே பலமில்லே. வீடு பூரா, ஊர் பூரா அசுத்தம் பண்ணிக் கொண்டு திரிகிறது.

ஆன்னுவின் நினைவு வந்ததும் அவன் கிராமத்துப் பக்கம் போகலாமா என்று நினைத்தான். ஒரு சீசா எண்ணெய் கடன் வாங்க இவ்வளவு நேரமா?

தூரத்தில் மேளம் ஒலித்தது. அந்த ஒலி அவன் காதில் அபஸ்வரமாக விழுந்தது. ஜாலாலியை இங்கிருந்து பார்க்க முடிந்தது. அவள் பட்டினியால் மெலிந்து சோர்ந்திருந்தாள். இப்போது பாவுசா ஏரிக்குப் போவதற்காகப் பிரதாப் சந்தாவின் துறையைக் கடந்தாள். அவள் தன் முன்னுலிருந்த நிலத்தையும் கள்ளிக் காட்டையும் கடந்து பனியாக்களின் குளத்தங்கரை வழியே நடந்தாள். விஸ்தாரமான நிலம். அது பூரா பிரதாப் சந்தாவுக்குச் சொந்தம். அந்த நிலத்தைத் தாண்டினுல் பாவுசா ஏரி. அந்த ஏரிகரையிலுள்ள நிலமெல்லாம் — சணல், கரும்பு வயல்கள், பாகல் தோட்டம் —

கௌர் சர்க்காருக்குச் சொந்தம். அதற்கப்பாலுள்ள நிலமெல்லாம் ஹாஜி சாயபுவைச் சேர்ந்தது. ஹாஜி சாயபுவுக்கு மூன்று பீபிகள். கடைசி பீபிக்கு வயது அதிகம் இல்லை, இருபத்து நான்கு, இருபத்தைந்து இருக்கலாம். ஹாஜிசாயபு பக்ரீத் அன்று தன் மூன்று பீபிக்களையும் மசூதிக்கு அழைத்துச் செல்லும்போது நாற்புறமும் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டு வருவார். யாராவது அவர்களைப் பார்வையால் விழுங்கிவிடாமலிருக்கிறார்களா என்று பார்ப்பார். முகத் திரைக்குள்ளிருந்து அவர்கள் என்ன பார்க்கிறார்கள் என்று கவனிப்பார். "ஆசையோடு யாரைப் பார்க்கிறே?" என்று கேட்டு இரண்டாவது பீபியைக் குச்சியால் குத்துவார். "என் தங்க பீபியே, வழியைப் பார்த்துக்கிட்டு நடம்மா!" என்பார். அப்போது அவருடைய தடியைப் பிடுங்கி அதைக்கொண்டே அவரை மண்டையில் ஒரு பாட்டம் அடிக்கத் தோன்றும் பேலுவுக்கு. இதையெல்லாம் நினைத்தபோது அவனுக்கு ரத்தம் தலைக்கு ஏறும். அமைதியாக இருக்க முடியாது அவனால்.

பேலு பெரிய மனிதன் அல்ல. தண்ணீரிலும் காட்டிலும் வளர்ந்தவன் அவன். எங்கோ வியாபாரம் செய்யப்போன இடத்தில் அவனைப் பிடித்துக்கொண்டு வந்திருந்தார் ஹாஜி சாயபு. நெல் அறுவடையான பிறகு பேலு, ஹாஜி சாயபுவின் காலிலும் வயிற்றிலும் முதுகிலும் பூண்டுத் தைலத்தைச் சுடவைத்துத் தடவித் தேய்த்து விடுவான். அப்படிப்பட்ட பேலுவுக்கு நடுநடுவே ஓர் ஆசை தோன்றும். 'ஹாஜிசாயபுவின் இரண்டாம் பீபியின் முகத் திரையை நீக்கி அவளைப் பார்த்துவிட வேண்டுமென்று.'

அவன் படுகையில் நின்றுகொண்டிருந்தான். பெரிய அரச மரத்துக்குக் கீழே மட்கிலா மரங்கள், விதவித வண்ண இலைகளுள்ள செடிகள். குளிர் காலமாதலால் காட்டின் உட்புறம் உலர்ந்து கரடுமுரடாக இருந்தது. அதற்குள் நுழைந்து உடும்பு போல் புதருக்குப் பின்னால் ஒளிந்திருந்தால் ஹாஜி சாயபுவின் இரண்டாம் பீபியைப் பார்க்க முடியலாம். ஏனென்றால் அவர் வீட்டு ஸதிரீகள் குளிக்கும் குளம் அந்தப் பக்கந்தான் இருந்தது. புதருக்குள்ளிருந்து எட்டிப் பார்ப்பதற்கு முன் அவன் நாற்புறமும் பார்த்துக்கொண்டான். இடப் பக்கம் ஆபேத் அலியின் வீடு. அதில் இப்போது யாரும் இல்லை. மாமரத்தடியிலிருக்கும் இடிந்த குடிசை இப்போது காலி. தெற்குப் பக்கம் வாசல் வைத்த அந்தக் குடிசையில் ஜோட்டன் முன்பு வசித்தாள். இப்போது அவள் இல்லாததால் மழையிலும் புயலிலும் அதன் மண்சுவர் இடிந்து விழுந்து மண்ணோடு மண்ணாகக் கலந்துவிட்டது. பிரம்புச் செடிகளும்

புதர்களும் ஆபேத் அலியின் வீட்டை எப்போதும் இருட்டாக்கி வைத்திருந்தன. குளிர்காலச் சூரியன் ஆபேத் அலியின் வீட்டுக்குள் நுழையவே மாட்டான்.

இந்த வீட்டையும் புதர்களையும் கடந்தால்—ஹாஜி சாயபு வீட்டுச் சீதாமர வேலிக்கு மறுபுறத்திலிருந்து அவருடைய மூன்று பீபிகளின் குரல்கள் கேட்கும். கண்ணாடி வளையல்கள் குலுங்கும். 'என்ன சிரிக்கிறுங்க?' சிரித்துச் சிரித்தே உலகத்தை விழுங்கிடுவாங்க!

அவங்களோட நீண்ட தலைவகிடு நெல் வயல்களுக்கு நடுவில் செல்லும் வெள்ளை வரப்புப் போல் தெரிந்தது. கட்டம் போட்ட புடைவை முழங்காலுக்கு ரொம்பக் கீழே இறங்கவில்லை. ஆசை உந்த, புதருக்குள்ளிருந்து எட்டிப் பார்த்தான் பேலு. இடக்கை முடமாகிவிட்டது; வலக் கை இன்னும் கொஞ்சங் கொஞ்சம் வழங்குகிறது. எப்போது இதுவும் முடமாகிவிடுமோ!

செத்த பாம்பைப் போல் புதருக்குள் கிடந்தான் பேலு. புதருக்குப் பக்கத்தில் துறைக்குப் போகும் வழி. ஹா ஜிசாயபுவின் அந்தப் புரத்துக் குளத்தின் தண்ணீர் எவ்வளவு கறுப்பு! இந்தத் தண்ணீரைப் பார்த்தால் ஹாஜி சாயபு வீட்டுப் பெண்களுக்கு எரிச்சலாயிருக்கும், அடிவயிற்றில் குமட்டும். ஹாஜி சாயபுவின் இரண்டாவது பீபி, வேளை, நேரம் பார்க்காமல் அங்கே குளிக்க வருவாள். வந்தால் அவள் கையைப் பிடித்து இழுத்து, புதருக்குள்ளே கூட்டிக்கொண்டு வந்து...பேலுவால் இன்னமும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவன் ஆமை போல் கழுத்தை நீட்டிப் பார்த்தான். செதத பாம்பைப் போல் வெகுநேரம் வேட்டை கிடைக்கும் ஆசையில் படுத்துக் கிடக்க அவனுல் முடியவில்லை.

பேலுவின் மனசில் குஷி பெருக்கெடுத்து ஓடாதபோது அவன் தன் பீபியை ஆன்னு என்று கூப்பிடுவான். ஆற்றில் வெள்ளம் பெருகுவது போல் அவன் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கினுல் 'ஆன்னு பேகம்' என்று கூப்பிடுவான். வயிறு நிறையச் சாப்பாடு கிடைததால் 'பேகம் சாகிபா' என்று அழைப்பான். அவனுக்குத் தன் பேகம் சாகிபாவின் மேல் பைத்தியம். ஹாஜி சாயபுவின் இரண்டாம் மனைவியின் மைத்தீட்டிய கண்களின் மேல் பைத்தியம். ஹாஜி சாயபு அவனைப் படகுத் துறையிலிருந்து விரட்டிவிட்ட பிறகு அரசமரத்தடிப் புதர்தான் அவனுக்குப் புகலிடமாக இருந்தது. அவன் புதருக்குள் செத்த உடும்பைப் போல் படுத்துக் கிடந்தான். ஹாஜி சாயபுவின் இரண்டாவது பீபி இன்னும் துறைக்குக் குளிக்க வரவில்லை.

இப்போது குளிர்காலம். அறுவடையாகிவிட்டதால் வயல்கள் காலியாகக் கிடந்தன. நரேன்தாஸூம், மாஜி வீட்டு ஸ்ரீச்சந்

தாவும், பிரதாப் சந்தாவும் மாத்திரம் கூலியாட்களை வைத்துக்கொண்டு தாழ்நிலத்தில் புகையிலை பயிர் செய்தார்கள். பூமி செழிப்பாக இருக்கும் இடங்களில் வெங்காயம், பூண்டு, வேர்க்கடலைச் செடிகள் வளர்ந்துள்ளன. இந்தப் பக்கம் யாரும் அதிகம் வருவதில்லை. அப்படி வந்தாலும் புதருக்குள்ளே ஓர் ஆள் வேட்டையாடும் பூனையைப் போல் ஒளிந்துகொண் டிருப்பதைப் பார்க்க முடியாது. ஜாலாலியின் உருவம் மைதானத்தின் கடைசியில் கண்ணுக்கு மறைந்துவிட்டது. கிழக்கு வீட்டு மாலதி மாட்டை ஓட்டிக் கொண்டு படுகைக்கு வந்தாள். அவள் படுகையில் முளையை நட்டு அதில் மாட்டைக் கட்டிவிட்டுப் போனாள்.

சர்க்கார் வீட்டுத் துறையில் இன்னும் மேளங்கள் ஒலித்தன. வாஸ்து பூஜைக்காகக் கொடிகள் பறந்தன. டாகுர் வீடு, பால் வீடு, பிஸ்வாஸ்பாடாவில் எந்தப் பக்கம் பார்த்தாலும் அந்தப் பக்கம் மத்தளங்களின் ஒலியும் ஆடு அல்லது எருமையின் தீனக் குரலும் கேட்டன. எருமைப் பலி நடக்கும்போது மத்தளம் அடிப்பவர்கள் ஐம்பது பேர் ஒரே சமயத்தில் வாத்தியத்தை முழக்கு வார்கள்.

பேலு சற்று ஒருக்களித்துக்கொண்டு தலையை ஆமையைப் போல் வெளியே நீட்டினான். புதரின் மறுபுறத்தில் ஹாஜி சாயபுவின் இரண்டாம் பீபியின் உருவம் தெரிந்தது. அது துறையில் இறங்கி வருவது போல் இருந்தது. ஆனால் வரவில்லை. கானல் நீர் போலப் பளபளத்தது அந்தத் தோற்றம். பேலுவுக்கு உள்ளே ஏதோ செய்தது.

ஹாயி ஜாதி சர்க்கார் வீட்டார் கழுத்தில் துண்டைப் போட்டுக் கொண்டு கைகளைக் கூப்பிக்கொண்டு நின்றார்கள். எருமை மாட்டின் மாமிசத்தையும் தோலையும் எடுத்துப் போக சீதலட்சா நதியின் மறுகரையிலிருந்து வந்தவர்கள், துறையின் மறுபுறம் நின்றார்கள் வயலுக்கு வயல் உற்சவம்; புதருக்குள்ளே பேலு. அவன் ஹாஜி சாயபுவின் இரண்டாம் பீபியாகிய கானல் நீரைப் பார்க்கும் ஆசையில் கழுத்தை நீட்டிக்கொண்டு நின்றான்.

மாலதி புல்லில் முளையடித்து மாட்டை அதில் கட்டிவிட்டு ஆபூவையும் சோபாவையும் கூட்டிக்கொண்டு டாகுர் வீட்டுப் படித்துறைக்கு அவசர அவசரமாகக் குளிக்கப் போனாள். அமூல்யன் வயலில் வாழை மரத்தை நட்டுவிட்டு வந்திருந்தான். அருகம் புல்லைச் செதுக்கி நாற்புறமும் சுத்தம் செய்து ஒரு பெரிய மரத் தட்டில் உலர்ந்த மாமரச் சுள்ளியையும் வில்வ இலையையும் பறித்து வைத்திருந்தான். இரண்டு மூன்று வயல்கள் தாண்டினால் டாகுர் வீட்டு மனை நிலம். பெரிய மாமியும் தனமாமியும் சீக்கிரமாகவே

குளித்துவிட்டு அங்கே வந்துவிட்டார்கள். சோனு பூஜையறையி லிருந்து மணியடிக்கும் வெண்கலத் தட்டை எடுத்துக்கொண்டு மணியடித்துக்கொண்டே ஓடினுன். குளத்து நீரில் பாசி, ஆம்பல் செடிகள். குளிர்காலமாதலால் மரங்களில் பழம் இல்லை ; பூக்களும் கொஞ்சந்தான் ; தொங்கட்டான் பூ, அரளி, செம்பரத்தை. வாஸ்து பூஜைக்குச் செம்பரத்தை உபயோகிக்கக்கூடாது. வெள்ளை அரளியை யாரோ அதிகாலையிலேயே மரத்திலிருந்து திருட்டுத் தனமாகப் பறித்துக்கொண்டு போய்விட்டார்கள். பெரிய மாமியால் குடலையில் ஒரு சில பூக்கள்தான் சேகரிக்க முடிந்தது ; கொஞ்சம் வெள்ளை அரளி, ஆளிப்பூ, தொங்கட்டான்பூ, கொஞ்சம் மல்லிகைப் பூ. குளிரில் பூக்கள் நன்ருகப் பூப்பதில்லை, சுருங்கிக் கிடந்தன.

ஜாலாலி மற்ற ஏழைபாழைகளுடன் ஏரிக்கு வந்துவிட்டாள். பிரம்மாண்டமான ஏரி ; ஒரு கரையில் நின்றுகொண்டு பார்த்தால் மறுகரை கண்ணுக்குத் தெரியாது. அதைப் பற்றி எவ்வளவோ கதைகள், வதந்திகள். அதன் நாற்புறமும் நாணற்காடு ; இடை யிடையே மணல்மேடு. பல ஏக்கர் விஸ்தீரணமுள்ள நிலப்பரப்பில் ஆழமான, கரு நிற நீர். அதைக் கடப்பதென்ருல் படகில்தான் செல்லவேண்டும். கதைகளில் சொல்வார்கள் – அத்தண்ணீருக்குள் ஒரு ராட்சசன் இருக்கிருன். நிலவு காயும் இரவுகளில் அவனுடைய வயிறும் முதுகும் மயிற்படகு போல இருக்கும். அது படகுபோல் நீரில் மிதக்கும். மனிதர் அரவம் கேட்டால் படகு தண்ணீருக்குள் மூழ்கிவிடும் ! அற்புதச் சம்பவங்கள் உண்மையென்பது படிக்காத மக்களின் நம்பிக்கை.

நள்ளிரவில் ஜனங்கள் தூங்கிக்கொண் டிருக்கும்போது, பத்துக் கோச தூரத்துக்குத் தாழ்நிலம் முழுவதும் நீரில் மூழ்கிக் கிடக்கும் போது, பயிர் வயல்களில் நிலவொளி நிறைந்திருக்கும்போது – நீரில் மயிற்படகு மிதந்துகொண்டு போகும். அதற்குள் ஒரு ராஜ குமாரி இருக்கலாம். சாந்த்பேனேயின் மாற்றுப் பெண் இருக்கலாம். பேஹுலா, லக்கீந்தரின் கதையைச் சொல்லும் பாஞ்சாலிப் பாட்டு மக்களின் உள்ளத்தில் உணர்ச்சியை எழுப்பும்.

மயிற் படகு தண்ணீரில் மிதக்கும்போது ஜகஜ்ஜோதியாக ஜொலிக்கும். ஏரி நடுவே நெருப்புப் பிடித்துக்கொண் டிருப்பது போலத் தோன்றும்.

ஜாலாலி முதலில் தண்ணீரை எடுத்துத் தலைமேல் தெளித்துக் கொண்டாள் ; பிறகு வாயில் ஊற்றிக்கொண்டாள். அப்புறம் தண்ணீரில் இறங்கி உடும்பைப் போல் மிதந்துகொண்டு போனுள். குளிர் நடுக்கியது. ஆனுல் வயிற்றில் தீ - தண்ணீரால் அணைக்க

முடியாத தீ. ஆபேத் அலி போய் ஏறக்குறைய ஒரு மாதமாகி விட்டது. இன்னும் திரும்பிவரவில்லை அவன். வந்தால்தான் என்ன? இரண்டு வாரத்துக்கு வயிறு நிறையச் சாப்பாடு கிடைக்கும். அப்புறம் மறுபடி உபவாசந்தான்.

ஜாலாலி நீரில் மிதந்தாள் மிதந்தவாறே தண்ணீரை வாயில் நிரப்பிக்கொண்டு அதை மேல்நோக்கிக் கொப்புளித்தாள். மற்றவர்கள் நீந்திக்கொண்டு போகும் இடத்தை நோக்கி அவளும் போனாள். பெரிய அல்லிக்கிழங்கென்றால் எல்லாருக்கும் ஆசை. இந்த ஏரியில் என்ன இருக்கிறது, என்ன இல்லை என்று யாருக்கும் தெரியாது. என்னதான் இல்லை! என்னதான் இருக்காது!

ஒரு வருஷம் ஆயிரக்கணக்கான மக்கள் பூரிபூஜா உற்சவத்துக்குப் போய்விட்டுத் திரும்பியபோது ஏரியின் நடுவில் ஒரு கறுப்பு நிற ஸ்தூபி கிளம்பியிருப்பதைக் கண்டார்கள். அது கொஞ்சங் கொஞ்சமாக மேலே கிளம்பிவந்து பிறகு அப்படியே நின்றுவிட்டது. பிறகு மறுபடி கீழே இறங்கி மறைந்து போய்விட்டது. இந்த நிகழ்ச்சியே ஒரு கனவோ என்று நினைக்கும்படியாக அதைப் பார்த்தவர்கள் மந்திரத்தை நம்புவதுபோல் உறுதியாக நம்பினார்கள். பார்க்காதவர்கள் கட்டுக்கதை என்று நினைத்தார்கள். அற்புத நிகழ்ச்சிகளை நம்புபவர்கள் இந்த நிகழ்ச்சியை வைத்துக் கொண்டு இன்னும் பல கதைகளை உருவாக்கியிருக்கிறார்கள்.

ஈசாகான், ஸோனாயி பீபியுடன் அந்தத் தண்ணீருக்குள் ஒளிந்து கொண்டிருக்கிறான். அவனுடைய மயிற்படகின் சுக்கானின் தடிதான் கறுப்பு ஸ்தூபிபோல் தண்ணீருக்கு மேலே எப்பொழுதாவது தெரிகிறது. இவ்வாறு ஈசாகான் தன்னைக் கொஞ்சம் வெளிப்படுத்திக் கொண்டு மறைந்துவிடுகிறான், "பாருங்க, நான் கிழ வயசிலேயும் ஸோனாயி பீபியோடே தண்ணீருக்குள்ளே சுகமா இருக்கேன். நீங்க எனக்குத் தொந்தரவு செஞ்சா, நான் உங்களுக்குக் கஷ்டத்தைக் கொடுப்பேன்" என்று சொல்வதுபோல.

அதனால் ஏரியில் தண்ணீர் பெருகியிருக்கும் பாத்ர மாதத்தில் ஏரி நடுவே யாரும் படகில் செல்வதில்லை. மிகவும் பயங்கரமான ஏரி இது. இதற்கு அடித்தளமே இல்லை. தண்ணீருக்கடியில் தரையே இல்லை. இருளும் பழங்காலச் செடிகொடிகளுமே தண்ணீருக்குள் அமுங்கிக் கிடக்கின்றன. இந்த ஏரியில் யாரும் பாயை விரித்துக் கொண்டு படகு விடுவதில்லை. ஈசாகானின் தூக்கம் கெடாமல் இருப்பதற்காக வெகு நிதானமாக, ஜாக்கிரதையாகப் படகோட்டுவார்கள், படகோட்டிகள்.

இந்தப் பிராந்தியத்து மனிதர்கள் ராட்சசனிடம் பயப்படுவது போல் இந்த ஏரியிடம் பயப்படுவார்கள். ஆனைப்பட்ட ஈசம் கூட

இந்த ஏரிகரையில் வழித் தவறிப் போய்த் திண்டாடிவிட்டான். ஒரு தேவதை அவனை இரவு நேரத்தில் தொடர்ந்து வந்து மயக்கி விட்டது. இந்த ஏரியில்தான் ஏழை மக்கள் வயிற்றுத் தீயைத் தணிக்க இறங்குகிறார்கள்.

வயிற்றுத் தீ பெரிய தீ; தண்ணீரால் அணைக்கமுடியாத தீ. தண்ணீரில் இறங்கிவிட்டாலே தன் வயிற்றுப் பசி அடங்கிவிடும் என்று நினைத்தவள் போல ஜாலாலி தண்ணீரில் நீந்தினாள். அவள் அதிருஷ்டம், தண்ணீருக்கடியில் சேற்றில் கூட அல்லியைக் காணோம். தினமும் பிடுங்கிக்கொண்டு போனால் எப்படி இருக்கும்? சில ஆம்பல் இலைகள் தண்ணீரில் கவிழ்ந்து கிடந்தன. குளிர்காலத்தில் ஆம்பல் பூப்பதில்லை. சில கறுப்புப் பழங்கள் மட்டும் இருந்தன. ஜாலாலி நீந்திப் போய் இரண்டு பழங்களைப் பறித்து, நீந்திக் கொண்டே அவற்றைத் தின்றாள். அதற்குள் கறுப்பு விதைகள், ஏதோ ஒருவித நாற்றம். வாசனை என்று ஒன்றுமேயில்லை. எதை யாவது சாப்பிடவேண்டும் என்பதற்காகத் தான் சாப்பிட்டாள். வயிற்றில் தீ கிளம்பிவிட்டால் எதைச் சாப்பிடுவது என்று மறக்கத் தோன்றும். அல்லிக்கிழங்கைச் சர்க்கரை வள்ளிக்கிழங்கு போல் வேகவைத்து உரித்துச் சாப்பிடவேண்டும். கொஞ்சம் உப்புப் போட்டுச் சில சமயம் ஓர் உருண்டை புளியைப் போட்டு கலந்து சாப்பிட்டால் அமிர்தம் மாதிரி இருக்கும். இந்த ஆசையால் உந்தப்பட்டு ஜாலாலி நீந்தினாள். அவளுக்கு எதிரில் இரண்டு அல்லி இலைகள் தண்ணீருக்குள் அமுங்கியிருந்தன. அல்லிக் கொடியைப் பிடிப்பதற்காக அவள் தண்ணீருக்குள் முழுகினாள். கீழே, இன்னும் கீழே, கொடியை ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டு இறங்கினாள் ஜாலாலி. பலமாகப் பிடித்து இழுத்தால் கொடி கையோடு வந்துவிடும். கிழங்கு கைக்கு வராது. மந்திரச் சுரங்கத்துக்குள் இறங்கிச் செல்லும் படிகளை மேலே இழுத்துக் கொண்டுவிட்டது போல் ஆகிவிடும்.

ஆழத்தில் முழுகுவதற்காக, முழுகி அடியில் கொடியின் வேரைத் தடவித் தேடுவதற்காக அவள் முத்துக் குளிப்பவளைப் போல் ஆழத்தில் அமிழ்ந்துவிட்டாள். தண்ணீருக்கு அடியில் இருந்ததால் ரொம்பப் பயம். பயத்தால் அவள் கண்களைத் திறக்கவில்லை. கண்ணைத் திறந்தால்தான் ஏதோ ஒரு மந்திரலோகத்துக்கு வந்திருப்பதாகத் தோன்றும் அவளுக்கு. தண்ணீருக்கடியில் வளர்ந்திருந்த செடிகள் அசைந்து அசைந்து அவளைப் பயமுறுத்தின. நீலமாகவும் பசுமையாகவும் தோன்றிய இருள் கறுப்பாகி, அவலட்சணமாகி அவளைச் சூழ்ந்துகொண்டது நாற்புறமும். அவள் ஒரு

மூச்சில் கீழே முழுகி மறுவிநாடி மேலே கிளம்பிவந்தாள். எவ்வளவோ காலம் கழித்து ஆகாயத்தையும் சூரியனையும் பார்ப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது அவளுக்கு. கவலையில்லாமல் மூச்சு விட்ட அவளுடைய முகம் மகிழ்ச்சியில் ஜொலித்தது. அவளுடைய கையில், தங்கத்தைவிட மதிப்பு வாய்ந்த ஒரு பெரிய அல்லிக் கிழங்கு இருந்தது.

அவளுடைய கூடையை அலைகள் சற்றுத் தூரம் தள்ளிப் போயிருந்தன. அவள் கூடையைத் தன்னருகில் இழுத்துக்கொண்டு அல்லி வேர்களைக் கடித்தெறிந்துவிட்டுப் பார்த்தபோது கிழங்கு அப்படியொன்றும் பெரிதாக இல்லை என்று கண்டாள். இது சிவப்பு வகை. மஞ்சள் வகையாயிருந்தால் கிழங்கு நல்ல தித்திப்பாக இருக்கும். வெள்ளை ரகம் துவர்க்கும். சிவப்பு ரகத்தில் ஒரு சிறு கசப்பு இருக்கும். அவள் கிழங்கை நன்றாகக் கூடையில் வைத்துவிட்டுக் கரைப்பக்கம் திரும்பிப் பார்த்தாள். கரையில் யாரும் இல்லை. எல்லாரும் அல்லிக்கிழங்கைத் தேடிக்கொண்டு ஜலத்தில் இறங்கிப் போய்விட்டார்கள். ஆபேத் அலி இன்னும் வரவில்லை. கொய்னுப் படகில் வேலைக்குப் போனவன் இவ்வளவு நாளாகியும் இன்னும் திரும்பவில்லை. ஜப்பரும் வருவதில்லை. அவன் பாபுர் ஹாட்டில் நெசவு வேலைக்குப் போய்விட்டான் ஜோட்டன், ஆபேத் அலிக்காக ஒரு கோழி கொண்டுவந்திருந்தாள். அது ஹாஜிசாயபு வீட்டுக்குப் பறந்துபோய்விட்டது. அவருடைய சிறிய பீபி அதைக் கொன்று சாப்பிட்டுவிட்டாள்.

நாலாப் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும் ஏழை மக்கள் தண்ணீரில் இறங்கி அல்லிக்கிழங்கு தேடினார்கள். பொழுது சாய்வதற்கு முன் அவர்கள் தண்ணீரை விட்டு எழுந்து போய்விடுவார்கள். குளிர்கால முடிவில் அல்லி இருக்காது; ஆம்பல் இலைகள் தண்ணீரில் மிதக்காது. ஏரி நீர் அமைதியாக, சலனமற்று இருக்கும். அப்போது புதர்களிலும் தண்ணீரிலும் கறுப்பு வாத்துக்கள் நடமாடும். பல ரகப் பறவைகள், சிவப்புச் சிறகுகள், நீலச் சிறகுகள் கொண்ட பறவைகள், ஜலப் பிபி பறவைகள், வித விதமான கொக்குகள்—இவற்றின் கீச்சுக்குரல் ஏரியை நிரப்பிவிடும். அப்போது மூடாபாடா ஜமீன்தார் வீட்டுப் பையன்கள் யானையிலேறி வருவார்கள். ஏரி கரையில் கூடாரம் அடித்துக்கொண்டு காலையிலும், இரவில் நிலாவிலும் பறவைகளை வேட்டையாடி அவற்றின் இறைச்சியைச் சாப்பிடுவார்கள். குளிர்கால முடிவில் ஒரு மாதத்துக்குமேல் இந்த மாதிரி வனமகோற்சவம் கொண்டாடுவார்கள்.

கோடைக் காலந்தான் ஜாலாலிக்கு மிகவும் கஷ்டமான காலம். அநேகமாக எல்லா நேரமும் வயிற்றைத் தரையில் அழுத்திக்

கொண்டு படுத்திருக்க வேண்டியிருக்கும். மழை வந்துவிட்டால் நெல் வயலிலும் சணல் வயலிலும் ஆபேத்அலிக்கு வேலை கிடைக்கும். மழை வந்தால், சாப்பிட வழியில்லாத ஏழைகளின் ஒரே ஆதாரமான அல்லியும் ஆம்பலும் பூமியில் தோன்ற ஆரம்பிக்கும். மழைக்கால முடிவில் அவை பூக்கும். தண்ணீருக்கடியில் கிழங்கு, அவர்களுக்கு மிகவும் பிடித்தமான, சாதத்தைப் போன்ற உணவு கிடைக்கும். தண்ணீருக்கு அடியில் உள்ள அல்லிக்கிழங்கு மிகவும் மதிப்பு வாய்ந்த பொருள்; அதை அலட்சியம் செய்யக் கூடாது. சும்மா உட்கார்ந்திருந்தால் பாவம். அல்லிக் கிழங்கைத் தேடிக்கொண்டு தண்ணீரில் மிதந்தால் புண்ணியம். ஜாலாலி கூடையைக் கையால் பிடித்துக்கொண்டு மிதந்தாள். அவள் முழுகினல் யாராவது கூடையிலுள்ள கிழங்கை எடுத்துக்கொண்டு விடுவார்கள்.

எதிரில் ஒரே தண்ணீர், எல்லையற்ற தண்ணீர். அல்லிக்கிழங்கு ஆசையில் அவள் வெகுதூரம் வந்துவிட்டாள். இனிமேல் கிழங்கு இருக்காது போலிருந்தது. வலப் பக்கம் தாமரை காடாக வளர்ந் திருந்தது. இடப் பக்கம் படிகம்போல் தெளிந்த நீர். எதிரில் தண்ணீரில் ஏதேதோ மிதந்து திரிந்தன. பெரிய கஜார் மீனுக இருக்கும். தூணைப் போல் நீளமான, பெரிய பெரிய மீன்கள். பளபளப்பான கறுப்பு நிறம், வாயிலும் தலையிலும் சிந்தூர் தடவியது போல் சிவப்பு. உடலில் மலைப் பாம்புக்கு இருப்பது போல் வளையங் கள். அவளுக்குப் பயமாக இருந்தது. பயத்தாலோ, திகைப்பாலோ வேறு யாரும் இவ்வளவு தூரம் வரவில்லை. எவரும் வராததால்தான் இந்தப் பக்கம் இன்னும் கொஞ்சம் அல்லி இருக்கிறது. அவள் பயத்திலிருந்து தப்புவதற்காகக் கண்களை மூடிக்கொண்டு நீரில் முழுகினுள். ஆனல் தண்ணீருக்குள் கண்ணைத் திறந்தபோது ஒரு பெரிய கஜார் மீன் அவளையே பார்த்துக்கொண் டிருப்பதைக் கண் டாள். அது சலனமற்று இருந்தது; வாலை மட்டும் ஆட்டியது. ஓர் அபூர்வ ஜந்து-மீன் வகையைச் சேர்ந்ததாகத் தோன்றியது. தவளையைப் போல் தண்ணீருக்குள் இறங்கி வந்தது. எவ்வளவோ காலமாக அங்கு வளர்ந்திருக்கும் நீர்ப்புல், நீர்க் கொடிகளுக்குள் ளிருந்து அது தன் முகத்தை மாத்திரம் வெளியே நீட்டிக்கொண் டிருந்தது. ஜாலாலியால் அதன் முகத்தை மட்டுமே பார்க்க முடிந் தது. தன் பயங்கரமான, கறுத்த வாயைத் திறந்து, தண்ணீரை குடித்து விட்டு வாயை மூடிக்கொண்டது. அது ஜாலாலியைக் கண்டு பயப் படவில்லை; மாருக அவளையே பயமுறுத்தியது.

வயிற்று நெருப்பு பெரிய நெருப்பு, தாங்க முடியாத நெருப்பு.

பயத்தாலும் திகைப்பாலும் சுருங்கிப் போய்விட்டாள் ஜாலாலி. அவள் இன்னுங் கொஞ்சம் கீழே இறங்கினால் அவளுடைய கை மண்ணைத் தொட்டுவிடும்; அல்லிக்கிழங்கும் அவள் கைக்குக் கிட்டி விடும். ஆனால் மூச்சுப் பிடிக்க முடியவில்லை அவளால். அவள் மூச்சு விடுவதற்காகத் தண்ணீருக்கு மேலே வந்தாள். மூச்சு விட்டாள். தண்ணீரில் மிதந்து சற்று இளைப்பாறினாள். மீண்டும் நீருக்குள் மூழ்கிய அவள் பசுமை நிரம்பிய ஒரு தேசத்தைக் கண்டாள். நீல நீர் அங்கே கம்பளமாக விரிந்து கிடந்தது. இருட்டு அடர்ந்துகொண்டு வந்தது. அவளுடைய கை அல்லிக்கொடியின் அடியை எட்டிவிட்டது. கொடி மண்ணிலிருந்து வெளிப்படும் இடத்தைத் தொட்டுவிட்டது. மீன் வாயைத் திறந்துகொண்டு தன் பக்கம் நெருங்கி வருவதை இருட்டிலும் கவனித்தாள் ஜாலாலி.

பிரம்மாண்டமான மீன். எவ்வளவு பிரம்மாண்டமாக இருந்தால் என்ன? மீன் மீன்தானே! ஒரு மீன், ஒரு சாதாரண மீன். 'நீ எவ்வளவு பெரிசாக இருந்தா என்ன, மனுஷியா பிறந்த நான் உனக்குப் பயப்படுவேனா?'

இம்மாதிரி ஏதோ நினைத்துக்கொண்டு அவள் அல்லிக்கொடியின் வேரை இறுகப் பிடித்தாள். மீன் பசும்புல்லுக்கு நடுவிலிருந்து கொண்டு அவளைப் பார்த்தது; பார்த்துக்கொண்டு மெதுவாக வாயை அசைத்தது. அல்லிவேரைப் பிடித்துவிட்டதில் ஜாலாலிக்குத் தைரியம் அதிகரித்தது. அவள் இன்னும் சற்று முன்னேறினாள். மீன் சற்றுப் பின்வாங்கியது. அவள் அப்புறம் தாமதிக்கவில்லை. மீன் எப்போது பயந்துவிட்டதோ இனிமேல் தண்ணீரில் அமுங்கிக் கிடப்பானேன்? அவள் சட்டென்று மல்லாந்துகொண்டு முதலையைப் போல் மேலே மிதந்துவந்தாள்.

எவ்வளவோ நாட்களுக்கு முன், தான் மாலதியின் ஆண் வாத்தைத் திருடி அதன் கழுத்தைத் திருகியது, இரவில் அதை வாட்டி அதன் மிருதுவான மாமிசத்தை சுவைத்துச் சாப்பிட்டு ஏப்பம் விட்டது, அல்லாவின் உலகம் இனிமை நிறைந்ததுதான் என்று நினைத்தது, இவை எல்லாம் அவளுக்கு இப்போது நினைவுக்கு வந்தன. இந்த மீன் அந்த வாத்தை நினைவுறுத்தியது. இதன் கண்ணும் எப்போதும் தண்ணீருக்குள் அசையாமல் இருந்தது. ஒரு பெரிய மலைப்பாம்பு தன்னை விழுங்க வருவதாக எண்ணினாள் அவள். ஆனால் பாம்பா யிருந்தால் இத்தனை நேரத்துக்குள் தண்ணீரை வாலால் அடித்து அடித்துக் கொம்மாளம் போட்டிருக்கும். இந்த மாதிரி அமைதியாக இருக்காது. தன் பயம் கற்பனையே என்று நினைத்தாள் அவள்.

அவள் கண்களை திறந்தால் தண்ணீரிலிருந்த செடி கொடிகள் உயிர் பெற்று அவளை நோக்கிப் பாய்ந்து வருவதுபோல் இருந்தது. ஆகையால் அவள் கண்களைத் திறக்க விரும்பவில்லை.

பச்சையான கடப்பம்பூவை ஒத்த புற்களிடையே அவளை நோக்கி வருவது என்ன என்று அவளுக்குத் தெரியவில்லை. அவள் மூழ்கி மூழ்கித் தண்ணீருக்குள் போனாள். முத்துக் குளிப்பவள் போல் அவள் மூழ்கினாள், மேலே வந்தாள். கரையில் நின்றுகொண்டு பார்த்தால் ஏராளமான மனிதர்கள் தண்ணீருக்குள் முழுகுவதும் பிறகு மேலே வருவதும் தெரியும். அவர்களுக்குச் சிலசமயம் அல்லி கிடைக்கும், சிலசமயம் கிடைக்காது. எப்போது கிடைக்கும் என்று யாருக்கும் தெரியாது. எல்லா அல்லி வேரிலும் கிழங்கு இருப்பதில்லை. கிழங்கு தேடுபவர்கள் ஏரியெங்கும் பரவி இருந்தார்கள். சூரியன் உயரே வந்துவிட்டான். கண்ணைத் திறந்து பார்த்தால் வெகுதூரத்துக்குச் சலனமற்ற நீர், குளிர்ச்சியான வீடு போல் தெரிந்தது. மறுபக்கம் கண்ணுக்குத் தெரியவில்லை. எல்லையற்ற நீர் எவ்வளவோ காலமாக, பலவிதக் கதைகளைச் சுமந்துகொண்டு கிடந்தது அங்கே. குளிர் காலத்தில் அந்தத் தண்ணீர் இன்னும் கறுப்பாகிவிடுகிறது. குளிர் காலத்தில் சுற்றுப்புறத்திலுள்ள நாணற் புதர்களில் வசிக்கும் பறவை கள் வேறெங்கோ பறந்து போய்விடும். தண்ணீர் சற்று வடிந்தால் விஷப் பாம்புகள் அந்தப் புதர்களில் பொந்துகளுக்குள் குளிருக்குச் சரணடையும். வெயிலுக்காக, மழைக்காகக் காத்திருக்கும் அவை. மழை வந்துவிட்டால் அல்லது வசந்த காலத்தில் சூரியன் உச்சி வானத்தில் பிரகாசிக்கும்போது அவை நிலத்திலிருந்து தண்ணீருக்குள் இறங்கிவிடும். தூரத்திலுள்ள சாலமரக் காட்டிலிருந்து கூடச் சில மயால் பாம்புகள் இந்தத் தண்ணீருக்கு வந்துவிடும்.

ஜாலாலி ரத்தச் சிவப்பான இரண்டு கண்கள் தன்னையே எப்போதும் பார்த்துக்கொண் டிருப்பதைக் கவனித்தாள். நீரின் ஆழத்தில் ஒரே இருட்டாக இருந்ததால் ஒன்றும் தெளிவாகத் தெரிய வில்லை. அந்த நீல நிற, பச்சைநிறப் புதர்களில் இரண்டு அல்லிக் கிழங்கு கிடைக்காதா என்ற ஆசையில் ஜாலாலி கறுப்பு வாத்தைப் போல் நீரில் முழுகியவாறே அந்தச் சிவப்புக் கண்களுடன் மரண விளையாட்டு விளையாடினாள்.

அப்போதும் பேலு புதருக்குள் படுத்துக் கிடந்தான். ஹாஜி சாயபுவின் பீபி கானல் நீராகத் தெரிந்தாள், வரவில்லை. வந்தால் சட்டென்று அவளைப் பிடித்துப் புதருக்குள் இழுத்துக்கொண்டு விடுவான். சகடமர நிழலில் பீபியின் உருவம் தெரிகிறாற்போல் இருந்தது, தெரியவில்லை. வெயில் தலையுச்சிக்கு வந்துவிட்டது.

பீபியின் முகத்தையோ தேகத்தையோ பார்க்க முடியவில்லை வாஸ்து பூஜையில் ஒலித்த மேள, தம்பட்ட ஒலிகள் எப்போதோ நின்றுபோய்விட்டன. குளத்தங்கரையில் பெரிய மாமி. சோனு வயலில் நின்று மணியடித்துக்கொண்டே இருந்தான்.

உற்சவம் முடிந்துவிட்டது. இப்போது எல்லோரும் எள்ளு, துளசி, பெரிய மரத்தட்டு, நைவேத்தியச் சாமான்கள், எள்ளுருண்டை, கத்மா எல்லாவற்றையும் வீட்டுக்கு எடுத்துப் போகவேண்டியதுதான். தன மாமி வெள்ளைக் கல்ஜாடியில் பாயசம் எடுத்துக்கொண்டு போனாள். ரஞ்சித், பூ பழம், புதிய துண்டு, தேங்காய் இவற்றை எடுத்துக்கொண்டு போனான். வயலிலேயே பிரசாத விநியோகம் நடந்தது. கிராமத்து இளைஞர்கள், பெண்கள், கிழவர்கள், குழந்தைகள் எல்லாரும் பிரசாதம் வாங்கிக்கொண்டு போனார்கள். இன்று இரவு பூராவும் பெட்ரோமாக்ஸ் விளக்குகள் எரியும். சர்க்கார் வீட்டார் குளத்தங் கரையில் நாலைந்து பெட்ரோமாக்ஸ் விளக்குகளை எரிய விடுவார்கள். வெவ்வேறு இடங்களில் விளக்குகள் எரிந்துகொண் டிருக்கும். இரவு பூராவும் கிராமமே வெளிச்சத்தில் மூழ்கிக் கிடக்கும். ஆட்டு மாமிசம், பச்சரிசிச் சோறு இவற்றின் வாசனை எங்கும் பரவும். பேலுவின் நாக்கில் ஜலம் ஊறியது.

ரஞ்சித் வேறொரு வயலில் மாலதி இருப்பதைக் கண்டான். அவள் ஏதோ வேலையாக இருந்தாள். அவள் சிலபேரை உட்கார வைத்து அவர்களுக்குக் கிச்சடியும் பாயசமும் பரிமாறினாள். குளிர்கால வெயில் இதமாக இருந்தது. வாடைக் காற்றில் நல்ல குளிர். எல்லாரும் வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு வயலில் புல்லின்மேல் படுத்துக்கொண்டு குளிர் காய்ந்தார்கள்.

சோனு மணியடிக்கும் வெண்கலத் தட்டைக் கீழே போட்டுவிட்டு ஓடினான். படுகையில் ஆடு மேய்க்க வந்த பாதிமா அவனை ஜாடை காட்டிக் கூப்பிட்டாள். அவள் ஓர் ஆமையைப் பார்த்து விட்டாள்; அதைப் பிடிக்கத்தான் சோனுவைக் கூப்பிட்டாள். இது குளிர் காலம். குளிர் காரணமாக, ஆமைகள் வெகுநேரம் தண்ணீரில் இருக்க முடியாது. அவை கரைக்கு வந்து குளிர் காயும்; அல்லது பூமிக்குள் புதைந்திருக்கும். ஆமைகள் வயல் உழப்படும் போது வெளியில் வந்துவிடும்.

ஆனால் பாதிமா சோனுவுக்கு ஆமையொன்றையும் காட்டவில்லை. அவள் சோனுவை அரசமரத்தடிக்கு இழுத்துக்கொண்டு போனாள். "புதருக்குள்ளே என்ன இருக்கு, பாரு!" அது பைத்தியக்கார டாகுராக இருக்குமென்று பாதிமா நினைத்தாள். சோனுவின் பைத்தியக்காரப் பெரியப்பா சிலசமயம் ராத்திரி வேளையில், சில சமயம் அதிகாலையில்,

வீட்டைவிட்டுக் கிளம்பி வயல்களை கடந்து, ஸோனலிபாலி ஆற்றையும் தாண்டி எங்கோ போய்விடுவார். அவர்தாம் இன்று வெகுதூரம் போகாமல் அரசமரத்தடியில் மட்கிலாச் செடிபுதருக்குள் உட்கார்ந்துகொண்டு பறவைகளுடன் பேசிக்கொண் டிருக்கிறார் என்று நினைத்தாள் பாதிமா. புதருக்குள் இருப்பது பைத்தியக்கார டாகுர் அல்ல, பேலுஷேக் என்று அவளுக்குத் தெரியவில்லை. பேலுஷேக் புதருக்குள் ஒளிந்துகொண் டிருந்தான் – தன் உயிரை விடப் பிரியமான, மரணத்திலும் தன்னால் மறக்க முடியாத, ஹாஜிசாயபுவின் இரண்டாவது பீபியைப் பிடித்திழுத்துப் புதருக்குள் கொண்டு வருவதற்காக.

சோனா புதருக்குள் எட்டிப் பார்த்து, "பெரியப்பா!" என்று கூப்பிட்டான். அங்கு இருப்பது அவராகவே இருக்கும் என்று அவனும் நினைத்தான். இந்தப் பிராந்தியத்திலேயே அவர் ஒருவருக்குத்தான் வயல்கள், மரங்கள், செடிகொடிகள், திருவிழா எல்லாம் ஒன்று.

தான் எவ்வளவு நேரமாக அங்கே காத்துக்கொண் டிருக்கிறோம் என்று பேலுவுக்கே தெரியவில்லை. யாரோ வெளியிலிருந்து கூப்பிட்டதைக் கேட்டதும் பேலுவின் கால்கள் புதருக்கு வெளியே தெரிந்தன. அதைப் பார்த்துத்தான் உள்ளே யாரோ இருப்பது அவர்களுக்கு தெரிந்தது. அவர்கள் தவழ்ந்துகொண்டு புதருக்குள் நுழைந்தார்கள். முதலில் சோனா, பின்னால் பாதிமா. பேலு அவசர அவசரமாக எழுந்தான். ஓடிப் போய்விடலாமா என்று நினைத்தான். அப்படி ஓடினால் அகப்பட்டுக்கொள்ள நேரலாம். அவன் கெட்டுப் போன எதையோ புதருக்குள் தேடிக்கொண் டிருப்பதாகப் பாவனை செய்தான்.

இவ்வளவு ரசனையற்ற ஒரு மனிதன் இருக்க முடியும் என்றே சோனாவும் பாதிமாவும் நினைக்கவில்லை. "நீங்களா?" என்று கேட்டான் சோனா.

"ஆமா, ஒரு வேர் தேடறேன்."

"எதுக்கு?"

"அரைச்சுக் கையிலே போட்டுக்க."

"கிடைக்கல்லியா?"

"இல்லே. வேரெல்லாம் எங்கேயோ மறைஞ்சுக் கிடக்கு."

இப்படிச் சொல்லிவிட்டுப் பாதிமாவை முறைத்துப் பார்த்தான் பேலு. அவன் மனசுக்குள் முணுமுணுத்துக் கொண்டான், சாமு இந்தப் பொண்ணுக்கு ரொம்பச் செல்லம் கொடுக்கறான். அவளுக்கு இங்கிலீஷ் கத்துக் கொடுக்கறான். இந்த அநாசாரம் பேலுவுக்குப் பிடிக்கவில்லை. பைத்தியக்கார டாகுரின் முகம் அவன் மனசுக்கு

முன்னே வந்தது; வந்ததுமே ஆத்திரம் பிறந்தது. தன் கையைப் பார்த்துக்கொள்ளும்போது அவன் அடையும் துக்கத்துக்கு எல்லை இல்லை. செல்வாக்குக் குறைந்து வந்தது. அவனுடைய பீபி ஆன்னு எண்ணெய் கடன் வாங்கப் போகும் சாக்கில் ஹாஜிசாயபுவின் சின்ன பீபியிடம் போய்விட்டாள். சின்ன பீபியிடந்தான் போனளோ, சின்ன பாபுவிடந்தான் போனளோ? இன்னும் திரும்பவில்லை.

பீபியின் நினைவு வந்ததும் அவன் சீக்கிரம் போக நினைத்தான். சீக்கிரம் போவதென்றால் பெரிய தோப்பின் வழியேதான் போக வேண்டும். வேறு வழி கிடையாது. வெறும் மூங்கில் காடு, சில பிரம்புச் செடிகள், ஒரே இருட்டு. பகல் வேளையில் அங்கே நடந்து போகவே பயமாயிருக்கும். பக்கத்தில்தான் கிராமத்து இடுகாடு.

பேலு வேகமாக நடந்தான். இடக் கையில் கொஞ்சங்கூடச் சக்தி இல்லை. மந்திரித்த சோழி தொங்கியது அதில். அவனுடைய பீபி இன்னும் தன் ஜோடியுடன் திரிந்துகொண் டிருந்தாள். அவனுக்கு அவள் வயிற்றில் உதைக்கவேண்டும் போல் இருந்தது. அவனுடைய உடலும் பற்களும் இறுகிக்கொண்டன. தன் பீபி அப்போதுதான் தோப்பிலிருந்து வெளியே வருவதை அவன் கண் டான். ஆனல், 'இந்தக் கை, இந்தக் கை!' கை வழங்காமற் போன தால் அவளை ஒன்றும் செய்ய முடியவில்லை அவனல். அவள் தோப்பிலிருந்து வெளிப்பட்டதுமே அவன் பயங்கரமாக, "ஆன்னு, நீயா?" என்று கத்தினன்.

ஆன்னு நிற்கவில்லை. இப்படிப்பட்ட மனிதனிடம் அவளுக்கு என்ன பயம்? அவள் அவனைத் தாண்டிக்கொண்டு போனள். "நீ என்ன மனிசன்! நான் உன்னைக் காக்கா விரட்டச் சொன் னேன்; நீ என்னடான்ன தோப்புலே சுத்தறே."

"நீ தோப்புலே என்ன பண்றே?"

"உன்னேடே சேர்ந்திருக்கணுமின்னு உன்னைத் தேடிக்கிட் டிருக்கேன்!"

உம், அவனேட பீபி கூட அவனை இளக்காரம் பண்ணக் கற்றுக்கொண் டிருக்கிறள். யாரை உதைப்பான் அவன்? தன்னுடைய வயிற்றிலேயே உதைத்துக்கொள்ள வேண்டியதுதான்! அவன் தன் வயிற்றிலேயே உதைத்துக்கொள்ள விரும்பினன். அவன் மனைவிகூட அவன் கையாலாகாதவன் என்று தெரிந்துகொண்டு விட்டாள். இப்போது யார் யாருடைய வயிற்றில் உதைப்பது? அவள் தோப்பில் ஒளிந்துகொண்டு என்னவெல்லாமோ செய்கிறள். கடவுளால் கூட அவளைக் கண்டுபிடிக்க முடியாது. பேலு புகார் செய்யும் குரலில், "எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நீ நினைச்சுக்கிட்டிருக்கே! நாசமாப் போன காக்கா!" என்று கத்தினன்.

அவள் பதிலடி அடித்தாள். ''எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நீ நினைச்சுக்கிட்டிருக்கே!''

''நீ பருவப் பொண்ணு, உனக்குத் தெரியாதது உண்டா?'' என்று சொல்லி நிறுத்திக்கொண்டான் பேலு.

சற்றுத் தூரத்தில் சோனுவும் பாதிமாவும் பலாமரத்தடியில் நின்றார்கள். சோனு பலா இலைகளையும் கிளைகளையும் வெட்டிப் பாதிமாவின் ஆட்டுக்குப் போட்டான். பேலு ஆன்னுவோடு சண்டை போட்டால் அந்தச் சத்தத்தில் அவர்கள் இங்கே வந்து விடுவார்கள். வந்தால் இங்கு நடந்த விஷயம் அம்பலமாகிவிடும். அவன் அரசமரத்தடியில் புதருக்குள்ளே ஹாஜிசாயபுவின் இரண் டாவது பீபிக்காகக் காத்துக்கொண் டிருந்தது, ஆன்னுவுக்குத் தெரிந்துவிடும். அவன் ஆன்னுவின் உடலிலிருந்து வந்த மீன் நாற்றத்தை இந்தத் தடவை பொறுத்துக்கொண்டான். அவன் கத்தினான்: ''குளிச்சுட்டு வீட்டுக்குள்ளே வரணும்! இல்லியோ, எனக்காச்சு, உனக்காச்சு, பார்த்துடுவோம்!''

ஆன்னுவின் அடங்காப்பிடாரிதனத்தைப் பொறுத்துக்கொள்ள நேர்ந்ததில் அவனுக்கு ஏற்பட்ட கோபம் பைத்தியக்கார டாகுரின் மேல் பாய்ந்தது.

'அந்தப் பாவி யானை மேலே ஏறி அவனோட ரெண்டு கையையும் ஒடைச்சுட்டு மைதானத்திலே ஹாய்யாப் பறவை ஓட்டறான், காத்தை ஊதிக்கிட்டுப் போயிக்கிட்டிருக்கான். அந்த ஆள் மட்டும் ஆப்புடட்டும், அவனைக் கொல்லாமெ விடப்போறதில்லே!'

கோபமும் ஆக்ரோஷமும் பேலுவைக் குதறிப் பிடுங்கின. எண் ணெய் கடன் வாங்கிக்கிட்டு வரேன்னு, ஆன்னு அவனை மீன் வத்தலுக்குக் காவல் வச்சுட்டு, இங்கே தோப்புக்குள்ளே என்ன செஞ்சுக்கிட்டிருந்தான்னு அவனுக்குத் தெரியும்.

தன் இரண்டு கைகளையும் மேலே தூக்கிப் பார்த்தபோதுதான் எவ்வளவு கையாலாகாதவன் என்று பேலுவுக்குப் புரிந்தது. முரட்டுப் பொண்டாட்டியோட அவனால் இந்த ஜன்மத்துலே சண்டை போட முடியாது. முடிந்திருந்தால் இந்த இருட்டுத் தோப்புக்குள்ளே அவளோட ஒரு பெரிய யுத்தமே பண்ணியிருப் பான். வேறு வழியின்றி, அவன் சாதுவாக ஆன்னுவைத் தொடர்ந் தான், அவர்களிடையே எந்தவிதச் சச்சரவும் இல்லாதது போல. அவர்கள் எங்கேயோ விருந்துக்குப் போய்விட்டு அந்தத் தோப்பு வழியே வீடு திரும்புவதுபோல் சாதுவாக நடந்தான்.

இன்னும் மேளம், தம்பட்டம் முழங்கின. மாலதி வயலில் பிரசாதம் கொடுத்துக்கொண் டிருந்தாள். காகிதத்தால் செய்த சிவப்பு, நீலநிறக் கொடிகள் காற்றில் அசைந்தன. வெள்ளைப்

பட்டுப் புடைவை கட்டிய மாலதி, ஆசாரமும் அனுஷ்டானமுமே கதியாக இருக்கும் மாலதி, எல்லாரையும் போல் வாத்து வளர்க்கும் மாலதி, ஆண்வாத்தின் மேல் தனக்கிருந்த பாசத்தால் இரவு முழுதும் மழையில் நனைந்துகொண்டே அதைத் தேடிய மாலதி — யுவதி மாலதி எல்லாருக்கும் பாயசம் கொடுத்துக்கொண் டிருந்தாள்.

சோனு பலாமரக் கிளையின் மேல் உட்கார்ந்திருந்தான். பாதிமா விஷமக்கார வண்ணத்துப் பூச்சியைப் போல் மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து குதித்தாள். சோனு பலாமரக் கொப்புகளை ஒடித்து ஆட்டுக்குப் போட்டான். ஆடு அவற்றைக் கவ்வுவதற்காகத் தன் பின்னங்கால்களால் நின்றுகொண்டு குதித்தது. அதன் மகிழ்ச்சியைப் பார்த்துச் சோனு இளந்தளிர்களைப் பொறுக்கிப் பொறுக்கி அதற்குப் போட்டான். இப்போது அதற்குப் பக்கத்தில் இலைகளும் கிளைகளும் குவிந்துவிட்டன. சோனு மரத்திலிருந்து குதித்தான். குதித்ததும் பாதிமா அவனுடைய காதில் கிசுகிசுத்தாள்: "வரீங்களா, சோனு பாபு?"

"எங்கே?"

"மகிழம்பழம் பொறுக்க."

"எவ்வளவு தூரம்?"

பாதிமா விரலை நீட்டிக் காண்பித்தாள். "ரொம்பத் தூரமில்லே. அதோ பாருங்க, ஹாஸான் பீரோட தர்கா. அதோட வலப் பக்கத்து மேட்டிலே குளம், அந்தக் குளத்தங்கரைக்குப் போகணும்."

"சித்தப்பா வைவாரே!"

"இதோ வந்துடலாம்! ஒரு ஓட்டத்திலே போவோம், ஒரே ஓட்டத்திலே திரும்பிடுவோம்."

சோனு நாற்புறமும் திரும்பிப் பார்த்தான். விசேஷ தினமானதால் யாரும் அவர்களைக் கவனிக்கவில்லை. லால்ட்டுவும் பல்ட்டுவும் பாபுவுடன் ஹோமத்துக்கு ஹவிஸ் சமைக்கப் போயிருந்தார்கள். மாமா சர்க்கார் வீட்டு வாஸ்து பூஜைக்குப் போயிருந்தார். சோபா, ஆபு, கிரணி எல்லாரும் பிரசாதம் சாப்பிட்டுவிட்டுத் திரிந்து கொண்டிருந்தார்கள். விசேஷ நாளில் யார் எங்கே இருக்கிறானென்று யார் கவலைப்படுவார்கள்? பைத்தியக்காரப் பெரியப்பா அதிகாலையில் எந்தப் பக்கம் போனுரென்று யாருக்குமே தெரியாது. அவன் திரும்பிவர நேரமானுல் எல்லாரும் அவனும் அவருடன் போயிருப்பதாக நினைத்துக்கொண் டிருப்பார்கள். சோனு 'போம். போம்' என்று வாயால் சப்தம் செய்துகொண்டு பாதிமாவுடன் மைதானத்தில் ஓடினுன். பெரிய மைதானம். வடக்கே போனுல், ஹாஸான் பீருடைய தர்கா. கோபால் டாக்டர் அந்தப் பக்கமாக

சைக்கிளில் வந்தார். அவர் கண்ணில் படாதிருப்பதற்காக அவர்கள் இருவரும் ஒரு பள்ளத்தில் ஒளிந்துகொண்டார்கள். இருவரும் கால்களைக் குற்றிக்கொண்டு தலைகுனிந்து உட்கார்ந்திருந்தார்கள். அவனும் பாதிமாவும் தனியாக மைதானத்தில் சுற்றுவதைக் கோபால் டாக்டர் பார்த்துவிட்டால் ஆபத்துத்தான்! "சோனு, நீ நேத்திப் பய! இவ்வளவு பெரிய மைதானத்துலே இந்தப் பொண்ணோடே சேர்ந்துக்கிட்டு தனியா சுத்தறியே, என்ன தைரியம் உங்களுக்கு! போங்க போங்க, வீட்டுக்கு ஓடிப் போங்க!" அல்லது கோபால் டாக்டர் வீட்டில் போய்ச் சொல்லிவிடுவார். ஈசம் அவனுக்குப் பிரியமான தர்மூஜ் வயலை விட்டுவிட்டு அவனைத் தேடிக்கொண்டு ஓடிவருவான்; "எங்கே போனீங்க. சோனு பாபு! சோனுபாபு!" என்று கூப்பிடுவான்.

முன்பு ஒரு நாள் சோனு தனியே தர்மூஜ் வயலுக்குப் போனான். எவ்வளவோ நாளுக்கு முன்பு. ஆனால் இன்னும் நினைவு வருகிறது, அந்த வயல், மாலினி மீன், பெரிய மியானின் இரண்டு பீபிகள், துர்க்கையைப் போன்ற முகம், மூக்கில் மூக்குத்தி தொங்கியது. எல்லாவற்றிலும் ஒரு மர்மக் கவர்ச்சி. அந்தக் கவர்ச்சிக்கு ஆசைப்பட்டு ஓடினான் சோனு. பாதிமா தன் துணியை மடித்துக் கட்டிக்கொண் டிருந்தாள். அவளுடைய மேலுடம்பு காலியாக இருந்தது. மூக்கில் மூக்குத்தி தொங்கியது. காதில் பித்தளை டோலாக்கு. மூக்கின் நடுத் தண்டில் தங்கத்தாலான மூக்குத் திருகாணி. திருகாணியின் தலை சந்திரன் மாதிரி சப்பட்டையாக இருந்தது. சோனு இந்தச் சப்பட்டைச் சந்திரன் பாதிமாவின் மூக்குத் தண்டில் எப்படி ஒட்டிக்கொண் டிருக்கிறது என்று அதைத் தொட்டுப் பார்த்தான். சோனுவின் வாசனை பாதிமாவுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் உடம்பில் சந்தனத்தின் மணம், தலையில் தேய்த்திருந்த எண்ணெயின் வாசனை. சோனு பாதிமாவின் மூக்கை மடக்கி அதில் ஒட்டிக்கொண் டிருந்த சப்பட்டைச் சந்திரனைப் பார்த்தான்.

பாதிமாவின் உடம்பு சந்தோஷத்தில் சிலிர்த்தது. அவள் சொன்னாள்; "நாம போகலாம், வாங்க. கோபால் டாக்டர் போயாச்சு. தூரத்தில் கோபால் டாக்டரின் சைக்கிள் மணியோசை கேட்கிறது. வயல்களில் பயிர் இல்லை. காலி நிலத்தில் சில சில இடங்களில் மட்டும் சிறு புதர்கள் இருக்கின்றன. இப்போது ஓடிப் போய்விடலாம்."

அவர்கள் ஓடும்போது குளத்தங்கரைக்குக் கீழ்ப் பக்கத்து வயலில் பைத்தியக்கார டாகுரைப் பார்த்தார்கள். அவர் வேகமாக

ஏரிப்பக்கம் நடந்து போய்க்கொண் டிருந்தார். சோனு தானே அவரைக் கண்டுபிடித்துவிட்டது போல் அவரைக் கூப்பிட்டான், உரத்த குரலில்.

தம்பட்டங்கள் முழங்கின. அவனுடைய கூப்பாடு கேட்காமல் அவர் வேகமாக நடந்தார். வாஸ்து பூஜைக்காக எருமையைப் பலியிடப் பயன்படுகிற அரிவாளில் ரத்தம் சொட்டிக்கொண்டே இருந்தது. பாதிமாவும் சோனுவும் பைத்தியக்கார மனிதரைக் கூப்பிட்டுக்கொண்டே ஓடினார்கள். மேட்டின் மேல் நின்று கொண்டு கூப்பிட்டார்கள். அவர் அதைக் கேட்டால்தானே! அவர் குளத்தங்கரையிலிருந்த காட்டுக்குள் நுழைந்துவிட்டார்.

உலகத்தில் எவ்வளவோ விஷயங்கள் நடக்கின்றன, எவ்வளவோ நடப்பதில்லை. வயலில் பயிர் எப்போதும் விளைவதில்லை. வயல்கள் காலியாகக் கிடந்தன. சில இடங்களில் புகையிலைப் பயிர். மேட்டு நிலத்தில் வெங்காயம், பூண்டு, உருளைக்கிழங்கு முட்டைக்கோசுப் பயிர்கள். குளத்திலிருந்து தண்ணீர் இறைத்து இவையெல்லாம் பயிர் செய்கிறார் பிரதாப்சந்தா. வரப்புகளின் மேலே இருவரும் ஓடினார்கள். பருவம் இல்லாவிட்டாலும் காட்டுக் குள்ளே மகிழமரம் பழுத்திருந்தது. அவர்கள் மகிழம்பழம் பறிக்க ஓடினார்கள். பாதிமா பழங்களைப் பொறுக்குவாள். அவள் கூடச் சோனுபாபு இருக்கிறார். நடுப்பகல் வெயில் தலைக்கு மேலே அடிப் பதால் அவர்களுக்குக் குளிராக இல்லை. பாதிமா வெற்று மேலுடம்புடன் ஓடினாள். அவர்கள் இருவரும் ஓடுவது இரண்டு முயல்கள் ஓடுவதுபோல் இருந்தது.

சோனுவுக்குத் திடீரென்று தோன்றியது, வெகுதூரம் வந்துவிட் டோம் என்று. அவர்களுக்கு எதிரில் பெரியகாடு! பயத்தால் சுருங் கிப் போய்விட்டான் சோனு. அவர்களால் வீடு திரும்பமுடியாது!

மனித சஞ்சாரமற்ற இடம். பண்டைக் காலக் குளம், பழங்குட்டை யைப் போல் இருந்தது. பாசியும் நீர்ச்செடிகளும் காடாக வளர்ந் திருந்தன அதில். கரையில் வளர்ந்திருந்த பலவிதச் செடிகளும் மரங்களும் அந்த இடத்தைக் காடாக ஆக்கிவிட்டன. சிறிய பெரிய கொடிகள் அடர்ந்த புதர்கள். நடுவில் ஒற்றையடிப்பாதை. அதில் உலர்ந்த சருகுகள். உலர்ந்த மரச்சுள்ளிகளும் பறவை களின் சிறகுகளும் மண்ணில் கிடந்தன. தலைக்கு மேல் ஒரு பழங்கால மருதமரக் கிளைகளில் பறவைகள் வசித்தன. அதற்குக் கீழே, எவ்வளவோ காலமாக, மீன்கள், மனிதர்கள், மாடுகன்று களின் எலும்புகள் கிடந்தன. பக்கத்தில் ஒரு கிழட்டுமாடு போல் ஒரு குருகுமரம் தன் கிளைகளால் ஆகாயத்தைத் தொட்டுக்கொண்

டிருந்தது. அதில் விதவிதமான விசித்திரப் பொந்துகள். மரத்தின் ஒரு பக்கத்துக் கிளைகள் காய்ந்துவிட்டன. கிளைகளில் வரிசை வரிசையாகப் பருந்துகள் உட்கார்ந்திருந்தன. சோனுவுக்கும் பாதிமாவுக்கும் அந்த மரத்தையணுகத் துணிவில்லை. ஆனால் அதைக் கடக்காவிட்டால் மகிழமரத்தை அடைய முடியாது. மகிழமரம் பெரியதல்ல, சிறியதுதான். புதர்களுக்குள்ளே போய் மகிழ மரத்தைக் கண்டுபிடிப்பது கஷ்டந்தான். இந்த மரத்தைப் பற்றி ஜோட்டன்தான் பாதிமாவுக்குச் சொல்லியிருந்தாள்.

ஒரு தடவை ஜோட்டன் ஆபேத் அலிக்காக ஒரு கோழி கொண்டு வந்திருந்தாள். அது ஹாஜிசாயபு வீட்டுச் சீதாமரவேலிக்குப் பறந்து போய்விட்டது. வேலியோரத்தில் ஹாஜிசாயபுவின் சிறிய பீபியைச் சந்தித்தாள் ஜோட்டன். சிறிய பீபி கோழி வயலுக்குள் ஓடிவிட்டதாகச் சொன்னாள். வயலில் இறங்கிய ஜோட்டனுக்குத் தூரத்தில் ஏதோ ஓடுவதுபோல் இருந்தது. நாயாக இருக்கலாம், பூனையாக இருக்கலாம். வயலில் இறங்கிய ஜோட்டன் ஹாஜிசாயபுவின் சிறிய பிள்ளையைப் பார்த்தாள். அவன் சொன்னான்: "அதோ பாரு, கோழி ஓடரது! அதோ, அதோ!" பீபியும் அவனும் முதலிலேயே பேசி வைத்துக்கொண் டிருந்திருக்கலாம். இருவருமாகச் சேர்ந்து ஜோட்டனைக் கோழியைத் தேடிக்கொண்டு வயலுக்குள் அனுப்பிவிட்டார்கள்.

ஜோட்டன் அந்தக் கோழியை ஆபேத் அலிக்காகத் திருடிக் கொண்டு வந்திருந்தாள். மௌல்வி சாயபு ஆசையோடு வளர்த்த கோழி அது. அது சமயம் கிடைத்ததும் தன் வீட்டை நோக்கி ஓடுவதாக ஜோட்டன் நினைத்தாள். அவள் கோழியைப் பிடிக்க ஓடினாள். கோழி தப்பி ஓடிவிட்டால் மௌல்வி சாயபுவுக்கு ஜோட்டன் அதைத் திருடிக்கொண்டு போனது தெரிந்துவிடும். அப்புறம் ஜோட்டனுக்கு ஆபத்துதான். கோழி தூரத்தில் தெளிவாகத் தெரியவில்லை. மேட்டுநிலக் குளத்தங்கரையில் இருந்த காட்டுக்குள் அது நுழைவதாகத் தோன்றவே ஜோட்டன் அதைப் பிடிக்க ஓடினாள். எவ்வளவு ஆசையோடு, எவ்வளவு கஷ்டப் பட்டு அதைப் பிடித்துக்கொண்டு வந்திருந்தாள், அவள் ஆபேத் அலிக்காக! அவள் தன் முழங்கால்களுக்கு மேலே துணியைத் தூக்கிக்கொண்டு குளத்தங்கரைக்கு ஓடிவந்தாள், காட்டுக்குள் நுழைந்தாள். வழி தெரியவில்லை அவளுக்கு. கோழி ஏதாவது மரத்தின் மேல் உட்கார்ந்திருக்கிறதா என்று தலையை உயர்த்திப் பார்த்துக்கொண்டு போனாள் அவள்.

அப்போது கோழியின் கழுத்தைப் பிடித்து அழுத்தி வைத்துக் கொண்டிருந்தாள் ஹாஜிசாயபுவின் சிறிய பீபி. பிடியைத் தளர்த்தினால் கோழி 'க்யாங், க்யாங்' என்று கத்திவிடும்.

அப்போது ஜோட்டன் காட்டில் கோழியைத் தேடிக்கொண் டிருந்தாள். ஐயோ! கோழி எங்கே போச்சு? தலையில் அடித்துக் கொண்டாள் ஜோட்டன். அப்போது புதருக்குள் சிவப்பாக ஏதோ தெரிந்தது. கோழியின் சிவப்புக் கொண்டையாக இருக்குமோ? அவள் ஆசையோடு குனிந்து குனிந்து காட்டுக்குள் போனாள். போனபிறகு தெரிந்தது, அது மகிழமரத்தில் பழுத்திருக்கும் பழம் என்று. பருவமில்லாப் பருவத்தில் பழுத்திருந்தது மகிழமரம். சில பழங்கள் கீழே கிடந்தன. ஒரு பூனையோ அல்லது தெரு நாயோ காட்டுக்குள் நுழைந்திருந்தது. குளிர்காலத்தில் மங்கிய வெளிச் சத்தில் அதைக் கோழி என்று நினைத்துவிட்டாள் ஜோட்டன். மூக்குக்குப் பதில் நகம்வெட்டி கிடைத்ததுபோல் அவள் கோழிக்குப் பதிலாக மகிழம் பழங்களைப் பொறுக்கிக்கொண்டாள். அந்தப் பழங்களை அவள் பாதிமாவுக்குக் கொடுத்து, மகிழமரம் இருக்கு மிடத்தையும் சொல்லியிருந்தாள்.

இப்போது சோனுவுக்குப் பயம் வந்துவிட்டது. "எனக்குப் பயமா இருக்கு, பாதிமா!" என்று அவன் சொன்னான்.

"என்ன பயம்? இங்கே வாங்க!"

பாதிமா அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு குருகுமரத் தைத் திரும்பிப் பார்த்தாள். பெரிய பெரிய பருந்துகள் அதன் மேல் அசையாமல் உட்கார்ந்துகொண் டிருந்தன. அந்த மரத் தைப் பார்க்கப் பார்க்க சோனுவுக்குப் பயம் அதிகரித்தது. அவர்கள் ராணிப் பருந்தைப் பார்த்தார்கள். அது மரத்தின் உச் சாணிக் கிளையில் உட்கார்ந்துகொண்டு எங்கேயாவது ஏதாவது பிராணி செத்துக் கிடக்கிறதா என்று மோப்பம் பிடித்துப் பார்த்துக் கொண்டிருந்தது. மற்றப் பருந்துகள் தூங்குகிறாற்போல் அசையாம லிருந்தன. ஒரு சில பருந்துகள் மட்டும் கழுத்தைத் திருப்பித் திருப்பி, சிறிய மரப் பொம்மைகள் மாதிரி இரண்டு மனிதப் பிராணி கள் கீழே நின்றுகொண் டிருப்பதைக் கவனித்தன. பருந்துகளின் ராஜாமட்டும் எப்போதும் விழித்துக்கொண் டிருக்கும். அதுதான் வேட்டையிருக்கும் இடத்தைப் பார்த்து மற்றப் பருந்துகளுக்குச் செய்தி தெரிவிக்கும். அது ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருக் கும். ஆகாயத்தில் எங்காவது, ஏதாவது பறக்கிறதா, எவ்வளவு என் றெல்லாம் பார்க்கும். செத்த பிராணியின் நாற்றம் அடித்தால் அது முதலில் இறக்கை யடித்துக்கொண்டு பறக்கும் - அதைத் தொடர்ந்து மற்றப் பறவைகளும் கண்ணுக்குத் தெரியாத ஓர் உலகத்தைத் தேடிக்கொண்டு பறக்கத் தொடங்கும்.

ராஜப்பருந்து மேலே பறப்பதற்குப் பதிலாக அவர்களை உற்றுப் பார்த்தது. பாதிமா ஆற்றுப் படுகைக்கு ஆடு மேய்க்கப் போவாள்.

சாப்பாட்டுத் தட்டைத் தலையில் வைத்துக்கொண்டு வயலுக்குப் போவாள். அவளுக்குப் பயமே கிடையாது. சணல் வயல்களில் பயிர் மிக உயரமாக, பாதிமாவைவிட உயரமாக வளர்ந்திருக்கும். உயரமான பயிருக்கு நடுவே வயலின் வரப்பு தலைவகிடு போலக் காட்சி தரும். இருபுறமும் வளர்ந்த பயிர் வயலையே காடாக மாற்றியிருக்கும். அந்த வழியில் பாதிமா தன்னந் தனியாகப் பயமின்றி, ஆட்டைக் கூட்டிக்கொண்டு போயிருந்தாள். அப்படிப் பட்ட பாதிமாவே இப்போது பயந்துபோய்விட்டாள். ராஜாப் பருந்து அவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்தபோது சோனுவின் கையைப் பிடித்துக்கொண்டு ஓடிவிட நினைத்தாள் அவள்.

கதைகளில் வருமே அந்த மாளிகையின் வாசலாக இருக்கலாம், இந்த மரம். மரம் ராட்சசனைப் போல அந்த மாளிகைக்குக் காவலாக இருக்கிறது. மரத்தைக் கடந்து உள்ளே நுழைந்துவிட்டால் பூ, பழம், ராஜகுமாரி எல்லாம் கிடைக்கும். பழங்களுக்காகவும், பூக்களுக்காகவும், அந்த ஆச்சரிய உலகத்தைப் பார்ப்பதற்காகவும் பாதிமா தைரியத்தை வருவித்துக்கொண்டு, சோனுவையும் இழுத்துக்கொண்டு, பறவைகளின் இறக்கைகள், மீன்கள், மனிதர்களின் எலும்புகள், பறவைகளின் விட்டைகள் ஆகியவற்றைத் தாண்டிக் காட்டுக்குள் நுழைந்தாள்.

காட்டுக்குள் பல நிறங்களில் சின்னச் சின்னப் பறவைகள் பறந்துகொண்டிருந்தன. பறவைகள் கூவின. வண்ணத்துப் பூச்சிகள் பறந்து திரிந்தன. ஓர் ஓணான் 'கிளப், கிளப்' என்று சப்தம் செய்துகொண்டு அவர்களைப் பார்த்தது. அந்த இடம் ஆள் இல்லாத இடமாக, சூனியப் பிரதேசமாக இருந்தது. எங்கும் மனித அரவமே இல்லை. தூரத்திலிருந்து யாரோ ஒரு மரத்தை வெட்டும் ஒலிமட்டும் வந்துகொண்டிருந்தது. உற்றுக் கேட்டால் தம்பட்டங்களின் ஒலியும் கேட்கும். இந்த மாதிரி ஆளரவமற்ற இடத்துக்கு வந்துவிட்ட அவர்கள் ஒருவரையொருவர் பரிதாபமாகப் பார்த்துக்கொண்டார்கள்.

"சோனு பாபு, நான் உங்களைத் தொட்டுட்டேன். வீட்டுக்குப் போனப்பறம் நீங்க ஸ்நானம் பண்ணனும்" என்று பாதிமா சொன்னாள்.

சோனுவுக்குத் தன் அம்மாவிடம் பயம் வந்தது. "நீ ஏன் என்னைத் தொட்டே?" என்று அவன் கேட்டான்.

"நான் தொட்டேனு, நீங்க தொட்டீங்களா? என் மூக்குத் திருகை நீங்க தொட்டுப் பார்க்கல்லே?"

"அம்மாவுக்குத் தெரிஞ்சா என்னை அடிப்பாங்க."

அந்தக் காட்சி சோனுவின் மனக்கண்ணில் தோன்றியது—அந்த மழைக்காலச் சம்பவம். அவன் பாதிமாவின் புடைவைத் தலைப்பில் ஒரு வண்ணத்துப் பூச்சியை வைத்து முடிந்திருந்தான். அதற்காக அவனுடைய அம்மா அவனை நன்றாக அடித்துவிட்டாள். பாதிமா சொன்னதைக் கேட்டு நிஜமாகவே பயந்துவிட்டான் சோனு. "நீ எங்க அம்மாகிட்டே சொல்லாதே, நான் உன்னைத் தொட்டுட்டேன்னு!" என்றான் சோனு.

"நான் ஏன் சொல்றேன்?"

"சொன்னால் அம்மா என்னை அடிப்பாங்க."

"ஒரு நாளும் சொல்லமாட்டேன்."

"மூணு சத்தியம்?"

"மூணு சத்தியம்."

சோனுவுக்கு ஆறுதல் ஏற்பட்டது. "இந்த விஷயம் ஒருத்தருக்கும் தெரியாது" என்றாள் பாதிமா.

நாற்புறமும் பெரிய பெரிய, அறிமுகம் இல்லாத மரங்கள். செடி கொடிகளும், மரங்களும், புதர்களும் அங்கங்கே சிறிய அடர்ந்த காட்டையே சிருஷ்டித்திருந்தன. அந்தக் காட்டுக்குள் மகிழ மரத்தைத் தேடிக்கொண்டு போனார்கள் அவர்கள். அவர்கள் கேட்க விரும்பினார்கள், 'மரமே! நீ இவ்வளவு நாள் யாரோட மரமா இருந்தே?'

மரம் பதில் சொல்லும்: "ராட்சசனோட மரமா இருந்தேன்."

"இப்போ நீ யாரோட மரம்?"

"உங்களோடது."

"அப்போ எங்களுக்குப் பழம், மகிழம்பழம், தா!"

அவர்கள் நடந்தார்கள். ஆனால் வேகமாக முன்னேற முடியவில்லை. நாற்புறமும் அடர்ந்த காடு. காட்டுக்குள் எவ்வளவு தூரம் நடந்து போக முடியும்? காலடியில் உலர்ந்த புல்லும் சருகும். நெடுங் காலமாக மனித சஞ்சாரமே இல்லாத இடம். அவர்கள் கால்களை மடக்கிக்கொண்டு குனிந்து செடிகளைத் தாண்டிக்கொண்டு போனார்கள். மனசுக்குள் சொல்லிக்கொண்டார்கள், கதைகளில் கேட்டிருந்தது போல, "மரமே நீ யாரோடதாக இருந்தே?"

"ராஜாவோடதாக இருந்தேன்."

"இப்போ யாரோட மரம் நீ?"

"உங்களோட மரம்."

"அப்போ எங்களுக்குப் பழம், மகிழம்பழம், கொடு!"

மரம் சில சமயம் ராஜாவுக்குச் சொந்தமாயிருந்தது, சில சமயம் ராட்சசனுக்குச் சொந்தமாயிருந்தது. "மரமே, ஏ மரமே!" அவர்கள் 'மரமே, மரமே!' என்று கத்தினார்கள். "எங்கே போயிட்டே நீ?"

அவர்கள் மகிழ மரத்தைத் தேடினுர்கள். மரக்கிளையில் பருந்துகள் கூவின. காட்டில் பல விசித்திர சப்தங்களும், பறவைகளின் ஒலி களும் எழுந்தன.

அப்போது யாரோ 'ஹூம், ஹூம்' என்று சப்தம் செய்துகொண்டு அவர்களை நோக்கி வருவதுபோல் இருந்தது, பாட்டியம்மா சொல்லும் கதையில் வரும் பிசாசு மாதிரி, மோகினிப் பேய் மாதிரி. பாதிமா கிசுகிசுத்தாள்: "இதென்ன? கேளுங்க, சோனு பாபு!"

சோனு ஒரு மரக்கணுவில் உட்கார்ந்திருந்தான். அவனுக்குக் கால் வலித்தது. மேலும் நடக்க முடியவில்லை. கால்களில் முள் குத்தி விட்டது. இந்த இடத்தை விட்டுத் திரும்பிப் போனுல் தேவலை என்று அவனுக்குத் தோன்றியது. இருந்தாலும் மகிழம் பழத்தின் மேல் ஆசை அவனுக்கு. பழத்தைக் கொண்டு போனுல் அவனு டைய பெரிய அண்ணுவும் இரண்டாவது அண்ணுவும் ஆச்சரியப் படுவார்கள். "சோனு, சோனு, நீ நல்ல பையன். எனக்கு ஒண்ணு கொடுடா, எனக்கொண்ணு தாடா!" என்று கெஞ்சிக்கொண்டே அவனைச் சுற்றுவார்கள். பாதிமாவுந்தான், பழத்துக்காக ரொம்ப ஆசைப்பட்டு அந்தக் காட்டுக்குள் வந்திருந்தாள். அந்த 'ஹூம் ஹூம்' சப்தம் கொஞ்சங் கொஞ்சமாக அவர்களை நோக்கி வந்தது.

அவர்களுக்கு ஒரே பயம், இப்போது ஏதோ நடக்கப்போகிறது. தப்பியோடும் முயற்சியில் அவர்கள் இன்னும் அதிகமாகக் காட்டுக்குள் அகப்பட்டுக் கொண்டார்கள். காடு உள்ளே இவ்வளவு பெரிதாக இருக்கும் என்று அவர்களுக்குத் தெரிந்திருக்க வில்லை. காட்டுக்குள் நுழைந்ததுமே, மகிழ மரம் அரண்மனை வாயிலில் நிற்கும் சிப்பாய் போல நின்றுகொண் டிருந்தது அதற்கு முன் கையை நீட்டினுல் கைநிறையப் பழங்களைக் கொடுக்கும் என்பதே அவர்களது நினைப்பாக இருந்தது.

இப்போதோ அவர்கள் காட்டுக்குள் வெகுதூரம் வந்துவிட்டார்கள். வெளியே போகும் வழி எந்தப் பக்கம் என்பது அவர்களுக்கு மறந்து போய்விட்டது. பாதிமாவின் கண்களும் முகமும் வறண்டு போய்விட்டன. அந்தச் சப்தம் காடு முழுதும் சுற்றியது. யாரோ காட்டுக்குள்ளே அட்டகாசமாகச் சிரிப்பது போல் இருந்தது. பாட்டியம்மா கதையில் வரும் பிசாசு சொல்வதுபோல் யாரோ சொல்கிருர்கள்; 'ஹாஊங், மாஊங், காஊங், மானுஷேர் கந்த பாஊங்!' (மனித வாசனை வருகிறதே!)

அவர்கள் மரண பயங் கொண்டு கண்களை மூடிக்கொண்டு எதிரில் படும் புல், சருகுகள், செடி கொடிகள் இவற்றைத் தள்ளிக் கொண்டு ஓடினுர்கள். வயல் வெளி இன்னும் கண்ணுக்குத் தெரிய வில்லை. இப்போது முன்னுல் வழியைக் காணோம். அவர்கள் பின்

பக்கம் திரும்பி ஓடினார்கள். அந்த அட்டகாசச் சிரிப்பு அவர்களைத் தொடர்ந்து வந்தது. அவர்களைப் பிடிக்க வந்தது. சூரியனின் அபரிமிதமான ஒளி போல அந்த அட்டகாசச் சிரிப்பும் மரஞ் செடிகளை முறித்துக்கொண்டு பெரிய ஓசையுடன் அலைந்தது.

இப்போது வயல்வெளியில், ''ராஜராஜேஸ்வர் கீ ஜய்! ஜய் யக்ஞேஸ்வர் கீ ஜய்!'' என்ற சப்தம் எழுந்தது. யாரோ இந்தக் கோஷத்தை எழுப்பிக்கொண்டு போனார்கள். சோனா பயந்து போய் மரங்களுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டான். பாதிமாவும் அவ்வாறே செய்தாள். அவர்கள் முகத்தை உயர்த்திப் பார்த்த போது புதரிடுக்கு வழியே வயல்வெளி தெரிந்தது. சுமார் நாற்பது ஐம்பது மக்கள் அடங்கிய கூட்டமொன்று திறந்தவெளியில் போய்க் கொண்டிருந்தது. பதினாறு பேர் ஓர் எருமையின் முண்டத்தை மூங்கில் தடியில் கட்டி எடுத்துக்கொண்டு போனார்கள். பலியிடப் பட்ட எருமையின் முண்டம் மூங்கிலில் தொங்கியது. வெட்டப் பட்ட தலையை அதன் வயிற்றின் மேலேயே வைத்து இரண்டையும் சேர்த்துக் கயிற்றால் கட்டியிருந்தார்கள். கண்கள் திறந்திருந்தன, காதுகள் கீழே தொங்கின. பயிர்கள் அற்ற, சூனிய வயல்களைப் பார்த்துக்கொண்டே போயிற்று, அந்த வெட்டப்பட்ட தலை.

அதை தூக்கிக்கொண்டு செல்பவர்கள் 'ஜய் யக்ஞேஸ்வர் கீ ஜய்! ஜய் ராஜராஜேஸ்வர் கீ ஜய்!' என்று கத்திக்கொண்டே போனார்கள்.

சோனாவும் பாதிமாவும் மூச்சையடக்கிக்கொண்டு புதருக்கு பின்னால் மறைந்திருந்தார்கள். அவர்கள் கண்முன்னே இந்தப் பயங்கரக் காட்சி. வாயைத் திறந்து பேசமுடியாதபடி அவர்களுடைய தொண்டை உலர்ந்திருந்தது. அவர்களால் சொல்ல முடியவில்லை. 'நாங்க இங்கே காட்டுக்குள்ளே ஆம்பிட்டுக்கிட்டு இருக்கோம். எங்களுக்கு வெளியேவர வழி தெரியலே! இங்கேயே இன்னும் கொஞ்சநேரம் இருந்தால் நாங்க செத்துப் போயிடுவோம்!'

முன்னே எருமையைத் தூக்கிக்கொண்டு போனார்கள். பின்னால் வருபவர்கள் தலையில் அரிசி, பருப்பு, எண்ணெய் இவற்றை எடுத்துக்கொண்டு போனார்கள். ஒரு எருமை மாட்டைச் சாப்பிடத் தேவையான அளவு அரிசி, பருப்பு, எண்ணெய். இவர்கள் சீதலக்ஷா நதிக்கரையிலிருந்து வந்திருக்கிறார்கள், பலியிட்ட எருமையை எடுத்துக்கொண்டு போக. பிரசாதம் வீணாகக்கூடாது.

பல்லக்குத் தூக்கிகள் கல்யாணப் பெண்ணைப் பல்லக்கில் வைத்துப் பல்லக்கைத் தூக்கிக்கொண்டு பாடியவாறு போவார்களே, 'ஹாங் - ஹோம் - நா, ஹாங் - ஹோம் - நா' அதுபோல் இவர்கள்

எருமை வயிற்றின்மேல் அதன் தலையை வைத்துக் கட்டித் தூக்கிக் கொண்டு போகிறார்கள். 'ஹாங் - ஹோம் - நா!' மிகவும் அருவருப்பைத் தரும் காட்சி.

காட்டுக்குள் மரக்கிளைகளை முறித்துக்கொண்டு திரிவது யார்? ஒரே அட்டகாசச் சிரிப்பு! உச்சாணிக் கிளையில் பருந்தின் ஓலம், சுவர்க் கோழியின் குரல், மரக்கிளைகள் முறியும் சப்தம். அவர்கள் பயத்தில் கண்களை மூடிக்கொண்டார்கள். அந்த அட்டகாசச் சிரிப்பு காட்டுக்குள் தனக்கு ஒரு வழி செய்துகொண்டு வந்து அவர்கள் மேலே விழுந்துவிட்டது; அவர்களைத் தன் சக்தி வாய்ந்த கைகளால் இறுகப் பிடித்துக்கொண்டுவிட்டது. அவர்களைத் தரையிலிருந்து மேலே தூக்குகிறது, தங்க, வெள்ளிப் பதுமைகளைத் தூக்குவதுபோல. அட்டகாசச் சிரிப்புப் பிசாசு அந்தத் தங்க, வெள்ளிப் பதுமைகளைத் தன் இரு தோள்களின்மேல் ஏற்றிக்கொண்டு காட்டுக்கு வெளியே வந்தது. இரண்டு பதுமைகளுக்கும் உயிர் வந்துவிட்டது. பிசாசால் அவர்களுடைய மகிழ்ச்சிப் பெருக்கைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அது கத்தியது: ''கேத்சோரத்சாலா!''

இப்போதும் வயலில் தம்பட்டங்கள் ஒலித்தன. வாஸ்து பூஜைக்குப் பிறகு பூரி பூஜா உற்சவம். உற்சவக் கடைகளுக்கான சரக்குகள் ஆற்றங்கரை வழியே போயின. மூங்கில்களைத் தோளில் வைத்துத் தூக்கிக்கொண்டும் கித்தான்களைத் தலையில் தூக்கிக்கொண்டும் ஆட்கள் போனார்கள். ஸோனாலி பாலி ஆற்றில் வியாபாரிகளின் படகுகள் எத்தனையோ! அவை பாய்களை விரித்துக்கொண்டு போய்க் கிளை நதி வழியே பிரம்மபுத்திராவில் போய்ச் சேரும். அதன் பிறகு வளைவில் திரும்பினால் அந்தப் பிரம்மாண்டமான ஏரி. ஐந்து கோச தூரத்துக்கு நீண்டிருக்கிறது அது. தாழ் நிலங்களிலுள்ள நீர் ஏரிக்குள் போய் விழுகிறது. ஏரியைக் கடந்தால் உற்சவ மைதானம். பெரிய மரப் பாலத்தைக் கடந்தால் யக்ஞேஸவர் கோவில். கோவிலுக்குப் பக்கத்தில் சர்க்கஸ் கூடாரம் எழும்பியிருந்தது.

பைத்தியக்கார டாகுருக்கு அந்த ஏரியின் நினைவு வந்தது. அவர் சோனாவையும் பாதிமாவையும் வயலில் கொண்டுவந்து விட்டார். சோனாவின் பயம் பறந்து போய்விட்டது. பாதிமா ஹி-ஹி என்று சிரித்தாள். அவர்கள் வீட்டை நோக்கி ஓட ஆரம்பித்தார்கள்.

பொழுது சாய்ந்துகொண்டிருந்தது. குளிர்காலம். டாக்கா போயிருந்த சாம்சுதீன் இன்று திரும்பிவருவதாகப் பேச்சு. பாதிமா வேகமாக ஓடினாள். அவளுடைய பாபா அவளுக்குக் கண்ணாடி வளையல் வாங்கி வந்திருப்பார், டாக்காவிலிருந்து. 'வீட்டில் அவளைக் காணவிட்டால் அவருக்குக் கோபம் வரும். அவளுக்குக்

காது டோலாக்கு வாங்கிவருவார். அம்மாவுக்குக் கட்டம் போட்ட புடைவை வாங்கி வருவார். நினைத்தால் பட்டணத்துக்குப் போய் விடுகிறார் அவளுடைய பாபா. இரண்டு மூன்று நாள் கழித்துத் திரும்பி வருகிறார். பெரியவளான பிறகு பாதிமாவும் டாக்காவுக்குப் போவாள்' இப்படியெல்லாம் பேசிக்கொண்டே போனாள் பாதிமா.

''நானும் போவேன்! நான் பெரியவனானப்புறம் என்னைக் கூட்டிக்கிட்டுப் போறேன்னு என்னோட அப்பா சொல்லியிருக்கார்'' என்றான் சோனா.

''சதர் காட்டிலே இருக்கிற பீரங்கி காண்பிக்கிறேன்னு என்னோட பாபா சொல்லியிருக்காரே!''

''என் அப்பா சொல்லியிருக்கார், சதர் காட்டிலே இருக்கிற பீரங்கியைப் காண்பிப்பார், ரம்னா மைதானம் காண்பிப்பார், புரீ கங்கையிலே ஸ்நானம் செஞ்சுவைப்பார்.''

''நான் எழுதப் படிக்கக் கத்துக்கிட்டேன்னா என்னைப் பாபா மோட்டாரிலே கூட்டிக்கிட்டுப் போவாரே!''

''நான் பரீட்சையிலே முதலா வந்தால் என்னை ரயில்லே டாக்காவுக்குக் கூட்டிக்கிட்டுப் போவார், எங்க அப்பா.''

''ரெயில் ரொம்பச் சின்னது. சோனா பாபு, நீங்க சின்ன ரெயில்லே தானே போவீங்க!''

''மோட்டார்தான் ரெயிலைவிடச் சின்னதாக்கும்.''

பாதிமா கழுத்தைத் திருப்பிச் சோனாவைக் கேலிசெய்தாள்.

''அப்படியா?''

''ஒனக்கு ஒண்ணும் தெரியாது, சிறுக்கி! ஓர் அறை கொடுப்பேன்.''

''கொடுங்க, பார்ப்போம்! நீங்க என்னைத் தொட்டீங்கன்னு உங்க அம்மாகிட்டே சொல்லி அடி வாங்கிக் கொடுக்கிறேன்.''

''சொல்லிடுவியா?''

''பின்னே மோட்டார் சின்னதுன்னு ஏன் சொல்றீங்க?''

''இனிமே சொல்லல்லே.''

சோனா பாபுவை வெற்றிகொண்ட மகிழ்ச்சியில் வேகமாக ஓடினாள் பாதிமா. அவளுடைய தலைமயிர் காற்றில் பறந்தது. அவளுடைய கட்டம் போட்ட புடைவை அவிழ்ந்தது. அவள் ஓடிக்கொண்டே எப்படியோ அதை இடுப்பில் இறுக்கி முடிந்து கொண்டாள். அவள் கால்களில் கொலுசு. கொலுசில் சிறிய சிறிய இரும்பு உருண்டைகள் போட்ட மணிகள். அவள் ஓடும் போது கொலுசுகள் 'ஜல் – ஜல்' என்று ஒலித்தன. ஓடியவள் நின்று பின்னால் திரும்பிப் பார்த்தாள். வருத்தமும் கோபமுமாக ஒரே இடத்தில் நின்றுகொண் டிருந்தான் சோனா; அசையாமல்

நின்ருன். பாதிமா வெற்றி வீராங்கனை போல் குதித்துக்கொண்டு ஓடினுள். இரண்டடி நடந்தும் மறுபடி நின்ருள்; பிறகு திரும்பித் திரும்பிச் சக்கரம்போல் சுற்றினுள், ஒரு முயல் புல்லைக் கடித்து ஒரு வாய் தின்றுவிட்டு இரண்டு வாய் கடித்துத் துப்பிவிட்டு வேகமாக ஓடுவதுபோல. ஆனல் சோனு? சோனுவின் உடம்பி லிருந்து சந்தன மணம் வந்தது. அவனுடைய முகம் பசும் புல்லைப் போல் மிருதுவாக இருந்தது. அவன் இளம் வாழைக் குருத்துப் போல் நளினமானவன். அப்படிப்பட்ட சோனுவை வயலில் தனியே விட்டுவிட்டுப் போகக் கஷ்டமாக இருந்தது அவளுக்கு. அவள் நின்ருள்; பின்னல் திரும்பி கூப்பிட்டாள், "வாங்க! நான் நின்னுக் கிட்டிருக்கேன்!"

சோனு கோபத்துடன் கத்தினுன்: "நான் வரமாட்டேன் போ!"

பாதிமா திரும்பிக் கத்தினுள்: "நீங்க வரலேன்னு, நானும் போக மாட்டேன்!"

இருவரும் அங்கங்கே சற்றுநேரம் நின்ருர்கள். சோனு நகரா திருப்பதைக் கண்டு பாதிமா அருகில் போய், "வாங்க!" என்ருள்.

"ஊஹூம். நான் வரமாட்டேன்."

"வாங்க! சரி, ரயில்தான் பெரிசு. சரிதானே!" இன்னும் ஏதோ சொல்ல நினைத்தாள் பாதிமா; ஆனல் சொல்ல முடியவில்லை. அவள் மனசில் இந்த எண்ணம் தோன்றியிருக்கலாம்; 'திருவிழா வுக்கு நாம ரயில்லேதானே போவோம்! ரயில் பெரிசா இல்லாட்டி ரெண்டுபேர் அதிலே எப்படி ஏறமுடியும்?' ஆனல் இந்த எண்ணத்தைப் பேச்சாக வெளிப்படுத்தத் தெரியாமல் அவள் பேசாமல் சற்றுநேரம் நின்ருள். பிறகு சோனுவின் கையைப் பிடித்துக்கொண்டு சொன்னுள்: "எனக்கு கார்த்திக் பூஜைக்குடம் தரீங்களா?"

"கொடுக்கறேன்."

"சரி, வாங்க! நாம ஓடுவோம்."

அவர்கள் ஒருவர் கையை மற்றவர் பிடித்துக்கொண்டு ஓடினுர் கள். குளக்கரையில் மாலதியைப் பார்த்ததும் அவர்கள் சட்டென்று கையை எடுத்து விலகிக்கொண்டார்கள். பிறகு தனித்தனியே ஓடத் தொடங்கினுர்கள்.

மேளங்கள் முழங்கிக்கொண்டே யிருந்தன. ஐம்பது வாத்தியக் காரர்கள் கழுத்தைச் சாய்த்துக்கொண்டு மேளம் அடித்துக் கொண்டே இருந்தார்கள். சர்க்கார் வீட்டு வாஸ்து பூஜை அந்தப் பிராந்தியத்திலேயே பிரபலமானது. அதற்கு ஏராளமான மக்கள் வந்திருக்கிருர்கள், உறவினர்கள், கிராமத்தார், சர்க்காரின் பண்ணை யாட்கள் என்று. தூரத்துக் கிராமங்களில் இருந்தெல்லாம் மக்கள்

வந்திருக்கிருர்கள். குளத்தங்கரையில் கூடியிருப்பவர்களின் எண்ணிக்கை ஆயிரம் இருக்கும். வண்ணுர்கள், நாவிதர்கள், நமசூத்திரர்கள் எல்லாரும் இலையைப் போட்டுக்கொண்டு கிச்சடி சாப்பிட்டார்கள். பல்லக்குத் தூக்குவதுபோல் பலியிட்ட எருமையைத் தூக்கிச் சென்றவர்கள் முஸ்லீம் கிராமங்கள் வழியே சென்றபோது, "சிவடாகுர் கீ ஜய், ராஜராஜேஸ்வர், யக்ஞேஸ்வர் கீ ஜய்!" என்று கத்திக்கொண்டு போனுர்கள்.

வயலிலும், புல்லின் மேலும் இரத்தத் துளிகள் விழுந்தன: 'எங்கள் தர்மம் சநாதன தர்மம். இந்த மாதிரி இளம் எருமை இந்தப் பிராந்தியத்திலேயே பலியாகவில்லை. இவ்வளவு பெரிய அரிவாள் இந்தப் பக்கத்திலே யார்கிட்டே இருக்கு? எங்க மதத்தைப் போலப் புண்ணிய மதம் வேறு ஏது? ஜய் ராஜராஜேஸ்வர், யக்ஞேஸ்வர் கீ ஜய்!' ஏரிகரையில் சென்றபோது ஜயகோஷம் எழுப்பினுர்கள், எருமையைத் தூக்கிச் சென்றவர்கள்.

ஏரிக்குள் அல்லிக்கிழங்கு பறிக்க வந்து கைகால் ஜில்லிட்டுப் போனவர்கள், குளிரால் விறைத்து வெளுத்துப் போனவர்கள், நடுநடுவில் கரைக்கு வந்து குளிர் காய்ந்துகொண் டிருந்தவர்கள் எல்லாரும் தூரத்தில் புள்ளிபுள்ளியாகத் தெரிந்த ஒரு மனிதக் கூட்டம் எருமையைத் தூக்கிச் செல்வதைப் பார்த்தார்கள். எருமையின் வயிற்றில் அதன் தலை! திடீரென்று அந்தத் தலை நழுவிக் கீழே விழுந்து, உருண்டு உருண்டு அல்லிக்கிழங்குக்காக வந்திருக்கும் அந்த ஏழைகளின் காலடியில் வந்து விழுந்தது.

தங்கள் காலடியில் விழுந்த தலையைப் பார்த்துப் பயந்து போய் அவர்கள், "தோபா! தோபா! (அபசாரம்! அபசாரம்!)" என்று கத்திஞர்கள். அதைப் பார்த்தது அவர்கள் செய்த பாவம். இந்த அருவருப்பைத் தரும் காட்சியைப் பார்த்துவிட்டு அவர்கள் தங்கள் கண்களையும் காதுகளையும் பொத்திக்கொண்டார்கள். எவ்வளவு பெரிய ஏரி! அதைப் பற்றி எவ்வளவு கதைகள்! அதில் எவ்வளவு விதப் பாம்புகள், பிராணிகள், நீர்ச்செடிகள்! பெரிய பெரிய அட்டைகள்! காதுக்குள் நுழைந்துவிட்டால் ஆள் பிழைக்க முடியாது. அவர்கள் அந்த எருமைத் தலையைத் திரும்பிப் பார்க்கவில்லை. சூரியன் அஸ்தமித்துக்கொண் டிருந்தான். அவர்கள் வீடு திரும்ப வேண்டும்.

குளிர்காலமாதலால் வாடைக் காற்றின் பலம் அதிகரித்தது. வானம் நிர்மலமாயிருந்தது. இந்தத் தடவை எல்லாக் குளிரும் இந்த வயல்களில், இந்த ஏரியில் வந்து இறங்குமென்று தோன்றியது. இவ்வளவு நேரம் ஏரி நீரில் ஆயிரக்கணக்கான கூடைகள்

மிதந்தன; இப்போது ஒரே ஒரு கூடைதான் மிதந்தது. ஒரு கூடை மட்டும் ஏரியில் மிதந்தால் பயந்தான். கூடைக்குரிய ஆள் எங்கே? கூடைக்குச் சொந்தக்காரன் எங்கே காணேம்?

சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்தான். இப்போதெல்லாம் ஆம்பல் பூப்பதில்லே. தூரத்தில் நிறையத் தாமரை இலேகள். அவற்றுக்கு அருகில் மிதந்தது ஒரு கூடை. கூடைக்குரிய ஆள் எங்கே? தண்ணீரில் இறங்கியிருந்தவர்கள் கரைக்கு வந்துவிட்டார்கள். தங்கள் தங்கள் கூடைகளே எடுத்துத் தலேயில் வைத்துக் கொணடார்கள். ஒரு கூடை மட்டும் வாடைக்காற்றில் மிதந்து கொண்டு தொலேவில் போவதைப் பார்த்தார்கள்.

''பாருங்க, தண்ணியிலே ஒரு கூடை மிதந்துகிட்டுப் போகுது!'' என்ருன் ஒருவன்.

இன்னெருவன் சொன்னன்: ''யாரோ தண்ணீயிலே மூழுகிப் போயிட்டாங்க.''

மூன்று காலமும் அறிந்த ஒரு கிழவி, அவள் முகம் உலர்ந்து சுருங்கிக் கிடந்தது, உரக்கச் சொன்னள், ''ஏரி ஒரு ஆளேப் பலி வாங்கிட்டுது'' என்று. அவள் விதியைப் போல் நின்றுகொண்டு, ''இது நடந்தே தீரும். வருஷாவருஷம் ஏரிக்குப் பசி வந்துடும். அது சமயம் கிடைச்சபோது ஒரு ஆளே முழுங்கிடும்'' என்று கூறினள்.

''ஏரிக்குப் பலியான ஆள் யார்?''

ஜாலாலி தண்ணீருக்கடியில் அந்த இரண்டு சிவப்புக் கண்களுடன் விளேயாடினள். அவை முன்னல் வந்தன; பின்னல் போயின. தண்ணீருக்குள்ளே முழுகினல் அடர்ந்த நீலநிறம் அல்லது பசுமை நிறம். நாற்புறமும் பிரவாகமாக ஓடியது. கீழே சூரியனின் ஒளி ஊடுருவும் தூரம்வரை மங்கலாகத் தெரிந்தது. அந்த ராட்ஸசக் கஜார் மீன், அவளேக் கடித்துக் கொல்லத் தருணம் பார்க்கிறது என்று ஜாலாலிக்குப் புரியவில்லே. தருணம் கிடைத்ததும் அது அவளேக் கடித்துக் குதறிவிடும். தன் இருப்பிடத்துக்குள் ஜாலாலி வந்ததை அந்த மீனல் பொறுத்துக்கொள்ள முடியவில்லே.

தண்ணீருக்குக் கீழே மண் மிருதுவாக, சமதளமாக இருப்பதை ஜாலாலி கண்டாள். பிரம்மாண்டமான ரூயி, காத்லா அல்லது காலிபாஷஸ் மீனுயிருந்தால் தண்ணீருக்கடியில் அதன் இருப்பிடம்

சமதளமாக, வட்டவடிவமாக இருக்கும். செடிகளும் புற்களும் அதைச் சுற்றி வளர்ந்திருக்கும். அந்த இடம் தனிமையாக அமைதியாக இருக்கும். ஜாலாலி தன் இருப்பிடத்துக்கு அருகில் வந்து சுற்றுவதால் மீனுக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. கோபம் அதிகமாக அதிகமாக அது தன் வாலை ஆட்டியது; முன்னும் பின்னும் ஓடியது. மனித உருவத்தைப் பார்த்துப் பயப்படுகிறது, அல்லது பயப்படாமல், குதிரை காலெடுத்து வைப்பதுபோல் செதில்களை ஆட்டியது. மலைப்பாம்பின் உடலில் காணப்படுவது போல் பெரிய பெரிய சக்கரங்கள் அதன் உடலின்மேல் தீட்டப்பட்டிருந்தன. அதைப் பார்க்க ஒரு பெரிய கறுப்புத் தூண்போல இருந்தது. மனிதனைவிட எவ்வளவோ பலம் வாய்ந்தது அது. அவ்வளவு சக்தியையும் சேர்த்து வைத்துக்கொண்டு ஜாலாலியின் நெஞ்சைக் குத்திக் கிழிப்பதற்காக அவளைத் தாக்கியது. அப்போது ஜாலாலியின் தலை கீழாக இருந்தது. அவள் அல்லிக்கிழங்கு பறிப்பதற்காக இருகால்களையும் அகலப் பரப்பிக்கொண்டு தவளையைப் போல் தண்ணீருக்கடியில் இறங்கிக்கொண் டிருந்தாள். அப்போதுதான் மீன் அவளைத் தாக்கியது.

ஜாலாலிக்கு மூச்சுத் திணறியது. பிரம்மாண்டமான மிருகம் போல் மீன் குதித்தது. அந்த வேகத்தில் தண்ணீரில் சுழல் உருவாகியது. தண்ணீருக்கடியிலிருந்த செடிகொடிகள் சுழலில் சுழன்று ஜாலாலியின் மெல்லிய உடலைச் சுற்றிக்கொண்டன. அவள் அவற்றிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள கடைசி முறையாக முயற்சி செய்தாள். அவளிடமிருந்து ஓர் ஏப்பம் வந்தது. வாயைத் திறந்து மூச்சுவிட முயன்றபோது அவள் நிறையத் தண்ணீரைக் குடித்துவிட்டாள். அவளால் மறுபடி மேலே எழும்ப முடியவில்லை.

தண்ணீருக்குள்ளேயே மூச்சுவிட முயற்சி செய்யச் செய்ய அவள் எல்லாத் தண்ணீரும் தன் வயிற்றுக்குள் போவதைக் கண்டாள். அவள் தன் உயிருக்காகத் துடித்துக்கொண்டு அல்லி, தாமரைக் கொடிகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முயற்சி செய்யச் செய்ய அந்த இரு சிவப்புக் கண்களும் பெரிதாக ஆகி ஆகி நெருப்புக்கோளமாக ஆகிவிட்டன. அதன் பிறகு அந்தக் கோளங்கள், தண்ணீருடன் தண்ணீர் கலந்து விடுவதுபோல் தண்ணீரில் கலந்து ஒரு பூப்போலக் காட்சியளித்தன. அதன் பிறகு ஜாலாலியின் உயிர் குமிழிட்டுக் கொண்டு காற்றுகித் தண்ணீருக்கு மேலே வந்தது. அந்த மலரின் நிறம் இப்போது மறைந்துவிட்டது. தண்ணீரின் சுழற்சியும் குறைந்துகொண்டே வந்தது. தண்ணீருக்குள்ளிருந்த புல்லும் புதரும் செடிகளும்

கொடிகளும் சலனமின்றி நின்றன. அவற்றுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டிருந்தது ஜாலாலின் உடல். இப்போது அவளைப் பார்த்தால் ஒரு விசித்திரப் பிராணியைப் போல் தோன்றியது. கொடிகள் அவளுடைய கழுத்தைச் சுற்றிக்கொண் டிருந்தன. நெஞ்சைச் சுற்றியும் காலுக்குக் கீழேயும் நீர்க்கொடிகள் எண்ணிறந்த கடப்பம் பூக்களைப் போல் சுற்றிக்கொண் டிருந்தன. ஜாலாலி குப்புற விழுந்து கிடந்தாள். அவளுடைய கால்கள் மேலேயும் தலை கீழேயும் இருந்தன. வெள்ளியைப் போல் பளிச்சிட்ட ஒரு மீன் அவளுடைய மூக்கிலும், முகத்திலும், ஸ்தனத்திலும் குறுகுறுப்பு உண்டாக்கப் பார்த்தது.

கஜார் மீன் அசையவில்லை. அது தூரத்தில் வாலை விறைப்பாக வைத்துக்கொண்டு இந்த நிகழ்ச்சியைப் பார்த்துக்கொண்டே இருந்தது. அந்த அபூர்வப் பிராணி செடி கொடிகளில் அகப்பட்டுக் கொண்டு அசைய முடியாமல் இருப்பதைப் பார்த்துவிட்டு அது வெற்றிவீரனைப் போல் தன் இருப்பிடத்தைச் சுற்றிச் சுற்றி வந்தது. அதன் பிறகு தன் செதில்களை ஆட்டிக்கொண்டு வேகமாகத் தெற்குப் பக்கமாக ஓடியது. இந்தச் செய்தியை எல்லாருக்கும் சொல்லவேண்டும்: "இதோ பாரு! நான் என் வீட்டிலே ஒரு அதிசயப் பிராணியை பிடிச்சு வச்சுட்டேன்!"

பிரம்மாண்டமான மீன். அதன் நெற்றியில் செந்தூரமிட்டாற் போன்ற அடையாளம். அதற்கு எவ்வளவு வயசோ, யார் கண்டார்கள்! மனிதர்கள் காலங்காலமாக ஈட்டிகளால் அதை வேட்டையாடிய அடையாளங்கள் அதன் உடலில் காணப்பட்டன. அதன் வலது உதட்டில் இரண்டு பெரிய தூண்டில் முட்கள் டோலாக்கைப் போல் தொங்கின. அதன் உடலில் மூங்கில் ஈட்டிகளின் சிறிய சிறிய முனைகள் குத்திக்கொண்டு இருந்தன. தேடிப் பார்த்தால் இதுபோல் நிறைய அந்த மீனின் உடலில் பார்க்கலாம். அந்த மீன் இப்போது மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு மேலே பாய்ந்து வந்தது.

கரையிலிருந்த ஜனங்கள், தண்ணீரில் ஒரு கூடை மிதப்பதை கண்டு கூக்குரலிட்டுக் கொண்டிருந்த ஜனங்கள், ஏரி நீரில் ஒரு மீன் அல்ல, ஆயிரக்கணக்கான மீன்கள், மேலே கிளம்பிக் கீழே விழுவதைப் பார்த்தார்கள். ராட்ஸசக் கஜார் மீன்களெல்லாம் முதலையைப் போல் தண்ணீருக்கு மேலே வருவதைக் கண்டு அவர்கள் பயமும் திகைப்பும் அடைந்தார்கள். அவை எல்லாருக்கும் சொல்வது போலிருந்தது: "பாருங்க, நாங்க செய்யற வேடிக்கையைப் பாருங்க! நாங்க நீரிலே வசிக்கற பிராணிகள், தண்ணீயிலே எங்களுக்குச் சுகம்."

சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்தான். அவனுடைய சிவப்பு ஒளி நீரில் பிரதிபலித்தது. வானத்திலும் சிவப்பு. மனிதர்களின் முகங்களும் நெருப்பாகச் சிவந்திருந்தன. ஏழை மக்கள் ஒன்றும் செய்ய வழியின்றி அங்கே நின்றுகொண் டிருந்தார்கள். ஒரே குளிர்; பொறுக்க முடியாத குளிர். எல்லாக் குளிரும் வாடைக் காற்றில் மிதந்து வந்து அந்த ஏரியில் குவிந்துவிட்டது. தண்ணீரில் மூழ்கி மூழ்கி அவர்களுடைய உடம்பு வெளுத்துப் போய்விட்டது. அவர்கள் ஆயிரக்கணக்கான கஜார் மீன்கள் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு மேலே வருவதையும் பிறகு தண்ணீருக்குள் மூழ்குவதையும் பார்த்தார்கள்.

அந்தக் கிழவி — அவளுடைய உடல் அநேகமாக நிர்வாணமாக இருந்தது. அவள் குளிர் காய்வதற்காக உலர்ந்த புல்லையும் சருகுகளை யும் சேர்த்தாள், அப்படிச் சேர்த்து நெருப்பு மூட்டித் தன் கந்தல் கந்தலான துண்டு அளவுப் புடைவையை உலர்த்திக்கொள்ள முடியாவிட்டால், அவள் இந்த ராட்ஸசக் குளிரில் ஏரிக்கரையி லேயே இறந்துபோய்விடுவாள். அவள் சருகுகளில் நெருப்பு மூட்டிவிட்டுக் கிசுகிசுக்கும் குரலில் ஏதோ சொன்னாள். அவள் என்ன சொன்னாளென்று தெரியவில்லை. அவளுடைய வாயையும் கண் களையும் பார்த்தால்தான் அவள் ஏதோ சொன்னாள் என்றே தெரிந்தது.

'மனிதர்களே ஏ, மனிதர்களே! மீன்களோட விளையாட்டைப் பாருங்கள்! சந்தோஷம் வந்தால் அதுக எப்படிக் குதிக்கறது, பாருங்க! ஒரு காலத்துலே 'நோவா'ன்னு ஒரு மகாபுருஷன் இருந்தான். அவன் காலத்துலே ஒரு பிரளயம் ஏற்பட்டது!' இந்தக் கதையையெல்லாம் கிழவி சொல்ல நினைத்தாள் போலும்!

இதையெல்லாம் பற்றிப் பேசி என்ன பிரயோசனம்? ஜாலாலி அவளுடைய கணவன் ஆபேத் அலி கொய்னாப் படகில் வேலை செய்கிறான். இப்போது தண்ணீருக்கடியில் இரு தேவதைகளின் ஜோதியை எதிர்பார்த்துக் காத்திருக்கிறாள். அவளுக்கு மகாப் பிரளயம் பற்றிய செய்தியால் என்ன பிரயோசனம்? யாரும் கிழவியை லட்சியம் பண்ணவில்லை. எல்லாரும் இப்போது நெருப் புக்காக ஏங்கினார்கள். அவர்கள் ஜாலாலி தண்ணீரில் மூழ்கி விட்டதைக்கூட மறந்துவிட்டார்கள். அவர்கள் தங்களுக்காகக் கவலைப்படத் தொடங்கினார்கள். கரையிலிருந்து உலர்ந்த புல், சருகுகள், சுள்ளிகள் இவற்றைப் பொறுக்கிக்கொண்டு வந்து நெருப்பில் போட்டார்கள். ஏரிக்குள் சூரியன் மறைந்துகொண்டு இருந்தான். நெருப்பு கொழுந்துவிட்டு எரிந்து ஆகாயத்தைத்

தொடுவதுபோல் உயர எழும்பியது. அதன் நாக்குகள் நாற்புறமும் நீண்டன. அந்த நெருப்பின் வெப்பம் பட்டு மீன்கள் ஏரிக்குள் புகுந்துகொண்டன.

ஏரிகரையில் பைத்தியக்கார டாகுர் நின்றுகொண் டிருந்தார். அவர் குளிர் காய நெருப்புக்கு அருகில் போகவில்லை. அவர் கைகளைப் பிசைந்துகொண்டு, "கேத்சோரத்சாலா!" என்ருர். ஏரிக்குள் ஒரு மனிதன் முழுகிவிட்டான்! அல்லிக்கிழங்கு பறிக்கத் தண்ணீருக்குள் மூழுகிய மனிதன் திரும்பி வரவில்லை.

மக்கள் நெருப்பைச் சுற்றி நின்றுகொண் டிருந்தார்கள். ஏரியில் மிதக்கும் கூடை அசையாமல் நின்றது. காற்று அடங்கிவிட்டது. தாமரை இலைகள் அந்தக் கூடையைத் தடுத்து நிறுத்திவிட்டன. அஸ்தமிக்கும் சூரியனின் ஒளியால் தண்ணீர் ரத்தம் போல, பிறகு வெளிர் சிவப்பாக, பிறகு கொஞ்சங் கொஞ்சமாகச் சிவப்பு நிறம் மங்கி நீலமாகிவிட்டது; பிறகு பசுமை நிறம், பிறகு கறுப்பாகிவிட்டது. தண்ணீர் சலனமற்று இருந்தது. அதில் குமிழி கூட எழவில்லை. குளிர் காரணமாக மீன்களுக்குக் கூட அசையத் துணிவு பிறக்க வில்லை.

பைத்தியக்கார டாகுர் சொன்ஞர்: "கேத்சோரத்சாலா!"

எருமையின் வெட்டப்பட்ட தலை ஏரிகரையில் அப்படியே கிடந்தது. எருமையின் முண்டத்தை எடுத்துச்சென்ற மனிதர்களுக்கு அதன் தலை அவ்வளவு முக்கியமாகப் படவில்லை. தலையை எப்படியும் எறிந்துவிட வேண்டியதுதான். எருமையின் உடலின் எல்லாப் பாகமும் சாப்பிட லாயக்கில்லை. இருந்தாலும் முழுவதையும் எடுத்துக்கொண்டுதான் போகவேண்டும். பிரசாதத்தை மறுக்கக் கூடாது. தலையையும் எடுத்துக்கொண்டால் அதற்கேற்ற அளவு அரிசியும் பருப்பும் கூடக் கிடைக்கும். நெருப்பின் வெப்பத்தில் எருமையின் காதுகள் விறைத்துக்கொண்டு நின்றன. பாவம், அன்று அதிகாலையில் குளிரில் அந்த இளம் எருமைக்கு ஸ்நானம் செய்து வைத்தார்கள். அதன் தலையில் எண்ணெயும் சிந்தூரமும் தடவி அதற்கு இளம்புல்லைச் சாப்பிடக் கொடுத்தார்கள். காலில் சதங்கை போல் செம்பரத்தைப்பூ மாலையைக் கட்டினுர்கள். தர்ம க்ஷேத்திரத் தில் அது மரண நடனம் ஆட வேண்டுமல்லவா!

அபலையான இந்த எருமைக் கன்று காலையில் ஸ்நானம் செய்து விட்டுப் பலி மேடைக்கருகில் படுத்திருந்தது. குளிர் காரணமாக அதனல் அசைய முடியவில்லை. ராஜாவை நடத்துவதுபோல் அதை நடத்தினுர்கள். சின்னஞ்சிறு பையன்களும், அழகிய பெண் களும் புத்தாடை யணிந்துகொண்டு அதற்குப் பசும்புல் கொடுத்

தார்கள். காலை நேரம் முழுதும் அதற்கு மிகவும் இன்பமாகக் கழிந்தது.

கிழட்டுப் பிராமணப் புரோகிதனின் தலையில் பெரிய குடுமி. அதில் அவன் செம்பரத்தைப் பூவைச் செருகிக்கொண்டு இருந் தான். அவன் அந்த எருமைக் கன்றுக்கருகில் ஒரு சேர் நெய்யை வைத்துக்கொண்டு உட்கார்ந்தவன் வெகுநேரம் வரை எழுந் திருக்கவில்லை. அவன் வெற்றிலையை மொச்சுமொச்சென்று மென்றுகொண்டே அவ்வளவு நெய்யையும் எருமையின் கழுத்தில் அழுத்தி அழுத்தித் தடவினன். தடவித் தடவிக் கழுத்தை மிருது வாகச் செய்தான், அரிவாள் சிக்கிக் கொள்ளாமலிருப்பதற்காக. பலி வெற்றிகரமாக நடப்பதற்காக அவ்வளவு பிரயாசை. எவ்வளவு செய்தால் என்ன? எருமையின் உயிர் கழுத்தில் சிக்கிக் கொண்டதோ என்னவோ? அதற்கு எதையும் சாப்பிடப் பிடிக்க வில்லை. தாரை தப்பட்டைகளின் முழக்கம், சாம்பிராணி வாசனை, சந்தனத்தின் மணம், வில்வம், பூக்கள் இவற்றின் மணம், குளிர்— இவற்றுக்கிடையே அது உற்சாகமின்றி அயர்ந்து கிடந்தது. இப்போது நெருப்பின் வெப்பம் பட்டதும் அதன் அறுபட்ட தலையில் காதுகள் விறைத்துக்கொண்டன. இதையெல்லாம் பார்த்த பைத்தியக்கார டாகுரால் சிரித்துக்கொண்டு, "கேத்சோரத்சாலா!" என்று சொல்லாமல் இருக்க முடியவில்லை.

கிராமத்துக்குக் கிராமம் செய்தி பரவியது, இந்த வருஷமும் ஏரி பலிவாங்கி விட்டதென்று. மனிதன் ஏரியில் மூழ்கிச் சாகாமல் ஒரு ஆண்டும் கழிவதில்லை. இந்த நிகழ்ச்சி பாஞ்சாலிப் பாட்டில் வரும் கதையை உறுதிப்படுத்துவதாக இருந்தது. எங்கும் செய்தி பறந்தது. பிரம்மாண்டமான பௌசார் ஏரியில் — ஆழமே கண்டு பிடிக்க முடியாத—படகில் பிரயாணம் செய்யும் மனிதரைத் தடுமாற வைக்கும் ஏரியில்—இந்த வருஷம் ஆபேத் அலியின் பீபி ஜாலாலி மூழ்கிவிட்டாள்!

தோடார்பாகைச் சேர்ந்த ஆபேத் அலி, மழைக் காலத்தில் கொய்னப் படகில் வேலைச் செய்யச் சென்றவன் இன்னும் திரும்பி வரவில்லை. ஜப்பர் பாபுர்ஹாட் போயிருந்தான். ஆகை யால் அவர்களுக்கு ஆள் அனுப்பவேண்டும். இல்லாவிட்டால் பிணத்தை ஏரியிலிருந்து எடுக்க முடியாது. அவள் எங்கே முழுகினள் அல்லது நாடோடிக் கதைகளில் சொல்லப்படும் ராட்சசன் அவளை எங்கே கொண்டுபோய் அமுக்கிவிட்டான் என்று யாருக்குத் தெரியும்?

குளிர் காய்வதற்காக மூட்டப்பட்ட நெருப்பு அணைந்ததும் கரையில் இருந்தவர்கள் அவரவர் கிராமத்துக்குப் போய்விட்டார்கள்.

இப்போது ஏரியின் மேலே நிலவு வரும். இரவு முழுதும் ஏரி நிலவில் குளித்துக்கொண் டிருக்கும். கூடை மிதந்துகொண்டே போய்க் கொஞ்ச நேரத்துக்குப் பிறகு மறந்துவைிடும். காற்று வீசினுல் மலைபோன்ற ஆகிருதியுடைய அந்தக் கறுப்புப் பிராணி மறுபடி நீருக்கு மேலே வரலாம். அது என்ன பிராணி, அது எங்கே வசிக்கிறது, அல்லது அது ஒரு ராட்ஸசனு என்று புரிந்துகொள்ள முடியாது. இந்த மாதிரி பிராணியை இதற்கு முன்பும் பார்த்திருப் பதாகச் சிலர் சொன்னுர்கள். ஏரிகரையில் நடந்து செல்லும் போது இந்தக் கதைகள் நினைவுக்கு வரும். இவ்வளவு பெரிய ஏரி யையும் அதன் கறுப்புநிறத் தண்ணீரையும் பார்த்தால் இந்தக் கதைகளை நம்பத்தான் தோன்றும்.

கதைகளில் சொல்வார்கள்: நவாப் ஈசாகான் இந்த ஏரியில் தன் மனைவி சோனுயி பீபியுடன் மயிற்படகில் உட்கார்ந்து எவ்வளவோ இரவுகள் கலாகாச்சியாக் கோட்டையைப் பார்த்துக்கொண் டிருப் பானும். சாந்த்ராயும் கேதார்ராயும் கலாகாச்சியாக் கோட்டையை அழித்துவிட்டார்கள். சோனுயி பீபியை விடுவிப்பதற்காக எழு நூறு முதலை முகப் படகுகள் பாயை விரித்துக்கொண்டு நீரில் சென்றன. கிழவன் ஈசாகானின் முகத்தில் பக்கிரிக்கு உள்ளது போன்ற நீண்ட வெண்ணிறத் தாடி, அவனுடைய தலையில் ஜரிகைக் குஞ்சம் வைத்த தொப்பி, இடுப்பில் உடைவாள், பின்னுல் கறுப்பு நிற முகத்திரைக்குப் பின்னுல் அழகிய பொம்மை போன்ற சோனுயி பீபி—அவனுடைய கண் இமை கொட்டாமல் எதிரேயே நிலைத் திருந்தது. அவர்கள் ஏரியில் ஒளிந்துகொண் டிருக்கிறுர்கள். அவர் களுடைய இந்தக் கதை பாஞ்சாலிப் பாட்டு மூலம் மக்களிடையே நம்பிக்கையாகப் பதிந்துவிட்டது.

புகையிலையை மென்றவாறே பேலு நினைத்தான், ஜாலாலி நாடோடிக் கதைகளின் நாட்டில் விருந்து சாப்பிடப் போயிருக்கிறுள் என்று. நவாப் ஈசாகான், சோனுயி பீபி, மலைபோன்ற அந்தப் பெரிய பிராணி, ஆயிரக்கணக்கான கஜார் மீன்கள்—இவர்கள் ஓர் அபூர்வ ஒளியில் ஜாலாலிக்கு வழிகாட்டிக்கொண்டு அவளை நவாபின் அரண்மனைக்குள் அழைத்துச் செல்கிறுர்கள்.

இப்போது கரையில் பைத்தியக்கார டாகுர் மட்டும் நின்றுர். அவர் ஜாலாலி முதலில் நீருக்குள் முழுகிய இடத்தையும், கூடை முதல் முதலில் மிதந்து வந்த இடத்தையும் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டே யிருந்தார். வலப் பக்கத்து மூங்கில் காட்டைக் கடந்தால் கொஞ்ச தூரம் தண்ணீரில் நடந்து செல்ல வேண்டி யிருக்கும்.

இரண்டு பெரிய தாமரை மொட்டுகள் தண்ணீருக்கு வெளியே நீட்டிக்கொண் டிருந்தன. அவற்றுக்கு அருகில்தான் ஜாலாலி நீரில் மூழ்கினுள். பிறகு எழுந்து வரவில்லை. கூடை எங்கோ மிதந்து போய்விட்டதால் இப்போது கண்ணுக்குத் தெரியவில்லை. நிலவு தெளிவாக இல்லை. காலடியில் இருந்த எருமைத் தலை பைத்தியக்கார டாகுரை உறுத்துப் பார்த்தது, அவரிடம் ஏதோ சொல்ல விரும்புவதுபோல.

ரத்தபீஜ அசுரனின் ஒரு துளி ரத்தம் விழுமிடமெல்லாம் இன்னொரு ரத்தபீஜன் தோன்றுவானும். இப்படி ரத்தபீஜன்கள் ஆயிரம் ஆயிரமாக, லட்சம் லட்சமாகப் பிறப்பார்களாம். அதுபோல இந்த எருமையின் தலைக்கும் உயிர் வந்துவிட்டது போலும்! பைத்தியக்கார டாகுர் திகைத்துப் போய் அதைப் பார்த்துக்கொண்டே இருந்தார். எருமைத் தலை அவரைக் கேட்பதாகத் தோன்றியது: ''டாகுர், நீ என்ன பார்க்கறே?''

''நான் நிலாவைப் பார்க்கிறேன்.''

''நிலாவைத் தவிர வேறே என்ன பார்க்கிறே?''

''உன்னைப் பார்க்கிறேன்.''

''நான் யாரு?''

''நீ ஓர் அபலைப் பிராணி, எருமை.''

''எருமைக்கு உயிர் உண்டா?''

''உண்டு.''

''அப்போ என்னை ஏன் கொன்னீங்க?''

''உன்னைக் கொல்லலே; சாமிக்குப் பலி கொடுத்தோம்.''

''அந்தச் சாமி யாரு?''

''சாமிதான் உலகத்தையே அடக்கி ஆள்கிறுர், உலகத்துக்கு வெளிச்சம் கொடுக்கிறுர், பூவைப் பூக்க வைக்கிறுர், உலகத்திலே உள்ள பாவத்தைப் போக்கிப் புண்ணியத்தைக் கொண்டு வரார்.''

''வேறே ஒண்ணும் செய்யறதில்லையா அவர்?''

''இன்னும் எவ்வளவோ செய்யருர். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் எல்லாம் அவர் கையிலே. பிராணிகளை அவர்தாம் காப்பாத்தருர்.''

''அப்போ நான் ஓர் உபகரணந்தான்; நைவேத்திய உபகரணம்.''

''ஆமா.''

எருமைத் தலை சிரித்தது.

''நீ ஏன் சிரிக்கறே?'' என்று டாகுர் கேட்டார்.

''உன் பேச்சைக் கேட்டுத்தான்.''

டாகுருக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. அவரால் எருமையைத் திரும்பிப் பார்க்க முடியவில்லை. பார்த்தால் மறுபடியும் அது சிரிக்கும்.

அவர் வேறு பக்கம், ஜாலாலி தாமரை மொட்டுகளுக்கு அருகில் நீரில் முழுகிய பக்கம் பார்த்துக்கொண்டு நின்றுர். எதிரில் ஒரே நீர்ப் பரப்பு. காற்றில் அலைகள் எழுந்தன. அலைகளின் ஓசை கரையில் கேட்டது. தூரத்திலிருந்து மேளங்களின் ஓசையும் வந்துகொண் டிருந்தது. 'கும், கும்!' புயல் வருவது போன்ற ஒலி. ஆயிரக் கணக்கான வருடங்களாக வழங்கிவரும் கதைகளில் சொல்லப்படும் ராட்சசன் ஓடிவருவது போன்ற ஒலி. ராஜகுமாரனின் கையில் பறவை. ராஜகுமாரன் அதன் சிறகுகளைப் பிய்த்து எறிந்துவிட்டான். 'ஐயோ! விழுந்தோம், செத்தோம்!' என்று அலறிக்கொண்டே அந்த ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான ராட்சசர்களின் கூட்டம் ராஜாவின் பட்டணத்தை நோக்கி ஓடிவந்தது. அந்த ராட்சசர்கள் ஒரு பழங்காலப் பொந்தில் உள்ள பறவையைக் கொன்று அதன் ரத்தத்தைக் குடிக்கும் ஆசையில் ஓடுகிருர்களென்று தோன்றியது. பறவை ராஜகுமாரனின் கையில். அவன் இஷ்டப் பட்டபடி அதன் காலையோ கழுத்தையோ பிய்த்து எறிந்துவிட்டால் கதை முடிந்துவிடும். ஆனுல், ராஜகுமாரனும் கல், பறவையும் கல் ராஜகுமாரன் பறவையைக் கையில் வைத்துக்கொண்டு கனவு கண்டவாறே கல்லாகிவிட்டான்.

''டாகுர், ஏன் என்னைப் பார்க்கமாட்டேங்கறே?'' என்று எருமைத் தலை கேட்டது.

டாகுர் பதில் சொல்லவில்லை.

''டாகுர், ஒரு சாதாரணத் தலை—வெட்டப்பட்ட தலையோட வேடிக் கைப் பேச்சை உன்னுலே பொறுத்துக்க முடியல்லையே. நான் எப்படி அரிவாள் வெட்டைப் பொறுத்துக்குவேன் சொல்லு?''

''இதோ பாரு, நான் உன்னை ஒண்ணும் சொல்லலே. நீ என்னை சும்மா விட்டுடு.''

''சரி, நான் இப்போ பறந்து போறேன்.''

எருமைத் தலைக்கு இரண்டு பக்கங்களிலும் இறக்கைகள் முளைத் தன. அது ஏரிக்குமேல் பறக்கத் தொடங்கியது.

''அடே! என்ன பண்றே? என்ன பண்றே?'' என்று சொல்லிக் கொண்டு டாகுர் அதைப் பிடிக்கப் போனுர்.

''ஏன், நான் உன்னோட சாமியை விட மட்டமாத் தெரியறேனு இப்போ? என்னைப் பார்த்தா ஒரு பெரிய வௌவால் மாதிரி இல்லே?'' என்று சொல்லியவாறு அந்தத் தலை டாகுருக்கு முன்னுல் பெண்டுலம் மாதிரி ஆடியது.

''எப்படி இருக்கு என்னைப் பார்த்தா? வௌவால் மாதிரி இல்லே? லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முன்னுலே உலகத்துலே இந்த மாதிரி எவ்வளவோ வௌவால்கள் இருந்தன. இப்போ இல்லே.

அதைவிடப் பெரிய பாம்புகள் வந்து அதையெல்லாம் சாப்பிட்டு டுத்து. ஆனு அதுகள் என்ன செஞ்சாலும், உங்க மாதிரி மதத்தின் பேரைச் சொல்லிக்கிட்டு அநியாயம் பண்ணலே. கடவுள் பேராலே அக்கிரமம் செய்யலே!"

எருமைத் தலை செய்யும் அட்டகாசத்தைப் பார்த்து டாகுருக்கு எரிச்சல் வந்தது. நல்ல மனிதர் ஒருவர் அகப்பட்டுக்கொண்டார் என்று ரொம்பவும் ஆர்ப்பாட்டம் செய்தது அது. அவர் கரை வழியே நடக்கத் தொடங்கினுர். என்ன ஆச்சரியம்! எருமைத் தலையும் சிறகுகளை விரித்துக்கொண்டு அவருக்கு முன்னுலேயே தொங்கிக்கொண்டு வந்தது, யாரோ அதைக் கண்ணுக்குத் தெரியாத நூலில் கட்டி ஆகாயத்தில் தொங்கவிட்டிருப்பது போல. டாகுர் முன்னே போனுல் அது பின்வாங்குகிறது, பின்னே வந்தால் அது முன்னே வருகிறது. டாகுருக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. இந்தப் பயங்கர காட்சியை உதறிவிடுவதற்காக அவர் ஓடத் தொடங்கினுர், முன்னும் பின்னும். தன்னந்தனியே கோல்லாதூட் விளையாட்டு விளையாடினுர். அவர் எந்தப் பக்கம் ஓடினுலும் எருமைத் தலை அவருடைய கண்முன்னே வந்து பிரம்மாண்டமான ஒரு வௌவாலைப் போல் தொங்கியது. அது சில சமயம் அழுதது, சில சமயம் சிரித்தது. சில சமயம், "இந்த மனித இனத்தைப் போல மட்டமான இனத்தைப் பார்த்ததில்லே நான். அவங்க இஷ்டத்துக்குச் சாமி பேரைச் சொல்லி என்னை வெட்டிப் போட்டுட்டாங்க" என்றது.

பைத்தியக்கார டாகுர் கூடப் பயந்துபோனுர். அவர் எல்லாவற்றையும் மறந்துவிட்டு அந்த மைதானமெங்கும் ஓடத் தொடங்கினுர். பிரம்மாண்டமான அந்த வௌவாலைப் பார்த்துக் கத்தினுர் "கேத்சோரத்சாலா!"

சாம்சுத்தீன் டாக்காவிலிருந்து திரும்பியதும் ஜாலாலி ஏரியில் முழுகியது பற்றியும், கிராமத்தில் யாருமே அவளைத் தேடப் போகாதது பற்றியும் கேள்விப்பட்டான். அவன் உடனே தன் ஆட்களைச் சேர்த்துக்கொண்டு வந்தான். ஆபேத் அலிக்கும் ஜப்பாருக்கும் செய்தி தெரிவிக்க இரண்டு ஆட்களை அனுப்பினுன். அவன் தன் கோஷ்டியுடன் ஏரியை அடைந்தபோது வெகுநேரமாகிவிட்டது. ஏரிகரை மைதானத்தில் யாரோ ஓடிக்கொண் டிருப்பதை அவர்கள்

பார்த்தார்கள். பார்த்தால் ஓர் அற்புதச் சம்பவம் போல் இருக்கும், ஏதோ ஒரு தேவதை கடவுளுக்குப் பயந்து ஓடித் திரிவது போல் தோன்றும். சாம்சுத்தீன் கூடப் பயந்து போய்விட்டான். அவனுடைய ஆட்கள், "நாம் திரும்பிப் போயிடுவோம். யார் தலையிலே எப்படி எழுதியிருக்கோ, யாருக்குத் தெரியும்?" என்று கூறினார்கள்.

"மைதானத்திலே இருக்கிறது யாரு?" என்று சாமு கத்தினன்.

ஒரு பழக்கமான பதில் வந்தது. "கேத்சோரத்சாலா!"

மைதானத்தில் சுற்றுவது மனிதன்தான். எல்லாருக்கும் இப்போது உயிர் வந்தது. மைதானத்தில் சுற்றிக்கொண்டிருப்பது பைத்தியக்கார டாகுர்தான். அவர்களுடைய பயம் தெளிந்தது.

"பெரிய பாபு, நான்தான் சாமு! ஆபேத் அலியோட பீபி ஜாலாலி தண்ணியிலே முழுகிட்டா. நாங்க அவளை வெளியிலே எடுக்க வந்திருக்கோம்" என்று சாமு கூறினான்.

அவர்கள் பயந்தெளிந்து ஏரிகரைக்கு வந்தார்கள். அல்லிக் கிழங்கு பறிக்கவந்த சிலர் கூட வந்திருந்தார்கள். அவர்களில் ஒருவனைக் கூட்டிக்கொண்டு ஏரிக்கரையில் சுற்றினன் சாமு. அவர்கள் ஜாலாலியைக் கடைசியாக எங்கே பார்த்தார்கள், அப்போது மணி என்ன இருக்கும் என்று விசாரித்துக் கொண்டான். ஹாசிம் வீட்டுப் பெரிய படகை எடுத்துக்கொண்டு வரச் சிலர் போனார்கள். அது வந்ததும் அதில் ஏறிக்கொண்டு ஜாலாலியைத் தேடுவதென்று திட்டம். ஜாலாலி அணிந்திருந்த துணி மேலே மிதந்து வரலாம்; அவளுடைய வீங்கி உப்பிய உடலே தண்ணீருக்கு மேலே மிதந்து வரலாம்.

படகை ஓட்டிக்கொண்டு மன்சூர் வந்தான். ஜய்னல் துடுப்பு வலித்தான். இருபத்தைந்து முப்பது பேர் படகில் ஏறிக்கொண்டார்கள். நிலவில் ஏரியில் அலைகள் கிளம்பின. தாமரையிலை மேல் ஏதோ பூச்சியின் ஒலி. நேரம் கழிந்து நள்ளிரவாகிவிட்டது. ஆனால் ஜாலாலி இருக்குமிடம் தெரியவில்லை. அப்போது அவர்கள் தூரத்தில் ஏதோ மிதப்பதைக் கண்டார்கள். அது ஒரு கூடை; ஜாலாலியின் கூடை. அதில் ஜாலாலி நாள் முழுதும் சேகரித்த ஏழெட்டு அல்லிக் கிழங்குகள் இருந்தன. அவற்றின்மேல் நிலாவின் ஒளி விழுந்தது. அல்லிக் கிழங்குகளோடு ஒரு சிப்பியும் இருந்தது. தண்ணீருக்கடியில் சிப்பி கிடைத்தால் கனவு காண்பது இயற்கை. சிப்பிக்குள் முத்து இருக்குமோ என்று. ஜாலாலியும் அந்த மாதிரி கனவு கண்டிருக்கலாம், பேகம் ஆகும் கனவு!

சாம்சுத்தீன் குனிந்து அந்தக் கூடையைப் படகில் ஏற்றியபோது வேதனையோடு சொன்னான்: "சின்னம்மா, உன் ராஜ்யத்திலே இப்போ யாரு முழிச்சுக்கிட்டு இருக்காங்க?"

தண்ணீரிலிருந்து பதிலெதுவும் வரவில்லை. அவன் நாற்புறமும் பார்த்தான். ஏரிகரையில் ஒன்றுக்குப் பின் ஒன்ருகச் சிறிய சிறிய கிராமங்கள்; ஏழைகளின் குடியிருப்புகள். அவற்றில் ஒரு சில முல்லா, மௌல்விகள். அவர்களுக்கு நூல் அல்லது சணல் வியாபாரம். ஒரு சில இந்து லேவாதேவிக்காரர்கள். ஹக் சாயபுவின் லேவாதேவிக் கடை விளம்பரம். எல்லாரும் பிழைக்கக் கற்றுக் கொண்டு விட்டார்கள். சாமு தன் ஆட்களிடம், "ஜாலாலி அகப்படலே!" என்ருன்.

யாரும் ஒன்றும் சொல்லவில்லை. ஏதாவது சொன்னுல் சாமு அவர்களைத் தண்ணீரில் முழுகித் தேடச் சொல்லுவான். இந்தக் குளிரில் தண்ணீரில் முழுகினுல் உறைந்து போய்விட வேண்டியது தான். அவர்கள் தயங்குவதைப் பார்த்துச் சாமு சொன்னுன்: "சரி, நீங்க படகிலே இருங்க. நான் முழுகித் தேடிப் பார்க்கறேன்." அவன் ஒரு துண்டை மட்டும் உடுத்திக்கொண்டு, ஜாலாலி கடைசியாகக் காணப்பட்ட இடத்தில் தண்ணீரில் முழுகினுன்.

ஏரிகரையில் இவ்வளவு ஆட்களைப் பார்த்துத்தானே என்னவோ, எருமைத் தலை மறைந்து போய்விட்டது. பைத்தியக்கார டாகுருக்குச் சற்று யோசிக்க நேரம் கிடைத்தது. 'ஓர் அபலைப் பிராணிக்கு எவ்வளவு கோபம்?' என்று நினைத்தார் அவர். அந்தக் கோபத்தி லிருந்து தப்பிக்கொள்வதற்காக அவர் சாமுவின் ஆட்கள் இருந்த படகை நோக்கிச் சென்ருர். படகு ஓரிடத்தில் நின்றது. ஒரே ஒரு ஆள் நீரில் நீந்தினுன், தண்ணீருக்குள் முழுகி முழுகி உயரே வந்தான். கொஞ்சமும் பயப்படவில்லை அவன். எவ்வளவு பேர் படகில் உட்கார்ந்துகொண்டு வேடிக்கை பார்த்தார்கள்! இன்னொர் ஆள் தண்ணீருக்குள் இந்தக் குளிரில் கொடிகளில் அகப்பட்டுக் கொள்ளப் போகிருன். முன்யோசனை யில்லாத ஆள்! பைத்தியக் கார டாகுர் தண்ணீரின் ஓரத்தில் நின்ருர்.

ஜாலாலி மூழ்கிய இடத்திலிருந்து வெகு தூரத்தில் அவளைத் தேடினுன் சாமு. அவனுடைய இந்த வீண் முயற்சியைப் பார்த்து அவருக்கு எரிச்சல் வந்தது. அவர் தன்னந்தனியே மைதானத்தில் நடந்தால் அந்த எருமைத் தலை அவரை மறுபடி பிடித்துக்கொள்ளும். அவர் கைகளைத் தட்டினுர், என்னைப் படகில் ஏற்றிக்கொள்ளுங்கள் என்று அவர்களிடம் சொல்வதுபோல.

மன்சூர் படகின்மேல் நின்றுகொண்டு, "கை தட்டறது யாரு?" என்று கேட்டான்.

பதில் இல்லை. யாரோ ஏரிகரையில் விடாமல் கைதட்டுவது மட்டும் தெரிந்தது. பைத்தியக்கார டாகுர்தாம் கை தட்டுகிருர் என்று அவனுக்குப் புரிந்துவிட்டது. படகில் ஏற்றிக்கொள்ளச்

சொல்லிக் கைதட்டுகிருர். மன்சூர் கத்திஞன், "இருங்க, எசமான் இதோ வரேன்!"

படகு அருகில் வந்ததும் டாகுர் அதில் ஏறிக்கொள்ளவில்லை. அதற்குப் பதிலாகத் தண்ணீரில் குதித்து, தாமரை மொட்டுக்கள் இருந்த இடத்தை நோக்கி நீந்திப் போனுர். அவருக்குக் கோடையும் குளிரும் ஒன்றுதான். பைத்தியம் முற்றிவிட்டது அவருக்கு. அவர் ஒரு பெரிய வெண்ணிற ராஜஹம்சத்தைப் போல் வேகமாக நீந்திக்கொண்டு போனுர். அவரைப் போன்ற ஆஜானுபாகுவை அந்தப் பிராந்தியத்தில் பார்க்க முடியாது. தோற்றம் மட்டுமல்ல, அபார பலமும் உண்டு அவருக்கு. நாடோடிக் கதைகளின் ராட்சசர்களையும், பிசாசுகளையும் லட்சியம் செய்யாமல் அவர் தாமரை மொட்டுக்களுக்குப் பக்கத்தில் தண்ணீருக்குள் முழுகிஞர். செடி கொடிகளையும் பாசியையும் அறுத்துக் கொண்டுபோய்க் கீழேயிருந்து ஜாலாலியின் பிணத்தைத் தலைமயிரைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து அம்பின் வேகத்தில் நீந்தத் தொடங்கிஞர். இதைப் பார்த்தவர்கள் பிரமித்து நின்ருர்கள். இந்த மனிதர் தர்காவின் பீர்தான், சந்தேகம் இல்லை. டாகுர் ஜாலாலியின் சவத்தைத் தோளில் சுமந்து கொண்டு கரையேறிஞர். ஒரு பக்கமும் திரும்பிப் பார்க்கவில்லை. தோளில் சவம், எதிரில் சூனிய வயல்வெளி, ஆகாயத்தில் சில நட்சத்திரங்கள், தூரத்தில் மேளங்களின் ஒலி. தாம் ஜாலாலியின் பிணத்தைத் தூக்கிக்கொண் டிருப்பதாக அவருக்குத் தோன்றவில்லை. இது வறண்ட வயல்வெளியல்ல, கோட்டையை ஒட்டிய நடைபாதை. இது ஃபோர்ட் வில்லியம். மேலே புருக்கள் பறந்தன. நடைபாதையில் பாண்டு வாத்தியங்கள் முழங்கின. மத்தள ஒலியில் அவருக்கு இதெல்லாம் நினைவுக்கு வந்தது. அவருடைய தோளில் இருப்பது ஜாலாலியல்ல, யுவதி பாலின், பக்கத்தில் கோட்டை. ஆங்கிலேய சிப்பாய்களின் கூட்டமொன்று அணிவகுததுக்கொண்டு வருகிறது, பாலினை அவரிடமிருந்து பறித்துக்கொண்டு போக. இவ்வாறு நினைத்துக்கொண்டு ஓடத் தொடங்கிஞர் டாகுர்.

டாகுர் மைதானத்தில் ஓடுவதை மற்றவர்கள் பார்த்தார்கள். அவர் பைத்தியக்காரர்; பிணத்தைத் தூக்கிக்கொண்டு எங்கே ஓடுவாரோ? யார் கண்டார்கள்? தவிரவும், அவர் வேறு மதத்தைச் சேர்ந்தவர். அவருடைய தோளில் ஜாலாலியின் சவம். அவர் அதை எடுத்துக் கொண்டு வேறெங்காவது அல்லது ஆற்றின் மறுகரைக்குப் போய் விட்டால் இஸ்லாமுக்கு அபசாரமாகிவிடும். மதவிதிப்படி ஆபேத் அலி கூட இப்போது ஜாலாலியைப் பார்க்கக்கூடாது. அப்படி யிருக்க, இந்த வேற்று மதக்காரர் அவளைத் தூக்கிக்கொண்டு

ஓடுகிறரே! அவர்கள் அவரைத் தொடர்ந்து ஓடி மைதானத்துக்கு நடுவில் அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் மெதுவாக நாலா பக்கங்களிலிருந்தும் அவரை அணுகினர்கள், தாங்கள் அப்படி அணுகுவதை அவர் புரிந்துகொள்ளாதவாறு. புரிந்து கொண்டால் அவர் அவர்களிடமிருந்து தப்பிவிடுவார். முன்பு ஒரு தடவை ஒரு பின்பனிக்கால மாலே நேரத்தில் யானையில் ஏறிக் கொண்டு ஓடிப்போனரே, அதுபோல.

அவர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு உஷாராக நின்ரூர்கள். சாமு அவர் அருகில் போய், ''சின்னம்மாவை இங்கே கொடுங்க!'' என்ருன்.

என்ன ஆச்சரியம்! ரொம்பச் சாது மனிதராக ஆகிவிட்டார் அவர். அவர் சவத்தை மெதுவாக, நோயாளியை இறக்குவதுபோல் தோளிலிருந்து இறக்கிக் கீழே படுக்கவைத்தார். அப்போது சவத்துக் குள்ளிருந்து தண்ணீர் 'களகள'வென்று வெளிவந்து கொட்டியது. சவம் வெளுத்துப் போயிருந்தது. கண்ணின் மணிகள் நிலேகுத்தியிருந்தன. சவம் இமைக் கொட்டாமல் எல்லாரையும் பார்த்துக்கொண் டிருந்தது. கட்டம் போட்ட புடைவை அவழ்ந்திருந்தது, சாமு துணியை எடுத்துத் தண்ணீரைப் பிழிந்துவிட்டு மறுபடியும் அதைக்கொண்டே பிணத்தை மூடினன். பிறகு ஜாலாலியின் சவத்தைத் தூக்கும் உரிமையுடைய உறவுக்காரர்கள் யார் என்று தீர்மானித்து—அவளுக்குப் பிள்ளேமுறை அல்லது தகப்பன் முறையாக இருப்பவர்களுக்குத்தான் அந்த உரிமை உண்டு—அவர்களேக் கூப்பிட்டுப் பிணத்தைக் கட்டச் சொன்னன். பலியிடப் பட்ட எருமையை மூங்கிலில் கட்டித் தூக்கிக்கொண்டு, 'ஜய் யக்ஞேஸ்வர் கீ ஜய்!' என்று கத்திக்கொண்டு மக்கள் போனது போல், இவர்கள், 'அல்லா ரஹ்மானே ரஹீம்!' என்று கத்திக் கொண்டு பிணத்துடன் போனர்கள்.

ஆபேத் அலியின் பீபி அல்லிக்கிழங்கு பறிக்கப் போய்த் தண்ணீருக்குள் முழுகிவிட்டாள். நாடோடிக் கதைகளில் ஒரு தியாகியாக இடம் பெற்றுவிட்டாள் அவள். இந்தப் பரபரப்பு இன்னும் ஒரு வருடம் நீடிக்கும். ஒரு வருடம் ரஸோவும் பூடியும் இந்த மாதிரிதான் தண்ணீரில் முழுகி இறந்துவிட்டார்கள். இந்த விஷயம் ஒருவருக்கும் தெரியாது. ஒரு பின்பனிக் காலப் பிற்பகலில் அவர்களுடைய எலும்புக் கூடுகளேக் கண்டு அந்தப் பிராந்தியத்து மனிதர்கள் திகைத்துப் போனர்கள். அதன் பிறகு அவர்களேப்பற்றி எவ்வளவோ கதைகள்! அந்தப் பிராந்தியத்திலிருந்த படிக்காத, அல்லது அரை குறையாகப் படித்த மக்கள், இரவில் மற்றவர்கள் எல்லாரும் தூங்கிய பிறகு, அந்தப் பக்கத்து ஏரிகள், சுடுகாடுகள், இடுகாடு

களைப் பற்றிய அதிசய நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசிக்கொண்டு பொழுதுபோக்குவார்கள். அம்மாதிரி நிகழ்ச்சிகளை நம்புவது அவர்களுக்குப் பிடித்தமானதாகும்.

மத்தளங்களின் முழக்கம் தெளிவாகிக்கொண்டு வந்தது. இரவு பூராவும் இந்த வாத்தியங்கள் முழங்கும். வயல்வெளி முழுதும் பெட்ரோமாக்ஸ் விளக்கின் ஒளி. இடையிடையே பட்டாசுகள் வெடித்தன. ஆகாய வாணங்கள் உயரே எழும்பின.

மாலதிக்குத் தூக்கம் வரவில்லை. திருவிழாக் காலத்து விருந்துச் சாப்பாடு, வாழைப்பழம், கத்மா, எள்ளுருண்டை, கிச்சடி, பாயசம்...தவிரவும், பெரிய மாமி அவளைத் தனியாகக் கூப்பிட்டு இன்னும் நிறையப் பாயசம் கொடுத்திருந்தாள்.

மாலதி போர்வையைப் போர்த்துக்கொண்டு படுத்தவாறே ஜன்னல் வழியே வயல்வெளியில் நிலவு காய்வதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வாஸ்து பூஜையன்று நிலவு மர்மம் நிறைந்ததாக இருந்தது, ஆஸ்வின் மாதத்து லக்ஷ்மி பூர்ணிமைப் போல. வாணங்கள், பட்டாசுகள்! வயிறு நிறைய லாடு முதலிய தின்பண்டங்கள். இந்த நிலவில் ஜாலாலி நீரில் முழுகிச் செத்துவிட்டாள். நினைக்கும்போதே மாலதிக்கு மூச்சை யடைத்துக்கொண்டு வந்தது. எழுந்து உட்கார்ந்தாள். ஜாலாலியின் பிணத்தைத் தேடப் போனவர்கள் இன்னும் திரும்பி வரவில்லை. அவர்கள் ஆற்றுப் படுகை வழியே நடந்து வரும்போதே அவர்களுடைய பேச்சிலிருந்து அவர்கள் ஜாலாலியின் உடலைக் கண்டுபிடித்தார்களா, இல்லையா என்று தெரிந்துவிடும்.

எவ்வளவு முயன்றும் மாலதிக்குத் தூக்கம் வரவில்லை. அவள் போர்வையை உடலில் சுற்றிக்கொண்டு மௌனமாக, வருத்தத்துடன் ஜன்னலருகே உட்கார்ந்திருந்தாள். அன்று பகல் முழுதும் அவளுக்கு நல்ல வேலை. நைவேத்தியச் சாமான்களை வைப்பதற்காகப் பித்தளைப் பாத்திரங்களைத் தேய்த்திருந்தாள் அவள். நரேன் தாஸுக்குப் பலவிதக் கிறுக்குத்தனங்கள் உண்டு. இந்த வாஸ்து பூஜை நிலத்துக்காக, பயிருக்காக. உயிரைவிட மதிப்பு வாய்ந்தது பயிர். ஆகையால் பூஜையில் எந்தவிதக் குறையும் நேர அவனுக்குப் பொறுக்காது. வேலை விஷயத்தில் கெடுபிடி செய்யும் அவன் இன்று அமூல்யனுக்குக் கூட விடுமுறை கொடுத்துவிட்டான். மாலதி அதிகாலையில் எழுந்தது முதல் பால் பாத்திரங்களையும் மற்றப் பித்தளைப் பாத்திரங்களையும் தேய்த்துக்கொண்டே இருந்தாள். அதற்கப்புறம் நாள் முழுதும் வீட்டுக்கும் வயலுக்கும் அலைச்சல். வாஸ்து பூஜை வயலில் நடக்கும். அதற்கு வீட்டிலிருந்து எல்லாச் சாமான்களையும் எடுத்துக்கொண்டு போகவேண்டும். பூஜைக்குப்

பிறகு எல்லாவற்றையும் மறுபடி வீட்டுக்கு எடுத்துவர வேண்டும். ஆபுவும் சோபாவும் அவளுக்குச் சற்று உதவி செய்தார்கள். மற்றப்படி எல்லா வேலையையும் அவளே செய்யவேண்டியதாயிற்று. அமுல்யன் நடுப்பகல் வரையில் இருந்துவிட்டுப் பிறகு வீட்டுக்குப் போய்விட்டாள். ஆகையால் அவளுக்கு மாலைநேரம் வரையில் மூச்சு விடக்கூட நேரம் இல்லை. ஆகவே அவள் சீக்கிரம் தூங்க எண்ணிக் கைகால்களை அலம்பிக்கொண்டு படுத்தாள். ஆனால் அவள் அதிர்ஷ்டம், தூக்கம் வரவில்லை. ஏதோ ஒரு நம்பிக்கையில் நெஞ்சு அடித்துக்கொண்டது அவளுக்கு. நிலவொளியில் திறந்த வெளியில் போய்த் தனியாக நிற்கத் தோன்றியது அவளுக்கு. அவளுடைய அன்புக்குரிய மனிதன் ஒருவன் மட்டும் அவள்கூட இருக்க வேண்டும். அவளுக்குப் பிரியமான அந்தச் சுயநலக்கார ராட்சசனின் நினைவு வந்தது அவளுக்கு.

அந்த ராட்சசன் நாள் முழுதும் பிரசாதம் சாப்பிட்டுக்கொண்டு சுற்றிக்கொண் டிருந்தான். மாலதியின் பூஜையைப் பார்க்க ஒரு தடவைகூட வரவில்லை. சர்க்கார் வீட்டாரின் வாஸ்து பூஜையைப் பார்க்க மாலதி விட்டு வயல் பக்கமாகச் சென்றவன் அவள் இவ்வளவு நியமநிஷ்டையுடன் செய்யும் பூஜையைப் பார்க்க வரவில்லை. ஏமாற்றமும் கோபமும் உள்ளூறப் பொங்கிக்கொண்டு வந்தது அவளுக்கு. அந்த மனிதனுடன் கோபித்துக்கொண்டே அவள் நாள் முழுதும் காரியங்கள் செய்தாள். இந்தக் கோபத்தின் கடுமை அவளை வருத்தியது. அந்த ஆளுக்குக் கர்வம் அதிகமாகி விட்டது. தேச சேவை செய்கிறேமென்ற கர்வத்தில் அவனுக்குக் கால்கள் கீழே பாவவில்லை.

நிலவில் வயல்வெளி மிதந்தது. மரங்களும் செடிகளும் வெள்ளையாகத் தெரிந்தன. எங்கும் கொஞ்சங்கூட இருட்டு இல்லை. எவ்வளவோ காலமாக இந்த மாதிரி நிலவு வந்ததில்லை. இம்மாதிரி நிலவு இருந்தால் தூக்கம் வருவதில்லை.

நிறையச் சாப்பிட்டதால் வயிற்றில் சங்கடம் ஏற்பட்டு அதன் காரணமாகத் தூக்கம் வரவில்லை என்று மாலதி முதலில் நினைத்தாள். ஏமாற்றத்தாலும் கோபத்தாலும் தூக்கம் வரவில்லை, அல்லது அந்த மனிதன் தனக்கருகில் இருக்கவேண்டும் என்று ஆசையாக இருக்கலாம். நெஞ்சுக்குள் ஒரே எரிச்சல். நடுநடுவே நெஞ்சு படபடத்தது. அவன் இதோ வந்துவிட்டான், மௌனமாக ஜன்னலுக்குப் பக்கத்தில் வந்து நிற்பதுபோல் தோன்றியது. ஆனால், இல்லை, இல்லை, ஒருவனும் வரவில்லை. ஒருவனும் வரமாட்டான். அவள் தனியே விழித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியது தான். மாலதி மறுபடியும் படுத்துக்கொண்டாள். நிலவின் ஒளி

அவள் முகத்தில் பரவியது. அடிவானம் வரையில் வயல்வெளி நிலத்தில் மிதந்தது. அவள் தன் கழுத்தைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்கொண்டாள். எவ்வளவு மிருதுவாக, அழகாக இருக்கிறது இந்த உடம்பு! அவள் உள்ளூறச் சலனமடைந்தாள். ரஞ்சித்தை மறப்பதற்காகத் தன் கணவனைப்பற்றி நினைக்க முயற்சி செய்தாள். தன் மனச்சலனத்தைப் போக்கிக் கொள்வதற்காக, தான் தன் கணவனுடன் வாழ்ந்த காட்சியை நினைவுறுத்திக் கொண்டாள். ஆனால் அந்தப் பழைய — இப்போது அலுத்துவிட்ட — காட்சியை வைத்துக்கொண்டு காலந்தள்ள முடியாது. அந்தக் காட்சி இப்போது அவளுக்கு எவ்வித உற்சாகமும் அளிக்கவில்லை.

அவள் தன் போர்வையை இழுத்து அதைக் கொண்டு முகத்தை இறுக மூடிக்கொண்டு ஓர் இடத்திலும் நிலவு இல்லை என்று நினைத்துக் கொண்டாள். இப்போது அவளைச் சுற்றி இருட்டு. பட்டணத்தில் நடந்த கலகம் அவளுடைய கனவை முடித்துவிட்டது. புதிதாகக் கனவு காண்பது பாவம். இந்தப் பாவத்துக்குப் பயந்து மாலதி போர்வைக்குள் தன் முகத்தை மறைத்துக்கொண்டாள். இருட்டில் தன்னந்தனியே பாவம் செய்துகொண்டு திரிந்தால், அது யாருக்குத் தெரியும்?

கணவனின் முகம் நினைவுக்கு வரவில்லை. கணவனுடன் தான் வாழ்ந்த வாழ்க்கையின் சித்திரம் காலண்டரின் தாள்களைப் போல அன்றாட விஷயங்களாகிவிட்டன. இந்நிலையில் அவளுடைய மெல்லிய, அழகிய விரல்களின் ஸ்பரிசம் அவளுடைய உடலில் மயிர்க்கூச்சத்தை உண்டாக்கியது. விரல்கள் அவ்வுடலில் பாவம் செய்துகொண்டு திரிந்தன; அவை உடலுக்கு வெறியூட்டின. சதி சாவித்திரியைப் போல் புண்ணியவதியாக இல்லாமல் இருட்டில் மனத்தில் ரஞ்சித் என்ற இளைஞனை நினைத்துக்கொண்டு தன் உடலிலேயே பாவத்தைத் தேடித் திரிவது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. இந்தப் பாவம் அவளுக்கு உயிரைவிட மேலாகத் தோன்றியது.

அடிபட்ட பாம்பு சாவதற்கு முன்னால் ஒரு தடவை உடம்பைச் சுருட்டிக்கொண்டு, பிறகு அதை விரித்து நேராக்கிவிட்டுச் செத்துக் கிடப்பதைப்போல் மாலதி தன் தேகத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகச் சுருட்டிக் கொண்டாள், பிறகு திடீரென்று அதைப் பரப்பிக் கொண்டாள். ஆதரவற்ற ஓர் அநாதைக் குரல் அவளுடைய உள்ளத்தில் ஒளிந்திருந்தது. உடலில் — உலகில் அவளுக்கென்று ஒன்றும் இல்லாதது போல, அவள் தன்னுடையது எதையோ இழந்துவிட்டதுபோல, அவள் தன் உடல் முழுதும் காதலைத் தேடிப் பார்த்தாள். இந்த ஆராய்ச்சி அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. இந்தக் காதல் உணர்வு மனிதனுக்குள்ளே எப்படி உண்டாகிறது?

எந்த இருளிலிருந்து அது எட்டிப் பார்க்கிறது, எப்போது அது பாவ புண்ணியங்களுக்குத் தலை முழுகிவிட்டுத் துறவிபோல் பைத்திய மாகிவிடுகிறது? இதையெல்லாம் சொல்ல யாராலும் முடியாது. மாலதி பெருமூச்சு விட்டுக்கொண்டே இருந்தாள். ஒரு நாடோடிப் பாடகன் அவளுடைய உடலில் நாடோடிப் பாட்டை இசைக்கிறான்; 'ரசமாகிய விரல்களைக் கொண்டு வாத்தியமாக என்னை வாசி!'

அப்புறம் சக்கரவாகப் பறவையின் கூவலைப்போல் 'டுப், குப்' என்ற ஒலி. மாலதி அயர்ந்து போய்விட்டாள். இதென்ன? படுகையில் யாரோ ஓடுகிறார்களே! வானத்தைப் பிளக்கும்படி உருக்கமாக அழுவது யார்? அழுபவனை அடையாளங் கண்டுகொள்வது மாலதிக்குக் கஷ்டமாக இல்லை; ஜப்பார்தான்! அல்லிக்கிழங்குப் பறிக்கச் சென்ற அவனுடைய தாய் இறந்துவிட்டாள். இப்படி அழ எப்போது கற்றுக்கொண்டான் ஜப்பார்? வானத்தைப் பிளப்பது போல், குழந்தை போல், அழுகிறான் ஜப்பர்—''அம்மா! அம்மா!''

மாலதி வெள்ளை நிலவில் வெளியே ஓடிவந்தாள். பிணத்தை மூங்கிலில் வைத்துக்கொண்டு இந்தப் பக்கம் வந்தான் சாமு.

படுகையிலிருந்து வந்த சப்தத்தைக் கேட்டு அண்டை அயலார் யாவரும் விழித்துக் கொண்டார்கள். சாயங்காலத்திலிருந்தே வீட்டுப் பெண்களும் வேலைக்காரிகளும் கிணற்றங்கரையிலிருந்தும் குளத்தங்கரையிலிருந்தும் சீதாமர வேலியின் இடுக்கு வழியாகவும் பார்த்துக்கொண் டிருந்தார்கள். ஜாலாலியின் உடலை எடுத்து வருவதைப் பார்க்கத் துடியாய் இருந்தார்கள்.

சாம்சுத்தீன் தன் கோஷ்டியுடன் போயிருக்கும்போது பிணத்தைக் கொண்டுவர எவ்வளவு நேரம் ஆகப்போகிறது! ஆனால் ஏரியின் மாய சக்தியில் நம்பிக்கை வைத்திருந்த கிழவர்கள் நினைத்தார்கள், சாம்சுத்தீன் செய்யும் முயற்சி வீண்தான் என்று. அவர்கள் வீட்டுக் கூடத்தில் அல்லது வாசலில் உட்கார்ந்துகொண்டு ஏரியின் மாய சக்தியைப் பற்றிய கதைகளையெல்லாம் சொல்லிக்கொண் டிருந்தார்கள், ஹுக்கா பிடித்தவாறு. அவர்களுடைய சிறு குழந்தைகள் அவர்களுக்கருகில் கூட்டங் கூட்டமாக உட்கார்ந்துகொண்டு அந்தக் கதைகளைக் கேட்டுக்கொண் டிருந்தார்கள்.

ஈசம் சோனுவுக்கு அந்தக் கதையைச் சொன்னன்.

ஒரு பின்பனிக் காலத்து இரவில் சோனுபாபு பிறந்தார். ஈசம் வயலில் தர்மூஜ் கொடிகளைக் காவல் காத்துக்கொண் டிருந்தான். அப்போது ஸோனுலி பாலி ஆற்று மண்ணில் பூக்கள் பூத்திருக்க வேண்டும். பயிர் அறுவடை முடிந்துவிட்டது. சோனுபாபு பிரசவ அறையில் பூனையைப் போல் 'மியா, மியா' என்று அழுதார்.

தான் 'மியா, மியா' என்று அழுததாக ஈசம் சொன்னதைக் கேட்டு "நீங்க பொய் சொல்றீங்க" என்று சோனு சொன்னன்.

"இல்லே, எசமான். நான் பொய் சொல்லலே. தலையிலே முண்டாசைக் கட்டிக்கிட்டுக் கிளம்பினேன், தனபாபுவுக்குத் தகவல் சொல்ல. அப்போ என்ன இருட்டு, தெரியுமா? கும்மிருட்டு. பாமுந்தி மைதானத்திலே ஒரு பெரிய இலவமரம் இருக்கே, அது தலையிலே ஒரு விளக்கை வச்சுக்கிட்டு என்கிட்டே நடந்து வர்றமாதிரி இருந்திச்சு. எனக்கு ரொம்பப் பயம். யாரோ என்னை ஏரிக்குள்ளே அமுக்கிடப் பார்க்கிறப்பலே எனக்குத் தோணிச்சு."

"கொல்லப் பார்க்கருப்பலேயா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் சோனு.

"ஆமா! நான் என்ன சொல்லுவேன்? ஏரியிலே இருக்கற தேவதையை நாங்க பார்த்ததில்லே. அழகான பொண்ணு, தங்கப் படகுலே ஏறிக்கிட்டு, காத்தாலே பண்ணின துடுப்புடன் 'புஸ்'ஸுனு தண்ணியிலேருந்து கிளம்பி வருவாளாம்! அவ இருட்டு ராத்திரிலே படகிலே போகமாட்டாளாம். நிலாவிலேதான் போவாளாம். பௌர்ணமி ராத்திரியிலே அதைப் பார்க்கப் பிரமாதமா இருக்குமாம். என்ன வெள்ளை, என்ன வெள்ளை!"

ஈசம் பாடத் தொடங்கினன்: "அவ தண்ணியிலே முழுகிப் போயிட்டா, இப்போ மிதக்கிறதில்லே."

சோனுவுக்கு ஏனோ இந்தக் கதை பிடிக்கவில்லை. ஏரியைப் பற்றிய மாயக்கதைகள் அவனுக்குக் கிலியை உண்டாக்கின. 'அவ முழுகிப் போயிட்டா. இப்போ மிதக்கறதில்லே.'

ஏனோ அவனுக்குத் தன் தாயின் நினைவு அடிக்கடி வந்தது. அன்று சாயங்காலம் அவள் அவனைத் திட்டியிருந்தாள்; "நீ எங்கே போறே, எங்கே இருக்கேனு தெரியவே இல்லே. நீ என்னிக்காவது ஒரு நாள் தண்ணீயிலே முழுகிச் சாகத்தான் போறே!"

தாய் சொல்வது சரிதான் என்று சோனுவுக்குத் தோன்றியது. காட்டிலும் மேட்டிலும் சுற்ற அவனுக்கு எப்போதும் ரொம்ப ஆசை. இந்த வழக்கம் அவனை எப்போது பிடித்துக்கொண்டது என்று அவனுக்குத் தெரியாது. இப்போது அவனைக் கிலி பிடித்துக் கொண்டது.

ஒரு நாள் அவன் யாரிடமும் சொல்லாமல் வயல்வெளிக்குப் போய் விடுவான். அப்புறம் அந்த ஏரி; அதில் இறங்கவேண்டுமென்ற வெறி அவனுக்கு. அவன் அதில் முழுகிவிடுவான், யாரும் அறியாமல்.

அவன் தனக்குள் சபதம் செய்துகொண்டான், இனிக் காட்டில் கண்டபடி திரிவதில்லை என்று. இனிமேல் அவன் தனியாகவோ, பைத்தியக்காரப் பெரியப்பாவுடனோ காடுகளில் சுற்றப் போவதில்லை. போனால் கதையில் வந்தமாதிரி ஆகிவிடும். 'தண்ணியிலே முழுகிப் போயிட்டா, இப்போ மிதக்கறதில்லே!' இனி அவன் குளமோ, நிலமோ எங்கும் சுற்றமாட்டான். அம்மா எப்போதும் அவனுக்காகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அவளுடைய கண்களில் தெரிந்த பயத்தின் சாயை அவனை நினைக்க வைத்தது, அவன் இனிமேல் ஒழுங்கானவனாக, உண்மை சொல்பவனாக இருக்க வேண்டுமென்று. ஈசுவர சந்திர வித்யாசாகர் தம் அம்மாவுக்காகத் தாமோதர் ஆற்றை நீந்தியே கடந்தாராம். அதுபோல் அவனும் தன் தாயை நேசிக்கவேண்டும். அவள் வார்த்தையைத் தட்டக் கூடாது. அவன் தன் தாய்க்காக எதுவும் செய்யத் தயாராக இருக்க வேண்டும். தன் தாயின் நினைவு வரும்போதெல்லாம் அவனுக்கு ஈசுவர சந்திரரின் நினைவு வந்தது. அவனும் ஈசுவர சந்திரரைப் போல் லட்சியவாதியாக, எப்போதும் உண்மை பேசுபவனாக இருக்கவேண்டும். தன் அம்மாவுக்குப் பிடித்ததையே செய்ய வேண்டும், பிடிக்காததைச் செய்யக்கூடாது.

ஈசம் பாடினான்: "முழுகிப் போயிட்டா, இப்போ மிதக்கறதில்லே!"

வாசலில் உட்கார்ந்திருந்த அவர்களுக்கு, உள்ளே பெரிய அறையில் தாத்தா இருமுவது காதில் விழுந்தது.

ஈசம் பாட்டை நிறுத்திவிட்டு, "உங்களுக்குத் தெரியுமா, எசமான்? சாயங்காலம் ஆயிட்டா, ராஜகுமாரி சூரியனைக் கையிலே பிடிச்சுக்கிட்டு ஏரியிலே முழுகிடுவா" என்றான்.

"அப்புறம் மிதக்கமாட்டா?"

"மிதப்பா. ராத்திரிப் பூரா சூரியனைக் கையிலே வைச்சுக்கிட்டே தண்ணிக்கு அடியிலே நீந்துவா. நீந்திக்கிட்டே ஆத்திலேருந்து சமுத்திரத்துக்குப் போவா—பெரிய சமுத்திரத்துக்கு! அதிகாலையிலே கிழக்குப் பக்கம் மேலே கிளம்புவா. சூரியனை ஆகாசத்துலே இழுத்து விடுவா. அப்புறம் மறைஞ்சுடுவா."

"எங்கே மறைஞ்சுடுவா?"

"ஏரித் தண்ணிக்குள்ளே!"

"நீங்க பார்த்திருக்கீங்களா?"

"நான் என்ன பார்க்கறது, எசமான்? உங்க அம்மாவைக் கேளுங்க. உங்க பைத்தியக்காரப் பெரியப்பாவைக் கேளுங்க."

அப்படியும் இருக்கலாம் என்று நினைத்தான் சோனு. பெரிய ஏரி. ராஜகுமாரிக்குத் தங்கப் படகு இருக்கிறது. காற்றுல் ஆன துடுப்பு. அவள் ஆற்றிலிருந்து சமுத்திரத்துக்குப் போய்ச் சேர எவ்வளவு நேரமாகும்? அவள் சமுத்திரத்தில் வெகுதூரம் போய்விடுவாள். 'அப்படியானுல் இப்போது ராஜகுமாரி வடக்குக் கடலில் இருக்கிருளா, தெற்குச் சமுத்திரத்தில் இருக்கிருளா?' என்று கேட்கத் தோன்றியது சோனுவுக்கு. கையில் தங்கமீனைப் போல் சூரியனை வைத்துக்கொண்டு எந்தச் சமுத்திரத்தில் நீந்திக்கொண் டிருக்கிருள் ராஜகுமாரி?

அதிகாலையில் ராஜகுமாரி கிழக்குக் கடலில் மிதந்துவந்து சூரியனை வானத்தில் இழுத்து விட்டுவிட்டுப் போவதாகவும் அப்புறம் தண்ணீருக்குள் முழுகிவிடுவதாகவும் ஈசம் சொன்னுன். இவ்வளவு நாளுக்கப்புறம் சூரியனின் தந்திரத்தைக் கண்டுபிடித்துவிட்டான் சோனு.

'சூரியன் எங்கே போகிருன்?' என்ற கேள்வியை எவ்வளவோ தடவை கேட்டிருக்கிருன் சோனு. அவன் பெரியவனுன பிறகு இந்த ரகசியத்தை தெரிந்துகொள்வான் என்று அவனுடைய அப்பா சொல்லியிருந்தார். இப்போதே அவனுக்கு ரகசியம் தெரிந்துவிட்டது. சூரியனின் மாமா மாமி வீடு ஏரிக்கு அடியில் இருக்கிறது. அங்கேதான் போகிருன் சூரியன்.

சோனு சும்மா உட்கார்ந்திருந்தான். ஈசம் ஏதோ வேலையாக மாட்டுத் தொழுவத்துக்குப் போனுன். தனியாக உட்கார்ந்திருக்கப் பயமாக இருந்தது சோனுவுக்கு. அவன் உடனே எழுந்து உள்ளே போனுன். அங்குத் தாத்தாவும் பாட்டியும் இருந்தார்கள். மரக் கட்டிலின்மேல் தாத்தா தம்மைச் சுற்றிப் பெரிய பெரிய திண்டுகளைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அவருடைய தலைப்புறத்தில் ஒரு விளக்கெண்ணெய் விளக்கு எரிந்தது. அதன் ஒளி நீலமாக இருந்தது. அது அவருடைய முகத்திலும் கண்களிலும் மின்னலைப் போல் பிரதிபலித்தது. பாட்டி சந்தியா காலப் பூஜைக்காகப் பூஜையறைக்குப் போய்விட்டாள். பாட்டி அறையிலிருந்த வரையில் அவளுடனேயே ஒட்டிக்கொண் டிருந்தான் சோனு. அப்போது அவனுக்கு ஈசுவர சந்திரரின் நினைவு மறுபடியும் வந்தது; தாமோதர் நதியின் நினைவு வந்தது.

அவன் மறுபடியும் தீர்மானித்துக் கொண்டான்: அவன் தன் தாய்க்காக எதுவும் செய்யத் தயார்! சுற்றி வளைத்துக்கொண்டு அந்த நினைவு வந்தது: ஏரியில் ராஜகுமாரி, வயல்வெளியில் பாதிமா. அவன் பாதிமாவைத் தொட்டுவிட்டான்; ஆனுல் ஸ்நானம் செய்யவில்லை. இதைக் கேட்டால் அவனுடைய அம்மா கோபிப்பாள். அம்மாவின் கடுமையான முகபாவத்தைக் கற்பனை செய்தபோது அவனுக்கு

அழுகை வரும்போல் இருந்தது. அவனுடைய அம்மா இன்று பட்டுப் புடைவை கட்டிக்கொண் டிருந்தாள். விசேஷ நாட்களில் பட்டுப் புடைவைதான் உடுத்துவாள் அவள். அப்போது அவளைப் பார்த்தால் பெரிய வீட்டுப் பெண்மாதிரி இருக்கும். தண்ணீரைப் போல் நிர்மலமாக, வெள்ளை ஆம்பல் பூவைப் போல் பவித்திரமாக இருப்பாள் அவள். அப்படிப்பட்டவளுக்கு அருகில் அசுத்தமாகி விட்ட உடம்புடன் இருப்பதே பாவம். என்ன செய்வது என்று புரியவில்லை சோனுவுக்கு. 'அம்மா, என்னைப் பாத்திமா தொட்டு விட்டாள்' என்று சொல்லிவிடுவதா? அல்லது பேசாமலிருந்து விடுவதா? பயங் காரணமாக உள்ளூற நடுக்கமாயிருந்தது அவனுக்கு. அவன் ஒரே ஓட்டமாய் ஓடி மேற்குப் பக்க அறைக்குள் நுழைந்தான்.

"என்ன குளிர், என்ன குளிர்!" இந்தக் குளிரில் ஸ்நானம் செய்வது ரொம்பக் கஷ்டம். சோனு தன் மேலிருந்த சால்வையை இன்னும் நன்ருக இழுத்துப் போர்த்துக் கொண்டான். பிறகு தன் தாய்க்கு அருகில் போய் உட்கார்ந்துகொண்டான். இப்போது அவனுக்கு ஸ்நானம் செய்யும் விஷயம் மறந்துவிட்டது. ஏரியில் இருக்கும் ராஜகுமாரியின் நினைவுதான் வந்தது. அவள் தன்னுடைய வாயில் வெள்ளைச் சூரியனைக் கவ்விக்கொண் டிருக்கிருள். வாயில் சூரியனைக் கவ்விக்கொண்டு அவள் மீனைப்போல் தண்ணீருக்கடியில் நீந்துகிருள்.

அன்று இவ்வளவு அலைந்ததில் அவனுக்குக் களைப்பாக இருந்தது. அவன் இரவில் சாப்பிடக்கூட இல்லை. மரக்கட்டிலில் படுத்துக் கொண்டு தூங்கிவிட்டான். இன்றைக்கு அவனுக்குப் படிக்க வேண்டியதில்லை. விசேஷத்தை முன்னிட்டு விடுமுறை அவனுக்கு. இன்றிரவு சிலம்பப் பயிற்சியும் கிடையாது. ஹவிஸ் சமைக்கப் போயிருந்த லால்ட்டுவும் பல்ட்டுவும் இன்னும் திரும்பவில்லை. மாலை நேரம் முழுதும் அவன் பெரும்பாலும் தனியாகவே இருந்தான். பெரியம்மா சமையலறையில் இருந்தாள். இன்று இரவுச் சமையல் கிடையாது. தாத்தா வேகவைத்த பழங்களை மட்டும் சாப்பிடுவார். பாட்டி சூடான பால் மட்டுமே குடிப்பாள். அவர்களுக்கு இவற்றைத் தயார் செய்து கொடுத்துவிட்டால் அம்மா – பெரியம்மாவுக்கு ஓய்வுதான்.

அம்மா இப்போது அறையை விட்டுப் போனுள். சோனு மட்டும் அங்கே தனியாக இருந்தான். அரிக்கேன் விளக்கு அணையும் போலிருந்தது. தகரத்தாலான கூரை. அதில் மூடுபனி படர்ந் திருந்தது. சொட்டுச் சொட்டாகத் தண்ணீர் கீழே விழுந்தது, 'டப், டப்' என்ற சப்தத்துடன். சோனு உற்றுக் கேட்டான்.

யாரோ மேலே நடக்கும் ஒலி. அவன் தன் அம்மாவைக் கூப்பிட்டுத் தனக்குப் பயமாயிருக்கிறது என்று சொல்ல நினைத்தான். மற்ற நாட்களில் பயமாக இருப்பதில்லை அவனுக்கு. ஆனால் இன்று அம்மாவைக் கூப்பிடத் துணிவு உண்டாகவில்லை அவனுக்கு.

ஒருத்தி இன்று தண்ணீரில் மூழ்கிச் செத்துப் போய்விட்டாள். எருமையின் வெட்டப்பட்ட தலையை அதன் வயிற்றின்மேல் வைத்துத் தூக்கிக்கொண்டு போனார்கள். இந்தக் காட்சிகளை நினைத்ததும் அவன் போர்வையால் தன் முகத்தை மூடிக்கொண்டான். தன் உடம்பு அசுத்தமாகிவிட்டது நினைவுக்கு வந்தது. அவன் பாதிமாவைத் தொட்டும் ஸ்நானம் செய்யவில்லை. சரீரம் அசுத்தமாக இருந்தால் பிசாசுகள் பிடித்துக்கொள்ளும். அந்த ஆவிகளிலிருந்து தன்னைக் காத்துக்கொள்வதற்காக அவன் போர்வையால் தன் உடம்பை மூடிக்கொண்டான். சிறுவர்களுக்குத்தான் எத்தனைவிதப் பயங்கள்! கொஞ்சம் இடுக்குக் கிடைத்தால் பிசாசு அவனுடைய உடம்புக்குள் புகுந்துவிடும் என்று அவனுக்குத் தோன்றியது. அது அவனுக்குக் குறுகுறுப்பு மூட்டிச் சிரிக்கவைத்தே சாகடித்துவிடும், அல்லது அவனுடைய மூக்கில் ஒருவித வாசனையைத் தேய்த்து விடும். தேய்த்ததும் அவன் அதனுடைய அடிமையாகிவிடுவான். அது அவனைத் தன்னோடு ஏரித் தண்ணீரின்மேல் நடக்கச் சொல்லும்.

அவனுக்கு உள்ளூறக் கஷ்டமாக இருந்தது, தன் தாய் தந்தையரை நினைத்து. அவன் போர்வைக்குள் தன்னை நன்றாகச் சுருட்டிக் கொண்டான். பிசாசுகள் அந்த அறையை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு குசுகுசுவென்று பேசிக்கொண்டன. சோனு மனசுக்குள் சாமி பெயரைச் சொல்லிக்கொண்டான். அப்போது விளக்கு அணைந்து, அறை முழுதும் இருட்டாகிவிட்டது. சோனு போர்வைக்கு வெளியே முகத்தை நீட்டினான். ஜன்னலுக்கு வெளியே நிலா ஒளியில் ஏதோ ஒரு முகம் தெரிந்தது. ஜாலாலிதான் எட்டிப் பார்க்கிறாளோ? பயந்துபோய் உரக்கக் கத்திவிட்டான் சோனு. வெட்டப்பட்ட எருமைக் கழுத்தை வைத்துக்கொண்டு ஜாலாலி அவனைப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

அவனுடைய கூச்சலைக் கேட்டுத் தனமாமி ஓடிவந்தாள். சோனுவின் உடம்பு நடுங்கிக்கொண் டிருந்தது. அவன் ஜன்னல் பக்கமாக எதையோ விரலால் சுட்டிக் காட்டினான். ஜன்னல் வழியே நிலவைத்தான் பார்த்தாள் தனமாமி.

"ஏன் கத்தினே?"

"ஒரு மனுஷி."

''மனுஷி எங்கேயிருந்து வருவா? தூங்கு தூங்கு!''

சோனு பயந்துகொண்டே, அழுதபடி, ''அம்மா, என்னைப் பாதிமா தொட்டுட்டா!'' என்றான்.

''மறுபடி அந்த மூதேவிகிட்டேப் போனியா?''

சோனு தன் குற்றத்தை மறைத்துவிட்டுச் சொன்னான்: ''இல்லே அம்மா! நான் அவளைத் தொடவேயில்லை.''

அம்மா ஒன்றும் பேசவில்லை. அவள் பூஜையறைப் பக்கம் போனாள். பட்டுப் புடைவை, மல்லிகை மணம், அவளுடைய உடம்பில் சந்தன வாசனை. சோனுவின் கண்களுக்கு அவனுடைய அம்மா புஷ்பக் கன்னிகையாகத் தோன்றினாள். சோனு அவள் மேலே படாமல் அவளுக்குப் பின்னால் போனான். இப்போது இருட்டு இல்லை, வயல்களும் ஆற்றங்கரையும் நிலவில் மிதந்தன. ஈசம் இதற்குள் தர்முஜ் வயலுக்குப் போய்ச் சேர்ந்திருப்பான். ரஞ்சித் முன்னறையில் உட்கார்ந்துகொண்டு ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். தனமாமி முற்றத்தைத் தாண்டினாள். அவளுக்குத் தன்மேல் ரொம்பக் கோபம், அவள் தன்னைக் குளத் துக்கு அழைத்துப் போகிறாள் என்று சோனு நினைத்தான். அங்கே போய்ச் சேர்ந்ததும் அவனைக் குளிக்கச் சொல்லப் போகிறாள். தண்ணீரோ பனிக்கட்டி மாதிரி இருக்கும். பயந்து நடுங்கிவிட்டான் சோனு.

பவழமல்லிகை மரத்தடிக்கு வந்ததும் தனமாமி சோனுவை அங்கே நிற்கச் சொல்லிவிட்டுப் பூஜையறையைத் திறந்தாள். ஒரு தாமிரப் பாத்திரத்திலிருந்து துளசி இலையும் கொஞ்சம் அபிஷேக தீர்த்தமும் எடுத்தாள். தீர்த்தத்தைச் சோனுவின் மேலும் தன் மேலும் தெளித் துக்கொண்டாள். சோனுவை 'ஆ'வென்று வாயைத் திறக்கச் சொல்லிவிட்டு, அதற்குள் துளசி இலையைப் [போட்டுச் சாப்பிடச் சொன்னாள். உடனேயே தன் உடம்பிலிருந்து எல்லாப் பயமும் மாயமாய்ப் பறந்தோடி விட்டதாகத் தோன்றியது சோனுவுக்கு. அவன் தன் தாயை இறுகக் கட்டிக்கொண்டு சொன்னான்: ''அம்மா, இனிமே நான் வயல்காட்டுக்குத் தனியாப் போகமாட்டேன்!''

தனமாமி சோனுவுக்குப் பதில் சொல்லவில்லை. அவள் தாமிரப் பாத்திரத்திலிருந்து ஒரு கை தண்ணீரை எடுத்துக்கொண்டு வேகமாக அறைக்குள் போய்க் கட்டில் மேலும் படுக்கை மேலும் தெளித் தாள். அப்போது ஆற்றங்கரையிலிருந்து, ஜப்பர் அழும் சப்தம் கேட்டது.

பெரிய மாமி அவசர அவசரமாக வீட்டுக்கு வெளியே வந்தாள். ரஞ்சித்தும் எல்லாவற்றையும் போட்டுவிட்டு வெளியே வந்தான்.

தனமாமி கதவை வெளியிலிருந்து தாழிட்டாள். எல்லாரும் குளத் தங்கரைப் பக்கம் போனூர்கள். அவர்களுக்குப் பின்னுல் சோனு.

தீனபந்து, தன்னுடைய இரு மனைவிகள், சுகி துக்கியுடன் மகிழமரத்தடியில் வந்து நின்ருன். பிரதாப்சந்தா தன் வீட்டு மொட்டை மாடியில் வந்து நின்ருன். அவனுடைய மூன்று மனைவி களும் குழந்தை குட்டிகளும் கூட வந்து நின்ருர்கள், ஜாலாலியைப் பார்ப்பதற்காக. ஸ்ரீசந்தா, நாவிதர் வீட்டுக் கவிராஜ், கௌர் சர்க்காரின் குழந்தைகள்—எல்லாரும் மூங்கில் புதருக்கருகில் வந்து நின்ருர்கள். பூதத்தைப் பார்க்கப் போவது போன்ற உணர்வு. தண்ணீரில் முழுகிப் போனவள் இப்போது வரப்போகிருள். நிலவு கூட மங்கி வெளுத்திருந்தது. ஒரு வாழையிலை அசைந்தால் கூடத் தெரியும். அவ்வளவு அமைதி எங்கும். ஆகாயத்தில் மேகம் சிறிதும் இல்லை. வெள்ளை மேகங்கள் ஆகாயத்தில் இருந்தால், காற்று வீசிக் கொண்டிருந்தால், புதர்களில் பூச்சிகள் பறவைகள் ஒலியெழுப் பினுல் இவ்வளவு பயங்கரமாகத் தோன்ருது. மத்தளங்களின் ஒலி கூட நின்றுவிட்டது. பயங்கரமான, மங்கிய நிலவு வெளிச்சத்தில் மனிதர்கள் கூட்டமாக வருவதை அவர்கள் பார்த்தார்கள். சோனு தன் தாயை இறுகக் கட்டிக்கொண்டான். எருமையின் அறுபட்ட தலை மறுபடியும் எட்டிப் பார்க்குமோ என்று அவனுக்குப் பயம்.

தனமாமி உடனே சோனுவைத் தூக்கி வைத்துக்கொண்டாள். மூங்கிலுடன் சேர்த்துக் கட்டியிருந்த பிணம் அசைந்து அசைந்து கொண்டு வந்தது. சாம்சுத்தீனுடன் ஏதாவது பேசலாமென்று ரஞ்சித் நினைத்தான். ஆனுல் அவன் வயல்பக்கம் திரும்பிப் பார்த்த போது அங்கு இன்னும் திருவிழாவின் அடையாளங்கள் இருப் பதைக் கண்டான். மேலும், சற்று நேரத்தில் சர்க்கார் வீட்டுக் குளத்தங்கரையில் வாணவேடிக்கை ஆரம்பிக்கும். இந்த நிலையில் சாம்சுத்தீனுடன் பேசத் தயக்கமாயிருந்தது ரஞ்சித்துக்கு.

அன்று பிற்பகலில் கண்ட காட்சி நினைவுக்கு வந்தது சோனுவுக்கு. வெட்டப்பட்ட எருமையின் வயிற்றின்மேல் அதன் தலை சவாரி செய்துகொண் டிருந்தது. இப்போது எதிரில் காணும் காட்சித் தெளிவாக இல்லை. ஆனுல் ஜாலாலியின் தலை கீழ்ப்பக்கமாகத் தொங்குவதாகத் தோன்றியது சோனுவுக்கு. அவளுடைய தலை மயிர் சணலைப் போல் விறைத்துக்கொண் டிருந்தது. சோனு தன் தாயை இன்னும் இறுகக் கட்டிக்கொண்டான். இந்தக் காட்சி அவளிடம் ஓர் இறுக்கத்தை உண்டு பண்ணியது.

இப்படி நேருவது இயற்கைதான். பிறருடைய கஷ்டத்தைப் பார்க்கும்போது வேதனையுணர்வு எல்லாரிடமும் ஒட்டுவாரொட்டி போல் பரவி விடுகிறது. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள்

எல்லாருமே எல்லாவற்றையும் விட்டுவிட்டுப் போய்விட வேண்டும் என்று தோன்றுகிறது.

உலகம் முழுதும் நிலவொளி பரவியது. பெரிய மாமி மருத மரத்தடியில் நின்ருள். ஜாலாலியின் பிணத்தைத் தூக்கிக்கொண்டு வந்தவர்கள் வயலைக் கடந்து சென்றுவிட்டார்கள். அப்புறந்தான் எல்லாரும் பார்த்தார்கள் ; அந்த மனிதர், நாடோடிக் கதைகளின் கதாநாயகர் ராஜாவைப் போல் கம்பீரமாக நடந்து வருவதை.

வெள்ளை நிலவில் பைத்தியக்கார டாகுர் ஒரு துறவியைப் போல் காட்சியளித்தார்.

அவர் எந்தப் பக்கமும் திரும்பிப் பார்க்கவில்லை என்பதைச் சோனு கவனித்தான். அவர் நேராக நடந்துவந்தார். அவர் முன்னுல் வந்ததுமே பெரியம்மா அந்தப் பக்கம் ஓடினுள். ரஞ்சித்தும் போனுன். பெரியப்பாவைப் பார்த்ததும் சோனுவின் பயமெல்லாம் பறந்து விட்டது. அவன் அவர் அருகில் போய், "பெரியப்பா!" என்று கூப்பிட்டான்.

பெரிய மாமி அவரை மேலே போகவிடவில்லை. அவள் அவருடைய கையின்மேல் தன் கையை வைத்தாள். வைத்ததுமே அவர் கள்ளமே அறியாத குழந்தையைப் போல் ஆகிவிட்டார். அவருடைய மேலுடம்பு காலியாக இருந்தது ; கைகால்கள் சில்லிட்டுப் போயிருந்தன. குளிரில் அவர் இன்னும் வெளுத்துப் போயிருந்தார். ஆடை ஈரமாக இருந்தது. மனிதருக்கு இருமல், ஜலதோஷங்கூட ஏற்படுவதில்லை. அவரைச் சமாளிக்க முடியவில்லை, பெரிய மாமியால். அவருக்கு இரவில்லை, பகல் இல்லை ; எப்போது எங்கே போவார், எப்போது திரும்பிவருவார் என்ற கணக்கு இல்லை. இவ்வளவு முக்கியமான விசேஷ நாளில்கூட அவருக்குச் சாப்பாடு போட அவளுக்கு முடியாமல் போயிற்று. அவர் இரவில் திரும்பி வருவார், அல்லது விடியற்காலையிலாவது வருவார் என்ற நம்பிக்கையில் அவள் அவருக்காக எல்லாப் பதார்த்தங்களையும் தனியாக எடுத்து வைதத்திருந்தாள், வெள்ளைக் கல் பாத்திரத்தில்.

பைத்தியக்கார டாகுரால் வெகுநேரம் கடுமையாக இருக்கமுடியவில்லை. அவருடைய மனைவியின் கண்களில் சோகம் தெரிந்தது. நிலவொளியில் அந்தச் சோகம் இன்னும் மனசைத் தொடுவதாக இருந்தது. அவர் பெரிய மாமியின் கையைப் பிடித்துக்கொண்டு மௌனமாக வீட்டுப் பக்கம் நடந்தார். தாம் எதற்காக வெளியே வந்தோம் என்பதை மறந்துவிட்டவர் போல் அவர் சுற்றுமுற்றும் பார்த்தார்.

'நான் வெளியே கிளம்பியது யாருக்காக? யாருடைய நினைவாக இந்தப் படபடப்பு? என் வாழ்க்கையின் பொன்மானைக் கட்டி வைத்திருப்பது யார்? அந்தக் கற்பனை மான் ஒரு நெல்லி மரத் தடியில் கட்டிவைக்கப் பட்டிருக்கிறதே, அந்த நெல்லிமரம் எங்கே?' இவ்வாறெல்லாம் நினைத்து நினைத்து அவருடைய மனம் சஞ்சல மடைந்தது.

'அவள் யார்? குமரிப் பெண் பாலின் சந்திரனில் இருக்கும் கிழவி யைப் போல இருப்பாளா? அவளுடைய கண்கள் இமைக்காதா? அவள் ஏதாவது ஓர் அருவிக்கருகில் முயல் பொந்தில் வசிக்கிறாளா? அவளுக்குத் தினம் அருவியில் ஸ்நானம்....அவள் போர்ட் வில்லியத் தில் இருக்கிறாள். அந்தக் கோட்டையின் உச்சியில் கொண்டைப் புறாக்கள். அதற்கு எதிரில் எவ்வளவு கப்பல்கள்! அந்தக் குமரி ஒரு கப்பலில் தன் தந்தையுடன் இந்த நாட்டுக்கு வந்தாள். அவர் அவளை வரவேற்கக் கப்பல் துறைக்குப் போயிருந்தார்.'

பழைய காட்சிகள் மங்கலாக நினைவுத் திரையில் விழுந்தன. அவள் தான் எத்தனை அழகு! அவளுடைய கண்கள் எவ்வளவு நீலம்! அவள் தன் காதலனை அவருடன தினந்தோறும் கோட்டைச் சுவரின் நடையில் உட்கார்ந்திருப்பாள். இதெல்லாம் ஞாபகம் வந்ததும் அவ ருக்குப் படபடப்பு ஏற்பட்டது. மூளைக்குள் வேதனை உண்டாகியது; பிறகு நினைவு கலங்கியது. அந்த யுவதியின் முகமும், கண்களும், லாவண்யமும் அவரைப் பைத்தியமாக்கி வயல்வெளிகளில் அலையச் செய்கின்றன. இப்போது என்ன முயன்றும் அவரால் அந்த நீலக் கண்களையும், அழகிய முகத்தையும் நினைவில் கொண்டுவர முடிய வில்லை. தன் அன்புக்குரியவளின் முகத்தை நினைவுக்குக் கொண்டு வர முடியாததால், கோபமும், துக்கமும், ஏமாற்றமும் அவரை நிலைகுலையச் செய்கின்றன. இதன் விளைவாகத்தான் அந்தக் கூச்சல் ''கேத்சோரத்சாலா!''

ரஞ்சித் தனியாக வயல்வெளியில் நின்றான். தூரத்தில் இங்கு மங்கும் பெட்ரோமாக்ஸ் விளக்குகள் எரிந்துகொண் டிருந்தன. மைதானம், விசாலமான ஏரிகரை, வயல்கள், வயல்களில் விளக்கு களின் ஒளி. பிஸ்வாஸ்பாடாவிலும், சர்க்கார் வீட்டுக் குளத்தங் கரையிலும் விளக்குகள். பிரசாதம் வாங்கிக்கொள்ளும் ஆசையில் இப்போதுகூட ஓரிரு மனிதர்கள் வயல்களைக் கடந்து போனார்கள். ரஞ்சித் தன்னந்தனியாக அந்தக் குளிரில் சற்றுநேரம் உலவினான். ஏதேதோ நினைவுகள் அவனை அலைக்கழித்தன.

சிலம்பப் பயிற்சி பற்றிய பிரச்னைகள், யோசனைகள். அவன் ரகசியமாக இந்தக் காரியத்தை நடத்த வேண்டுமென்பது சங்கத்தின் கட்டளை. ஆனால் சாம்சுத்தீனும் அவனுடைய ஆட்களும் ரஞ்சித்

சிலம்பப் பயிற்சியும், கத்திவீச்சுப் பயிற்சியும் நடத்துவதை நன்ருகத் தெரிந்துகொண்டு விட்டார்கள். ரஞ்சித் இந்துக்களைத் தைரியசாலிகளாக்க, பலசாலிகளாக்க முயற்சி செய்கிருன், அவர் களைத் தற்காப்புக்குத் தயார் செய்கிருன். இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே பரஸ்பர நம்பிக்கை இல்லை. இந்துக்கள் எண்ணிக்கையில் குறைவானவர்கள். அநேகமாக எல்லாருமே பொருளாதாரத்தில் நடுத்தர நிலையில் உள்ளவர்கள். தாழ்ந்த ஜாதி களைச் சேர்ந்தவர்கள்கூட—உதாரணமாக, நமசூத்திர ஜாதியினர்—சிலம்பப் பயிற்சி, கத்திப் பயிற்சி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இதன் விளைவாக இந்து, முஸ்லீம்களிடையே பரஸ்பர நம்பிக்கை கொஞ்சங் கொஞ்சமாக குறைந்து போய்விட்டது. இரு இனத்தாரும் ஒருவர் மற்றவரிடமிருந்து விலகிக்கொண்டு போனுர்கள். இவ் விஷயங்களை விவரமாகச் சங்கத்துக்கு எழுதித் தெரிவிக்க விரும் பினுன் ரஞ்சித். ஜாலாலியின் இந்தத் துர்மரணம் வாழ்க்கைப் போராட்டத்தின் விளைவாக ஏற்பட்ட மரணம். அல்லிககிழங்கு பறிக்கச் சென்ற ஜாலாலி கொடிகளில் சிக்கிக்கொண்டு தண்ணீ ருக்குள் முழுகிவிட்டாள். வெவ்வேறு மனிதர்களுக்கிடையே இருந்த இந்தப் பொருளாதார வேறுபாடு ரஞ்சித்தை வருத்தியது. இதையும் தன் சங்கத்துக்குத் தெரிவிக்கத் தீர்மானித்தான் ரஞ்சித்.

நரேன்தாஸின் நிலத்தில் நின்றுகொண் டிருந்த வெள்ளையுடை அணிந்த உருவம் ஒன்று தன்னைப் பார்த்துக்கொண் டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அதுதான் மாலதி என்று அவன் புரிந்து கொண்டான். அவள் மற்றவர்களுடன் திரும்பிப் போகவில்லை. அவனை நோக்கி மெதுவாக வந்தாள் அவள். துணையின்றி இருக்கும் மாலதிக்காக அவன் மனசு சங்கடப்பட்டது. அவன் மருதமரத் துக்குப் பின்னுல் மறைந்துகொண்டான். யார் யாரிடமிருந்து ஒளிவது? மாலதியின் பார்வை தீட்சண்யமானது. அவளுடைய இதயத்துக்குள்ளிருந்த பறவை ரஞ்சித்தைக் கண்டதும் கூவத் தொடங்கிவிட்டது. அவளுடைய நெஞ்சு திகுதிகுவென்று பற்றி எரிந்தது. அடிவானம் வரையில் பரந்துகிடக்கும் மைதானத்தில் இந்த நாளில் கரைந்து மறைந்துவிட யாருக்குத்தான் தோன்ருது? உலகம் முழுதும் நிலவில் முழுகிக் குளிக்கும்போது, ஆழமான நீரில் முழுகிச் சாக ஆசை யாருக்குத்தான் ஏற்படாது? இத்தகைய அழகிய இளைஞனைப் பார்த்தால் அவனைக் காதலிக்க யாருக்குத் தான் தோன்ருது?

பெரிய மாமி தன் அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்தினுள். மேஜையின்மேல் அரிக்கேன் விளக்கு எரிந்தது. பைத்தியக்கார மனிதர் இப்போது அநேகமாக நிர்வாணமாக இருந்தார். பெரிய

மாமி அவருடைய ஈர உடையைக் கழற்றினாள். சலவைக் கல் போன்ற உறுதியான உடல் அவருக்கு. நெஞ்சின்மேல் ஒரு யானையை ஏற்றிக்கொண்டு அதை ஆடவைக்கும் அளவுக்குப் பலம் வாய்ந்த தசைநார்கள் மார்பில். வயிற்றில் கொழுப்பே இல்லை. மெல்லிய தசையின்மேல் வெளுத்த தோல். ரோமம் அடர்ந்த மார்பிலிருந்து ஆற்றொழுக்குப் போல் நேராக இறங்கிய ஒரு மயிர்க் கோடு கீழே அடர்ந்திருந்த ரோமக்காட்டைத் தொட்டது. பெரிய மாமி ஒரு வெள்ளைத் துண்டால் அவருடைய தேகத்திலிருந்த நீர்த் துளிகளைத் துடைத்துவிட்டாள். ஒரு மரப்பொம்மைபோல் அசை யாமல் இருந்தார் அவர். சாவி கொடுக்கும் மரப்பொம்மை. அவர் அசையாமல், வேறு நினைவின்றி, பெரிய மாமியின் பெரிய பெரிய கண்களை, காதலுக்குரிய கண்களை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அவள் கையைத் தூக்கச் சொன்னால் தூக்கினார்; உட்காரச் சொன்னால் உட்கார்ந்தார்.

விசேஷ நாள். பெரிய மாமி அவருக்காக எல்லாப் பதார்த்தங் களையும் எடுத்து வைத்திருந்தாள். அவர் சிலவற்றைச் சாப்பிடுவார், சிலவற்றைச் சாப்பிடமாட்டார். சிலசமயம் எல்லாவற்றையுமே சாப்பிட்டுவிடுவார்; சாப்பிட்டுவிட்டு, "இன்னும் கொண்டா!" என்று பெரிய மாமியின் கையைக் கடித்துவிடுவார். அவளால் கொடுக்க முடியாவிட்டால் அவளைக் கட்டிப் பிடித்துக்கொண்டு மைதானத்தில் ஓடத் தொடங்குவார் அவர்; அல்லது அவளை அப்படியே படுக் கையில் கிடத்தி நிர்வாணமாக்கிவிடுவார்; அல்லது அவளை முகர்ந்து பார்ப்பதுபோல் அவளுடைய முகத்துடன் தன் முகத்தைச் சேர்த்து வைத்துக்கொண்டு படுததுக் கிடப்பார் அவர். அவர் எப்போது என்ன செய்வார் என்று யாராலும் சொல்லமுடியாது. அவருடைய செய்கைகளில் எல்லாம் ஒரு கடுமை, ஒரு தீவிரம் இருக்கும். இந்தக் கடுமைக்காக நாள் முழுதும் ஏங்கிக் கிடப்பாள் பெரிய மாமி.

மாலையில் அவர் திரும்பிவராவிட்டால் பெரிய மாமி ஜன்னல் அருகே நினறு மைதானத்தையே பார்த்துக்கொண்டு இருப்பாள். இப்படியே இரவு கழிந்துவிடும், அவர் திரும்பி வரமாட்டார். அவர் ஏதாவதொரு மரத்தடியில் படுத்துக்கொண்டு நீலவானத்தில் நட்சத்திரங்களை எண்ணிக்கொண்டிருப்பார். அப்போது அவருடைய வாய் ஒரு கவிதையை முணுமுணுக்கும்; காதல் கவிதை. கவிதை யின் வரிகள் பெரிய மாமிக்கு நீலக் கண்களையும் பொன்னிறத் தலை முடியையும் அடிக்கடி நினைவுறுத்தும். அவள் உணர்ச்சிவசப்பட்டுத் தன் மாமனாரிடம் கேட்கத் துடிப்பாள்: "ஏம்பா, நீங்க இந்த மனுஷரைப் பைத்தியமாக்கிட்டீங்க? ஜாதியும் மதமும் மனுஷனை விட உசந்ததுன்னு ஏன் நினைச்சீங்க?"

பெரிய மாமிக்குக் கண்களில் நீர் வந்துவிட்டது. ' அவருக்கு உடையணிவிக்கும்போது கண்ணீர் அவளுடைய பார்வையை மறைத்தது. அவள் பார்வைக்கு மங்கலாகத் தெரிந்தார், மணீந்திர நாத். அவருக்கு மடித்து வைத்திருந்த வேஷ்டியை அணிவித்தபோது அவருடைய நெஞ்சில் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டாள் அவள். மரப்பொம்மை கொஞ்சங்கூட அசையவில்லை. அவர் வழக்கம்போல் தன் கடுமையைக் காட்டினுல்? அவளைப் பலவந்தமாக நிர்வாணமாக்கினுல்? ஆனுல், இன்று அவர் சற்றும் சலனமடைய வில்லை. அவர் துறவியைப் போல் பிட்சைக்காக நின்றிருந்தார். கையில் தண்டத்தைக் கொடுத்தால் துறவி மாதிரியே இருப்பார் அவர்.

விசேஷ நாளாதலால் பெரிய மாமி அவருக்குப் பட்டுச்சட்டை அணிவித்தாள். அவருடைய சுருட்டை மயிரை வாரிச் சீவினுள். மாப்பிள்ளை வேடத்தில் நின்றிருந்தார் பைத்தியக்கார மனிதர். அந்தக் காட்சியைப் பார்த்து உருகிக் கரைந்தாள பெரிய மாமி. 'இவ்வளவு அழகான புருஷன் உண்டா?' என்று சொல்லிக் கொண்டு அவள் அழுதுவிட்டாள். அவள் அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு வந்து ஆசனத்தில் உட்கார்த்தி வைத்தாள். பிறகு ஒவ்வொன்ருகப் பதார்த்தங்களைக் கொண்டு வந்து வைத்தாள். எள்ளுருண்டை, கத்மா, பாயசம், கிச்சடி, பழம், சர்க்கரைப் பொரி... ஒவ்வொன்ருக அவருக்கு முன்னுல் நகர்த்தி வைத்தாள். ஆனுல் இன்று அவருக்குச் சாப்பாட்டில் ஆசை இல்லை. அவர் பதார்த்தங்களை ஏதோ கொஞ்சம் எடுத்துக்கொண்டு எழுந்துவிட்டார்.

மெத்தென்ற படுக்கையில், தலைமாட்டில் தங்கக்கோலும் வெள்ளிக் கோலும் வைத்துக்கொண்டு படுத்துறங்கும் ராஜகுமாரனைப் போல் அவர் படுக்கையில் படுத்திருந்தார். அவருடைய உடையின் மடிப்பு கொஞ்சங்கூடக் கலையவில்லை. அவருடைய வேஷ்டி குதிகால்வரை இழுத்துவிடப் பட்டிருந்தது, கச்சம் கால்வரையில் வந்திருந்தது. அவர் தம கைகளைக் கோத்துக்கொண்டு மார்பின்மேல் வைத்த வாறு கூரையின் அடிச்சட்டங்களை எண்ணினுர், இமைமூடாமல். அவருக்குப் பக்கத்தில் பெரிய மாமி, உட்கார்ந்துகொண்டே யிருந்தாள். அவளுக்குத் தூக்கம் வரவில்லை. நினைத்து நினைத்து அவருடைய இருகன்னங்களையும் முத்தமிட்டாள் அவள். அவரு டைய சட்டைக்குள்ளே நெஞ்சின்மேல் அவளுடைய மிருதுவான விரல்கள் தவழ்ந்து விளையாடின — மயங்கிக் கிடக்கும் ராஜ குமாரன் மந்திரக்கோலின் ஸ்பரிசம் பட்டு மயக்கத்திலிருந்து விழித்து எழமாட்டாரு என்ற ஆசையில்.

ஊஹூம், மனிதர் எழுந்திருக்கவில்லை. இந்த விசேஷ நாள் வீணாகிவிட்டது.

அவள் அந்த மனிதரின் ரோமம் அடர்ந்த மார்பின் மேலிருந்து தன் கையை எடுத்துக்கொண்டு, போர்வையைப் போர்த்துக்கொண்டு, அந்த மரப்பதுமையைத் தன் மார்புடன் அணைத்துக்கொண்டு இரவு பூராவும் படுத்திருந்தாள். மரப்பொம்மை தூங்கவில்லை. ஆனால் எப்பேர்ப்பட்ட தூக்கம் பெரிய மாமிக்கு! அவளுடைய கண்கள் அயர்ந்து எப்போது மூடிக்கொண்டன, எப்போது மணீந்திரநாத் சப்தம் செய்யாமல் ராஜகுமாரன் வேஷத்தைக் களைந்துவிட்டு முழங்கால் வரை கட்டிய துணியுடன் வெளியே போனார் என்று பெரிய மாமிக்குத் தெரியாது. பேய்த் தூக்கம் பெரிய மாமிக்குச் சொந்தமான எல்லாவற்றையும் கொள்ளைகொண்டு போய்விட்டது.

இதற்குள் ஜாலாலியைச் சவப்பெட்டிக்குள் வைத்தாகிவிட்டது. மாலதி மருதமரத்தை நோக்கி அடிமேல் அடிவைத்து நடந்தாள். பேலு புதைக்குழிக்கருகில் நின்றுகொண்டு குழி நன்றாகத் தோண்டப்பட்டிருக்கிறதா என்று பார்த்தான்.

கஜார் மீன் ஏரிக்குள் தன் இருப்பிடத்துக்குத் திரும்பி வந்து விட்டது. தாமரைக் கொடிக்குள் எட்டிப் பார்த்து அங்கு முன்பு கிடந்த அதிசயப் பிராணியைக் காணாமல் ஆச்சரியத்துடன் வாலை ஆட்டியது. 'அந்த அதிசயப் பிராணியை யார் திருடிக்கொண்டு போய்விட்டார்கள்? அது எங்கே மிதந்துகொண் டிருந்தது?' என்று பார்ப்பதற்காக அது நீரில் தன் துடுப்புக்களை விரித்துக்கொண்டு நீந்தத் தொடங்கியது.

சவப்பெட்டிக்குள் ஜாலாலியின் உடல் வெள்ளைத் துணியால் மூடப்பட்டிருந்தது. ஹாஜிசாயபு புதிய துணி வாங்கிக் கொடுத்தார். அவருடைய மூன்று பீபிகளும் சடலத்தை வெந்நீரில் குளிப்பாட்டி யிருந்தார்கள். எல்லாக் காரியங்களையும் அவர்களே மேற்பார்வை பார்த்தார்கள். ஜாலாலியின் தலைமயிரைப் பின்னி விட்டார்கள். அவளுடைய உடலுக்கு அத்தர், சந்தனம் பூசி விட்டார்கள். 'ஜாலாலி கொய்னாப் படகில் வேலை செய்யும் ஒரு சாதாரணப் படகோட்டியின் மனைவி. அவள் தன் வாழ்நாள் பூராவும் சோற்றுக்கு ஏங்கி ஏங்கிக் கழித்தாள்' என்று இப்போது யாரால் சொல்லமுடியும்?

சவப் பெட்டியில் ஜாலாலி, மசூதியில் இமாம். எல்லாரும் ஜாலாலிக் காக அல்லாவின் ஆசியை வேண்டினார்கள். கிராமத்தைச் சேர்ந்த ஆண்கள் யாவரும் மசூதியில் மூன்று வரிசைகளாக நின்று கொண்டு காதுகளைத் தொட்டுக்கொண்டு, "ஏ அல்லா! உன் பெருமை எல்லையற்றது. நாங்க சாதாரண மனுஷங்க; நாங்க

செய்யக்கூடியது என்ன? இந்தப் பிரபஞ்சத்துலே உன் விளையாட்டு நடக்குது. ஏ அல்லா! இந்த வயல்கள்ளே விளையற விளைச்சல், இங்கே கேக்கற பறவைகளோட ஒலி எல்லாமே உன் கருணை தான்னு யாருக்குத் தெரியாது? நீ எல்லாருக்கும் புகலிடம் தர்றவன். இந்த ஏழை ஜாலாலிக்குப் புகலிடம் கொடுத்துக் காப்பாற்று!'' என்று அவர்கள் பிரார்த்தனை செய்தனர் போலும்.

நிலவு காயும் இரவு. மத்தளங்கள் முழங்கின. இங்குமங்கும் வயல்களில் பெட்ரோமாக்ஸ் விளக்குகள் எரிந்தன. சவப் பெட்டிக்குள் ஜாலாலி படுத்திருந்தாள். சாம்சுத்தீன் இமாமாகச் செயற்பட்டான். மசூதிக்குப் பக்கத்தில் நிறையச் சீதாமரங்கள் மரங் களில் நிறையப் பறவைகள் வசித்து வந்தன. அகாலத்தில் இவ்வளவு மக்களைப் பார்த்து அவை விழித்துக்கொண்டு கூவத் தொடங்கின. சீதாமரத்து இலைகள் பூக்களைப் போல் சவப்பெட்டியின் மேல் விழுந்தன.

பிறகு எல்லாரும் சவப்பெட்டியைத் தூக்கிக்கொண்டு, 'இலாஹா இல்லால்லா மொகம்மதர் ரசூல்லா' என்று கூவிக்கொண்டு நடந் தார்கள். இப்போதும் சர்க்கார் வீட்டுக் குளக்கரையில் மத்தளம் ஒலித்தது. இப்போதும் வயல்வெளி முழுதும் நிலா. அவர்கள் லாந்தரோ, சிம்னி விளக்கோ வைத்திருந்தார்கள். சாதாரணமாக வெளியே வராத, முகத்திரையணிந்த பீபிகள் கூட, பரிதாபத்துக் குரிய ஜாலாலிக்காக அங்கு வந்திருந்தார்கள். அவர்கள் புதை குழியைச் சூழ்ந்து நின்றார்கள். ஹாஜிசாயபுவின் உடல் நிலை சரியில்லையாதலால் அவரால் வரமுடியவில்லை.

சவப்பெட்டியிலிருந்து சடலம் வெளியே எடுக்கப்பட்டது. சாமு ஒரு பக்கமும் ஜப்பர் ஒரு பக்கமுமாகக் கீழே இறக்கினார்கள். அன்று பிற்பகல் பேலு யாருக்காகத் தன் கழுத்தை ஆமைபோல் நீட்டிக் கொண்டிருந்தாளோ, அவள் இப்போது முகத்திரைக்குள்ளிருந்து பேலுவைப் பார்த்தாள். பேலுவின் நெஞ்சு 'தடக், தடக்' என்று அடித்துக்கொண்டது.

சாமு புதைகுழியிலிருந்து வெளியே வந்ததும் பேலு அதை மூங்கில்களால் மூடிவிடுவான். வடக்கே தலையும் தெற்கே காலு மாக ஜாலாலியின் சடலம் கிடத்தப்பட்டது. அவளுடைய தலை மேற்குப் பக்கம் பார்க்குமாறு வைக்கப்பட்டது, ஜாலாலி மக்காவை யும் மதீனாவையும் பார்க்கட்டும் என்று. சாமுவும் ஜப்பரும் வெளியே வந்ததும் பேலு குழியை மூங்கில்களால் மூடி அவற்றின் மேல் சில விளம்பரங்களை வைத்தான். அவற்றில் எழுதியிருந்தது, முஸ்லீம் லீக் ஜிந்தாபாத்! அவர்கள் தங்கள் சபதத்தை ஒரு சாட்சி போல் அங்கே வைத்தார்கள். இந்த விளம்பரங்கள் மண் புதை

குழிக்குள் விழுந்து அதைத் தூர்த்துவிடாமல் தடுக்கும். ஏழை முஸ்லீம்களின் பிழைக்கும் உரிமையை யாரும் மறுக்காமல் இருக்க அந்தச் சபதம் உதவும்.

சாமு ஜாலாலியிடம் சொல்ல விரும்பினுன் போலும்: 'சின்னம்மா, நாங்கள் இந்த வயல்களேயும் அவற்றின் விளேச்சலேயும் எங்கள் பின் சந்ததிக்குச் சொத்தாகக் கொடுத்துவிட்டுப் போவோம். அதற்காகத் தான் போராட்டத்தில் இறங்கியிருக்கிறேம் நாங்கள். நம் எல்லா ருக்கும் மேலே நமது மதம். அல்லா ஒன்றே கடவுள். அவருக்கு ஈடு இணே இல்லே. முகம்மது அவருடைய தூதர்!'

எல்லாரும் ஒவ்வொரு கை மண்ணெடுத்துக் குழிக்குள் போட் டார்கள். பிறகு குழி மண்ணுல் மூடப்பட்டது. ஜாலாலியைக் குளிப்பாட்டின தண்ணீரில் மிஞ்சியதை அந்த மண்ணின்மேல் கொட்டினுன் ஜப்பர் அங்கு மூன்று பட்டிச் செடிகளே நட்டுவைத்து விட்டு அவர்கள் பின்பக்கம் திரும்பிப் பார்க்காமல் கிராமத்துக்குத் திரும்பினுர்கள். அவர்கள் இரண்டடிதான் நடந்திருப்பார்கள். ஓர் அதிசய ஒளி புதைகுழிக்குள் புகுந்தது. பாதிமா தன் தந்தையுடன் நடந்துகொண் டிருந்தாள். அவர் அவளுக்குத் தேவதையின் கதை களேச் சொல்லிக்கொண்டு வந்தார்.

கர்ண பரம்பரைக் கதைகளில் வருவதுபோல, சுவர்க்கத்திலிருந்து ஒளிமயமாகப் படிகள் புதைகுழிக்குள் இறங்குகின்றன. அந்த ஒளியில் ஜாலாலி விழித்துக்கொள்கிருள்.

இரண்டு தேவதைகள் அவளேக் கேட்டன: ''நீ யார்?''

ஜாலாலி பதில் சொன்னுள்: ''நான் ஜாமிலா காட்டுன்.''

''நீ என்ன மதம்?''

''இஸ்லாம்.''

''அல்லா யார்?''

''அல்லா ஒருவரே கடவுள். அவருக்கு ஈடுஇணே இல்லே.''

''ரசூலின் பெயர்?''

''ஹஜ்ரத் முகம்மது.''

''இவரைத் தெரிகிறதா?'' என்று கேட்டுத் தேவதைகள் வெளிச் சத்தில் யாரையோ காட்டினுர்கள்.

''ஹஜ்ரத் முகம்மது'' என்று சொல்லிவிட்டு மறுபடி உறங்கத் தொடங்கினுள் ஜாலாலி.

இருதேவதைகளும் அவளே எடுத்துக்கொண்டார்கள். அவள் அந்தத் தெய்விக ஒளியில் ஐக்கியமாகிவிட்டாள், கர்ண பரம்பரைக் கதைகளில் வரும் சூரிய தேவனேப் போல். சூரியன் ஏரியிலிருந்து ஆற்றுக்கு, ஆற்றிலிருந்து கடலுக்கு, கடலிலிருந்து சமுத்திரத்துக்குப் பிரயாணம் செய்கிருன். கடைசியில் ராஜகுமாரி தண்ணீருக்கு

மேலே மிதந்துவந்து சூரியனை ஆகாயத்தில் தொங்க விட்டுவிட்டு மறுபடி தண்ணீருக்குள் மூழ்கி மறைந்துவிடுகிறாள்.

தாயின் அருகில் படுத்து உறங்கிய சோனு ஒரு கனவு கண்டான். ஒரு குருட்டுக் குதிரை; அதற்கு இரண்டு தலை. சர்க்கஸ் கோமாளி அதைக் கூடாரத்திலிருந்து வெளியே கொண்டு வந்து வயல்வெளியில் விட்டுவிடுகிறான். குருட்டுக் குதிரை ஒரு தடவை கிழக்குப் பக்கமும் ஒரு தடவை மேற்குப் பக்கமுமாக ஓடுகிறது. அதன் முதுகில் ஒரு மனிதன். பாவம்! கிழக்கிலும் மேற்கிலும் குட்டிக்கரணம் போடுகிறான், சர்க்கஸ் விளையாட்டு விளையாடுவது போல். இந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டு இருப்பவர்கள் இரண்டு பேர்தான் — சோனுவும், பாதிமாவும். அவர்கள் இந்த விளையாட்டை ரசித்துக் கைதட்டுகிறார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் பைத்தியக்காரப் பெரியப்பா. அவர்தான் அவர்களைச் சர்க்கஸுக்குக் கூட்டிவந்திருக்கிறார்.

நிலவு மங்கிக்கொண்டு வந்தது. பொழுது புலர இன்னும் அதிக நேரம் இல்லை. கிராமத்தார் ஜாலாலியைப் புதைத்துவிட்டுத் திரும்பினார்கள்.

தோப்புக்குப் போகும்வழியில் பேலு நின்றான் வயல்வெளியில் சூழ்ந்திருந்த மூடுபனி காரணமாக ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. பேலுவால தன்னையே பார்ததுக்கொள்ள முடியயில்லை. மூடுபனி அவ்வளவு அடர்த்தி. விடிவேளைக் குளிரில் கைகால்கள் பனியாக உறைந்துவிட்டன. ஆன்னு எல்லாருக்கும் முன்னால் போய்விட்டாள். அவளுக்குத் தூக்கம் ரொம்பப் பிடிக்கும். மன்சூர் போனான், ஹாஜி சாயபுவின் பெரிய பீபி போனாள். சாமு ஜப்பரைப் பிடித்துக்கொண்டு போனான். சாமுவின் பீபி அவனுக்குப் பின்னால் வந்தாள். முகத்திரையைப் பார்த்தே அடையாளங் கண்டுகொள்ள முடிந்தது, யாருடைய பீபி, அவளுடைய நடத்தை எப்படி என்றெல்லாம்.

முகத்திரையில் கண்களுக்கு எதிரில் உள்ள இடம் மட்டும் வெள்ளை நூலால் பின்னல் வேலை செய்திருந்தது. நிலவில் சட்டென்று பார்தத போது பூதமோ எனற பிரமை ஏற்படும். அந்த முகத்திரைக்குப் பின்னே இருப்பது ஹாஜிசாயபுவின் இரண்டாவது பீபி. பேலு தீவிர ஆசைக்குள்ளாகித் தவித்தான். 'தோழி லலிதா! உன் மேல் எனக்கு காதல்!' பேலுவின் நெஞ்சுக்குள் மீண்டும் அந்த ஒலி. காரியத்தை ஒரு நிமிஷத்தில் செய்து முடித்துவிட வேண்டும். யாருக்கும் தெரியக் கூடாது! ஒரு முழத் தூரத்தில் முன்னால் இருக்கும் மனிதனைக் கூடப் பார்க்க முடியாதபடி அவ்வளவு அடர்ந்த பனிமூட்டம். இந்த மங்கலான வெளிச்சத்தில் தவறான ஆளைப் பிடித்து இழுத்துவிட்டால் ரகளையாகிவிடும். குளிரில் வெடவெடவென்று நடுங்கினான் பேலு.

அவனுக்குத் தன் ஒரு கைதான் ஆதரவு. இரண்டாவது பீபியைப் பலவந்தமாக இழுத்துவந்து வசப்படுத்த எவ்வளவு நேரமாகும்? மங்கிய ஒளியில் அவளுடைய உருவம் அசைந்தது. உடனே அவன் தன் ஒரு கையால் அவளை இறுகப் பிடித்தான். இப்போது அவனுக்குப் பத்தாயிரம் யானைகளின் பலம் வந்துவிட்டது. அவன் அவளுடைய வாயைக் கையால் அழுத்திப் பொத்திக்கொண்டு அவளைப் புதருக்குள் இழுத்துக்கொண்டே அதட்டினான், "உஷ்! சத்தம் போடாதே! நான்தான் உன் அருமை பேலு!"

எல்லாருக்கும் பின்னால் வந்தான் ஈசம். அப்போது புதருக்குள்ளே ஏதோ அமளி நடப்பது அவனுக்குத் தெரிந்தது. பாம்பும் பாம்பும் விளையாடிக்கொண்டிருக்கலாம், அல்லது பாம்பும் புலியும் போராடிக் கொண்டிருக்கலாம். புதருக்குள் பெரிய போராட்டம். போராட்டத்தில் பிணம் விழுமென்ற ஆசையில் ஹாஸான் பீரின் தர்காவிலிருந்து ஓநாய்கள் ஓடிவந்தன. உடும்பாகவும் இருக்கலாம், புதருக்குள் இருப்பது. முதலையைப் போல் பெரிய உடும்பு ஒன்று ஆற்று மணலில் திரிவதைப் பார்த்திருக்கிறான் ஈசம். அவன் பயந்து போய்க் கிராமத்தை நோக்கி ஓடினான்.

விடியற்காலைக் கனவு, புதிய கனவு, இனிய கனவு. இப்போது தான் முதல் தடவையாகக் கனவு காணக் கற்றுக்கொண்டிருக்கிறான் சோனா. கனவுகண்ட பிறகு தூக்கம் கலைந்துவிட்டது. பெரிய அறையில் தாத்தா ஸ்தோத்திரம் சொல்வது அவனுக்குக் கேட்டது. பெரியம்மாவும் சித்தப்பாவும் விடியற்காலைக் குளிரில் அவரை வெளியே நிறுத்தி வைக்கிறார்கள்.

வெகுநாட்களுக்குப் பிறகு இன்று பிடிவாதம் பிடித்தார் அவர், சூரியோதயம் பார்க்க வேண்டுமென்று. அவர் பார்வையிழந்து எவ்வளவோ காலமாகிவிட்டது. அவர் தம் அறையைவிட்டு வெளியே வந்து எவ்வளவோ நாட்களாகி விட்டன. அவர் தினந் தோறும் அதிகாலையில் தன் அறையிலிருந்து கொண்டே ஸ்தோத்திரங்கள் சொல்வார்: 'பகவானே, நீ கருணைமயமானவன். உன் கருணைதான் பூவாக, பழமாக, பயிராக வெளிப்படுகிறது!'

கிழவருடைய விருப்பத்தை மறுத்தால் அனர்த்தம் ஏற்படும். ஆகையால் அவர்கள் கிழவரின் கையைப் பிடித்துக்கொண்டு வந்து

அவரை வெளியே நிற்க வைத்தார்கள். சகட மரத்துக்குக் கீழே இருந்து பார்த்தால் கிழக்கு வானம் தெளிவாகத் தெரியும். சூரியன் உதிக்கப் போகிறான், கிழக்கு வானம் வெளுத்துவிட்டது. பறவைகள் பறக்கத் தொடங்கிவிட்டன. மசூதியில் சாம்சுத்தீன் தொழுகைக்கு அழைக்கிறான், கோழிகள் கூவுகின்றன. பெரிய மாமி பூஜைக்கு மலர் பறிக்கப் போகிறாள். கிழவர் சூரியோதயம் பார்ப்பதற்காக நின்றிருந்தார். அவர் சூரியோதயம் பார்த்து, விடியற்காலையில் பறவைகளின் ஒலியைக் கேட்டு எவ்வளவு காலமாகிவிட்டன!

அவர் சகட மரத்துக்குக் கீழே லால்ட்டு, பல்ட்டு, சோனு ஆகியவர்களுடன் நின்றார். சூரியன் உதித்ததும் அவர்கள் சூரியன் உதிக்கிறானென்று அவருக்குச் சொல்லவேண்டும். சூரியதேவன் ஒளித்தெய்வம்; அவன் கடவுளின் அம்சம்; கடவுள் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும், புல்லுக்குள்ளும், பூவுக்குள்ளும் இருக்கிறார். எங்கும் அவர். அவர் ஒருவர். அவரே பலர். அவர் எல்லைக்கும் எண்ணிக்கைக்கும் அப்பாற்பட்டவர். அவருடைய தூதனாகிய சூரியதேவனை வணங்கி வாழ்த்தப் போகிறார் கிழவர்.

ஆச்சரியந்தான். சூரியன் உதிக்கிறானென்று யாரும் அவருக்குச் சொல்லத் தேவைப்படவில்லை. சூரியன் கீழ்வானத்தில் எழுவதை அவர் தாமாகவே உணர்ந்துகொண்டு விட்டார். பனித்துளி சகட மரத்திலிருந்து சொட்டுச் சொட்டாக விழுந்தது. பறவைகளின் சிவப்பு, நீலநிற இறக்கைகள் பறந்தன. ஃபிளானல் சட்டையும் கால்களில் பாதரட்சைக் கட்டையும் அணிந்திருந்த கிழவர் சூரியன் தோன்றியதும் அவனை வணங்கினார். "இந்தப் பிரபஞ்சத்தில் நாங்கள் சாதாரண மனிதர்கள். மனிதனின் நைந்துபோன, உளுத்துப் போன வாழ்க்கைக்கு ஒளியூட்டுபவன் நீதான். எங்கள் பிணியை, சோகத்தை அகற்று!"

சூரியோதயத்துக்கு இவ்வளவு மகிமை உண்டு என்று சோனுவுக்கு இதற்குமுன் தெரியாது. தாத்தாவைப் பார்த்து அவனும் சூரியனுக்கு நமஸ்காரம் செய்து அவருடன் சேர்ந்து சூரிய ஸ்தோத்திரத்தைச் சொன்னான்.

சசீந்திரநாத்துக்கு வேறு காரியம் இருந்தது. அவர் ஈசமைக் கூட்டிக்கொண்டு வயலுக்குப் போகவேண்டும். கௌர் சர்க்கார் வயலின் வரப்புகளை இடித்துவிட்டார். இந்த விஷயத்தைக் கவனிக்கவும், சண்டைக்கார சர்க்காரைச் சற்று எச்சரித்து வைக்கவும் வயல் பக்கம் போவதென்று தீர்மானித்திருந்தார் சசீந்திரநாத். சர்க்காரின் செய்கையால் அவருக்கு இரவு முழுதும் தூக்கம் வரவில்லை. மண்ணைவிட அன்புக்கு உகந்த பொருள் வேறு என்ன இருக்கிறது?

சூரியன் வானத்தில் மேலே எழுந்துவிட்டான். இப்போது கிழவருக்கு வேறு எந்த ஆதரவும் தேவையில்லையென்று தோன்றியது. சூரியனின் கதகதப்பு அவருள்ளே சக்தியைத் தோற்றுவித்தது. அவரை அவருடைய இளமைப் பருவத்துக்கும் குழந்தைப் பருவத்துக்கும் அழைத்துச் சென்றது. இப்போது அவர் தாமாகவே, யாரும் சொல்லாமலேயே சொல்லிவிடுவார் : 'எந்தப் பக்கம் போனல் ஆற்றுப் படுகை வரும், எந்தப் பக்கம் போனல் குளத்தங்கரை மருதமரம் வரும், எவ்வளவு தூரத்தில் ஆறு, எவ்வளவு வயல்களைக் கடந்தால் ஆற்று மணலை அடையலாம், தர்மூஜ் வயல் எவ்வளவு பெரிது, அதிலுள்ள செடிகொடிகள் எவ்வளவு பச்சை என்றெல்லாம்.

அவர் சொல்ல விரும்பினர்: "சசீ, உனக்கு வயலுக்குப் போகணுமா? போ! எனக்காகக் கவலைப்படாதே! நான் தனியன். இதுதான் உலகம். பெண்டாட்டி, பிள்ளைகுட்டிகள் எவ்வளவு இருந்தாலும் மனிதன் தனியாகத்தான் இருக்கிறன்." அவர் சசீந்திரநாத்திடம் வயலுக்குப் போவதற்கு முன் வெள்ளிப் பூண்போட்ட தடியைத் தம்மிடம் கொடுத்துவிட்டுப் போகச் சொன்னர்.

எவ்வளவு காலமாகிவிட்டது, அவர் அந்த வெள்ளிப் பூண்போட்ட தடியைச் சுற்றிக்கொண்டு கம்பீரமாக வயல்களில் சுற்றி? எவ்வளவு காலமாக அவர் தம் அறையைவிட்டு வெளியே வராமல் இருக்கிறர்! இப்போது அவர் பலம் இழந்தவர், திராணியற்றவர். அவர் இந்த வருடம் இறந்துவிடுவாரென்று அவருடைய ஜாதகமும் ராசிப் பலனும் கூறுகின்றன. சாவைப் பற்றிய பயம் கிழவர்களைக் குளிர் காலத்தில்தான் அதிகமாகப் பீடிக்கும். கார்த்திக் மாதம் வந்து விட்டால் சாவுக்கு ஆற்று வெள்ளத்தின் வேகம் வந்துவிடும்; கிராமங்களிலுள்ள கிழவர்களையெல்லாம் இழுத்துக்கொண்டு போய் விடும் சாவு.

இந்தச் சமயத்தில்தான் ஒரு தடவை பூபேந்திரநாத் தம் தந்தையிடம், "இந்தத் தடவை சந்திராயணம் பண்ணீடலாமே!" என்றுர்.

பையனின் விருப்பம் கிழவருக்குப் புரிந்தது. அவருக்கு வயதாகி விட்டது. கார்த்திக் மாதத்தின் இழுப்பில் அவருக்கு உடம்பு தள்ளவில்லை. பன்னிரெண்டு பிராமணர்களுக்குப் போஜனம் செய்வித்துச் சந்திராயணம் அனுஷ்டித்தால் பாவம் தொலையும். பாவம் தொலைந்தால் அவருக்குச் சம்சாரத்திலிருந்து விடுதலைதான். உயிர் பஞ்ச பூதங்களாகப் பிரிந்து காற்ருேடு கலந்துவிடும்.

அவருக்குத் தம் பிள்ளையின் பேச்சைக் கேட்டுக் கோபம் வந்தது. "எனக்கு இன்னும் போறதுக்கு நேரம் வரல்லே! எப்போ வரும்னு எனக்குத் தெரியும். நீ முன்னலேயே மணியடிச்சுண்டு நிற்க வேண்டாம்."

குளிர் காலத்தின் நடுவில் கிழவர் சற்றுத் தெம்பாக ஆகிவிட்டார். காதுகூட முன்னைவிட நன்றாகக் கேட்பதுபோல் தோன்றியது. தேகத்திலிருந்து மரத்துப் போன உணர்வு கொஞ்சம் குறைந்தது. இப்போது அவரால் படுக்கையிலிருந்து எழுந்திருந்து உட்கார முடிந்தது, சற்று நடக்க முடிந்தது. அவர் நூறாண்டு வாழத் தயார் செய்துகொள்வது போலத் தோன்றியது.

அவருடைய பேரப் பிள்ளைகள் எல்லாருக்குமே ரொம்பச் சிறிய வயது. அவருடைய பிள்ளைகள் யாவரும் காலங்கடந்து பிறந்த வர்கள். அவர் தமக்குக் குழந்தைகளே பிறக்காது என்றுகூட நினைத்துவிட்டார் ஒரு சமயம். அப்போதுதான் அவருக்குப் பழைய நினைவுகள் வந்தன. "எனக்கு வயலுக்குப் போகணும் போல இருக்கு. என்னைக் கூட்டிக்கிண்டு போறீங்களா?" என்று பேரப் பிள்ளைகளைக் கேட்டார்.

இதைக் கேட்டுப் பையன்களுக்கு ரொம்ப உற்சாகம். இன்னும் சூரியன் ரொம்ப உயரத்துக்கு வரவில்லை.

கிழவர் பல்ட்டுவின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்தார். அவருக்கு முன்னால் லால்ட்டு, பின்னால் சோனு. கிழவரின் கையில் வெள்ளிப் பூண்போட்ட தடி. தடியின் மேல்பாகம் தவளைத் தலை மாதிரி இருந்தது. கண்ணை மூடிக்கொண்டு, காதுகளை விறைத்துக் கொண்டு ஒரு தவளை. சில சமயம் முள்ளம்பன்றி வாயை 'ஆ' வென்று திறந்துகொண் டிருப்பது போல் இருந்தது. கிழவர் வலக் கையால் தடியை இறுகப் பிடித்துக்கொண்டார். இப்போது எல்லாமே அவர் கண்ணுக்குத் தெரிவது போல் இருந்தது, முன் காலத்தில் இருந்தது போல. எங்கோ ஒரு வெள்ளைச் செம்பரத்தை பூததிருந்தது. "பல்ட்டு! பாரு! இங்கே ஒரு செம்பரத்தை பூத்திருக்கு செடியிலே" என்றார்.

"ஆமா!" என்றான் லால்ட்டு.

ஆமாம், செடியில் ஒரே ஒரு வெள்ளைச் செம்பரத்தை பூத்திருந்தது. இது கிழவருக்கு எப்படித் தெரிந்தது? சோனு, லால்ட்டு, பல்ட்டு வுக்கு ஒரே ஆச்சரியம்.

"பருவம் இல்லாதபோது பூத்திருக்கு" என்று சொல்லிக்கொண்டார் கிழவர். குளத்தங்கரை வழியே போனபோது, "புளிய மரத்துக்குக் கீழே கூட்டிண்டு வந்திருக்கீங்களா என்னை?" என்று கேட்டார்.

சிறுவர்கள் கிழவரைப் பிடித்துக்கொண்டு அழைத்துப் போனார்கள், வயல் பக்கமாக. குளத்தங்கரைமேல் போகும்போது அவர் அநேக மாக அங்கிருந்த எல்லா மரங்களின் பெயரையும் ஒவ்வொன்றாகச் சொல்லிக்கொண்டு போனார். அவர் எப்போது விளாமரத்துக்கடியிலே இருக்கிறார், எப்போது ஜாம்ருல் மரத்துக்குக் கீழே இருக்கிறார் என்

றெல்லாம் சொல்ல முடிந்தது அவரால். போய்க்கொண் டிருந்தவர் சட்டென்று ஓர் இடத்தில் நின்று, ''தண்ணீரிலே ஒரு போயால் மீன் மிதந்துண்டு இருக்கு'' என்ருர்.

அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். ஆமாம், குளத்து நீரில் மிதந்து கொண்டே ஒரு போயால் மீன் நீர்ப்புல்லைக் கடித்துக்கொண் டிருந்தது.

கிழவரிடம், ''எங்கே, உங்க கண்ணைக் காண்பியுங்க, பார்க்கறேன். அப்பாகிட்டே சொல்லிடறேன், நீங்க பொய் சொல்றீங்கன்னு. உங்களுக்குக் கண்ணு தெரியாதுங்கறது பொய். உங்களுக்கு நன்ருக் கண் தெரியறது!'' என்ருன் சோனு.

அவனுடைய பேச்சைக் கேட்டு மகேந்திரநாத் சிரித்தார். அவர் மீனின் வாசனையை மோப்பங் கண்டுபிடித்தே சொன்ஞர். அவர் தாம் இருக்குமிடத்தை அடையாளங் கண்டு கொள்வதற்காகத் தடியால் தட்டித் தட்டிப் பார்ததுவிட்டு, ''நீங்க என்னை நாவல் மரத் தடிக்குக் கொண்டு வந்திருக்கீங்களா?'' என்று கேட்டார்.

மூன்று சிறுவர்களும் இந்தத் தடவை சேர்ந்து சிரித்தார்கள். ''தாத்தா, இந்தத் தடவை உங்களாலே சரியாச் சொல்ல முடியல் லியே'' என்ருர்கள்.

எவ்வளவு நாட்களுக்குப் பிறகு கிழவர் தம் அறையிலிருந்து வெளியே வந்திருக்கிருர், சூரியோதயம் பார்ப்பதற்காக! அவர் உழைத்துச் சிறுகச் சிறுகச் சம்பாதிததுச் சேர்த்த இந்த நிலம் — அதன் மேலுள்ள பாசந்தான் அவரைக் கடவுளுடன் ஐக்கியமாகி விடாமல் தடுக்கிறது — இதற்குள் இவை இத்தனை அந்நியமாகி விட்டனவா? அவரால் தாம் இருக்குமிடத்தை அடையாளங் கண்டு கொள்ள முடியவில்லையே! இந்த நிலத்துடன், இங்கு வாழும் மனிதர் களுடன் அவருக்கு ஏறக்குறைய நூறுவருட உறவு. அவர் இந்தச் சிறுவர்களிடம் தம் தோல்வியை ஒப்புக்கொள்ள விரும்பவில்லை.

எந்த இடத்தில் எந்த மரத்துக்கு அடுத்தாற்போல் எந்த மரம் இருந்தது, எந்தெந்த மரத்தை அவர் வெட்டிவிட்டார் என்பதை யெல்லாம் நினைவுப்படுத்திப் பார்த்துக்கொள்ள தொடங்கிஞர். புளிய மரத்தைத் தாண்டியதும் ஜாம்ருல் இலையின் வாசனை வந்தது. அந்த மரத்தைக் கடந்ததும் முகத்தில் வெயில் விழுந்தது. ஆகையால் நாவல் மரத்துக்கு அருகில் வந்துவிட்டதாக நினைத்துவிட்டார் அவர். தம் ஊகம் தவறு என்று சிறுவர்கள் கூறியதைக் கேட்டு அவருக்கு வருத்தம் ஏற்பட்டது. அவர் ஆழமாக மூச்சை இழுத்தார், வேறு எந்த மரத்தின் வாசனையாவது தெரிகிறதா என்று பார்க்க. இந்த நிலத்தின் மேலும் நீரின் மேலும் அவருக்கிருந்த பாசம் அவரை அந்தர்யாமியாக ஆக்கிவிடாதா?

''நாம் ஈச்ச மரத்துக்கிட்டே இருக்கோம்'' என்ருர் அவர்.

சிறுவர்கள் இன்னும் பலமாகச் சிரித்தார்கள். அவர்களுக்கு இந்த விளையாட்டு மிகவும் பிடித்திருந்தது; திருடன் விளையாட்டு. கிழவர் குருடர். அவருடைய கண்களைத் துணியால் கட்டிவிட்ட மாதிரிதான். அவர்கள் தாத்தாவைச் சுற்றி நின்றுகொண்டு 'திருடன், திருடன்' என்று கத்தினுர்கள். தாத்தாவால் அவர்களைப் பிடிக்க முடியவில்லை.

அவர்கள் தாத்தாவை வயல்வெளிக்குக் கூட்டிப் போய் அவரைக் கேட்பார்கள், ''நீங்க எங்கே இருக்கீங்க?'' என்று. அவர் சொல்லுவார், ''பண்ணை வீட்டிலே'' என்று. அப்புறம் அவர்கள் இன்னும் கொஞ்சதூரம் போனதும், மறுபடி தாத்தாவை, ''இப்போ நாம எங்கே இருக்கோம்?'' என்று கேட்பார்கள். ''மனை நிலத்துலே!'' என்பார் பதிலுக்கு. எல்லாமே விளையாட்டாகிவிட்டது. இந்த மாதிரி நல்ல விளையாட்டு கிடையாது! சிறுவர்கள் கேள்வி கேட்டுத் தாத்தா என்ன பதில் சொல்கிருர் என்று பார்த்தார்கள். சோனு மான்குட்டி போலத் தாத்தாவைச் சுற்றிச் சுற்றிக் குதித்தான். தாத்தா சரியாகப் பதில் சொல்லிவிட்டால் அவரை அடுத்த இடத்துக்குக் கூட்டிக்கொண்டு போவார்கள், தேரை இழுத்துக்கொண்டு போவது போல். ஒரு பழைய தேரை அன்பு வழியில் இழுத்துக்கொண்டு போவதுபோல இருந்தது அவர்கள் செய்கை.

அந்தப் பழைய, வயதான தேர் ஒரு பிரம்மாண்டமான ஆலமரம் போல் நின்றது. கையில் தடி, மேலே சால்வை, தலையில் சிவப்புத் தொப்பி, கைகளில் கம்பளியுறைகள், கால்களில் கம்பளி சாக்ஸ், வெள்ளைப் பூட்ஸ்கள். அந்தச் சிறுவர்கள் தம்மை எங்கே இழுத்துக் கொண்டு போகிருர்கள் என்று நினைததார் அவர். தம் மாட்டுப் பெண்களைக் கூப்பிட்டு அவர்களிடம் சொல்லத் தோன்றியது அவருக்கு. ''உங்கள் பிள்ளைகள் என்னை எங்கேயெல்லாம் இழுத்துண்டு போருங்க, பாருங்க!''

குளக்கரைக்கு வந்து சேர்ந்தபோது அவருக்கும் குஷி பிறந்துவிட்டது. அவர் தம் தடியால் தரையைத் தட்டிக்கொண்டே நடந்தார். கெட்டியாக ஏதோ ஒன்று அவருடைய தடிக்குத் தட்டுப்பட்டது. இப்போதுதான் அவருக்கு, தான் அந்த நாவல் மரத்தை வெட்டிவிட்டு ஒரு மருதமரத்தை அந்த இடத்தில் வைத்தது நினைவுக்கு வந்தது. இந்தக் கண்டுபிடிப்பு அளித்த மகிழ்ச்சியில் முகம் மலர, ''நீங்க என்னை மருதமரத்தடிக்குக் கூட்டிக்கிண்டு வந்திருக்கீங்க!'' என்ருர் அவர்.

தாத்தா சரியாகச் சொல்லிவிட்டார். தாத்தா சரியாகச் சொல்ல வேண்டுமென்றுதான் சோனுவும் மனப்பூர்வமாக விரும்பினுன். அவர் இப்படி அவர்களுக்கு நடுவில் அகப்பட்டுக்கொண்டு

நிற்பதும், இரண்டு அண்ணுக்களும் அவரைச் சோதனை செய்து கோட்டாச் செய்வதும் அவனுக்குச் சங்கடமாக இருந்தன. தாம் குளத்தின் தென்கரையில் இருப்பதைச் சரியாக ஊகித்துவிட்ட சந்தோஷத்தில் கிழவர் சிறு பையனைப் போல் உற்சாகமடைந்தார். அதைக் கண்டு சோணுவுக்கும் மகிழ்ச்சி ஏற்பட்டு அவனும் துள்ளிக் குதித்தான், தானே சரியாக ஊகித்துவிட்டாற்போல.

சிறுவர்கள் கிழவரை இன்னும் மேலே கூட்டிக்கொண்டு போக விரும்பினார்கள். ஆனால் அவர், "நான் இனிமேல் வரமாட்டேன். நீங்க என்னை எங்கேயெல்லாமோ கூட்டிண்டு போகப் பார்க்க றீங்க. எனனைக் குரங்குமாதிரி ஆட்டிவைக்கறீங்க. நான் இனிமேல் உங்க இஷ்டத்துக்கு ஆடமாட்டேன்!" என்று கூறிவிட்டார்.

அவர் மருதமரத்தடியில் உட்கார்ந்துவிட்டார். அங்கே கொஞ்சம் அருகம் புல் வளர்ந்திருந்தது. வெயில் வந்துவிட்டது. புல்லில் ஒரு பனித்துளியும் இல்லை. உட்கார்ந்தவாறே அவர் தரையைக் கையால் தடவித் தடவி எதையோ தேடினார்.

"என்ன தேடறீங்க?" என்று சோணு கேட்டான்.

"என்னைத்தான்!"

அவர் சொல்வது புரியவில்லை சோணுவுக்கு.

"ஆமா, என்னைத்தான் தேடறேன். நீங்க என்னை இங்கே விட்டு டுங்க!" என்று சொல்லிவிட்டு மௌனமானார் கிழவர். இந்த இடம் அவருக்கு எவ்வளவு பிடித்தமானது என்பது அந்தச் சிறுவர்களுக்கு எப்படித் தெரியும்? அவர் அன்புடன் தரையைத் தடவிக் கொடுத் தார். அங்கேயே தம்மைத் தகனம் செய்யவேண்டுமென்று எல்லாப் பிள்ளைகளிடமும் சொல்லி வைத்திருந்தார். அவர் இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தபோது அதன் அடையாளமாக இந்த மருதமரத்தை நட்டுவைத்திருந்தார்.

வெயில் மரத்தின்மேல் விழுந்ததால் நாற்புறமும் நல்ல வெப்பமாக இருந்தது. சந்தைக்குப் போகும் மாடுகள் மைதானத்தில் போய்க் கொண்டிருந்தன. குளக்கரையில் இங்குமங்கும் மரநிழல். கிழவர் மகேந்திரநாத் கால்களைப் பரப்பியபடி தம் பேரப் பிள்ளைகளுடன் மருதமர நிழலில் உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த்தால் கண்களை மூடிக்கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதாகத் தோன்றும். தம் பைத்தியக்காரப் பிள்ளையைப் பற்றிய சோகம் அவருடைய நினைவில் உறுத்தியது போலும். அவர் பல்ட்டுவின் தலையில் கையை வைத்து, "நன்னாப் படி. அப்பாவுக்குக் கஷ்டம் கொடுக் காதே!" என்று கூறினார்.

அங்கிருந்து ஆபேத் அலியின் பீபியின் சமாதி தெரிந்தது. அதற் கருகில் மூன்று பட்டிச் செடிகள் நட்டிருந்தன. ஒரு கோழி

அந்தச் சமாதியின் மேலே ஒற்றைக் காலால் நின்று சூரியனைப் பார்த்தது. நேற்றிரவுதான் கிழவருடைய பைத்தியக்காரப் பிள்ளை ஜாலாலியைத் தண்ணீரிலிருந்து வெளியே கொண்டு வந்தான். அந்தப் பைத்தியக்காரப் பிள்ளை இப்போது எங்கிருக்கிறானோ, யார் கண்டார்கள்?

பல்ட்டு பதில் சொல்லவில்லை. அவனுக்குத் தன் தந்தையிடம் ஒரு மாதிரியான பயம். அவன் அவருடன் எங்கும் போவதில்லை. ஆனால் சோனாவிடம் அலாதிப் பாசம் அவனுக்கு. அவன் பேச்சை மாற்றிச் சொன்னான்: "தாத்தா, வாங்க படுகைக்குப் போகலாம்!"

பல்ட்டு சொல்லியது கிழவரின் காதில் விழுந்தாலும் அவருடைய மனத்தில் பதியவில்லை. அவர் வேறு ஏதோ நினைத்துக்கொண்டிருந்தார். 'ஜாலாலி தண்ணீரில் முழுகி இறந்துவிட்டாள். அவளுடைய சமாதியின்மேல் ஒரு கோழி வடக்கும் தெற்குமாக உலவுகிறது. வெயில் எங்கும் விழுகிறது. நேற்று விசேஷ நாள். வாத்திய ஒலி இன்னும் ஓயவில்லை. அந்தப் பிராந்தியத்திலேயே மிகவும் வயதானவரான மகேந்திரநாத் தமக்குப் பிரியமான அந்த மண்ணின்மேல் உட்கார்ந்திருக்கிறார். இங்கேதான் அவர் மீளாத தூக்கத்தில் ஆழப் போகிறார். எல்லாரும் இந்த இடத்துக்குத்தான் அவருடைய சடலத்தைத் தூக்கிக்கொண்டு வருவார்கள்.' இந்தக் காட்சி அவருடைய மனக் கண்ணுக்கு முன்னே தெரிந்தது. அவருடைய பிள்ளைகள் அவருடைய தேகத்தைச் சுற்றி நிற்பார்கள்; பல கிராமங்களிலிருந்து மக்கள் அங்குவந்து கூடுவார்கள்; ஹரி சங்கீர்த்தனம் நடக்கும்; சந்தனக் கட்டை எரியும்; அதில் நெய்யும், பாலும், தயிரும் ஊற்றப் படும்; யாக அக்கினியில் போடப்பட்ட ஹவிசைப் போல் அவருடைய உடல் அந்த நெருப்பில் எரியும். அவருடைய பைத்தியக் காரப்பிள்ளை மருதமரத்தின்மேல் சாய்ந்துகொண்டு, அவருடைய உடல் எரிவதைப் பார்த்துத் தன் இரு கைகளையும் தூக்கியவாறு கத்துவான்.

அவருடைய நினைவில் தோன்றிய அந்தப் பிள்ளையின் முகம் அவரைச் சோகத்தில் ஆழ்த்தியது. அந்தப் பிள்ளை அவருடைய உடல் எரிவதைப் பார்த்துக்கொண் டிருக்கிறான். அவன் புகார் செய்வது போல் தோன்றுகிறது, "அப்பா, நீங்க என்னைக் கெடுத்தீட்டீங்க! என் காதலை நாசம் பண்ணீட்டீங்க. உங்க மத உணர்வு என் வாழ்க்கையைப் பாழாக்கிட்டது. நான் பைத்தியம், என் புத்தி கெட்டுப் போச்சு. என்னோட நினைவுகளை, எண்ணங்களைப் பகிர்ந்துக்க—ஒருவரும் தயாராயில்லே. என் மூளைக்குள்ளே ஏதோ கனவு அநாதையா அலையறது; யாரோ என்னை அந்தக் கனவுக்குள்ளே முழுகிப் போகச் சொல்றுங்க. என்னோட இருதயத்துக்கு மிகவும் நெருங்கி

யிருந்த அந்தப் பொண்ணை — அவ பேரு பாலின்; அவ உசரமா இருப்பா; அவ கண்ணு நீலமா இருக்கும்—நீங்க விரட்டிப்பிட்டீங்க, அப்பா. நான் சமுத்திரம் பார்த்ததில்லே; ஆனல் வசந்த காலத்து ஆகாசத்தைப் பார்த்திருக்கேன். அந்த ஆகாசத்துக்குக் கீழே ஸோனுலி பாலி ஆத்தோட தண்ணீர். அதிலே அவளோட முகம் நிழலாடறது. ஆகாசத்திலே இருக்கிற ஒரு பெரிய நட்சத்திரத்தோட பிரதிபிம்பத்தைத் தண்ணீரிலே பார்த்தால், அவ என்னைத் தூர தேசத்திலிருந்து கூப்பிடறமாதிரி இருக்கு: 'மணி, போகாதே! வில்லோ மரத்துக்குக் கீழே நாம உக்காந்துண்டு சாந்தா கிளாசைப்பத்திப் பேசுவோம். நீ போகாதே!' அப்புறம் குளிர்காலத்துலே புல் மேலே நிறையப் பனித்துளிகளைப் பார்த்திருக்கேன். பனித்துளிபோல் பவித்திரமான அந்த முகததை நீங்க என்கிட்டேயிருந்து பிடுங்கிக் கிண்டு போயிட்டீங்களே, அப்பா!"

இப்படிப் புகார் செய்துகொண்டே அவருடைய கெட்டிக்காரப் பிள்ளை — பைத்தியக்காரப் பிள்ளை — எரியும் சிதையைப் பார்த்து விம்மி விம்மி அழுகிருன்.

மகேந்திரநாத் தம் கைத்தடியை இன்னும் இறுகப் பற்றிக் கொண்டார். எவ்வளவோ காலமாக அவரைப் பச்சாதாபம் உறுத்து கிறது. அவர் சாவை நெருங்க நெருங்க இந்தப் பச்சாதாப உணர்வும் அதிகரிக்கிறது. அப்போதெல்லாம் அவர் தம்மை ஆதரவற்றவராக உணர்கிருர். இப்போது ஏனே அவருக்குத் தோன்றியது, சீக்கிரமே சந்திராயணத்தை நடத்தி முடிப்பது தேவலை என்று. இனி தாமதிப் பதில் அர்த்தம் இல்லை. பன்னிரண்டு பிராமணர்களுக்குப் போஜனம் செய்து வைக்கவேண்டும். அதன் பிறகு பிராயசித்தம் செய்து கொண்டுவிட வேண்டும். இவை இரண்டும் முடிந்துவிட்டால் வாழ்க் கையை விட்டு வெளியேற அனுமதி கிடைத்த மாதிரிதான். அவருடைய உயிர் சம்சார பந்தத்திலிருந்து, சம்சார துக்கத்திலிருந்து விடுதலை பெற்றுக் கடவுளை அடைந்துவிட்டால் நல்லது.

"என்னை வீட்டுக்குக் கூட்டிக்கிண்டு போ" என்று சொல்லி அவர் பல்ட்டுவின் தோளின்மேல் தம் கையை வைத்தார்.

அவர் தம் உலகத்துக்கு, தம் குடும்பத்துக்குத் திரும்ப விரும் பினர். அவருடைய குடும்பத்தினர் அவரை அவருடைய சொந்த அறைக்கு கூட்டிப் போவார்கள். இருண்ட, காற்று வராத அறை. ஜனசந்தடியற்ற, பல்லியின் ஒலியைத் தவிர வேறு ஒலியில்லாத அறை. எல்லாமே சூனியமாக இருக்கிறது அந்த அறையில். சூனிய மான அவர் அந்தச் சூனியமான அறைக்குத் திரும்பிச் செல்கிருர். அவருடைய மனக்கண்ணில் காற்ருேட்டமில்லாத ஓர் இருட்டு அறை தெரிகிறது.

ஆனுல் பையன்களின் குறும்புத்தனத்துக்கு ஈடு கொடுக்க முடியுமா? அவர்கள் கிழவரை வைத்துக்கொண்டு விளையாடினுர்கள். படுகையைக் கடந்து அரசமரத்தடியில் அவரைக் கூட்டிக்கொண்டு வந்து நின்று, அவரை அங்கே விட்டுவிட்டு, ''இப்போ சொல்லுங்க, நீங்க எங்கே இருக்கீங்க?'' என்று கேட்டார்கள்.

பையன்களின் கையில் அகப்பட்டுக்கொண்டு திண்டாடினுர் கிழவர். அவர்கள் அவரை வைத்துக்கொண்டு விளையாடினுர்கள், புதரில் அவரை நிறுத்திவைத்துப் பயமுறுத்தினுர்கள். கிழவர் கை கூப்பிக் கும்பிடாத குறையாக அவர்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு, ''பசங்களா, நீங்க ரொம்ப நல்ல பையங்க. என்னை வீட்டுக்குக் கூட்டிக்கிண்டு போங்க'' என்றுர்.

''பயப்படாதீங்க, தாத்தா! நாம தோடார்பாகிலே இருக்கற ஆலமரத்தடியிலே இருக்கோம்'' என்றுன் சோனு.

''நாங்க உங்களோட 'பலாந்தி' விளையாடப் போறோம்'' என்று சொன்னுன் லால்ட்டு. அவர்கள் கிழவரை மெதுவாகக் கீழே உட்கார வைத்தார்கள். கிழவரைத் தங்கள் சம வயதுக்காரராகப் பாவித்து இங்குமங்கும் ஓடினுர்கள்: ''ராஜா அதோ மரத்தடியிலே உட்கார்ந் திருக்கார்! அவரைத் தொட்டுட்டா ஜயம்!''

இந்த விளையாட்டு மும்முரத்தில் மகேந்திரநாத்துக்கு வீட்டு நினைவு மறந்துவிட்டது. மரக்கிளைகளில் பறவைகள் சப்தித்தன. தூரத்தி லிருந்து மாடு கன்றுகளின் மூக்காரம் கேட்டது. வெகுதூரத்தில் யாரோ மரம் வெட்டினுர்கள். தொலைவில் யாரோ நடந்து போனுர் கள். ஒரு வேளை அது அவருடைய பைத்தியக்காரப் பிள்ளையாக இருக்கலாம். இயற்கைச் சூழல் அவரை மறுபடி குழந்தைப் பருவத் துக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டதாக அவருக்குத் தோன் றியது. அவர் தம் தடியை மடியில் வைத்துக்கொண்டு, அசையாமல் புத்தரைப் போல் கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்.

தூரத்தில் ஸோனுலி ஆற்று நீரில் படகுகள் மிதந்தன. அவற்றின் பாய்களின் மேல் சிவப்பு, நீலநிறப் பறவைகள் உட்கார்ந்திருந் தன. அவர் உட்கார்ந்தவாறே தம் குழந்தைப் பருவத்தை நினைவு கூர்ந்தார். குழந்தைப் பருவம் திரும்பி வருகிறது. நதியில் ஒரு படகு போகிறது, அருகில் ஒரு சிவப்பு, நீலப் பறவை பறந்து வருகிறது. அவருக்கு நாற்புறமும் குழந்தைப் பருவம் விளையாடிக் கொண்டு திரிகிறது. அவர் பழைய குழந்தைப் பருவத்தின் அடை யாளம். பையன்கள் இப்போது திறந்தவெளியில் பாட்டுப் பாடிக் கொண்டு கண்ணுமூச்சி விளையாடினுர்கள். ஊரிலுள்ள மற்றப் பையன்களும் அந்த விளையாட்டில் சேர்ந்துகொண்டார்கள்.

சுபாஷ், கிரணி, காலாபாகாட், தோடார்பாகிலிருந்து சின்னப் பாதிமா, எல்லாரும்...

இப்போது மகேந்திரநாத்தின் மனக்கண் முன்னே அவருடைய பைத்தியக்காரப் பிள்ளையின் முகம் தெரியவில்லை. ஏனெனில் வாழ்க்கையில் சுகம் எப்போதும் நிரந்தரமாக இருப்பதில்லை; துக்கமும் அப்படித்தான். வெகுகாலத்துக்கு முந்தைய குழந்தைப் பருவம் மட்டும் இந்த இயற்கைச் சூழலில் மறுபடியும் மறுபடியும் திரும்பி வந்தது. அவர் தாம் இழந்துவிட்ட குழந்தைப் பருவத்தை மறுபடியும் அடையும் ஆசையில் தாமும் கண்ணாமூச்சிப் பாட்டை மெல்லப் பாடத் தொடங்கினார்.

அவர் சிறுவனாக இருந்தபோது ஆலமரம் இவ்வளவு உயரமாக இல்லை. அவர் கண்முன்னே அவருடைய இளமைப் பிராயத்துச் சகாக்கள் தோன்றினார்கள். அவர்கள் அதே பாட்டைப் பாடிக் கொண்டு கண்ணாமூச்சி விளையாடினார்கள். ஆனால் காலந்தான் எவ்வளவு விரைவில் கழிந்துவிடுகிறது! நீண்ட காலம் கழிந்ததாகத் தெரியவில்லை — ஆனால் அதற்குள் அவர்கள் யாவரும் போய் விட்டார்கள். ஒருவர்கூட உயிருடன் இல்லை. அவர்கள் ஆலமரத் தடிக்கு மறுபடி எப்படி வரமுடியும்? அவருக்கு வருத்தமாய் இருந்தது.

அவருக்குள்ளே யாரோ ஒருவர் இருந்துகொண்டு சொல்கிறார்; 'உன் சகாக்களில் யாரும் உயிரோடு இல்லை; நீ ஒருவன்தான் இங்கே காவல் காத்துக்கொண் டிருக்கிறாய்!' என்று.

இந்த இயற்கைக்குச் செடி கொடிகளுக்கு, பறவைகளுக்குத் தாம் அந்நியமாகிவிட்டதாக அவருக்குத் தோன்றியது. அவர் தனியாக விடப்பட்டிருக்கிறார். பசுமையான செடிகளும் மரங்களும் அடர்ந்த காட்டில் அவர் ஓர் உலர்ந்த மரமாக, சும்மா இடத்தை அடைத்துக் கொண்டிருக்கிறார். அவர் ஒரு துறவியின் பாழடைந்த ஆசிரமத் துக்கு ஒப்பானவர். அதில் வாழ்ந்து வந்த துறவி எப்போதோ தீர்த்த யாத்திரைக்குக் கிளம்பிப் போய்விட்டார்.

அவரால் இனியும் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவர் எழுந்து தனியாக, யாரும் அவரைக் கவனிக்காதபோது, ஆற்றுப் பக்கமாக நடக்கத் தொடங்கினார்.

தாத்தா மரத்தடியில் இல்லை என்பதை முதல் முதலில் கவனித்தது சோனாதான். அவன், "தாத்தாவைக் காணோம்" என்று கத்தினான்.

விளையாட்டு மும்முரத்தில் அவர்கள் கிழவர் எழுந்து ஆற்றுப் பக்கம் போனதைக் கவனிக்கவில்லை. இப்போது அவர்கள் கூப்பாடு போட்டுக்கொண்டே ஊரை நோக்கி ஓடினார்கள்; "தாத்தாவைக் காணோம்! மரத்தடியிலே காணோம், ஒரு இடத்திலேயும் காணோம்."

ஈசம் படுகையில் நின்றுகொண் டிருந்தான். அவனுக்கு நாற் புறமும் தர்மூஜ் வயல்கள். மஞ்சள்நிறப் பூக்கள். பெரிய பெரிய கொடிகளின் இடுக்கில் நெருப்புக் கோழியின் முட்டைபோல் தர்மூஜ் பழங்கள் தெரிந்தன. கறுப்பு நிறத்தில் பளபளத்தன அவை. இந்தத் தடவை குளிர்காலம் கழிவதற்குள்ளேயே வயல் நிறையத் தர்மூஜ் பழுத்துவிட்டது. இந்தத் தடவை சந்தைக்கு நிறையத் தர்மூஜ் எடுத்துக்கொண்டு போகலாம்.

சிறிய டாகுர் வயல் வரப்பு விஷயமாகப் புகார் செய்ய வீட்டை விட்டுக் கிளம்பினர். வழியில் மொத்த வியாபாரியைச் சந்தித்தார். அவனுடன் தர்மூஜ் கொள்முதல் சம்பந்தமாகப் பேசிவிட்டு வயலுக்கு வந்தவர் தர்மூஜ் பயிரைப் பார்த்துவிட்டுத் திகைத்துப் போனர். இந்தத் தடவை விளைச்சல் ரொம்பப் பிரமாதம் என்று ஈசம் அவரிடம் சொல்லவேயில்லை. சில நாட்களுக்குள் வயலின் தோற்றம் எவ்வளவு மாறிப் போய்விட்டது! தர்மூஜ் சந்தைக்குப் போகும். நாளை அல்லது நாளை மறுநாள் முதல் இந்த வழியாக, அல்லது ஆற்றுமணலில், பெரிய பெரிய குதிரைகள் போகும். சந்தையின்போது குதிரைப் பந்தயம் நடக்கும்.

ஸோனலி பாலி ஆற்றில் படகுகள் பாய்களை விரித்துக்கொண்டு போகத் தொடங்கிவிட்டன. இந்த ஒரு மாதந்தான் படகுகள் போகமுடியும். அதன் பிறகு நதியில் தண்ணீர் குறைந்துபோய் முழங்கால் மட்டுமே இருக்கும்.

ஈசம் வயலுக்குள் இங்குமங்கும் போனன். இலைகளின் இடுக்கு வழியே தர்மூஜ் பழங்களைப் பார்த்து அவற்றை விரலால் தட்டினன். பாதி பழுத்த பழங்கள் சாப்பிட மிகவும் ருசியாக இருக்கும். விரலால் தட்டிப் பார்த்தால் எந்தப் பழத்தைப் பறிக்கலாம் என்று அவனுக்குத் தெரியும். ஒரு பழம் இருபது சேர் எடை இருக்கும். அவனல் சேர்ந்தாற்போல் இரண்டு பழங்களைத் தூக்கிக்கொண்டு போக முடியாது. ஒவ்வொரு பழம் இரண்டு கைகளாலும் சேர்த்துப் பிடிக்க முடியாதபடி அவ்வளவு பெரியதாக இருந்தது. அதை மார்புடன் அணைத்து எடுத்துப் போக வேண்டியிருந்தது.

ஈசம் ஒவ்வொன்ருகப் பழங்களைப் படகுக்குள் கொண்டுபோய் வைத்தபோது யாரோ அந்தப் பக்கம் தள்ளாடிக்கொண்டு வருவதைக் கவனித்தான். அவனுடைய முழுக் கவனமும் பழங்களைப் பறிப்பதில் இருந்ததால் அந்த மனிதரை நன்ருகப் பார்க்கவில்லை. காற்று அடித்தபோது தூரத்தில் ஒரு தர்மூஜ் இலை விலகி அதன் இடுக்கில் ஒரு பெரிய பழம் தெரிந்தது. அவன் அதனருகில் ஓடினன். அதற்குள் காற்று நின்றுவிட்டது. இலைகள் பழத்தை மறைத்துவிட்டன. அவன் அங்குமிங்கும் திரும்பித் திரும்பிப் பார்த்தான். சரியான

பக்குவத்தில் பழத்தைப் பறிக்காவிட்டால் அது வெடித்து வீணுகப் போய்விடும். மறுபடி காற்று வந்தால் இலை விலகி, பழம் இருக்குமிடம் தெரியும். மீண்டும் காற்று அடிப்பதற்காகக் காத்திருந்தான். அவன் தலைநிமிர்ந்து பார்த்தபோது, அந்த ஆள் இரண்டு தடவை தடுக்கி விழுந்து மறுபடி எழுந்து நின்றதைக் கவனித்தான். தள்ளாடிக் கொண்டு வருகிற இந்த மனிதர் யார்? குளிர்காலத்து வெயிலில் பைத்தியம் போல் தள்ளாடிக்கொண்டு ஆற்றுப் பக்கமாக வருகிருரே! கவனித்துப் பார்த்துவிட்டு அவரிடம் ஓடிவந்தான் ஈசம். "அடேடே! இவரா! கண் தெரியாதவருக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது? தன்னந்தனியாக நடந்து வருகிருரே!"

அவர் தம் இளமையைத் திரும்பப் பெற்றவர் போலக் கைத்தடியைச் சுழற்றுகிருர். காற்றுடன் சிலம்பம் விளையாடுகிருர்.

'நான் மகேந்திரநாத் இப்போதும் என்னுல் எவ்வளவு தூரம் நடக்க முடியும், பார்! நான் எவ்வளவு காலமாக இந்த மண்ணில் வசித்து வருகிறேன், தெரியுமா? எனக்குச் சந்திராயணம் பண்ணப் போகிருர்களாம், என் பிள்ளைகள்! அவர்களுக்கு எவ்வளவு அதிகப்பிரசங்கித் தனம்' என்று சொல்வதுபோல் இருக்கிறது அவர் முகம்.

இன்னும் கொஞ்சம் நடந்தால் தண்ணீரில் விழுந்துவிடுவார் அவர். ஈசம் ஓடிப் போய், விழவிருந்த அவரைத் தாங்கிக்கொண்டான். அவரைத் தன் மார்புடன் சேர்த்துப் பிடித்துக்கொண்ட போதுதான் அவன் கவனித்தான், அவருடைய கைகால்களில் அடிபட்டிருப்பதை. அடிபட்ட இடங்களிலிருந்து ரத்தம் வந்தது. ஏன் இப்படிச் செய்தார் இவர்? இப்போது அவருடைய முகம் பொம்மையின் முகம் போல் சாதுவாக இருந்தது. சிறு குழந்தையைப் போல ஆகிவிட்டார் அவர். சிறு குழந்தையைப் போல அழுகிருர்.

"உங்களுக்கு என்ன ஆச்சு, எசமான்? நீங்க எங்கே போறீங்க?"

"நீ என்னை எங்கே கூட்டிண்டு போறே?"

"வீட்டுக்கு வாங்க."

வீடு! கிழவர் இப்போது கண்களை மூடிக்கொண்டார். என்ன செய்துவிட்டார் அவர்! அவர் ஏன் தம் பைத்தியக்காரப் பிள்ளையை போல் அலைய ஆரம்பித்துவிட்டார்? அவருக்கு ஏன் இவ்வித மனக் கிளர்ச்சி? தம் சிறுபிள்ளைத்தனமான நடத்தைக் குறித்து அவருக்கே வெட்கமாகிவிட்டது.

"சரி, என்னைக் கீழே விடு."

"உங்க உடம்புக்கு என்ன ஆச்சு தெரியுங்களா?"

"என்ன ஆச்சு?"

ஈசம் பதில் ஒன்றும் சொல்லவில்லை. கிழவரின் உடம்பில் அதிக ரத்தமேயில்லை என்று நன்ருகத் தெரிந்தது. அவருக்குப் பல இடங்களில் காயம் பட்டும் அதிக ரத்தம் வெளியே வரவில்லை.

ஈசம் அவரைத் தாங்கிக்கொண்டு குளத்தங்கரைக்கு வந்ததும் அவர்களைப் பார்த்துவிட்டு எல்லாரும் அங்கு ஓடிவந்தார்கள்.

இந்தப் பிராந்தியத்திலேயே மிகவும் வயது முதிர்ந்த அவர் அங்கே வழி தவறிவிட்டார். இப்படித்தான் அவர் எல்லாருக்கும் சமாதானம் சொன்னுர்.

இவ்விதம் திருவிழா நாள் நெருங்கிவிட்டது. பெரிய பெரிய பந்தயக் குதிரைகள் ஒவ்வொன்ருக ஆற்றங்கரை வழியே போகத் தொடங்கின. ஒரு மாத காலத்துக்கும் மேலே திருவிழா நடக்கும். ஒவ்வொரு சனிக்கிழமையும் குதிரைப் பந்தயம். குதிரையின் கழுத்து மணியொலி கேட்டால் மக்கள் வெளியே ஓடிவருவார்கள், யாருடைய குதிரை வருகிறது என்று பார்க்க. தூரத்தில் குதிரையின் முகம் தெரிந்ததுமே அவர்கள் ஆரவாரம் செய்வார்கள், 'நயாபாடாக் குதிரை!...பிஸ்வாஸ் பாடாக் குதிரை!' என்று.

எல்லாரும் போவார்கள் திருவிழாவுக்கு. ரஞ்சித் போவான், மாலதி போவாள், ஆபுவும், சோபாவும் போவார்கள். சின்ன டாகுர் போவார். படகில் தர்முஜ் பழங்கள் போகும். படகில் தர்முஜை ஏற்றிக்கொண்டிருந்தார்கள். லால்ட்டுவும் பல்ட்டுவும் பாண்டும் சட்டையும் அணிந்துகொண்டு தயாராகிவிட்டனர், திருவிழாவுக்குப் போக. சூரியன் உதித்ததும் அவர்கள் நடக்கத் தொடங்குவார்கள். சோனு மட்டும் திருவிழாவுக்குப் போகப் போவதில்லை; அவனுல் அவ்வளவு தூரம் நடக்க முடியாது.

மற்றவர்கள் திருவிழாவுக்குப் போவதற்குச் செய்துகொண்டிருந்த ஆயத்தங்களைப் பார்த்துக்கொண்டே வராந்தாவில் உட்கார்ந்திருந்தான் சோனு. அவனுக்கு ஒரே ஆத்திரம். யாருடனும் பேசவில்லை அவன். சிற்றப்பா அநுமதி அளித்தால்தான் அவன் திருவிழாவுக்குப் போகலாம். ஆனுல் வீட்டில் யாருக்கும் சிற்றப்பாவிடம் சொல்லத் தைரியமில்லை.

சோனு அதிகாலையிலிருந்து அம்மாவிடம் நச்சரித்தான், "நானும் போவேன் நானும் போகணும்! நீ சித்தப்பாகிட்டே சொல்லு!"

ஆனுல் சிற்றப்பாவிடம் இந்தப் பேச்சை எடுக்க அம்மாவுக்கும் துணிவு வரவில்லே. நேற்று ஒரு தடவை அவள் மெதுவாகச் சொன்ஞள், சோஞவும் திருவிழாவுக்குப் போகலாமே என்று. அதற்குச் சிற்றப்பா, ''சின்னப் பையஞலே அவ்வளவு தூரம் நடக்க முடியாது, மேலும் திருவிழாவிலே ரொம்பக் கூட்டமாக இருக்கும், வேண்டாம்'' என்று சொல்லிவிட்டார். அதற்கு மேல் வற்புறுத்தத் தயக்கமாக இருந்தது தன மாமிக்கு.

சோஞ தூணின்மேல் சாய்ந்துகொண்டு நின்ருன். லால்ட்டுவும் பல்ட்டுவும் இஸ்திரி போட்ட பாண்ட், சட்டையணிந்துகொண்டு இங்குமங்கும் வளேய வந்ததைக் கண்டு அவன் 'கோ'வென்று கதறி அழத் தொடங்கிவிட்டான். எல்லாரும் புறப்படும் நேரம் நெருங்க நெருங்க அவனுடைய அழுகையும் அதிகமாகியது. அவன் அழுவதைப் பார்த்தாவது சிற்றப்பா அவனேத் திருவிழாவுக்குப் போக அனுமதிக்கமாட்டாரா என்ற நைப்பாசை அவனுக்கு.

ஈசம் ஒரு பெரிய தர்மூஜ் பழத்தைத் தலேயில் தூக்கிக்கொண்டு வந்தான். அவ்வளவு பெரிய பழத்தைப் பார்த்து அவனுக்கே ஆச்சரியம் தாங்கவில்லே. அதன் எடை ஒரு மணங்குக்கு மேல் இருக்கும். அவன் அதை விற்பனேக்கு அனுப்பவில்லே; வீட்டுக்குக் கொண்டு வந்துவிட்டான். எசமான் வீட்டில் எல்லாரும் சாப்பிடட்டும். அதை நறுக்கிஞல் உள்ளே சிவப்பாக இருக்கும். கறுப்பு விதைகள் இருக்கும். வசந்த காலத்தில் தர்மூஜ் பழத்தின் ரசம் கற்கண்டு போட்ட சர்பத் மாதிரி ருசியாக இருக்கும்.

அவன் வீட்டு வாசலுக்கு வந்ததும், ''சோஞ பாபு, எங்கே இருக்கீங்க? அரிவாள் கொண்டாங்க'' என்று அழைத்தான்.

ரஞ்சித் வாசலில் நின்றுகொண் டிருந்தான். கூடவே ஆபுவும் சோபாவும் நின்றுகொண் டிருந்தார்கள். மாலதியும் வந்திருந்தாள். திருவிழாவுக்குப் போகவிருந்தவர்கள் எல்லாருமே அங்கே கூடியிருந்தார்கள். இப்போதே ஊரிலிருந்த ஜனங்கள் திருவிழாவுக்குப் போகத் தொடங்கிவிட்டார்கள். சோஞவைத் தவிர எல்லாரும் திருவிழாவுக்குப் போகப் போகிருர்கள். அவன் ஈசம் கூப்பிட்டதைக் கேட்டும் வாசலுக்கு வரவில்லே. தூண்மேல் சாய்ந்தவாறே கேவிக் கேவி அழுதுகொண்டிருந்தான் அவன்.

''இதை நறுக்கி எல்லாருக்கும் கொடுங்க!'' என்று ஈசம் ரஞ்சித்திடம் சொன்ஞன்.

அவன் ஒரு பெரிய வாழையிலேயை நறுக்கிக்கொண்டு வந்தான். பழத்தில் ஒரு பகுதியை வெட்டிச் சுவாமிக்காக வைத்துவிட்டுப் பாக்கியை ரஞ்சித் எல்லாருக்கும் பகிர்ந்து கொடுத்தான். அப்போது

ஈசம் கேட்டான், "சோனு பாபுவைக் காணோமே! அவர் எங்கே?" என்று.

"சோனு அழுதுக்கிட்டு இருக்கான்" என்ருன் லால்ட்டு.

"ஏன்?"

"திருவிழாவுக்குப் போகணும்னு."

"நீங்க போகப் போறீங்க, சோனுபாபு போகக் கூடாதா?"

"சித்தப்பாதான் போகக் கூடாதுங்கருர்."

"போகக் கூடாதுன்னு சொல்லிட்டா ஆச்சா?" என்று சொல்லிக் கொண்டே ஈசம் உள்ளே போய்ச் சோனுவைக் கூப்பிட்டான்: "சோனு பாபு எங்கே? உங்களை யாரு திருவிழாவுக்குப் போகக்கூடாதுன்னது? நான் கூட்டிக்கிட்டுப் போறேன் உங்களை. யாரு தடுக்கிருங்க, பார்ப்போம்!"

"அவனுலே அவ்வளவு தூரம் நடக்க முடியாதே! யாரு அவனைத் தூக்கிண்டு போவாங்க?" என்ருர் சிற்றப்பா.

"நான் தூக்கிக்கிட்டுப் போறேன். சோனுபாபு, நீங்க வாங்க."

இருண்டு கிடந்த ஆகாயம் சட்டென்று மேகங்கள் விலகிப் பளிச் சென்று ஆகிவிட்டதாக தோன்றியது சோனுவுக்கு. கெட்டுப்போனது ஏதோ மறுபடி கிடைத்துவிட்டதுபோல் இருந்தது. அவன் அம்மா விடம் ஓடிப் போய்ச் சொன்னுன: "அம்மா, என்னை சித்தப்பா போகச் சொல்லிவிட்டார். ஈசம் என்னைக் கூட்டிக்கிண்டு போகப் போருன்."

சோனு இந்த நற்செய்தியை எல்லாரிடமும் போய்ச் சொன்னுன். தாத்தா, பாட்டியிடம் போய்ச் சொன்னுன். திருவிழா போகும் மகிழ்ச்சியில் தன்னை மறந்துவிட்டான் அவன். புதுமையான ஒரு வாழ்க்கை. திருவிழா, கூட்டம், ஆறு, கால்வாய்கள் எல்லாம் சேர்ந்து மனிதனுக்குள் ஓர் உயிர்ப் பெருக்கைக் கொண்டுவந்து விடுகின்றன. இதுவரை திருவிழா என்பது ரகசியமாகவே இருந்தது சோனுவுக்கு. இப்போது அந்த ரகசியம் புரிந்துவிடும் அவனுக்கு. திருவிழாவின் ரகசியம் என்ன? எப்படிப்பட்ட ஜனங்கள் திருவிழா வில் இருப்பார்கள்? குதிரைப் பந்தயத்தில் ஜயிக்க ஏன் எல்லாரும் இப்படித தவிக்கிருர்கள்? இம்மாதிரி எவ்வளவோ கேள்விகள் தோன்றின சோனுவின் மனத்தில்.

அவன் ஈசமின் கையைப் பிடித்துக்கொண்டு எல்லாருக்கும் முன் ஞல் நடக்கத் தொடங்கினுன். கொஞ்சதூரம் நடை, கொஞ்சதூரம் ஈசமின் தோளில் சவாரி. அவனுக்குக் கால் வலித்தால் அவனைத் தன் தோளில் தூக்கிக்கொள்வான் ஈசம். கொஞ்சதூரம் போனதும் பாலியாபாடாவைக் கடந்ததும் ஆற்றங்கரையில் ஒரு தண்ணீர்ப் பந்தலைப் பார்த்தார்கள் அவர்கள். அதன் பிறகு வரிசையாக வளர்ந்திருந்த செங்கடம்பு மரங்களுக்குக் கீழே வெல்லப்பொரியும்

சிவப்புநிறச் சர்க்கரையுருண்டையும் விற்கப்படுவதைக் கண்டார் கள். ஈசம் அவனுக்கு அரை அணுப் பொரியும், காலணுவுக்குச் சர்க்கரையுருண்டையும் வாங்கிக் கொடுத்தான். சோனு தன் இரு பைகளிலும் பொரியை நிரப்பிக்கொண்டு, சர்க்கரை உருண்டை இருந்த தொன்னையைக் கையில் வைத்துக்கொண்டான். அவனு டைய கோஷ்டியில் சிலர் முன்னால் போய்விட்டார்கள். சிற்றப்பா இருந்திருந்தால் இதையெல்லாம் அவனைச் சாப்பிட விடமாட்டார். பொரியைத் தின்றுகொண்டே நடந்தான் சோனு. தூரத்து மைதானத் தில் கூடாரங்கள் போட்டிருப்பது தெரிந்தது. அவற்றின் உச்சியில் கொடிகள் பறந்தன. யக்ஞேஸ்வர் கோவில் தெரிந்தது. அரச மரத்தைப் பிளந்துகொண்டு வானத்தை நோக்கி நீட்டியபடி நின்றது, கோவில் சிகரத்திலிருந்த திரிசூலம். தர்கா நிலத்தில் வரிசை வரிசை யாகக் குதிரைகள் போயின. யாரோ பனையோலை ஊதல் ஊதினுர்கள். ஆற்றில் எவ்வளவு படகுகள்! அவர்களுடைய படகு ஒன்றும் திருவிழாவுக்கு வரும், தர்முஜ் பழங்களை ஏற்றிக்கொண்டு. அது கால்வாய்கள் வழியே சுற்றுவழியில் வருவதால் வந்துசேரத் தாமத மாகும்.

ரஞ்சித்தின் கோஷ்டி ஒன்று நாராயண் கஞ்சிலிருந்து திருவிழா வுக்கு வரும். அந்தக் கோஷ்டியினர் திருவிழாவில் கத்திச் சண்டை, சிலம்பம் எல்லாம் போட்டுக் காண்பிப்பார்கள். புஜங்கன், கோபால் எல்லாரும் கூடாரம் அடிப்பதற்காக இரண்டு நாள் முன்னதாகவே திருவிழா மைதானத்துக்கு வந்துவிட்டார்கள். வெள்ளை ஃபிராக், கறுப்புக் காற்சட்டை, காலில் பூட்ஸ் அணிந்த சின்னச் சின்னப் பெண்கள் — பதின்மூன்று, பதின்நான்கு வயதுப் பெண்கள் — வருவார்கள். அவர்களை ஆபீஸ் கட்டிடத்தில் தங்கவைப்பார்கள். இந்த ஏற்பாடுகளையெல்லாம் ரஞ்சித்தின் சங்கம் செய்திருந்தது. ஆனால் முன்னால் நின்று ஏற்பாடுகளைச் செய்தவன் புஜங்கன்தான். ரஞ்சித், தான் அவற்றில் சம்பந்தப்பட்டிருப்பதாகவே காட்டிக் கொள்ளவில்லை.

மாலதி யக்ஞேஸ்வர் கோவிலுக்குப் போனபோது, ஜப்பர் திருவிழாக் கூட்டத்தில் நோட்டீஸ் விநியோகிப்பதைக் கவனித்தாள். அவன் மாலதியைப் பார்த்துச் சிரித்தான்; "திருவிழாவுக்கு வந்திருக் கீங்களா, அக்கா?" என்று கேட்டான். அவனுக்குப் பக்கத்தில் அவளுக்குப் பழக்கம் இல்லாத சில முஸ்லீம்கள் நின்றிருந்தார்கள். பயம் காரணமாக மாலதிக்குச் சிரிப்பு வரவில்லை. அவளுக்கு அவனைக் கேட்க ஆசைதான், "சாமு திருவிழாவுக்கு வந்திருக்கிறானா?" என்று. ஆனால் அவனுக்குப் பக்கத்தில் இருந்தவர்கள் அவளை உறுத்துப் பார்த்தவிதம் அவளை அங்கே நிற்கவிடவில்லை. அவளுக்கு

ஆற்றில் குளிக்கவேண்டும்; கொஞ்சம் வில்வமும் துளசியும் வாங்கிக் கொள்ள வேண்டும். அவள் நேரே கோயிலை நோக்கி நடந்தாள்.

ஒரு சின்னக் குழந்தை — அதன் கையில் ஒரு சின்ன ஆட்டுக் குட்டி—திருவிழாக் கூட்டத்தில் வழி தவறிவிட்டது. குழந்தையின் அக்கா அதை மரத்தடியில் நிறுத்தி வைத்துவிட்டு ஆற்றில் ஸ்நானம் செய்யப் போயிருக்கிருள். ஸ்நானம் செய்துவிட்டு வந்ததும் குழந்தையைக் கோவிலுக்குக் கூட்டிக்கொண்டு போவதாகச் சொல்லி இருந்திருக்கிருள்.

மனிதனுக்குள்ளே ஒரு மனம் இருக்கிறது. அந்தப் பைத்தியக்கார மனம் நதியைக் கண்டால் கும்மாளம் போடத் தொடங்கிவிடும். திருவிழாவில் நிறைய அழகான இந்துப் பெண்களின் கூட்டம். அவர்கள் குளித்துவிட்டு நனைந்த உடையுடன் வெளியே வரும் போது, அந்த உடம்பைக் கருநாகம் போல் கொத்தவேண்டும் என்ற வெறி ஏற்படும்; அந்த அழகைப் பார்த்துவிட்டுச் சும்மா இருக்காது மனசு.

கோபால்தியைச் சேர்ந்த நடுத்தரக் குடும்பத்துப் பையன்கள் திருவிழாவில் வாலண்டியர்களாகப் பணி செய்தார்கள்.

''ஜனங்களே, கள்ளங்கபடமில்லாமல் பழகுங்கள், சந்தோஷமாக இருங்கள். ஆனல் விஷமம் செய்தால் கட்டி இழுத்துக்கொண்டு போய்விடுவோம்!''

வாலண்டியர்கள் தண்ணீர்ப் பந்தல் நடத்துகிருர்கள். கூட்டத்தில் தவறிப் போனவர்களைத் தேடிக் கண்டுபிடிக்கிருர்கள். பாட்ஜ் அணிந்துகொண்டு குதிரைமேல் இங்குமங்கும் சுற்றுகிருர்கள்.

ஓர் இளைஞன் ஒரு பெண்ணின் ஸ்தனத்தைக் கையால் அமுக்கினனும். அவர்கள் அந்தப் போக்கிரியைப் பிடித்துவிட்டார் கள். அவன் லுங்கி அணிந்திருந்தான்; கழுத்தில் ஒரு துண்டைச் சுற்றிக்கொண் டிருந்தான்; கட்கத்தில் ஒரு தடியை வைத்திருந்தான். ஆற்றங்கரைப் படித்துறையில் நல்ல கூட்டம். 'பழக்கமான பெண் தானே, அவளுடைய ஸ்தனத்தைத் தொட்டால் அவள் வெளியே சொல்லிவிட மாட்டாள்' என்று நினைத்திருக்கிருன் அவன். ஆனல் இந்துப் பெண்; அவளுடைய மானத்தைப் பொறுத்த விஷயம் இது. அவள் அசடுபோல் அழத் தொடங்கிவிட்டாள். இதை வாலண் டியர் ஒருவன் பார்த்துவிட்டான். அவன் அந்தப் போக்கிரியின் முடியைக் கையால் பிடித்துக்கொண்டு அவனுடைய பின்பக்கம் ஓர் உதை கொடுத்தான்.

இந்தச் செய்தி நெருப்புப் போல் திருவிழாக் கூட்டத்தில் பரவி விட்டது. யாருக்கும் எதுவும் சொல்லத் தைரியம் இல்லை. குதிரைகள் தர்கா நிலத்தில் புல் மேய்ந்துகொண் டிருந்தன. சாயங்கால

மானதும் அவை மைதானத்துக்கு வரும். பரந்த மைதானம். தூரத்தில் சிவப்பு, நீலக்கொடிகள் பறந்தன. ஒரு குதிரை — மூடா பாடாவைச் சேர்ந்த சுரேஷ் பாபுவின் குதிரையாக இருக்கலாம்— வெள்ளைநிறக் குதிரை அது — அம்புபோல் பாய்ந்து வந்துகொண்டிருந்தது.

ஜப்பரும் அம்புபோல் பாய்ந்து வந்தான். அவனுடைய ஜாதிக்காரன் ஒருவனை எல்லாரும் பிடித்துக்கொண்டு ஆபீஸ் கட்டிடத்துக்கு அழைத்துப் போனார்கள். அவனுடைய ஜாதிக்காரர்கள் தலையைக் குனிந்துகொண்டு அவர்களுடன் போனார்கள். யாருக்கும் வாய் திறந்து பேசத் துணிவில்லை. ஜப்பர் தாவிக்கொண்டு ஓடிக் கூட்டத்துக்குள் புகுந்து, "எங்கே கூட்டிக்கிட்டுப் போறீங்க இவனை?" என்று அதட்டிக் கேட்டான்.

"ஆபீசுக்கு" என்றான் ஒருவன்.

"ஏன், என்ன பண்ணினான் இவன்?"

"ஒரு பெண்ணோட ஸ்தனத்தை அமுக்கினான்."

"அமுக்கினா என்ன?" என்று கேட்டுக்கொண்டே அவன் முன்னேறி வந்தான். அவனுடைய கோஷ்டியும் அவனைத் தொடர்ந்து வந்தது. ஆனால் அவர்களால் அந்த இளைஞனை அணுகமுடியவில்லை. அதற்குள் வாலண்டியர்கள் அவனை — அவன் பெயர் அன்வர் — ஆபீசுக்குள் கூட்டிக்கொண்டு போய்விட்டார்கள். அவன் மேல் அடிகள், உதைகள், குத்துக்கள் விழுந்தன. "பாவம், அன்வர்! உனக்கு என்னப்பா ஆசை! மலர்ந்த தாமரையைப் போன்ற அந்த அழகான ஸ்தனத்தைப பார்த்து நீரில் நீந்தும் வெள்ளிமீனைப் பார்ப்பதாகக் கனவு கண்டாயா? அந்த மீனைப் பிடிப்பதாக நினைத்து ஸ்தனத்தைப் பிடித்துவிட்டாயா?"

சூரியன் அஸ்தமித்துக்கொண் டிருந்தான். பெரிய கூடாரத்தில் உயர்குடும்பப் பெண்கள் உட்காருவதற்காக ரத்தினக் கம்பளம் விரித்திருந்தது. அழகழகான ஆபரணங்கள் அணிந்திருந்தார்கள் அவர்கள். அவர்களுடைய முகங்கள் அம்மனின் முகம் போல் அழகாய் இருந்தன. வியப்பும் மகிழ்ச்சியும் கண்களில் மின்ன அவர்கள் குதிரைப் பந்தயம் பார்ப்பார்கள். ஆற்றில் வந்துகொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான படகுகளிலிருந்து வேலைக்காரர்களும் வேலைக்காரிகளும் வந்து இறங்கிவிட்டால் திருவிழாவில் மகிழ்ச்சி புரண்டோடும்.

குதிரைகள் தர்காவிலிருந்து ஒவ்வொன்றாக வெளியேவர ஆரம்பித்துவிட்டன. அவை முதலில் கனவான்களுக்குச் சலாம் செய்துவிட்டுப் பந்தய மைதானத்தில் இறங்கும். 'நாங்க வெகு தூரத்திலேருந்து வந்திருக்கோம். பந்தயம் ஓடி ஜயிக்க. பந்தயத்தை ஜயிச்சுட்டு நாங்க

திரும்பிப் போயிடுவோம். நீங்க நல்ல மனசு உள்ளவங்க. உங்க மைதானத்திலே நாங்க பந்தயம் ஓடப்போறோம்!' என்று சொல்வது போல் குதிரைக்காரர்கள் தங்கள் தங்கள் குதிரைகளின் திறமையைக் காட்டத் தொடங்கினார்கள். சில குதிரைகள் தங்கள் காலைத் தூக்கி அங்கே கூடியிருந்த சிறு பெண்களுக்கு நடனம் ஆடிக் காண்பித்தன.

இப்போது திருவிழாவில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டுவிட்டன. ஆபீஸ் கட்டிடத்துக்குள் இந்து இளைஞர்கள் கூடியிருந்தார்கள். வெளியே முஸ்லீம் இளைஞர்கள். போலீஸ் வந்துவிட்டது. போலீஸ் இந்துக்களின் கட்சியை ஆதரித்தது. சட்டம் இருக்கிறது; தீர்ப்பு இருக்கிறது; குற்றம் சாட்டப்பட்ட இளைஞனைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டியதுதான்.

ஆனால் யார் சொல்லி யார் கேட்பது? முஸ்லீம்கள் ஆபீஸ் கட்டிடத்துக்குள் நுழைந்து அவ்வரை மீட்க முயற்சி செய்தார்கள். இந்துக்களுடைய துப்பாக்கிகள் வெடித்தன. சற்றுத் தூரத்தில் நடனமாடிக் கொண்டிருந்த குதிரைகள் மிரண்டுபோய் மனம்போன போக்கில் ஓடத் தொடங்கின. அவரவர் எந்த எந்தப் பக்கம் ஓட முடியுமோ அந்த அந்தப் பக்கம் ஓடினார்கள். ஈசம் தர்பூஜ் விற்றுக் கொண்டிருந்தான். சோனு, லால்ட்டு, பல்ட்டு எல்லாரும் சர்க்கஸில் சிங்கம் புலி விளையாட்டைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். பாண்டு வாத்தியம் ஒலித்துக்கொண் டிருந்தது. புலி தன் பாதத்தை நக்கிக் கொண்டிருந்தது. உயரே இருந்து தொங்கும் கம்பிகளில் சர்க்கஸ் செய்துகொண் டிருந்தாள் ஓர் அழகான பெண்.

அப்போது திடீரென்று அந்தத் துப்பாக்கிச் சத்தம் திருவிழா முழுவதும் இருளைப் பரப்பிவிட்டது.

கலகத்தில் இரண்டு பிணங்கள் விழுந்துவிட்டன. இருளில் தீவர்த்திகளின் வெளிச்சம் தெரிந்தது. பெண்கள் ஆபீஸ் கட்டிடத்துக்குள் வந்து சேர்ந்துவிட்டார்கள். தர்காவிலிருந்து குதிரைகள் ஒவ்வொன்றாக வெளியே வந்தன. காஸ்தாரிகளின் கைகளில் தீவர்த்திகள். திருவிழா மைதானம் எங்கும் தீவர்த்திகள் எரிந்தன. இடையிடையே 'அல்லா ஹோ அக்பர்!' என்ற ஒலி எழுந்தது. ஆபீஸ் கட்டிடத்திலிருக்கும் இந்துக்கள் உரக்கக் கத்தினார்கள், 'வந்தே மாதரம்!' என்று.

யார் எங்கே சிதறிப் போனார்கள் என்று புரியவில்லை. ஈசம், சோனு, லால்ட்டு, பல்ட்டு எல்லாரையும் சர்க்கஸ் கூடாரத்தில் உட்கார வைத்துவிட்டுத் தர்பூஜ் விற்கப் போயிருந்தான். சர்க்கஸ் முடிந்ததும் அவர்கள் ஈசம் இருக்கும் இடத்துக்கு வரவேண்டுமென்று ஏற்பாடு.

கலகம் ஆரம்பித்ததுமே ஈசம் சர்க்கஸ் கூடாரத்துக்கு ஓடினான். நல்ல இருட்டு. மக்கள் ஆளுக்கொரு பக்கமாக ஓடிக்கொண்டிருந்

தார்கள். வழி தவறிப் போயிருந்த அந்தப் பையனையும் அவன் வைத்திருந்த ஆட்டுக் குட்டியையும் யாரோ கூட்டத்தில் மிதித்து விட்டுப் போய்விட்டார்கள். பாவம், அக்காவுக்காகக் காத்துக் கொண்டிருந்தான் பையன். அக்கா வந்ததும் அவளுடன் கோவிலுக்குப் போகப் போவதாக நினைத்துக்கொண் டிருந்தான்.

ஓர் இளைஞன் ஒரு பெண்ணிடம் தகாத முறையில் நடந்துகொண்ட சம்பவம் நண்பகலில் நடந்தது. அது முதற்கொண்டே பல புரளிகள் பரவிக்கொண் டிருந்தன. ஜப்பர் தலையிட்டதிலிருந்து களேபரம் அதிகரித்தது. எல்லாரும் நினைத்தார்கள், 'திருவிழா, சந்தை என்றால் இதுமாதிரி ஏதாவது அசம்பாவிதம் நேரத்தான் செய்யும், பெரியவர்கள் தலையிட்டு நிலைமையைச் சமாளித்துவிடுவார்கள்' என்று.

ஆனால் இந்த ஜப்பர்! அவன் தன் ஜாதிக்காரர்களைப் பார்த்துக் கத்தினான்: "உங்களுக்கு மானம், மரியாதை கிடையாதா? நீங்க இன்னும் எவ்வளவு நாள்தான் இந்தமாதிரி மாடா, குதிரையா வாயில்லாப் பூச்சியா இருக்கப் போறீங்க?"

சாமு சொற்பொழிவு நிகழ்த்தும் பாணியில் பேசினான் ஜப்பர். நிறையக் கூட்டத்தைப் பார்த்ததும் அவனுக்குக் குஷி பிறந்து விட்டது. அவன் தன் பெரிய மனிதத்தனத்தைக் காட்டிக் கொள்வதற்காக, தான் நினைத்தால் என்னென்ன செய்யமுடியும் என்று காட்டுவதற்காக அன்வரை மீட்கும் முயற்சியில் இறங்கினான்.

அவன் தன் சகாக்களுடன் ஆபீஸ் கட்டிடத்துக்குள் நுழைய முற்பட்டபோது துப்பாக்கிகள் வெடித்தன. அவன் இதை எதிர் பார்க்கவில்லை. அவன் கண்முன்னே இரண்டு பேர் பிணமாகக் குப்புற விழுந்தனர். நெருப்புப் பற்றிக்கொள்ள எவ்வளவு நேரமாகும்? கலகக்காரர்கள் ஆளுக்கொரு தீவர்த்தியை எடுத்துக்கொண்டு வருவார்கள்; அவர்கள் இஷ்டம்போல் நெருப்பு வைப்பார்கள். அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு ஓடிவிடுவார்கள்.

ஈசம் சர்க்கஸ் கூடாரத்தை நோக்கி ஓடினான்: "ஐயோ, போச்சு! எல்லாம் போச்சு!" கூடாரம் சிதைந்து கிடந்தது. அதன் ஒரு பகுதி எரிந்துகொண் டிருந்தது. புலி, சிங்கங்கள் நெருப்பில் சிக்கித் தவித்துக்கொண் டிருந்தன. பக்கத்தில் யாருமே இல்லை. யாரோ எல்லாவற்றையும் சூறையாடிவிட்டுப் போனதுபோல் இருந்தது.

என்ன செய்வது என்று புரியவில்லை ஈசமுக்கு. "அதிக டம்பமாக சோனாவைக் கூட்டிக்கொண்டு வந்தேனே! இப்போது என்ன செய்வது?" என்று அவன் தவித்தான். ஆபீஸ் கட்டிடத்துக்குப் போகலாமா என்று நினைத்தான். ஆனால் ஆபீஸ் கட்டிடத்தை நெருங்கியபோது அவனுக்குத் தோன்றியது, இப்போது இருக்கும் நிலைமையில் அவன் லுங்கியை அணிந்துகொண்டு அங்கே போவது

உசிதமல்ல என்று. அப்புறம் நினைவு வந்தது, மூன்று சிறுவர்களும் அந்தப் பக்கம் ஓடிவந்திருக்க மாட்டார்கள்; அவர்கள் அவன் தர்மூஜ் விற்கும் இடத்துக்குத்தான் போயிருப்பார்கள் என்று. இந்த நினைவு வந்ததும் அவன் நிற்காமல் ஓடினான்.

திருவிழாக் கூட்டத்துக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. நாற்புறமும் நெருப்புப் பற்றி எரிந்தது. இந்த நெருப்பு எவ்வளவோ காலமாக மண்ணுக்குள் ஒளிந்துகொண்டிருந்தது. தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை, அவமானத்தை வெகுகாலமாகப் பொறுத்துக்கொண்டு வந்த மக்கள் இப்போது பொங்கி எழுந்து அந்த அவமானத்துக்குப் பழிவாங்குகிறார்கள். ஈசமுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அவன் நெருப்புக் குவியல்களுக்கு நடுவில் நின்றுகொண்டு கத்தினான், "சோனு பாபு! லால்ட்டு பாபு! நீங்க எங்கே இருக்கீங்க? நான் எப்படி ஊருக்குத் திரும்புவேன்? ஊரிலே எப்படி என் முகத்தைக் காட்டுவேன்?"

அவன் பைத்தியம்போல் கத்திக்கொண்டே இருந்தான். கத்திக்கொண்டே இங்குமங்கும் ஓடினான் அவன். எங்கே பார்த்தாலும், உடைந்த கண்ணாடித் துண்டுகள். உடைந்த பல நிறக் கண்ணாடி வளையல் துண்டுகள் வழியில் சிதறிக் கிடந்தன. அந்த வழியில் ஓடும்போது அவை அவன் கால்களில் குத்தின. அதைப் பொருட்படுத்தவில்லை அவன். அவர்கள் மரத்தடியில் அவனுடைய கடைக்குப் பக்கத்தில் காத்துக்கொண்டிருக்கிறார்களோ, என்னவோ? ஆனால் அங்கு அவன் வந்து சேர்ந்தபோது ஒருவரையும் காணோம். பெரிய பெரிய தர்மூஜ் பழங்கள் மட்டும் நாலா பக்கங்களிலும் சிதறிக் கிடந்தன. யாரோ அவற்றை வாரி இறைத்துவிட்டு ஓடிப்போயிருக்கிறார்கள். அவற்றின்மேல் ரத்தக்கறை. அவனுடைய உடல் நடுங்கியது. அவன் வெறிபிடித்தவன் போல் கத்தினான், "என்னோடை ஆளுகளை இழுத்துக்கிட்டுப் போனது யாரு?"

திருவிழாக் கூட்டத்தில் யாரையோ கொல்ல முற்பட்டவன் போல் அவனும் ஓடத் தொடங்கினான். மைதானத்தின் நடுவில் நின்றுகொண்டு, "சோனுபாபு, சோனுபாபு! எங்கே போயிட்டீங்க? கொஞ்சம் குரல் கொடுங்க. எங்கே ஒளிஞ்சுக்கிட்டு இருக்கீங்கன்னு சொல்லுங்க. நான்தான் ஈசம். நான் உங்களை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன். உங்களை வீட்டிலே கொண்டுபோய்ச் சேர்க்காட்டா என்னோடை ஜாதி, மானம், கௌரவம் எல்லாம் போயிடும்!" என்று கத்தினான்.

தர்காவிலிருந்த குதிரைகளில் பெரும்பாலானவை ஜப்பரின் கட்சியில் சேர்ந்துகொண்டு போராடின. எப்படி ஆரம்பித்த திருவிழா எப்படி ஆகிவிட்டது! கடை கண்ணிகள் சூறையாடப்பட்டன;

அலங்காரப் பொருள்கள் விற்கும் கடைகள், துணிக்கடைகள், மண்பாண்டங்கள் விற்கும் கடைகள், இரும்புச் சாமான் கடைகள் எல்லாம் நிர்மூலமாகிவிட்டன. இரண்டு மூன்று சர்க்கஸ் பெண் களைக் காணோம். பயத்தால் ஓடி வந்த மனிதர்கள் ஆற்றங்கரையில் குப்புற விழுந்தார்கள்.

தர்முஜ் ஏற்றி வந்த படகுகளும், விட்டுப் பாத்திரங்கள் ஏற்றி வந்த படகுகளும் ஆற்றில் நின்றிருந்தன. தண்ணீரிலிருந்து, "ஐயோ! ஐயோ!" என்ற ஓலம் கேட்டது. எல்லாரும் உயிருக்குப் பயந்து கொண்டு தலைதெறிக்க ஓடினார்கள். குதிரைகளின் கால்களால் மிதிபட்டும் நெருப்பில் அகப்பட்டுக்கொண்டும் எவ்வளவு பேர் உயிர்விட்டார்கள் என்று சொல்வது கஷ்டம். இருகட்சியினருக்கும் சண்டை போட எங்கிருந்துதான் இவ்வளவு ஈட்டிகள், பாக்குமரக் குச்சிகள் எல்லாம் கிடைத்தனவோ?

திருவிழா மைதானம் யுத்தகளமாகிவிட்டது. குளத்தின் இருகரை யிலும் இருட்டில் இரண்டு கட்சியினரும் தயாராக நின்றிருந்தார்கள், நள்ளிரவில் சண்டையைத் தீவிரமாக நடத்தும் எண்ணத்துடன்.

நடக்கப் போவதை மாலையிலேயே ஓரளவு ஊகித்துவிட்டான் ரஞ்சித். அவன் தன் சகாக்களுடன் ஆபீஸ் கட்டிடத்துக்குப் போய்ச் சேர்ந்தான். இப்போது சோனு, லால்ட்டு, பல்ட்டு, மாலதி எல்லா ரையும் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். திருவிழாவுக்கு வந்தால் மாலதி பெரும்பாலான நேரத்தைக் கோவிலில்தான் கழிப்பாள். கொஞ்சம் இடிந்த ஒரு மடத்தின் வாசலில் ஒரே கூட்டம். பூஜை செய்வதற்காகக் கூட்டத்தோடு கூட்டமாக நின்றிருந்தாள் மாலதி. ரஞ்சித் அவளுடைய புடைவைத் தலைப்பைப் பிடித்துக்கொண்டு கேட்டான், "சோபாவும் ஆபுவும் எங்கே?" என்று.

"அவங்க கோவில்லே இருக்காங்க."

"அவங்களைக் கூட்டிக்கிண்டு சீக்கிரம் வா."

மாலதி ஒன்றும் புரியாமல் பரக்கப் பரக்க விழித்தாள்.

"தாமசம் பண்ணாமே சீக்கிரம் போ! நான் சர்க்கஸ் கூடாரத்துக்குப் போயிட்டு வரேன். ஈசமுக்குத் தகவல் சொல்லணும். எனக்கு நிறைய வேலை இருக்கு. இங்கே கலகம் வரும்போல் இருக்கு."

ரஞ்சித் வேகமாக நடந்தான். குளத்தின் இந்தப் பக்கத்தில் ஏராள மான வளையல் கடைகள்; பூக்கடைகள்; பழக்கடைகள்; அவற்றுக் கப்பால் பொரிக் கடைகள்; தின்பண்டங்கள் விற்கும் கடைகள். அவற்றைக் கடந்தால் திறந்தவெளி. கோபால்தியைச் சேர்ந்த பெரிய மனிதர்கள் அங்கே கூடாரம் அடித்துக்கொண்டு தங்கி யிருந்தார்கள். இந்த வெளியையும் கடந்தால் சிறியதும் பெரிதுமாக நிறைய சர்க்கஸ் கூடாரங்கள். ரஞ்சித்தான் சிறுவர்களுக்குச் சர்க்கஸ்

டிக்கெட் வாங்கிக் கொடுத்திருந்தான். ஈசம் அவர்களைச் சர்க்க ஸுக்குள் உட்கார வைத்துவிட்டு வந்தான். சர்க்கஸ் முடிந்ததும் அவர்கள் ஈசமின் கடைக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும் என்று ஏற்பாடு.

ரஞ்சித்தால் அங்கு வெகுநேரம் தாமதிக்க முடியவில்லை. அங்கு அவன் தன்னைக் காட்டிக்கொள்ளக் கூடாது. எதிர்த்தரப்பினர் அவனைத் தேடிக்கொண் டிருந்தார்கள். அவன் சீக்கிரம் சர்க்கஸ் கூடாரத்தை அடைந்துவிட முயற்சி செய்தான்.

ஜிலேபிக் கடையிலிருந்து இனிய நறுமணம் வந்துகொண் டிருந்தது. அந்த மணத்தை நுகர்ந்தவர்கள் திருவிழா இன்னும் சற்று நேரத்தில் அலங்கோலத்தில் முடியும் என்று நினைத்திருக்கவே மாட்டார்கள். ரஞ்சித்தாலும் இன்னும் ஒரு சிலராலுந்தான் வரப் போகும் ஆபத்தை ஊகிக்க முடிந்தது. உடனே வீடு திரும்புவது தான் நல்லது என்று அவர்கள் எண்ணினார்கள்.

திருவிழாவுக்குச் சசீந்திரநாத்தும் வருவதாக இருந்தது. அவர் வந்திருந்தால் ஜப்பரை அடக்கியிருப்பார். ஜப்பருக்கு அவரிடம் ரொம்பப் பயம். காரணம் அவர் ஆபேத் அலியின் இன்பத்திலும் துன்பத்திலும் அவனுக்கு உறுதுணையாக இருந்தார். நடந்து கொண்டே இவ்வாறெல்லாம் நினைத்தான் ரஞ்சித்.

அவன் சர்க்கஸ் கூடாரத்துக்கு வந்தபோது அங்கே சர்க்கஸ் நின்றுபோய் விட்டிருந்தது. வரப்போகும் ரகளைபற்றிச் சர்க்கஸ்காரர் களுக்கும் தெரிந்துவிட்டது போலும்! அவர்கள் எல்லா விளை யாட்டுக்களையும் காண்பிக்காமல் சிங்கம், புலி முதலிய மிருகங்களை கூண்டுகளில் அடைத்துவிட்டார்கள்.

ரஞ்சித் சர்க்கஸ் வாசலில் மூன்று சிறுவர்களையும் பார்த்து, "நீங்க ஈசமோட கடைப்பக்கம் போகவேண்டாம். நான் உங்களை ஆபீஸ் கட்டிடத்துலே கொண்டுபோய் விட்டுடறேன், வாங்க!" என்றான்.

ரஞ்சித் அவர்களை அங்கே கொண்டுபோய் விட்டுவிட்டு ஈசமிடம் போய்த் தர்முஜ் பழங்களைப் படகில் ஏற்றச் சொல்ல நினைத்தான். ஆனால் அவனால் ஆபீஸ் கட்டிடத்துக்குப் போய்ச் சேரமுடியவில்லை. சூரியன் அஸ்தமனமாகிக் கொண்டிருந்தான். துப்பாக்கிச் சத்தம், ஒரே களேபரம்! மனிதர்கள் கலகத்தில் அகப்பட்டுக்கொண்டு கொண்டிருந்தார்கள்.

ரஞ்சித் சற்றுப் பின்வாங்கினான். தான் சர்க்கஸ் வாசலில் இருப் பதாக மாலதியிடம் சொல்லிவிட்டு வந்தது அவனுக்கு நினைவு வந்தது. அவன் சர்க்கஸ் வாசலுக்குத் திரும்பி ஓடிவந்தான். அதற் குள் யாரோ கூடாரத்துக்குத் தீ வைத்துவிட்டார்கள். அவன் இந்தச் சிறுவர்களை வைத்துக்கொண்டு என்ன செய்வான்? மாலதியை

இன்னும் காணோம். அவர்களைக் காணாமல் மறுபடி கோவிலுக்குத் திரும்பிப் போய்விட்டாளோ? இப்போதோ உயிருக்கு ஆபத்தான நிலைமை. எப்போது உயிர்போகும் என்று சொல்லமுடியாது. மாலதியைப் போன்ற ஓர் அழகான யுவதியை நினைத்து அவன் கவலையுடன் கோவிலை நோக்கி ஓடினான். சோனுவுக்கு ஒன்றும் புரியவில்லை. இதெல்லாம் ஏன் இப்படி ஆகிவிட்டது? ஜனங்கள் வெட்டுக்கிளிக் கூட்டம்போல் ஆற்றுப்பக்கம் ஓடினார்கள். ஆபு ஒரு மரத்தடியில் நின்றுகொண்டு அழுவதைப் பார்த்துவிட்டுச் சோனு ரஞ்சித்துக்கு அவனைக் காண்பித்தான்.

''உன்னோட அத்தை எங்கே?'' என்று ரஞ்சித் ஆபுவைக் கேட்டான்.

பதில் சொல்லாமல் அழுதான் ஆபு. அவன் திருவிழாச் சந்தடியில் வழி தவறிவிட்டான் என்று ரஞ்சித்துக்குப் புரிந்தது. இனி மாலதியைத் தேடுவதில் பயனில்லை. அவனுடைய நெஞ்சு நடுங்கியது. இவர்களை ஒரு பத்திரமான இடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தாலொழிய அவனுக்கு அமைதியில்லை. ஆனால் ஆபீஸ் கட்டிடத்தை அடைவது எப்படி?

அவன் பின்பக்கம் திரும்பிப் பார்த்தபோது அங்கே நெருப்பு எரிவதைக் கண்டான். ஆற்றுப் பக்கம் போனால்தான் தப்ப முடியும். அங்கே அவர்களுடைய படகு — தர்முஜ் ஏற்றிவந்த படகு இருந்தது. அவன் அவர்களைக் கூட்டிக்கொண்டு அந்தப் பக்கமாக ஓடினான். நல்ல இருட்டாகிவிட்டது. எதிரில் வந்த மக்களை அடையாளங் கண்டுகொள்ள முடியவில்லை. இடையிடையே நெருப்பு ஜ்வாலைவிட்டு எரிந்ததால் ஒரு சில முகங்கள் கண்ணுக்குத் தெரிந்தன. கூட்டத்தில் இந்துக்களும் முஸ்லீம்களும் கலந்திருந் தார்கள். எல்லாரும் பாதுகாப்பான இடத்தைத் தேடி ஓடினார்கள்.

யாரோ படகை அவிழ்த்துவிட்டிருந்தார்கள். அது கரையைவிட்டு விலகிக் கொஞ்சதூரத்தில் மிதந்துகொண் டிருந்தது. ரஞ்சித் தண் ணீரில் குதித்துப் படகை நோக்கி நீந்தினான். அப்போது தண்ணீரில் ஏதேதோ மிதப்பதைக் கண்டான். நெருப்பிலிருந்தும் போக்கிரி களிடமிருந்தும் தப்ப முனைந்த மனிதர்கள்தான் நீந்திக்கொண் டிருந்தார்கள். சில படகுகள் அம்புபோல் வேகமாகப் போய்க் கொண்டிருந்தன. அவன் தாமதம் செய்யாமல் படகுக்குள் ஏறினான் அதில் யாரோ உட்கார்ந்திருப்பது நிழல் உருவமாகத் தெரிந்தது.

''யாரது?'' என்று அவன் கேட்டான்.

பதில் இல்லை.

''யாரு நீங்க?''

இப்போது குரலை அடையாளம் கண்டுகொண்டு மாலதி பதில் சொன்னாள் : "நான்தான் மாலதி."

"நீயா! பக்கத்திலே யாரு?"

"சோபா. ஆபுவைக் காணோம்."

இப்போது பேச நேரமில்லை. ரஞ்சித் வேகமாகப் படகைக் கரைப் பக்கம் கொண்டு சென்றான். போகும்போது சொன்னான், "ஆபு கிடைச்சுட்டான்! ஆபு, லால்ட்டு, பல்ட்டு, சோனா எல்லாரும் கரையிலே நின்னுக்கிண்டு இருக்காங்க."

பிறகு இங்குமங்கும் பார்த்துவிட்டு, "சின்னத் துடுப்பையும் காணோம், பெரிய துடுப்பையும் காணோம்! எல்லாம் எங்கே போச்சு?" என்று கேட்டான் ரஞ்சித்.

மாலதி ஒன்றும் சொல்லவில்லை. இப்போது அவளுடைய பயம் பறந்துவிட்டது. அவள் படகோட்டுவதில் ரஞ்சித்துக்கு உதவி செய்தாள். கரைக்கு வந்துசேர்ந்த ரஞ்சித் தீவர்த்திகள் தங்கள் பக்கமாக வருவதைக் கண்டான். ஆபத்துத்தான்! மக்கள் ஆற்றில் இறங்கித் தப்புகிறார்களென்று கலகக்காரர்களுக்குத் தெரிந்து விட்டது. அவனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. மரணம் நிச்சயம். கேள்வி முறையில்லாத மரணம். அவன் சோனாவின் கண்களைப் பார்த்தான். அவற்றில் திகைப்பு பிரதிபலித்தது. எவ்வளவு சந்தோஷமான திருவிழா! அதில் எவ்வளவு பறவைகள், பலவர்ணக் குதிரைகள், எள்ளுருண்டை, கத்மா, பொரி முதலிய தின்பண்டங்கள், பனையோலை ஊதல், பலநிறக் கொடிகள்! இப்போது அவை ஒன்றுமே இல்லை. எல்லாம் எப்படிப் பாழாகி விட்டன! எங்கும் நெருப்பு எரிந்தது. கலகக்காரர்கள் குதிரைகளின் மேல் ஏறிக்கொண்டு சுற்றுகிறார்கள். அவர்களுடைய கைகளில் தீவர்த்திகள். சாகப் போகிற மக்களின் முகங்களைப் பார்க்க அவர் களுக்கு ஆசையோ?

எல்லாரும் படகில் ஏறிக்கொண்ட பிறகு ரஞ்சித் படகைக் கரையிலிருந்து பலமாகத் தள்ளிவிட்டான். பிறகு எல்லாரும் தங்கள் உயிரைப் பணயமாக வைத்துத் தங்கள் கைகளையே துடுப்புகள் போல் உபயோகித்துத் தண்ணீரைத் தள்ளினார்கள். ரஞ்சித படகி லிருந்த தர்முஜ் பழங்களை ஒவ்வொன்றாகத் தண்ணீரில் தள்ளி விட்டான். தண்ணீரில் மிதந்த தர்முஜ் பழங்கள் மனிதர்களின் தலைகள்போலத் தோற்றம் அளித்தன. நூற்றுக்கணக்கான மனிதர்கள் தண்ணீரில் மூழ்கிவிட்டார்கள் என்ற பிரமையை உண்டாக்கின.

தீவர்த்திகள் ஏந்திய கூட்டம் நதிக்கரையை அடைந்தபோது ரஞ்சித்தின் படகு ஆற்றின் நடுவே வந்து சேர்ந்துவிட்டது. அப் போதும் அவர்கள் படகைப் பார்த்துவிட்டால் படகில் இருப்பவர்கள்

மேல் ஈட்டியை வீசலாம் அல்லது நீந்தி வந்து படகைச் சூழ்ந்து கொள்ளலாம்.

ரஞ்சித் எல்லாரையும் படகிலிருந்து தண்ணீரில் இறங்கச் சொன்னான். படகைச் சற்றுச் சாய்வாக நிறுத்தி அதைக் கொண்டு அவர்களை மறைத்தான். கரையிலிருந்து பார்ப்பவர்களுக்கு ஒரு காலிப் படகு ஆற்றில் மிதப்பதாகத் தோன்றும். அவர்கள் தண்ணீரில் மிதக்கும் தர்மூஜ் பழங்களை மனிதத் தலைகளாக எண்ணி அவற்றின்மேல் தங்கள் ஈட்டிகளை எறிந்துவிட்டு, ஈட்டிகள் தீர்ந்து போனபின் திரும்பிப் போய்விடலாம். அதுவரை ரஞ்சித்தின் கோஷ்டியினர் கலகக்காரர்களின் கண்ணுக்குப் படாமல் தப்பிவிட்டால் படகைத் தள்ளிக்கொண்டு மறுகரைக்குப் போய்விடலாம்.

ஓர் ஓரத்தில் மாலதி; அவளுக்குப் பக்கத்தில் சோனு, லால்ட்டு, பல்ட்டு, ஆபு, சோபா. இன்னோர் ஓரத்தில் ரஞ்சித். அவர்களுடைய கைகள் மட்டும் படகைப் பிடித்துக்கொண் டிருந்தன. அவர்களுடைய உடல்கள் அதன் நிழலில் மறைந்திருந்தன. கரையிலிருந்து படகைப் பார்ப்பவர்களுக்கு அதிலிருந்த மக்கள் தண்ணீரில் முழுகி இறந்துவிட்டார்களென்று தோன்றும். இதுதான் ரஞ்சித்தின் ஏற்பாடு.

திடீரென்று மனிதனுக்கு என்ன வந்துவிடுகிறது? இப்போது குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு கொலை, கொள்ளைகளில் ஈடுபட்டிருப்பவர்களும் சாதாரண மனிதர்கள்தாம் என்று ரஞ்சித்துக்குத் தெரியும். அவர்களுடைய வீட்டில் அவர்களுக்குப் பெண்டாட்டி, பிள்ளைகள் இருக்கிறார்கள். அவர்கள் குதிரைப் பந்தயத்தில் வெற்றி பெற்றுவிட்டால் தங்கள் ஊருக்குப் போய் அந்த வெற்றியை விமரிசையாகக் கொண்டாடுவார்கள். தாங்கள் ஜயித்த மெடல்களை அணிந்து கொண்டு கிராமம் கிராமமாகப் போய் அங்குள்ள மக்களிடம் பரிசு கேட்பார்கள். அப்படிப்பட்ட மக்கள்தாம் இப்போது கொலை வெறிபிடித்து அலைகிறார்களென்று யாரால் நம்பமுடியும்?

அவர்கள் தங்கள் கைகளில் பாக்குமரக் குச்சிகளை வைத்துக்கொண் டிருப்பதை ரஞ்சித் இருட்டிலும் பார்த்தான். ஏதோ விளையாட்டை விளையாடுவது போன்ற உற்சாகம் அவர்களிடம் காணப்பட்டது. அவர்கள் அந்தக் கூர்மையான குச்சிகளை ஆற்றில் மிதந்த தர்மூஜ் பழங்களின்மேல் பாய்ச்சிவிட்டுக் காப்பிரிகளைக் கொன்றுவிட்டதாக நினைத்து ஆரவாரம் செய்தார்கள்.

அவர்கள் ஆற்றங்கரையிலிருந்து போனபிறகு ஓர் ஆள் அந்தப் பக்கம் வந்தான். அவன் இருட்டில் கூப்பிட்டான்: "சோனு பாபு, சோனு பாபு, நீங்க எங்கே போயிட்டீங்க?"

இருட்டிலிருந்து பதில் எதுவும் வரவில்லை.

அப்போது மறுகரையை நோக்கிப் படகைத் தள்ளிக்கொண்டு போய்க்கொண் டிருந்தான் ரஞ்சித்.

"நான் யாரைக் கூட்டிக்கிட்டு வீட்டுக்குப் போவேன்?" என்று ஈசம் இந்தக் கரையில் புலம்பிக்கொண் டிருந்தான்.

மறுகரையை அடைந்து மண்ணில் ஓடிய சோனு தடுக்கிவிழுந்தான். தூரத்திலிருந்து—வெகுதூரத்திலிருந்து—தன்னை யாரோ கூப்பிடுவது அவன் காதில் விழுந்தது. "மாமா, என்னை யாரோ கூப்பிடறாங்க" என்று அவன் ரஞ்சித்திடம் சொன்னான்.

கீழே விழுந்த சோனுவைத் தூக்கி நிறுத்தினான் ரஞ்சித். அவன் சோனுவின் காதில், "பேசாதே! வேகமா ஓடு! பக்கத்திலே இந்துக்கள் குடியிருப்பு இருக்கு. ராத்திரி அங்கே தங்கியிருப்போம்" என்று கூறினான்.

மாலதியையும் கூட்டிக்கொண்டு இருட்டில் நடந்துபோகப் பயமாக இருந்தது அவனுக்கு. ஆகையால் இந்துக் குடியிருப்பில் இரவைக் கழிக்கத் தீர்மானித்தான் அவன்.

ஈசமின் கூப்பாட்டு ஒலி கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து காற்றில் கலந்து மறைந்துவிட்டது. "சோனு பாபு, நீங்க எங்கே இருக்கீங்க? நான்தான் ஈசம். நான் யாரைக் கூட்டிக்கிட்டு வீட்டுக்கு போவேன், சொல்லுங்க!" என்று கத்தினான்.

ஆற்றின் மறுகரையில் யாரோ தன்னைப் பெயர் சொல்லித் திரும்பத் திரும்பக் கூப்பிடுவதுபோல் இருந்தது சோனுவுக்கு. யாரோ அவனைத் தேடுகிறார்கள்! கூப்பிடும் குரலை அவ்வளவு தொலைவிலிருந்து இனம் கண்டுகொள்ள முடியவில்லை அவனால். அவன் பயந்துபோய் ஓடினான். அவனைக் கூப்பிடுவது இராப் பிசாசோ என்னவோ? ஆமாம், இராப் பிசாசுதான் அவனைக் கூப்பிடுகிறது!

திருவிழாக் கலகம் திருவிழாவிலேயே முடிந்துவிட்டது. கடைசியாக ஊருக்குத் திரும்பியவன் ஈசந்தான். அவனுடைய முகம் வறண்டு, ஜீவன் இல்லாமல் இருந்தது. உயிர் அவனுடைய உடலிலிருந்து விடை பெற்றுக்கொண்டு விட்டதோ என்று தோன்றியது. அவனுடைய புலம்பலும் கூப்பாடும் ஓயவில்லை. ஏதோ ஒரு பச்சிளங் குழந்தையைக் கொன்றுவிட்டவன் போல அவனுடைய கண்கள் இருண்டு கிடந்தன. ஈசம் ஏரிகரையில் உட்கார்ந்து புலம்பிக்கொண்

டிருப்பதாக யாரோ வந்து செய்தி தெரிவித்தார்கள். இதைக் கேட்டு ஏரிப்பக்கம் ஓடினுர் சசீந்திரநாத்.

திருவிழாக் கலகம் இந்தப் பக்கம் பரவி வரவில்லை. அது இரவிலேயே அடங்கிவிட்டது. ரூப்கஞ்சிலிருந்தும் நாராயண் கஞ்சிலிருந்தும் போலீஸ் படை வந்து அடக்கிவிட்டது. பெரிய மனிதர்கள் ஒன்றுகூடி எல்லாரையும் அமைதியாக இருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். ஒரு வழியாக இந்தத் தடவை கலகம் ஓய்ந்தது என்று நிம்மதியடைந்தார்கள் அவர்கள். செய்தி கேட்டு டாக்காவிலிருந்து ஓடிவந்தான் சாமு. அவன் ஏரிக்கு அருகில் வந்த சசீந்திரநாத்தைப் பார்த்து, ''எங்கே போறீங்க?'' என்று கேட்டான்.

''ஈசம் ஏரிகரையிலே உட்கார்ந்திருக்கானும்.''

''அதுக்குள்ளேயா? இன்னும் பொழுது விடியலையே!''

''ஈசம் இன்னும் திருவிழாவிலேருந்தே திரும்பல்லியே! அவன் கலகததிலே செததுப் போயிட்டானுன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன். இரண்டு நாளா ஏரிகரையிலேயே உட்கார்ந்துக்கிட்டிருக்கான்னு இப்போ கேள்விப்படறேன்.''

சசீந்திரநாத் ஈசமைப் பலவந்தமாக ஏரிகரையிலிருந்து இழுத்துக் கொண்டு வந்தார். இப்போது அவனைப் பார்த்தால் அவன்தான் பழைய ஈசம் என்று சொல்லவே முடியாது. சிறுவர்கள் மூவரும் அவனுக்கு முன்னுல்போய் நின்ருர்கள். அவர்களைப் பார்த்து அவனுடைய உடல் நடுங்கியது. அவனுக்கு ஆறுதல் ஏற்படவில்லை. அவர்கள் உயிருடன் திரும்பியிருப்பார்கள் என்று நம்பவே முடியவில்லை அவனுல். அவன் அவர்களுடைய தலையை, முகத்தைத் தொட்டுப் பார்த்தான். ''பாபு, பாபு, நீங்க பொழச்சி வந்துட்டீங்களா!'' என்று உணர்ச்சி பொங்கக் கத்திவிட்டான் அவன்.

சசீந்திரநாத் அவனை அதட்டினுர். ''சரி, சரி! எழுந்திரு! போய் ஸ்நானம் பண்ணிச் சாப்பிட்டுத் தூங்கு! நீ இன்னிக்கு வயலுக்குப் போகவேண்டாம். நீங்க போங்க! அவன் கொஞ்சம் சிரமபரிகாரம் பண்ணிக்கட்டும்'' என்று சொல்லிச் சிறுவர்களை அங்கிருந்து அனுப்பினுர். அவர்கள் நகராவிட்டால் ஈசம் நாள்முழுதும் அவர்களுக்கு முன்னுல் உட்கார்ந்துகொண்டு ஏதேதோ புலம்பிக் கொண்டே இருப்பான், பைத்தியம் பிடித்தவனைப் போல.

திருவிழாவிலிருந்து வந்த பிறகு மாலதியும் ஏதோ பயத்தால் பீடிக்கப்பட்டவளாகக் காலங் கடத்தினுள். இருட்டிவிட்டால் அவள் தன் அறையைவிட்டு வெளியே வருவதில்லை. அறைக்குள் ஒரு சிம்னி விளக்கை ஏற்றி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பாள். இரவில் சோபா, ஆபுவைத் தன்னுடன் அணைத்துக்கொண்டு ஏதேதோ கெட்ட கனவுகள் கண்டுகொண் டிருப்பாள். சில சமயம்

அவளுக்குச் சொல்லத் தோன்றும், "சாமி, கடவுளே! இனிமேல் என்னாலே தாங்க முடியாது!"

அவளுக்கு இரவில் தூக்கம் வருவதில்லை; அறைக்கு வெளியில் யாரோ கிசுகிசுப்பதுபோல் தோன்றும். "சாமி! என் நெஞ்சுக்குள்ளே எவ்வளவு வேதனைன்னு உங்கிட்டே சொல்லத் தெரியலே எனக்கு!"

ஆமாம், ஜாலாலியைப் போல் அவளாலும் அந்த வேதனையைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அது ஜ்வாலையாகப் பற்றிக்கொண்டு எரிந்தது. அவளுடைய கை ஜில்லிட்டுப் போயிற்று. கதகதப் பான ஸ்பரிசத்துக்காக ஏங்கினாள் அவள். அவளுக்கு ரஞ்சித்திடம், "டாகுர், என்னை எங்கேயாவது அழைத்துக்கொண்டு போய்விடு" என்று சொல்ல ஆசை. ஆனால் பொழுது புலர்ந்துவிட்டால், தோடார் பாக் மைதானத்தில் கோழிகள் கூவும்போது, சூரியன் கட்டாரி மரத்தின் இடுக்கு வழியே எட்டிப் பார்க்கும்போது இவை எல்லாம் அவளுக்கு மறந்துபோய் விடுகின்றன. அப்போது அவளுடைய மனம் அவனைப் பார்ப்பதற்காக, அவனைப் பார்க்க ஒரு சாக்கைக் கற்பனை செய்யத் துடிக்கும்.

ஒரு நாள் அவள் ரஞ்சித்திடம், "எனக்கு ஒரு கத்தி தரியா, டாகுர்?" என்று கேட்டாள்.

"கத்தி எதற்கு?"

"தாயேன்! மரக்கத்தியை வச்சுக்கிட்டு விளையாடப் பிடிக்கல்லே!"

"ஒனக்கு இன்னும் கை சரியாப் பழகல்லே. பழகினப்புறம் கத்தி வாங்கித் தரேன்."

அவளுக்குச் சொல்லத் தோன்றும், 'எனக்கு இன்னும் கை பழக லேன்னு சொல்றியா? நீ எனக்குக் கத்தி வாங்கிக் கொடு! நான் எப்படி விளையாடிக் காண்பிக்கறேன், பாரு!' அவளுக்குச் சாவுடன் விளையாடும் ஆசை ஏற்பட்டுவிட்டது.

இப்போது அமூல்யனின் போக்கிரித்தனமும் அதிகமாகியிருந்தது. ரஞ்சித் வந்தது முதற்கொண்டே அமூல்யனுக்கு வெறி அதிகமாகி விட்டது. அவன் ஒரு சரியான வாய்ப்புக்காகக் காத்துக்கொண் டிருந்தான். மாலதி வயல்வெளியிலோ அல்லது புதருக்கருகிலோ தனியாக அகப்பட்டுக் கொண்டால், அல்லது ஊரில் தெருக்கூத்தோ, கதாகாலட்சேபமோ நடக்கும் சமயத்தில் மாலதி மட்டும் வீட்டில் தனியாக இருந்தால், அவளைக் கட்டிப்பிடித்துக் கடித்து விடுவான் போல் இருந்தது.

மாலதி வீட்டுக்குக் காவலாகப் படுத்துக்கொண்டிருப்பாள். கதவுப் பக்கத்தில் ஏதோ சப்தம் கேட்கும். "யாரது? ஏன் பதில் பேசமாட் டேங்கறே? கதவைத் திறந்துகிட்டு உள்ளே வா; சந்திரன் மாதிரி அழகு கொஞ்சற உன் முகத்தைக் காண்பி!" என்று நினைத்துக்

கொண்டே அவள் சாவுடன் விளையாடத் தயாராயிருப்பாள். அப்போது தோன்றும், ஜப்பர் மரத்தடியில் நின்றுகொண்டு நோட்டீஸ் வினியோகம் செய்கிறான்; "மாலதி அக்கா, வந்தீங்களா?' என்கிறான். அவனுக்குப் பக்கத்தில் நிற்கும் ஆட்கள் பற்களைக் காட்டிக் கொண்டு அவளை வெறித்துப் பார்க்கிறார்கள்.

இந்தக் காட்சிகளை அவள் தன் மனக்கண்ணால் பார்க்கும்போது எல்லாம் ரஞ்சித்திடம் போய் நச்சரிப்பாள்: "எனக்கு ஒரு நல்ல, பெரிய கத்தியாக் கொடு, டாகுர்! சூரியன் அஸ்தமிச்சப்புறம் என் நெஞ்சு பயத்தாலே உலர்ந்துபோறது."

கலகத்துக்குப் பிறகு இரவின் இருளில் கத்திப் பயிற்சி தொடர்ந்தது. மைதானத்துக்கு அப்பால் ஆள் இல்லாத இடத்தில் ஊர் மக்கள் ஒன்று கூடினார்கள். இப்போதெல்லாம் ரஞ்சித் இந்தப் பயிற்சியை மேற்பார்வை செய்வதில்லை. அவன் எங்கெங்கோ தூர இடங்களுக்குப் போய்விடுகிறான். எங்கே போகிறான், ஏன் போகிறான் என்று யாருக்கும் தெரியாது. வைத்தியரும் கோபாலுந்தான் இப்போது பயிற்சியைக் கவனித்துக் கொள்கிறார்கள்.

பால்குன் - சைத்ர மாதங்கள் கழிந்துவிட்டன. பைசாக மாதம் ரொம்ப உஷ்ணமாக இருக்கும். அப்போது நிலவு இருந்தால் காஸ் விளக்கு ஏற்றப்படுவதில்லை. மங்கிய நிலவொளியில் கத்திப் பயிற்சி நடக்கும். மாலதி சோபாவையும் ஆபுவையும் கூட்டிக்கொண்டு டாகுர் வீட்டுக்கு வருவாள். தனமாமியும் பெரிய மாமியும் அங்கே இருப்பார்கள். பால் வீட்டிலிருந்து சுபாஷின் அம்மா வருவாள். ஹாரான் பாலின் மனைவி வருவாள். சந்தா வீட்டுப் பெரிய பெண்கள் மதியும் கனியும் வருவார்கள். விளையாட்டில் சூடுபிடித்த பிறகு சோனா - லால்ட்டு - பல்ட்டுவின் ஆசிரியர் சசிபூஷண் எல்லார் கையிலும் ஊறவைத்த கொத்துக் கடலையும் வெல்லமும் கொண்டு வந்து கொடுப்பார். இந்தத் தேசத்தில் எந்த நேரத்திலும் உள்நாட்டுக் கலகம் ஆரம்பித்துவிடலாம். அவர் சரித்திர மாணவர். சுதந்தரம் வரும்போது இத்தகைய உள்நாட்டுக் கலகங்கள் நிகழ்வது வழக்கந்தான். அப்படி ஏதாவது நேர்ந்தால் தற்காப்புக்கு இந்தக் கத்திப் பயிற்சியும், சிலம்பப் பயிற்சியும் உதவும்.

எங்கேயோ யுத்தம் நடக்கிறது, பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இந்தப் பிராந்தியத்திலே வசிப்பவர்களுக்கு இவற்றைப் பற்றித் தெரியாது. நீர்வளம் நிலவளம் நிறைந்த பிரதேசம் இது. பஞ்சத்தில் அடிபட்ட மக்கள் வேறு இடங்களிலிருந்து வந்தார்கள். அவர்களில் ஒருவர்தாம் சசிபூஷண். அவர் அந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியராக வேலைபெற்று அங்கு வந்தார். சோனா அவரிடம் சரித்திரக் கதைகள் கேட்பான்: டிராய் யுத்தம், அதில் வரும் மரக்

குதிரை. கிரேக்கர்கள் டிராய் நகர வாயிலுக்கு வெளியே ஒரு பெரிய குதிரையை விட்டுவிட்டுப் போனார்கள். எவ்வளவு பெரிய குதிரை! நகரத்துச் சிறுவர்கள் அந்தக் குதிரையைச் சுற்றிச் சுற்றி வந்து, பாட்டுப் பாடிக் கும்மாளம் போட்டார்கள். சமுத்திர மணலில் நின்றது மரக்குதிரை. அதற்குள்ளே ஆயிரக்கணக்கான போர் வீரர்கள்!

மூடாபாடா ஜமீன்தாரின் மாளிகை நதிக்கரையில், அரண்மனை மாதிரி இருக்கும். நதிக்கரையில் நாணல் மலர்கள் மலர்ந்திருக்கும். நடுப்படுகையைக் கடந்தால் யானை லாயம். அங்கே எப்போதும் யானை கட்டப்பட்டிருக்கும். அமலாவும் கமலாவும் ஜமீந்தார் வீட்டுப் பெண்கள். கமலாவுக்குச் சோனுவின் வயது. அவர்கள் கல்கத்தாவில் வசித்தார்கள். பூஜா சமயத்தில் அவர்கள் மூடாபாடா வருவார்கள். டிராய் நகரத்து மரக்குதிரை நினைவுக்கு வரும்போதெல்லாம் சோனுவுக்கு ஏனோ மூடாபாடா யானையின் ஞாபகம் வரும்; அமலா, கமலாவின் நினைவு வரும்; அரண்மனை போன்ற ஜமீன்தார் மாளிகை ஞாபகம் வரும்.

இந்தக் கதையைக் கேட்கும்போதெல்லாம் சோனுவுக்கு இன்னொரு ராஜாவின் ஞாபகம் வரும். அது அவனுடைய அப்பா சொன்ன கதை.

ஒவ்வொரு வருஷமும் பூஜைக்கு அவனுடைய தமையன்மார் இருவரும் மூடாபாடா போவார்கள். அவனைப் போகவிடமாட்டார்கள். ஆனால் இந்தத் தடவை, திருவிழாவிலிருந்து வந்த பிறகு அவனுக்குத் தோன்றியது, அவனையும் மூடாபாடா போக அனுமதிப்பார்களென்று.

ஜமீன்தார் வீட்டு யானை, சீதாலக்ஷா ஆறு, யானை லாயமிருக்கும் மைதானம் – அவன் ஆற்றங்கரையில் நின்றுகொண்டு நீராவிப் படகுகள் ஆற்றில் செல்வதைப் பார்ப்பான். அவற்றில்தான் எவ்வளவு விளக்குகள்! அந்த வெளிச்சம் ஆற்றுத் தண்ணீரின் மேலெல்லாம் பரவி, ஆற்றின் இருகரைகளிலுமுள்ள புல்லையும், நாணல் காட்டையும், ஆற்று மணலையும் சிறிது நேரத்துக்கு ஒளிவெள்ளமாகத் திகழச் செய்கிறது. திருவிழாவிலிருந்து திரும்பியது முதல் சோனுவுக்குப் பெரியவனாகி விட்டதாக நினைப்பு. இந்தத் தடவை துர்க்காபூஜை பார்க்க மூடாபாடா போவதற்கு அவனுக்கு அனுமதி கிடைத்துவிடும்.

சசிபூஷண் அதிகாலையில் எழுந்து பலகைக் கட்டிலில் உட்கார்ந்து கொள்வார். உடம்பை ஆட்டிக்கொண்டே ஏதேதோ புத்தகங்களெல்லாம் படிப்பார். சோனு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு கால்களை ஆட்டியவாறே பாடப் புத்தகம் படிப்பான். கவனமாகப் படித்தால் கற்றுக்கொள்ள அவனுக்கு அதிக நேரம் பிடிப்பதில்லை.

மழைக்காலத்தில் பள்ளிக்கூடத்துக்குப் படகில் போகவேண்டும். சசிபூஷண் படகின் நடுவில் உட்கார்ந்திருப்பார். ஈசம் துடுப்பு வலிப்பான். அந்த வீட்டுச் சிறுவர்கள் மூவரும் கிராமத்தைச் சேர்ந்த இன்னும் நாலைந்து பையன்களுடன் படகில் ஆசிரியரையும் கூட்டிக் கொண்டு பள்ளிக்கூடம் போவார்கள்.

மழைக்காலம் வந்துவிட்டால் எங்கே பார்த்தாலும் அல்லி மலர்ந்திருக்கும். அப்போது இந்தப் பிராந்தியத்துக்குக் குதிரையோ யானையோ வராது. நெல் வயல்கள், சணல் வயல்கள், எங்கும் தண்ணீர். நாடே தண்ணீரில் முழுகிக் கிடக்கும். ஸ்படிகம் போன்ற தண்ணீரில் சிறிதும் பெரிதுமாக வெள்ளி மீன்கள் விளையாடும். நீலம் பச்சை வர்ணங்களில் சிறிதும் பெரிதுமாகப் பூச்சிகள் ; சில பூச்சிகள் மஞ்சளாகக் கூட இருக்கும். சூரியன் உதித்துவிட்டால் இந்தப் பூச்சிகள் இலைகளுக்கடியில் மறைந்திருக்கும்.

சோனு படகில் போகும்போது தங்கநிற வண்டுகளைப் பிடித்து ஒரு டப்பியில் போட்டு வைப்பான். ஒரு தடவை அவனுக்கு ஒரு விசித்திரமான பூச்சி கிடைத்தது. தங்க நிறம் ; பார்த்தால் நெற்றிக்கு இட்டுக்கொள்ளும் திலகத்தைப் போல் இருந்தது ; பூச்சி என்றே அதை அடையாளங் கண்டுகொள்ள முடியாது. அதன் நடுப்புறம் முத்தைப் போல் பளபளத்தது. முழுவதும் தங்க நிறம், ஓரம் மட்டும் கறுப்பு. காலே இருப்பதாகத் தெரியவில்லை. அவன் பாதிமாவுக்காக அந்தப் பூச்சியை டப்பிக்குள் எடுத்துவைத்தான். பாதிமா எப்போது வருவாள்? இப்போதெல்லாம் அவளை அதிகமாகப் பார்க்க முடிவதில்லை. மழைக்காலம் வந்துவிட்டால் நினைத்தபோது இந்தக் கிராமத்துக்கு வந்துவிட முடியாது பாதிமாவால்.

சோனு பள்ளியிலிருந்து திரும்பியதும் பூச்சியை எடுத்துப் பெட்டியில் வைத்தான். மழைக்காலம் முடிந்ததும் அவன் அதை அவளுடைய நெற்றியில் திலகமிட்டு விடுவான்.

சோனுவின் இரண்டாவது பெரியப்பா மூடாபாடாவிலிருந்து படகை அனுப்பியிருந்தார். சிற்றப்பா அவனிடம் சொன்னார்: "நீயும் துர்க்கா பூஜை பார்க்கப் போ! ஆனால் அங்கே போய் அழக்கூடாது."

இந்தத் தடவை துர்க்கா பூஜை பார்க்க வெகுதூரம் போகப் போகிறான் சோனு. துர்க்கா பூஜைக்கான ஏற்பாடுகள் எங்கும் தொடங்கிவிட்டன.

மூடாபாடாவிலிருந்து வந்த படகிலிருந்து அலிமத்தி ஒரு பெரிய மீனைத் தூக்கிக்கொண்டு வந்தான். சோனு, லால்ட்டு, பல்ட்டு மூவருமாகச் சேர்ந்து சிரமப்பட்டு அதைத் தூக்கிப் போய்ச் சமையல் அறையில் சேர்த்தார்கள். எவ்வளவு பெரிய மீன்! டாயின் மீன். அதைப் பார்த்த தனமாமிக்கும் பெரியமாமிக்கும் ஒரே ஆச்சரியம்.

அவ்வளவு பெரிய மீனைப் பார்த்துப் பைத்தியக்கார டாகுர் வீட்டு முற்றத்தில் குதிக்கத் தொடங்கிவிட்டார்.

''நானும் மூடாபாடா வரப்போறேனே!'' என்று சோனு லால்டுவிடம் சொன்னான்.

''நீ வரப்போறேன்னு யாரு சொன்னா?''

''சித்தப்பா.''

அம்மா சொல்லியிருப்பாள் என்று லால்ட்டு நினைத்தான். இந்தக் குடும்பத்தில் அம்மா சொல்வது எதுவும் நடப்பதில்லை. அம்மாவுக்கு ஓர் அதிகாரமும் இல்லை. ஆனால் பெரியப்பா சொல்லிவிட்டதால் சோனுவும் உண்மையாகவே மூடாபாடா வரப்போகிறான்; யாரும் அவனைத் தடுக்கமுடியாது. இது பற்றி லால்ட்டுவுக்குச் சற்று ஏமாற்றந்தான். அவன் அங்கே போனப்பறம், 'நான் வீட்டுக்குப் போகணும்னு சொல்லி அழக் கூடாது தெரியுமா?' என்று சொல்லிச் சோனுவுக்கு அழகு காட்டினான். லால்டுவும் பல்ட்டுவும் இவ்வாறு சோனுவை இளக்காரம் செய்வது வழக்கந்தான். வீட்டிலேயே மிகவும் சிறியவன் என்ற காரணத்தால் சோனுவுக்குச் செல்லம் அதிகம். அதனால் அவன் மேல் அவர்களுக்கு எரிச்சல். சோனு மூடாபாடா வரமாட்டான் என்ற ஆறுதலாவது அவர்களுக்கு இதுவரை இருந்தது. இனி அந்த ஆறுதலுக்கும் வழியில்லை. இந்தத் தடவை சோனுவும் அவர்களுடன் வரப்போகிறான்.

வேறு நாளாக இருந்தால் சோனுவும் பதிலுக்கு லால்ட்டுவுக்கு அழகு காட்டியிருப்பான். ஆனால் இன்று அவனுக்கிருந்த மகிழ்ச்சி யில் அப்படிச் செய்யத் தோன்றவில்லை. அவன் துர்க்கையம்மனைப் பார்க்கப் போகிறான்! வெகுதூரம் பிரயாணம் செய்யப்போகிறான்! போய்ச் சேரவே ஒரு நாளாகிவிடும். எவ்வளவு ஆறுகளை, எவ்வளவு காடுகளை, வயல்களைத் தாண்டிக்கொண்டு போகப் போகிறான்! அவன் மகிழ்ச்சிப் பொங்கத் தன் தமையன்களை, ''அண்ணா! பெரியண்ணா!'' என்று கூப்பிட்டுக்கொண்டு திரிந்தான்.

இப்போது அவன் ஒரு கெட்டிக்கார மாணவன். இப்போது அவனால் தனியாக எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் போகமுடியும். சோள வயலில் ஒளிந்துகொண்டு கண்ணாமூச்சி விளையாடப் பயப் படுவதில்லை அவன்.

தனமாமி சோனுவின் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். அவனுடைய கண்களில் மைதீட்டி மையை நீளமாக இழுத்து விட்டாள். அழகான முகம் சோனுவுக்கு. அவனுடைய கண்தான் எவ்வளவு அழகு! அவனுடைய வயதுக்கு உயரம் சற்று அதிகந் தான். உடம்பில் மட்டும் இன்னும் கொஞ்சம் சதைப்பற்று இருந்தால் அவனுடைய அழகு பசுமையான தீவைப் போல் கவர்ச்சிகரமாக

இருந்திருக்கும். அவனுக்கு ஏற்கனவே பெரிய கண்கள். மையிட்டால் அவை இன்னும் பெரிதாகத் தெரியும். அவனுடைய நெற்றியின் ஒரு புறத்தில் விரலால் மையைத் தீற்றிவிட்டாள் தனமாமி; இடக்காலிலிருந்து கொஞ்சம் புழுதியை எடுத்து அவனுடைய தலையில் போட்டாள். கொஞ்சம் எச்சிலைத் துப்பிக்கொண்டு அதை அவனுடைய உடலில் தடவினுள். அதன் பிறகு அவனை மார்புடன் தழுவிக்கொண்டு நெற்றியில் முத்தமிட்டாள். சோனுவுக்குக் குறுகுறுப்பாக இருந்தது. யாரோ அவனுக்குக் கிச்சுக்கிச்சு மூட்டுவதுபோல அவன் கலகலவென்று சிரித்தான்.

சோனுவுக்கு அவனுடைய பைத்தியக்காரப் பெரியப்பாவின் முகச் சாயல்தான். அழகு சொட்டும் உருவம். அவனுடைய தேக அமைப்பைப் பார்த்தாலே தெரியும், அவன் பிற்காலத்தில் நல்ல உயரமாக வளர்வான் என்று. தனமாமி அவனை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்ச விரும்பினுள். ஆனல் சோனுவுக்கு ரொம்பக் கூச்சம். "நான் உன் இடுப்பிலே உட்காரமாட்டேன். எனக்கு வெட்கமாயிருக்கு" என்று அவன் சொன்னுன்.

அருமைப் பிள்ளை தொலைதூரத்துக்குப் பிரயாணம் செய்யப் போகிறுன். அவன் இன்னும் ஏழெட்டு நாட்கள் அவனைக் கட்டியணைத்துக்கொண்டு படுத்துக்கொள்ள முடியாது. நினைக்கவே கஷ்டமாக இருந்தது அவளுக்கு. "சரி, உன்னைப் படகிலே கொண்டுபோய் விட்டுட்டு வரேன்" என்று சொல்லி அவள் அவனைப் பலவந்தமாகத் தூக்கிக்கொள்ள முயற்சி செய்தாள்.

சோனு அவள் தன்னைத் தூக்கிக்கொள்ள விடவில்லை.

"உன்னைத் தூக்கி இடுப்பிலே வச்சிக்கணும் போல இருக்கே எனக்கு" என்று சொல்லிக்கொண்டே தனமாமி இரு கைகளையும் நீட்டி அவனைத் தூக்கப் போனுள்.

"சீ, என்ன சொல்றே அம்மா? நீ ஏன் என்னை இடுப்பிலே வச்சுக் கணும்? நான் பெரியவனுகல்லியா?"

"அடேயப்பா! சோனு—என்னுடை சோனு—பெரியவனுயிட்டானு? அண்ணி, இங்கேவந்து கேட்டுட்டுப் போங்க, சோனு என்ன சொல்ருன்னு! அவன் பெரியவனுயிட்டானும்! இடுப்பிலே உட்கார்ந்துக்க வெட்கமாம்."

படகுத் துறையில் படகு கட்டப்பட்டிருந்தது. சிறுவர் மூவரும் மூடாபாடா போகப் போகிருர்கள், துர்க்கா பூஜை பார்க்க. ஊரில் பிரதாப் சந்தா துர்க்கா பூஜை செய்கிருர். ஆனுல், ஏதோ வழக்கு விவகாரம் காரணமாகப் பல வருஷங்களாக யாரும் அவர் வீட்டுக்குப் பூஜை பார்க்கப் போவதில்லை. பூஜை பார்க்க ஏங்கத்தானே செய்வார்கள் சிறுபையன்கள்! ஆகையால் பூஜை வந்துவிட்டால்

பூபேந்திரநாத் மூடாபாடாவிலிருந்து படகு அனுப்பிவிடுவார் அவர்களை அழைத்துவர.

சோனு, லால்ட்டு, பல்ட்டு மூடாபாடா போகிறார்கள். அவர்களை அழைத்துப் போகிறான் ஈசம். இந்தச் சில நாட்கள் அலிமத்தி வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொள்வான். சில நாட்கள் ஈசமுக்கு விடுமுறை. அவன் இந்தக் கோஷ்டியுடன் போய்க் குஷியாகச் சுற்றித் திரிந்துவிட்டுத் திரும்பிவருவான். அவன் எல்லாருக்கும் முன்னால் படகில்போய் உட்கார்ந்தான். தான் உபயோகிப்பதற்காக முன்னதாகவே நல்ல நீளத் துடுப்பு, குட்டைத் துடுப்பு எல்லாம் பொறுக்கி வைத்துக்கொண்டான். பிறருடைய துடுப்புகளை உபயோகிக்க அவனுக்குப் பிடிப்பதில்லை. பாயின் கயிறுகள் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்துக்கொண்டான். இது எவ்வளவோ சில்லறை வேலைகள். தூரதேசப் பிரயாணம். போய்ச் சேரவே ஒரு நாளாகிவிடும். ஹுக்காக் குழாய், ஹுக்காச் சட்டி இவற்றைக்கூடச் சரிபார்த்து எடுத்து வைத்துக்கொண்டான். பத்துக் கோச தூரம் போகவேண்டும். காலையில் புறப்பட்டால் போய்ச் சேர இரவாகிவிடும். சுற்றுவழியே போகவேண்டும். ஆற்றிலும் ஏரியிலும் போகும் போது காற்று அடித்தால் பாயை விரித்துக்கொண்டு வேகமாகப் போகலாம். சீக்கிரம் போய்ச் சேர்ந்துவிடலாம்.

சோனு தாத்தாவுக்கு நமஸ்காரம் செய்தான். "தாத்தா, நாங்க பூஜை பார்க்க மூடாபாடாவுக்குப் போயிட்டு வரோம்" என்று கூறினான்.

தாத்தா சோனுவின் மோவாயைத் தேடிப் பிடித்துக் கையால் தடவினார். "அப்படியா!"

"தாத்தா, உங்களுக்கு என்ன வாங்கிக்கிண்டு வரணும்?" என்று லால்ட்டு கேட்டான்.

அவர் பதில் சொல்வதற்கு முன்பே பல்ட்டு வேடிக்கையாக, "கிலுகிலுப்பையும் ஊதலும் வாங்கிக்கிண்டு வரலாம்" என்றான்.

"பாத்தியா, பாத்தியா அம்மா, உன் புள்ளையை! எனக்குக் கிலுகிலுப்பையும் ஊதலும் வாங்கிக்கிண்டு வரானும்!"

"அவன் சொல்றது சரிதானே! நீங்க சின்ன குழந்தை மாதிரி அழறீங்க! உங்களுக்கு ஒருத்தரும் சாப்பாடு போடலேங்கறீங்க."

"நான் அப்படிச் சொல்றேனு?"

"சொல்றதில்லே...?"

"எனக்கு அப்படிச் சொன்னதா ஞாபகமே இல்லை."

படகுக்குள் ஏறிக்கொண்ட பல்ட்டு அதன் முனையில் பைத்தியக்கார மனிதர் மௌனமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். அவன் ஒருபோதும் அவரை அப்பா என்று அழைத்ததில்லை. அவனுக்கு

எப்போதும் ஓர் அந்நியராகவே தோன்றினர் அவர். அவருடைய பைத்தியக்காரத்தனம் அவனுக்குச் சங்கடத்தை விளைவித்தது. அவன் பெரியவனுக ஆக அவர்தான் தன் தந்தை என்று நினைக்கவே கஷ்டமாக இருந்தது அவனுக்கு. எதிலும் பட்டும் படாமலும் இருக்கும் வழக்கம் அவனிடம் தோன்றியது. அவரைச் சற்றுக் கட்டுப் படுத்தி வைத்திருக்க விரும்பினுன் அவன். அவரை யாராவது இளப்பம் செய்தால் அவனுக்கு வேதனை ஏற்படும். இத்தகைய அவமானங்களிலிருந்து அவரைக் காப்பாற்ற அவன் ஆசைப் பட்டான். ஆனுல் அவரைக் கட்டுப்படுத்தி வைக்க அந்தச் சிறுவனுல் முடியுமா?

மௌனமாக, படகின் மேற்பலகையில் பத்மாசனம் போட்டுக் கொண்டு அவர் உட்கார்ந்திருந்தார்.

"நீங்க இறங்குங்க! நீங்க எங்கே போகப் போறீங்க?" என்று பல்ட்டு சொன்னுன்.

பைத்தியக்கார டாகுர் பதில் சொல்லவில்லை. மெல்லச் சிரித்தார். பல்ட்டுவுக்குக் கோபம் வந்துவிட்டது. "நீங்க இறங்குங்க! இறங் குங்கறேன்!"

அவர் சற்றும் அசையவில்லை, பேசவும் இல்லை. அவன் சொல்வதை பொருட்படுத்தாமல் தன் உடைகளைச் சரி செய்துகொண்டார். மேலே அணிந்துகொண் டிருந்த அரைக்கைச் சட்டையை இழுத்து விட்டுக்கொண்டார். கையாலேயே தலைமயிரைத் தடவிச் சரி செய்துகொண்டார். "இதோ பார், நான் எவ்வளவு நன்ருகத் தலையை வாரிக்கொண் டிருக்கிறேன், எவ்வளவு நன்ருக உடுத்துக்கொண் டிருக்கிறேன்! இப்போது நான் உங்களோடு வரலாமே!" என்று சொல்வதுபோல இருந்தது, அவருடைய செய்கை. பிறகு அவர் மறுபடியும் யோகியைப் போலப் பத்மாசனத்தில் அமர்ந்தார். பல்ட்டு அவருடைய கையைப் பிடித்து இழுத்தான். "இறங்குங்க! அம்மா! அம்மா!... ஆ ஆ!"

தன் அம்மா வந்தால் இந்தச் சச்சரவைத் தீர்த்துவைப்பாள் என்று நினைத்தவன்போல் அவன் தன் தாயைக் கூப்பிட்டான். ஆனுல் அவளைக் காணும்.

ஈசம் ஒன்றும் சொல்லவில்லை. அவனுக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. இவர்களுடைய சச்சரவைக் கவனிக்காதவன்போல, பிரம்புப் புதரில் இருக்கும் குளவிக்கூட்டைப் பார்ப்பதுபோல அவன் வேறுபக்கம் பார்த்துக்கொண் டிருந்தான்.

"இறங்குங்க! படகு கிளம்பப் போறது!" என்ருன் பல்ட்டு.

யார் யார் பேச்சைக் கேட்பது?

சரத் காலத்துக் காலை நேரம்; குளிர்ந்த காற்று பயிர் வயல்களி லிருந்து மிதந்து வந்தது. ஆற்றில் படகுகளின் பாய்கள் தெரிந்தன. பாயை விரித்துக்கொண்டு கிராமபோனை முடுக்கி விட்டுக்கொண்டு யாரோ படகில் போனார்கள். ஸோனலி பாலி ஆற்றின் மீன்கள் பயிர் வயல்களில் பாசியைத் தின்ன வந்திருந்தன. வயல்களுக்கு இருபுறமும் படிகம்போல் தெளிந்த நீர். சணல் அறுவடை முடிந்துவிட்டால் கிராமமும் வயல்களும் தண்ணீருக்கு நடுவில் தீவுபோல் தோற்றம் அளித்தது. நாற்புறமும் தண்ணீர் குளத்து நீர்போல் சலசலத்தது. வீடுகளும் வயல்களும் தண்ணீரில் மிதந்தன.

வெகுநாட்களாக மணீந்திரநாத்துக்கு எங்காவது பிரயாணம் செய்ய ஆசை. மழைக்காலம் வந்துவிட்டால் அவர் கட்டுண்ட ராஜகுமாரனைப் போல் மருதமரத்தடியில் உட்கார்ந்து கிடப்பார். முடாபாடாவிலிருந்து படகு வந்திருக்கிறது என்று கேட்டதுமே அவருக்கு ஒரு நீண்ட பிரயாணம் செய்ய ஆசை ஏற்பட்டுவிட்டது. அவர் உடனே தாம் உடுத்தியிருந்த ஆடைகளுடனேயே புறப் பட்டு வந்து படகில் ஏறி உட்கார்ந்துகொண்டு விட்டார். அழகாகத் தலைமயிரை வாரிக்கொண்டிருந்தார் அவர். கண்ணியமான மனிதர் போல மௌனமாகக் கள்ளங்கபடற்ற குழந்தை போல, அவர் உட்கார்ந்திருந்தார். அவர் இவ்வாறு அசையாமல் உட்கார்ந்திருப் பதைப் பார்க்கப் பார்க்கப் பல்டுவுக்குக் கோபம் அதிகரித்தது. அவன் அவரைப் பயமுறுத்துவதற்காக, ''சித்தப்பாவை கூப்பிடட் டுமா?'' என்று கேட்டான்.

மணீந்திரநாத் கெஞ்சும் பாவனையில் பிள்ளையைத் திரும்பிப் பார்த் தார். 'கூப்பிடாதே, குழந்தே! நான் சமத்தா உங்ககிட்டே உட்கார்ந்திருக்கேன்' என்று சொல்வது போல இருந்தது அவர் பார்வை. அவருடைய பார்வை ஓர் அபலைப் பிராணியின் பார்வையை ஒத்திருந்தது. அதில் ஓர் அலாதியான சோகம் கப்பியிருந்தது. 'நான் ஒரு பைத்தியம். எவ்வளவோ காலமாக நடந்துகொண் டிருக்கிறேன். அப்படியும் கோட்டைபோல் பிரம்மாண்டமான அந்த மாளிகையை அடைய முடியவில்லை!' இப்படியெல்லாம் அவர் பேச முயன்றார் போலும்.

லால்ட்டுவும் சோனாவும் படகுக்குள் நுழைந்தார்கள். பல்ட்டுவின் சின்னச் சிற்றப்பா படகுத் துறைக்கு வந்ததும், ''இன்னும் யாரு படகுக்குள்ளே?'' என்று கேட்டார்.

மணீந்திரநாத் படகுக்குள்ளிருந்து கழுத்தை நீட்டிப் பார்த்தார். சாதுவான பையனைப் போல் வெளியேவந்து நின்றார். பிறகு படகி லிருந்து கீழே இறங்கி வந்தார். பெரிய மாமியும் தன மாமியும் கரை யில் நின்றிருந்தார்கள். படகு கிளம்பியதும் அவர்கள் வீடு

திரும்பினார்கள். மணீந்திரநாத்தின் முகத்தில் எவ்வித உணர்ச்சியும் இல்லை. ஈசம் படகின் முனையில் நீரைத் தெளித்துவிட்டு, படகைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்ததும் மணீந்திரநாத் ஓடிவந்து படகில் ஏறப் பார்த்தார். பெரிய மாமி வழக்கம்போல் தன் இருகைகளையும் விரித்து அவரைத் தடுத்தாள். "வாங்க, வீட்டுக்குப் போகலாம், வாங்க!" என்று அழைத்தாள். அவளுடைய முகத்தில் சோகம் படர்ந்திருந்தது. அப்படி என்ன வயதாகிவிட்டது அவளுக்கு! முப்பது அல்லது முப்பத்துமூன்றுதான் இருக்கும். அவளுடைய முகத்தைப் பார்த்து வயதை மதிப்பிட முடியாது. அவளைப் பார்த்த மணீந்திரநாத் அதன் பிறகு அசையவில்லை. படகிலிருந்து கொண்டு சோனா பார்த்தபோது பெரிய மாமி அவரைப் பிடித்துக்கொண்டு வீட்டுக்குப் போய்க்கொண் டிருந்தாள். அவனுக்கு மிகவும் வேதனையாக இருந்தது. அவன் உரக்கக் கூப்பிட்டான், "பெரியப்பா!" என்று.

மணீந்திரநாத் அவனுக்கு ஆசீர்வாதம் செய்வது போல் இரு கைகளையும் உயர்த்தினார். சோனா பலமாகக் கூவினான்: "தசராவிலே இருந்து உங்களுக்கு என்ன வாங்கி வரணும்?"

அவருக்குச் சொல்லத் தோன்றியது. 'முடிஞ்சா எனக்குப் பழுப்பு நிறப் பசுவோட பால் கொண்டுவா. சீதலக்ஷா ஆற்றங்கரையிலே நாணல் பூப் பூத்திருக்குமே அதைப் பறிச்சு என் பேரைச் சொல்லிக் காத்துலே பறக்கவிடு. 'பாலின்'னு ஒரு பொண்ணு, அவ பேரைச் சொல்லிப் பூவைத் தண்ணீரிலே மிதக்கவிடு!'

ஆனால் அவர் ஒன்றும் பேசவில்லை. பெரிய மாமியும் மௌனமாக இருந்தாள். படகு சென்றுகொண் டிருந்தது. நெல்வயல்களைக் கடந்ததும் ஸோனாலி பாலி ஆறு வந்துவிட்டது. படகு ஆற்றுக்கு வந்த பிறகு ஊர் பார்வையிலிருந்து மறைந்துவிட்டது. படகின் கூரைக் கடியில் உட்கார்ந்திருந்த சோனாவை, "என்ன பார்க்கறீங்க, சோனா பாபு?" என்று ஈசம் கேட்டான்.

சோனா மௌனமாக இருப்பதைப் பார்த்து அவனால் சும்மா இருக்க முடியவில்லை.

சோனா கண்கொட்டாமல் ஏரி நீரைப் பார்த்துக் கொண்டிருந்தான். எவ்வளவு தண்ணீர்! கரையே கண்ணுக்குத் தெரியவில்லை. எங்கும் தண்ணீர்! இந்தப் படகு தண்ணீரை ஒரு நாளும் கடக்க முடியாது என்று தோன்றியது. ஒரே ஆச்சரியம் அவனுக்கு. இந்த ஏரியில்தான் ஆபேத் அலியின் பீபி முழுகி இறந்துவிட்டாள். இந்த ஏரியில் ஒரு மயில் படகு இருந்தது. தங்கப் படகு, காற்றே அதன் துடுப்பு. 'இந்தத் தண்ணிக்குக் கீழே தங்கப் படகு, மயில் படகு இருக்கே, அதை மேலே எடுத்துக்கிண்டு வருவீங்களா?

அதிலே நானும் பைத்தியக்காரப் பெரியப்பாவும் உட்கார்ந்துண்டு இந்த ஏரியைக் கடப்போம். அந்த மாதிரி படகு கிடைச்சா அந்தக் கோட்டைக்கே போய்ச் சேர்ந்துடலாம். அந்தப் பொண்ணேட கண் நீலமா இருக்கும், தலைமயிர் தங்கநிறமா இருக்கும்' என்று சோனு சொல்ல விரும்பினுன் ஈசமிடம். தண்ணீரில் முழுகி அந்த மயில் படகை மேலே கொண்டுவர விரும்பினுன் சோனு.

மாலதி அதிகாலையில் எழுந்து தன் வாத்துக்களையும் புருக்களையும் கூண்டிலிருந்து வெளியே விடுவாள். பிறகு தன் மற்றக் காரியங்களையும் முடித்துவிட்டுச் சற்று நேரம் மௌனமாக வாசலில் நின்று கொண்டிருப்பாள். அதுபோலவே இன்றும் நின்றுகொண் டிருந்தாள். தூரத்தில் வாத்துக்கள் தண்ணீரில் மிதந்துகொண் டிருந்தன.

இரவு முழுதும் அவள் சரியாகத் தூங்கவில்லை. இரவில் யாரோ அவள் அறைக்கு வெளியே நின்றுகொண்டு இருட்டில் கிசுகிசுத்துக் கொண்டே இருந்தாற் போன்ற உணர்வு அவளுக்கு. கலகத்துக்குப் பிறகு அவளை எப்போதும் ஒரு காரணமற்ற பயம் ஆட்கொண் டிருந்தது. "உனக்கு எல்லாம் வீண்பிராந்திதான். உன்னை யாரு தூக்கிக்கிட்டுப் போகப் போருங்க?" என்று சொல்வாள், நரேன் தாஸின் மனைவி.

ஆகையால்தான் இரவில் கேட்ட கிசுகிசு ஒலியைப் பற்றிக் காலையில் யாரிடமும் சொல்ல முடியவில்லை அவளால். பயம் காரணமாக அவள் உண்மையிலேயே தன் அறையைவிட்டு வெளியே வரவில்லை. இரவில் ஓரிரண்டு தடவை தூக்கத்தில் இருந்து விழித்து எழுந்திருப்பது அவள் வழக்கம். இப்போதெல்லாம் அவள் இரவு முழுதையும் விழித்துக்கொண்டே அறையை விட்டு நகராமல் கழித்தாள். அவள் இரண்டு மூன்று தடவைகள், "யாரு? யாரு?" என்று கத்தினுள்.

மரத்தடியில் யாருடைய குரல் கேட்கிறது? அவள் ஒரு தடவை படலைத் தூக்கி வெளியே எட்டிப் பார்த்தாள். கலகத்தில் பற்றிக் கொண்ட தீ தன் கண்முன்னே எரிவதாகத் தோன்றியது அவளுக்கு. அப்போது அவளுடைய உடம்பெல்லாம் நடுங்கும். பிறகு தோன்றும், இது ஒரு கெட்ட கனவுதான், உண்மையல்ல என்று.

வடக்குப் பக்கத் துறையில் ஜப்பர் நிற்பதை மாலதி இரண்டு மூன்று நாட்கள் கவனித்தாள். நரேன்தாஸ் அவனை விரட்டிவிட்டான், "மியான், உனக்கு இங்கே என்ன வேலை?" என்று. "உன்னேட அப்பன் வந்தால் சொல்றேன்" என்று மிரட்டினுன்.

ஜப்பர் அவனுடைய மிரட்டலைப் பொருட்படுத்தாமல் சிரித்தான். சிரித்துக்கொண்டே தன் தாடியைக் கையால் தடவிக்கொண்டான். அவனுடைய நீண்ட தாடியும் அவனும்! இப்போது அவனைப்

பார்த்தால் அடையாளமே தெரியாது. இப்போது ஒரு பெரிய மனித ஞகிவிட்டான் அவன். அவன் தன் தாயின் சாவுக்குப் பிறகு வெகு நாட்கள் இந்த ஊரில் தங்கவில்லே. வேருெரு ஊரில் தறி வாங்கித் தொழில் செய்ய முயற்சி செய்தான். அவனுக்கும் அவன் தந்தைக்கும் இப்போது ஒரு சம்பந்தமும் இல்லே. ஆபேத்அலி மறுபடி நிக்காஹ் செய்துகொண்டு தன்னுடைய இடிந்த வீட்டைச் செப்பனிட்டு அதற்குப் புதுக்கூரை போட்டுக்கொண்டு விட்டான். தன் பீபியின் பாதுகாப்புக்காக வீட்டைச் சுற்றி வேலி போட்டுவிட்டான். அவனுடைய புதிய பீபி கொலுசு ஒலிக்க, வீட்டுக்குள்ளே உட்கார்ந்திருப்பாள் அல்லது படுத்திருப்பாள். ஜப்பார் தன் தகப்பனேப் பொருட்படுத்துவதில்லே. அவர்களிடையே ஒரு நாள் தகராறு முற்றி, தடியடி கூட நேர்ந்துவிட்டது. ஜப்பார் பெண்களிடம் தவருக நடந்து கொள்வது ஆபேத் அலிக்குப் பிடிக்கவில்லே.

ஜப்பார் இப்போதெல்லாம் ஊருக்கு வந்தால் ஆபேத் அலியுடன் தங்குவதில்லே; பேலு ஷேக்கின் வீட்டுக்குப் போய்விடுகிருன். அங்கேயே சில நாட்கள் தங்குகிருன். பேலுவின் பீபிக்கு அத்தர் வாங்கிக் கொடுக்கிருன். சந்தையிலிருந்து வாசனேத் தைலமும், பெரிய பெரிய இலிஷ் மீனும் வாங்கிக் கொண்டுவந்து நவாப் மாதிரி சில நாட்கள் பணத்தை வாரி இறைக்கிருன். ஜப்பார் வந்துவிட்டால் பேலுவின் பீபிக்கு ரொம்பக் கொண்டாட்டம். பேலுவுக்கு எல்லாம் புரிந்தது. அவன் 'மூதேவி!' என்று அவளேத் திட்டிவிட்டுத் தன் மூடமான மணிக்கட்டைப் பார்த்துக்கொள்வான். அவனுடைய வலக்கைப் புண் சற்று ஆறி இருந்தது. ஆனுல் இடக்கை மணிக்கட்டு இன்னும் வீங்கியே இருந்தது. கறுப்பாக, முதலேயின் தோலேப்போல் சொரசொரப்பாகத் தோல் காய்ந்து கிடந்தது. கையில் ஒரு கறுப்புக் கயிற்றில் வெள்ளேச் சோழி கட்டியிருந்தான். தாரைப் போல் ஒரு கொழகொழா எண்ணெயைத் தடவித் தடவி அந்தக் கை கையாகவே இல்லே.

ஜப்பார் வந்துவிட்டால் பேலுவின் பீபி மகிழ்ச்சி பொங்க ஆடுவாள், பாடுவாள், உற்சாகமாக வளேயவருவாள். அவனுடன் ஏதேதோ குசுகுசுப் பேச்சுப் பேசுவாள். அப்போது பேலு நாவல் மரத்தடியில் ஒரு கிழிந்த ஜமுக்காளத்தைப் போட்டுக்கொண்டு படுத்திருப்பான். அவர்கள் இருவரும் குலாவுவதைப் பார்க்கப் பொறுக்காவிட்டால் தன் கறுப்பு-வெளுப்புக் கன்றுக் குட்டியை இழுத்துக்கொண்டு அதை மேய்க்க வயலுக்குப் போய்விடுவான். அங்கே வெயிலில் நின்றுகொண்டு ஆத்திரம் தீரக் கத்துவான், "ராட்சசி! என்கிட்டே உனக்குப் பயமே இல்லே!" என்று.

ஆனுல் சில நாட்களாக அந்தப் பீபிகூட ஜப்பருடன் பேசுவது இல்லே. ஏன் இப்படி அவர்கள் இருவரும் திடீரென்று ஊமையாகி விட்டார்கள் என்று தெரிந்துகொள்ளப் பேலுவுக்கு ஆசைதான். ஜப்பர் வந்துகொண்டிரா விட்டால் குடும்பத்துக்குச் சம்பாதித்துப் போடக் கஷ்டமாகிவிடும் பேலுவுக்கு.

ஒவ்வொரு நாள் ஜப்பர் நேரே மாலதியின் வீட்டு வாசலுக்கு வந்து கூப்பிடுவான், "அக்கா, இருக்கீங்களா?" என்று.

மாலதி வெளியே வந்தால் அவன் அவளிடம், "உங்களுக்கு மாமனுர் வீட்டுக்குப் போகணுமின்னு இல்லே? மாமனுர் வீட்டுக்குப் போக மாட்டீங்களா, நீங்க?" என்று கேட்பான்.

"அங்கே ஏன் போகணும்? அங்கே யார் இருக்காங்க எனக்கு?"

"என்ன சொல்றீங்க நீங்க? உங்களுக்கு ஒருத்தருமே இல்லேயா அங்கே?"

மாலதியின் கண்களில் நீர் நிறைந்துவிடும். ஜப்பர் அவளேவிடச் சிறியவன். எவ்வளவு வயது சிறியவனுக இருப்பான் என்று யோசித்துப் பார்த்தாள் மாலதி. அவனுடைய முகம் அருவருக்கத்தக்கதாக இருந்தது. அவன் அந்தப் பக்கம் அதிகமாகச் சுற்றத் தொடங்கி இருந்தான். காலம், நேரம் பார்க்காமல் அவள் வீட்டு வாசல் வழியே போக ஆரம்பித்திருந்தான். இதனுல்தான் இரவில் பயமாக இருந்தது மாலதிக்கு. அவனேக் கண்டதும் அவளுக்குச் சொல்லத் தோன்றியது, "உன்னுடை முழங்காலே முறிச்சுடுவேன்", அல்லது அந்த ஆளிடம் போய்க் கேட்கத் தோன்றியது, "டாகுர்! எனக்கு ஒரு பெரிய கத்தி வாங்கித் தரியா?" என்று.

ஜப்பரின் நினைவு வந்தாலே மாலதியின் உடல் ஒரு மாதிரி இறுகி விடும். அவள் அங்கே நிற்காமல் தீனபந்துவின் வீட்டு மரத்தடிக்குப் போய் அங்கே ஒரு மறைவான இடத்தில் நின்றுகொண்டு அந்த ஆளேத் தேடுவாள். ஊஹூம், அந்த ஆளேக் காணும்! தான் அங்கு எலுமிச்சை இலேகளேப் பறிக்க வந்தவள்போல் சில இலேகளேப் பறிப்பாள் மாலதி.

அவள் டாகுர் வீட்டு முன்னறையில் பார்த்தது அந்த ஆள் அல்ல; அவனுக்குப் பதிலாக அங்கே உட்கார்ந்திருந்தது சசிபூஷண்தான். அவர் ஏதோ சாமான்களே மூட்டைகட்டி வைத்துக்கொண் டிருந்தார். பள்ளிக்கூட விடுமுறை. ஆகையால் அவர் ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். அந்த ஆள் — அவள் தேடிக்கொண்டிருந்த ஆள் — எங்கே போய்விட்டான்? சாதாரணமாக இந்த நேரத்தில் இங்கேதானே இருப்பான்.

மேஜைமேலே ஒரே புத்தகக் குவியல். புத்தகங்களில் மூழ்கி இருப்பது அவன் வழக்கம். எங்கே போய்விட்டான் அவன்? மாலதி

மேலும் தாமதிக்கவில்லை. இடுப்பில் தண்ணீர்க் குடம் இருந்தால் தயங்கத் தேவையில்லை. அங்கு வர ஒரு சாக்குக் கிடைத்துவிடும். ஆனால் எதையோ நினைத்துக்கொண்டே டாகுர் வீட்டு வாசலுக்கு வந்துவிட்ட பிறகு இனித் திரும்ப வழியில்லை. அவள் வீட்டுக்குள் நுழைந்தாள். பெரிய மாமியும் தனமாமியும் துறையிலிருந்து வந்து கொண்டிருந்தார்கள். வீட்டில் எல்லாரும் இருந்தார்கள், ரஞ்சித்தைத் தவிர. ரஞ்சித்திடம் ஒன்று சொல்லவேண்டும். அவள் இந்த உலகத்தில் எல்லா விஷயங்களையும் ரஞ்சித் ஒருவனிடந்தான் தெரிவிக்க முடியும். அவள் சோனாவைத் தேடினாள். சோனா இருந்தால் அவனைக் கேட்கலாம், 'அவனுடைய மாமா எங்கே?' என்று. சோனா, லால்ட்டு, பல்ட்டு ஒருவரையும் காணோமே!

பெரிய மாமி மாலதியைக் கண்டதுமே அவள் உள்ளூறப் பயந்து கொண்டிருப்பதை ஊகித்துக்கொண்டு விட்டாள். "உன் முகம் ஏன் இப்படி இருக்கு, மாலதி? உனக்கு என்ன வந்தது? உன்னை யாராவது என்னவாவது சொன்னாங்களா?" என்று அவள் மாலதியைக் கேட்டாள்.

"என்ன நடக்கும்?"

"உன்னைப் பார்த்தாலே தெரியறது, நீ ராத்திரி முழுதும் தூங்கல் லேன்னு!"

மாலதிக்கு வெட்கமாக இருந்தது. அவள் எவ்வளவோ சொல்லி இருக்கலாம். அவள் தூங்காமல் இருப்பானேன்? அவள் ஒரு விதவை; யாருக்காகத் தூங்காமல் விழிக்கவேண்டும் அவள்? ஆனால் பெரிய மாமியின் பேச்சுக்குப் பிறகு, 'ரஞ்சித் எங்கே, அண்ணி?' என்று கேட்க முடியவில்லை அவளால்.

அவள் வெளியே வந்தாள். டாகுர் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த பவழமல்லிகைச் செடிக்கருகே வந்து நின்றாள். செடி முழுதும் வெள்ளை மலர்களால் மூடியிருந்தது. பூப்பறித்துக்கொண்டு செல்ப வர்கள் அதிகாலையிலேயே பூப்பறித்துக்கொண்டு போய்விட்டார் கள். அதன் பிறகும் ஏராளமான பூக்கள் பூத்துக் கீழேயும் சிதறிக் கிடந்தன.

மாலதி ஏதோ நினைத்துக்கொண்டு பூப்பறித்துத் தன் மடியில் நிரப்பிக்கொள்ள ஆரம்பித்தாள். அவளுக்கு அந்த நேரத்தில் வேறு வேலை இல்லாதிருக்கலாம்; அல்லது அந்த இடத்தில் இன்னுங் கொஞ்ச நேரம் இருக்க அவளுக்கு ஒரு சாக்குத் தேவைப்பட்டிருக்கலாம். ரஞ்சித் இந்தப் பக்கத்தில் எங்கேயாவது இருந்தால் அவள் பூப்பறித்து முடிவதற்குள் அங்கே வந்துவிடுவான் என்று நினைத்து அவள் பூப்பறிப்பதாகப் போக்குக் காட்டினாள். அவளுடைய கொண்டை அவிழ்ந்திருந்தது. ஆபரணங்கள் அற்ற வெள்ளைப் புடைவை

அணிந்திருந்த அவள் ஒரு பெண் துறவியைப் போல் தோற்றம் அளித்தாள். அவளுடைய தோள்கள்தாம் எவ்வளவு வாளிப்பாக இருக்கின்றன! இவ்வளவு வாளிப்பான தோள்களையும் உடம்பையும் வைத்துக்கொண்டு அவள் என்ன செய்யப் போகிறாள்? இந்தக் கேள்வியைக் கேட்கத்தான் அவள் ரஞ்சித்தைத் தேடிவந்தாளோ?

"நான் என்ன செய்யவேண்டும்?"

வீட்டு வாசலில் ஏதோ காலடிச் சத்தம் கேட்டது. ரஞ்சித் வந்துவிட்டான் என்ற நினைப்பில் அவள் திரும்பிப் பார்த்தாள். சின்ன பாபு. அவருக்குப் பின்னால் அலிமத்தி. எங்கோ புரோகிதத்துக்குப் போகிறார் சின்ன பாபு. பூஜைகள், விரதங்களுக்கான பருவம் இது. துர்க்கா பூஜை—சப்தமி, அஷ்டமி, நவமி, தசமி பூஜைகள். தசமி பூஜைக்கப்புறம் சில நாட்கள் ஒரு வெறுமை. பூர்ணிமை வந்ததும் அது தீர்ந்துவிடும். அஸ்வின் மாதத்துப் பூர்ணிமை. இரவில் பூர்ணிமை நிலவு வெள்ளை வெளேரென்று பரவியிருக்கும். மாலதிக்கு அந்த நிலவில் என்னவெல்லாம் செய்ய ஆசை! நிலவில் தர்மூஜ் வயலில் அவனுக்கருகில் மௌனமாக உட்கார்ந்து, இரண்டு கைகளையும் குவித்துக்கொண்டு அவனிடம் 'நான் பரிதாபத்துக்கு உரியவள், என்னை ஆற்றங்கரைக்கு அழைத்துப் போ! தண்ணீரில் படகைச் செலுத்து!' என்று சொல்ல ஆசை. தனிமையில் அவனுடன் ஸோனாலி பாலி ஆற்று நீரில் நீந்திக் களிக்க ஆசை!

அவள் ரஞ்சித்துக்காகக் காத்திருந்தாள். அவன் வரவில்லை, இரண்டு தடவை பெரிய மாமி அந்தப் பக்கம் வந்தாள். 'ரஞ்சித் எங்கே?' என்று அவளைக் கேட்க ஒவ்வொரு தடவையும் நினைத்தாள் மாலதி. ஆனால் கேட்க சங்கோசமாயிருந்தது. அவள் வாயைத் திறவாமல் மனசுக்குள்ளேயே கெஞ்சினாள், 'அண்ணி, அண்ணி! நான் நிஜமாப் பூப்பறிக்க வரல்லே, அண்ணி, நான்!'

"உனக்கு ஏதாவது சொல்லணுமா?" என்று பெரிய மாமியே கேட்டுவிட்டாள்.

"ரஞ்சித்தை எங்கே காணோம், அண்ணி?"

"அவன் டாக்கா போயிருக்கான்."

"டாக்காவுக்கா?" வியப்புடன் கேட்டாள் மாலதி.

"ஆமா. நேத்துச் சாயங்காலம் ஒருத்தன் வந்தான். நாடோடிப் பாடகன். இந்த வீட்டுக்குத்தான் நாடோடி, பைராகி மாதிரி யாராவது வந்துகொண்டே இருக்காங்க. வருவாங்க, சாப்பிடுவாங்க. இங்கே படுத்துக்கிண்டு இராப் பொழுதைக் கழிப்பாங்க விடிஞ்சதும் தோணின திக்கிலே புறப்பட்டுப் போயிடுவாங்க. நேத்து வந்தவனும் அந்த மாதிரி ஒரு ஆளாக்கும்னு நினைச்சேன். அடே யப்பா! ராத்திரிப் பூரா அவனும் ரஞ்சித்தும் ஏதோ குசுகுசுன்னு

பேசிக்கிண்டே இருந்தாங்க. என்னதான் பேசினுங்களோ? ரஞ்சித் என்கிட்டே சொன்னுன், 'நான் டாக்கா போறேன். எப்போ திரும்பி வருவேன்னு நிச்சயமில்லே; திரும்பி வருவேனுன்னும் நிச்சயமில்லே' என்ருன்." மூச்சுவிடாமல் சொல்லிக்கொண்டு போனுள் பெரிய மாமி.

அதற்கு மேலும் பெரிய மாமிக்கு முன்னுல் நிற்க முடியவில்லை, அவளால். நின்றுகொண் டிருந்தால் அவளுடைய ரகசியம் வெளியாகிவிடும். அவள் அங்கிருந்து வேகமாகப் போய்விட்டாள். 'ரஞ்சித், நீ இப்படிப்பட்டவனு?' அவளால் பொறுக்க முடியவில்லை. எங்கேயாவது போய் விழுந்துவிடத் தோன்றியது அவளுக்கு.

அவள் புளியமரத்தைத் தாண்டி, குளத்தங்கரையில் நிழல் பரப்பிக்கொண் டிருந்த நாவல் மரத்தடிக்கு வந்தாள். இங்கு அவள் தயக்கமின்றி, ஆசைதீர அழலாம். யாரும் அவளைப் பார்க்க மாட்டார்கள். அவள் பூக்களைத் தண்ணீரில் எறிந்துவிட்டு அவை நீரில் மிதப்பதைப் பார்த்தவாறு நின்ருள். இரவின் இருளில் கிசு கிசுப்பது யார்? 'டாகுர்! நான் எங்கே போவேன்?' மாலதி உரக்கக் கூவ விரும்பினுள், ஆனுல் முடியவில்லை. ஏமாற்றத்தில் அவளது கண்கள் நீரைப் பொழிந்தன.

ஏரியிலிருந்து படகைத் தள்ளிச் சீதலக்ஷா ஆற்றுத் தண்ணீரில் இறக்கும்போது ஈசம் கூவினுன், "எசமான்களா! ஜாக்கிரதையா உட்காருங்க. தண்ணியிலே விழுந்தா அடிச்சிக்கிட்டுப் போயிடும். பெரிய நதி, சீதலக்ஷா வந்துடுத்து."

பெரிய நதியின் பெயரைக் கேட்டதும் சோனு படகுக் குடிசைக்குள் போய் உட்கார்ந்துகொண்டான். இவ்வளவு நேரம் கூரைமேல் உட்கார்ந்திருந்த லால்ட்டுவும் பல்ட்டுவும் படகின் மேல்தட்டுக்கு இறங்கி வந்தார்கள். ஆற்றின் வேகத்தில் படகும் வேகமாகச் செல்லத் தொடங்கியது. படகு குறைந்த நேரத்தில் வெகுதூரம் வந்துவிட்டது. படகின் பாயைக் காற்று அழுத்தியதால் துடுப்பை உபயோகிக்க அவசியம் ஏற்படவில்லை.

ஆச்சரியம், படகு நதியில் இறங்கியதுமே மத்தளங்களின் ஒலியும் கேட்கத் தொடங்கியது. பூஜைக்கு ஏற்பாடுகள் ஆரம்பித்து விட்டன. நதியின் இருகரைகளிலும் மரஞ்செடிகொடிகள், பறவை கள் இவற்றினிடையே வரிசை வரிசையாக மாளிகைகளைக் கற்பனை

செய்துகொண்டு உணர்ச்சி வசப்பட்டான் சோனு. ஏரி பூராவையும், சோனுலி பாலி நதியின் மணல்வெளி முழுதையும், கிராமங்களையும் வயல்களையும் ஆக்கிரமித்துக்கொண்டு பெரிய மாளிகை! அரண்மனை போல் எவ்வளவு பெரிய மாளிகை! அவனுல் படகின் குடிசைக்குள் முடங்கியிருக்க இயலவில்லை. மண்டியிட்டவாறே வெளியே வந்த அவன் செல்வச் செழிப்பு வாய்ந்த அம்மாளிகையின் பிரதிபிம்பம் நீரில் மிதப்பதைக் கண்டான். தண்ணீருக்குள் வேருெரு பட்டணமே உருவாகியிருப்பது போன்ற பிரமை ஏற்பட்டது. சோனு தன் கிராமத்தைவிட்டு வெளியே வெகுதூரம் சென்றதில்லை இதுவரை. அவன் அதிகத் தூரம் சென்றது திருவிழா பார்க்கப் போனதுதான். இத்தகைய மாளிகையை எங்கும் பார்த்ததில்லை அவன். அவன் எழுந்து நின்ருன். படகு கரைப் பக்கம் திரும்பியது. எதிரில் ஸ்டீமர் நிற்கும் துறை தெரிந்தது. அதற்குப் பக்கத்திலேயே படகும் நிற்கும் போலும்.

ஆற்றங்கரையில் பனை மரங்கள். பாதையின் இருபுறமும் வெகு தொலைவுவரை பனைமர வரிசை தெரிந்தது. பாதையின் வலப் பக்கம் ஆற்றங்கரை; அதில் நாணற் பூக்கள் பூத்திருந்தன. வடக்குப் பக்கம் யானை லாயம்; அதைக் கடந்தால் கடைவீதி. ஆனந்தமயி காளி கோவில். அவர்களை அழைத்துச் செல்லப் படகுத் துறைக்கு வந்திருந்த ராம்சுந்தர்தான் இவற்றையெல்லாம் அவர்களுக்கு விளக்கினுன்.

ஆற்றில் அவர்கள் வந்துகொண் டிருந்தபோது அந்த மாளிகைகள் வெகு அருகில் இருப்பதாக, ஆற்றங்கரையிலேயே இருப்பதாகத் தோன்றின. ஆனுல் இப்போது படகிலிருந்து இறங்கிவந்த பிறகு அவை அவ்வளவு அருகில் இல்லை என்று தெரிந்தது. பாதையை ஒட்டினுற்போல் முழங்கால் உயரத்துக்கு ஒரு நீண்ட சுவர். அதன் மேல் இரும்புக் கம்பிகள் பதிக்கப்பட்டிருந்தன.

தூரத்தில் சிறிதும் பெரிதுமாகச் சில கோபுரங்கள் தெரிந்தன. கோபுரங்களின்மேல் சிவப்பு, நீலநிறச் சலவைக் கல் தேவதைகள் பறந்து கொண்டிருந்தார்கள். இரண்டு பக்கமும் சவுக்குமர வரிசை. வரிசைகளின் இடுக்கு வழியே குளம் கண்ணுக்குத் தெரிந்தது. குரோட்டன்ஸ் செடிகள், பலவித மலர்ச் செடிகள், மரங்கள். விதவிதமான மலர்கள் மலர்ந்திருந்தன, பிருந்தாவனத்தைப் போல. குளத்தில் தாமரை பூத்திருந்தது. அதன் கரைகளுக்குக் கல்தளம் போட்டிருந்தார்கள். அருவி நீர் கொட்டுவது போன்ற ஒலி கேட்டு நிமிர்ந்து பார்த்தான் சோனு. அருகில் இரும்பு வேலியால் சூழ்ந்த ஒரு புல் வெளி இருந்தது. பசுமையான இளம்புல் செழிப்பாக வளர்ந்து

இருந்தது அங்கே. மான்கள் அந்தப் புல்லில் விளையாடிக்கொண் டிருந்தன.

லால்ட்டுவும் பல்ட்டுவும் இந்த மான்களைப் பற்றியும் சிறுத்தை களைப் பற்றியும் சோனுவுக்குப் பல கதைகள் சொல்லியிருந்தார்கள். அவற்றைக் கேட்டு அவன் தன் மனசுக்குள் ஓர் அற்புத உலகத் தைச் சிருஷ்டித்து வைத்துக்கொண் டிருந்தான். ஆனால் இவ்வளவு அருகில் மான்குட்டிகள் உண்மையிலேயே விளையாடிக்கொண் டிருப்பதைப் பார்த்து அவனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ராம் சுந்தர் அவனுக்குப் பக்கத்தில் இருந்தான். லால்ட்டுவும் பல்ட்டுவும் பின்னால் வந்தார்கள். அவன் ஓட்டம் ஓட்டமாக முன்னதாக வந்துகொண் டிருந்தான். இனிமேல் சிறுத்தை வரும், மயில்கள் வரும். அவன் ஊருக்குத் திரும்பும்போது மயிலிறகு கொண்டு போக வேண்டும். வெண்மையான கூழாங்கற்கள் பதித்த மிருதுவான, வழுவழுப்பான பாதை அது. கூழாங்கற்களின்மேல் குதிரைக் குளம்புகள் படும் ஒலி கேட்டது.

அவன் இரண்டு மூன்று கூழாங்கற்களை எடுத்துத் தன் சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டான். ஓர் அழகிய இளைஞர் இந்த மாலை வேளையில் குதிரைமேல் மெதுவாகச் சவாரி செய்துகொண் டிருந்தார். அவருக்குப் பின்னால் ஒரு துடிதுடிப்பான பெண். அவள் ஜரிகை வேலைப்பாடு செய்த வெள்ளை ஃபிராக் அணிந்திருந்தாள். கழுத்துவரை நறுக்கிய வழுவழுப்பான கேசம் அவளுக்கு. ஏறக் குறைய சோனுவின் வயதே இருக்கும். இரும்புக் கிராதியில் செதுக்கி யிருந்த குட்டித் தேவதை ஒன்று பறந்து வந்து குதிரையின்மேல் உட்கார்ந்திருப்பது போன்ற தோற்றம். ஒரு விநாடி சோனுவுக்குக் காட்சியளித்துவிட்டு மறைந்துவிட்டது அந்த உருவம். மாளிகையின் முன் கதவு திறந்தது. அந்த இளைஞர் குட்டித் தேவதையுடன் குளத்தங்கரை வழியே சென்று மறைந்துவிட்டார். பிரமித்துப் போய் நின்றான் சோனு.

அவன் குதிரை சென்ற திசையில் ஓடினான். ஓடிக்கொண்டே மாளிகையின் பிரதான வாயிலுக்கு வந்து சேர்ந்தான். பெரிய இரும்புக் கதவுகள். அதன் பின்னால் விசித்திர உடையணிந்த ஒரு மனிதன். அவனுடைய கையில் துப்பாக்கி, இடையில் கத்தி, தலையில் நீலநிறத் தலைப்பாகை. இதற்குள் வாயில் மூடப்பட்டுவிட்டதால் சோனுவால் உள்ளே போகமுடியவில்லை. குதிரை எப்படிக் காணாமல் போய்விட்டது? சோனுவுக்குப் பயமாக இருந்தது. அவன் திரும்பிப் பார்த்தான். பின்னால் ராம்சுந்தர், லால்ட்டு, பல்ட்டு எல்லாரும் வந்துகொண் டிருந்தார்கள்.

சோனு அவ்வளவு பெரிய மாளிகைக்கு அருகில் ஒரு சின்னஞ் சிறு சிட்டுக்குருவியைப் போல் நின்றுகொண் டிருந்தான். அவன் ஒரு ராஜாவின் அரண்மனைக்கு வந்தான். பிரதான வாயில் வழியாக மக்கள் அதிகமாக உள்ளே போகவில்லை. குளத்தின் தெற்கு பக்கமாகத்தான் அவர்கள் போய்வந்தார்கள். சோனு பேசாமல் நிற்பதைப் பார்த்து ராம்சுந்தர் அவனிடம் வேகமாக வந்தான்.

அந்தக் குடும்பத்துக்கு மிகவும் நெருங்கியவர்கள்தான் அந்த வாயில் வழியே உள்ளே போகலாம். அந்த ஜமீந்தாரியில் நீண்ட காலமாக அலுவல் செய்யும் சிலருக்கும் இந்த உரிமை உண்டு. அம்மாதிரி உரிமை பெற்றவர்களில் பூபேந்திரநாத்தும் ஒருவர். அந்தக் குடும்பத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர், அதன் சுகதுக்கங்களில் பங்கு கொள்பவர்.

மாளிகையின் வாயில் வழியே நுழைய முடியாத சோனு இரும்புக் கம்பிகளின் இடுக்கில் தலையைவிட்டு உள்ளே எட்டிப் பார்த்தான். உள்ளே வெகு தூரத்திலிருந்து யாரோ பாடும் ஒலி கேட்டது. அவன் கண்ணுக்கு நேரே வரிசை வரிசையாகத் தூண்களும், வேலைப்பாடுகள் செய்த மரச்சுவர்களும் தெரிந்தன. உயரே லஸ்தர் விளக்குத் தொங்கியது. சோனுவுக்கு வண்ணத்துப் பூச்சி போல் பறந்து உள்ளே நுழைந்துவிட ஆசை.

எங்கோ ஒரு பெண் நடனமாடினாள். அவளுடைய கால் சதங்கையின் ஒலி கேட்டது. எங்கோ மத்தளம் ஒலித்தது. மாளிகையின் மாடியில் வரிசை வரிசையாகப் பளிங்குத தேவதைகள் பறந்து கொண்டிருந்தன. காற்றில் அவர்களுடைய ஆடைகள் நெகிழ்ந்து அசைவது போலிருந்தன, அந்தக் காட்சிகள். அவர்கள் நடனமாடு கிறார்களோ, என்னவோ!

நாற்புறமும் மிருதுவான புல்வெளிகள். அவற்றில் அங்கு வளர்க்கப்படும் புல்புல் பறவைகள் உட்கார்ந்திருந்தன. அழகாகக் கத்தரித்து விடப்பட்ட சின்னச் சின்னச் செடிகள்; அவற்றில் பூக்கள் பூத்திருந்தன. தெற்குப் பக்கத்திலிருந்து சில பறவைகள் ஒலி எழுப்பிக்கொண்டே பறந்து வந்தன. சிவப்பு, மஞ்சள் உடைகள் அணிந்த சின்னஞ்சிறு பெண்கள் கண்ணாமூச்சி விளையாடினார்கள்.

''கதவைத் திறங்க. காரியக்கார எசமான் வீட்டு ஜனங்க வந்திருக் காங்க'' என்றான் ராம்சுந்தர்.

உடனே இரும்புக் கதவுகள் கடகட சப்தத்துடன் திறந்து கொண்டன. காவலிருந்த இரண்டு வீரர்களும் சோனுவுக்குச் சலாம் போட்டார்கள். லால்ட்டுவும் பல்ட்டுவும் தங்கள் முகத்தை 'உம்' மென்று வைத்துக்கொண்டார்கள். அவர்களுடைய முகபாவத்தில் எவ்விதச் சலனமும் இல்லை.

அவர்கள் ஒரு நீர் ஊற்றைப் பார்த்தார்கள். பார்க்கப் பார்க்கச் சோனுவுக்கு வியப்பு அதிகரித்தது. காவல் வீரர்கள் தங்கள் துப்பாக்கிகளைப் போட்டுவிட்டு அவனைக் கட்டிக்கொண்டு கொஞ்ச முயன்ற போது அவன் ராம்சுந்தருக்குப் பின்னால் ஓடிவிட்டான். அவர்களால் அவனைத் தோள்மேல் தூக்கிக்கொள்ள இயலவில்லை. இந்தச் சோனு, சின்னஞ்சிறு சோனு, காரியக்காரர் வீட்டுப் பையன். அவனுடைய முகத்திலும் கண்களிலும் ஏதோ ஒரு கவர்ச்சி இருந்தது. காவலர்கள் சோனுவைத் தோள்மேல் தூக்கி வைத்துக்கொண்டு பூபேந்திரநாத்திடம் கூட்டிச் செல்ல விரும்பினார்கள். அழைத்துச் சென்றால் அவர்களுக்கு ஏதாவது இனாம் கிடைக்கும். சோனு அவர்களிடமிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முயற்சி செய்தான். அவனுக்கு ஏதோ பயம். பலவந்தம் செய்தால் அவனுக்கு அழுகை வந்துவிடும்.

சோனுவுக்கு இந்த வீட்டில் நடந்து மாளாது என்று தோன்றியது. தான் எங்கிருக்கிறோம் என்று அவனுக்குப் புரியவில்லை. தலைக்கு மேலே உயரமான விதானம். அதிலிருந்து லஸ்தர் விளக்குகள் தொங்கின. நீண்ட வராந்தா, சுவரின் மேல்விளிம்பில் புறாக்கள், சதுர இடைவெளியுள்ள கம்பிவலைத் திரை, வேலைக்காரர்கள், வேலைக்காரிகளின் குரல்கள்...இவை முடிவற்றதாகத் தோன்றின சோனுவுக்கு.

ராம்சுந்தர் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு மாளிகையின் ஒவ்வொரு பகுதியாகக் காட்டிக்கொண்டு வந்தான். இந்த நேரத்தில் பைத்தியக்காரப் பெரியப்பா அவன் அருகில் இருந்தால் சோனுவுக்கு எவ்விதப் பயமும் இருக்காது. ஜமீன்தாரின் முன்னோர்களின் உருவங்கள் தீட்டிய ஓவியங்கள் மாளிகையின் சுவர்களில் தீட்டப்பட்டிருந்தன. பிறகு அவர்கள் நடனசாலைக்கு வந்து சேர்ந்தார்கள். இங்கேதான் சோனுவால் ஆகாயத்தைப் பார்க்க முடிந்தது. இப்போது தான் அவனுக்குச் சற்றுப் பயம் தெளிந்து தெம்பு வந்தது.

பூபேந்திரநாத் ஆபீஸ் அறையில் உட்கார்ந்து பூஜைக்கான சாமான்கள் வாங்கிய கணக்கைப் பார்த்துக்கொண் டிருந்தார். ஒரு தடிமனான, பெரிய மெத்தையின்மேல் உட்கார்ந்திருந்தார் அவர். அதன்மேல் வெள்ளைவெளேரென்று ஒரு விரிப்பு விரித்திருந்தது. பெரிய பெரிய திண்டுகள் போட்டிருந்தன. கீழே குடிமக்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

சோனு வந்துவிட்டான் என்று கேட்டதும் பூபேந்திரநாத் வேலையை அப்படியே வைத்துவிட்டு எழுந்தார். இந்தத் தடவை பூஜை பார்க்க சோனு வருவதாக இருந்தது. ஆனால் கடைசிவரை சசி அவனை அனுப்பச் சம்மதிப்பாரா என்பது சந்தேகமாக இருந்தது. ஆகையால் காலையிலிருந்தே அவருக்கு வேலையில் மனம் செல்லவில்லை. நடுப்பகலிலிருந்தே ராம்சுந்தரைப் படகுத் துறையில் உட்கார்த்தி

வைத்திருந்தார் அவர். சிறுவர்கள் எப்போது வருவார்கள், எப்போது வருவார்கள் என்று அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அவர் ஓடிவந்தபோது நடனசாலையில் சோனு அம்மனுக்கு நமஸ்காரம் செய்துகொண் டிருப்பதைக் கண்டார். அவன் நீலநிறப் பாண்ட், அரைக்கை சில்க் சட்டை, ரப்பர்ச் செருப்பு இவற்றை அணிந்திருந்தான். அவனுடைய முகம் வற்றிக் கிடந்தது. காலையில் புறப்படுவதற்குமுன் சாப்பிட்டிருப்பான். பூபேந்திரநாத் வேகமாக வந்து சோனுவைத் தூக்கி மார்புடன் அணைத்துக் கொண்டார். அம்மனுக்கு முன் நின்றுகொண்டு இந்தச் சிறுவனுக்காக என்ன என்னவோ வேண்டிக்கொள்ளத் தோன்றியது அவருக்கு. ஆனால் எதுவும் சொல்லத் தோன்றவில்லை. அகன்ற கண்களுடன் அபய மளிக்கும் கையுடன் தேவி அவர்கள் முன்னே நின்றுகொண் டிருந்தாள். திடீரென்று, "அம்மா! அம்மா!" என்று கூவினார் பூபேந்திரநாத். இந்தத் திடீர்க் கூவலில் சோனு பயந்துவிட்டான். பூபேந்திரநாத்தின் கண்களில் நீர் நிறைந்துவிட்டது.

பூபேந்திரநாத்துக்குத் தேவியிடம் உறுதியான பக்தி. அவர் செய்வது வெறும் பூஜையல்ல; அவருடைய உள்ளத்துக்குள் ஆழ்ந்த நம்பிக்கை பறவைபோல் எப்போதும் விளையாடிக்கொண் டிருந்தது. சோனுவை மார்புடன் அணைத்தவாறே பூபேந்திரநாத் தேவியின் முன் நின்று அவளுடைய எல்லையற்ற பெருமையை எண்ணினார். அவளுடைய கருணை இல்லாவிட்டால் மனிதன் எப்படிப் பிழைப்பான், எப்படிச் சாப்பிடுவான்? இவ்வளவு செழிப்பு எங்கிருந்து வரும்? இந்தச் சோனுவும் தேவியின் பெருமையின் அடையாளந்தான். துர்க்கை அன்னை பூஜையை ஏற்றுக்கொள்ள நாட்டுக்கு வந்திருக்கிறாள். சோனுவும் வந்திருக்கிறான்.

சரத் காலம்; நாணல் மலர்கள் எங்கும் மலர்ந்திருக்கின்றன. லஸ்தர் விளக்குகள் எரியும். மணல்வெளியில் யானை உலவும். அதன் கழுத்திலுள்ள மணி ஒலிக்கும். அதற்கு வெள்ளைச் சந்தனமும் சிவப்புச் சந்தனமும் இட்டு அலங்கரிப்பார்கள். தேவியின் வருகைக் காக இவ்வளவு ஏற்பாடுகளும் நடக்கும்.

பூபேந்திரநாத் தேவியின் முன்னால் நின்று சிறுவர்களுக்காகப் பிரார்த்தனை செய்தார். தேவியின் கண்கள் பெரிதாக இருந்தன. மூக்கில் ஒரு பெரிய வளையம்; கைகளில் இருந்த சங்கு, பத்மம், கதை எல்லாமாகச் சேர்ந்து பக்தர்களுக்கு அபயம் அளித்துக்கொண் டிருந்தன.

ஆனந்தமயீ கோவிலுக்கு அருகிலுள்ள நிலத்தில் முஸ்லிம் குடியானவர்கள் தொழுகை செய்வார்கள். அது மசூதி இல்லை. அங்கு ஒரு பழைய இடிந்த கோட்டை இருந்தது. அது ஈசாகானுடைய

தாக இருந்திருக்கலாம், அல்லது சாந்த்ராய், கேதார்ராய் கட்டிய தாகவும் இருக்கலாம். அந்த இடிந்த கோட்டையில் தொழுகை நடத்தும் உரிமை பற்றி ஒரு கிளர்ச்சி ஆரம்பித்திருக்கிறது.

இன்று காலையில் ஆபீசுக்குச் செய்தி வந்தது — முஸ்லிம்கள் குறிப்பாக பஜாரில் வசிக்கும் மௌல்வி சாயபு, இந்துக்களுக்கு இடைஞ்சல் செய்ய முனைந்திருப்பதாக. மௌல்வி சாயபு இரண்டு பெரிய நூல் கடை வைத்திருந்தார். அவருக்கு ஆற்றுப் படுகையில் சொந்தமாக ஆயிரம் பீகா நிலம் இருந்தது.

தேவியின் மகிமையால் இந்தக் கிளர்ச்சி யெல்லாம் அடங்கிவிடும். தேவியின் விருப்பத்துக்கு மாறாக யாரால் நடக்கமுடியும்? மகிஷாசுரனைக் கொல்லத் தயாராக இருக்கிறது, தேவியின் கையிலுள்ள சூலம். மகிஷாசுரவதக் கற்பனை பூபேந்திரநாத்தின் மனத்தில் தோன்றியது. "அம்மா! அம்மா! உன் பெருமைதான் என்னே!" என்று கூவத் தோன்றியது. ஆனால் அவருடைய வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை. பெரியப்பாவின் கண்களில் நீர் தளும்புவதைக் கண்ட சோனு, அவர் தங்களைக் கண்ட மகிழ்ச்சியில் உணர்ச்சி வசப்பட்டு விட்டதாக நினைத்துக்கொண்டான்.

சோனு மாளிகைக்குள் இவ்வளவு தூரம் வந்தும் அந்தச் சிறிய பெண்ணை — அவள் பெயர் கமலா — பார்க்க முடியவில்லை. அவள் எங்கே போய்விட்டாள்? உள்ளே வந்ததும் அவளைப் பார்க்கலாம் என்று நினைத்திருந்தான் அவன். ஆனால் அவளைக் காணோம். சாப்பிட உட்கார்ந்தபோதுகூட அவள் பக்கத்தில் எங்காவது உட்கார்ந்திருக்கிறாளா என்று நாற்புறமும் மெதுவாகத் திரும்பிப் பார்த்தான். எவ்வளவோ சிறுவர்களும் சிறுமியரும் இங்குமங்கும் ஓடிக்கொண் டிருந்தார்கள். குதிரைச் சவாரி கற்றுக்கொள்ளும் அந்தப் பெண்ணை மட்டும் எங்கும் காணவில்லை. இவ்வளவு சிறிய பெண் குதிரை மேல் ஏறிச் சவாரி செய்வதைப் பார்க்க ஆச்சரியமாக இருந்தது. அவளைக் கண்டுபிடிக்கும் ஆசையில் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் பார்த்துக்கொண்டே யிருந்தான் சோனு.

சசீந்திரநாத் காலையிலிருந்தே வேலையில் மும்முரமாக இருந்தார். குழந்தைகள் எல்லாரும் பூஜைக்குப் போய்விட்டார்கள். பிற்பகலில் மன்சூர் அவரிடம் ஒரு புகாரைக் கொண்டு வந்தான். அவனுக்கும் ஹாஜி சாயபுவுக்கு மிடையே விரோதம் அதிகமாகிக் கொண்டு வந்தது. ஹாஜிசாயபுவின் பெரிய பையன் மன்சூரின் சொற்ப நிலத்தில் வாய்க்கால் வெட்டிவிட்டான், சென்ற கோடையில். மழைக் காலத்தில் சணல் அறுவடையாகும்போது மன்சூரின் சணல் பயிரைத் தானே பலவந்தமாக அறுவடை செய்து கொண்டு போய்விட்டான்.

ஹாஜிசாயபுவுக்குப் பெரிய குடும்பம், மூன்று பிள்ளைகள். கரும்பு, சணல் விவசாயம். இருந்தும் சொற்ப நிலத்துக்காகக் கொலைகூட நடந்துவிடும். ஆகையால் சசீந்திரநாத் அன்று மாலை முழுதும் இந்தச் சச்சரவுக்கு முடிவு காண்பதற்காக ஹாஜி சாயபுவின் வீட்டில் உட்கார்ந்திருந்தார். சுமுகமான முடிவு ஏற்பட்டுவிட்டால் வீடு திரும்பிவிடுவார்.

ஹாஜிசாயபுவின் வீட்டுத் திண்ணையில் பலகைமேல் உட்கார்ந் திருந்தார் சசீந்திரநாத். வெற்றிலை புகையிலை அவருக்காக வந்தன. ஆனால் அவர் அவற்றைச் சாப்பிடவில்லை. இப்போது இஸ்மத் அலியும், பிரதாப் சந்தாவும் வந்தார்கள். பெரிய மியானும் வரலாம். ஆனால் சசீந்திரநாத்தான் எல்லாம். சசீந்திரநாத் ஹாஜிசாயபுவின் இரண்டாம் பிள்ளையைத் தேடினார். அமீர் எங்கே போயிருக்கிறான்? அவன் பெரிய மியானை அழைத்துவரப் படகு எடுத்துக்கொண்டு போயிருந்தான்.

அப்போது துறையிலிருந்து வந்த பெரிய மியான் சசீந்திரநாத்துக்கு சலாம் செய்தார். "எசமான், சௌக்கியமா இருக்கீங்களா?"

"ஏதோ இருக்கேன். ஏன் உனக்கு இவ்வளவு நேரமாயிடுச்சு?"

"அதை ஏன் கேட்கறீங்க? ஆத்துமணல்லே யாரோ ஒரு பெரிய படகைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்காங்க."

"யாரோட படகு?"

"தெரிஞ்சுக்க முடியல்லே. ரெண்டு படகோட்டி இருக்காங்க. நீளத் துடுப்பு ஒண்ணு இருக்கு. பாய் இருக்கு. அதைப் பார்க்கத் தான் போயிருந்தேன்."

"படகோட்டிகள் என்ன சொல்றாங்க?"

"ஒண்ணும் சொல்லமாட்டேங்கறாங்க. எங்கேயிருந்து படகு வந்திருக்கு, எங்கே போயிக்கிட்டிருக்கு – ஒண்ணும் சொல்லமாட் டேங்கறாங்க."

"ஒண்ணும் சொல்லல்லியா?"

"ஊஹூம்! ராத்திரி வேளையிலே அவங்களோட பாட்டு மட்டும் கேக்குது."

"என்ன பாட்டு?"

"குனாயி பீபியோட பாட்டு மாதிரி இருக்கு, ராப்பூரா 'ஜில் ஜில்' சத்தம் கேக்குது."

"ராத்திரி வேளையிலே போய்ப் பார்த்தியா?"

"பயமாயிருக்கு, எசமான்! ராத்திரிவேளை பாட்டுக் கேட்கப் போனேன். கிட்டப் போய்ப் பார்த்தா, படகு ஆத்து நடுவிலே நிக்குது. பகல் வேளையிலே போய்ப் பார்த்தா, ரெண்டு படகோட்டி

களும் உட்கார்ந்திருக்காங்க. ரெண்டு பேரும் ஊமை. ஜாடை யாலேதான் பேசருங்க."

"யாரோட படகு, ஏன் வந்திருக்கு? ஒண்ணுமே தெரியல்லியா?"

"இல்லே."

"ஆச்சரியமா யிருக்கே."

"ஆமாங்க, ரொம்ப ஆச்சரியமாத்தான் இருக்கு."

மன்சூர் வந்ததும் சசீந்திரநாத் பேச்சை மாற்றினர். ஹாஜிசாயபு தொழுகை செய்யும் பாணியில் ஜமுக்காளத்தில் வந்து உட்கார்ந்தார். அவர் கையில் வெள்ளிப் பூண்போட்ட தடி. அவர் புகாரை ஏற்றுக் கொண்டார்; பலவந்தமாக அறுவடை செய்த சணலைத் தந்துவிட ஒப்புக்கொண்டார். நிலத்திலிருந்து தண்ணீர் வடிந்தபிறகு எல்லாரு மாகச் சேர்ந்துகொண்டு வாய்க்காலைச் சரி செய்வதென்று முடிவாகியது.

சசீந்திரநாத், "என்ன மன்சூர், ஆத்திலே ஒரு பெரிய படகு நிக்குதாமே?" என்று மன்சூரைக் கேட்டார்.

"ஆமாங்க, நானும் கேள்விப்பட்டேன்."

"ஆத்திலே எந்தப் பக்கம்?"

"ரொம்பத் தூரத்திலேங்க..."

ஆமாம், உண்மையிலே அதிக தூரந்தான். ஆறுகளும் கால்வாய் களும் நிறைந்த நாடு அது. மழைக் காலத்தில் ஒவ்வொரு கிராமமும் ஒரு தீவுபோல் காட்சியளிக்கும். அவற்றைச் சுற்றி ஒரே தண்ணீர். ஆறுகளின் கரைகளே கண்ணுக்குப் புலப்படா. பெரிய பெரிய அன்னுசித் தோப்புகள். காடுகள் தண்ணீருக்குள்ளிருந்து மூக்கை நீட்டிக்கொண் டிருக்கும். தெற்குப் பக்கம் சாலமரக் காடு. அதில் புலி இருக்கும். விரும்பினுல் அந்தப் படகு சாலமரக் காட்டுக்குள் நுழைந்து ஒளிந்துகொண்டு விடலாம், மறைந்துபோய் விடலாம். அதைக் கணடுபிடிக்க முடியாது. கண்ணுமூச்சி விளையாட்டு மாதிரி தான். ஏரிகள், கால்வாய்கள், பத்து இருபது கோச தூரத்துக்குச் சாலமரக் காடு. காட்டில் இந்தப் பருவத்தில் விபத்துக்கள் ஏற்படுவது இயற்கைதான்.

பட்குத துறைக்குப் போகுமுன் சசீந்திரநாத், "அலிமத்தி, வா ஒரு தடவை பார்த்துட்டுப் போகலாம்" என்ருர்.

"எங்கே போகணும்?"

"ஆத்துப் படுகைக்கு. அங்கே ஒரு பெரிய படகு வந்திருக்காம்."

அலிமத்தி துடுப்பு வலித்துக்கொண்டு வயல் பகுதிக்கு வந்தான். இங்கே தண்ணீர் குறைவாக இருந்ததால் படகை நடுப்பகுதியி லேயே ஒட்டிக்கொண்டு போகவேண்டி யிருந்தது. ஆற்றை யடைந்ததும் அவன் துடுப்பை எடுத்துவிட்டுப் படகின் பாயை

விரித்தான். பிறகு நாற்புறமும் உற்றுப் பார்த்தபடி, "படகு ஒண்ணையும் காணுமே, எசமான்!" என்ருன்.

"படகு இல்லே?"

"இல்லியே! இருந்தாக் கண்ணுக்குத் தெரியாதா?"

சசீந்திரநாத் படகின் மேற்பலகையில் எழுந்து நின்று பார்த்தார். ஆமாம், உண்மையில் அங்கே படகு ஒன்றும் இல்லே. பெரிய படகு கிடக்கட்டும், சந்தைக்குப் போகிற சிறிய கோஷாப் படகைக்கூட அங்கே காணும்! அவருக்கு ஆச்சரியமாக இருந்தது.

இப்போது வீட்டுக்கு வீடு விளக்கு எரிந்தது. ஆஸ்வின் மாத மாதலால் இரவு நேரம் குளிராக இருக்கவேண்டும். ஆனுல் இன்னும் வெப்பம் தணியவில்லே. பாத்ர மாதத்தில் இருப்பதைப் போன்ற இறுக்கமான வெப்பத்தால் சசீந்திரநாத்துக்கு உடம்பெல்லாம் வேர்வை. அலிமத்தி மாட்டுக் கொட்டகையில் புகை போட்டான். அங்கே ஒரு பெரிய கொசுவலே கட்டியிருந்தது. புகை போட்ட பிறகு கொசு வலேயைத் தொங்க விட்டுவிட்டு வந்துவிடுவான் அலிமத்தி.

சசீந்திரநாத் பெரிய அறையில் நுழைந்தபடி, "அப்பா, ஆத்துலே ஒரு பெரிய படகு வந்திருக்காம்" என்ருர்.

"யாரோட படகு?"

"தெரியல்லே."

"விசாரி, விசாரித்துப் பாரு! நல்ல ஆளாவும் இருக்கலாம், போக்கிரியாவும் இருக்கலாம். நன்னு விசாரித்துப் பாரு."

"காலம்பற பெரிய மியானேட படகு, ஹாஜி வீட்டுப் படகு, சந்தா வீட்டுப் படகு இதையெல்லாம் எடுத்துக்கிண்டு போய்த் தேடிப் பார்க்கறேன், அந்தப் படகு எங்கே ஒளிஞ்சுக்கிட்டிருக்குன்னு."

மழைக் காலம் வந்துவிட்டால் கொள்ளேக்காரர்களிடமிருந்து ஆபத்து அதிகரிக்கும். ஒரு படகு வந்திருக்கிறது, அது பகல் வேளேயில் எங்கோ மறைந்திருக்கிறது என்ற செய்தி கேட்டதும் எல்லாரும் இரவானதும் பயத்துடனேயே பொழுதைக் கழித்தார்கள். கிராமத்தில் வீடுகள் ஒன்றுக்கொன்று வெகுதூரத்தில் இருந்தன. இரவாகிவிட்டால் ஒவ்வொன்றும் தண்ணீராலும் மரஞ்செடிகளாலும் சூழப்பட்டுத் தனித் தனியாகத் துண்டுபட்டிருக்கும். ஊரே ஒரு சொப்பன உலகம்போல் நிசப்தமாக இருக்கும். நரேன்தாஸின் வீடு, தீனபந்துவின் வீடு, டாகுர் வீடு இவை மூன்றுந்தான் ஒன்றையொன்று ஒட்டினுற்போல் இருக்கும். அவற்றுக்கப்புறம் பால் குடும்பத்தினரின் வீடு. ஹாரான் பாலின் இரண்டு பிள்ளேகளும்

வெவ்வேறு பக்கங்களில் வாசல் வைத்து இரண்டு இரண்டு அறைகள் தங்களுக்காகக் கட்டிக்கொண் டிருந்தார்கள்.

இரவாகிவிட்டால் எங்கும் நிசப்தம். அப்போது மாலதிக்குத் தூக்கம் வருவதில்லை. இவ்வளவு நாட்கள் ரஞ்சித் ஊரில் இருந்ததால் பயம் குறைந்திருந்தது. அவன் போய்விட்ட பிறகு இப்போது என்ன செய்வது? 'நடப்பது நடக்கட்டும், தூக்கம் வந்தாலும் வரா விட்டாலும் சீக்கிரமாகவே படுக்கப் போக வேண்டியதுதான்!' என்று தீர்மானித்தாள் மாலதி.

ஆஸ்வின் மாத இரவு வெப்பமாக இருந்தது. கதவைச் சாத்தி வைத்திருந்ததால் ஒரே இருக்கமாக இருந்தது. நரேன்தாஸ் இன்னும் விழித்துக்கொண் டிருந்தான். நெசவு அறையில் ஏதோ வேலை செய்தான். ஆபாராணி பாத்திரம் தேய்க்கத் துறைக்குப் போயிருந் தாள். ஆபு விளக்கை எடுத்துக்கொண்டு அவளுடன் துணைக் குப் போயிருந்தான். மாலதி காற்றுக்காக அறையின் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு ஜமுக்காளத்தை விரித்துப் படுத்தாள். இறுக்கத்திலும் வேர்வையிலும் உடம்பு நனைந்துவிட்டது. இந்த இறுக்கமும் இருளும் சேர்ந்து அவளைச் சோர்வில் ஆழ்த்தின. வாழ்க்கையில் ஒன்றுமே மிஞ்சவில்லை அவளுக்கு. எல்லாம் ஒவ்வொன்றாக அவளுடைய வாழ்க்கையை விட்டுப் போய்க்கொண் டிருந்தன. தான் இறுகக் கட்டியிருந்த உள்பாவாடையையும் ரவிக்கையையும் காற்றுக்காகச் சற்று நெகிழவிட்டவாறே இவ்வாறு நினைத்தாள் மாலதி. அந்த ஆள் எங்கே இருக்கிறான், என்ன காரியம் செய்துகொண்டு திரிகிறான், என்ன காரியத்துக்காக விதவிதமான வேஷங்கள் போட்டுக்கொண்டு நடமாடவேண்டி யிருக்கிறது அவனுக்கு?

ஊருக்கு வெளியே பல பேருக்கு அவனுடைய உண்மைப் பெயர் தெரியாது. அவள் ரஞ்சித்தின் படம் ஒன்றைப் பார்த்திருக்கிறாள். அது ரஞ்சித்தே என்று யாராலும் சொல்ல முடியாது! நீண்ட தாடி, தலையில் பெரிய முண்டாசு, கழுத்தில் ருத்ராக்ஷ மாலை — ஒரு துறவியின் படம் அது. இந்த வேடம் ரஞ்சித்துடையதுதான் என்று மாலதியாலேயே நம்ப முடியவில்லை.

ஒரு நாள் சிலம்பப் பயிற்சியும் கத்திப் பயிற்சியும் முடிந்த பிறகு எல்லாரும் அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். நிலவில் நடந்து போய்க்கொண் டிருந்த மாலதியின் முன்றானையைப் பிடித்து யாரோ இழுத்தான். திரும்பிப் பார்த்தால் ஒரு துறவி! பயத்தில் அவள் மயங்கிவிழ இருந்தாள். "நான்தான் மாலதி, என்னைத் தெரியவில்லையா?" என்றான் துறவி.

தன் புடைவைத் தலைப்பை எடுத்து நெஞ்சின்மேல் வைத்துக் கொண்டபோது அவளுக்கு இந்த நினைவு வந்து அதன் காரணமாக ஓர் உற்சாகம் ஏற்பட்டது. மயங்கி விழப்போன அவளை ரஞ்சித், அந்த ஒரு தடவை மாத்திரம், இரண்டு கைகளாலும் பிடித்துத் தாங்கிக்கொண்டு சொன்னான், "என்னைத் தெரியல்லியா, மாலதி? நான்தான் ரஞ்சித்!"

தான் அப்போது முட்டாளாக இருந்துவிட்டதாக இப்போது தோன்றியது மாலதிக்கு. அவள் உண்மையிலேயே மயக்கமாகி இருந்தால் அவன் அவளை அப்படியே வீட்டுக்குத் தூக்கிக்கொண்டு வந்திருப்பான். அவள் மயக்கம் தெளிந்து கலகலவென்று சிரித்துக் கொண்டு அவனை இரு கைகளாலும் கட்டிக்கொண்டு அவனைத் திகைக்க வைத்திருப்பாள். அந்த நிலையில் அவனால் தன்னைக் கட்டுப் படுத்திக்கொண்டிருக்க முடியாது.

இவ்வாறு நினைக்கும்போதே உணர்ச்சி மிகுதியில் அவளுடைய உடல் நடுங்கியது. அவள் இப்போது தன் உள்ளாடையை நன்றாகத் தளர்த்தி விட்டுக்கொண்டு துறைப் பக்கம் பார்த்தாள். இருள் காரணமாக அங்கு ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. கட்டாரி மரத்தடி வரையில் தண்ணீர் வந்திருந்தது. தண்ணீரில் மீன் குதிக்கும் போது ஏற்படுவது போன்ற அரவம் அந்தப் பக்கம் கேட்டது. இப்போது அமூல்யன் இருந்தால் தூண்டிலில் மீன் சிக்கிவிட்டது என்று நினைத்து ஓடிப் போய்ப் பார்ப்பான். ஆனால் நரேன்தாஸ் தூண்டில் போட்டு வைத்திருக்கவில்லை என்று மாலதிக்குத் தெரியும். நாள் பூராவும் தன்னந்தனியாக ஏதோ வேலை செய்துகொண்டே யிருக்கிறான் நரேன்தாஸ். இப்போதும் இரவில் கண் விழித்துக் கொண்டு நாலைக் கஞ்சியில் நனைத்துக்கொண் டிருக்கிறான். நாளை அமூல்யன் திரும்பி வந்துவிடுவான். நரேன்தாஸின் வேலைப் பளுவும் சற்றுக் குறையும்.

சோபா முன்னிரவிலேயே படுத்துக்கொண்டு விட்டாள். அவளுக்கு ஜுரம். ஆபு வந்ததும் கதவைத் தாழிட்டுவிடலாம் என்று நினைத் தாள் மாலதி. துறையில் அரிக்கேன் விளக்கு இன்னும் எரிந்தது. ஆபு கண்ணுக்குத் தெரியவில்லை. திடீரென்று விளக்கு அணைந்து விட்டாற் போலத் தோன்றியது. பாத்திரங்கள் கீழே விழும் ஓசை கேட்டது. துறையில் தரை வழுக்கி அண்ணி கீழே விழுந்து விட்டாளோ என்று நினைத்தாள் மாலதி. அதே சமயத்தில் யாரோ நெசவறையில் நுழைந்து... மாலதி எழுந்து உட்கார்ந்தாள். இந்தக் காலத்தில் திருடர்கள், கொள்ளைக்காரர்கள் உபத்திரவம் உண்டு, "அண்ணா, உன் அறையிலே என்ன சண்டை?" என்று கேட்டாள்.

என்ன ஆச்சரியம்! இப்போது அங்கேயிருந்து ஒரு சப்தமும் வரவில்லை. ஒரே நிசப்தம். அவள் தன் ஆடைகளைச் சரி செய்து கொண்டாள். விளக்கேற்றுவதற்காக அரிக்கேன் விளக்கை எடுக்க அவள் முனைந்தபோது அவளுக்கு இருபுறமும் இரண்டு நிழல் உருவங்கள் தோன்றின. அவள் கூக்குரலிட வாயைத் திறப்பதற்குள் அந்த உருவங்கள் அவளைப் பிடித்து அவளுடைய வாயில் துணியை அடைத்துவிட்டன. அவள் தன்னை விடுவித்துக்கொள்ள திமிறினாள். அவர்களிடையே நிகழ்ந்த போராட்டத்தின் ஒலிகள் இருட்டில் கேட்டன. சோபா விழித்துக்கொண்டு பயந்துபோய், "அத்தை, அத்தை!" என்று கூவினாள். அதன் பிறகு நிசப்தம். அந்த யுவதியை யாரோ வீட்டிலிருந்து தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள்.

சோனு சாப்பிட்டபின் நடனசாலையின் மாடிப்படிகள் வழியே இறங்கி வந்தான். லால்ட்டுவும் பல்ட்டுவும் அந்த ஊர்ச் சிறுவர்களோடு சேர்ந்து விளையாடிக்கொண் டிருந்தார்கள். சோனுவுக்கு இந்த இடத்தில் யாரையும் தெரியாது. இப்போது அவனுடைய தலைக்குமேல் ஆகாயம் தெரிந்தது. இந்த இடத்துக் காட்சிகள் புதியவை, முகங்களும் புதியவை. அவன் எப்போதும் பெரியப்பா வுடனேயே சுற்றினான். அவன் வெள்ளை அரைக்கைச் சட்டையும் நீலநிறப் பாண்டும் அணிந்திருந்தான். குட்டையாக வெட்டப்பட்ட தலை மயிர்.

அவனுடைய பெரிய பெரிய கண்களைப் பார்த்து அவற்றால் கவரப் பட்டு அங்குள்ளவர்கள் அவனைச் சூழ்ந்துகொண்டார்கள்; அவனு டைய பெயரைக் கேட்டார்கள். பெரியப்பா சிரித்தார். அவனைப் பெயர் சொல்லச் சொன்னார். அவன் சந்திரநாத் பௌமிக்கின் சிறிய பிள்ளை என்ற செய்தி பரவியது. நடன சாலையிலிருந்த புரோகிதர் அவனுக்கு இரண்டு சந்தேஷ் சாப்பிடக் கொடுத்தார். அவன் அவற் றைச் சாப்பிடாமல் பெரியப்பாவிடம் கொடுத்து வைத்தான். அவரை விட்டுவிட்டு எங்கும் போகத் துணிவு ஏற்படவில்லை அவனுக்கு.

லால்ட்டுவும் பல்ட்டுவும் அவனை தங்களுடன் அழைத்துச் செல்ல விரும்பினார்கள். குளத்தங்கரையில் பாட்மின்டன் விளையாட்டு நடக்கப் போகிறதாம். சோனு போகவில்லை. அவனுக்குப் போகத் துணிவு வரவில்லை. ஈசம் வந்தால் போகத் துணிந்திருப்பான் அவன்.

ஈசம் இப்போது ஆற்றிலேயே படகில் தங்கியிருந்தான். இந்தச் சில நாட்களுக்கு ஈசம் படகிலேயே வசிப்பான். அவன் ஆற்றில் தூண்டில் போட்டுப் பேலே மீன், பூன்ட்டி மீன் இவற்றைப் பிடித்துக்கொண்டு பொழுதைக் கழிப்பான். படகில் தானே சமையல் செய்து சாப்பிடுவான்.

தன் தந்தையுடன் குதிரையில் சவாரி செய்துகொண்டு சென்ற அந்தப் பெண்ணின் நினைவு சோனுவுக்கு அடிக்கடி வந்தது. அவ ளுடைய உலகத்தில் நுழைய ஆசையாக இருந்தது அவனுக்கு. ஜரிகைத் தொப்பியணிந்த சிறுவர்களும் சில்க் ஃபிராக் அணிந்த பெண்களும் பெரிய முற்றத்தில் கண்ணுமூச்சி விளையாடிக்கொண் டிருந்தார்கள். பூக்கள் மலர்ந்திருப்பதுபோல் மகிழ்ந்து விளையாடும் அந்தக் குழந்தைகள் இருக்குமிடத்துக்குப் போக ஆசையாக இருந்தது அவனுக்கு. அவன் பெரியவனாயிருப்பதால் அவர்கள் அவனைத் தங்கள் விளையாட்டில் சேர்த்துக்கொள்ள மாட்டார் களென்று அவனுக்குத் தெரியும். அவன் விளையாடப் போவதில்லை; ஒரு பக்கமாக நின்றுகொண்டு அவர்களுடைய விளையாட்டைப் பார்க்கப் போகிறான்.

அப்போது அவன் முகத்தில் கதையில் வரும் ராஜகுமாரனுக்கேற் பட்டதுபோல் சோகம் படரும். அப்போது ஒரு சிறு பெண் வந்து அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு அவனை விளையாட அழைப்பாள்! கண்ணுமூச்சி விளையாட்டு! அந்த உலகத்துக்குள் நுழைய ரொம்ப ஆசையாக இருந்தது சோனுவுக்கு. தேவதை மாதிரி ஒரு பெண் குதிரைமேல் சவாரி செய்துகொண்டு அவன் முன்னால் போனாள் என்ற விஷயத்தைத் தவிர, வேறெதுவும் அவனுடைய மனத்தில் நிலைக்கவில்லை. அந்தப் பெண்ணின் முகமே அவனுக்கு அடிக்கடி நினைவுக்கு வந்துகொண் டிருந்தது, அவன் ஆபீஸ் அறையில் உட்கார்ந்திருந்தபோது.

"சோனு, வா போகலாம்!" என்று அப்போது அவனைப் பெரியப்பா கூப்பிட்டார்.

'எங்கே போகப் போகிறார் பெரியப்பா' என்று சோனுவுக்குப் புரியவில்லை. அவர் தம் வேஷ்டியை நன்றாக மடிப்பு வைத்துக் கட்டிக் கொண்டார். ஒரு சட்டையை அணிந்துகொண்டார். பிறகு அவனைக் கூட்டிக்கொண்டு, அவர்கள் சாப்பிடப் போனார்களே அந்தப் பக்கம் போகாமல் இடப் பக்கத்தில் வராந்தாவை ஒட்டினாற்போல் இருந்த பூந்தோட்டத்துக்குள் நுழைந்தார்.

மாளிகையின் இந்தப் பகுதிக்குள் நுழைவதற்குத் தோட்டம் வழி யாகத்தான் போகவேண்டும். அங்கே பலவிதச் செடிகளும் மரங் களும் பூத்தும் பழுத்தும் இருந்தன. எவ்வளவு நீளமான பாதை!

வீட்டுக்குள்ளேயே இவ்வளவு பெரிய பாதையா என்று ஆச்சரிய மாக இருந்தது சோனுவுக்கு. சோனு வாழ்ந்தது ஒரு பட்டிக்காட்டில். அங்கே காரை பூசிய செங்கல் வீடு பிரதாப் சந்தாவின் வீடு ஒன்று தான். மற்ற வீடுகளெல்லாம் தகரத்தாலும் மரத்தாலும் ஆனவை. சந்தா வீட்டுச் சுவர்கள், தரை எல்லாம் சிமெண்ட் பூசப்பட்டவை.

அவர்கள் வீட்டில் ஒவ்வோர் அறைக்கும் ஒரு பெயர் — தெற்கத்தி அறை, கிழக்கத்தி அறை என்பதுபோல் — உண்டு. இங்கு அறை களுக்குத் தனித் தனிப் பெயர் இல்லே. ஒவ்வோர் அறையும் ஹால் மாதிரி விசாலமாக இருந்தன. பெரியப்பா அவனுக்கு ஒவ்வோர் அறையையும் காண்பித்து விளக்கிக்கொண்டு வந்தார். சுவர்களில் பெரிய பெரிய ஓவியங்கள். அவற்றில் தீட்டியிருப்பவர்கள் யார் யார், அவர்கள் எப்போது பிறந்தார்கள், எப்போது இறந்தார்கள், யானே எப்போது வாங்கப்பட்டது என்பதையெல்லாம் பெரியப்பா அவனுக்குக் கதை கதையாகச் சொல்லிக்கொண்டு வந்தார்.

பிறகு மாடிப் படி வந்தது. படிகளில் ரத்தினக் கம்பளம் விரித் திருந்தது. அது மிருதுவாக, காலுக்கு இதமாக இருந்தது. சோனு வெறுங்காலுடன் இருந்தான். அவன் மிக மெதுவாக — வேகமாக நடந்தால் கம்பளம் தேய்ந்துவிடுமோ என்று பயப்படுபவன் போல— படிகளின் மேல் ஏறினன். இரு பக்கமும் கம்பியாலான கைப்பிடிச் சுவர். இங்கே எங்கே பார்த்தாலும் பெண்கள். பூபேந்திரநாத்துக்கு அந்த வீட்டில் அந்தப்புரத்தில்கூடத் தடை இல்லே. அவர் ஒரு திரைக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு, "அம்மா, நான் வந்திருக் கிறேன்" என்று சொன்ஞர்.

சோனு அவருக்கு அருகில் மௌனமாக, பயந்துகொண்டு நின்ற வாறே இந்தப் பகுதியின் அலங்காரங்களேயும் செல்வச் செழிப் பையும் பார்த்து வியந்தான். இங்கே வசிப்பவர்கள் மனிதர்கள் அல்ல, தேவதைகள் என்று அவனுக்குத் தோன்றியது. அவன் தன்னுல் முடிந்த வரையில் பெரியப்பாவின் உடைக்குள் தன்னே மறைத்துக்கொள்ள முயன்ருன்.

அவன் காதுகளேத் தீட்டிக்கொண்டு நின்ருன். பெரியப்பா கூப்பிட்டதற்கு 'யார் குரல் கொடுக்கிருர்கள், எந்தப் பக்கத்துக் கதவு திறக்கிறது, அந்தப் பெண் எங்கே இருக்கிருள்?' என்றெல்லாம் பார்க்கத் தயாராக இருந்தான் அவன். திரை அசைந்ததாகத் தோன்றியது அவனுக்கு. திரைக்கு மறுபுறத்தில் யாரோ நடந்துவரும் அரவம் கேட்டது. பூபேந்திரநாத்துக்கு இன்னும் காத்திருக்கப் பொறுமை இல்லே. "அம்மா, சோனு வந்திருக்கான்!" என்று அவர் சொன்ஞர்.

எசமானியம்மாளுக்குப் பக்கத்தில் சிவப்புத் துணியணிந்த ஒரு சிறு பெண் நின்றிருந்தாள். அவள் அவனை உற்றுப் பார்த்தாள். அவளுக்கு ஒரு சின்னக் குருவிக் குஞ்சு வேண்டுமாம். அவள் தன் பொம்மை வீட்டை அலங்கரிக்கப் போகிறாளாம். பூஜை சமயமென்று சிவப்புத் துணி உடுத்தியிருந்தாள் அவள். காலில் செம்பஞ்சுக் குழம்பும், நெற்றியில் சிவப்புத் திலகமும் இட்டுக்கொண் டிருந்தாள். குட்டையாக வெட்டப்பட்ட தலைமயிர். கண்களில் மைதீட்டி இருந்தது. கைகளில் வேலைப்பாடுகள் செய்த தந்த வளையல்கள். பூஜையை முன்னிட்டு விதவிதமான நகைகள் அணிந்திருந்தாள் அவள்—அவள்தான் கமலா.

"சோனு வந்திருக்கிறான், அம்மா!" என்றார் பூபேந்திரநாத் மீண்டும்.

எசமானியம்மாள் இங்குமங்கும் திரும்பிப் பார்த்தாள். எங்கே அந்தப் பையன்? சோனு பெரியப்பாவின் பின்னால் ஒளிந்துகொண் டிருந்ததால் அவளால் அவனைச் சட்டென்று கண்டுபிடிக்க முடிய வில்லை. "பெரியப்பா, சோனு எங்கே?" என்று கமலா கேட்டாள்.

பூபேந்திரநாத் சோனுவைப் பலவந்தமாக வெளியே கொண்டு வந்து நிறுத்தி, "இவன்தான் சோனு!" என்றார்.

"சோனு! எங்கே உன் முகத்தைக் காட்டு பார்ப்போம்!" என்றாள் கமலா.

'எவ்வளவு அழுத்தந் திருத்தமாப் பேசறு இந்தப் பொண்ணு!' சோனு சங்கோசத்தால் இன்னும் குறுகிப் போனான்.

எசமானியம்மாள் வைத்த கண் வாங்காமல் சோனுவைப் பார்த்துக் கொண்டு நின்றாள். பூபேந்திரநாத் சோனுவைப் பற்றிப் பெருமை யாகப் பேசியதில் மிகையில்லை. அவருக்கு அவன்மேல் ரொம்பப் பிரியம் என்று பார்த்தாலே தெரிந்தது. சந்திரநாத்தின் சிறிய பையன் சோனு. சந்திரநாத் தினம் அங்கே வருவார். அநேகமாகக் காலை வேளையில் ஒரு தடவை வந்து எசமானியம்மாளைப் பார்த்துவிட்டுப் போவார். இப்போது பூஜை சமயத்தில் வேலை அதிகமாதலால் இன்று காலையில் வரவில்லை.

இந்தத் தடவை சசீந்திரநாத் சோனுவைப் பூஜை பார்க்க வர அனுமதித்ததில் பூபேந்திரநாத்துக்கு மிக்க மகிழ்ச்சி. பூஜை சமயத்தில் அவருக்கும் வேலைப் பளு அதிகந்தான். இருந்தாலும் தம்முடன் ரத்த உறவுகொண்ட இந்தச் சிறுவர்களின் வருகையில் அவருக்குச் சந்தோஷம் தாளவில்லை. அவருடைய முகத்தைப் பார்த்தாலே அவருடைய மனநிலையை ஊகிக்க முடிந்தது.

முன்பெல்லாம் அவர் தம் சொந்த ஊருக்குப் போய்விட்டு வந்ததும் தன் எசமானியம்மாளிடம், "சோனு எவ்வளவு அழகாய் இருக்கான், தெரியுமா? அவன் சிரிச்சா எவ்வளவு அழகாயிருக்கும்,

தெரியுமா? அவன் கண்ணு ரொம்பப் பெரிசு! உங்களுக்கு எப்படி விளக்குவேன், போங்க! அவன் பெரியவனைதும் இங்கே கூட்டிக் கிண்டு வரேன்'' என்று கூறுவார்.

அவர் இப்போது எசமானியம்மாளிடம், ''சோனுவைக் கூட்டிக் கிண்டு வந்திருக்கேன், பாருங்க!'' என்ருர்.

எசமானியம்மாள் சோனுவைப் பார்த்துவிட்டு நினைத்துக்கொண் டாள், 'பூபேன் பையனைப் பற்றிக் கூறியதில் மிகையில்லை. பையன் ராஜா மாதிரி இருக்கிருன்!' என்று.

''பையனுக்கு ஜாதகம் கணிச்சாச்சா?'' என்று அவள் கேட்டாள்.

''சூரியகாந்த்கிட்டே ஜாதகம் கணிக்கக் கொடுத்திருக்கேன்'' என்று சொன்ன பூபேந்திரநாத், ''இவங்க உனக்குப் பெரியம்மா முறை. இவங்களுக்கு நமஸ்காரம் பண்ணு'' என்று சோனுவிடம் கூறினர்.

சோனு குனிந்து நமஸ்காரம் செய்ததும் எசமானி அம்மாள் அவன் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு அவனுடைய மோவாயைத் தொட்டுக் கொஞ்சிவிட்டு அவனுடைய கையில் ஒரு பளபளப்பான ரூபாயைக் கொடுத்தாள். அதை வாங்கிக்கொள்வதா கூடாதா என்று சோனுவுக்குத் தெரியவில்லை. அவன் தன் பெரியப்பாவைப் பார்த்தான். ரூபாயை எடுத்துக்கொள்ளும்படி அவனுக்கு ஜாடை காட்டினர் பெரியப்பா.

எசமானி அம்மாள் இப்போதுதான் முதல் தடவையாகச் சோனுவைப் பார்த்தாள். அதற்காகத்தான் அவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்தாள். அவளுடைய கையில் ஒரு ரூபாய். அவளுடைய புடைவைத் தலைப்பில் எவ்வளவோ ரூபாய்கள் முடிந்து வைத் திருந்தாள். கமலாவுக்காக ஒரு மைனுக் குஞ்சோ அல்லது குருவிக் குஞ்சோ வாங்கிக் கொடுக்க ரூபாயை எடுத்துக்கொண்டு வெளியே வந்த அவள் தற்செயலாகச் சோனுவைப் பார்த்துவிட்டாள். சுப சூசகந்தான். அப்படியே அந்த ரூபாயை அவன் கையில் கொடுத்து விட்டாள் எசமானி அம்மாள்.

கமலாவுக்கு உள்ளூற ஒரே எரிச்சல். அவள் பூபேந்திரநாத்தைப் பெரியப்பா உறவு வைத்து அழைப்பாள். பெரியப்பா அவளைப் பற்றி ஏன் ஒன்றுமே சொல்லவில்லை சோனுவுக்கு?

அவள் இந்த வீட்டின் இரண்டாவது பிள்ளையின் பெண். அவளும் அவளுடைய அக்கா அமலாவும் தங்கள் தந்தையோடு பூஜை சமயத்தில் கல்கத்தாவிலிருந்து வருவதுண்டு என்பதையெல்லாம் அவர் ஏன் சொல்லவில்லை? அவளுடைய அப்பா பெரிய சர்க்கார் வேலை பார்க்கிருர்; வெளிநாடுகளில் பல வருடங்கள் இருந்திருக்கிருர்.

அவளுடைய அம்மா சில சமயம் தன் ஊரைப் பற்றியெல்லாம் சொல்லுவாள். அங்கே தேம்ஸ் என்று ஒரு நதி இருக்கிறதாம்,

லுஜான் என்ற பெயருள்ள ஒரு கிராமம் இருக்கிறதாம். அங்கே செயிண்ட் பால் மாதாகோவில் இருக்கிறதாம். அதன் இரண்டு பக்கமும் வில்லோ மரங்கள். அதற்கு அருகிலுள்ள தோட்டத்தில் மாலை நேரத்தில் லிலாக் மலர்கள் மலருமாம். அம்மா சொல்லும் கதைகளை அமலாவும் கமலாவும் மெய்ம்மறந்து கேட்பார்கள்.

எதிரில் இருக்கிறனே, சோனு என்ற பையன், அவனுக்கு இந்தக் கதையெல்லாம் சொல்லவிட்டால், அவனுடன் ஓடி விளையாடா விட்டால் அவள் இவ்வளவு தூரம் பிரயாணம் செய்தது, இவ்வளவு பெரிய நதியைக் கடந்து வந்தது, இவ்வளவு பெரிய மாளிகையில் வசிப்பது எல்லாமே வீணான மாதிரிதான்.

அவள் அவனுக்குத் தன்னைப் பற்றிச் சொல்லவேண்டும், தன் அம்மா வேறு தேசத்துப் பெண் என்பதைச் சொல்லவேண்டும். தாத்தாவுக்கு, அப்பாவையும் அம்மாவையும் பிடிக்கவில்லை. அவர் அப்பாவுக்காகக் கல்கத்தாவில் ஒரு தனி வீடு கட்டிக் கொடுத்து விட்டார். அப்பா அவளுடைய அம்மாவைக் கூட்டிக்கொண்டு இந்த வீட்டுக்குள் நுழைய முடியாது. ஊஹும், இதையெல்லாம் அவள் சோனுவிடம் சொல்லக் கூடாது! அவளுடைய அக்கா சொல்லியிருக்கிறள், எல்லாரிடமும் எல்லா விஷயங்களையும் சொல்லக் கூடாது என்று. 'நான் உனக்கு எல்லாம் சொல்லமாட்டேன்! எனக்குப் பாட்டி மைனுக் குஞ்சு, குருவிக் குஞ்சு வாங்கித் தருவாள். நான் பொம்மை விளையாட்டு விளையாடுவேன். உன் முகத்தைப் பார்த்தால் எனக்குப் பொம்மை விளையாட்டு விளையாடத் தோன்றுகிறது.'

சோனு ரூபாயைத் தன் சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டான். கமலாவால் பொறுக்க முடியவில்லை. இப்போது சோனுவும் பூயியான் பெரியப்பாவும் போய்விடுவார்கள். சோனு தன் முழுப் பெயரைப் பாட்டியிடம் சொல்லியிருக்கிறன்: 'அதீஷ் தீபங்கர் பௌமிக்!' அப்பா, எவ்வளவு பெரிய பெயர்!

அவளுடைய அம்மாவின் தேசத்தில் ஜான், மாத்யூ என்றெல்லாம் பெயர் உண்டு. அவளுடைய மாமாக்களின் பெயர்களெல்லாம் அவளுக்கு நினைவில் இல்லை. சோனுவின் பெயரும் அந்த மாதிரி தான். அவள் பொறுமையிழந்து கேட்டாள், "பாட்டி, சோனு என்னை எப்படிக் கூப்பிடுவான்?"

கமலாவின் கேள்வியை அவளுடைய பாட்டி கவனிக்கவில்லை. அவளும் பூபேந்திரநாத்தும் ஏதோ குடும்ப விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவளுடைய தூரத்து உறவினர் ஒருவர் நீண்ட காலத்துக்குப் பிறகு பூஜை பார்க்க வந்திருக்கிறராம். தனியாக ஆள் போட்டு அவரை நன்றாகக் கவனித்துக் கொள்ளும்படி

சொன்னுள் எசமானி அம்மாள். சோஞ கமலாவின் பக்கம் திரும்பி உதட்டை மடித்துக்கொண்டு புன்சிரிப்புச் சிரித்தான். 'நீ இத்த னூண்டுப் பொண்ணு, உன்னை வேறே என்ன சொல்லிக் கூப்பிட ணும்? கமலான்னு கூப்பிடறேன்' என்று சொல்வது போல இருந்தது அவன் சிரிப்பு.

"பெரியப்பா! என்னைச் சோஞ, கமலா அத்தைன்னு கூப்பிட வேண்டாம்" என்று கூறிவிட்டுக் கர்வத்தோடு அவன் பக்கம் திரும்பிப் பார்த்தாள் கமலா.

இப்போதுதான் சோஞ கவனித்தான், கமலாவின் கண்கள் கறுப் பும் இல்லை, நல்ல நீலமும் இலலை; கறுப்பு அல்லது நீலத்துடன் மஞ்சள் கலந்த ஒரு நிறம் — அது என்ன நிறம் என்று புரிந்து கொள்வது கஷ்டம். அது பிரப்பம்பழ நிறமோ என்று அவனுக்குத் தோன்றியது. பழுத்த பிரப்பம்பழத்தின் தோலை உரித்துவிட்டால் சுளை இந்த நிறமாகத்தான் இருக்கும். கமலா தன்னை உற்றுப் பார்ப் பதைக் கவனித்தான் சோஞ. அவள் தன் கன்னங்களை உப்ப வைத்துக்கொண் டிருந்தாள். சோஞ அவளைக் கேலி செய்து பாட்டுப் பாட விரும்பினுன்—

கால் பூலா கோபிந்தோர் மா,
சால்தா தலா ஜாயிஓ நா!

ஆனுல் இந்தப் பிரம்மாண்டமான மாளிகையும் அதன் ஆடம்பர மும் அவனைப் பயப்படச் செய்தன. அவன் ஒன்றும் சொல்லவில்லை.

"ஆமா, சோஞ உன்னைக் கமலா அத்தைன்னு கூப்பிடட்டும். கமலா சோஞவைவிடப் பெரியவளாத்தானே இருப்பா, என்ன சொல்றீங்க அம்மா?" என்ருர் பூபேந்திரநாத்.

"ஆமா, ஏழெட்டு மாசம் பெரியவளா இருப்பா."

சோஞவின் உற்சாகம் சற்றுக் குறைந்துவிட்டது.

"அம்மா இல்லாமே தனியா இருப்பியா?" என்று எசமானி அம்மாள் அவனைக் கேட்டாள்.

"இருப்பேன்."

"பையனுலே இருக்க முடியல்லேன்ஞ அவனை இங்கே அனுப் பிடு" என்ருள் அவள் பூபேந்திரநாத்திடம்.

"சரி."

பூபேந்திரநாத் அந்தக் குடும்பத்துக்கு நெருங்கிய உறவினர் போல் வேண்டியவர். ஆகவே அவர் வீட்டுப் பையன்கள் அக் குடும்பத்துக்கு வேண்டியவர்கள்தாம். லால்ட்டுவுக்கும் பல்ட்டு வுக்கும் சமவயதில் அந்த அம்மாளுக்கு இரண்டு பேரப் பிள்ளைகள் இருக்கிருர்கள். ஒருவன் பெரிய பிள்ளையின் பிள்ளை, மற்றவன் சிறிய பிள்ளையின் மைத்துனன். லால்ட்டுவும் பல்ட்டுவும் வந்துவிட்டால்

எல்லாச் சிறுவர்களும் சேர்ந்துகொண்டு வீட்டுக்கு முன்னுள்ள புல்வெளியில் அல்லது குளத்தங்கரையில் பாட்மிண்டன் விளையாட ஆரம்பித்துவிடுவார்கள்.

அந்த மாளிகையில் பணி புரியும் மற்றவர்களுடைய பிள்ளைகள் அவர்களுக்குச் சமவயதுள்ளவர்களாக இல்லாவிட்டாலும் இந்தப் பூஜைத் திருநாளில் எல்லாருமாகச் சேர்ந்துகொண்டு கொட்ட மடிப்பார்கள். அவர்களுடைய உற்சாகம் கரை புரண்டோடும். நாள் முழுதும் வாத்தியங்கள் ஒலிக்கும். மத்தளமும், தம்பட்டமும், சேகண்டியும் ஒலித்துக்கொண்டே யிருக்கும். மத்தியதரக் குடும் பங்களில் அஷ்டமியன்று ஆட்டுப் பலி நடக்கும். சீதலக்ஷா நதியின் இருகரைகளிலும் ஒரே கோலாகலம். நவமியன்று எருமைப் பலி.

விடியற்காலை முதலே கமலா பிருந்தாவனியுடன் தோட்டத்தில் பூப்பறிக்கப் போய்விடுவாள். தேனீ போல் பூவுக்குப் பூ தாவுவாள். கல்கத்தாவாசியான கமலா இந்தச் சில தினங்களுக்குத் தன்னிச்சை யாகப் பறந்து திரியும் பறவையாகிவிடுவாள்.

அவள் சோனுவின் கையைப் பிடித்துக்கொண்டு போய் அவனுக்கு அந்த வீட்டின் எல்லாப் பகுதிகளையும் சுற்றிக் காண்பித்தாள்; ஹோஹோவென்று சிரித்தாள். சிரிக்கும்போது அந்தச் சிரிப்பொலி ஹாலில் எப்படி எதிரொலிக்கிறது என்று காது கொடுத்துக் கேட்டாள்.

அவன் கையைப் பிடித்துக்கொண்டு ஓடினாள். பல அங்கணங் கள் கொண்ட நீளமான வராந்தா. ஓடும்போது சட்டைப் பையைக் கையால் அழுத்திக்கொண்டான் சோனு. அதில் ரூபாய் இருக்கிறதே! ஓடிக்கொண்டே அவர்கள் பின்பக்கம் போய்விட்டார்கள். அங்கே பெரிய பெரிய மரங்கள். எங்கும் நிசப்தம். வரிசை வரிசையாகப் பாக்கு மரங்கள். அவர்கள் அங்கெல்லாம் சுற்றிவிட்டுத் திரும்பி வந்தபோது, "அதோ பாரு, எங்க அக்கா நிக்கறா! அங்கே வரியா?" என்று கேட்டாள் கமலா.

சோனு மௌனமாகத் தலையசைத்தான். பிறகு அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு நடந்தான். இதுவரை அவன் அவளைக் கமலா என்றோ, கமலா அத்தை என்றோ கூப்பிடவில்லை.

கமலாவின் அக்கா வராந்தாவின் கைப்பிடிச் சுவரின் மேல் சாய்ந்துகொண்டு அவர்களைப் பார்த்தாள். அவளுடைய பெயர் சோனுவுக்குத் தெரியும். அமலா, முழங்கால்வரை வரும்படி நீள ஃபிராக் அணிந்திருக்கிறாள். கழுத்து வரைக்கும் வெட்டப்பட்டிருந் தது தலைமயிர். தலைமயிர் பொன்னிறம். அவளுடைய கண்களும் நல்ல நீலம் என்பதை அவள் அருகில் வந்த பிறகு சோனு கவனித் தான்.

"இவன்தான் சோனு" என்றாள் கமலா.

அப்போதுதான் தூங்கியெழுந்தவள் போல் கண்களை மெதுவாக உயர்த்தி அவனைப் பார்த்தாள் அமலா.

"எவ்வளவு அழகான பெயர்!" என்று கமலா சொன்னாள். கமலா சொன்னது தன் காதில் விழாதது போல் அமலா, "உன் பேரு என்ன?" என்று அவனைக் கேட்டாள்.

அவள் பேசும் முறை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவனும் அவளைப் போலவே பேச முயற்சி செய்தான்: "என் பெயர் ஸ்ரீ அதீஷ் தீபங்கர் பௌமிக்."

"நீ என்னை எப்படிக் கூப்பிடுவே?"

"சோனு, இவ உனக்கு அத்தை முறை. அமலா அத்தைன்னு கூப்பிடு!" என்றாள் கமலா.

சோனு நிதானமாக, வார்த்தைகளை அவர்களைப் போல் சரியாக உச்சரித்துச் சொன்னான். "நீ கமலா அத்தை, இது அமலா அத்தை."

கமலாவுக்கு ரொம்பச் சந்தோஷம். அமலா கைப்பிடிச்சுவரின் மேல் சாய்ந்துகொண்டு எதையோ பார்த்தாள்.

"கமலா, உனக்குக் குதிரை சவாரி பண்ணத் தெரியுமா?" என்று சோனு கேட்டான்.

"நீ என்னைப் பேர் சொல்லிக் கூப்பிடறியா! நான் பெரியப்பா கிட்டே சொல்லிடுவேன், ஆமா!"

சோனுவுக்குக் கோபம் வந்துவிட்டது. "நான் பெரியப்பாகிட்டே போறேன்" என்றான் அவன்.

கமலா அவனைச் சமாதானப்படுத்தினாள். "எனக்குக் குதிரை மேலே ஏறத் தெரியுமே!" பிறகு அவனைத் தன்னருகில் இழுத்துக்கொண்டு சொன்னாள், "பட்டிக்காட்டான் மாதிரி வார்த்தைகளை உச்சரிக்காதே!"

அவனுக்குத் தன் பைத்தியக்காரப் பெரியப்பாவைப் பற்றி அவளிடம் சொல்லத் தோன்றியது; இருந்தாலும் சொல்லவில்லை. "மேல் மாடியிலே பெரிய பெரிய பொம்மையெல்லாம் இருக்கு" என்றாள் அவள்.

"ஆத்தங்கரையிலே நாணல் காட்டிலே பூப் பூத்தா இந்தப் பொம்மையெல்லாம் பறக்கப் பார்க்கும். அதுகளோட துணிகளெல்லாம் நழுவிப் போயிடும். அதுகள் ஆத்தங்கரைக்குப் பறந்து போகத் துடிக்கும். அந்தப் பொம்மையெல்லாம் தேவதையாக்கும்" என்றாள் கமலா.

தேவதைகளைப் பற்றிய பேச்சைக் கேட்டதும் அமலா அப்போது தான் தூங்கி விழித்தவளைப் போல் சோனுவைப் பார்த்தாள், இப்போதுதான் அவனை முதல் தடவையாகப் பார்ப்பது போல. அவனுடைய தலைமயிருக்குள் தன் கையை விட்டு அளைந்தாள்.

தான் முன்பு கேட்டதை மறந்துவிட்டவள் போல, "நீ யார் வீட்டுப் பையன்?" என்று கேட்டாள்.

"உனக்குத் தெரியாதா, அமலா? இப்பத்தானே சொன்னேன்! இவன்தான் சோனு! சந்திரநாத் பெரியப்பாவோட பையன்."

"அப்படியா! அப்படீன்னு நம்ம ஆள்தான்" என்று சொல்லிக் கொண்டே அவள் அவனைத் தன் மார்புடன் சேர்த்துக் கட்டிக் கொள்ள வந்தாள். சோனு சற்று நகர்ந்துகொண்டான். தோட்டத்தில் மல்லிகைப் பூ மலர்ந்தால் ஒரு நல்ல மணம் வருமே அது போன்ற ஓர் இனிய வாசனை அமலாவின் உடம்பிலிருந்து வந்தது. ஆகாயத்தையே தோற்கடிக்கும்படி அவ்வளவு நீலம் அவளுடைய கண்கள். அத்தக் கண்களை ஒரு தடவை தொட்டுப் பார்க்கத் தோன்றியது சோனுவுக்கு. ரோஜாவின் இதழ்கள் உதிர்ந்து விழுந்தபின் அதன் காம்பு பரிதாபமாகக் காட்சியளிக்குமே, அது போலத்தான் தோன்றினாள் அமலா. அவள் கொட்டாவி விட்டாள். "நீ கிட்டே வா, சோனு" என்று சொல்லிக்கொண்டே அவனைக் கட்டிக்கொள்ள முற்பட்டாள்.

"நான் பெரியப்பாகிட்டே போகப் போறேன்" என்றான் சோனு.

"நீ ஏன் அக்காகிட்டே பயப்படறே?"

அமலாவின் முகம் உற்சாகத்தால் மலர்ந்தது. சோனுவின் அழகான, ஆகாயம் போல் பிரகாசமான, முகம் அவளுக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. "கிட்டே வாயேன். ஏன் பயப்படறே? கமலா மாதிரிதான் நானும். நீ என்னை அமலா அத்தைன்னு கூப்பிடு, வா!" என்றாள் அவள்.

"வா! பயம் என்ன?" என்றாள் கமலா.

அவர்கள் மாடிப்படிகளின் வழியே இறங்கும்போது, "யாரோட புள்ளே இது?" என்று அவர்களுடைய பெரியம்மா கேட்டாள்.

"இது சோனு, சந்திரநாத் பெரியப்பாவோட பையன்."

"அட! இது யாரு?" என்று வேலைக்காரிகள் கேட்டார்கள்.

கமலா கர்வத்துடன் பதில் சொன்னாள், "உனக்குத் தெரியாது? இவன்தான் சந்திரநாத் பெரியப்பாவோட பையன்."

"இந்தப் பையன் பேசவேமாட்டேங்கறானே! இவன் என்ன பையன்டீ!" என்று சிரித்தாள் அமலா.

"நான் பெரியப்பாகிட்டே போறேன்."

கமலா தான் சோனுவை விட வயதில் மிகப் பெரியவள் போல் பாவனை செய்துகொண்டு, "சோனு! நீ சமத்து இல்லையா? வா, என் கிட்டே. அக்கா, ஏண்டி நீ அவனைப் பயமுறுத்தறே?" என்று அவனைக் கொஞ்சினாள்.

"நான் எங்கே பயமுறுத்தினேன்? சோனு, இங்கே வாப்பா!"

கூட்டத்தில் நுழைந்து அவர்கள் பாட்டியின் அறைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அதுவும் ஹால் மாதிரி விசாலமாக இருந்தது. பெரிய பெரிய மரக்கட்டில்கள் போடப்பட்டிருந்தன. அங்கே வராந்தாவில் ஒரு கூண்டில் ஒரு மைனு இருந்தது. போகும்போது அமலா கூண்டை ஆட்டிவிட்டுப் போனுள். கமலா அதனிடம் போய், "இவன் பெயர் சோனு" என்ருள். மைனு கூண்டின் நடுக் கம்பியிலிருந்து கீழே இறங்கி, "கமல், கமல், சோனு, சோனு!" என்று கூவியது. பறவை தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதைக் கண்டு ஆச்சரியப்பட்டான் சோனு. அவனைப் பார்த்துவிட்டுக் கூண்டிலிருந்து வெளியே வர முயற்சி செய்தது மைனு.

அந்தப் பெரிய அறைக்குள் நுழைந்ததும் அமலா கட்டிலின் மேல தாவி ஏறினுள். அலமாரியிலிருந்து ஒரு தோல் பெட்டியை இறக்கினுள். கமலா அதைத் திறந்தாள். சோனுவுக்கு எதையோ காண்பிப்பதற்காக அவர்கள் அந்தப் பெட்டியிலிருந்த சாமான்களை வெளியே எடுததார்கள். அமலாவுக்குப் பதினென்று பன்னிரண்டு வயது இருக்கும். கமலாவுக்கு வயது ஒன்பது பத்திருக்கும். இதற்குள் இவர்கள் இருவரிடையே சோனுவுக்கு மகிழ்ச்சியளிப்பதில் எவ்வளவு போட்டி! "இதோ பாரு சோனு கண்ணுடிக்கல் மாலை, கிளிஞ்சல், சின்னச் சின்னக் கூழாங்கல்!"

"உனக்கு என்ன வேணும்?" என்று கமலா கேட்டாள்.

"எனக்கு ஒண்ணும் வேண்டாம்."

"இதோ பாரு எவ்வளவு அழகான படம்! நீ இதை எடுத்துக் கறியா?" என்ருள் அமலா.

"ஊஹும், எனக்கு வேண்டாம்."

அமலா ஆசை காட்டினுள்; "இதோ பாரு மயிலிறகு! இதனுலே பேனு பண்ணி எழுதலாம்."

"கமல்! நான் பெரியப்பாகிட்டே போறேன்."

"ஐயையோ! என்னை இவன் கமல்னு பேர் சொல்லிக் கூப்பிட ருனே! கமலா அத்தைன்னு கூப்பிடல்லியே!"

அமலாவுக்குச் சிரிப்பு வந்தது. 'இத்துனூண்டுப் பொண்ணுக்கு இப்பவே எவ்வளவு பெரிய மனுஷத்தனம்!' அவள் இப்போது தன்னிடமிருந்த கடைசி அஸ்திரத்தைப் பிரயோகித்தாள்: "சோனு நீ இந்த பயாஸ்கோப்பை எடுத்துக்கோ. உள்ளே பாரு, எவ்வளவு ஜோரான படமெல்லாம் தெரியறது! இதோ பாரு, மாதுள மரத் துக்குக் கீழே ஒரு பொண்ணு கொண்டையிலே பூவச்சுண்டு நிக்கரு! இதோ பாரு, ரெண்டு சிப்பாய்கள் தொப்பி வச்சுண்டு நிக்கருங்க! ரெண்டு குரங்கு ஒண்ணையொண்ணு கட்டிக்கிண்டு ஆடறது!"

குரங்குகள் ஆடுவதைப் பார்த்துவிட்டுச் சோணு சிரித்துவிட்டான். இப்போது அவனுடைய சங்கோசம் சற்றுக் குறைந்துவிட்டது.

அமலா வேறொரு படத்தை பயாஸ்கோப்பில் வைத்தாள். சோணுவுக்கு ஓர் அருவி தெரிந்தது. அருகில் ஒரு வண்ணத்துப் பூச்சி; புதருக்குப் பின்னால் ஒரு பெரிய புலி. ஆச்சரியத்தால் கண்கள் விரிய சோணு கூவினான், "அமலா, இதோ பாரு, புலி!"

"அட, போக்கிரி! நீ என்னைக்கூடப் பேர் சொல்லிக் கூப்பிடறயே!" என்று சொல்லி உற்சாக மிகுதியில் அவனுடைய கன்னத்துடன் தன் கன்னத்தைப் பொருத்திக்கொண்டாள் அமலா.

அமலாவும் கமலாவும் சோணுவைக் கூட்டிக்கொண்டு மொட்டை மாடிக்குப் போனார்கள். இருள் கொஞ்சங் கொஞ்சமாகச் சீதலக்ஷா ஆற்றின் மேல் படர்ந்துகொண் டிருந்தது. டைனமோவின் ஒலி மிதந்து வந்தது. நாற்புறமும் ஒளிவெள்ளம். இந்த இடத்தில் எல்லாருக்குமே உற்சாகம் கரைபுரண்டு ஓடுவதுபோல் இருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஒரே வெளிச்சம். மண்ணும், மரங்களும், பூக்களும், பறவைகளும் ஒளிவெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தன. அது உயரமான மாடி. அவர்கள் அதில் சுற்றித் திரிந்தார்கள். கைப்பிடிச் சுவரின் மேல் சாய்ந்துகொண்டு கீழே பார்த்தார்கள். கீழே குளத்து நீரில் வெளிச்சம் பிரதிபலித்தது. தூரத்தில் சீதலக்ஷா ஆறு, அதன் கரையில் மணல், அதற்கப்பால் யானைலாயம். அங்கே யானையைக் கட்டிவைத்திருப்பார்கள். மாடியிலிருந்தே இவற்றை யெல்லாம் பார்க்க முயற்சி செய்தார்கள் அவர்கள்.

அப்போது முதல் அவனுக்கு அமலா, கமலாவுடன் நெருங்கிய பழக்கம் ஏற்பட்டுவிட்டது. அவன் அவர்களுடன் அந்த வீடு முழுவதும் சுற்றித் திரியத் தொடங்கினான். அமலா, கமலா இவர்களுடைய உடலிலிருந்து ஓர் இதமான வாசனை வந்தது. அது அவனுடைய உள்ளத்தில் ஓர் இன்பக் கிளர்ச்சியை உண்டாக்கியது. அமலாவும் கமலாவும் அவனுக்கு இருபுறமும் நின்றுகொண்டு, எந்தப் பக்கம் போனால் வயல்கள், மைதானம் எல்லாம் வரும், மண்டபத்தின் மாடிப்படியில் வெள்ளைச் சலவைக் கல்லால் செய்த மாடு இருக்கும், அதன் கழுத்தில் பூ மாலை இருக்கும் என்றெல்லாம் அவனுக்கு விவரித்துக்கொண் டிருந்தார்கள்.

அந்த இரு பெண்களுக்கும் நடுவில் அவன் நின்றிருந்தபோது அவர்கள் அவனைப் பெரியவனாக ஆகச் சொல்வது போலத் தோன்றியது. அவன் தன் அம்மாவை விட்டுவிட்டு வெகுதூரம் வந்துவிட்டான். இப்போது அவனுக்குப் பயமாக இல்லை. அவன் பெரியவனாகிக்கொண்டு வருகிறான்.

முன்பு திருவிழாவில் பொரி தின்பதிலும், குதிரைப் பந்தய மைதானத்தில் காலுஷேக்கின் குதிரை ஓடுவதைப் பார்ப்பதிலும் இன்பங் கண்ட அவன், அதேபோல் இப்போது நட்சத்திரங்களைப் பார்த்து வானத்தின் அழகை அநுபவித்தான். திடீரென்று அவனுக்குத் தன் தாயின் நினைவு வந்தது. அப்போது அந்தப் பெண்களின் பிரியம் அவனைச் சலனத்துக்குள்ளாக்கவில்லை. அவன் மொட்டை மாடியின் ஓர் ஓரத்தில் ஏதோ சோகத்தில் ஆழ்ந்தவனாக, மௌனமாக நின்றான். அமலாவும் கமலாவும் அவனைக் கொஞ்ச முயன்றபோது அவனுக்கு அழுகையே வந்துவிட்டது. அவனுடைய உயிர்ப் பறவை தாய்க்காக ஏங்கித் தவித்தது.

பயங்கர இருள். மரங்களில் இலைகள் அசையவில்லை. கிராமமே இருளில் மூழ்கிவிட்டது. உலகத்தில் யாருமே விழித்திருக்கவில்லை போலும்! ஆழ்ந்த இரவில், இருளில் அந்த மர்மப் படகு கரைக்கு வந்தது. சில ஆட்கள் யாரையோ கட்டிக்கொண்டு வந்து படகின் மேல் ஏற்றிக்கொண்டு இருளில் மறைந்து போய்விட்டார்கள்.

"சசீ! சசீ!" என்று மகேந்திரநாத் கூப்பிட்டார்.

பதில் இல்லை. அவர் மறுபடி கூப்பிட்டார், "அலிமத்தி! ஏ அலிமத்தி!"

அவருடைய கூப்பாட்டுக்குப் பதில் இல்லை. "கிழக்குப் பக்கத்து வீட்டிலிருந்து ஏதோ சத்தம் கேட்கிறது. எல்லாரும் எழுந்திருங்க!"

தீனபந்துவின் மனைவி ஏதோ கூவிக்கொண்டே ஓடிவந்தாள். தீனபந்து வாசலுக்கு வந்து, "எல்லாரும் எழுந்திருங்க! ஆபத்து வந்திடுச்சு!" என்று கத்தினார்.

சசீந்திரநாத் விழித்துக்கொண்டு ஓர் ஈட்டியைக் கையில் எடுத்துக் கொண்டார். "எசமான், நானும் பாக்கு மரத்தடி ஒண்ணு எடுத்துக் கிட்டிருக்கேன்" என்றான் அலிமத்து.

புஜங்கன், கவிராஜ், காலோபாஹாட், சந்தாவின் இரண்டு பையன் கள், கௌர் சர்க்கார் எல்லாரும் விரைவில் வந்து சேர்ந்தார்கள்.

"என்ன ஆச்சு?"

"என்ன ஆறது! நம்ம மானம், கௌரவம் எல்லாம் போயிடுத்து."

எல்லாரும் இருட்டிலேயே வெளியே கிளம்பினார்கள். ஆகாயத் தில் மேகங்கள் கவிந்திருந்தன. நட்சத்திரங்களே கண்ணுக்குத்

தெரியவில்லை. நயாபாடாவுக்குச் செய்தி போயிற்று. தோடார் பாகிலிருந்து மன்சூர், ஆபேத் அலி, ஹாஜி சாயபுவின் மூன்று பிள்ளைகள் எல்லாரும் ஓடிவந்தார்கள். "எந்தப் பக்கம் போகலாம்?" என்று அவர்கள் கேட்டார்கள்.

"ஆத்துப் பக்கம் போங்க. அந்தப் படகு எங்கேயாவது போய்க் கிட்டிருக்கான்னு பாருங்க" என்றார் சசீந்திரநாத்.

"ஜய், ஜய்மாதா! மங்கள சண்டிக்கு ஜய்! அம்மா நாங்கள் உன் குழந்தைகள்! உன் பாதுகாப்பிலே இருக்கறவங்களை யார் என்ன செய்ய முடியும்? அம்மா, அபலைக்கு நீதான் கதி! மாலதி உன் பொறுப்பு."

சசீந்திரநாத் படகில் உட்கார்ந்ததும், "ஜப்பர் எங்கே? அவன் ஊரிலேதானே இருந்தான்?" என்று கேட்டார்.

இப்போது ஆபேத் அலி 'ஹோ ஹோ'வென்று அழத் தொடங்கினான். "என் மானம் போச்சு, எசமான்! என் புள்ளையோட குத்தத்துக்கு நான் என்ன பரிகாரம் பண்ணுவேன்?"

ஆபேத் அலியின் ஓலத்தைக் கேட்டு எல்லாரும் திகைத்து விட்டார்கள்.

சிலர் போலிஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார்கள், சபிருத்தீன் சாயபுவுக்குத் தகவல் தெரிவிக்க.

"இது ஜப்பரோட வேலைதான்! படகை வேகமாக ஓட்டுங்க" என்றார் சசீந்திரநாத்.

"படகைச் செலுத்துங்க! தண்ணீரிலே படகைச் செலுத்துங்க!"

மக்கள் இருளில் கூவினார்கள். "ஜய் ஜய்பாலா கந்தேஸ்வரி! அம்மா பாடேஸ்வரி! இந்த நாட்டிலே தண்ணியிலேயும் துக்கம்! நிலத்திலேயும் துக்கம்! கடைசியிலே எங்க முயற்சி பலிக்குமோ, பலிக்காதோ யாருக்கு தெரியும்?"

"நீங்க மூணு பாகமாப் பிரிஞ்சுக்கங்க. ஒரு கூட்டம் பாவுசா ஏரிக்குப் போகட்டும். இன்னொண்ணு ஸோனலி பாலி ஆத்திலே போய்த் தேடட்டும். மேற்குப் பக்கம் போறவங்க படகோட பாயை விரிச்சுக்கிண்டு போங்க" என்று சசீந்திரநாத் கூறினார்.

"இப்போதே படகைக் கிளப்பாவிட்டால் கொள்ளைக்காரர்களைக் கண்டுபிடிப்பது கஷ்டம். ஆத்துப் படுகையிலே அங்கே வெளிச்சம் தெரியறதே, அந்தப் பக்கம் நான் போறேன், நரேன்தாஸும் என் கூட வரட்டும்" என்றார் சசீந்திரநாத்.

எல்லாரும் படகின் மேல் ஏறிக்கொண்டு துடுப்பைத் தலைக்குமேல் தூக்கி வைத்துக்கொண்டு கூவினார்கள், "நீர்வளமும் நிலவளமும் நிறைந்த நாடல்லவா உன் தேசம்! உனக்கு எங்களின் மேல்

என்னம்மா கோபம்! உன்னை அண்டின நாங்க கஷ்டப்படலாமா. அம்மா! நீதாம்மா எங்களைக் காப்பாத்தணும்!" என்றார் மேலும்.

"இன்னும் யாரு தண்ணியிலே போகப் போறாங்க?"

சாலமரக் காட்டில் ஒரே இருட்டு; வெளிச்சம் இல்லை. மின்மினி கூடப் பறக்கவில்லை. இருண்ட இரவில் பாம்பும் புலியும் யுத்தம் செய்யும். அந்தக் காட்டுக்குள்ளே சசீந்திரநாத் படகுடன் நுழைந்தார். கிராமத்துக்குள் ஒரே களேபரம். வீட்டுக்கு வீடு, ஊருக்கு ஊர் செய்தி பரவி வெவ்வேறு இடங்களிலிருந்து படகுகள் விரைந்து வந்தன. டேபாவுடைய இரண்டு சகோதரர்களும் ஓடிவந்தார்கள். பெண்கள் பீதியடைந்து ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள், "காலம் என்னமாக் கெட்டுப்போச்சு! ஊரே நாசமாப் போச்சு. இதை விட வேறே என்ன வேணும்?"

ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. கிலி பிடித்தவர்களாக விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் அவர்கள்.

படகின் கீழ்முனையில் சசீந்திரநாத், பெரிய மியான், மன்சூர், நரேன் தாஸ் எல்லாரும் உட்கார்ந்திருந்தார்கள். மேல்முனையில் அலிமத்தி, கௌர் சர்க்கார், பிரதாப் சந்தாவின் இரண்டு பிள்ளைகள். எல்லார் கையிலும் துடுப்பு. தலைக்கு மேலே ஆகாயம். மேகங்கள் சற்றுக் குறைந்துகொண்டு வந்தன. காற்று விட்டுவிட்டு வீசியது. எல்லாத் துடுப்புகளும் ஒன்றாக எழும்பின. இந்த வேகத்தில் அவர்கள் ஒரு மணிநேரத்தில் பத்துப் பதினைந்து கோச தூரம் பிரயாணம் செய்ய முடியும். சுக்கானுக்கு முன்னால் உடம்பை விறைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான் மன்சூர்.

இப்போது நேர்ந்துள்ள அவமானம் நரேன்தாஸுக்கு மட்டும் ஏற்பட்டதல்ல. இந்த ஊர் முழுவதுக்கும், சமூகம் முழுவதுக்கும் நேர்ந்த அவமானம். கோபத்தால் முகமும் கண்களும் சிவக்க உரக்கக் கூவினான் மன்சூர்: "ஜப்பர், நீ எல்லார் மூஞ்சியிலேயும் கரியைப் பூசிட்டே!"

அவர்கள் படுகைக்கு வந்து சேர்ந்தார்கள். 'படகு எங்கே?' படகு இருந்த அடையாளமே இல்லை அங்கே. நாற்புறமும் தண்ணீர்ப் பரப்பு. அவர்கள் துடுப்புகளைத் தண்ணீரிலிருந்து தூக்கி விட்டு மௌனமாக அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். ஊஹூம். படகைக் காணோம்! தணணிருக்கடியில் எங்கோ மீன்கள் நடமாடும் அரவம். வயலில் வாத்து ஒன்றின் ஒலி.

"படகைத் தெற்குப் பக்கம் திருப்புங்க" என்றார் சசீந்திரநாத்.

எதிரில் சாலமரக் காடு. தலைக்கு மேலே சாலமரக் கிளைகளால் இருள் கவிந்திருந்தது. கீழே தண்ணீர் சில இடங்களில் மார்பு மட்ட ஆழம்; சில இடங்களில் முழங்கால் மட்டம். புதரும்

காடும் தண்ணீரில் பிரதிபலித்து அடியிலும் ஒரு காட்டைத் தோற்று வித்தன. மரங்களின் இடைவெளி வழியே படகு சென்றது. முதலில் அவர்கள் கண்ணுக்கு ஒன்றுமே தெரியவில்லை. தண்ணீருக்குக் கீழே மின்மினியின் வெளிச்சம். ஆயிரக்கணக்கான, லட்சக்கணக் கான மின்மினிகள் உருவாக்கிய ஒளியும் இருளும் கலந்த உலகம். இந்த உலகத்தில் அவர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. "நாம் இந்த இருட்டிலே யாரைத் தேடறோம்?" என்று நரேன்தாஸ் கேட்டான்.

ஏதோ பறவை கூவியது, எல்லாரும் நிசப்தமாக இருந்து கொண்டு எதையோ உற்றுக் கேட்டார்கள், ஒட்டுக் கேட்பது போல். இந்தப் பக்கத்தில் ஓர் ஊரும் இல்லை, வெகு தூரம் போனுல் சுந்தர்ப்பூர் கிராமம். அவர்கள் காட்டுக்குள்ளே போகப் போக நிசப்தமும் அதிகமாகிக்கொண்டே வந்தது. இலைகளின் சலசலப்புக் கூட இல்லை. கீழே தண்ணீர் இருப்பதால் இலை விழும்போது கூட அரவம் இல்லை. அடர்ந்த காட்டில் பிரம்புப் புதர்கள் பரவிக் கிடந்தன. தலைக்கு மேலே பல ரகக் கொடிகள் தொங்கின. இந்தப் பயங்கர இருட்டில் ஏதாவது வெளிச்சம் தெரிந்தால்...! ஏதாவது படகு செல் லும் சப்தம் கேட்டால்...!

வேகமாக ஓடித் தப்பக்கூடிய வழி அல்ல இது. இரவைக் கழிக்கத் தான் முடியும் இங்கே. காட்டைத் தாண்டிவிட்டால் மேக்ன நதி. அங்கே போய்ச் சேர்ந்ததும் படகின் பாயை விரித்துவிட்டால் சுகமான பயணந்தான். ஆற்றில் ஓடும் படகை யாரால் கண்டு பிடிக்க முடியும்?

அவர்கள் சாலமரக் காடு முழுவதும் மாலதியைச் சல்லடை போட்டுச் சலித்துத் தேடினர்கள். தங்களுக்குள் மிக மெல்லிய குரலில் பேசிக்கொண்டார்கள்.

"இல்லை, படகும் இல்லை; அந்தப் படகிலிருந்து முன்பு கேட்டுக் கொண்டிருந்த குனயி பீபியின் பாட்டும் இல்லை. மாலதி போன்ற தைரியம் நிறைந்த யுவதியைப் பலவந்தமாகத் தூக்கிச் சென்ற போக்கிரிகள் யார்?"

சசீந்திரநாத் சோர்ந்துபோய், "படகை நதிப்பக்கம் திருப்புங்க. கொள்ளைக்காரங்களோட படகு எங்கேயோ அந்தர்த்தானமாயி டுத்து?" என்று கூறினர்.

"ஜப்பர், பொண்ணு என்ன சொல்ருரு?"

"ஒண்ணும் சொல்லல்லே, மியான்."

''ஒண்ணும் சொல்லலேன்னு, வசப்படுத்தறது எப்படி?''
''கொஞ்சம் பொறுத்துக்குங்க, மியான்.''
''விடிய இன்னும் ரொம்ப நேரம் இல்லே, ஜப்பர்.''

ஜப்பர் படகின் மேல்தட்டில் ஏறினன். இதற்குள் அவர்கள் சாலமரக் காட்டைக் கடந்து ஆற்றில் இறங்கிவிட்டார்கள். மேக்னு வில் அலைகள் பொங்கிக்கொண டிருந்தன.

படகைச் செலுத்துவதற்குக் குறிப்பிட்ட பாதை ஒன்றும் இல்லை. இப்போது செய்ய வேண்டிய காரியம் தண்ணீரிலும் காட்டிலும் ஒளிந்துகொண் டிருப்பது, பெண்ணை வசப்படுத்துவது – இவைதான்.

இந்துப் பெண், மாலதியை வசப்படுத்திப் பட்டணத்துக்கு அழைத்துப் போகவேண்டும். காத்திருக்கத் தயாராயில்லை மியான் சாயபு. பொறுமை இழந்துவிட்டால் அவர் மாலதியைப் பலவந்தப் படுத்தவும் தயங்கமாட்டார். ஆனல் படகு அறைக்குள் போக யாரால், முடியும்? மாலதி இப்போது பாம்பு, புலிபோல் பயங்கரமாக இருக்கிருள். யாராவது உள்ளே நுழைந்தால் கடிக்க ஓடிவருகிருள். சில சமயம் விம்மினுள்; சில சமயம் பைத்தியம் போலக் கூக்குர லிட்டாள். பயத்தால் அவளுடைய உதட்டோரங்களில் எச்சில் ஊறி வந்திருந்தது. அவளுடைய தொண்டை மரமாக இறுகிக் கிடந்தது. அவளுடைய கைகால்கள் அழுத்தமாகக் கட்டப்பட் டிருந்தன. அவள் சிலசமயம் உருண்டாள்; சிலசமயம் அசையாமல் மௌனமாகப் படுத்துக் கிடந்தாள்.

படகில் நான்கு படகோட்டிகள், ஜப்பர், மியான் சாயபு, அவரு டைய இரண்டு சீடர்கள். ஜப்பர் நடுநடுவே உள்ளே போய் மாலதி யைச் சமாதானப்படுத்த முயற்சி செய்தான். கடைசியில் மியான் சாயபு அவளைத் தன் பீபியாக்கிக் கொண்டு விடுவார்! இன்னும் சில நாட்கள் படகில் சுற்றிக் காற்று வாங்குவது, பிறகு ஊருக்குத் திரும்ப வேண்டியது...

மழைக்காலம் வந்துவிட்டால் மனத்தை அடக்க முடிவதில்லை. மனம் அடங்காமல் குதித்தோடுகிறது. இப்படிப்பட்ட உடம்பைக் காயப் போட்டுச் சாம்பலாக்கலாமா? ஜப்பர் காசுக்கு ஆசைப்பட்டு ஏதேதோ சொல்லி அவளை மயக்கப் பார்த்தான். ''மாலதி அக்கா! எழுந்திருங்க, பேசுங்க, சாப்பிடுங்க! ஆகாயத்தைப் பாருங்க, எவ்வளவு பெரிய நதியிலே போயிக்கிட்டிருக்கோம் பாருங்க! உங்க உடம்பிலே எவ்வளவு ஆசை ஜ்வாலையா எரிஞ்சுக்கிட்டிருக்கு! அதைத் தணிச்சுக்குங்க இப்போ'' என்று சொல்லி அவளுடைய கட்டுக்களை அவிழ்த்தான். கட்டவிழ்த்துவிட்டால் மாலதி சமாதான மாகி விடுவாள் என்ற நம்பிக்கை அவனுக்கு.

படகின் ஒரு முனையில் மூன்று பேர், கட்டம் போட்ட லுங்கி, கறுப்புப் பனியனுடன் நின்றனர்.

காசுக்கு ஆசைப்பட்டு ஜப்பர் மாலதியைக் கரீம் ஷேக்கின் படகில் ஏற்றி விட்டுவிட்டான். இரண்டு தறிகள் வாங்கித் தொழில் செய்ய ஆசை அவனுக்கு. கரீம் ஷேக் திருவிழாவில் மாலதியைப் பார்த்து அவளுடைய அழகில் சொக்கிப் போய்விட்டான். அந்தச் சமயத்தில்தான் திருவிழாவில் கலகம் துவங்கிவிட்டது. கரீம் ஷேக் தன் ஆட்களுடன் மாலதியைத் தேடினான். ஆனால் அவளைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அதுமுதல் மாலதி நினைவுதான் அவனுக்கு. நாராயண்கஞ்சிலிருந்த அவனுடைய கடைக்கு ஜப்பர் நூல் வாங்க வரும்போதெல்லாம் கரீம் ஷேக் ஜப்பரைக் கேட்டான், "என்ன. உன் அக்கா என்ன சொல்ரு?" என்று.

எப்படியாவது அவனிடமிருந்து பணத்தைக் கறக்கும் நோக்கத்துடன் ஜப்பர், "எப்பவும் உங்களைப் பத்தித்தான் பேசரு மாலதி அக்கா" என்பான்.

"என்னைப் பத்தியா? அவளுக்கு என்னைத் தெரியுமா?"

"உங்களைத் தெரியாமேயா? மாலதி அக்கா என்னைக் கேட்டா, ஜப்பர், அன்னிக்குத் திருவிழாவிலே உன்கூட ஒரு அழகான ஆளு நின்னுக்கிட்டு இருந்தாரே, அவர் யாருடான்னு."

"நீ என்ன சொன்னே?"

"நான் சொன்னேன், நீங்க ஒரு பெரிய மனுஷர், பணக்காரர், பேரு கரீம்; நாராயன்கஞ்சிலே உங்களைத் தெரியாதவங்களே கிடையாதுன்னு!"

"என்னைப் பத்தி இவ்வளவு உசத்தியாச் சொன்னியா?"

"சொல்லமாட்டேனு? நீங்க எவ்வளவு பெரிய மனுஷர்!"

"இன்னும் என்ன சொன்னே என்னைப் பத்தி?"

"நீங்க தங்கமான மனுஷர்னு சொன்னேன்."

"அவ என்ன சொன்னு?"

"தங்கமான மனுஷரா இருந்தா அவருக்கு ஆசை கீசை கிடையா தான்னு கேட்டா."

"நீ என்ன சொன்னே?"

"ஆசை இல்லாமே என்ன? ஆசை, பாசம் எல்லாம் இருக்குன்னு சொன்னேன்."

ஒரு தடவை கரீம் கடையில் உட்கார்ந்துகொண்டு ஜப்பரிடம் சொன்னுன், "ராத்திரி எனக்குத் தூக்கம் வரல்லே, ஜப்பர்! ஓர் அழகான தேவதை எங்கிட்டே பறந்து வர்றமாதிரி பிரமை உண்டாறது எனக்கு."

"தேவதையா? சும்மா தேவதைன்னு சொல்லிட்டாப் போதுமா? தேவதைகளை, அப்சரசுகளைக் கூட மயக்கி வசப்படுத்திடலாம். எங்க மாலதி அக்கா ஆகாசத்து நட்சத்திரமாக்கும்! அவளை மயக்கறது ஒண்ணும் லேசுப்பட்ட காரியம் இல்லே. ஆகாசத்து நட்சத்திரத்தை வசப்படுத்தணுமின்னு அதுக்குச் செலவு செய்யணு மாக்கும்!'' என்றான் ஜப்பர்.

கரீமிடமிருந்து ஒரு பெரிய தொகையைக் கறக்க விரும்பினான் ஜப்பர்.

''எவ்வளவு செலவாகும்?''

நான்கு தறிகள் வாங்கிப் போட எவ்வளவு செலவாகும் என்று கணக்குப் பார்த்துவிட்டு ஜப்பர் ஆயிரம் ரூபாய் ஆகும் என்று சொன்னான்.

''ஆயிரம் ரூபாயிலே தேவதை, அப்சரசு, ஆகாசத்து நட்சத்திரம் எல்லாத்தையுமே வாங்கிடலாமே!''

''ஒருத்தருக்குச் செலவு கொஞ்சந்தான் ஆகுங்கறீங்களா?'' மென்று விழுங்கினான் ஜப்பர். வரவிருந்த பணம் கை நழுவிவிடுமோ என்று பயம் அவனுக்கு.

''பின்னே?''

''சரி, உங்க இஷ்டப்படி கொடுங்க.''

கடைசியில் பேரம் பேசி ஜப்பர் கரீமிடமிருந்து ஐந்நூறு ரூபாய் வாங்கிக்கொண்டான். பாக்கிச் செலவுகளையும் கரீமே ஏற்றுக் கொண்டான். படகு, படகோட்டிகள், சாப்பாட்டுச் செலவு எல்லாம் கரீமின் பொறுப்பு. முதலில் கரீம் படகில் வருவதாக இல்லை. ஆனால் பிற்பாடு அவனுக்கு ஜப்பரிடம் சந்தேகம் தோன்றிவிட்டது. ஜப்பர் மாலதியை இழுத்துக்கொண்டு வேறெந்தப் பக்கமாவது ஓடிப்போய் விட்டால்! ஆகாசத்து நட்சத்திரமும் சிக்காது, பணத்துக்குப் பணமும் நஷ்டம். ஆகையால் அவனும் படகில் ஏறிக்கொண்டு விட்டான்.

பண ஆசையில், இரண்டு தறிகளுக்குச் சொந்தக்காரனாகும் ஆசையில் ஜப்பர் அடிக்கடி ஊருக்கு வந்துவிட்டுப் போவான். தாராளமாகப் பணத்தைச் செலவு செய்வான், பேலுவுடன் கூடிக் கூடிச் சதியாலோசனை செய்வான். கரீமின் ஆட்களுக்கு ஊரைக் காட்டுவான். ''எங்க ஊரைப் பாருங்க! இங்கேதான் எங்க மாலதி அக்கா நாளுக்கு நாள் அழகா மலர்ந்துக்கிட்டு வரா! அவ கிடைச் சுட்டா, கரீம் சாயபு ரொம்ப அதிருஷ்டக்காரர்தான்!''

சரியான தருணத்துக்காகக் காத்திருந்தான் ஜப்பர். ரஞ்சித் ஊரில் இல்லை. நல்ல இருட்டான இரவு. படகு வருவது கண்ணுக்குத் தெரியாது. இம்மாதிரி தருணத்தில் காரியத்தைச் சாதித்துக்கொண்டு விடலாம். சாம்சுத்தீனும் ஊரில் இல்லை; அவன் டாக்கா போயிருக்

கிருன். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு காரியத்தை முடித்துவிடும்படி யோசனை சொன்னுன் பேலு. இந்த யோசனைக்குக் கூலியாகப் பேலுவுக்கு இருபது ரூபாய் கிடைத்தது, பீபி ஆன்னுக்குக் கட்டம் போட்ட புடைவை கிடைத்தது. பேலுவின் பீபியும் அவர்களோடு போவதென்று ஏற்பாடாயிருந்தது. ஆனல் கடைசியில் பேலு இதற்கு இணங்கவில்லை. அவனுக்குப் பயமாக இருந்தது, அகப்பட்டுக்கொண்டு விடுவோமோ என்று.

இப்போது சூரியன் மேலே கிளம்பிக்கொண் டிருந்தான். காற்று படகின் பாயின்மேல் மெல்ல வீசியது. காலைச் சூரியன் நதியின் நடுவிலிருந்து மேலே கிளம்புவதுபோல் தோற்றம் அளித்தான். மேக்ன ஆற்றின் கடுஞ்சுழலில் படகு அகப்பட்டுக்கொள்ளக் கூடா தென்று படகோட்டிகள் படகை மிகவும் கவனமாகச் செலுத்தி ஞர்கள். படகின் மேலிருந்த குடிசைக்கு இருபுறமும் மரக் கதவுகள். உள்ளே இருந்த இடம் ஓர் அறைபோல் பெரிதாயிருந்தது.

உல்லாசப் படகைப் போன்ற பெரிய படகு அது. அறைக்குள்ளே பேசப்படும் பேச்சைப் படகு முனையிலிருந்து கேட்க முடியாது. அறைக்குள் மாலதி சீறிஞள், விம்மிஞள். ஜப்பர் அவளுக்கு அருகில் உட்கார்ந்துகொண்டு முன்போல் ஆசை காட்டி மயக்கப் பார்த்தான். பேலுவின் பீபியும் இப்போது படகில் இருந்தால் எவ்வளவோ வசதி யாக இருக்கும். ஜப்பர் இன்னும் பத்து, இருபது ரூபாய் கொடுக்கத் தயாராய்த்தான் இருந்தான். ஆனல் பேலுதான் அவளை அனுப்ப இணங்கவில்லை.

மாலதி கடைசிவரை வழிக்கு வராவிட்டால், 'காட்டுப் புலி கூண்டுக்குள் வந்தும் சீறிக்கொண்டே இருந்தால் என்ன நேரும்?' ஜப்பரின் திட்டமெல்லாம் பாழாகிவிடும். அந்தப் பயத்தில் ஜப்பரின் முகம் உலர்ந்துவிட்டது. அவன் மாலதிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, ''மாலதி அக்கா, எழுந்திருங்க! பால் காய்ச்சிக் கொடுக் கறேன்; குடிங்க! உடம்பிலே பலம் வரும்'' என்று கெஞ்சிஞன்.

அவன் பேச்சை யார் கேட்பது? மாலதி தரையின்மேல் சுருண்டு கிடந்தாள், புயலில் அடிப்பட்டு விழுந்து கிடக்கும் காக்கையைப் போல். அவளுடைய முகத்தில் களங்கத்தின் நிழல் படிந்திருந்தது. ஒரே இரவுக்குள் அவளுடைய கண்களுக்குக் கீழே கறுத்துப் போயிருந்தது. அவளுடைய கைகால்களில் இப்போது கட்டுகள் இல்லை. மூடிய கதவின் இடைவெளி வழியே காலை வெயில் நுழைந்து வந்து அவளுடைய கால்மாட்டில் விழுந்தது.

''மாலதி அக்கா, எழுந்திருங்க! மூஞ்சி அலம்பிக்கிட்டு நாஸ்தா பண்ணுங்க'' என்று ஜப்பா கூப்பிட்டான்.

மாலதி தலையைப் புதைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவன் இன்னும் அவளைத் தொந்தரவு செய்தால் அவன் மேல் விழுந்து கடித்துக் குதறிவிடுவாள் போலிருந்தது. ஐப்பர் பயந்துபோய் அறையிலிருந்து வெளியே வந்துவிட்டான். "உம், அவளுடைய கொழுப்பு இன்னும் அடங்கவில்லை."

மாலதியைப் பார்த்தால் பைத்தியம் மாதிரி இருந்தது.

கரீம் ஷேக் வாசலில் ஹுக்கா பிடித்துக்கொண் டிருந்தவன், "குட்டி என்ன சொல்ரு?" என்று ஐப்பரைக் கேட்டான்.

"கேக்கரு, கிழவனுச்சே, எனக்கு ஈடுகொடுக்க முடியுமான்னு."

"அப்படி என்ன வயசாச்சு எனக்கு? சுமார் நாற்பதுதானே இருக்கும்!"

"அப்படீன்னு ஒரு கவலையும் இல்லே; சமாளிச்சுடுவீங்க."

ஹுக்காவில் புகையிழுத்துக்கொண்டே கரீம், "அவ என்னமோ என்னைப் பத்தியே பேசிக்கிட்டு இருக்கறதாச் சொன்னியே! அவளானுப் பைத்தியம் மாதிரி உட்கார்ந்திருக்காளே!" என்ருன்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே, மியான்! காட்டுப் புலியைக் கூண்டிலே அடைச்சா, இப்படித்தான் முதல்லே சீறும். அப்புறம் எல்லாம் சரியாப் போயிடும்."

"அவளை வசப்படுத்த முடியாட்டா எவ்வளவு ராத்திரி இந்த மாதிரி அலையறது? நான் கடையைவிட்டு வந்து எவ்வளவு நாளாச்சு! நான் கிளம்பறபோதே பெரிய பீபி கேட்டா, 'எங்கே போறே, மியான்?'ன்னு."

"என்ன சொன்னீங்க?"

"சொன்னேன், மீன் பிடிக்கப் போறேன்னு. மேக்னுவிலே பெரிய டாயின் மீன் கிடைக்குமான்னு பார்க்கப் போறேன்னேன்."

ஹுக்காவின் நெருப்பைத் தண்ணீருக்குள் உதறிவிட்டுக் கரீம் தொடர்ந்தான். "மீன் தூண்டில்லே சிக்கிட்டது. ஆனு அதைக் கரைக்கு இழுத்துக்கிட்டு வர முடியல்லே. இதென்ன சங்கடம்?"

"கரைக்கு இழுத்துக்கிட்டு வந்துட்டா அப்புறம் என்ன மிஞ்சும், சொல்லுங்க! ரெண்டு மூணு தடவை குதிக்கும். அப்புறம் பிராணனை விடும். காட்டுப் புலி வசப்பட்டுட்டா இன்னெரு தடவை வேறெரு புலியைத் தேடிக்கிட்டு வேட்டையாடப் போகத் தோணும். கையிலே ஆம்பிட்டுக்கிட்ட சரக்கு அவ்வளவு ருசியாத் தோணுது. இல்லையா, மியான்?...சரி, புகையிலை தரவா?"

"தா. ஆனுல் புகையிலை சாப்பிட்டும் உற்சாகமாயில்லே எனக்கு."

கரீம் ஷேக் முகத்தை 'உம்' என்று வைத்துக்கொண்டு உட்கார்ந் திருந்தான். படகு எந்த ஊரையும் நெருங்கவில்லை. படகில் எடுத்து வந்திருந்த உணவுப் பொருள்கள் எல்லாம் தீர்ந்துவிட்டன. மாலதி

அவனுடைய விருப்பத்துக்கு இணங்கும்வரை இப்படியே ஏரிகளிலும் ஆறுகளிலும் படகிலேயே சுற்ற வேண்டும். அவளிடம் நயமாக நடந்துகொள்ள வேண்டும், பலாத்காரத்தை உபயோகிக்கக் கூடாது. நயமான நடத்தையால் மாலதியின் மனத்தைக் கவரவேண்டும். இவ்வாறெல்லாம் நினைத்த கரீம் ஜப்பரிடம் சொன்னான், "மனசுக் குள்ளே ஒரு பறவை வாசம் பண்ணுது, ஜப்பர்."

"ஆமாங்க, மியான்."

"அந்தப் பறவை பறக்கத் துடிக்குது. அதுக்கு என்ன வேணும்? புது பீபிக்காக ஏங்கித் தவிக்குது அது. மனசே, நீயும் ஒரு படகோட்டி தான்! பீபி ஹாலிமா — அவளை வழிக்குக் கொண்டுவர எவ்வளவு நாளாச்சு?" இதெல்லாம் ஜப்பருக்குத் தெரியக் காரணம் இல்லை. ஏதேதோ நினைவுகள் கரீமின் மனத்தில் தோன்றின.

இப்போது கரீம் வெளிப்பார்வைக்கு ஒரு கண்ணியமான மனிதன். ஆனால் உள்ளூற அவன் நேர்மையான பேர்வழி அல்ல. அவன் மனம் கோணலானது, வளைந்து செல்லும் ஆற்றைப்போல. இப்போது அவனுக்கு உள்ளும் புறமும் ஒரே ஞாபகந்தான். விருப்பப்படி படகுத் துறையிலே நின்னு இலிஷ் மீன் வாங்கணும். பத்மா நதியின் இலிஷ், மேக்னு நதியின் இலிஷ். அப்புறம் படகிலே போயிக் கிட்டே மீன் குழம்பும் சுடுசோறும் நல்லாச் சாப்பிடணும். இந்துப் பொண்ணு! அவளோட இளமை வீணாகிக்கிட்டு இருக்கு: அவளோட வாழ்க்கை நடத்த ஆசையா இருக்கு கரீமுக்கு. 'ஏ பொண்ணே, நீ ஏன் கஷ்டப்படறே? இளமையை ஏன் வீணாக்கிக்கிட்டு இருக்கே? நானும் நீயும் உல்லாசமாகக் கடல்லே பிரயாணம் செய்யலாம்' என்றெல்லாம் நினைத்துக்கொண்டே கரீம் ஹுக்காப் புகையை இழுத்து வெளியே விட்டான். பிறகு ஹுக்காவை ஜப்பரிடம் கொடுத்துவிட்டு, "நல்லா, ஆனந்தமா இழு!" என்று சொன்னான். பிறகு தவழ்ந்துகொண்டே போய் மாலதி இருந்த அறைக்குள் நுழைய முற்பட்டான். ஜப்பர் சட்டென்று அவனுடைய இரு கால் களையும் கட்டிக்கொண்டு கேட்டான், "நீங்க என்ன பண்றீங்க. மியான்?"

"ஏன், என்ன பண்ணிட்டேன்?"

"பாம்போட விளையாடப் பாக்கறீங்களா?"

"பாம்போட விஷப் பல்லைப் பிடுங்கப் போறேன்."

"அது அவ்வளவு சுலபமாத் தோணுதா?"

"ஆமா."

"நூல் வாங்கி விக்கற மாதிரி தோணுதாக்கும்?"

"ஆமா."

"அது அவ்வளவு சுலபமில்லே, மியான்."

"சுலபமா, இல்லையான்னு பாக்கறேனே!"

இவ்வாறு சொல்லிக்கொண்டே கரீம்ஷேக் முழங்காலால் நகர்ந்த படி அந்த அறைக்குள் நுழைந்துவிட்டான். ஓநாய் தன் பொந்துக்குள் வாலைச் சுருட்டிக்கொண்டு அமைதியாய் உட்கார்ந்திருப்பது போல் அவன் மாலதிக்குச் சற்றுத் தூரத்தில் பேசாமல் உட்கார்ந்தான். இங்கிருந்து அவளைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. முகத்தைத் தன் மடிக்குள் புதைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள் அவள். படகுக்குப் பலவந்தமாக இழுத்து வந்ததில் அவளுடைய உடலில் பல இடங்களில் காயம், ரத்தக்கறை—யாரோ அவள் உடல் முழுவதையும் குத்திக் கிளறிவிட்டாற் போல் இருந்தது.

கரீம் அவளை அன்போடு தடவிக் கொடுக்கத் தன் கையைத் தூக்கியபோது படகின் முன்பக்கத்திலிருந்த படகோட்டி தன்னைக் கவனிப்பதைப் பார்த்தான். உடனே அவன் அறைக் கதவைச் சாத்தினான். ஆசை மிகுதியில் அவனுடைய நாக்கில் நீர் ஊறியது. தாமரைப் பூப்போல் புத்தம் புதிய, ரோஜாவைப் போல் மிருதுவான, மாலதியின் அழகிய உடலில் இளமைப் பொங்கிப் பூரித்திருந்தது, ஆற்றின் பிரவாகம் போல.

பழுக்கக் காய்ந்த இரும்பின்மேல் கை வைப்பவன் சட்டென்று கையை எடுப்பதுபோல் கரீம் இரண்டு தடவை மாலதியைத் தொட்டுப் பார்த்து மறுகணமே கையை இழுத்துக்கொண்டான். இரண்டு தடவை அவளுடைய தலையை வருட முயற்சி செய்தான். இப்போது ரொம்பச் சமத்தாகி விட்டிருந்தாள் மாலதி. அவள் ஒன்றும் சொல்லவில்லை. இதனால் தைரியமடைந்த அவன் உற்சாகத்துடன் கூவினான். 'இலிஷ் மீன் குழம்பு பண்ணி, சுடச்சுடச் சோறு சமைச்சு ஆனந்தமாச் சாப்பிடுங்க எல்லாரும்! இன்னும் சற்றுநேரத்தில் மாலதியுடன் காதல் விளையாட்டில் மெய்ம்மறந்து போகலாம்' என்று எண்ணிக்கொண்டே, அவன் அறைக்கு வெளியே வந்தபோது நாணல் காட்டுக்குள்ளே தண்ணீரில் ஒரு பெரிய முதலை மிதப்பதைக் கண்டான். அதன் பிரம்மாண்டமான வாய் திறந்து கிடப்பதைப் பார்த்து அவனுக்குத் திகில் பிடித்துவிட்டது.

அருகில் ஊர் எதுவும் இல்லை. நதியின் தென்கரையில், நாணல் காட்டைத் தாண்டினால், ஆஸ்தானா சாயபுவின் சமாதி. எதிரில் நாணல் காடு. வெகு தூரத்துக்குத் திறந்த வெளி. தண்ணீர் சற்றுக் குறைந்திருந்தது. சூரியன் உச்சிக்கு வந்துகொண் டிருந்தான்.

எல்லாரும் படகின் மேல்தளத்தில் உட்கார்ந்துகொண்டு சாப்பிட்டார்கள். மாலதி ஒன்றும் சாப்பிடவில்லை. அவள் மௌனமாக ஆற்று நீரையே பார்த்துக்கொண் டிருந்தாள். இப்போது அவர்களுடைய கவனம் அவள்மேல் இல்லை. கரீம் தொழுகை செய்தான்.

மாலதியால் இனி வீடு திரும்ப முடியாது. எங்கே திரும்புவாள் அவள்? மோசக்காரர்கள் அவளைத் திருட்டுத்தனமாகக் கடத்திக் கொண்டு வந்துவிட்டார்கள். இப்போது ரஞ்சித்தின் முகமோ வேறு எவருடைய முகமோ அவளுடைய மனத்தில் தோன்றவில்லை. அவளுடைய மண்டைக்குள் தாங்க முடியாத வேதனை. அவளுக்குள்ளே ஒரு கையாலாகாத ஓலம். இப்போது என்ன செய்வாள் அவள்? அவள் யார், அவளுடைய விருப்பம் என்ன, அவள் இப்போது எங்கே போகிறாள்? அவள் ஏன் இப்படிச் சும்மா உட்கார்ந்திருக்கிறாள்? அவள் செய்யக் கூடியது என்ன?

கரீம் தொழுகையிலும் மற்றவர்கள் சாப்பாட்டிலும் கவனமாயிருந்த போது மாலதி சட்டென்று தண்ணீரில் குதித்துவிட்டாள். 'தாயே, உன்னிடம் எனக்கு அடைக்கலம் கிடைக்குமா?' என்று கேட்பவள் போல. "கங்கை அன்னையே! நான் உன்னை அண்டிவிட்டேன்! நீதான் சரணம்!"

படகோட்டிகள் சாப்பாட்டை விட்டுவிட்டுக் கூச்சல் போட்டுக் கொண்டு எழுந்தார்கள். ஜப்பர் தண்ணீருக்குள் குதித்தான். துடுப்பைக் கழற்றப் போன படகோட்டிகள் கயிற்றில் சிடுக்கு விழுந்திருப்பதைக் கண்டார்கள். அவர்களால் விரைவாகத் துடுப்பைக் கழற்ற முடியவில்லை. இதற்குள் மாலதி வெகுதூரம் ஆற்றோடு போய் விட்டாள். அவளுடைய தலை இடையிடையே தண்ணீருக்குள் மூழ்கி மூழ்கி மேலே வந்தது. கரீம் ஆற்று நீரின் திசையில் படகை வேகமாக ஓட்டினான். மாலதி கரையை அடைந்து கோரைக் காட்டுக்குள் நுழைந்து ஒளிந்துகொண்டாள்.

படகு ஆமை முதுகைப் போல் தண்ணீரின்மேல் போய்க்கொண்டிருந்தது. எதிரில் நீர் சுழலாகச் சுழன்றது. வலதுப் பக்கம் படுகை, அதில் வயல்கள். மாலதி சுழலில் சிக்கிக்கொண்டு முழுகி விட்டதாக எல்லாரும் நினைத்தார்கள். ஆனால் மாலதி எவ்வளவோ தடவை மழைக் காலத்தில் ஆற்று மணலைத் தாண்டி வந்து சுழலில் முழுகித் தண்ணீருக்கடியிலிருந்து மண்ணை அள்ளிக்கொண்டு வந்திருக்கிறாள். அப்படிப்பட்ட மாலதி சுழலில் அகப்பட்டுக் கொண்டு முழுகிப் போயிருப்பாள் என்று ஜப்பரால் நம்பமுடியவில்லை. அவன் படகின் மேலேறி நாற்புறமும் திரும்பிப் பார்த்தான். அருகில் கோரைக் காடு. ஒரு மீன் ஆற்று நீரில் நீந்துவதுபோல் யாரோ கோரைப் புற்களை விலக்கிக்கொண்டு தண்ணீரில் நீந்துவது அவனுக்குத் தெரிந்தது.

"அதோ போறா, பாருங்க!" என்று அவன் கத்தினான்.

"அது ஆள் இல்லை, மீன்!" என்றார்கள் படகோட்டிகள்.

கரீம், "ஆமா, ஆமா! அது மீன்தான்" என்றான்.

அவன் ஆற்றின் நடுப்பகுதியைக் கவனமாகப் பார்த்துக்கொண் டிருந்தான். மாலதி தப்பிவிட்டால் அவனுக்கு ஜெயில் வாசந்தான். மாலதியை வசப்படுத்தித் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போக முடியாவிட்டால் அவளைக் கொன்றுவிடுவது மேல். தண்ணீரில் ஆகட்டும், கோரைக் காட்டில் ஆகட்டும், அவள் தலைமேல் துடுப்பால் நாலு அடி வைத்துக் கொன்றுவிட வேண்டியதுதான். ஏரி நீரிலும் ஆற்று நீரிலும் யார் யார் பிணமாக மிதக்கிறார்களென்று யார் கண் டார்கள்? மழைக்கால வெள்ளத்தில் ஒரு யுவதி செத்துப் போனால் அதைத் தற்கொலை என்றுதான் நினைப்பார்கள்.

"அந்தப் பொண்ணு எங்கே?" என்று கரீம் கேட்டான்.

ஜப்பரின் பார்வை இன்னும் கோரைக் காட்டின்மேல் பதிந்திருந்தது. காடு மேடாகிப் போய்க்கொண் டிருந்தது. அந்த மேட்டில் இவ்வளவு பெரிய படகைச் செலுத்தினால் படகு மண்ணில் சிக்கிக்கொண்டு விடும். இங்கே எங்கும் சேறு நிறைந்த தண்ணீர். ஜப்பர் என்ன செய்வான் இப்போது?

இந்தக் கஷ்டகாலத்தில் யாராவது அந்தப் பொண்ணைப் பிடித்துக் கொண்டுவந்து கொடுக்க மாட்டார்களா? ஏமாற்றமும் கோபமுங் கொண்ட ஜப்பர் தலைமயிரைப் பிய்த்துக்கொண்டான். எங்காவது கோரைக் காட்டில் அசைவு தெரிகிறதா என்று பார்த்துக்கொண்டே நின்றான் ஜப்பர்.

மாலதி கோரைக் காட்டைத் தாண்டி, குருடியைப் போல், சமாதி இருக்கும் திக்கில் தள்ளாடிக்கொண்டு போவது தெரிந்தது. கரீம் பைத்தியக்காரனைப் போல் சிரித்தான். "குட்டி வழி தவறிப் போயிட்டா! வாங்க, போய் பிடிக்கலாம் அவளை!"

அவன் தண்ணீரில் குதித்தான். அவனைப் பார்த்து ஜப்பரும் கரீமின் சீடன் ஒருவனும் குதித்து நீந்தத் தொடங்கினார்கள். மனித நடமாட்ட மற்ற இந்தத் தண்ணீர்க் காட்டில் ஒரு முயலைத் துரத்தி வருகிற ஓநாய்க் கூட்டம் போல ஓடினார்கள். எதிரில் கரை, ஆஸ்தானா சாயபுவின் சமாதி. மற்றப் பக்கங்களில் ஆழமான தண்ணீர். மனிதர் களின் குடியிருப்பு அங்கிருந்து வெகுதூரம். இந்த அத்வானத்தில் அகப்பட்டுக்கொண்டால் மாலதி பைத்தியமாகிவிடுவாள். ஆனால் எப்படியோ புதரில் மறைந்துகொண் டிருந்துவிட்டு ஏழெட்டு மைல் தூரம் தண்ணீரைக் கடந்துபோய் ஏதாவது ஊரையடைந்துவிட்டால் ஜப்பருக்குச் சிறைதான். தறி வாங்கும் ஆசையெல்லாம் கனவாகிப் போய்விடும்!

மாலதி வேகமாக ஓட ஓட ஜப்பரும், கரீமும், அவனுடைய சகாவும் அவளைத் துரத்தினார்கள். அவர்கள் கோரைக் காட்டுக்குள் புகுந்து ஓடும்போது கோரை அவர்களுடைய உடம்புகளில் கீறி

ரத்தம் வழிந்தது. இப்போது அவர்கள் மனிதப் பிறவிகளாகத் தோன்றவில்லை. சுடுகாட்டில் நடமாடித் திரியும் பிசாசுகளைப்போல் காட்சியளித்தார்கள் அவர்கள்.

இந்தப் பகுதியில் மனித சஞ்சாரம் இல்லை. சில கோச தூரங்களுக்கு மனிதர்களின் குடியிருப்பே இல்லை. வெறும் காடுதான். பண்டிகை சமயத்தில் மட்டும் மக்கள் அங்குவந்து சமாதியில் மெழுகுவர்த்தி ஏற்றி வைத்துவிட்டுப் போவார்கள். அப்புறம் மறுபடி சூனியந்தான்.

இந்தக் காட்டில் இறந்த மக்களின் உலகம் ஒன்று மௌனமாக இயற்கையின் விளையாட்டைப் பார்த்துக்கொண் டிருந்தது. பத்துக் கோசம், இருபது கோச தூரத்திலிருந்தும் பிணங்கள் இங்கு வருவது உண்டு. தர்காவுக்கருகில் பிணங்களைக் கொண்டுவந்து புதைப் பார்கள். புதைக்கும் சமயத்தில் உரக்கக் கூவுவார்கள். 'அல்லா ஒருவரே! முகம்மது அவருடைய ஒரே தூதன்!'

இப்போது சூரியன் மேற்கே சாயத் தொடங்கிவிட்டான். மாலதியைத் துரத்தி வந்தவர்கள் கோரைக் காட்டில் புகுந்ததும் வழி தெரியாமல் தவித்தார்கள். காரணம், அவர்களுக்கு வழிகாட்ட ஒரு அரவமும் இல்லை. யாராவது சேற்றில் ஓடினால் சப், சப் என்ற அரவமாவது எழும். அதுகூட எழவில்லை இப்போது.

காற்றில் புற்கள் அசைந்தன. செடிகளில் எவ்வளவோ பூச்சிகள், புழுக்கள். மழைக் காலமானதால் பாம்புகளும் சஞ்சரிக்கும். இந்தப் பக்கத்திலுள்ள விஷப்பாம்புகள் கோடைக் காலத்தில் வயல்களிலும் ஆற்றங்கரையிலும் சுற்றித் திரியும். அவையெல்லாம் இப்போது தண்ணீருக்குப் பயந்து மேட்டுப் பகுதிக்கு வந்துவிடும், அல்லது புல்லின்மேல் ஒன்றுடன் ஒன்று பிணைந்துகொண்டு கிடக்கும். அட்டையும் ஒருவித விஷப்பூச்சியும் எங்கும் நெளியும். இங்கே அகப்பட்டுக்கொள்வது சாவை எதிர்கொள்வது போலத்தான்.

இங்கே ஓடிவந்த ஒரு யுவதி அவர்களைக் காட்டிலும் சேற்றிலும் அலைய வைத்தாள். அலைய அலைய அவர்களுக்கு வெறி அதிகமாகியது. கரீம் பைத்தியம் பிடித்தவன்போல ஆபாசமாகத் திட்டினான் அவளை. அவளுடைய கட்டுக்களை அவிழ்த்திருக்கக் கூடாது! அந்த அழகான குட்டி இப்போது எங்கே? தூக்குத் தண்டனை பெற்ற குற்றவாளியைப் போல் தோற்றம் அளித்தான் கரீம். அவன் அவளை நன்றாகத் தொடக்கூட இல்லை, இறுகக் கட்டிக் கொள்ளவில்லை. சேம்பு இலைபோன்ற அவளுடைய மிருதுவான தலைமயிரை ஆசை தீர வருடிவிடவில்லை. இன்னும் அவளை ஒன்றுமே செய்ய முடியவில்லை அவனால்!

தன் திட்டமெல்லாம் வீணாகிவிட்டது என்ற நினைவு ஏற்பட்டதும் கரீம் தன் சுய உருவத்தை எடுத்துக்கொண்டான். அவனுடைய

இயற்கையான மிருக உணர்வு வெளிப்பட்டது. "ராஸ்கல்! நீ என்னை மாடு, குதிரைன்னு நினைச்சியா?" என்று சொல்லிக்கொண்டே ஜப்பரின் முதுகில் ஓர் உதை கொடுத்தான் அவன். ஜப்பர் பயந்துகொண்டே, "வாங்க, மியான்! வடக்குப் பக்கத்துப் புதரிலே யாரோ நடந்துபோற மாதிரி இருக்கு; போய்ப் பார்க்கலாம்" என்றான்.

ஜப்பர் மனசுக்குள் கறுவிக்கொண்டான். 'இனிமேல் சும்மாவிடக் கூடாது. அவளைக் கண்டுபிடித்து விட்டால் உடனே கட்டிக் கொண்டு அவளுடைய மானத்தைப் பறிக்கவேண்டும்.'

கரீம் நினைத்துக்கொண்டான், "சும்மா விடக்கூடாது இனிமேல்! இனிமேல் கெஞ்சப் போவதில்லை, கொஞ்சப் போவதில்லை. அவளைப் பிடித்துவிட்டால் மிருகத்தைப்போல் அவள்மேல் பாய வேண்டியது தான். இழுத்துக்கொண்டு போய், புதருக்குள்ளே கீழே தள்ளி...' நினைத்தபோதே அவனுடைய கணகளிலும் முகத்திலும் வெறி ஏறியது. எப்படியும் ஒரு கை பார்த்துவிட வேண்டியதுதான்.

ஒரு தடவை மண்ணை உழுது பயிர் செய்துவிட்டால் பிறகு அந்த மண் அவனுடையதல்ல என்று யார் சொல்ல முடியும்?

மூவரும் வெறி பிடித்தவர்களாக ஓடினார்கள். மாலதி கரையில் ஏறி விட்டதாக அவர்களுக்குத் தோன்றவே, அவர்களும் கரையில் ஏறிப் புதர்களுக்குள் மறைந்துகொண்டு அரவம் ஏதும் கேட்கிறதா என்று உற்றுக் கேட்டார்கள். நிலா ஒளியில் மாலதி அசைவது தெரிந்தால் அவளைக் 'கப்'பென்று பிடித்துக்கொள்ளத் தயாராயிருந்தார்கள் அவர்கள்.

மாலதி பட்டினி. வெகுநேரம் காட்டுக்குள் அலைந்து அலைந்து களைத்துப் போய்விட்டாள் அவள். அவள் உடலில் பல இடங் களில் காயம்பட்டு, அந்தக் காயங்களிலிருந்து ரத்தம் வழிந்தது. மேலாடை இல்லை. அது எங்கோ கொடிகளில் சிக்கிக்கொண்டு விட்டது. ரவிக்கை பல இடங்களில் நார்நாராகக் கிழிந்துபோய் விட்டது. அவளுக்குத் தன் நினைவே இல்லை. அடிபட்ட மான் எவ்வாறு தள்ளாடிக்கொண்டே போய் ஒரு புதருக்குள் மறைந்து கொண்டு அசையாமல் கிடக்குமோ அதுபோல் அவளும் ஒரு புதருக் குள் ஒளிந்துகொண்டாள்.

மேலே வெள்ளை நிலவு. இந்த நிலவு இன்னும் கொஞ்ச நேரந் தான் இருக்கும். யாரோ அந்தப் பக்கம் வருவதுபோன்ற மெல்லிய அரவம் கேட்டது. ஆற்றுத தண்ணீரில், பிறகு கரையில் யாரோ நடக்கும் அரவம். புதர்களில் திடீரென்று ஏதாவது சப்தம் கேட் டால் அவள் பயந்து நடுங்கினாள். கொஞ்சங் கொஞ்சமாக அவளுடைய திராணி குறைநதுகொண்டே வந்தது. தான் செத்துக்

கொண்டிருப்பதாகத் தோன்றியது அவளுக்கு. அவள் தூரத்தில் ஒரு பெண் மான் ஓடுவது போவது போன்ற அரவத்தைக் கேட்டாள். தூரத்தில் ஆகாயத்தில் ரஞ்சித்தின் முகம் படகைப் போல் மிதப்பதாகத் தோன்றியது அவளுக்கு. அவனுடைய கண்கள் வானவெளியில் மிதந்தன. தான் இவ்வாறு கொஞ்சங் கொஞ்சமாக நினைவிழந்து வருவதை அவள் உணர்ந்தாள். அதே நேரத்தில் அவளுக்கு அருகில் யமதூதர்கள் மாதிரி மூன்று பேர் நிற்பதைக் கண்டாள். அவர்கள் அவளை இழுத்துக்கொண்டு போகப் போகிறார்கள்! இப்போது அவள் பயத்தால் உண்மையிலேயே நினைவிழந்து விட்டாள். ஏதோ கசமுசா ஒலி, ஆண்மானும் பெண்மானும் ஓடும் அரவம், நீரில் அலை எழும்பும் சப்தம்–இரவு முழுவதும் மயங்கிக் கிடந்த மாலதியின் உடலில் மூவரும் தங்கள் மிருகத்தனத்தைக் காட்டிவிட்டு, அவள் இறந்துவிட்டதாகக் கருதி, இருட்டிலேயே ஓடிப்போய் விட்டார்கள். காலையில் நாயும் ஓநாயும் அவளுடைய உடலைக் கடித்துக் குதறித் தின்றுவிடும்! காட்டுக்குள் ஒரு யுவதி செத்துக் கிடப்பதை யாரும் அறியமுடியாது.

சோனு இரவு முழுவதும் ஒரு கனவு கண்டான்.

ஒரு பெரிய சமுத்திரம். அதன் கரைக்கு யாரோ சிலர் ஒரு பெரிய மரக்குதிரையை இழுத்துக்கொண்டு வந்தார்கள். எவ்வளவு பெரிய குதிரை அது! அவர்கள் போன பிறகு அவனுக்குத் தெரிந்தது, அது மரக்குதிரையல்ல, நிஜக் குதிரை என்று. அவன் பக்கம் திரும்பிப் பார்க்கிறது. அவன் தனியாக இல்லை. அமலாவும் கமலாவும் அவனுடன் கூட இருந்தார்கள். குதிரை அவன் முன்னால் வந்ததும் அவன் காலடியில் படுத்துக்கொண்டது. சலாம் போடச் சொன்னால் மூடாபாடா யானை மண்டியிட்டு உட்கார்ந்து கொள்ளுமே, அது போல் செய்தது. அவனும் அமலாவும் கமலாவும் அதன்மேல் ஏறி உட்கார்ந்ததும் குதிரை ஓடத் தொடங்கியது. மணற்பரப்பைத் தாண்டிச் சமுத்திரத்தில் இறங்கி முழங்கால் மட்டத் தண்ணீருக்கு வந்ததும் குதிரை மறுபடி மரமாகிவிட்டது, அசையவில்லை.

அவர்களால் கீழே இறங்க முடியவில்லை. மரக்குதிரை கொஞ்சங் கொஞ்சமாக உயர்ந்துகொண்டே வந்து ஆகாயத்தைத் தொட்டு விடும்போல் வளர்ந்துவிட்டது. மேகத்தைக் கிழித்துக்கொண்டு

மேலே போய்விட்டது அது. அவர்களால் கீழே ஒன்றையும் பார்க்க முடியவில்லை. அவன் மேகத்தைப் பிய்த்துப் பிய்த்துத் தின்று பார்த்தான். ருசியாகத் தித்திப்பாக இருந்தது அது. திருவிழாவில் பஞ்சுபோன்ற மயிர் மிட்டாயைப் பிய்த்துப் பிய்த்துத் தின்பது போல் அவன் மேகத்தைப் பிய்த்துச் சுருட்டி அமலாவுக்கும் கமலாவுக்கும் கொடுத்தான். அவன் கீழே குனிந்து பார்த்தான். ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான மக்கள் சாரிசாரியாகக் குதிரையின் கால்களின் மேல் ஏறிக்கொண்டு வந்தார்கள், தங்களுக்குச் சொர்க்கத்தில் ஏற ஓர் ஏணி கிடைத்து விட்டாற்போல். அவனுக்கு இப்போது என்ன செய்வதென்று தெரியவில்லை. அவன் கைக் கெட்டும் உயரத்தில் ஆகாயம். இன்னுங் கொஞ்சம் உயர்ந்தால் அவனுடைய தலை ஆகாயத்தைப் பிளந்துகொண்டு சொர்க்கத்துக்குள் எட்டிப் பார்க்கும். அப்போது அவன் தேவர்களின் ராஜ்யத்தை, அங்கே கார்த்திகேயன், பிள்ளையார், சிவபிரான் எல்லாரும் நடமாடுவதைப் பார்க்க முடியும். என்ன ஆச்சரியம்!

அவன் இப்படி நினைத்தபோதே குதிரை சிறுத்துக்கொண்டே வந்து விளையாட்டுப் பொம்மை மாதிரி ஆகிவிட்டது. அவர்கள் இந்தப் பொம்மைக் குதிரையை நெஞ்சுடன் அணைத்துக்கொண்டு மணலில் நடந்து வரும்போது, பைத்தியக்காரப் பெரியப்பா நாயைக் கூட்டிக் கொண்டு ஆற்றங்கரைக்குப் போவதைப் பார்க்கிறார்கள். திடீரென்று பெரியப்பா கத்துகிறார், "கேத்சோரத்சாலா!" இத்துடன் சோனுவின் இனிய கனவு கலைந்துவிட்டது.

அவன் தலைக்கருகில் ஜன்னலில் வெயில் — சரத்கால வெயில்— தங்கமாகப் பளபளத்தது. கால்மாட்டிலும் வெயில். அவன் திடுக்கிட்டு எழுந்தான்.

அவனுக்கு முதலில் தான் எங்கிருக்கிறோம் என்றே புரியவில்லை. தான் தன் வீட்டில் படுக்கையில் படுத்திருப்பதாகத்தான் முதலில் நினைத்தான். பிறகு நினைவு வந்தது—இது ஆபீஸ் கட்டிடம். இது இரண்டாவது பெரியப்பாவின் படுக்கை. இப்போது அவன் கண்களை நன்றாகக் கசக்கிக் கொண்டான். அமலா, கமலாவின் ஞாபகம் வந்தது அவனுக்கு. இப்போது அவர்கள் எங்கே?

வெயில் ஏறியதும் அவன் அந்த அறையைவிட்டு வெளியே வந்தான். பெரியப்பாவைக் காணோம். இவ்வளவு பெரிய ஆபீஸ் கட்டிடத்தில் யாருமே இல்லை. எல்லாரும் ஆற்றங்கரைக்குப் போய் இருப்பார்கள். வாசலைக் கடந்ததும் வராந்தா. அதற்கப்பால் புல்வெளி. அப்புறம் குளத்தின் தென்கரையில் பெரிய மண்டபம். முந்தைய நாள் அவன் மண்டபத்தைப் பார்க்கவில்லை.

நேற்று இரவு வெகு நேரத்துக்குப் பிறகே அவன் இங்கே வந்தான். அமலாவும் கமலாவும் அவனைப் பெரியப்பாவிடம் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போனார்கள். வீட்டின் வடக்குப் பக்கம் நின்றால் குளத்தின் தென்கரையில் மண்டபம் ஒன்று இருப்பதே தெரியாது. அவன் மொட்டை மாடியில் நின்றிருந்தபோது அமலாவும் கமலாவும் மண்டபத்தைப் பற்றியும், அதன் படியில் உள்ள பளிங்குக்கல் எருதைப் பற்றியும், அதன் கழுத்தில் போட்டிருக்கும் பூ மாலையைப் பற்றியும் அவனுக்குச் சொல்லியிருந்தார்கள். அந்த மொட்டை மாடி இருட்டு மர்மம் நிறைந்ததாக இப்போது அவனுக்குத் தோன்றியது. அவன் தூக்கத்திலிருந்து விழித்ததுமே பூஜை வாத்தியங்களின் இசை அவனுக்குக் கேட்டது.

குமாஸ்தா அர்ஜுன் ஆற்றில் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பி வந்துகொண் டிருந்தான். ராம்சுந்தர் தோளில் தடியை வைத்துக் கொண்டு எங்கோ போய்க்கொண் டிருந்தான். லால்ட்டுவும் பல்ட்டு வும் எங்கே? இந்த வீட்டுக்கு வந்தபிறகு அவன் இந்த இரண்டு தமையன்களையும் பார்ப்பதே இல்லை. அவர்கள் இன்று எங்கோ வேட்டைக்குப் போவதாகப் பேச்சு. அதிகாலையிலேயே வேட்டைக் குப் புறப்பட்டுப் போய்விட்டார்களோ, என்னவோ!

குளத்தின் மறுகரையில் யாரோ ஓர் ஆள் நிற்பது அவனுக்குத் தெரிந்தது. அவனுக்கு அந்த ஆளை அடையாளம் தெரிந்தது. ஆனால் தன் கண்களை நம்பமுடியவில்லை அவனால். உருவம் தெளிவாகத் தெரியவில்லை. உயரமாக, அசையாமல், சமுத்திரக்கரையில் நிற்கும் டிராய் நகரக் குதிரைப் போல், ஊரைப் பார்த்துக்கொண்டு நின்றது அந்த உருவம். அவனுடைய சொப்பனம் அப்படியே பலித்து வந்தது. அவன் நிற்கவில்லை; வெறிபிடித்தவன் போல் வேகமாக ஓடினான்.

"சோனு, எங்கே போறே? உன் பெரியப்பா ஆத்துக்கு ஸ்நானம் பண்ணப் போயிருக்கார்" என்று குமாஸ்தா அர்ஜுன் கூறினான்.

சோனு அவனுடைய பேச்சைக் கேட்க நின்றால்தானே? அவன் மைதானத்தைக் கடந்து, மான்களும் மயில்களும் தங்கும் பகுதியைக் கடந்து, தோப்பைத் தாண்டி, சவுக்கு மரங்களின் நிழலில் வந்து நின்றுகொண்டு தலை நிமிர்ந்தான் — அவன் கண்ட கனவு அப்படியே பலிக்கிறதா என்று பார்க்க.

அவனால் நமபவே முடியவில்லை. இந்தப் பக்கத்தில் பல அபூர்வ, உள்நாட்டு வெளிநாட்டுப் பூச்செடிகள், மரங்கள்... அவன் மரக் கிளைகளின் இடைவெளி வழியே பார்த்தான். கனவு அப்படியே பலித்துவிட்டது.

முன்பு தெளிவாக இல்லாதது இப்போது, இங்கு வந்த பிறகு தெளிவாகத் தெரிந்தது. அவன் உற்சாகத்துடன் கூவிக்கொண்டே ஓடினன். "பெரிய...யப்பா பெரியப்பா! நான்தான் சோனு! பெரியப்பா! பெரியப்பா!"

என்ன உற்சாகம்! என்ன ஆனந்தம்! அவன் தலைதெறிக்க ஓடினன். அவனுக்கு மிகவும் பிடித்தமான ஒருவர் கிடைத்துவிட்டார். அவருடைய நாய்கூட அவனைப் பார்த்த மகிழ்ச்சியில் வாலை ஆட்டியது. பெரியப்பா தலை நிமிர்ந்து பார்க்கவில்லை. அவருடைய கைகால்களில் செடிகள் கீறின காயங்கள். தண்ணீரில் ஊறி ஊறிக் கால்கள் வெளுத்துப் போய்விட்டன. அவர் தம் நாயைக் கூட்டிக்கொண்டு தனியாகக் கிளம்பி எங்கெங்கோ சுற்றிக்கொண்டே நிலத்திலும் தண்ணீரிலும் நடந்து எப்படியோ அங்கு வந்து சேர்ந்துவிட்டார்.

சோனு அருகில் வந்ததும் நாய் கொஞ்சலாக உறுமியது. எவ்வளவு நாட்களாகி விட்டன, அது அவர்களுடைய வீட்டுக்கு வந்துசேர்ந்து! யாரும் சீராட்டி வளர்க்காமலேயே அது வளர்ந்து வந்தது. வீட்டில் இருப்பவர்கள் தின்று மீந்த சாப்பாட்டை அது சாப்பிடும். வீட்டில் அது இருப்பதையே யாரும் கவனிப்பதில்லை. யாரும் அதைக் கொஞ்சுவதில்லை. அப்படிப்பட்ட இந்த நாய் சோனுவுக்கு மிக விலை உயர்ந்ததாகத் தோன்றியது. அவனுடைய சொந்தப் பொருள்கள் அவனுடைய பெரியப்பா, அந்த நாய்—எல்லாம் அவனிடம் வந்து சேர்ந்துவிட்டன. இனிமேல் அவனுக்கு யாரிடமும் பயம் இல்லை.

டிராய் நகரத்துச் சிறுவர்கள் மரக்குதிரையை இழுத்துக்கொண்டு உற்சாகமாக நகரத்துக்குள் இழுத்துச் சென்றதுபோல் அவன் தன் பெரியப்பாவை இழுத்துக்கொண்டு போனன். இவ்வளவு தூரம் வந்த பிறகு அவருக்குச் சங்கோசம் வந்துவிட்டது போலும். அவருக்கு உள்ளே போக இஷ்டமில்லை. இவ்வளவு பெரிய வீட்டைப் பார்த்ததும் அவருக்கு அந்தக் கோட்டையின் நினைவு வந்துவிட்டது. பாலின் சொல்லுவாள், 'மணி, நீ நீலவர்ண 'டை' கட்டிக்கொள்; வெள்ளை அல்லது ஆரஞ்சு நிற 'டை' கட்டிக்கொள்! நீ கறுப்பு 'டை' கட்டிக்கொண்டால் உன் தோற்றத்தில் ஒரு கடுமை தோன்றி விடுகிறது!' என்று.

தம்முடைய உடையும் தோற்றமும் இந்த மாளிகைக்குப் பொருந்தாது என்று நினைத்திருக்கலாம் அவர். அவர் நாற்புறமும் பார்த்துக்கொண்டு நின்ருர். நீரைக் கடந்து வந்ததில் பாசியும் நீர்ச் செடிகளும் அவருடைய உடம்பில் ஒட்டிக்கொண் டிருந்தன. அவர் ஒரு ஜலதேவதை போலக் காட்சியளித்தார். நீர்ச்செடிகள் அவருடைய உடலில் முளைத்திருப்பது போலத் தோன்றின. சோனு

அவரை இழுத்துக்கொண்டு போய்க் குளத்தின் படிக்கட்டில் உட்கார வைத்தான். அவன், கையில் தண்ணீர் ஏந்திக்கொண்டு வந்து அவர் மேல் ஒட்டியிருந்த பாசியையும் இலைகளையும் உடம்பிலிருந்து கழுவிவிட்டான். அவர் கல்லால் சமைத்த பதுமை போல் அசையாமல் உட்கார்ந்துகொண்டு ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் பதுமையல்ல, உயிருள்ள மனிதர் என்பது அவருடைய கண்களைப் பார்த்தால்தான் தெரியும்.

குளத்தின் மறுகரையில் கமலா பிருந்தாவனியோடு பூஜைக்காகப் பூப்பறித்துக் கொண்டிருந்தாள். சோனு குதித்துக் குதித்துத் தண்ணீரில் இறங்குவதையும் பிறகு மேலே ஏறி வருவதையும் கவனித்தாள் அவள். படிக்கல்லில் ஒரு மனிதர் உட்கார்ந்திருந்தார். சோனு தண்ணீரால் அவருடைய உடம்பைத் துடைத்துவிட்டான். அவர்களுக்குப் பக்கத்தில் ஒரு நாய். அதுவும் சோனுவுடன் தண்ணீரில் இறங்கியது, அவனுடன் மேலே வந்தது.

கமலா மான்களும் மயில்களும் இருக்கும் இடங்களைத் தாண்டிப் புல்வெளியில் ஓடி அங்கு வந்தாள். சோனு முழங்காலிட்டு உட்கார்ந்து அந்த ஆளின் உடம்பிலிருந்து எதையோ அகற்றினான். பாசி, நீர்ச் செடிகளின் இலைகள். இந்த மனிதர் யார்? அவள் ஆச்சரியத்துடன் அவர்களுக்கு அருகில் நின்றுகொண்டு அந்த நாயையும், கல்போல் அசையாமல் அமர்ந்திருக்கும் மனிதரையும் பார்த்தாள். ஒன்றும் பேசாமல் தன் வேலையிலேயே கண்ணாயிருந்தான் சோனு.

"சோனு இது யாரு?" என்று வேறு வழியின்றிக் கமலாவே கேட்டாள்.

"என்னோட பெரியப்பா."

"உன் பெரியப்பாவா?"

"ஆமா, என்னோட மூத்த பெரியப்பா."

"பேசமாட்டாரா?"

"மாட்டார்."

"ஊமையா?"

"இல்லே."

"பின்னே ஏன் பேசமாட்டார்?"

"பேசுவார். ஆனா, "கேத்சோரத்சாலா!" அப்படீன்னு மட்டுந்தான் சொல்லுவார்."

"வேறே ஒண்ணும் பேசமாட்டாரா?"

"ஊஹூம்."

"அதென்ன பேச்சு, கேத்சோரத்சாலா?"

அதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை சோனு. அவன் பெரியப்பா வின் உடலைச் சுத்தம் செய்துவிட்டு, ''எழுந்திருங்க, பெரியப்பா!'' என்றான்.

''இவர் ஏன் தண்ணியிலே நனைஞ்சிருக்கார்?''

''பெரியப்பா நீஞ்சிண்டு வந்திருக்கார். அவரை ஒருத்தரும் கூட்டிக்கிண்டு வரல்லே. அவர் தானாவே நாயைக் கூட்டிக்கிண்டு வந்திருக்கார்'' என்றான் சோனு.

''உன்னோட பெரியப்பா பைத்தியமா?'' என்று கமலா கேட்டாள்.

சோனுவுக்குக் கோபம் வந்துவிட்டது ''பைத்தியம்னு யாரு சொல்றது?''

''பின்னே ஏன் பேசமாட்டேங்கறார்?''

சோனுவுக்கு மிகவும் கோபம். தன் பெரியப்பாவை யாராவது பைத்தியமென்று சொன்னால் அவனுக்குக் கோபம் வந்துவிடும். அவன் கமலா இருக்குமிடத்திலிருந்து அவரை அழைத்துக்கொண்டு போய்விட விரும்பினான்.

''வாங்க, பெரியப்பா! நான் சோனுவுக்கு அத்தை முறை. இல்லையா, சோனு?'' என்றாள் கமலா.

இதைக் கேட்டுச் சோனுவுக்கு மிகவும் சந்தோஷம் ஏற்பட்டது. ''ஆமா, பெரியப்பா! இது கமலா அத்தை'' என்றான் அவன்.

மணீந்திரநாத் கமலாவைப் பார்த்தார். இந்தப் பெண்ணின் கண்கள் ஏன் நீலமாக இருக்கின்றன? அவர் முழங்காலிட்டு உட்கார்ந்தார். ஒரு பிரும்மாண்டமான ராட்சசன் ஒரு சிறு பொம்மை போன்ற பெண்ணைக் கைகளில் ஏந்தித் தம் கண்களுக்கருகில் கொண்டு வருவதுபோல் அவளைத் தூக்கினார். ''பெண்ணே, நீ யார்? உன்னை எங்கேயோ பார்த்திருக்கிறேனே!'' என்றார்.

அடங்காப்பிடாரிப் பெண்ணான கமலாகூடப் பயந்து போய் விட்டாள். சோனுவுக்கு வேடிக்கையாக இருந்தது. முதலில் அவன் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் கமலா அழ ஆரம்பித்துவிடுவாள் போல் இருந்தது. ''கமலா, பயப்படாதே!'' என்று அவன் அவளைச் சமாதானம் செய்தான். பிறகு அவன் தன் பெரியப்பாவின் பக்கம் திரும்பிப் பார்த்தான். கோபத்துடன் சோனு அவரைப் பார்த்ததும் அவர் சாதுவாகிவிட்டார்; கமலாவைக் கீழே விட்டுவிட்டார். கமலா இப்போது ஓடிப் போயிருக்கலாம். ஆனால் சோனுவின் தைரியத்தைப் பார்த்ததும் அவளுக்குத் தன் பயங்கொள்ளித்தனத்தைக் குறித்து வெட்கம் ஏற்பட்டது. சோனு சற்றும் பயமின்றி அவரை இழுத்துக் கொண்டு போனான். அவ்வளவு பெரிய மனிதர் சோனுவிடம் அடங்கி நடப்பதைப் பார்த்துக் கமலாவுக்கும் பயம் தெளிந்துவிட்டது. அவள்

அவருடைய இடக்கையைப் பிடித்துக்கொண்டாள். சோனு வலக் கையைப் பிடித்துக்கொண்டான். நாய் அவர்களுக்கு முன்னல் நடந்தது.

அந்த டிராய் நகரத்துக் குதிரையை இழுத்துக்கொண்டு அவர்கள் பூஜை மண்டபத்துக்குள் நுழைந்ததும் அங்கே பெரிய அமளி ஏற் பட்டது. அந்த ஆள், அந்தப் பைத்தியக்கார மனிதர்—மறுபடி இங்கே வந்திருக்கிருர்! மணீந்திரநாத் அப்பாவிபோல் முகத்தை வைத்துக் கொண்டு துர்க்கையின் பதுமையைப் பார்த்தவாறு நின்ருர். மாளிகையிலிருந்த சிறுவர், சிறுமியர், அங்கு வேலை பார்ப்பவர்கள், மாளிகையின் சிறிய எசமானர் உட்பட எல்லாரும் அங்கு வந்து விட்டார்கள். சிறிய எசமான் பூபேந்திரநாத்தைக் கூப்பிட ஆள் அனுப்பினுர். "காரியஸ்தரைக் கூப்பிடுங்க! அவரோட அண்ணு வந்திருக்கார்னு சொல்லுங்க!" என்ருர்.

சாதுவான பையனைப் போல் இப்போது துர்க்கையைப் பார்த்துக் கொண்டு நின்ருர் மணீந்திரநாத். மேலே லஸ்தர் விளக்குகள் தொங்கின.

"துர்க்கையம்மனுக்கு நமஸ்காரம் செய்யுங்க" என்ருன் சோனு.

மணீந்திரநாத் உடனே கீழேவிழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். அவருடைய கைகள் இரண்டும் முன்னல் நீட்டிக் கொண்டிருந்தன. இப்போது யாராலும் அவரைத் தூக்கமுடியாது. சிறுவர்கள் இந்தக் காட்சியைப் பார்த்துச் சிரித்தார்கள். இது சோனுவுக்குப் பிடிக்கவில்லை. அவன் அங்கிருந்தே நகர்ந்து போய் விட விரும்பினுன். இரண்டாவது எசமான்—அமலா கமலாவின் தந்தை சிறுவர்களை அதட்டினுர். ஜமீன் உத்யோகஸ்தர்கள் சிலர் அங்கு நின்றுகொண் டிருந்தார்கள். பாபுவுக்கு அவர்கள் எல்லாரையும் தெரியாது. தூரத்திலிருந்தெல்லாம் ஜமீன் காரியஸ்தர்களும் குமாஸ் தாக்களும் பூஜை சமயத்தில் அங்கே வந்து கூடுவார்கள். வரும்போது கரும்பு, வாழைப்பழம், பால், மீன் இப்படி அந்த அந்தப் பகுதியில் விசேஷமாகக் கிடைக்கும் பொருள்களைத் தங்கள் காணிக்கையாகக் கொண்டு வருவார்கள். பாபு அவர்களில் ஒருவரைக் கூப்பிட்டு, "காரியஸ்த மாமா இன்னும் ஏன் வரலேன்னு பார்த்துக்கிட்டு வாங்க!" என்று கூறினுர்.

மேலும் சாஷ்டாங்கமாகப் படுத்துக் கிடந்தார் மணீந்திரநாத். அவருடைய உடம்பு விறைத்தாற் போல் இருந்தது. எழுந்திருக்கச் சொன்னுலொழிய அவர் எழுந்திருக்க மாட்டாரென்று சோனுவுக்குப் புரிந்தது. அவன் அவருடைய காதுக்கருகில் போய், "நமஸ்காரம் பண்ணினது போதும், எழுந்திருங்க!" என்ருன்.

இவ்வாறு சொல்லி அவன் அவருடைய கையைப் பற்றியதும் அவர் எழுந்துவிட்டார். அவருடைய ஈர உடையில் மண்ணும் சேறும் ஒட்டிக்கொண் டிருந்தன.

பூபேந்திரநாத் அங்கு வந்ததும் திகைத்துப் போய்விட்டார். தம்பி தம்மைப் பார்ப்பதைக் கவனித்த மணீந்திரநாத் சோகத்துடன் சோனுவின் பக்கம் திரும்பிப் பார்த்தார். "பார்த்தியா, சோனு! இவன் என்னை எப்படிப் பார்க்கறான், பாரு!"

ஊரிலிருந்து கிளம்பும்போது, இங்கே தம்பி பூபேந்திரநாத் இருக்கும் நினைவே இல்லை அவருக்கு. இப்போது அவர் பூபேந்திரநாத்திடம் மாட்டிக்கொண்டுவிட்டார். அவர் அங்கிருந்து நழுவிவிடப் பார்த்தார். அதற்குள் பூபேந்திரநாத் அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு விட்டார். அவரை விட்டுவிட்டால் எங்கே போய்விடுவாரோ என்ற பயத்தில் மணீந்திரநாத்தை இறுகப் பிடித்துக்கொண்டார் பூபேந்திர நாத். பிறகு எல்லாரையும் கூட்டம் போடாமல் நகர்ந்துபோய் விடும்படி சொன்னார். மணீந்திரநாத் எப்படி இவ்வளவு தூரம் பிரயாணம் செய்தார் என்று கேட்கவில்லை. 'நீந்தியே வந்திருப்பார். இவரால் என்னதான் செய்யமுடியாது!' என்று நினைத்தபோது, பூபேந்திரநாத்தின் மனம் துக்கத்தில் ஆழ்ந்தது. "அம்மா, இதுதான் உன் விருப்பமா?" என்று கேட்பதுபோல் அவர் துர்க்கையம்மனைப் பார்த்தார்.

இரண்டு சகோதரர்களையும் பார்த்துக்கொண் டிருந்த துர்க்கையின் அகன்ற கண்களில் புன்சிரிப்பு தவழ்ந்தது. அங்கிருந்து சீக்கிரம் நகர்ந்துபோக விரும்பினார் பூபேந்திரநாத். ஏனென்றால் பூஜை மண்டபத்தின் மேல்மாடியின் பால்கனியின் மறைவிலிருந்துகொண்டு நூற்றுக்கணக்கான கண்கள் அவர்களைப் பார்த்துக்கொண் டிருப்பது அவருக்குத் தெரியும். அப்படிப் பார்க்கும் பெண்கள் மணீந்திரநாத் தின் அழகான, வாட்டசாட்டமான, கம்பீரம் நிறைந்த தோற்றத்தைப் பார்த்துப் பரிதாபப்படுவார்கள். ஆகா, என்ன அழகு! என்ன சிவப்பு! குழந்தை மாதிரி கள்ளங்கபடு இல்லாத முகம்! சமுத்திரத்தில் வழி தவறிவிட்ட மாலுமியைக் கப்பிக்கொள்ளும் சோகம்போல மணீந்திர நாத்தின் கண்களிலும் சோகம் நிறைந்திருந்தது. இதையெல்லாம் கவனித்த பூபேந்திரநாத்தின் கண்களில் நீர் சுரந்தது.

ஜோட்டன் காலையிலிருந்தே முகத்தைத் தூக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். நீலநிற ஆகாயத்தைப் பார்த்ததும், அதில் சந்திரனைப் பார்த்ததும் சரத்காலம் வந்துவிட்டது என்று தெரிந்துவிடும் அவளுக்கு. இது துர்க்கா பூஜை சமயம். இங்கே தர்காவில் உட்கார்ந்திருக்கும் போதுகூட இந்த விஷயம் அவளுக்குத் தெரிந்துவிடும். பார்க்கப் போனால் இதைத் தர்க்கா என்று சொல்லக் கூடாது. ஒரு பெருங்காட்டில் வனவாசியாக வாழ்ந்தாள் ஜோட்டன். அவள் தன் பிறந்த வீட்டுக்குப் போய் இரண்டு வருடங்கள் – ஏன், அதற்கு மேலேகூட ஆகிவிட்டன. பக்கிரி சாயபு அவளை அழைத்துக் கொண்டு போகவில்லை.

சரத்காலம் வந்ததும் ஆகாயத்தில் சந்திரன் பெரிதாகக் காட்சியளித்து, காடுபூராவும் நிலவைப் பரப்பினான். ஆகாயத்தைப் பார்த்தாலே மனம் என்னவோ செய்யும். பிரதாப் சந்தாவின் வீட்டுத் துர்க்கையம்மன், அம்மனின் மூக்கில் மூக்குத்தி எல்லாமே அவள் நினைவுக்கு வந்தன. நினைவுக்கு வந்ததுமே மனத்தில் ஏக்கம் பிறந்தது. எவ்வளவு தடவை பக்கிரிசாயபுவிடம் கேட்டிருக்கிறாள், "என்னை எங்க ஊருக்குக் கூட்டிக்கிட்டுப் போங்க" என்று. அந்த மனிதர் அதைக் காதிலேயே போட்டுக்கொள்வதில்லை.

நாளுக்கு நாள் அவளுடைய உடல் பலவீனமாகி வந்தது. அவளால் மறுபடி பிறந்த வீட்டுக்குத் திரும்பிப் போக முடியுமா என்பதே சந்தேகந்தான். அந்த மனிதருக்கு இந்தத் தர்கா மூலையிலிருந்த குடிசைதான் சொர்க்கம். அவர் குடிசைக்குள் எப்போதும் உட்கார்ந்துகொண்டு ஹுக்கா பிடிப்பார், உருதுப் பாட்டுக்கள் பாடுவார். அந்தப் பாட்டுக்களின் பொருள் கொஞ்சமும் புரியாது ஜோட்டனுக்கு. அவர் அவற்றை வங்காளியில் மொழி பெயர்த்தால் ஜோட்டனுக்குச் சிரிப்புவரும்.

"ஏன் சிரிக்கறே, இப்படி?"

"எங்கே சிரிச்சேன்?"

"நீ சிரிக்கல்லே?"

"சரி, இனிமே சிரிக்கல்லே. சிரிப்பு வந்தாலும் சிரிக்கல்லே." அவள் முகத்தை 'உம்'மென்று வைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பாள்.

"ஏன் ஒருமாதிரியா இருக்கே?" என்று பக்கிரிசாயபு கேட்பார்.

ஜோட்டன் பதில் சொல்லமாட்டாள்.

"ஏன் பதில் சொல்லமாட்டேங்றே?"

"என்ன பதில் சொல்லணும்?"

"என்ன மனசிலே இருக்கோ, அதைச் சொல்லறது."

"என் ஊருக்குப் போகணுமின்னு தோணுது எனக்கு."

''ஊருக்குப் போனு எங்கே தங்குவே? உன்னோட தம்பிதான் வேறே கல்யாணம் பண்ணிக்கிட்டிருக்கானே! புதுப் பெண்டாட்டி உன்னை லட்சியம் பண்ணுவாளா?''

''பண்ணுமே என்ன? நல்லாப் பண்ணுவா.''

''ரொம்பத் தூரமாச்சே! அவ்வளவு தூரம் படகை ஓட்டிக்கிட்டுப் போக முடியுமா என்னுலே?''

''நானும் துடுப்பு வலிச்சு உதவி செய்யறேனே.''

''யாராவது பார்த்தா என்ன சொல்வாங்க?'' என்று கேட்டுவிட்டு ஏதோ நினைவிலாழ்வார் பக்கிரி சாயபு. அவருக்கு வயிற்றில் ஏதோ வேதனை.

சரத்காலமானதால் காட்டிலும் புதர்களிலும் புழுக்களும் பூச்சிகளும் பெருகிவிட்டன. சரத்காலமானதால் தண்ணீரிலிருந்து செடி கொடிகள் அழுகிய நாற்றம் வெளிப்படும். ஆறுகள், வாய்க்கால்கள், காடுகள் இவற்றிலிருந்து தண்ணீர் இறங்க ஆரம்பித்ததும் அதில் இவ்வளவு காலம் மூழ்கிக் கிடந்த செடிகள், இலைகள் எல்லாம் அழுகத் தொடங்கும். தர்காவின் நாற்புறமும் செடிகொடிகளும் பாசி கோரைகளும் காடாக மண்டிக்கிடந்தன. வெளியே போக வழி கூட இல்லை.

தர்காவுக்கு வருவதானுல் படகைத் தள்ளிக்கொண்டு வர வேண்டும். தர்காவின் கிழக்குப் பக்கத்தில் மேக்னு ஆறு ஓடுகிறது. மேக்னுவின் கரையில் இந்தக் காடு நடுநிசியில் நிசப்தமாக இருக்கிறது. பூச்சிகள் எழுப்பும் ஒலிகூடப் பயத்தைத் தருவதாக இருக்கிறது நாற்புறமும் பெரிய பெரிய பூண்டுச் செடிகள்; அரச மரம். அதற்குக் கீழே — ஆயிரக்கணக்கான வருடங்களாக அந்தப் பகுதியில் உபயோகத்திலிருக்கும் இடுகாடு. ஓர் இடத்தில் இடிந்த மசூதி, பாழடைந்த கிணறு, உடைந்த மேடை, சிறுசிறு செங்கற் குவியல்கள்; சில மண்ணோடு மண்ணுகக் கலந்துவிட்டன. இரண்டடி எடுத்து வைத்தாலும் கால்களில் செடிகொடிகள் சுற்றிக்கொள்ளும். அவ்வளவு அடர்த்தியாகச் செடிகொடிகள் வளர்ந்திருந்தன அங்கே.

வெயில் காலத்தில் ஓர் ஒற்றையடிப் பாதை தெரியும். மழைக்காலத்தில் யாரும் காட்டுக்குள் நுழைய விரும்புவதில்லை. தண்ணீர் ஓரத்திலேயே பிணத்தைப் புதைத்துவிட்டுப் போய்விடுவார்கள். ஏதாவது பிணம் புதைக்கப்படும்போதுதான் அங்கே சில மனிதர்கள் கண்ணுக்குத் தெரிவார்கள். அங்கிருந்து இரண்டு கோச தூரத்தில் சில வீடுகள் உண்டு. முடிந்த வரையில் யாரும் இந்தப் பக்கம் வருவதில்லை. கஷ்டகாலத்தில் பக்கிரிசாயபுவிடம் ஆசி பெற்றுப் போக யாராவது வருவார்கள். தூரத்திலிருந்து குரல் கொடுத்தால் பக்கிரிசாயபு புதர்களைத் தாண்டி வந்து, தேவைக்கேற்றவாறு மாலையோ,

தாயத்தோ கொடுத்துவிட்டுப் போவார். மக்கள் ஒருவிதப் பயம் காரணமாகக் காட்டுக்குள் நுழைவதில்லை. பக்கத்தில் ஒரு நீண்ட கால்வாய். இறந்துபோன மலைப்பாம்புபோல் இரவும் பகலும் அசையாமல் கிடந்தது அது. மழைக்காலம் வந்துவிட்டால் இந்தக் கால்வாய்க்கு உயிர்வந்துவிடும். ஆற்றின் போக்குக்கு எதிர்த் திசையில் செல்லும் சில படகுகள் கால்வாயைக் குறுக்கு வழியாகப் பயன்படுத்தும். அப்படிச் செல்லும் படகுகள் பயந்துகொண்டே அல்லாவின் பெயரையோ, பகவானின் பெயரையோ சொல்லிய வாறு எப்படியோ இந்த இடுகாட்டுப் பிரதேசத்தைக் கடக்கும்.

யாராவது இறந்துபோனால் அதுதான் பக்கிரிசாயபுவுக்குத் திருநாள். அப்போது அவருக்குக் காசு கிடைக்கும். சாப்பிட வெற்றிலை கிடைக்கும். அவர் மாலைகளையும் தாயத்துகளையும் கழுத்தில் அணிந்துகொண்டு, "அல்லா ஏக் ரகிமானே ரகீம்!" என்று சொல்லிய வாறே பிணத்தைச் சுற்றிச் சுற்றி வருவார்.

காட்டுக்குள் ஒளிந்துகொண்டு பலவிதச் சித்து விளையாட்டுக்கள் செய்துகாட்டப் பிடிக்கும் அவருக்கு. இடுகாட்டுக்குப் பிணம் வந்து விட்டால் அவருக்கு உற்சாகம் பிறந்துவிடும். கால்வரையில் மறையும்படி நீண்ட கறுப்பு மேலங்கியை அணிந்துகொள்வார். கழுத்தில் சிவப்பு, நீலம், மஞ்சள்நிறப் பெரிய பெரிய மணிகள் கோத்த மாலைகளைப் போட்டுக்கொள்வார். அப்போது அவரைப் பார்த்தால் முஸ்லிம் சந்நியாசி போலவே இருக்கும். அவருடைய தலைமயிர் சுருண்டு நரைத்திருக்கும். கைகளை உயரத் தூக்குவார். அவருடைய குறுந்தாடியில் பூண்டு எண்ணெய் பளபளக்கும். முஸ்கிலாசான் விளக்கைக் கையிலேந்திக்கொண்டு யாரோ காட்டுக் குள் நடமாடுவதைப் பிணத்தைப் புதைக்க வருபவர்கள் பார்ப்பார் கள். அவர்கள் பயத்தால் மரமாகிவிடுவார்கள். அவருடைய திடீர்த் தோற்றம் அவர் தரையைப் பிளந்துகொண்டு கிளம்பினரோ என்ற பிரமையை உண்டாக்கும். அவர்கள் தங்கள் இஷ்டப்படி அவருக்கு ஏதாவது காணிக்கை கொடுப்பார்கள். இறந்துபோன மனிதனுக்குச் சொந்தமாயிருந்த சில பொருள்களை அவரிடம் கொடுத்துவிட்டுப் போவார்கள். இதன் மூலந்தான் அவருடைய வாழ்க்கை நடந்து வந்தது.

ஜோட்டன் அப்போது குடிசைக்குள் உட்கார்ந்துகொண்டு இந்த மனிதரின் சேஷ்டைகளைப் பார்த்துச் சிரிப்பாள். பகல்வேளை யில் அங்கியில் ஆயிரம் இடங்களில் ஒட்டுப் போட்டுத் தைத்துக் கொண்டே பக்கிரிசாயபு ஆடுவதையும் குதிப்பதையும் அவள் பார்த்து ரசிப்பாள். அப்போது அவரைப் பார்த்து யார் சொல்வார்கள், 'அவர் ஒரு பரம சாது, உண்மையில் பயந்த சுபாவமுள்ளவர்' என்று?

அப்படிப்பட்டவர் பிணத்தைப் புதைக்க யாராவது வந்தால் தன் ஜீவனோபாயத்துக்காக எப்படி மாறிவிடுகிறார்! தாம் ஒரு பெரிய துறவி என்று காட்டிக்கொள்வதற்காக அவர் பலவிதச் சித்துவேலைகள் செய்வார். இரவுநேரத்தில் மரஉச்சியில் நெருப்பை மூட்டி வைத்துக்கொண்டு மக்களைப் பயமுறுத்துவார்.

ஆகவே துர்க்காபூஜை சமயத்தில் ஜோட்டனின் மனத்தில் சோகம் தோன்றுவதை அவர் புரிந்துகொள்ள வாய்ப்பில்லை. வருடம் முழுவதும் குடிசைக்குள்ளே படுத்துக்கிடப்பார் அவர். நினைத்தபோது வெளியே போய்ப் பூண்டு சேகரிப்பார். குடிசைப் பரணில் பூண்டு குவியலாகக் குவிந்து கிடக்கும். அவற்றைப் பெரிய பெரிய மண்பானைகளில் தண்ணீரில் போட்டு ஊறவைப்பார். நறுக்கின பூண்டு தண்ணீரில் ஊறினால் அதிலிருந்து ஒரு கொழ கொழ எண்ணெய் வரும். அந்த எண்ணெயில்தான் குடிசையில் விளக்கு எரியும், முஸ்கிலாசானின் விளக்கு எரியும். அவர் அந்த எண்ணெயைச் சிறு சிறு அகல்களில் ஊற்றி மரங்களின் உச்சியில் வைத்துவிடுவார். பிணத்தைப் புதைக்க மக்கள் வரும் போது அவர் அந்த விளக்குகளை ஏற்றிவிடுவார். இந்த மாதிரி வேலைகள் எல்லாம் செய்வார் அவர்.

ஜோட்டன் குலுங்க குலுங்கச் சிரிப்பாள். அவர் ஒரு பெரிய எலும்புத் துண்டு வைத்திருந்தார்; சில வேர்களைச் சேகரித்து வைத்திருந்தார். 'நான் கஷ்டப்படறவன், நான் நோயாளி!' என்று யாராவது தூரத்திலிருந்து குரல் கொடுத்தால் உடனே வேறு மனிதராகி விடுவார் பக்கிரிசாயபு. துறவிபோல் வேடம் போட்டுக் கொண்டு, அவர் மந்திரங்களை உச்சரித்தவாறு, வேர்கள், மூலிகைகள், மாலைகள், தாயத்துக்கள் எடுத்துக்கொண்டு வருவார். "அஞ்சேகால் அணா கொடு. தர்காவிலே படையல் செய்யறதுக்காக இந்தக் காசு!" என்பார்.

இப்படிப்பட்ட பக்கிரி சாயபுவுக்கு ஜோட்டனின் வேதனை எப்படித் தெரியும்? இந்துக் குடியிருப்புக்கு அருகில் பிறந்து வளர்ந்த ஜோட்டன், விசேஷ நாட்களில் இந்துக் குடும்பங்களுக்குப் பொரி பொரித்து, அவல் இடித்துத் தந்த ஜோட்டன், துர்க்காபூஜை சமயத்தில் 'உம்'மென்று முகத்தை வைத்துக்கொண்டு காட்டுக்குள் சுள்ளி பொறுக்கப் போவதன் காரணம் அவருக்கு எப்படித் தெரியும்?

சூரியன் உதிக்கலாமா என்று பார்த்துக்கொண் டிருந்தான். சூரியன் உதித்துவிட்டால்கூட அவனை வெகுநேரம் வரை பார்க்க முடியாதபடி அவ்வளவு அடர்த்தியாக மரங்கள் வளர்ந்திருந்தன. வெயில் கொஞ்சங் கொஞ்சமாக மரக்கிளைகளின்மேல் விழுந்தது. மரங்களும் செடிகொடிகளும் ஒன்றுடன் ஒன்று பின்னிக்கொண்

டிருந்தன. ஜோட்டன் இருகைகளாலும் செடிகொடிகளை விலக்கிக் கொண்டு காட்டுக்குள் நுழைந்து போனாள். பல கல்லறைகளைக் கடந்து தண்ணீர்க் கரைக்கு வந்தாள். அப்பால் கோரைக்காடு. இப்போது ஆஸ்வின்—கார்த்திக் மாதமாக இருப்பதால் ஆமைகள் கரைக்கு வந்து முட்டையிடும். இங்கே ஊர் ஒன்றும் இல்லை, தானிய வயல்கள் இல்லை, இந்துக் குடியிருப்பு இல்லை. ஆகையால் கத்தியால் திருட்டுத்தனமாகக் கதிர்களை அறுக்க முடியாது. முட்டைகளை எடுத்துக்கொண்டு டாகுர் வீட்டில் கொடுக்க முடியாது. முட்டைகளுக்குப் பதிலாக வெற்றிலைபாக்குக் கேட்டு வாங்கிக் கொள்ள முடியாது. இங்கு மக்களே கிடையாது. வெறும் மரங்களும் செடிகளுந்தான்.

பக்கிரிசாயபுவுக்குக் கேட்கும்படியாக உரக்க அழவேண்டும் போல் இருந்தது ஜோட்டனுக்கு. பக்கிரிசாயபுவால் இப்போது பட கோட்ட முடியாது. அவர் நாளுக்குநாள் வலுவிழந்து வந்தார். அவர் சக்கரவாகப் பறவையைப் பிடிப்பதற்காக ஒரு பொறி வைத்திருந்தார். அந்தப் பறவையின் நெஞ்சைச் சாப்பிட்டால் இழந்த பலத்தைத் திரும்பப் பெறலாம். அப்படித திரும்பப் பெற்றுவிட்டால் அவர் ஜோட்டனை அவளுடைய பிறந்த வீட்டுக்கு அழைத்துப் போவார். இதை நினைக்கும்போதே ஜோட்டனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்தச் சமயததில் இரண்டு கால்கள், வெள்ளை யாக! கோரைக்காட்டில் இரண்டு வெள்ளைக் கால்கள், துர்க்கை அம்மனின் கால்களைப் போல் அழகான கால்கள்! ஜோட்டனுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. கால்களின் மேல் சூரியனின் ஒளி விழுந்தது. ஒரு வண்ணத்துப் பூச்சி மீண்டும் மீண்டும் அந்தக் கால்களின் மேல் உட்கார்ந்தது. கால்களின் கொலுசு ஒலித்தால் அந்த ஒலி காட்டுக்குள் மங்கி மறைந்துவிடு வதுபோல் ஏதோ ஒரு ஒலி ஜோட்டனின் நெஞ்சில் கிளம்பி அவளுள்ளே முழுகிவிட்டது. அந்தப் பாதங்கள் நிஜமாகவே துர்க்கையின் பாதங்கள்தாம் என்று நினைத்தாள் ஜோட்டன்.

சிவனுக்காக வனவாசம் செய்துகொண் டிருக்கும் கௌரி கோரைக் காட்டில் ஒளிந்திருக்கிறாளோ?

சைத்திரமாத விழாவில் கௌரி நடனமாடுவாளே, அந்த நடன முத்திரை அந்தப் பாதங்களில் தெரிந்தது. ஜோட்டன் மலர மலர அவற்றைப் பார்த்துக்கொண்டு நின்றாள். என்ன செய்வதென்று புரியவில்லை அவளுக்கு. அவளுக்கு அந்தப் பாதங்களை அணுகத் துணிவு பிறக்கவில்லை. அவை யுவதியின் பாதங்கள். பாக்கி உடலைக் கோரைப் புற்கள் மறைத்திருந்தன. கொலையாக இருக்கலாம். ஆனால்

இந்த இடத்தில், பீரின் தர்காவில், யார் கொலை செய்யத் துணிந் திருப்பார்கள்?

ஜோட்டன் நடுங்கும் கைகளுடன் கோரையை விலக்கிப் பார்த்த போது — பூஜைக்குப் பின் பிரதிமையைத் தண்ணீரில் விசர்ஜனம் செய்யும்போது பிரதிமை மல்லாந்து கிடக்குமே அதுபோல், மாலதி கைகால்களைப் பரப்பிக்கொண்டு படுத்திருப்பது தெரிந்தது. அசுரர் களை அழித்த அம்மன்! "அம்மா, நீயா? மாலதி! நீயா இப்படி விரித்த தலையுடன், ஆகாயத்தைப் பார்த்தவாறு, மல்லாந்து படுத்துக் கிடக்கிறாய்! உன்னை இங்கே கொண்டு வந்தது யார்?"

ஜோட்டன் தாயைப் போல் மாலதியின் தலைமாட்டில் உட்கார்ந்து கொண்டு அவளுடைய தலையைத் தூக்கித் தன் மடியில் வைத்துக் கொண்டாள். மாலதியின் நெஞ்சு, முகம் இவற்றைத் தடவிப் பார்த்தாள். உயிர் இருந்தது. நினைவுதான் இல்லை. தொப்பூழுக்குக் கீழே யாரோ இரவு முழுவதும் கடித்துக் குதறிவிட்டுப் போயிருக்கிறார் கள். செத்துவிட்டாள் என்று நினைத்து அவளை அங்கேயே எறிந்து விட்டுப் போயிருக்கிறார்கள். உடம்பில் பல இடங்களில் பல் பதிந் திருந்தது. இரத்தக் கறை.

ஜோட்டன் மேலும் தாமதிக்கவில்லை. பந்தயக் குதிரையைப் போல் வேகமாகக் காட்டினூடே ஓடிக்கொண்டே அவள் கூவினாள். "பக்கிரி சாயபு, இங்கே வாங்க. பீரோட தர்காவிலே என்ன அநியாயம் நடந்திருக்குன்னு வந்து பாருங்க! சீக்கிரம் வாங்க. கோரைக் காட்டிலே யாரோ துர்க்கையம்மனை விசர்ஜனம் பண்ணி யிருக்காங்க." ஜோட்டன் புயல் போல் குடிசைக்குள் நுழைந்து ஒரு புடைவையை எடுத்துக்கொண்டு பக்கிரிசாயபுவிடம், "நீங்க என் பின்னாலேயே வாங்க" என்று கூறி நடந்தாள்.

சற்றுத் தூரத்தில் அவரை நிறுத்தி வைத்துவிட்டு, "கண்ணுக்கு என்ன தெரியுது?" என்று ஜோட்டன் கேட்டாள்.

"ரெண்டு பாதம்."

"யாரோட பாதம் மாதிரி?"

"துர்க்கையம்மனோட பாதம் மாதிரி."

"அப்ப நீங்க இங்கேயே நில்லுங்க!" என்று சொல்லிவிட்டு ஜோட்டன் முன்னால் போய் மாலதியின் உடலைப் புடைவையால் மூடினாள். பிறகு பக்கிரிசாயபுவை ஜாடையாய் அழைத்து, "நீங்க தலைப்பக்கம் தூக்குங்க, நான் கால் பக்கம் தூக்கறேன்" என்றாள்.

இப்படித் தூக்கிச் செல்வது அவர்களுக்குக் கஷ்டமாக இருந்தது. சற்றுத் தூரம் சென்று அவர்கள் மாலதியை ஒரு மர நிழலில் புல்லின் மேல் படுக்க வைத்தார்கள். சற்று ஆசுவாசப் படுத்திக்கொண்டு மறுபடியும் தூக்கிக்கொண்டு நடந்தார்கள்.

பக்கிரிசாயபு சொன்னார்: ''உன்னோடை துர்க்கையம்மன் தர்காவுக்கே வந்துட்டா. இனிமே நீ ஊருக்குப் போவானேன்?''

ஜோட்டனுக்கு மூச்சு வாங்கியதால் அவளால் பதில் சொல்ல முடியவில்லை. அவளுடைய கைகள் ரத்தத்தாலோ அல்லது வேறொரு திரவத்தாலோ பிசுபிசுவென்று இருந்தன. அவள் புல்லாலும் இலை களாலும் தன் கைகளைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் மாலதி யைத் தூக்கிக்கொண்டாள். நடு நடுவே மாலதியின் புடைவை செடி கொடிகளில் சிக்கிக்கொண்டு விலகிக்கொண்டது. ஜோட்டன் பக்கிரிசாயபுவைப் பார்த்துவிட்டுச் சொன்னாள்: ''இது நல்லா யில்லே. நீங்க இந்தப் பக்கம் பார்க்காதீங்க. அந்தப் பக்கம் பார்த் துக்கிட்டு வாங்க.''

''நான் பக்கிரி, என் பார்வையிலே குத்தமில்லே.''

''என்ன இருந்தாலும் நீங்க ஆம்பிளை. மரஞ் செடிகளை, பட்சிகளைப் பார்த்துக்கிட்டு இருங்க.''

''சரி'' என்று சொல்லிவிட்டுப் பக்கிரிசாயபு கண்களை மூடிக் கொண்டார்.

''நான் என்ன சொன்னேன், நீங்க என்ன செய்யறீங்க?'' என்று ஜோட்டன் கேட்டாள்.

''என்ன சொன்னே?''

''மரஞ்செடிகளை, பட்சிகளைப் பார்க்கச் சொன்னேன்.''

''அதுதானே பார்க்கறேன்.''

''கண்ணை மூடிக்கிட்டுப் பார்க்க முடியுமா?''

''கண்ணைத் திறந்துகிட்டுப் பார்க்கறதைவிட மூடிக்கிட்டா இன்னும் நல்லாப் பார்க்க முடியும் என்னுலே.''

''அப்போ திறந்துக்கிட்டே இருங்க.''

ஜோட்டன் மாலதியைக் கூப்பிட்டாள். ''மாலதி, ஏ மாலதி! கண் ணைத் திற. நீ எங்கே இருக்கேன்னு பாரு! பக்கிரிசாயபுகிட்டே இருக்கே நீ. ஒரு தடவை கண்ணைத் திறந்து பாரு மாலதி, மாலதி!''

ஊஹூம், மாலதிக்கு நினைவு இல்லை. ஜோட்டன் தண்ணீரை எடுத்து அவளுடைய முகத்தில் தெளித்தாள். நினைவு திரும்பவில்லை. இந்த இடத்தில் வெயில் இல்லை. பனி கூடக் கீழே புல்லின் மேல் விழாதபடி அவ்வளவு அடர்த்தியாக மரங்களும் செடிகளும் வளர்ந் திருந்தன. இன்னும் சற்றுத் தூரம் அவளைத் தூக்கிக்கொண்டு போய்விட்டால் அவர்களுடைய குடிசை வந்துவிடும். அங்கே போய் முதுகிலும் இடுப்பிலும் காலிலும் வெந்நீர் ஒத்தடம் கொடுத்தால் மாலதியின் வலி குறையும். காயங்களைத் துடைத்து ஒரு பூவின் சாற்றைப் பூண்டு எண்ணெயுடன் கலந்து காயங்களில் தடவினால் மாலதி கண்களைத் திறந்துவிடுவாள்.

பக்கிரிசாயபு சற்றும் பதறவில்லை. இந்த அமைதியான இடு காட்டுப் பிரதேசத்துக்குச் சாக்ஷாத் துர்க்கையம்மனே வந்திருக் கிறாள் என்ற நினைப்பு அவருக்கு. என்ன நேர்ந்தாலும் பதறக் கூடிய சுபாவம் அவருக்கு இல்லை. அவர் மாலதியைக் குடிசையில் கிடத்திவிட்டுத் தம் ஹூக்காவைத் தேடினார்.

"இதுதான் உங்களுக்கு ஹூக்கா பிடிக்கிற நேரமாக்கும்!"

"நீ வெந்நீர் போடு. அதுக்குள்ளே ஹூக்கா பிடிச்சுடறேன். ஹூக்கா பிடிச்சாத்தான் மூளை தெளிவா இருக்கும்."

ஹூக்கா பிடித்தால்தான் மூளை தெளிவாக இருக்கும் என்பது வெறும் பேச்சுதான். என்ன ஆபத்து ஏற்பட்டாலும் மூளை கலங்காது பக்கிரி சாயபுவுக்கு.

நிதானமாக ஹூக்கா பிடித்துக்கொண்டே, "என்ன, தண்ணி காஞ்சு போச்சா?" என்று கேட்டார்.

ஜோட்டனிடம் இருந்த சாமான்கள் நான்கு அடுக்குகள், ஒரு பித்தளைக் கெட்டில், ஓர் உடைந்த கண்ணாடி, இவைதான். பூண்டு ஊற வைப்பதற்காக நான்கு பெரிய பெரிய தொட்டிகள் இருந்தன. ஒரு தொட்டியும் காலி இல்லை. காலியாக இருந்தால் பக்கிரிசாயபு ஒரு தொட்டியில் தண்ணீர் கொண்டு வந்திருப்பார். ஜோட்டன் கெட்டிலில் தண்ணீர் எடுத்து வந்தாள். மழைக் காலமாதலால் தண்ணீர் வெகு அருகிலேயே இருந்தது.

அடுப்பில் தண்ணீர் காய்ந்ததும் ஜோட்டன், "நீங்க இந்தப் பக்கம் வராதீங்க!" என்றாள்.

"ஏன்?" ஹூக்கா பிடித்துக்கொண்டே பக்கிரிசாயபு கேட்டார்.

"மறுபடி கண்ணைத் திறந்துகிட்டு நீங்க பார்க்க வேணுமின்னுதான்."

"நீ மட்டுந்தான் துர்க்கையம்மனை நல்லாப் பார்க்கணுமாக்கும்!"

ஜோட்டன் அவருடைய பேச்சைப் பொருட்படுத்தவில்லை. பக்கிரிசாயபுவின் சுபாவம் அது. உண்மையிலேயே ஒழுக்கம் நிறைந்த, கள்ளங்கபடமற்ற மனிதர் அவர். இருந்தாலும் பேச்சுக்குச் சொன்னார், "நான் பக்கிரிசாயபுதானே! எனக்கு எல்லாம் ஒண்ணு தானே! நான் பார்த்தால் என்ன?" என்று.

ஜோட்டன் மாலதியின் உடம்பை நன்றாக வெந்நீரால் கழுவி விட்டாள். எல்லாவற்றையும் துடைத்துவிட்டு அவளை மறுபடி விதவையாக வைத்திருக்க விரும்பினாள் ஜோட்டன். உலகத்தில் விரும்புவதெல்லாம் நடப்பதில்லை. எல்லாவற்றையும் விரும்பவும் கூடாது. மாலதிக்காக ஓர் அழகிய இளைஞனின் முகத்தை அடிக்கடி கற்பனை செய்துகொள்வாள் ஜோட்டன். எவ்வளவோ காலமாக மாலதியின் உடம்பு கடவுளுக்கு வரி கொடுப்பதில்லை. அந்த உடம்பு எவ்வளவு கஷ்டப்படும்!

மாலதியின் உடலைக் கழுவி விடும்போது இவ்வாறெல்லாம் நினைத்தாள் ஜோட்டன். எவ்வளவு கட்டுமஸ்தான இளமை பூரிக்கும் உடம்பு! ஜோட்டன் கையால் மாலதியின் இடுப்பைப் பிடித்துவிட்டாள். அவளைக் குப்புற படுக்க வைத்து இடுப்பின் மேல் வெந்நீரை ஊற்றினாள். உடம்பெல்லாம் அமுக்கிவிட்டு இரவு முழுவதும் அதற்குச் செய்யப்பட்ட கொடுமையை அதிலிருந்து விரட்டிவிட முயன்றாள்.

அவளை ஒரு பெரிய குளத்தில் மிதக்க விட்டிருப்பது போலவும் உடம்பில் எதையோ தடவி விடுவதைப் போலவும் மாலதிக்குத் தோன்றியது. அன்பும் ஆதரவுமாக இரு கைகள்...ஆனால் கண்ணைத் திறந்து பார்க்கும் துணிவு ஏற்படவில்லை அவளுக்கு. கண்களைத் திறந்துவிட்டால் மறுபடி அந்த மனிதப் பிசாசுகளைப் பார்க்க நேருமோ என்ற பயம்! அவள் எழுந்து உட்கார்ந்தாள், ஓடிப் போகத் தயாராக.

"பக்கிரி சாயபு, இங்கே வாங்க! மாலதிக்கு நினைவு வந்திடுச்சு!" என்று ஜோட்டன் கூவினாள்.

மாலதி கண்களைத் திறந்து பார்த்தாள்; ஜோட்டி அவளைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். மாலதி ஏதோ சொல்ல வந்தாள். ஆனால் அவளிடமிருந்து வார்த்தைகள் வரவில்லை. எவ்வளவோ காலத்துக்குப் பிறகு—பாலைவனங்களைக் கடந்து—பாலைவனச் சோலை ஒன்றை அடைந்துவிட்ட உணர்வு ஏற்பட்டது மாலதிக்கு. அவள் மறுபடி நினைவிழந்தாள்.

"பாவம், வயிறு ஒட்டிக் கிடக்கு!" என்று ஜோட்டன் பக்கிரிசாயபுவிடம் சொன்னாள்.

"சாப்பிட என்ன கொடுப்பே?"

"கொஞ்சம் பால் கொண்டு வாங்க. காய்ச்சிக் கொடுத்துப் பார்ப்போம்."

பக்கிரிசாயபு தாமதிக்கவில்லை. ஹுக்கா பிடித்த பிறகு எவ்வளவோ கேள்விகள் தோன்றின அவர் மனத்தில். இந்த யுவதியை இங்கே கொண்டுவந்து போட்டவர்கள் யார்? அவர்கள் எவ்வளவு பேர்? எவ்வளவோ சந்தேகங்கள், பிரச்னைகள்...மாலதி வீட்டுக்குத் திரும்பிப் போவாளா? போலீசின் தொந்தரவும் வரலாம்.

பக்கிரிசாயபு எவ்வளவோ காலமாக இங்கே வசித்து வருகிறார். இத்தகைய சம்பவம் ஒன்று கூட இதுவரை நிகழ்ந்ததில்லை. ஆனால் ஒரு தடவை இங்கே ஒரு சந்நியாசி வந்தான். கூடவே ஒரு பைரவி – பெண் துறவி - இருந்தாள். சீடர்களின் விருந்தோம்பலில் பொழுது கொஞ்ச காலம் சந்தோஷமாகக் கழிந்தது.

கடைசியில் பைரவி திலக்சாந்துடன் சேர்ந்துகொண்டு விட்டாள். பைரவியாக வந்தவள் பத்மதீகியின் சிறிய ஜமீந்தாரின் பட்டமகிஷி யாக ஆகிவிட்டாள். சந்நியாசி ஒரு பெரிய மரத்தின் உச்சாணிக் கிளையில் தூக்குப் போட்டுக்கொண்டு உயிரை விட்டான். நல்லவேளை, சிறிய ஜமீந்தார் பக்கபலமாக இருந்ததால் பக்கிரி சாயபு போலீசிட மிருந்து தப்பிக்கொண்டார். ஆனால் இப்போது ...? பயந்துபோய் விட்டார் பக்கிரி சாயபு. ஆனால் வாயைத் திறந்து எதுவும் சொல்ல வில்லை. அவருடைய இரண்டு ஆடுகளிடமிருந்து பால் கறக்கத் தண்ணீரில் இறங்கிப் போனார்.

ஜோட்டன் மாலதியை மடியின்மேல் வைத்துக்கொண்டு உட்கார்ந் திருந்தாள். காட்டுக்குள் சிட்டுக்குருவி கூவியது. கீழே ஒரே தண்ணீர், நாணல் காடு. கண்ணுக்குத் தெரியும் தூரம் வரை நாணல், காற்றில் அசைந்தது. சரத்கால வெயில் பறவைகளைப் போல் பறந்துவந்து இங்குமங்கும் குதித்து விளையாடியது. தண்ணீரின் மேலும் காற்று மெதுவாக வீசியது. விதவிதமான சிவப்புநிற, நீலநிறப் பூச்சிகள் பறந்தன. விதவிதமான பூச்சிகளின் ஒலிகள் அவளுடைய காதில் விழுந்தன. வெகு நாட்களுக்கு முன் அவளுடைய பெரிய பிள்ளை இறந்து போய்விட்டான். இந்த இடு காட்டிலேயே கல்லுக்கடியில் கிடக்கிறான் அவன். மண்ணைத் தோண்டினால் வெளியே வருவான் அவன். ஜோட்டன் தன் துக்கங் களை மறந்துவிட்டு மாலதியின் முகத்தைத் தாய்போல் அன்புடன் வருடினாள். தலைமயிரைத் தடவிக் கொடுத்தாள். பாசம் காரணமாக அவளுடைய கண்களில் நீர் வந்துவிட்டது.

மணீந்திரநாத் அந்த மாளிகைக்குள் நுழைந்ததுமே அநேக மாகத் தம் சுயநிலைக்கு வந்துவிட்டார். அவர் சோனாவுடன் ஆபீஸ் கட்டிடத்து வாசலில் உலவிக்கொண் டிருந்தார். பூபேந்திரநாத் அவருக்குத் தம் பெட்டியிலிருந்து ஆடைகள் எடுத்துக் கொடுத் திருந்தார். ஜிப்பாவைத் தாமே அவருக்குப் போட்டுவிட்டிருந்தார். மணீந்திரநாத் பூபேந்திரநாத்தைவிட உயரமாகவும் பருமனாகவும் இருந்ததால் பூபேந்திரநாத்தின் ஆடைகள் அவருக்குக் குட்டை யாகத்தான் இருந்தன. அவரைப் பார்த்துக்கொள்ளும் பொறுப்பை ராம்பிரசாத் ஏற்றுக்கொண் டிருந்தான். அவர் திடீரென்று தன்னந்

தனியாக எங்காவது போய்விடாமலிருக்க இந்த ஏற்பாடு. இந்த ஏற்பாட்டுக்கு அவசியமே இல்லே. மணீந்திரநாத் ஒரு வார்த்தையும் பேசுவதில்லே என்பதைத் தவிர, வேறு எவ்விதக் கோளாறும் அவரிடம் காணப்படவில்லே. அவர் எங்கோ வெளியூருக்குப் போய் விட்டுத் தம் ஊருக்குத் திரும்பி வந்திருப்பது போல் இயற்கையாக நடந்துகொண்டார். சோனுவின் கையைப் பிடித்துக்கொண்டு சுற்றுவதைத் தவிர வேறு எந்த விருப்பமும் அவருக்கு இல்லே என்று தோன்றியது.

திருவிழா நடைபெறும் வீடு. வீட்டுக்கு விருந்தாளிகளும் உறவினர்களும் வந்தவண்ணமாக இருந்தார்கள். படகுத் துறையில் நிறையப் படகுகள் நின்றன. தம்பட்டங்களின் ஒலி தண்ணீரில் மிதந்து சென்றது. சோனு தன் பெரியப்பாவின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு நாட்டிய மண்டபத்தைத் தாண்டிப் போனுன். கமலாவைத் தேடிக்கொண் டிருந்தான் அவன். கமலா எங்கே? இவ்வளவு பெரிய வீட்டில் அவளேக் கண்டுபிடிப்பது ரொம்பக் கஷ்டம். அவன் பெரியப்பாவுக்கு மயிலேக் காட்டப் போனுன். ஜமீந்தார் விட்டில் ஒரு சின்னஞ் சிறிய மிருகக்காட்சிசாலே வைத்திருந்தார். இரண்டு சிறிய புலிகள, மான்கள், மயில்கள், ஆமைகள் முதலானவை இருந்தன அதில். பெரியப்பாவுக்கு அவற்றையெல்லாம் காண்பிக்க வேண்டும். இப்போது கமலாவும் இருந்தால் நன்ருக இருக்கும். கமலா அவனுடைய தோழி. அவளுடன் எப்போதும் கூடவே இருக்கவேண்டுமென்று சோனுவுக்குத் தோன்றியது.

அவன் நாற்புறமும் கமலாவைத் தேடினுன். அவர்கள் வராந்தாவையும், பல விசாலமான அறைகளேயும் தாண்டிச் சென்ருர்கள். அவர்களுக்கு அறிமுகமில்லாத பல மனிதர்களேக் கடந்து போனுர்கள். சோனு முன்னுல் போக, பெரியப்பா அவனேத் தொடர்ந்தார்.

தலேக்கு மேல் லஸ்தர் விளக்கு. ஊமத்தம் பூப் போன்ற அதன் கண்ணுடிக்குள் ஒரு சிட்டுக்குருவி தன் சிறகுகளேப் படபடவென்று அடித்துக் கொண்டு பறந்தது. மணி பத்து அடித்தது. பெரிய அண்ணுவும் இரண்டாவது அண்ணுவும் பெரிய ஜமீந்தாரின் இரண்டாவது பிள்ளேயோடு துப்பாக்கியை எடுத்துக்கொண்டு வாத்து வேட்டையாட ஏரிகரைக்குப் போய்விட்டார்கள்.

சோனு எவ்வளவு தேடியும் கமலாவைக் காணேம். அவன் பெரியப்பாவை இழுத்துக்கொண்டு குளத்தங்கரைக்கு வந்தான். அவன் அவரிடம் சொல்ல விரும்பினுன்: 'நாம ஒரு புது இடத்துக்கு வந்திருக்கோம். சீதலக்ஷா நதி, மணல் படுகையிலே நாணல் காடு; குளத்தங்கரையிலே சிறுத்தை, மயில், மான் எல்லாம் இருக்கு-

தூரத்திலே யானை லாயம். ஆற்றங்கரையிலே பனைமரக் காடு. இன்னும் சிறிது தூரம் போனால் ஜமீந்தாரின் பங்காளிகளோட துர்க்கா பூஜை உற்சவம்.

"இதோ பாருங்க, இதுதான் மயில்!" பெரியப்பாவுடன் மயில் கூண்டுக்கு அருகில் உட்காரலாமா என்று யோசித்துக்கொண் டிருந்தபோது குளத்தங்கரை வழியே சந்திரநாத் வேகமாக நடந்து வருவதைக் கவனித்தான். தந்தையின் பார்வையிலிருந்து தப்பு வதற்காக அவன் தன் பெரியப்பாவுக்குப் பின்னால் மறைந்து கொண்டான். சந்திரநாத் வரிவசூல் விஷயமாக வெளியூர் போய் விட்டு இப்போதுதான் படகில் திரும்பியிருக்கிறார்.

சோனா தான் மிகவும் அநுபவமுள்ளவன்போல் பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு போய் எல்லா இடங்களையும் காட்டி னான். "இது ஆனந்தமயி காளி கோவில், இதுதான் கடைத்தெரு, சந்தைப்பேட்டை...இங்கேதான் டைனமோ இருக்கிறது. ராத்திரி இதிலிருந்து ஒரு விசித்திர சப்தம் வரும்."

டைனமோ இருக்கும் அறைக்குள் பெரியப்பாவைக் கூட்டிச் சென்று காட்ட அவனுக்கு ஆசைதான். ஆனால் தந்தையைக் கண்ட தும் அவனுக்குப் பயம் வந்துவிட்டது.

வெளியூரிலிருந்து திரும்பியதுமே சந்திரநாத் கேள்விப்பட்டார், சோனா பூஜை பார்க்க வந்திருக்கிறான் என்று. சோனாவைப் பார்க்கத் துடித்தார் அவர். குளத்தங்கரைக்கு வந்ததும் மயில் கூண்டுக்குப் பக்கத்தில் பெரியண்ணா மணீந்திரநாத்தைப் பார்த்தார். அவரைப் பார்த்ததும் முதலில் ஆச்சர்யமாக இருந்தது சந்திரநாத்துக்கு. 'இந்தப் பைத்தியக்கார மனிதர் தனியாக இங்கே எப்படி வந்தார்? யாருடன் வந்தார்? சோனா மட்டுந்தானே வந்திருப்பதாக இரண் டாவது அண்ணா செய்தி அனுப்பியிருந்தார்!' பெரியண்ணாவும் வந்திருப்பார் என்று எதிர்பார்க்கவேயில்லை சந்திரநாத். அவர் பெரியண்ணாவுக்கு அருகில் வந்தார். அருகில் வந்ததும் சோனா பெரியண்ணாவைக் கட்டிக்கொண் டிருப்பதைக் கண்டார்.

"சோனா, நீயா?"

"ஆமா, பெரியப்பாவுக்கு மயிலைக் காட்டக் கூட்டிக்கிண்டு வந்தேன்."

"லால்ட்டு, பல்ட்டு எங்கே?"

"அவங்க பறவை வேட்டைக்குப் போயிருக்காங்க."

பாபுக்களின் பிள்ளைகள் பூஜை விடுமுறையில் பட்டணத்தி லிருந்து வருவார்கள்; பறவை வேட்டையாடிக் களிப்பார்கள்.

சோனாவைக் கண்டதும் தந்தையின் உள்ளத்தில் பரிவு சுரந்தது. இந்தப் பையனுக்குத் தன் தாயின் முகஜாடை அப்படியே வாய்த்

திருக்கிறது. இப்போது அவள் தூரத்தில் ஒரு கிராமத்தில் ஒரு பெரிய குடும்பத்துக்காக உழைத்துக்கொண் டிருக்கிருள். அவளுடைய மென்மையான முகம் சந்திரநாத்தின் மனக்கண்ணில் தோன்றியது. அவர் சோனுவை நெஞ்சாரத் தழுவிக்கொண்டு கொஞ்ச விரும்பி, "வா, இங்கே, எங்கிட்டே!" என்ருர்.

சோனு பெரியப்பாவை இன்னும் இறுகக் கட்டிக்கொண்டான். தந்தை தன்னைக் கொஞ்சுவதை அவன் விரும்பவில்லை. அவனுக்குப் பெரியப்பாதான் தந்தையைவிட மிகவும் நெருங்கியவர். அவன் தன் தந்தையுடன் அதிகம் பழகியது கிடையாது. அவர் மூன்று நான்கு மாதங்களுக்கு ஒருமுறைதான் ஊருக்கு வருவார். அதுவும் பெரும்பாலும் இரவு நேரத்தில் அவர் வருவது சோனுவுக்குத் தெரியாது.

விடியற் காலையில் அவன் தூக்கத்திலிருந்து விழிக்கும்போது பக்கத்தில் அம்மா இருக்கமாட்டாள். சந்திரநாத் அவனை மார்போடு அணைத்துக்கொண்டு படுத்திருப்பார். அவனுக்குத் தெரிந்துவிடும், அப்பா வந்திருக்கார் வெளியூரிலிருந்து என்று.

பருவத்துக்கேற்றபடி சாமான்கள் கொண்டுவந்திருப்பார் ; கரும்பு, அன்னுசிப்பழம் என்று. சோனு சாதுவாகப் படுத்துக்கொண் டிருப் பான். அப்போது அவர் அவனிடம் எவ்வளவோ பேசுவார். "இப்போ எழுந்திருக்கணும். கைகால் முகத்தைக் கழுவிக்கிண்டு படிக்க உட்காரணும். எழுதப் படிக்கக் கத்துண்டா அவன் வண்டி யிலே சவாரி பண்ணலாம், குதிரை மேலே சவாரி பண்ணலாம்."

சம்ஸ்கிருதச் சுலோகங்கள், தர்மத்தைப் பற்றிய பேச்சு, சூரிய ஸ்தோத்திரம் இதெல்லாம் அவர் சொல்லுவார். அவனிடம் இந்த உலகத்தைப் பற்றி, மரங்கள் செடிகளைப் பற்றி, ஸோனுலிபாலி ஆறு, அதன் கரையில் மணல்வெளி, இவையெல்லாம் சேர்ந்த தாய்நாடு இவற்றைப் பற்றி, தாய், பெரியவர்கள் இவர்களிடம் அவன் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது பற்றி... இப்படிப் பேசிக் கொண்டே போவார். அப்போது அவனுக்குத் தோன்றும், 'அப்பா கிட்டே அலாவுதீனின் விளக்கு இருக்கு, அவன் என்ன கேட்டாலும் அதைக் கொண்டுவந்து கொடுக்க அவரால் முடியும்' என்று தன் தந்தையை ஒரு மாயஜாலக்காரராகவே கருதினுன் சோனு.

சந்திரநாத் சோனுவுடன் மட்டுமே பேசினுர், மணீந்திரநாத்துடன் பேசவில்லை. இதனுல் மணீந்திரநாத்துக்குக் கோபம் வந்தது. இதை உணர்ந்த சந்திரநாத் அண்ணனைக் கேட்டார், "உங்க உடம்பு எப்படி இருக்கு? அண்ணி சௌக்கியமா?"

இந்தக் கேள்விகள் கேட்பதில் அர்த்தமில்லைதான். ஆனால் இந்த மாதிரி இடத்தில் ஒருவரையொருவர் கேட்டுக்கொள்ளாவிட்டால் அவ்வளவு பெரிய மனிதருக்கு அவமரியாதையாகிவிடும்.

பிறகு சந்திரநாத் சோனுவிடம், "பெரியப்பாவை உள்ளே கூட்டிக் கிண்டு போ! அவர் எங்கேயாவது ஓட ஆரம்பிச்சார்னு உன்னாலே பிடிக்க முடியாது" என்றார்.

சோனு பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு ஆபீஸ் கட்டிடத்தை நோக்கி நடக்கத் தொடங்கினான். சந்திரநாத் போகும் வழியில் அவனைக் கேட்டார், "நீ அம்மாவை விட்டுட்டு வந்ததிலே அவளுக்குக் கஷ்டமா இல்லையா?" என்று.

"இல்லையே, அம்மாதானே என்னைப் பூஜை பார்க்கப் போகச் சொன்னு!"

சந்திரநாத் பிள்ளையின் தலையை வருடியவாறே, "ராத்திரி வேளை யிலே அழக்கூடாது" என்றார்.

சோனு மௌனமாக இருந்தான். பெரியப்பா அவனுக்கருகில் அசையாமல் நின்றுகொண் டிருந்தார். அவருக்கு இப்போதே வீட்டுக்குள் போக விருப்பம் இல்லை. சோனு இன்னும் வெயிலில் நின்றுகொண் டிருக்காமல் வீட்டுக்குள் போகவேண்டுமென்று விரும்பினார் சந்திரநாத்.

வெயில் ஏறிக்கொண் டிருந்தது. இந்த வெயிலில் அலைந்தால் சோனுவுக்கு உடம்பு கெட்டுப் போகலாம். சோனுவைப் பார்த்ததும் அவருக்கு தம் மனைவியின் நினைவு வந்தது. அவர் ஊரை விட்டு வந்து வெகுநாட்களாகிவிட்டன. இந்தப் பூஜைக் காலத்தில் ஊருக் குப் போக முடிந்தால் எவ்வளவோ நன்றாக இருக்கும். சோனுவின் முகத்தைப் பார்த்த பிறகு ஊருக்குப் போகத் துடித்தது சந்திர நாத்தின் மனம். இப்போது மழைக் காலமானதால் போவது அவ் வளவு சுலபமல்ல; போவதென்றால் படகில்தான் போகவேண்டும். கோடைக் காலமாயிருந்தால், வரிவசூலுக்காக வெளியூர் போவதாகச் சொல்லிவிட்டு மூன்று நாள் வேலையை ஒரே நாளில் முடித்துக் கொண்டு, பாக்கி இரண்டு நாட்களைத் திருட்டுத்தனமாகச் சொந்த ஊரில் கழித்துவிட்டு வரலாம். விடுமுறை எடுத்துக்கொள்ள வேண் டிய அவசியமே இல்லை. எசமானர் விரும்பினால் இஷ்டப்பட்டபடி விடுமுறையும் கிடைக்கும். ஆனால் சில சமயம் சேர்ந்தார்போல் ஆறு மாதங்களுக்கு ஒரு தடவைகூட விடுமுறை கிடைக்காமல் போவதும் உண்டு. பூபேந்திரநாத் தம் தம்பியின் ஆசையைப் புரிந்து கொண்டு எசமானரிடம் சிபாரிசு செய்து அவருக்கு விடுமுறை வாங்கித் தருவார்.

சந்திரநாத் வரிவசூலுக்குப் போய்விட்டு நடுவில் ஊர் திரும்பும் போது இரவு வெகுநேரமாகிவிடும். அநேகமாக அர்த்தராத்திரி ஆகிவிடும். வரிவசூலை முடித்துக்கொண்டு அவசர அவசரமாக வீட்டை நோக்கி நடப்பார் சந்திரநாத். பத்துக் கோச தூரமும் நடந்தே வருவார். நடுராத்திரியில் தாழ்ப்பாள் சங்கிலியின் அரவம் கேட்டால் தனமாமிக்குப் புரிந்துவிடும், மனிதருக்கு இனியும் தனியாக இருக்க முடியவில்லை, வந்துவிட்டார் என்று. அவளும் எவ்வளவோ இரவுகள் தூங்காமல் இருந்திருக்கிறாள். ஏனென்றால் சந்திரநாத் எப்போது வருவார் என்று அவளுக்குத் தெரியாது. கதவுத் தாழ்ப்பாள் அசைக்கப்படும் சப்தம் கேட்டதும் அவளுடைய நெஞ்சு மகிழ்ச்சியில் குதிக்கும். தனமாமி சப்தம் செய்யாமல் திருட்டுத்தனமாகக் கதவைத் திறப்பாள்.

சோனு எழுந்துவிட்டால் அப்பாவைப் பார்த்துவிட்டு அவரைக் கேள்விகளால் துளைப்பான். "எனக்கு என்ன வாங்கிக்கிண்டு வந்திருக்கீங்க?" என்றெல்லாம் கேட்பான். பலகைக் கட்டிலில் படுத்திருக்கும் லால்ட்டு எழுந்து வந்து அப்பாவுக்குப் பக்கத்தில் படுத்துக்கொள்ள அடம் பிடிப்பான்.

குளத்தங்கரையில் நடந்துகொண் டிருந்த சந்திரநாத் நினைத்தார், 'இப்போது அவள் துறையில் பாத்திரங்களைத் தேய்த்துக்கொண்டே தன்னை மறந்துபோய்விடுவாள்' என்று. தூரத்தில் படகுத் துடுப்பு வலிக்கப்படும் அரவம் கேட்டால் காதை ஊன்றிக் கேட்பாள் அவள். அவளுடையவர் படகில் வந்துகொண் டிருக்கிறார் என்று நினைப்பாள்.

அவளாலும் பிரிவைத் தாங்க முடியாதுதான். இரவில் ஜன்னல் வழியே வெளியே பார்த்துக்கொண்டு விழித்திருப்பாள் அவள். தாழ்ப்பாள் ஆட்டப்படும் ஒலி கேட்டால், அவள் கதவைத் திறப் பாள். அவளுடைய கணவர் வெளியே நின்றுகொண் டிருப்பார்!

நல்ல கட்டுமஸ்தான தேகம், முரட்டு மீசை, அகன்ற கண்கள். அவளுக்குரியவர் வேலையை விட்டுவிட்டு அவளைத் தேடிக் கொண்டு ஓடி வந்துவிட்டார்! அவள் அவருக்குக் கைகால் கழுவத் தண்ணீரும், துடைத்துக் கொள்ளத் துண்டும் கொடுத்துவிட்டு, "என்ன சாப்பிடறீங்க?" என்று கேட்பாள்.

சந்திரநாத் தம் மனைவியின் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருப்பார். விளக்கு வெளிச்சம் அவளுடைய முகத்தில் படும்படி விளக்கை அவளுக்கருகில் கொண்டுபோய் வைத்துக்கொண்டு அவளைப் பார்த்தவாறே ஏதோ பேச முற்படுவார். ஆனால் வார்த்தை ஒன்றும் வெளியே வராது. அவரது நிலையைப் புரிந்துகொண்டு புன்சிரிப்புச் சிரிப்பாள் தனமாமி.

என்னவெல்லாம் நினைக்கிறார் அவர்! சந்திரநாத் தம்மைச் சமாளித்துக்கொண்டு அண்ணனிடம் சொன்னார். "நேரத்துக்கு ஸ்நானம் பண்ணுங்க. நேரத்துக்குச் சாப்பிடுங்க. இங்கேயும் அங்கேயும் அலைஞ்சுண்டு இருந்தால் பாபுக்களுக்குக் கோபம் வரும்."

மணீந்திரநாத் சோனாவின் கையை விட்டுவிட்டு மேலே நடந்தார். சோனா, "நானும் போறேன், அப்பா!" என்று சொல்லிவிட்டு அவருடைய அனுமதியை எதிர்பாராமல் ஓடிப் போய்ப் பெரியப்பா வின் கையைப் பிடித்துக்கொண்டான்.

போய்க்கொண்டே சோனா பெரியப்பாவிடம், "பெரியப்பா, நான் உங்களோடதான் ஸ்நானம் பண்ணுவேன். உங்களோடதான் சாப்பிடுவேன்" என்று கூறினான்.

சோனா அவருக்குப் புலிக்குட்டியைக் காட்ட விரும்பினான். அவன் அவரை இழுத்துக்கொண்டு போய்ச் சிறுத்தைப் புலியின் கூண்டுக்கு முன்னால் நிறுத்தினான். சிறுத்தைப் புலியின் இரண்டு குட்டிகளும் சப் சப்பென்று பால் குடித்துக்கொண் டிருந்தன. அவை காதுகளை விறைத்துக்கொண்டு சோனாவையும் மணீந்திரநாத்தையும் பார்த்தன. வலது பக்கம் நடந்துபோனால் ஒரு பெரிய தண்ணீர்த் தொட்டி. தொட்டியில் ஒரு முதலை, தொட்டியைச் சுற்றி இரும்புக் கிராதி.

ஒரு தடவை சீதலக்ஷா நதியில் ஒரு முதலைக்குட்டி மிதந்து வந்தது. மீன் பிடிப்பதற்காக ஆற்றுத் தண்ணீரில் கிளைகளாலும் புல்லாலும் வட்டவடிவாக ஒரு கூண்டு தயார் செய்திருந்தார்கள். அதற்குள் இந்தக் குட்டி வந்து அகப்பட்டுக்கொண்டது.

பிறகு ஒரு தண்ணீர்த் தொட்டியைக் கட்டி அதில் அந்த முதலையை வளர்த்து வந்தார்கள். லால்ட்டுவும் பல்ட்டுவும் மான்களைப் பற்றியும் மயிலைப் பற்றியும் சோனாவிடம் சொல்லியிருந்தார்கள். முதலையைப் பற்றிச் சொல்லவில்லை. நேற்று இங்கு வந்த பிறகுதான் அவர்கள் முதலையைப் பார்த்தார்கள். அப்போது சோனா அமலா கமலாவுடன் மொட்டை மாடியில் நின்றுகொண்டு நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

இரவு படுத்துக்கொண்ட பிறகு லால்ட்டுவும் பல்ட்டுவும் தாங்கள் பார்த்த முதலையைப் பற்றிச் சோனாவிடம் சொன்னார்கள். சிறிய பையன் சோனா இப்போது பெரிய மனிதனைத் தன்னைப் பாவித்துக் கொண்டு பெரியப்பாவுக்கு எல்லாவற்றையும் காட்டி விளக்கினான்: 'புலி என்ன சாப்பிடும், மயில் எப்போது தோகை விரித்தாடும், மான்களுக்கு என்ன என்ன சாப்பிடப் பிடிக்கும், இந்த மான்களை யெல்லாம் எங்கேயிருந்து கொண்டு வந்தார்கள்' என்றெல்லாம் சொல்லிக்கொண்டு வந்தான் சோனா, எல்லாம் தெரிந்தவன் போல.

புலிக்கூண்டுக்கு முன்னால் நின்றுவிட்டார் மணீந்திரநாத். இரும்புக் கிராதியைப் பிடித்து ஆட்டினார். சோனா அவரைப் பயமுறுத்தினான், "புலி மனுஷனைக் கொன்னு தின்னுடும்! விஷமம் பண்ணினா, புலி உங்க மேலே பாய்ஞ்சுடும்!" என்று.

அவனுடைய பேச்சைக் கேட்டு 'ஹோ, ஹோ'வென்று சிரித்தார் மணீந்திரநாத். பிறகு மொட்டை மாடிப் பக்கம் பார்த்துவிட்டு மௌனமாகிவிட்டார். தூரத்திலிருந்தாலும் சோனாவால் மொட்டை மாடியில் அமலா தன் தலைமயிரை உலர்த்திக்கொண்டு நிற்பதைக் காண முடிந்தது.

மணீந்திரநாத் சோனாவைத் தம் தோள்மேல் ஏற்றிக்கொள்ள விரும்பினார். அதற்கு இசையவில்லை அவன். "யார் வேகமாக ஓடறுங்க, பாக்கலாம்!" என்று சொல்லிவிட்டு அவன் ஓடத் தொடங்கினான். சற்றுத் தூரம் ஓடியபின் அவன் திரும்பிப் பார்த்தான். பெரியப்பா ஓடிவராமல் மொட்டை மாடியைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றார். அமலாவின் தலை மயிர் தங்க நிறம்; கண்கள் நீலம். அமலாவைப் பார்த்ததிலிருந்து மணீந்திரநாத் சாதுவாகிவிட்டார், திருந்திப் போய்விட்டார். அவர் சோனாவின் உடம்பில் எண்ணெய் தடவிவிட்டார். அவனுக்குக் குளிப்பாட்டி விட்டார். சோனாவுடன் சேர்ந்து சாப்பிட உட்கார்ந்தார். நல்ல மீனாகப் பொறுக்கி அவனுக்குக் கொடுத்தார், மாலையில் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு ஆற்றங்கரைக்கு உலாவப் போனார்.

அப்போது அங்கே ஒரு கோச்சுவண்டி வந்தது. இரண்டு வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பட்டிருந்த வண்டி. அமலாவும் கமலாவும் காற்று வாங்கக் கிளம்பியிருந்தார்கள்.

"நீயும் வரியா?" என்று அவர்கள் சோனாவைக் கேட்டார்கள்.

"பெரியப்பா வரதானால்தான் நானும் வருவேன்."

வண்டியை அவர்கள் நிறுத்தினார்கள். சோனா பெரியப்பாவுக்கு அமலாவை அறிமுகம் செய்துவைத்தான். பிறகு அமலாவிடம், "என்னோட பெரிய பெரியப்பா இவர்; கல்கத்தாவிலே வேலை பார்த்தவர்" என்று கூறினான்.

அமலாவும் கமலாவும் வெண்பட்டாலான ஃபிராக் அணிந்திருந்தார்கள். வெள்ளை ஸாக்சும் கான்வாஸ் ஷூவும் அணிந்திருந்தார்கள். மணீந்திரநாத் சில்க் ஜிப்பாவும், மடிப்புக் கலையாத வேஷ்டியும், வெள்ளைநிறச் செருப்பும் அணிந்திருந்தார். சோனா பொன்னிறப் பட்டுச் சட்டை, வெள்ளைப் பாண்டு, ரப்பர்ச் செருப்பு இவற்றைப் போட்டுக்கொண் டிருந்தான். இரு வெண்குதிரைகளும் அவர்களை ஆற்றங்கரை வழியே காற்று வாங்க அழைத்துச் சென்றன. ஈசம் படகுத் துறையில் உட்கார்ந்துகொண்டு மீன் பிடித்துக்கொண்

டிருப்பதைச் சோனு பார்த்துவிட்டு, "ஈசம் அண்ணே, காத்து வாங்க லாம், வரீங்களா?" என்று அழைத்தான்.

உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வித்தியாசமே சோனுவுக்கு இல்லை. யார் வேண்டுமானாலும் இந்த வண்டியில் உட்கார்ந்து கொண்டு காற்று வாங்கப் போகலாம் என்று நினைத்தான் அவன். அவன் பெரியப்பாவைக் கேட்டான், "யானை லாயத்துக்கு வரீங் களா? யானை காண்பிக்கறேன்! கமல், நீயும் வரியா?"

"நானும் வரேன் கமல், நீ, நான்" என்று கேட்ட அமலா மணீந்திரநாத்தின் பக்கம் திரும்பிக் கேட்டாள், "நீங்களும் வரீங் களா?" என்று. அவர் பதில் எதுவும் பேசாமல் இருப்பது கண்டு அவள் மறுபடி உரத்த குரலில், "நீங்களும் வரீங்களா யானை பார்க்க? நாம எல்லாரும் நாளைக்கு யானை பார்க்க போவோம். காளி கோவி லுக்குப் போவோம்! ஆத்து மணல்லே நடந்து போவோம்" என்றாள்.

அமலா அவருடன் இவ்வளவு பேசியும் அவரைப் பேசவைக்க முடியவில்லை. இன்று 'கேத்சோரத்சாலா!' கூடச் சொல்லவில்லை அவர். மைதானம், ஆறு, நாணற்பூக்கள் இவற்றைப் பார்த்துவிட்டு மறுபடி அமலாவைப் பார்த்தார். அமலாவுக்குத் தன் தாயின் முக ஜாடை. அமலாவைப் பார்க்கும்போது அம்மாவிடம் செல்லம் கொஞ்சும் குழந்தையைப் போல் நடந்துகொண்டார் மணீந்திரநாத்.

ஆஸ்வின் மாதத்துச் சூரியன் ஆற்றின் மறுகரையில் அஸ்தமித்துக் கொண்டிருந்தான். கோச்சு வண்டி போய்க்கொண் டிருந்தது. 'டக், டக்' என்று குதிரைகளின் குளம்பொலி கேட்டது. தாளம் பிசகாமல் கேட்டது அந்த ஒலி.

இந்த மாதிரி இரண்டு வெள்ளைக் குதிரைகள் ஒரு வண்டியை இழுப்பதை எங்கோ, எப்போதோ பார்த்த நினைவு சோனுவுக்கு. எங்கும் பனி விழுந்தது. மரங்களில் இருந்து இலைகள் உதிர்ந்து விட்டன. எங்கே பார்த்தாலும் பனிக் குவியல்கள், நடுவே தலைவகிடு போல் ஒரு குறுகிய பாதை — இவ்வாறு யாரோ அவனுக்கு ராஜா — ராணிக் கதை சொல்லியிருந்தார்கள்.

கோச்சு வண்டியில் மணீந்திரநாத்தும் சோனுவும் ஒரு பக்கமும், அமலா கமலா ஒரு பக்கமுமாக உட்கார்ந்திருந்தார்கள். பலவிதப் பறவைகள் ஆற்றின் குறுக்கே பறந்துகொண் டிருந்தன. ஆற்றின் மறுகரையிலிருக்கும் மனிதர்களை இங்கிருந்து பார்க்க முடியவில்லை. ஆற்றில் நீர் மட்டம் கொஞ்சங் கொஞ்சமாக இறங்கிக்கொண் டிருந்தது. ஆற்றின் மறுகரையிலிருந்த செங்கல் வீடுகள் சித்திரங் களாகக் காட்சியளித்தன சோனுவுக்கு. அவனுக்கு என்னென்னவோ பேச ஆசையாயிருந்தது.

விளக்கு ஏற்றுவானே அந்த மனிதன், அவன் ஒரு நீண்ட அங்கி அணிந்திருப்பான். சூரியன் அஸ்தமித்ததும் விளக்கேற்றுவான் அவன். அவனுக்குச் சோனுவின் இரண்டாவது பெரியப்பாவிடம் ரொம்பப் பயம். அவரைக் கண்டதும் சலாம் போடுவான். அவருக்கு முன்னால் மரியாதையாகத் தலையைக் குனிந்துகொண்டு நிற்பான். அவனுடைய சட்டையின் முதுகுப் பக்கத்துக் கிழிசல் வழியாக அவனுடைய உடம்பு எவ்வளவு நோஞ்சான் என்று பார்க்கலாம். சாயங்காலமாகிவிட்டால் அவன் அந்த மெஷினை இயக்கிவிடுவான். உடனே படபடவென்று சப்தம் கேட்கும். மந்திரம்போல் அந்த வீட்டிலுள்ள சிவப்பு, நீல விளக்குகள் எல்லாம் எரியத் தொடங்கி விடும்.

அந்த மனிதன் விளக்கேற்றும் சமயத்தில் அந்த மாய இயந்திரத்தைச் சோனுவுக்குக் காட்டுவதாகச் சொல்லியிருந்தான். அவன் பெயர் இப்ராகிம். சோனு அன்று காலையில் எழுந்ததுமே இப்ராகிம் அவனுக்குச் சலாம் வைத்தான். கிட்டங்கிச் சேவகர்களும் சலாம் வைத்தார்கள். இது மிகவும் விசித்திரமான உலகம். பெரியப்பாவைப் பார்த்ததும் எல்லாரும் தூரத்திலிருந்தே அவருக்குச் சலாம் வைத்தார்கள். இப்ராகிம் ஏற்கனவே கூனிப் போயிருந்தான். ஆகையால் சலாம் செய்யும்போது அதற்காகக் குனியவேண்டிய அவசியமில்லை அவனுக்கு.

ஒரு சமயம் ஜாத்ரா நாடகத்தில் சோனு ஔரங்கசீபின் நாடகம் பார்த்திருந்தான். இப்ராகிமைப் பார்த்தால் ஔரங்கசீபின் ஞாபகம் வந்தது அவனுக்கு. இப்ராகிமின் வெள்ளைத் தாடி அவனுடைய தொப்புளைத் தொட்டுக்கொண் டிருந்தது. இவ்வளவு பெரிய வீட்டின் இருட்டைப் போக்கும் வல்லமையுள்ள அவன் மகாபாரதத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள ஒரு வீரனாகத் தோன்றினான் சோனுவுக்கு. அவனிடம் அற்புத சக்தி இருந்தது. அவன் கையில் மந்திரக்கோல் இருந்தது. கமலா சொல்லியிருக்கிறாள், அவன் அடிக்கடி சொல்வானாம், "இதோ போட்டுட்டேன் மந்திரம், பேசப் போறது யந்திரம்!" என்று.

பொழுது சாய்ந்துகொண் டிருப்பதை வண்டியிலிருந்தபோதே கவனித்தான் சோனு. அவன் திரும்பிப் போக நேரமாகிவிட்டால் இப்ராகிம் அவனுக்காகக் காத்திராமல் தன் மந்திர அறைக்குள் நுழைந்துவிடுவானே! வண்டியை வேகமாக ஓட்டிச் சொல்லும்படி கமலாவிடம் சொன்னான் சோனு.

"வண்டி வேகமாகத்தானே போயிக்கிண்டிருக்கு!"

"நாம சீக்கிரம் திரும்பணும், கமல்!"

சோனு முடிந்தவரையில் அமலா கமலாவைப் போல் பேச விரும் பினன். பேசுவது ஒன்றும் கஷ்டமில்லை, புத்தகங்களில் வருகிறதே அந்த மாதிரி பேசவேண்டும், அவ்வளவுதான்! அவனுக்கு உச்சரிப்பு மட்டும் சரியாக வருவதில்லை. அவன் பேசுவதைக் கேட்டு அமலாவும் கமலாவும் உதட்டை மடக்கிக்கொண்டு சிரிப்பார்கள்.

"நாம சீக்கிரம் திரும்பல்லேன்னு வீட்டிலே விளக்கு எரியாது. ஏன்னு, நான் வந்தப்புறம் விளக்கேத்தறதாச் சொல்லியிருக்கான். இப்ராகிம்" என்று சோனு சொல்லியிருக்கலாம்.

"நாங்க உன்னை மொட்டை மாடிக்குக் கூட்டிக்கிண்டு போறோம். அங்கேயிருந்து எல்லாம் நன்னாப் பார்க்கலாம்" என்று கமலா சொன்னாள்.

"சோனு, நாம மொட்டை மாடியிலே கண்ணாமூச்சி விளையாடலாம், வரியா?" என்று அமலா கேட்டாள்.

அமலா சோனுவைப் பார்த்துக்கொண் டிருந்தாள். அவனுடைய அழகான முகத்தைப் பார்த்தபோது, அவனுடைய இனிமையான பேச்சைக் கேட்டபோது, அவளுக்குத் தன் தாய் சொல்லும் பைபிள் குழந்தையின் நினைவு வந்தது. வெள்ளையுடையில் அந்த மாதிரிதான் காட்சியளித்தான் சோனு. உற்சாகத்திலும் மகிழ்ச்சியிலும் தலைகால் புரியவில்லை சோனுவுக்கு. குதிரைக் குதித்துக்கொண்டு ஓடுவதையும், புல் தின்பதையும் பார்தது மகிழ்ந்தான் அவன். அவர்கள் வண்டியை நிறுத்திவிட்டுச் சற்றுநேரம் ஆற்றங்கரையில் உட்கார்ந் திருந்தார்கள். இந்த இடத்தில் ஜனநடமாட்டம் அதிகமாக இருந்தது. மக்கள் கூட்டங் கூட்டமாகப் போய்க்கொண் டிருந்தார்கள். அவர்கள் அமலா கமலாவைப் பார்த்து அவர்களுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுப் போனார்கள்.

பிறகு வண்டி மைதானத்தின் வழியே சென்றது. இதுவரை ஆற்றைப் பார்த்துக் கொண்டிருந்த மணீந்திரநாத் இப்போது மைதானத்தைப் பார்த்தார். அடிக்கடி திரும்பி அமலாவைப் பார்த் தார். அவருடைய பாலின் — சிறுமி பாலின்!

அமலாவைக் கொஞ்சுவதற்காக அவர் அவளுடைய தலைமேல் கைவைத்தார். அமலாவுக்குப் பயமாக இருந்தது. "பயப்படாதே, அமலா! பெரியப்பா ஒருத்தரையும் ஒண்ணும் சொல்லமாட்டார். ஒருத்தருக்கும் கெடுதல் பண்ணமாட்டார்" என்று சோனு அவளுக் குத் தைரியம் சொன்னான்.

என்ன ஆச்சரியம்! அவன் இப்படிச் சொன்னதும் மணீந்திரநாத் நன்றாக உட்கார்ந்துகொண்டார். எல்லாருமாகச் சேர்ந்து தீர்த்த யாத்திரைக்குப் போய்க்கொண் டிருப்பது போன்ற பாவம் மணீந்திர

நாத்திடம் காணப்பட்டது. அமலா தன் குழந்தைப் பருவத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை விவரித்தாள்.

அவர்கள் கோச்சில் இந்த மைதானத்தில் வந்துகொண் டிருந்தபோது அடர்த்தியான பனிமூட்டம் ஏற்பட்டது. அப்போது இப்ராகிம்தான் வண்டியோட்டி. அவன் குதிரைகளைப் புல்மேய அவிழ்த்துவிட்டிருந்தான். அமலாவும் கமலாவும் ஓடி விளையாடிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று பனிமூட்டம் ஏற்பட்டதும் இப்ராகிமால் குதிரைகளைத் தேடிக் கண்டுபிடிக்க முடியவில்லை. குளிர்காலம். இப்ராகிம் இரண்டு தோள்களிலும் இரண்டு பெண் களையும் தூக்கிக்கொண்டு வீடு திரும்பும் வழியில் ஒரு கிழவன் நின்றுகொண் டிருந்தான். கிழவனின் கையில் ஒரு தடி. அவன் இரண்டாவது எசமானின் புல்லாங்குழல் இசையைக் கேட்பதற்காக அவனுடைய ஊரிலிருந்து வந்திருந்தான். அமலாவின் அப்பா கிளாரினெட்டும், புல்லாங்குழலும் நன்ருக வாசிப்பார். ஊருக்கு வந்தால் இரவில் புல்லாங்குழல் வாசிப்பார். அந்த மனிதனும் ஒரு சிறந்த கலைஞன். பனிமூட்டத்தில் வழி தவறிய அவனை இப்ராகிம் கையைப் பிடித்து வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு வந்தான். அமலா வின் அப்பா அவனைத் தம் வீட்டிலேயே இருத்திவைத்து அவனிட மிருந்து ஸ்வரம், தாளம், லயம் எல்லாம் கற்றுக்கொண்டார். அந்த ஆள் புல்லாங்குழல் வாசிக்க ஆரம்பித்துவிட்டால் பருவமில்லாக் காலத்திலும் நாணற் காட்டில் பூக்கள் பூத்துக் குலுங்கும். தலைக்கு மேலே பறவைகள் பறக்கும். அந்த ஆள் தான் கற்றுக்கொண் டிருந்த வித்தை எல்லாவற்றையும் இரண்டாவது பாபுவுக்குக் கற்றுத் தந்துவிட்டான். தனக்கென்று எதுவும் வைத்துக்கொள்ளவில்லை அவன். அவன் வந்தது பாபுவின் பாட்டைக் கேட்டுவிட்டுப் போகத்தான். ஆனுல் வந்தபிறகு தெரிந்தது பாபுவுக்குத் தேர்ச்சி போதாதென்று. இவ்வளவு பெரிய இடத்து மனிதரிடம் இப்படி ஒரு குறை இருப்பது அவனுக்குப் பொறுக்கவில்லை.

பாபு நாள் முழுவதும் அவனுடைய அறையிலேயே கழிப்பார். குளிக்க, சாப்பிடக்கூட அவருக்கு நேரம் இருக்காது. இவ்வாறு தன் வித்தையை அவருக்குக் கற்றுக் கொடுத்துவிட்டு அவன் ஒரு நாள் புறப்பட்டுவிட்டான் அங்கிருந்து. அந்த மனிதன் தனனந்தனியனுக இருந்தான். அவனுக்கு உறவுக்காரர்கள் யாரும் இல்லை. அவன் ஏழை. சந்தைகளிலும் கடைத் தெருக்களிலும் புல்லாங்குழல் ஊதி வயிறு வளர்த்துவந்தான். இப்போது அந்த வித்தையையும் அவன் அமலாவின் தந்தைக்குக் கொடுத்துவிட்டான். அங்கிருந்து புறப்பட்ட அவனை அமலாவின் அப்பா தடுத்து நிறுத்திஞர். "காலேக்! இந்தக் கிழ வயசிலே நீ எங்கே போகப் போறே? நீதான் சொல்லிட்டே,

எனக்குச் சொல்லித் தந்த வித்தையை இனிமே சந்தையிலேயும் கடை வீதியிலேயும் காண்பிக்க மாட்டேன்னு! பின்னே எப்படித்தான் பணம் சம்பாதிப்பே? பேசாமே இங்கேயே இருந்துடு!''

காலேக் மியான் முதலில் பதில் சொல்லவில்லை. பிறகு சொன்னான், "சரி, ஹுஜூர்!''

இப்படித்தான் காலேக், ஜமீந்தார் வீட்டுக் கோச்சு வண்டியின் சாரதியாக ஆனான். அவனுக்குக் கண்பார்வை சரியாக இல்லை. இருந்தாலும் காலேக் வண்டியில் உட்கார்ந்துவிட்டால் அவன் நூறு வண்டியோட்டிகளுக்குச் சமம். அந்தக் காலேக் இப்போது வண்டியை வேகமாக ஓட்டினான்.

ஆற்றின் மறுகரையில் சூரியன் அஸ்தமித்துக்கொண் டிருந்தான். நாணற் பூக்களின் உச்சியில் சந்திரன் தோன்றினான். ஆற்றி லிருக்கும் படகுகளில் விளக்குகள் எரிந்தன. நதிக்கரைக்கு வந்ததும் வண்டி திரும்பியது. அஸ்தமிக்கும் சூரியனின் சிவப்புநிறம் ஆற்றின் இரு கரைகளிலும், ஊரின்மேலும், வயல்வெளிகளிலும் பரவியது. வண்டியில் உட்கார்ந்திருந்தவர்களின் முகங்களும் சிவந்து கிடந்தன. சூரியன் அஸ்தமித்ததும் இருள் சூழ்ந்துவிடும், ஆகாயம் மட்டும் நீலமாகத் தெரியும். சரத் காலத்து ஆகாயத்தில் நிலவு கிளம்பியதும் சவுக்கு மரத்துக்கடியில் வண்டி நிற்கும். மணீந்திரநாத் வண்டியிலிருந்து இறங்குவார்.

அவர்கள் சவுக்கு மரத்தடிக்கு வந்தபோது இருட்டிவிட்டது. இப்போது குதிரைகள் வேகமாக ஓடவில்லை. மெதுவாக நடந்தன அவை.

மணீந்திரநாத் இறங்கியதும் அமலா சோனாவைக் கேட்டாள், "உனக்கு ஞாபகம் இருக்குமா, சோனா?'' என்று.

சோனா இருக்கும் என்று தெரிவிக்கும் முறையில் தலையை ஆட்டினான். மொட்டை மாடியில் நிலவு காயும்போது அவன் அமலா கமலாவுடன் கண்ணாமூச்சி விளையாடப் போகிறான். தம்பட்டமும் மேளமும் ஒலிக்கும். அவர்கள் மொட்டை மாடியிலும் சமைய லறைக்கு அடுத்தாறபோல், வேலைக்காரிகளின் அறைகளை ஒட்டி யிருந்த இடத்திலும் கண்ணாமூச்சி விளையாடுவார்கள்.

வயல்வெளி வந்ததும் சோனாவுக்கு ஞாபகம் வந்துவிட்டது. "நான் இங்கேயே இறங்கிக்கறேன், அமலா'' என்றான்.

"ஏன் இங்கே இறங்கணும்?''

மாஜிக் இயந்திரத்தைப் பார்க்கப் போகிறான் அவன். அந்த இயந்திரத்தை இயக்கிவிட்டால் கம்பிகளில் மின்சாரம் பாயும். அறை களில் நீல, சிவப்பு நிற விளக்குகள் எரியும். பூஜை சமயமாதலால் மரங்களின் மேலெல்லாம் துனு மலர்களைப் போன்ற சின்னஞ்சிறு

மின்சார விளக்குகள் மாலைமாலையாக ஒளிவீசும். அந்த இயந்திரத்துக்கு அருகில் போய் நிற்கப்போகிறுன் அவன். இப்ராகிம் சோனுவை அந்த இயந்திரத்துக்கு அருகில் கொண்டுபோய் நிறுத்தி வைப்பதாகக் கூறியிருக்கிறுன். அப்போது இப்ராகிம் தன் ஜிப்பாப் பையிலிருந்து விதவிதமான மந்திரக்கோல்களை வெளியே எடுப்பான். அந்த இயந்திரத்தில் விசித்திரமான 'கட், கட்' 'பட், பட்' போன்ற சப்தங்களை எழுப்புவான். அதைப் பார்க்கும் ஆசையில் அவசர அவசரமாக வண்டியிலிருந்து குதித்தான் சோனு.

இப்ராகிம் எங்கே? இப்ராகிமைத் தேடினுன் சோனு. அவன் மந்திர இயந்திரம் இருக்கும் அறையை நோக்கி நடந்தான். இப்போது கோச்சு வண்டி மாளிகையின் வாசலுக்குள் நுழைந்துகொண்டிருந்தது. எங்கேயோ குதிரை கனைப்பதை அவன் கேட்டான். இன்னும் சில சிறுவர் சிறுமியரும் அங்கு வந்திருந்தார்கள், வேடிக்கை பார்க்க. அந்தக் கிராமத்தின் கிழவர்களுக்கும் சரி, சிறுவர்களுக்கும் சரி, பூஜை சமயத்தில் இந்த மாளிகை ஒரு மாயாலோகமாகத் தோன்றும். சில நாட்களுக்கு இந்த மாளிகையின் மண்டபம், வராந்தாக்கள், நீலநிற வயல்வெளி, ஏரி போன்ற விசாலமான குளம், விதவித நிறப் பூக்கள் எல்லாமாகச் சேர்ந்து ஒரு மந்திர உலகம் சிருஷ்டியாகிவிடும். வெகுதூரத்திலிருந்துகூட மக்கள் அங்கு வருவார்கள். அப்படி வந்திருந்த மக்கள் ஆற்றங்கரையில் உட்கார்ந்திருப்பதைச் சோனு பார்த்தான். வலது பக்கத்தில் இயந்திரம் வைத்திருந்த அறையைச் சுற்றிக் கம்பிவேலி போட்டிருந்தது. இப்ராகிமைக் காணுேமே! அவன் விளக்கேற்றுவதைச் சோனுவுக்குக் காட்டுவதாகச் சொல்லியிருந்தானே! இயந்திரத்தால் விளக்குகள் எரிவது ஓர் அற்புத நிகழ்ச்சியாகத் தோன்றியது சோனுவுக்கு. அவன் மேலும் பொறுத்திருக்க முடியாமல் வேலிக்கருகில் ஓடி அதன் வழியே எட்டிப் பார்த்தான். இயந்திரத்தின் மேலே குனிந்தவாறு நின்றுகொண்டு ஏதோ செய்துகொண் டிருந்தான் இப்ராகிம்.

"இப்ராகிம்!" என்று கூப்பிட்டான் அவன்.

இப்ராகிம் பதில் எதுவும் சொல்லவில்லை. சூரியன் அஸ்தமித்து விட்டதால் அறைக்குள் கொஞ்சம் இருட்டாயிருந்தது. இப்ராகிமின் முகம் தெளிவாகத் தெரியவில்லை. முகத்தில் வியர்த்திருந்தது. அவனுல் இயந்திரத்தை வழிக்குக் கொண்டுவர முடியவில்லை. இயந்திரம் சண்டித்தனம் செய்தது. அது சண்டித்தனம் செய்யச் செய்ய இப்ராகிம் அதன் பாகங்களைக் கழற்றிப் போட்டு அதைச் சுற்றிச் சுற்றி வந்து சோதித்துப் பார்த்தான். அவனுடைய முகத்தில் பரபரப்பு காணப்பட்டது. அவனைச் சுற்றிலும் நிறையச் சிறுவர்களும் சிறுமிகளும் நின்றுர்கள். அவர்கள் அவனுடைய திறமையைப் பார்க்க

வந்திருந்தார்கள். இப்ராகிம் மேஸ்திரியின் பெயர் அந்தப் பிராந்தியத்தில் ரொம்பப் பிரபலம். அப்பேர்ப்பட்டவன் இப்போது மிகவும் பயந்துபோய் விட்டான். அவனுடைய நிலைமையைப் பார்த்துச் சோனுகூட அவனைக் கூப்பிடத் தயங்கினுன். "இப்ராகிம், நீ என்னை வரச் சொன்னியே! ஒரு நிமிஷத்துலே உன் மந்திரத்தாலே இந்த ஊரையே ஜகஜ்ஜோதியாப் பண்றேன்னு சொன்னியே! இப்போ ஒண்ணும் பண்ணமாட்டேங்கறியே? கூப்பிட்டாக் கூட ஏன்னு கேட்க மாட்டேங்கறியே?" என்று கூற நினைத்தான்.

சோனுவுக்குத் தனியே வீட்டுக்குப் போகப் பயமாக இருந்தது. இப்ராகிம் அவனிடம் சொல்லியிருந்தான், விளக்கேற்றிய பிறகு அவனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போவதாக. ஆனல் இப்போதோ அவன் முல்லா மாதிரி ஆகிவிட்டான். பக்கிரி யாருடனும் பேசாமல் கொரானைப் பாராயணம் செய்வதுபோல் அவன் ஏதோ முணுமுணுத்தான். 'இப்ராகிம், என்னை ஏன் வரச்சொன்னே? நான் இப்போ எப்படித் திரும்பிப் போவேன்?' என்று சோனுவால் அவனைக் கேட்க முடியவில்லை.

அந்த யானை மட்டும் இப்போ திரும்பிவந்தால்! பெரியண்ணுவும் இரண்டாவது அண்ணுவும் பாபு வீட்டுப் பையன்களுடன் யானை மேலேறிக்கொண்டு போயிருந்தார்கள், காற்று வாங்க. யானையின் மணியொலி கேட்டால் யானை வருகிறதென்று தெரியும். அவனுக்குப் பரிச்சயம் இல்லாத சிறுவர்களும்பெரியவர்களுந்தான் இங்கே விளக்குகளைப் பார்க்க வந்திருந்தார்கள். அவர்கள் பூஜைக்காகப் பிரதிமைகள் தயாராகும்போதே அவற்றைப் பார்க்க வந்துவிடுவார்கள்.

பாபுக்கள் ஆண்டு முழுவதும் பட்டணத்தில் வசிப்பவர்கள். அவர்கள் பூஜைக்குக் கிராமத்துக்கு வந்தால் இந்த இயந்திரம் இயங்கும். ஒளிவீசும் மாளிகையும் மற்ற வீடுகளும் மண் சிலைகளுமாக அந்த ஊர் சீதலக்ஷா ஆற்றின் கரையில் சில நாட்களுக்கு ஒரு பட்டணமாக ஆகிவிடும். இந்தப் பட்டணத்துக்குத்தான் வந்திருந்தான் சோனு. அவன் பார்ப்பதெல்லாம் அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

இருள் கொஞ்சங் கொஞ்சமாக அடர்த்தியாகிக் கொண்டே வந்தது. மரங்களும் செடிகளும் அடர்த்தியாக வளர்ந்திருந்ததால் வானத்திலிருந்த சாதாரண நிலா, இலைகளையும் கிளைகளையும் துளைத்துக்கொண்டு வந்து இந்த அறைக்கு வெளியில் புல்லின்மேல் விழவில்லை. "என்ன இப்ராகிம், உன்னுடை பைத்தியக்கார இயந்திரம் ஏன் பேசல்லே?" என்று எல்லாரும் கேட்டார்கள்.

"பேசும், பேசும்! பேசாட்டா யார் விட்டா?"

"இப்ராகிம், நீ என்னை வரச் சொன்னியே!" என்று இப்போது சோனு சொன்னான்.

சோனு அங்கு வந்திருப்பதை இப்ராகிம் இப்போதுதான் கவனித்தான். "இதுக்குக் கிறுக்குப் பிடிச்சுடுத்து, எசமான்!" என்று அவன் சொன்னான்.

"என்ன ஆயிடுத்து?"

"பேசமாட்டேங்கறதே!"

அப்போது சோனுவின் இரண்டாவது பெரியப்பா அங்கே வேகமாக வந்தார். கூடவே வேலைக்காரன் நகுல். அவருடைய முகத்தில் பரபரப்புக் காணப்பட்டது. சோனு தனியாக இந்தப் புது இடத்தில் நிற்பதைக்கூட அவர் கவனிக்கவில்லை. அவர் தாமே அறைக்குள் நுழைந்து டார்ச் விளக்கை ஏற்றி என்ன என்னவோ செய்தார். இப்ராகிமை நகர்ந்துகொள்ளச் சொன்னார். பிறகு எதையோ பார்த்துவிட்டு, "இது இங்கே எப்படி வந்தது?" என்று கேட்டார்.

"நான் இங்கேதான் இருக்கேன், பெரியப்பா!" என்று சொல்ல நினைத்தான் சோனு. ஆனால் தன் பெரியப்பா எவ்வளவு பெரிய மனிதர் என்ற நினைப்பு அவனைப் பேசவிடாமல் தடுத்துவிட்டது. அவர் வந்தபடியே வேகமாகத் திரும்பிப் போய்விட்டார். சோனு மட்டும் அசடுபோல் அங்கு நின்றுகொண் டிருந்தான்.

இப்போது எங்கும் வெளிச்சம். மாளிகை இப்போது மாயாபுரியாக ஆகிவிட்டது. நாற்புறமும் விளக்குகள் மாலை மாலையாகத் தொங்கின. அவை ஆகாயத்தில் வில்லையாகத் தெரிந்த சந்திரனையும் ஆயிரக் கணக்கான நட்சத்திரங்களையும் கேலி செய்தன. நாற்புறமும் மக்னோலியா மரங்களின் மலர்களும், பலநிற இலைகளும் பூச்சி களின் ரீங்காரமும் சேர்ந்துகொண்டு சோனுவை மெய்ம்மறக்கச் செய்தன. அவன் நடந்தான். இப்போது அவனுக்கு ஒரு பயமும் இல்லை. எங்கே பார்த்தாலும் வெளிச்சம். மரங்களை ஊடுருவிக் கொண்டு வெளிச்சம் வந்தது.

சற்றுத் தூரத்தில் யாரோ வேகமாகப் போய்க்கொண் டிருந்தார்கள். பூஜை வாத்தியங்கள் ஒலித்தன. அவனுடைய மனத்தில் ஒரு கனவுலகம் தோன்றியது. அதில் அவன் கண்ட ஒரு பெண்ணின் முகத்தை அமலாவின் முகத்துடன்தான் ஒப்பிடலாம்.

அவனுடைய அமலா, அவனை மொட்டை மாடிக்கு வரச்சொல்லி யிருந்தாள்; "நிச்சயம் வரனும், சோனு! நான் உனக்காகக் காத்துக் கிண்டிருப்பேன்!"

அமலாவின் உருவத்தைத் தன் மனக் கண்ணில் பார்த்து ரசித்தான் சோனு. கல்கத்தாக்காரி அமலா. கல்கத்தா பெரிய ஊர்! அங்கே

டிராம் வண்டி இருக்கு, ஹௌரா பாலம் இருக்கு. அங்கே வளர்ந்தவ அமலா. அவளோட கண் எவ்வளவு நீலம். இப்போ வெளிச்சம் வர்ற மாதிரி அவளோட வாயிலிருந்து எப்போதும் வார்த்தை வந்து கொண்டே யிருக்கு!

வெளிச்சத்தில் நடந்துவந்த சோனு ஏதோ ஒரு மாயசக்தியால் கவரப்பட்டு வேகமாக ஓடத் தொடங்கினான். குளத்தங்கரை வழியே ஓடிப் போய் அவன் ஆபீஸ் கட்டிடத்துக்குள் நுழைந்தான். வெளியில் எவ்வளவோ பேர் இருந்தார்கள். ஜமீன் உத்தியோகஸ்தர்கள், வேலைக்காரர்கள் அவர்கள் யாரையும் லட்சியம் செய்யவில்லை அவன். அவன் இவ்வளவு வேகமாக ஓடினால் இரண்டாவது பெரியப்பா திட்டுவார்!

அவன் சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டான், பெரியப்பா அங்கே இருக்கிறாரா என்று. நல்ல வேளை, அவர் இல்லை. பூஜை மண்டபத்தில் விதவிதமான விளக்குகளை ஏற்றிக்கொண் டிருந்தார்கள். தேவியின் சிலைக்கு ஜிகினாத் தகடுகளால் அலங்காரம் செய்தார்கள். பல வர்ண ஜிகினாத் தகடுகள் விளக்கு வெளிச்சத்தில் ஜொலித்தன. தேவி அவனைப் பிடித்துக்கொண்டு விடுவாள்.

'சோனு, உன்னை ஒரு மாயசக்தி இழுத்துக்கிண்டு போறது! எல்லாம் எனக்குத் தெரியும்!' அதனால் சோனுவுக்கு அம்மனின் முகத்தைப் பார்க்கத் துணிவு ஏற்படவில்லை. அவன் படியேறி வலப் பக்கத்து வராந்தாவுக்கு வந்தபோது பெரிய பெரியப்பா ஒரு சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டு கண்களை மூடிக்கொண் டிருப்பதைக் கண்டான். சில்க் ஜிப்பா, காலில் விலையுயர்ந்த செருப்பு - எல்லாம் இரண்டாவது பெரியப்பாவின் உடைமைகள். அவர் அவற்றைப் பெரிய பெரியப்பாவுக்குப் போட்டுக்கொள்ளக் கொடுத்திருக்கிறார்; அல்லது தம் கையாலே அணிவித்திருக்கிறார்.

பெரிய பெரியப்பாவின் காலடியில், சற்றுத் தூரத்தில், ராம்சுந்தர் உட்கார்ந்து புகையிலை நறுக்கிக்கொண் டிருந்தான். வெட்டப்பட்ட புகையிலைக் குவியல் குவியலாகக் குவிந்து கிடந்தது. அதனுடன் நிறையக் கரும்புப் பாகைக் கலந்து நல்ல மணமுள்ள புகையிலை தயாரித்தார்கள். பக்கத்தில் பைத்தியக்காரப் பெரியப்பா. சோனு ஒரு கணமும் அங்குத் தாமதிக்கவில்லை. அவனுக்கு நேரமும் இல்லை; ஏற்கனவே தாமதமாகிவிட்டது. அமலா - அமலா அத்தை - அவனுக் காகக் காத்துக்கொண் டிருப்பாள். கல்கத்தாவில் வசிக்கிறாள் அமலா, எவ்வளவு பெரிய பட்டணம் கல்கத்தா! விக்டோரியா மெமோரியல் ஹால் – அதைச் சுற்றி வெள்ளைநிறக் காம்பவுண்டுச் சுவர். பாதையின் இருபுறமும் பெரிய பெரிய அழகான மாடி வீடுகள். வெகு தூரத்திலுள்ள கல்கத்தாப் பட்டணத்தைப் போல்

அமலாவின் உடலிலும் ஓர் இனிய, கவர்ச்சிகரமான ரகசியம் இருக்கிறது. இத்தனை சிறியப் பையன் சோமு! ஆனால் இந்த வயதிலும் அமலாவின் கவர்ச்சி அவனை ஓடிவரச் செய்தது. பைத்தியக்காரப் பெரியப்பா தன்னைப் பிடித்துக்கொண்டு விடுவாரோ என்ற பயத்தில் சோமு வலது பக்க வராந்தாவுக்கே வரவில்லை. பக்கததிலிருந்த பெரிய பெரிய தூண்களுக்குப் பின்னால் மறைந்தவாறே நடந்துபோய் மாடிப்படிகளின் மேல் வேகமாக ஏறினான் அவன்.

அவன் மாடிப்படி ஏறும் சமயம் மணியோசை கேட்டது. குளத்தின் மறுகரையில் மடம். யாரோ சங்கிலியை இழுத்து அங்கிருக்கும் மணியை அடித்தார்கள். மாலையில் நிலவு கிளம்பியதும் அவனும் பெரியப்பாவுமாக அந்த மடத்துக்குப் போவது என்று காலையில் தீர்மானித்திருந்தான் சோமு. அவன் படியில் பெரியப்பாவை உட்கார வைப்பான். கல்லாலான மாட்டுச் சிலைக்கு வலது பக்கமாக அவன் நிற்பான். வெள்ளைக் கல் பதித்த தளம். அதன்மேல் நின்றால் அவனுக்கு மணியின் சங்கிலி எட்டும். அவன் ஒவ்வொன்றாக மணியடிப்பான். பெரியப்பா அவற்றை எண்ணுவார். கீழே வந்து, "மணி எவ்வளவு தடவை அடிச்சேன்?" என்று அவரைக் கேட்பான். "பத்துத் தடவை!" என்று அவர் பதில் சொல்லுவார். பெரியப்பாவுக்கு என்ன என்ன பிடிக்குமோ அந்தக் காரியங்களைச் செய்து அவற்றின் மூலமாகவே அவரைக் கொஞ்சங் கொஞ்சமாக முற்றும் குணமாக்கிவிடப் போகிறான் சோமு!

ஆனால் இப்போது மணியோசை கேட்டு அவன் ஏனோ திடுக்கிட்டான். பெரியப்பாவின் குரல் போல் ஒலித்தது, அந்த மணியோசை. "சோமு, நீ போகவேண்டாம்; மடத்தில் மணியடிக்க வேண்டாம்! நான் ஒண்ணு, ரெண்டுன்னு வரிசையா நூறு வரையிலே எண்ணிக்கிண்டே போறேன். இப்படியே பண்ணிப் பண்ணி நான் ஒரு நாள் சொஸ்தமாயிடறேன், பாரு!"

மாடிப்படிகளில் பாதி ஏறி வந்தவன் சற்று அப்படியே நின்றான். மேலே ஏறிப் போவதா, அல்லது இறங்கிச் சென்று பெரியப்பாவிடம் உட்காருவதா என்று தீர்மானிக்க முடியாமல் அவன் தயங்கினான். அந்த மண்டபத்துக்கே போய்விடலாமென்று அவனுக்குத் தோன்றியது.

இவ்வளவு உயரமான மண்டபத்தை அவன் எங்குமே பார்த்ததில்லை. அதில் நீலநிறச் சிட்டுக் குருவிகள் ஆயிரம் இருக்கும். அவை மண்டபத்தின் இடுக்குகளில் கூடு கட்டிக்கொண்டு வசித்தன. இரவில் நிலா இருந்தால் அப்பறவைகள் மண்டபத்துக்கு மேலே

சுற்றிச் சுற்றிப் பறக்கும். மண்டபத்தின் நினைவு வந்தால் சோனு வுக்கு இந்தப் பறவைகளின் நினைவும் வரும்.

திருவிழாவிலிருந்து வந்தபோது ரஞ்சித் மாமா அவனுக்கு ஒரு கவண்குச்சி வாங்கிக் கொடுத்திருந்தார். அவன் அதை வைத்துக் கொண்டு காக்கை, குருவி, மைனு, அணில் இவற்றை அடிக்க முயற்சி செய்வான். ஆனால் ஒன்றையும் அடிக்க முடியாது அவனால்.

ஜாம்ருல் மரத்துக்கடியில் ஒரு பொந்து இருந்தது. அதில் வசித்து வந்த அணில் பொழுது விடிந்ததும் வெளியே வந்து குதித்தோடும். சோனு படிப்பை விட்டுவிட்டு அதன் பின்னே ஓடுவான். அது மரத்துக்கு மரம் தாவும். பொன்னிற வெயிலில் அது 'கட், கட்' என்று கத்தும். சோனு கவணால் அடித்தால் அது முன்னங்கால் களைக் குவித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும், 'என்னை அடிக் காதே!' என்று கெஞ்சுவது போல.

அவன் இணங்காவிட்டால் அதன் விளையாட்டு ஆரம்பமாகி விடும். சோனுவுக்குத் தோன்றும், 'இத்தனூண்டு பிராணிக்கு எவ்வளவு திமிரு? கொஞ்சங் கூடப் பயமில்லை அதுக்கு! மரத்துக்கு மரம், இலைக்கு இலை தாவறதே!' என்று.

இந்தச் சிறிய ஜந்து மட்டும் இல்லை, உயிர்த் துடிப்பும் அழகும் வாய்ந்த ஒவ்வொன்றையும் — இந்த வெயில், இந்த மண், சரத் காலத்து மழை இவற்றையெல்லாம் துரததிப் பிடிக்க ஆசையாக இருந்தது சோனுவுக்கு. தூரத்திலிருந்து ஏதோ ஒரு கவர்ச்சியான ரகசியத்தைக் கொண்டு வந்தாள் அமலா. அவன் எங்கே போவது? அமலா கமலாவிடமா, அல்லது பைத்தியக்காரப் பெரியப்பா, மண்ட பம், நிலவு காயும் திறந்த வெளிகள் – இவற்றிடமா? அவன் ஒரு முடிவுக்கும் வரமுடியாமல் இருட்டில் மாடிப்படியிலேயே நின்றான்.

யாரோ ஒரு காவல்காரன் அவனைத் தாண்டிக் கொண்டு போனான். அவன் சோனுவைக் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால், "யாரு? யாரது?" என்று கேட்டுக்கொண்டு அவனை விரட்ட வந்திருப்பான். வெளிச்சத்துக்கு வந்ததும் அவனைப் பார்த்துவிட்டு ஆச்சரியத்துடன், "சோனு பாபு! நீங்களா? நீங்க இங்கே என்ன பண்றீங்க?" என்பான்.

இந்தப் பக்கத்து மனிதர்களைப் பார்த்தால் ஆச்சரியமாக இருந்தது சோனுவுக்கு. எவ்வளவு உயரமாக இருக்கிறார்கள் இவர்கள்! எப்போதும் பணிவுடன், கைகளைக் கூப்பிக்கொண்டே இருக்கிறார் கள். அவனுக்கு முன்னால் கூடக் கைகளைக் கூப்புகிறார்கள். காவல்காரனைச் சற்றுப் பயமுறுத்த எண்ணித் தலையை நீட்டிய சோனு, அமலாவும் கமலாவும் இன்னும் சில சிறுவ சிறுமியருடன் கூச்சல் போட்டுக்கொண்டு மாடிப்படிகளில் இறங்கி வருவதைப்

பார்த்தான். அப்போதும் அசையவில்லை அவன்; இருட்டில் மறைவாக நின்றுகொண்டேயிருந்தான்.

தூண்மறைவில் யாரோ இருப்பது கமலாவுக்குத் தெரிந்தது. "யாரது?" என்று அவள் கேட்டாள்.

சோணு வெளிச்சத்துக்கு வந்து, "நான்தான்" என்றான்.

"நாங்க உன்னைத் தேடிக்கிண்டுதான் கிளம்பினோம். எவ்வளவு நேரம் காத்துக்கிண் டிருந்தோம் உனக்காக?"

அவர்கள் மறுபடி மேலே ஏறுவார்கள் போலத் தோன்றியது. ஆனால் அவர்கள் மொட்டை மாடிக்குப் போகவில்லை. முதல் மாடியிலே நின்றுவிட்டார்கள். முதல் மாடியில் நடமாட்டமில்லாத ஓர் இடத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அங்கிருந்து சமையலறை ஒலிகளை நன்றாகக் கேட்கலாம். மீன் வறுக்கும் மணம் மிதந்து வந்தது அங்கே. அவர்கள் சிறு சிறு குழுக்களாகப் பிரிந்து சமையலறைக்கு நான்கு பக்கங்களிலும் போய் ஒளிந்துகொண்டு விளையாடினார்கள்.

அவர்கள் இருட்டில் சிதறிப் போனார்கள், வெவ்வேறு இடங்களில் ஒளிந்துகொண்டார்கள். கமலா சோணுவைத் தன் குழுவில் வைத்துக்கொண்டாள். அவனுடன் எங்காவது ஒளிந்துகொள்ள நினைத்திருந்தாள் அவள். ஆனால் திடீரென்று சோணுவைக் காண வில்லை. அவன் மாடிப்படிக்கு மேல் இருந்த அங்கணத்துக்குள் போய்விட்டான். இங்கே அவனை யாரும் கண்டு பிடிக்க மாட்டார்கள்.

இதற்குள் சோணுவுக்கு இந்த வீடு நன்றாகப் பழகிப் போய் விட்டது. உக்கிராண அறை எந்தப் பக்கம், மாடியறை எங்கே, எது பூஜையறை, எசமானியம்மாக்களின் அறைகள் எங்கே— என்பனவெல்லாம் அத்துபடியாகிவிட்டன அவனுக்கு.

விளையாட்டின் எல்லை சமையலறையின் நான்கு பக்கமுந்தான். அதைத் தாண்டிவிட்டால் 'அவுட்'.

கொஞ்சதூரம் வந்ததுமே பயந்து போய்விட்டான் சோணு. இந்தப் பக்கம் ஜனநடமாட்டமே இல்லாமல் வெறிச்சென்று இருந்தது. கீழ்ப்பக்கம் இடிந்த சுவர். சுவரின் மறுபுறம் காடு. சோணு வெகுதூரம் போகக்கூடாது. இரண்டு 'டோம்' விளக்கு களின் வெளிச்சம் அந்த இடம் வரை பரவியதாலும் வேலைக்காரி களின் பேச்சுக் குரல் அங்கே கேட்டதாலும் பயம் அவ்வளவு அதிகமாக இல்லை சோணுவுக்கு. அவன் தன்னை யாரும் கண்டு பிடிக்காதபடி ஓர் இடத்தில் ஒளிந்துகொள்ள விரும்பினான். அப்படி ஓர் இடமும் கிடைக்காமல் அவன் தவித்துக்கொண்

டிருந்தபோது தனக்குப் பின்னுல் அமலா வந்து உட்கார்ந்திருப் பதைக் கண்டான்.

''எனக்குப் பின்னுலே வா, சோனு'' என்ருள் அமலா.

அவன் அவளுக்குப் பின்னுலே முதுகைக் குனிந்துகொண்டே நடந்தான். நிமிர்ந்து நடந்தால் சுவரின் மறுபக்கத்திலிருந்து அவர்களை மற்றவர்கள் பார்த்துவிடுவார்கள்.

இவ்வாறே நடந்துபோய் அமலாவும் சோனுவும் வடக்குப் பக்கத்திலிருந்த விடுவரை வந்துவிட்டார்கள். இதற்குள் மற்றவர்கள் வெவ்வேறு இடங்களில் ஒளிந்துகொண்டு விட்டார்கள். அமலா சோனுவிடம், "இங்கே வா! இங்கே வா!" என்று கிசுகிசுத்தாள்.

அவர்கள் இருட்டான ஒரு நீண்ட வராந்தாவுக்கு வந்து சேர்ந் தார்கள். அங்கிருந்து விருந்தினர் விடுதிக்குப் போகப் படிகள் இருந்தன. வளைந்து வளைந்து இறங்கும் மரப்படிகள். அமலாவும் சோனுவும் அப்படிகளின் வழியே கீழே இறங்கி மங்கலான நீல நிறவெளிச்சம் பரவிய ஒரு பகுதிக்கு வந்தனர். ஈரச்சுவரின் மணம். எதிரில் ஒரு காலி அறை. அதன் சுவர் ஒருபுறம் இடிந்திருந்தது, அதனுள்ளே எலிகள் நடமாடும் அரவம். அதற்குமேல் ஒரு மரம் வளர்ந்திருந்தது. மங்கிய வெளிச்சத்தில் அது என்ன மரம் என்று தெரியவில்லை. வௌவால் போன்ற சில ஜந்துக்கள் அவர்கள் வரும் ஒலி கேட்டுச் சிறகடித்துக்கொண்டு பறந்தன. அவர்கள் கதவைத் தாண்டிக்கொண்டு சென்றதும் சுவருக்கருகில் இடிந்த செங்கல்லும் மண்ணும் குவிந்து கிடப்பதைக் கண்டார்கள். ஒரு காலத்தில் இங்கு ஒரு கிணறு இருந்திருக்கும். இப்போது அதை மூடிவிட்டார்கள். ''இங்கேயே நீ சத்தம் போடாம இரு. இங்கே ஒருத்தரும் தைரியமா நம்மைத் தேடிக்கிண்டு வரமாட்டாங்க. நாம இப்போ சமையலறைக்குப் பின்பக்கத்துக்கு வந்துவிட்டோம்'' என்று அமலா சொன்னுள்.

சோனு பயத்தால் வாயடைத்து நின்ருன்.

"ஏன் பயப்படறே? மெள்ளப் பேசு."

"எனக்கு ரொம்பப் பயமா இருக்கு."

"என்னடா பயம்? நான் இங்கே தினம் பிருந்தாவனியோட வரேனே!"

அப்போது யாரோ மரப்படிகள் வழியே இறங்கிவருவது போல் இருந்ததால் அமலா மௌனமானுள். அவளும் சோனுவும் இப்போது ஒருவரையொருவர் உராய்ந்துகொண்டு நின்ருர்கள். இப்போது சோனு பலிஆடு மாதிரிதான். அமலா என்ன சொன்னுலும் அவன் கேட்பான். அவள் அவனுக்குச் சாப்பிட இரண்டு சந்தேஷ் கொடுத்தாள். இப்போது மாடிப்படிப் பக்கம் அரவம் எதுவும் கேட்க

வில்லை. படி வழியே இறங்கி வந்தவர் சமையலறைப் பக்கம் போயிருக்கலாம். அமலா மெல்லிய குரலில், "நீ கமலாவோட சிநேகமாயிருக்கக் கூடாது. தெரிஞ்சுதா?" என்ருள்.

மறுபடியும் மாடிப்படிகளில் அரவம். கமலா தன் கோஷ்டியுடன் அவர்களைத் தேடிக்கொண்டு வந்திருக்கலாம். அந்தக் கோஷ்டியில் மலினு, ஆலோ, மது இன்னும் யார் யாரோ இருந்தார்கள். யாராயிருந்தாலும் அவர்களுக்கு இந்தப் பக்கம் வரத் தைரியம் வராது. தலைக்கு மேலே ஒரு கிளை. சுவரின் மறுபக்கத்திலிருந்து கிளை இந்தப் பக்கம் வந்து தொங்கியது. கிளைக்குக் கீழேதான் அந்தப் பாழடைந்த அறை. அறையின் இருளில் அமலா சோனுவை இறுகக் கட்டிப் பிடித்துக்கொண்டாள். "பயப்படாதே, பயப்படாதே, சோனு!" என்று சொல்லிக்கொண்டே அவள் சோனுவின் கையைப் பிடித்து ஏதோ விளையாட்டுச் சேஷ்டைகள் செய்யத் தொடங்கினுள்.

சோனு, "வேண்டாம், அமலா! எனக்கு இது பிடிக்கல்லே" என்று மறுத்தான். அமலா மாதிரி பேச அவனுக்கு ஆசையாக இருந்தது. அப்படிப் பேச முயற்சி செய்தான் அவன்.

அப்போது கமலாவின் கோஷ்டி மரப்படிகளில் ஏறிப் போய்க் கொண்டிருந்தது. "கமலா எனக்குப் பயாஸ்கோப் பெட்டி தரேன்னிருக்கா" என்று சோனு சொன்னுன்.

அமலா சொன்னுள்: "நான் உனக்குச் செம்பரத்தம்பூ கொண்டு வந்து தருவேன். பிருந்தாவனி தினம் அப்பாவுக்காக ரோஜாப்பூச் செண்டு கட்டுவா. நான் உனக்கு அந்தச் செண்டு தரேன்."

அவள் அவனை மேலும் பேசவிடவில்லை. தன் கையால் சோனுவின் தலைமயிரைச் செல்லமாக அளைந்தாள்; தன் தலையைக் கொண்டு வந்து அவனுடைய மூக்குக்கு அருகில் வைத்தாள். பட்டு மாதிரி மிருதுவான கூந்தல். சோனு பயந்து போய்விட்டான். கல்கத்தாப் பெண்ணுன அமலாவுக்கு என்னவெல்லாம் தெரிகிறது! அந்த வயதில் சோனுவுக்கு வேறு என்ன சொல்லத் தெரியும்? அமலா அவனை வைத்துக்கொண்டு என்ன செய்யப் பார்க்கிருள்?

"நீ எவ்வளவு அழகு, சோனு! உன் கண்ணு எவ்வளவு பெரிசா இருக்கு! நான் உன்னைக் கல்கத்தாவுக்குக் கூட்டிக்கிண்டு போறேன். அது எவ்வளவு பெரிய ஊர் தெரியுமா? அங்கே மியூசியம் இருக்கு, மிருகக்காட்சிசாலை இருக்கு."

"அங்கே மியூசியத்திலே ஒரு திமிங்கலத்தோட எலும்புக் கூடு இருக்காமே? புத்தகத்திலே போட்டிருக்கு."

"ஆமா. நீ வந்தாப் பார்க்கலாம். எவ்வளவு பெரிய எலும்புக்கூடு!"

"உம், எனக்குப் பயமா இருக்கு."

"இன்னும் கொஞ்சம் கீழே. நீ ஏன் இப்படிப் பயப்படறே?"

ஈசம் ஒரு பெரிய மீன் பிடித்தான்.

அமலாவால் பொறுக்க முடியவில்லை. அவள் சோனுவை என்னவோ செய்யச் சொல்கிறாள். அவனுடைய கையை எங்கேயோ கீழே கொண்டு போனாள். சோனுவுக்கு ஒன்றும் புரியவில்லை. அமலா தொடர்ந்து பேசிக்கொண்டே, "எவ்வளவு பெரிய மீன் சோனு?" என்று கேட்டாள்.

"ரொம்பப் பெரிசு."

"சரி, கையைக் கொடு."

"ஊஹூம், மாட்டேன்."

"உனக்கு முத்தங் கொடுக்கறேன், வா."

"வேண்டாம்."

"ஏன், வந்தா என்ன?"

"கன்னத்துலே எச்சில் படும்."

"தொடச்சிக்கிண்டாப் போச்சு. நீ இவ்வளவு பெரிய முட்டாளா இருக்கியே?"

சோனுவுக்குப் பயம். 'இது என்ன? இது என்ன மருந்தால செஞ்சது? இதை ஒரு தடவை சாப்பிட்டா அப்புறம் சாப்பிடக் கூடாது. ஆம்பிட்டுக்கிண்டா அடிவிழும். தவிர, ரொம்பக் கெட்டக் காரியம் இது!' சோனு தனக்குத் தானே கூறிக்கொண்டான். ஆனாலும் உள்ளூற அவனுக்கு ஆசை. கல்கத்தாப் பெண்ணிடம் ஏதோ ஒரு ரகசியம், கவர்ச்சி இருக்கிறது, தொலைவின் கவர்ச்சி! அந்த ரகசியத்தை அவனால் புரிந்துக்கொள்ள முடியவில்லை. நீரின் மேல் மலர்ந்திருக்கும் அல்லிப் பூவின் சுபாவம் அவனுக்கு. வெட்கமும் சங்கோசமும் அவனைத் தண்ணீரின் மேல் மிதக்கச் செய்தன. அவன் கையைக் கீழே கொண்டு போனால் தண்ணீருக்குள் அமிழ்ந்து போய்விடுவான்; பாவத்துக்குள் முழுகிப் போய் விடுவான்.

"அமலா, மாட்டேன், மாட்டேன்" என்று அவன் சொன்னான்.

"நீ சமத்து இல்லையா? கொடு, கையைக் கொடு! நீ ஏன் பட்டிக் காட்டான் மாதிரி பேசறே?"

சுருங்கிப் போய்விட்டான் சோனு. உலகத்தில் பரிசுத்தமாக இருந்த அவனை எங்கேயோ அழைத்துச் செல்கிறாளே அமலா! அவனுக்கு அவளிடமிருந்து தப்பியோட வேண்டும் போலத் தோன்றியது. ஆனால் அதே சமயத்தில் அமலாவின் பிரியம் நிறைந்த நீலக் கண்கள், தங்க நிறக் கூந்தல், பளபளக்கும் தேகம். தேகத்துக்குள்ளே ஏதோ ஒரு விளக்கு எரிவது போல் கவர்ச்சி. இவற்றை விட்டு விடவும் மனம் வரவில்லை அவனுக்கு. எப்போதும் அமலாவுடன் இருக்கவும் பழகவும் விருப்பந்தான். ஆனால் அவள் அவனை

இப்போது செய்யச் சொல்லும் காரியம் பாவம் என்று ஏனே அவனுக்குத் தோன்றியது.

அமலா, தன் விருப்பத்தை மறுக்க சோனுவுக்கு இடங்கொடுக்க வில்லை. அவள் அவனுடைய முகத்தைத் தன் பக்கம் இழுத்து அவனுக்கு முத்தமிட்டுவிட்டு, ''உனக்குப் பிடிக்கல்லே?'' என்று அவனைக் கேட்டாள்.

சோனுவுக்கு ஏதாவது புரிந்ததா இல்லையா என்று தெரியவில்லை. உடைந்த கதவு காற்றில் நகர்ந்திருந்தது. மங்கிய நீல வெளிச் சத்தில் அவனுடைய முகம் தெளிவாகத் தெரியவில்லை. அமலா அவனுடைய முகத்தைப் பார்த்துக் கேட்டாள், ''ஏன் பேசாம இருக்கே? உனக்குப் பிடிக்கலியா?'' என்று.

பிடிக்கவில்லை என்று சொன்னால் அமலாவுக்கு அவன் மேல் கோபம் வரும். அப்புறம் அவனிடம் பிரியமாக இருக்கமாட்டாள். அவனுக்குச் சந்தேஷ் கொடுக்கமாட்டாள். பூவும் பழமும் கொடுக்க மாட்டாள். அவன் ஒன்றும் பேசாமல் சமர்த்துப் பையன் போல் ''இம்'' என்பது போல் தலையை ஆட்டினன்.

அமலாவுக்கு அநுமதி கிடைத்துவிட்டது. அவள், அவனைத் தன்னிஷ்டப்படி தன் உடலில் விளையாடச் சொன்னள். சோனுவுக் கும் பிடித்துப் போய்விட்டது அது. கையால் விளையாட்டு, புதுமாதிரி விளையாட்டு. வாழ்க்கையில் ஒரு புதிய, ரகசியமான விளையாட்டு ஆரம்பமாகிவிட்டது.

அவனுடைய பாண்டின் நாடாவைக் கட்டிவிடும்போது, ''உனக் குப் பிடிக்கல்லே?'' என்று அமலா கேட்டாள்.

சோனு சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறே?''

ஒன்றும் பேசாமல் வெளியே வந்து நின்ருன் சோனு; ஒன்றும் புரியாமலேயே அசடுபோல் சிரித்தான்.

''என்ன சோனு, உனக்கு என்ன வந்தது? ஏன் இப்படிச் சிரிக்கிறே?''

சோனு பலமாகச் சிரித்துக்கொண்டே இருந்தான். 'என்ன நடந்தது இப்போ? அமலா அத்தை அவனுக்கு என்ன சொல்லிக் கொடுத் திருக்கா? இப்போ ஒரு நல்ல விளையாட்டு — புதுமாதிரியான விளையாட்டு. தெரிஞ்சுபோச்சு அவனுக்கு! இப்போது அவனுக்கு அமலாவைக் கூட்டிக்கொண்டு மொட்டை மாடிக்கோ பசும்புல் வெளிக்கோ ஓடத் தோன்றியது. அங்கேயே நிற்கப் பிடிக்கவில்லை. அமலா அழகாக இருக்கிருள், அவனுக்குத் தினம் புதுப் புது அநுபவங் களைக் கற்றுக் கொடுத்தாள். ஆனல் தாயின் நினைவு வந்ததும் சோனு வுக்கு வருத்தம் ஏற்பட்டது. பாவத்தைச் செய்துவிட்ட உணர்வு

ஏற்பட்டது. அவனுக்கு இப்போது ஒன்றுமே பிடிக்கவில்லை. இந்த இடிந்த சுவருக்கு அருகில் அவன் தன்னைத் தனியனாக உணர்ந்தான். பக்கத்திலிருந்த அமலா இப்போது அவனுக்கு அந்நியமாக, பரிசயம் இல்லாதவளாகத் தெரிந்தாள். அவன் அவளை விட்டு ஓடத் தொடங்கினான்.

"சோனா, ஓடாதே! கீழே விழுந்துடுவே!" என்று அமலா சொன்னாள்.

அமலாவும் இரண்டிரண்டாகப் படிகளைத் தாண்டி மேலே ஏறினாள். சோனா ஓடும் வேகத்தில் தவறி விழுந்தால் மண்டை உடைந்து செத்துப் போய் விடுவான். அவள் சோனாவைவிட வேகமாகப் படிகள் மேலேறி அவனை இறுகப் பிடித்துக்கொண்டாள். "சோனா என்ன பண்றே நீ? ஏன் இவ்வளவு வேகமாக ஓடறே? இருட்டிலே கீழே விழுந்தாச் செத்துப் போயிடுவே!"

சோனா அமலாவை இருகைகளாலும் உதறித் தள்ளினான். வேறு சமயமாயிருந்தால் அமலா அழுதிருப்பாள். ஆனால் இப்போது சோனாவின் முகத்தைப் பார்த்துப் பயந்துபோய்ப் பேசாதிருந்தாள். அவள் அவன் அருகில் வந்து, "நான் உனக்கு ஒரு நல்ல கதைப் புத்தகம் தரேன். என்னோட வா" என்றாள்.

சோனா பதில் பேசாமல் அங்கிருந்து நடந்து போனான். அமலா அவனை மீண்டும் மீண்டும் கூப்பிட்டும் அவன் பதில் சொல்லவில்லை.

பூஜை மண்டபத்தில் மத்தளம் ஒலித்தது. அவன் பெரிய ஹாலைக் கடந்து சென்றான். ஹாலின் சுவரில் பலவிதமான சித்திரங்கள், பலவிதப் புலிகளின் தோல், மான்களின் தோல். பட்டாக் கத்திகளும் கேடயங்களும் அலங்காரமாக வைத்திருந்தன.

ஹாலுக்கு வந்ததும் சோனா தன்னை ஓர் அரசகுமாரனாக நினைத்துக்கொண்டான். அவனுடைய தலையில் கிரீடம், கால்களில் காப்பு, இடையில் வெள்ளி நிற அரைக்கச்சை, ஒரு நீளப் பட்டாக் கத்தி. அவனிடம் ஒரு கறுப்புக் குதிரை இருக்கிறது. ராட்சசனால் சிறை வைக்கப்பட்டிருக்கும் அரசகுமாரியை மீட்கும் தீவிர ஆசை சோனாவுக்குத் தோன்றிவிடும், அவன் இந்த ஹாலுக்குள் நுழைந்தால்.

ஆனால் இன்று அந்த ஆசை ஏற்படவில்லை அவனுக்கு. அதுவரை அவனுக்குப் பின்னாலேயே வந்துகொண் டிருந்தாள் அமலா. அதற்குப் பின்னும் அவனைத் தொடர்ந்து வரத் துணிவின்றி அவள் ஹாலின் வாசலில் நின்றுகொண்டே அவன் ஹாலைத் தாண்டிப் போவதைப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

ஹாலின் மறுபக்கத்துக் கதவைத் தாண்டியதும் சோனா திரும்பிப் பார்த்தான். அமலா இன்னும் அவன் பக்கம் பார்த்துக்கொண் டிருந்தாள். ராட்சசனால் சிறை வைக்கப்பட்ட அரசகுமாரியின்

முகம் போலத் தோன்றியது, அவளுடைய முகம். ஆனால் அவன் என்ன செய்வது? எங்கே போவது? அவன் செய்த பாவம் எல்லா ருக்கும் தெரிந்துவிட்டது போல் அவனுக்குத் தோன்றியது. அவன் பைத்தியக்காரப் பெரியப்பாவின் அருகில் போய் உட்கார்ந் தால் அவர் அவனுடைய உடலை முகர்ந்து பார்த்தே சொல்லி விடுவார். "சோனு, நீ பெரிய தர்முஜ் வயலைப் பார்த்துவிட்டாய். உன்னுடைய ரகசியம் முடிவற்றது. நீ என்கிட்டே உட்காராதே!"

சோனுவுக்கு அழுகை அழுகையாக வந்தது இப்போது.

அவன் தூணின் மறைவில் நின்றுகொண்டு பார்த்தான். பெரியப்பா சாய்வு நாற்காலியில் படுத்திருக்கவில்லை. அவனுக்குப் பரிசய மானவர்களும் பரிசயமாகாதவர்களுமான மக்கள் பலர் பூஜை மண்டபத்தில் இருந்தார்கள். அவனுக்கு அங்கே போகப் பிடிக்க வில்லை. அவனுக்குத் திரும்பத் திரும்பத் தன் தாயின் முகமே நினை வுக்கு வந்தது. பைத்தியக்காரப் பெரியப்பாவைப் போல் அவனுடைய அம்மாவும் அவனுடைய தலைமயிரை முகர்ந்தே அவன் பாவம் செய்ததைக் கண்டுபிடித்து விடுவாள். இந்த பாவத்தைப் போக்கிக் கொள்ள அவன் என்ன செய்ய வேண்டும்? ஆற்றங்கரையில் நின்றுகொண்டு, செய்த பாவத்தை வெளிப்படையாக ஒப்புக் கொண்டு மன்னிப்புக் கேட்டால் பாவம் போய்விடும் என்று அம்மா சொல்லியிருந்தாள். அப்படித்தான் செய்யவேண்டும் அவன்.

அவன் ஆற்றங்கரைக்குப் போய் ஆற்றில் உள்ள தேவதையை எண்ணிச் சொல்வான், "ஆற்றுத் தேவதையே ...!"

தான் இதற்குள் ஆபீஸ் கட்டிடத்துக்கு வந்து சேர்ந்துவிட்டதைச் சோனு கவனித்தான். ராம்சுந்தர் ஒரு வட்டமான மேஜைக்கு முன்னால் உட்கார்ந்திருந்தான். மேஜையைச் சுற்றி நாற்காலிகள்; அவற்றில் பாபுக்களின் பிள்ளைகள் உட்கார்ந்திருந்தார்கள். ராம் சுந்தருக்கு நல்ல நல்ல கதைகள் சொல்லத் தெரியும். சற்றுத் தூரத்தில் பைத்தியக்காரப் பெரியப்பா உட்கார்ந்திருந்தார். தலைக்கு மேலே ஆகாயம், மங்கலான நிலவு.

மறுநாள் காலையில் பைத்தியக்காரப் பெரியப்பாவைக் கூட்டிக் கொண்டு ஆற்றங்கரைக்குப் போவதென்று தீர்மானித்தான் சோனு. அம்மா ஏதாவது கெட்ட சொப்பனம் கண்டால் விடியற்காலையில் எழுந்து ஸோனுலிபாலி ஆற்றங்கரைக்குப் போய்த் தண்ணீருக்கு முன்னால் தான் கண்ட கனவைச் சொல்லிவிடுவாள். அந்தக் கனவால் ஏற்படும் தோஷம் போய்விடும். அதுபோல் அவனும் செய்து தன் பாவத்தைப் போக்கிக்கொள்ள விரும்பினான்.

இவ்வளவு பெரிய பாவம் செய்த பிறகு சோனுவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. ராம்சுந்தர் சொல்லிக்கொண்டிருந்த கதையில் கூட

அவன் கவனம் செலுத்தவில்லை. அவன் கட்டிடத்துக்குள் நுழைந்து இரண்டாவது பெரியப்பாவின் படுக்கையில் படுத்தான். அன்று முழுதும் அலைந்ததால் ஏற்பட்ட களைப்பில் உடனேயே அவனுக்குத் தூக்கம் வந்துவிட்டது.

கனவில் அவன் ஒரு குடிசையைப் பார்த்தான். அதற்கு முன்னுல் விசாலமான நிலம். நிலத்தில் பயிர் ஒன்றும் இல்லை. கூழாங்கல் பரப்பிய பாதை. அதற்கருகில் ஓர் அகழி. அதில் தண்ணீர் இறங்கிக்கொண் டிருந்தது. வெள்ளை, நீல, மஞ்சள் நிறக் கற்கள். தெளிவான ஜலத்தின் வழியே அதனடியிலுள்ள கற்களின் நிறங்கள் நன்ருகத் தெரிந்தன. அந்த குடிசைக்குப் பின்னுல் ஒரு மலை. அந்த மலையின் நிழலில் குடிசையில் அமைதி நிலவியது. சோனு காலை வெயிலில் குடிசையிலிருந்து வெளியே வந்தான். யாருடைய கையையோ பிடித்துக்கொண்டு ஓடினுன். அந்த ஆளின் முகம் அவனுக்குத் தெரியவில்லை. ஆனுல் பின்னுல் இரண்டு பின்னல்கள் தொங்குவது மட்டும் தெரிந்தது. தலையில் சிவப்பு ரிப்பன் கட்டிக் கொண்டு, வெள்ளை ஃபிராக் போட்டுக்கொண் டிருந்த ஒரு பெண் அவனை அகழிப் பக்கம் இழுத்துக்கொண்டு ஓடினுள்.

அகழியின் ஓரத்துக்கு வந்ததும் சோனுவுக்குப் பயம் வந்து விட்டது. இவ்வளவு ஆழமான தண்ணீரைக் கடந்து அகழியின் மறு கரைக்குப் போக முடியாதென்று தோன்றியது அவனுக்கு. "ஏன் பயப்படறே? வாயேன்! நான் உன்னை அக்கரைக்குக் கொண்டு போய் விடறேன், வா!" என்று அந்தப் பெண் சொன்னுள்.

பெண் கையை நீட்டினுள், அவன் கையைப் பிடிக்க. அவர்கள் தண்ணீரில் நடந்தபோது சின்னஞ்சிறு மீன்கள் அவர்களைச் சுற்றி நீந்தி விளையாடின. நல்ல குளிர்ந்த நீர். அது அந்தக் காலை நேரத் தையே இன்பமயமாக, பெருமை நிகழ்ந்ததாக ஆக்கியது. அந்தத் தண்ணீரை விட்டு மறுகரையில் ஏறவே மனம் இல்லை சோனுவுக்கு.

"என்னடா ரொம்பப் பிடிச்சுப் போச்சா? கரையேரவே மனசு வரவில்லையாக்கும்!"

சோனுவுக்கு அவளுடைய முகம் தெரியவில்லை. முகத்தைத் திருப்பிக்கொண்டு பேசினுள் அவள். "ஆமா, ரொம்ப நன்னுயிருக்கு!" என்று சோனு சொன்னுன்.

சோனுவுக்கு ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது, அந்தத் தண்ணீர். தானும் மீனுக மாறி அந்தத் தண்ணீரிலேயே இருக்கத் தோன்றியது அவனுக்கு. என்ன ஆச்சரியம், இந்த ஆசை தோன்றியதுமே அவன் மீனுக மாறிவிட்டான்! அந்தப் பெண் அவனைப் பார்த்துச் சிரித்தாள். "என்னடா, நீ மீனுயிட்டியா?" என்று சொல்லிக்கொண்டே அவளும் முழுகினுள். என்ன

ஆச்சரியம்! அவளும் மீனாகி விட்டாள்! அவர்கள் இருவரும் நீலமும் மஞ்சளுமான சாந்தா மீனாக மாறி அகழித் தண்ணீரில் நீந்தினார்கள். பிறகு அவர்கள் ஒரு பயங்கரப் பிரவாகத்தில் அகப்பட்டுக்கொண்டார்கள். அந்தப் பிரவாகத்திலிருந்து தப்பிக்கொள்ள முயற்சி செய்த நீலநிற மீன் எப்படியோ சிரமப்பட்டுக் கரைக்கு வந்து விட்டது. இப்போது அதற்கு மூச்சுவிடக் கஷ்டமாயிருந்தது. சோனாவுக்கு மூச்சுத் திணறியது. அவன் அகழிக் கரையில் குதித்தான். மூச்சுத் திணறல் பிராண சங்கடமாக இருந்தது.

கனவில் ஏற்பட்ட மூச்சுத் திணறலின் விளைவாகச் சோனாவுக்கு விழிப்பு வந்துவிட்டது. அவனுக்கு வியர்த்துப் போயிருந்தது. யாரோ அவனை அலாக்காகத் தூக்கிக்கொண்டு சமையலறைப் பக்கம் போனார்கள். அவன் கண்ணைத் திறந்து பார்த்தான். பைத்தியக்காரப் பெரியப்பா! தான் சாப்பிடாமலேயே தூங்கிப் போய்விட்டது இப்போது அவனுக்கு நினைவுக்கு வந்தது.

"சொப்பனத்திலே மீனைப் பார்த்தா என்ன ஆகும், பெரியப்பா?" என்று அவன் கேட்டான்.

"கேத்சோரத்சாலா!"

ஆனால் அவருடைய முகத்தைப் பார்த்தே அவர் சொல்ல விரும்பியது என்ன என்று புரிந்துவிட்டது சோனாவுக்கு, 'சொப்பனத்திலே மீனைப் பார்க்கறவன் ராஜா ஆவான்!' என்று.

மறுநாள் காலை எழுந்ததுமே சோனா பெரியப்பாவைக் கூட்டிக் கொண்டு சீதலக்ஷாவின் கரைக்குப் போனான். எதிரில் சிறிய மணல் வெளி. பக்கத்தில் நாணல் காடு. இடப் பக்கம் மண்டபத்துக்குக் கீழே ஸ்டீமர்த் துறை. நாராயண் கஞ்சிலிருந்து அங்கே பத்து மணிக்கு ஸ்டீமர் வரும்.

ஆஸ்வின் மாதமாகவும் காலை வேளையாகவும் இருந்ததால் புல்லின்மேல் பனிவிழத் தொடங்கியது. பெரியப்பா, சோனா, அவர்களுடைய நாய் ஆக மூவரும் கரையின் மேல் நடந்தார்கள். அவர்கள் படுகையில் இறங்கும்போது யானையைப் பார்த்தார்கள். அதை எங்கோ கூட்டிக்கொண்டு போகிறான் ஜசீம். சோனா அவனைக் கூப்பிட நினைத்தான்: 'ஜசீம்! என்னையும் பெரியப்பாவையும் கூட்டிக் கிண்டு போ! நான் என் அம்மாகிட்டேப் போறேன். எனக்கு இங்கே ஒண்ணும் பிடிக்கல்லே.'

ஆனால் வாய் திறந்து ஒன்றும் சொல்ல முடியவில்லை அவனால். மறுபடியும் பெரியப்பா யானையில் ஏறிக்கொண்டு எங்காவது ஓடிப் போய் விடுவாரோ என்ற பயம் அவனுக்கு.

ஆனல், கடந்த இரவு நிகழ்ச்சி ஞாபகம் வந்ததும் அவனுக்குத் தன் தாயிடம் சொல்லவும் துணிவு உண்டாகவில்லை. காலேக் மியானைப் போலத் தானும் வழி தவறி விட்டதாக அவனுக்குத் தோன்றியது. இந்த மூடுபனியைக் கடந்துவிட்டால் அழகான, இனிமையான உலகம் இருக்கிறது. அங்கே அவனை அழைத்துப் போகத் தன் அழகிய கண்களுடன் காத்திருக்கிருள் அமலா.

சோனு பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு தண்ணீர் ஓரத்தில் நின்ருன். ஆனல் தான் செய்த பாவத்தை வெளிப்படை யாகச் சொல்ல முடியவில்லை அவனல். என்ன செய்வான் அவன்?

எதிரில் நீரில் சில நாணற்பூக்கள் மிதந்து சென்றன. அந்தப் பூக்களைப் பார்த்துக்கொண்டே அவன் தான் செய்த பாவத்தை மறந்துவிட்டான்.

இவ்வளவு காலத்துக்குப் பிறகு, தொலைவிலுள்ள ரகசியம் அவனுக்குக் கொஞ்சங் கொஞ்சம் புரிந்துவிட்டது போல் இருந்தது. இப்போது அவனுககு நாற்புறமும் பூக்கள், பழங்கள், பறவைகள், நதியில் தண்ணீர்ப் பெருக்கு, அதன் இருபுறமும் மணல். ஆற்றின் கரையோரமாகப் போய்க்கொண் டிருந்தது, யானை. பெரியப்பா சூரிய உதயத்தைப் பார்த்துக்கொண்டு நின்ருர். நாய் காலை வெயிலில் சுற்றித் திரிந்தது. ஸ்டீமர்த் துறையில் சில பிரயாணிகள் உட்கார்ந் திருந்தனர். ஆற்றின் நடுவில் புல்லும் வைக்கோலும் ஏற்றிச் செல்லும் படகுகள் ... எல்லாரும் பாட்டுப் பாடுகிருற் போல் இருந் தது — 'எங்கே படகை ஓட்டிக்கொண்டு போவேன்; இருபுறமும் கரை தெரியவில்லையே!' தான் படகோட்டியாகி விட்டதாகத் தோன்றியது சோனுவுக்கு. அமலா, கமலா அல்லது பாதிமாவை வைத்துக்கொண்டு நட்டாற்றில் படகோட்டினன் அவன்.

தன் பாவத்தை ஆற்றிடம் சொல்ல முடியவில்லை அவனல். அவன் பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு கரையிலேறி வந்தான். காலை வெயிலில் அவன் முகம் நெருப்புப் போல் சிவப்பாக ஜொலித்தது.

அவனுடைய முகத்தைப் பார்த்தே ஏதோ புரிந்துகொண்டார் பெரியப்பா. அவர் ஆசீர்வாதம் செய்வதுபோல் அவனுடைய தலை மேல் கையை வைத்தார். 'உன்னுள் விதை முளைக்கிறது, சோனு! இன்னுங் கொஞ்சங் காலத்தில் நீ வாலிபனுகிவிடுவாய். இப்போது உனக்குப் புரியாத ரகசியம் அப்போது புரிந்துவிடும். இன்னும் பெரியவனனதும் இருபக்கமும் கரையில்லாத ஆற்றுக்குள் மூழ்கி விடுவாய் நீ. அப்படி முழுக முடியாவிட்டால் கரையில் அந்த ரகசியத்தைத் தேடுவாய். தேடிக் கண்டுபிடிக்க முடியாவிட்டால் என் மாதிரியே பைத்தியமாகிவிடுவாய்.'

ஜமீன்தார் வீட்டு அந்தப்புரத்துக்குள் போக அன்று முழுதும் விருப்பம் உண்டாகவில்லை சோனுவுக்கு. செடியின் இலையைப் போன்ற ஒரு மௌனம் பொருந்திய வெட்கமும் சங்கோசமும் அவனைப் பிடித்துக் கொண்டிருந்தன. அவன் நாள் முழுவதும், ஆபிஸ் கட்டிடத்து வராந்தாவிலேயே உட்கார்ந்திருந்தான், அல்லது அதை ஒட்டியுள்ள திறந்த வெளியில் உலவினன். அதற்கு முந்தைய நாளும் அவன் அமலா, கமலாவைச் சந்திக்கவில்லை.

இன்று நவமியாதலால் எருமைப் பலி நடக்கும். காலையிலிருந்தே அந்த வீட்டின் தோற்றமே மாறிவிட்டது. லால்ட்டுவும் பல்ட்டுவும் அங்கே இல்லை. அவர்கள் ஒவ்வொரு வீடாகப் போய்க் கொண் டிருந்தார்கள், துர்க்கைச் சிலைகளைப் பார்ப்பதற்காக.

ஆற்றங்கரையை ஒட்டிய பாதை. கரையிலேயே பழைய மண்ட பம். மண்டபத்தை யொட்டி ஒரு வழி பழைய வீட்டுக்குச் சென்றது. முந்தைய நாள் அவன் பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு அந்த வழியில் பழைய வீட்டுக்குப் போனன். ராம்சுந்தரும் கூட இருந்தான்.

அமைதியான, ஜனநடமாட்டமற்ற வழி. அதன் இருபுறமும் செங்கற்களால் கட்டிய வராந்தாக்கள். குளத்தில் கறுப்புநிறத் தண்ணீர்—ஆனலும் கூடப் பெரியப்பாவும் ராம்சுந்தரும் இருந்ததால் அவனுக்குப் பயமாக இல்லை.

குளத்தங்கரையில் ஒரு பெரிய அரசமரம். அதற்குக் கீழே ஓர் ஆசிரமம். அந்த ஆசிரமத்தை ஒட்டிச் சென்ற வழி எவ்வளவு தூரம் போகிறதோ, சோனுவுக்குத் தெரியாது. ஆனல் அவனுக்குத் தோன்றியது, அந்த வழியோடு சென்றல் புல்தா ஏரி வரும் என்று.

இருகரைகளும் கண்ணுக்குத் தெரியாத அளவுக்கு அவ்வளவு பெரிய ஏரி அது. பெரிய பெரிய மீன்கள். அவற்றின் தலையில் சிந்தூரம் போன்ற சிவப்புப் பொட்டு. நதியும் ஏரியும் இணைந்திருந் தன. கறுப்புநிறத் தண்ணீர்; அதில் எண்ணற்ற வெள்ளி மீன்கள். ஏரியின் நடுவில் ஒரு மைய மண்டபம். நீரின் ஆழத்தில் ஒரு பெரிய தீவு. ஏதாவதொரு பெரிய ஏரியைப் பார்த்தாலே புல்தா ஏரி நினைவுக்கு வரும் சோனுவுக்கு.

அவனுக்கு அமலாவின் முகமும் நினைவுக்கு வந்தது. திடீரென்று என்ன வந்துவிட்டது? அவனுக்குப் பைத்தியக்காரப் பெரியப்பா வுடன் பேசச் சங்கோசமாக இருந்தது. ஏரிகரையில் அரசமரத்தடியில் பேசாமல் உட்கார்ந்து கொண்டிருக்க விரும்பினன் அவன். அமலா அவனுக்குத் தண்ணீருக்கடியில் நடக்கும் வெள்ளி மீன்களின் விளையாட்டைக் காட்டி, அந்த விளையாட்டில் அவனை ஒரு ராஜ

குமாரனுக்கிவிட்டு இப்போது ஆற்றங்கரையில் விட்டு விட்டதாக அவனுக்குத் தோன்றியது.

அந்தப் பழைய வீடு—வீடு என்று சொல்ல லாயக்கில்லை. செங் கல்லும் மரமுமாக நின்றுகொண் டிருக்கும் இடிந்த கட்டிடம்; இடிந்துபோன அங்கணங்கள்; காரை உதிர்ந்த நடன மண்டபம்.

கோயிலுக்கென்று விட்டிருந்த சொத்துக்களின் வருமானத்தி லிருந்து அங்கே பூஜை நடந்தது. இந்த ஜமின்தாரின் முன்னோர்கள் இந்த விட்டில் வசித்து வந்தபோதுதான் அவர்களுக்கு ஜமீன்தாரி கிடைத்தது. அவர்களுடைய பெயர் என்னவோ, சோனுவுக்கு மறந்து போய்விட்டது.

ஒரு நாள் ராம்சுந்தர் ஒரு யானையின் கதையைச் சொல்லியிருந்தான். அந்த யானை நதியைக் கடந்தபோது அதன் சங்கிலியில் ஸ்பரிசமணி தட்டுப்பட்டதாம். இரும்பு முதலிய உலோகங்களில் அந்த மணி பட்டால் அவை தங்கமாகிவிடும். அந்த யானைதான் அந்தக் குடும்பத்துக்கு அதிருஷ்டத்தைக் கொண்டு வந்ததாம்.

மரநிழலில் உட்கார்ந்துகொண்டு இந்த மாதிரியான கதைகள் சொல்ல ரொம்பப் பிடிக்கும் ராம்சுந்தருக்கு. நவமியில் பலியிடப்படப் போகும் எருமை மாடு வெளியே புல் மேய்வதை ஆபீஸ் கட்டி டத்தில் ஒரு நாற்காலியின் மேல் தனிமையில் உட்கார்ந்தவாறே பார்த்தான் சோனு. இன்னும் சற்று நேரத்தில் ராம்சுந்தர் அதைக் குளிப்பாட்ட இழுத்துக்கொண்டு போவான்.

சோனு ஒரு தடவை காட்டுப் பாதையில் ஓர் எருமையின் தலையை யும் முண்டத்தையும் தூக்கிச் சென்றதைப் பார்த்துவிட்டுப் பயந்து போய்க் காட்டுக்குள் வழி தவறிவிட்டான். அவன் அதுவரை உயிருள்ள எருமையையே பார்த்ததில்லை. அந்த எருமைக்கு அருகில் போகவே கஷ்டமாக இருந்தது அவனுக்கு. எருமைக்கு அருகில் போய் நின்று அது புல் மேய்வதைப் பார்க்க நினைத்தான் அவன். ஆனால் அது பலியிடப்படப் போகிறது என்பதை நினைக்க நினைக்க உள்ளூற வேதனையாக இருந்தது அவனுக்கு. அதன் அருகில் போக அவனுக்குப் பிடிக்கவில்லை. எருமையின் முதுகில் ஒரு மைனு உட்கார்நதிருந்தது. அந்த மைனுவைப் பார்ததபோது அவனுக்கு எருமையிடம் பரிவு ஏற்பட்டது. அதற்குப் புல்லைத் தன் கையால் பறித்துக் கொடுக்கவேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. பாவம், இன்னும சற்றுநேரத்தில் தான் செத்துப் போகப் போகிறோம் என்று அதற்குத் தெரியாது!

சோனுவைப் பற்றி விசாரித்துக்கொண்டு வர அமலா இரண்டு தடவை பிருந்தாவனியை அனுப்பினாள். இரண்டு தடவையும்

அவன் அவளுடைய கண்களில் படாமல் ஆபீஸ் கட்டிடத்துக்குள் எங்கோ ஒளிந்து கொண்டுவிட்டான். பிருந்தாவனி அவனைப் பெயர் சொல்லி அழைத்தாள். அவன் பதில் சொல்லவில்லை. அவள் திரும்பிப் போய்விட்டாள். இந்தப் பிருந்தாவனிதான் அமலாவையும் கமலாவையும் வளர்த்தவள் என்று சோனு கேள்விப் பட்டிருந்தான. அமலா, கமலாவின் தாய் நல்ல அழகி. அவள் கல்கத்தாவில் தன் அறையில் ஜன்னலருகே தனியாக உட்கார்ந் திருப்பாள். ஜன்னல் வழியே கோட்டைச் சுவர் தெரியும். பெண்கள் பிறந்த பிறகு அவள் அந்த அறையைவிட்டு அதிகம் வெளியே வருவதில்லை. ஞாயிற்றுக்கிழமை மட்டும் மாதா கோவிலுக்குப் போவாள். அமலா, கமலாவின் தந்தையைப் பார்த்தால் சோனு வுக்குப் பரிதாபமாக இருந்தது. அவருடைய முகத்தில் எப்போதும் ஒரு வருத்தம் தெரிந்தது. அதனால்தான் அவன் எவ்வளவுதான் அமலா, கமலாவிடமிருந்து விலகிவிட விரும்பினாலும் அவர்களை அவ்வளவு எளிதில் ஒதுக்கிவிட முடியவில்லை அவனால். அவர்கள் விஷயத்தில் அவனிடம் உள்ளூற ஒரு பலவீனம் இருந்தது. ஆயினும் அந்தச் சம்பவம் நினைவுக்கு வரும்போது அவனுக்குப் பயம் ஏற்பட்டது.

அமலா தானே ஒரு தடவை ஆபீஸ் கட்டிடத்துக்குக் கமலா வுடன் வந்தாள், சோனுவைப் பார்க்க.

"ஏய், நீங்க சோனுவைப் பார்த்தீங்களா? சோனு எங்கே? சோனுவைக் காணோமே!"

ராம்சுந்தரைக் கேட்டதற்கு, "எருமை மாட்டுக்கிட்டே நின்னுக் கிட்டிருக்காரு அவர்" என்றான் அவன்.

அவர்கள் வயல்வெளிக்குப் போனார்கள். எருமை மாடு புல் மேயும் இடத்தில் நிறையச் சிறுவர்களும் சிறுமியரும் கூட்டமாக நின்றார்கள். ஆனால் சோனு அங்கே இல்லை.

அவர்களால் சோனுவைக் கண்டு பிடிக்க முடியாது. ஏனென்றால் அவன் கதவுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டு அமலாவைக் கவனித் தான். ஆனால் தான் அங்கு இருப்பதைக் காட்டிக்கொள்ள வில்லை. அந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவன் அமலா, கமலா விடமிருந்து விலகியிருக்க விரும்பினான். எங்கேயாவது ஒளிந்து மறைந்திருந்து இன்னும் இரண்டு நாட்களைக் கழித்துவிட்டால் பிறகு படகிலேறி ஊருக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம் அவனுக்கு இங்கே இருக்கவே பிடிக்கவில்லை. தாயின் நினைவு அவனை வருத் தியது. எப்போது மறுபடியும் தன் ஊருக்குப் போகப் போகிறோம், தன் ஊரின் சிறிய ஆற்றங்கரையில் இறங்கி அம்மாவைப் பார்க்கப் போகிறோம் என்று ஏங்கினான் அவன்.

இரண்டாவது பெரியப்பாவைப் பார்க்கவே முடிவதில்லை. அவர் எங்கேதான் போகிறுரென்று அவனுக்குத் தெரியவில்லை. இடையிடையே அவர் சோனு குளிப்பதற்குமுன், அல்லது சாப்பிடுவதற்கு முன், பெட்டியைத் திறந்து அவனுக்கு வேண்டிய உடைகளை எடுத்துக் கொடுப்பார். சோனு, லால்ட்டு, பல்ட்டுவுடன் சீக்கிரமாகக் குளியலையும் சாப்பாட்டையும் முடித்துக்கொள்ள வேண்டும். திருவிழா நாளில் யார் யாரைக் கவனிக்க முடியும்? அவரவர்களே இலையைப் போட்டுக்கொண்டு சாப்பிட உட்கார வேண்டியதுதான்.

சாதாரணமாகச் சோனு காலை வேளையில் பெண்கள் இருக்கும் பகுதியில் மற்றச் சிறுவர் சிறுமியருடன் உட்கார்ந்துகொண்டு நெய் சேர்த்துப் பிசைந்த பச்சரிசிச் சாதம், பருப்பு, வேகவைத்த சேப்பங் கிழங்கு, பரங்கிக்காய் கறி இவையெல்லாம் சாப்பிட்டுவிடுவான்.

முந்தின நாள் காலை நேரத்தில் அவன் பழைய வீட்டைப் பார்க்கப் போய்விட்டான். இல்லாவிட்டால் சாப்பாட்டு நேரத்தில் அமலாவைச் சந்திக்க நேர்ந்திருக்கும். இன்று ஓர் இடத்துக்கும் போக முடியாததால் அங்கேயே ஒளிந்து மறைந்துகொண்டு திரிந்தான். அவனைச் சாப்பிடக் கூப்பிட்டார்கள். பிருந்தாவனி வந்துட்டுப் போய்விட்டாள். அமலா கமலாவும் வந்து தேடிவிட்டுப் போய் விட்டார்கள். சின்ன எசமானியம்மாள் அவனுக்காகச் சாப்பாட்டை வைத்துக்கொண்டு காத்திருந்தாள். சோனு இந்த வீட்டுக்கு வந்த பிறகு சின்ன எசமானிக்கு அவனை ரொம்பப் பிடித்துப் போய் விட்டது. இரண்டு நாட்களாக அவன் மற்றச் சிறுவர்களுடன் சாப்பாட்டுக்கு வராததைக் கண்டு கவலைப்பட்ட சின்ன எசமானி திரும்பத் திரும்ப ஆள் அனுப்பினுள் அவனைத் தேட.

பூபேந்திரநாத் பூஜை மண்டபத்திலிருந்து திரும்பி வந்தபோது ஒரு தொன்னை நிறைய சந்தேஷ் கொண்டு வந்திருந்தார். சோனு அதைச் சாப்பிட்டுவிட்டு நவமி பூஜை பார்ப்பதற்காக அதிகாலையிலேயே பைத்தியக்காரப் பெரியப்பாவுடன் ஆற்றுக்குப் போய் ஸ்நானம் செய்துவிட்டு வந்துவிட்டான். பூஜைக்காக வாங்கின பாண்டையும் சட்டையையும் போட்டுக்கொண்டான்.

இன்று எருமைப் பலி நடக்கும். எருமையின் கொம்புகள் சிறிதாக இருந்ததால் அதன் வயது கொஞ்சந்தான் என்று தோன்றியது. அது இன்னும் புல் மேய்ந்துகொண் டிருந்தது. அது புல்லைக் கடிப்பதால் ஒலி உண்டாகிறது. அதைக் கேட்டுக்கொண்டே நாற்புறமும் திரும்பிப் பார்த்தான் சோனு. எவ்வளவு ஏற்பாடுகள்! எருமைக்குப் புல், பூ, பழம் எல்லாம் சாப்பிடக் கொடுத்தார்கள். அதன் கழுத்தில் ஒரு செம்பரத்தம் பூமாலையைப் போட்டார்கள். மாலையுடன் ராஜா

வைப் போல் நின்றது எருமை. அதைச் சுற்றிக் கூடியிருந்த சிறுவர் கள் அதன் நீலநிறக் கண்களைப் பார்த்தார்கள்.

பலி கொடுக்கும் சமயத்தில் அந்தக் கண்கள் சிவப்பாக ஆகிவிடும். சோனு அங்கிருந்து நடந்து வந்து ஆபீஸ் கட்டிடத்தின் படிகளின் மேல் நின்றான். பிறகு பூஜை மண்டபத்துக்குள் நுழைந்தான். அங்கே ராம்சுந்தர் இரண்டு பளபளப்பான, நீளக் கத்திகளை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். இன்று ஆட்டுக் குட்டிகளின் பலியும் உண்டு. உட்கார்ந்துகொண்டே இருந்தான் ராம்சுந்தர். எருமையும் ஆட்டுக்குட்டிகளும் பலியிடப்படும்போது வீட்டுப் பெண்களும் அவர்களுடைய தோழிகளும் முதல் மாடியில் தொங்கும் தட்டிக்குப் பின்னாலிருந்துகொண்டு, "ஹே அம்மா! தேவி கல்யாணி சுந்தரி! மகாகாலனுடைய ஆத்யாசக்தி!" என்றெல்லாம் அம்மனை ஸ்தோத் திரம் செய்து கை கூப்புவார்கள், கீழே விழுந்து வணங்குவார்கள்.

ஆட்டு மாமிசந்தான் நவமி பூஜையில் பிரசாதம். பூஜை முடிந் ததும் பலியிடப்பட்ட ஆட்டுமுண்டங்களைச் சமையலறைக்கு எடுத் துப் போவார்கள். கழுவிய பெரிய பெரிய அண்டாக்கள் உள்ளன. அங்கே நகுல் ஆட்டுத் தோலை உறிப்பதற்காகச் சமையலறை வராந்தாவில் கயிறு கட்டி வைத்தான். பலி முடிந்ததும் வேலைகள் ஜரூராகத் தொடங்கிவிடும். பெரிய பெரிய அண்டாக்களில் ஆட்டு மாமிசம் சமைக்கப்படும். சீதலக்ஷாவுக்கு மறுகரையிலிருந்து வந் திருக்கும் ஆட்கள் எருமையின் உடலை மூங்கிலில் கட்டி எடுத்துக் கொண்டு போய்விடுவார்கள். ரக்ஷித் பெரியப்பா அவர்களுடன் ஏதோ பேசிக் கணக்குத தீர்த்துக்கொண் டிருந்தார்.

சோனு ராம்சுந்தருக்குப் பக்கததில் உட்கார்ந்தான். ராம்சுந்தர் இரண்டு கத்திகளையும் திருப்பித் திருப்பித் தீட்டினான். அடிக்கடி அவன் அக்கறையுடன் கத்திகளைத் தடவித் தடவிப் பார்த்தான், அவை கூர்மையாக உள்ளனவா என்று.

முன்பொரு தடவை சோனு ஸோனாலிபாலி ஆற்றின் படுகையில் தர்மூஜ் வயலில் குழி தோண்டி அதில் ஒரு மாலினி மீனைக் கொண்டு வந்து போட்டான். தர்மூஜ் இலையில் தண்ணீர் கொண்டு வந்து குழியில் ஊற்றினான், மீன் சாகாமல் இருப்பதற்காக. இனிமேல் பயம் இல்லை, மீன் பிழைத்துவிடும் என்று நினைத்துக்கொண்டு குழிக்கு முன்னால் உட்கார்ந்து அக்கறையுடன் மீனைக் கவனித்தானே, அது போல் அக்கறையுடன் ராம்சுந்தர் கத்திகளைத் தீட்டினான். அவன் தன் விரலில் எச்சிலைத் துப்பிக்கொண்டு அதனால் கத்தியைத் தடவிப் பார்த்து அது கூராகிவிட்டதா என்று சோதித்தான். ஒரு பெரிய பிராணியின் கழுத்தை ஒரே வெட்டில் துண்டித்துவிடுவது

ஏரியின் ஆழத்துக்குள் முழுகுவதைப் போல் மிகக் கஷ்டமான காரியந்தான். முழுகினவன் மேலே கிளம்பி வருவானு, மாட்டானு என்பதே சந்தேகம்.

சரியாகப் பத்து மணிக்குப் பலி நடக்கும். நாற்புறமும் ஒரே கோலாகலம், பரபரப்பு. யாருமே அமைதியாக உட்கார்ந்திருக்கவில்லே.

இரண்டாவது பெரியப்பா இரண்டு தடவை அவனேக் கடந்து வராந்தாவுக்குப் போனுர். கத்தி தீட்டும் ராம்சுந்தர், தான் கத்தி தீட்டுவதை வியப்புடன் சோணு பார்த்துக்கொண் டிருப்பதைக் கவனித்தான். பெரியண்ணு, இரண்டாவது அண்ணு, மற்றச் சிறுவர்கள் எல்லாரும் பரபரப்புடன் இங்குமங்கும் போய்க்கொண் டிருந்தார்கள்.

அவர்கள் சோணுவைப் பலமுறை பார்த்தும் அவனிடம் ஒன்றும் பேசவில்லே. நவமி பூஜை முடிந்த பிறகுதான் எல்லாரும் மற்றவர்களேக் கவனிப்பார்கள், அவர்களுடன் பேசுவார்கள். ஆகையால் சோணுவும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு ரொம்பப் பசியெடுத்தது. இதை யாரிடமும் சொல்ல முடியவில்லே அவனுல். அவன் காலேயில் சாப்பிடவில்லே. அவனுக்குத் தினம் காலேயில் பழையது சாப்பிட்டுப் பழக்கம்.

அன்று ஒரு நாள் அவன் பாதிமாவைத் தொட்டுவிட்டதற்காக அவனேச் சாப்பிட விடவில்லேயே, அன்று அவனுக்குப் பசித்தமாதிரி இன்றும் பசித்தது. சோணு பேசாமல் கத்திகளேப் பார்த்துக்கொண் டிருந்தான். அவை பளபளவென்று ஜொலித்தன. அவற்றைத் தொட்டுப் பார்க்க ஆசையாக இருந்தது சோணுவுக்கு. ராம்சுந்தர் அவற்றை அருகருகே வைத்திருந்தான். ஒன்று எருமை பலிக்காக, இன்னென்று ஆட்டுப் பலிக்காக. சோணு கண்ணிமைக்காமல் அவற்றையே பார்த்துக்கொண் டிருந்தான். ராம்சுந்தரின் முகம் இன்று ஏதோ மாறியிருப்பதாகத் தோன்றியது அவனுக்கு; சற்றுப் பயமாகக் கூட இருந்தது.

சரியாகப் பத்து மணிக்குப் பலி. எல்லோரும் கடிகாரத்தைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். மண்டபத்தில் உரத்த குரலில் மந்திரோச்சாடனம் நடந்தது. புரோகிதர்கள் வேகமாக மந்திரம் சொன்னுர்கள்.

பத்து மணிக்குப் பத்து மேளங்கள், பத்து பாக்பைப்புகள், பத்து மிருதங்கங்கள் ஒலிக்கும். ஒவ்வொன்றும் பத்துப் பத்து. பலியிடப் படப்போகும் ஆடுகளின் எண்ணிக்கையும் பத்து. எருமை மட்டுந்தான் ஒன்று. பயமாக இருந்தது சோணுவுக்கு, எருமைப் பலியை நினேத்தாலே.

அன்று இரவில் கண்ணுமூச்சி விளேயாடும் சமயத்தில் பாசி பிடித்த அந்த இடிந்த அறைக்குள்ளே காகம், கா கா என்று கரைந்தது.

இரவில் காகம் கரைவது கெட்ட சகுணம். அதனுல் கேடு வரும். அமலா அவனை வைத்துக்கொண்டு என்னென்னவோ செய்தாள்.

ராம்சுந்தர் இப்போது கத்திகளைக் கூர்மையாகத் தீட்டிவிட்டுக் கவலையில்லாமல் மீசையை முறுக்கிக்கொண் டிருந்தான். அவன் தான் எருமையைப் பலி கொடுக்கப் போகிறுன். இன்று காலை முதல் அவன் மாறிப் போயிருந்தான். விடியற்காலையில் ஆற்றுக்குப் போய் ஸ்நானம் செய்துவிட்டு வந்தான். அறைக்குள் உட்கார்ந்துகொண்டு கஞ்சா குடித்தான். குடுமியில் செம்பரத்தம் பூவைச் சுற்றிக்கொண்டான். இப்போது கத்திகளை முன்னுல் வைத்துக்கொண்டு பத்மாசனம் போட்டுக்கொண்டு உட்கார்ந் திருந்தான். அழைப்பு வந்ததும் அவன் இரண்டு கத்திகளையும் தோளின் மேல் சாத்திக்கொண்டு ஓடிவருவான். கண்போலக் கத்தியில் சிந்தூரப் பொட்டு இடுவான். அப்புறம் அவனுக்கு முன்னே போய் நிற்க யாரால் முடியும்?

சோனு தன் பக்கத்தில் பேசாமல் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, "சோனு எசமான், இப்பப் போங்க! நான் அம்மனுக்கு ஆராதனை பண்ணனும்" என்று கூறிவிட்டு மறுபடி மௌனமாகிவிட்டான் ராம்சுந்தர்.

எவ்வளவு பெரிய பிராணியை ஒரே வீச்சில் வெட்டித் தள்ளப் போகிறுன் ராம்சுந்தர்! எவ்வளவு தடிமனுன கழுத்து எருமைக்கு! எருமை கறுப்பாக, பளபளப்பாக இருந்தது. பத்து, இருபது ஆட்களால் கூடச் சமாளிக்க முடியாத முரட்டு எருமையை ஒரே வெட்டில் வெட்டப் போகிறுன் அவன்.

பலியிடப்படும் எருமையைப் பிடித்துக்கொள்ளப் போகும் ஆட்களும் ஒவ்வொருவராக வந்து உட்கார்ந்தார்கள். வட்டமாக உட்கார்ந்துகொண்டு கஞ்சா சாப்பிட்டார்கள். இரண்டு கைகளை யும் தூக்கிக்கொண்டு ஏதோ உரக்கக் கூவினுர்கள்.

சோனு இன்னும் அங்கேயே அசையாமல் உட்கார்ந்திருந்தான். இந்த ஆட்களைப் பார்த்துவிட்டு அவன் சுவர்ப் பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டான். சுவரில் விதவிதமான ஈட்டிகள், கத்திகள், கேடயங்கள் அலங்காரமாகத் தொங்க விடப்பட்டிருந்தன. ராம் சுந்தர் நாள் முழுவதும் இந்த அறையிலேயே படுத்துக் கிடப்பான் போலும். அவனுடைய உடலில் புலி, கரடி ஆகிய மிருகங்களின் உருவங்களைப் பச்சை குத்திக்கொண் டிருந்தான். அவன் பாபுக் களோடு சாலமரக் காட்டுக்கு வேட்டையாடப் போய்விட்டு வந்தால் நாராயண்கஞ்சுக்குப் போய்த் தன் கையிலோ, நெஞ்சிலோ, முதுகிலோ, மணிக்கட்டிலோ வேட்டைச் சித்திரங்களைப் பச்சை குத்திக்கொண்டு வந்துவிடுவான். அவன் எவ்வளவு புலி, மான்,

கொக்கு வேட்டையாடியிருக்கிறான் என்பது அவன் தேகத்தைப் பார்த்தாலே தெரிந்துவிடும். ராம்சுந்தர் தனியாக இருக்கும்போது சோனா அவனுடைய உடம்பில் பச்சை குத்திருக்கும் புலிகளை எண்ணி, "நீங்க மூணு புலி கொன்னிருக்கீங்க" என்பான். ராம்சுந்தர் சிரித்துவிட்டுக் கையைத் தூக்கிக் காண்பிப்பான், "இங்கே ஒரு புலி இருக்கே, பார்த்திங்களா? புலியைக் கட்கத்திலே ஒளிச்சு வச்சுக் கிட்டிருக்கேனாக்கும்!"

"ஏன் ஒளிச்சு வச்சிருக்கீங்க?"

"எனக்கு அது மேலே ரொம்ப ஆசை."

"ஆசைன்னா என்ன?"

"உங்களுக்குக் கல்யாணம் ஆகும்போது ஆசைன்னா என்னன்னு தெரியும்."

சோனா வெட்கமடைந்து, "போங்க!" என்று ராம்சுந்தரைத் தள்ளிவிடுவான். "எனக்கு ஒரு மான்குட்டி கொண்டு வந்து தருவீங்களா?" என்று கேட்பான்.

பாபுககள் வைத்திருக்கும் மிருகக்காட்சிச் சாலையில் உள்ள மிருகங்கள் எல்லாம் ராம்சுந்தர் பிடித்து வந்தவைதாம்.

"காட்டுக்குப் போனா எனக்கு மான்குட்டி கொண்டுவந்து தரீங்களா?"

"எங்கே வச்சுக்குவீங்க?"

"ஊருக்குக் கொண்டு போவேன்."

"என்ன போடுவீங்க அதுக்கு?"

"புல்லுப் போடுவேன்."

"காட்டிலேருந்து கொண்டுவந்தா அது கோவிச்சுக்கிட்டு இருக்கும். புல்லுத் திங்காது."

"ஏன் கோவிச்சுக்கும்?"

"காட்டு மிருகம் காட்டிலே இருக்கத்தான் ஆசைப்படும்."

"கமலா கிட்டே ஒரு மான் இருக்கே! அது ஏன் கோவிச்சுக் கல்லே?"

"அந்தப் பொண்ணுங்க எவ்வளவு அழகா இருக்காங்க! என்ன அழகான முகம், என்ன அழகான கண்ணு! என்னமாப் பளபளன்னு இருக்காங்க? அவங்க பேசினா உங்களுக்குக் கோபம் வருமா, சொல்லுங்க. அவங்களோடே விளையாட, பேச ஆசையா இருக்கு, இல்லே?"

"போங்க, போங்க! நீங்க கெட்ட பேச்செல்லாம் சொல்றீங்க."

அப்படியெல்லாம் வேடிக்கையாகப் பேசும் ராம்சுந்தர் இப்போது 'உம்'மென்று உட்கார்ந்திருந்தான். அவனுடைய நெற்றியில் ஒரு பெரிய சிவப்புச் சந்தனப் பொட்டு யாரையும் லட்சியம் செய்ய

வில்லை அவன். எல்லாரும் அவன் அருகில் வரக்கூடப் பயப்பட்டார்கள். அமலாவின் அப்பா ஒரு தடவை அந்தப் பக்கம் வந்தார். ராம்சுந்தர் தன் இஷ்டப்படி காலைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தும் ஒன்றும் சொல்லாமல் அங்கிருந்து நகர்ந்துவிட்டார். அவனுடைய கண்கள் செம்பரத்தம் பூப்போல் சிவந்திருந்தன. அவன் அடிக்கடி பக்கத்து அறைக்குள் நுழைந்து எதையோ சாப்பிட்டுவிட்டு வந்தான். அவனுடைய வாயிலிருந்து ஏதோ காரமான நெடி வந்தது.

சோனு பூஜை மண்டபத்தில் போய் நின்றான். ஒரு கொண்டைப் புரு லஸ்தர் விளக்கின் மேல் உட்கார்ந்துகொண்டு வெகு நேரமாகக் கூவியது. சோனு லஸ்தர் விளக்கில் தன் முகம் பிரதிபலிப்பதைப் பார்க்க முயற்சி செய்தான். லஸ்தர் விளக்கின் கண்ணாடித் துண்டுகள் காற்றில் மெல்ல அசைந்தன. அவை வண்ணத்துப் பூச்சியைப் போல் செதுக்கப்பட்டிருந்தன. அவை அசைந்து ஒன்றோடொன்று உராயும்போது கலகலவென்று சப்தம் உண்டாகியது. அந்தச் சப்தத்தைக் கேட்டு நிமிர்ந்த சோனு துர்க்கையம்மன் தன் பெரிய விழிகளால் அவன் பக்கம் பார்ப்பதைக் கண்டான். அவன் கொஞ்சம் நகர்ந்து நின்றான். தேவியின் பார்வையும் அவன் பக்கம் நகர்ந்ததுபோல் இருந்தது. அவன் பயந்துபோய்ச் சுவரோடு சுவராக நின்றான். பயந்துபோனால் அவன் புஸ்தகத்திலிருப்பது போல், அமலா, கமலாவைப் போல் பேச ஆரம்பித்துவிடுவான். தன் பாட்டி அடிக்கடி சொல்வதுபோல் "அம்மா துர்க்கே! என்னோட பெரியப்பாவைச் சொஸ்தமாக்கிடு" என்று வேண்டிக்கொண்டான்.

ஜிகினா அலங்காரத்தில் அம்மனின் முகம் பளபளவென்று ஜொலித்தது. சாம்பிராணிப் புகையில் தேவியின் முகம் அசைவது போல் தோன்றியது. மூக்கில் தொங்கும் வளையமும் அசைவதுபோல் இருந்தது.

இரண்டாவது பெரியப்பா ஒரு பட்டாடை அணிந்துகொண்டு வெகு நேரமாகச் சண்டி ஸ்தோத்திரம் சொல்லிக்கொண்டிருந்தார். புரோகிதர் எல்லா இடங்களிலும் பூக்களையும் வில்வ இலைகளையும் தூவினார். நைவேத்தியப் பொருட்கள் குவிந்து கிடந்தன. பலவிதப் பழங்களின் வாசனை.

பலி நேரம் நெருங்கிவிட்டது. பத்து மேளங்கள் முழங்கின. யாரோ போனார்கள், எருமையை இழுத்துக்கொண்டு வர. அம்மனின் கண் கொஞ்சங் கொஞ்சமாகச் சிவந்துகொண்டு வந்தது. எல்லோரும் எருமைப் பலி பார்ப்பதற்காக நல்ல இடம் பிடித்துக்

கொண்டு நின்றார்கள். சோணு சுவரின்மேல் சாய்ந்தவாறு நின்றான். அசைய முடியவில்லை அவனால்.

ராம்சுந்தர் இரண்டே வெட்டில் இரண்டு ஆடுகளைப் பலி கொடுத்துவிட்டான். சோணு கண்களை மூடிக்கொண்டு விட்டான். அவன் கண் திறந்தபோது ஆட்டுக்குட்டிகளின் வெட்டுண்ட முண்டங்கள் துடித்துக்கொண் டிருந்தன. அவன் தேவியிடம் வேண்டிக்கொண்டான், "நான் இனிமேல் அப்படிப் பண்ணமாட் டேன் அம்மா!" என்று.

அவன் ஒரு தூண்மேல் சாய்ந்துகொண் டிருந்தான். மாடியில் மூங்கில் தட்டி தொங்கியது. அதன் மறைவில் வீட்டுப் பெண்களும் வேலைக்காரிகளும் நின்றுகொண்டு பலியைத் தரிசனம் செய்தார் கள். பயத்தால் கல்லாய்ச் சமைந்துபோய் நின்றான் சோணு. தேவி அவனையே கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண் டிருப்பது போல் இருந்தது. இரத்தச் சிவப்பான கண்களை உருட்டிக்கொண்டு தேவி கேட்டாள்: "நீ என்ன பண்ணினே, சோணு?'

அவன் சொன்னான்; "நான் ஒண்ணும் பண்ணல்லே, அம்மா!"

காற்று வீசியது. லஸ்தர் விளக்கின் கண்ணாடி மணிகள் கலகல வென்ற ஒலியுடன் அசைந்தன. கொண்டைப்புறு ஊமத்தம் பூக் கண்ணாடியின் மேல் உட்கார்ந்துகொண்டு பலியைப் பார்த் தது. கீழே இடம் இல்லை. மண்டபத்தில் நாற்புறமும் வராந்தாவில் எங்கும் ஒரே கூட்டம். புறுவுக்கு மட்டும் நல்ல இடம் கிடைத்து விட்டது. அமலாவும், கமலாவும் மூங்கில் தட்டிக்குப் பின்னாலிருந்து கொண்டு பலியைப் பார்த்தார்களோ, அல்லது கூட்டத்தில் அவனைத் தேடினார்களோ!

இப்போது சோணுவை யாரும் பார்க்க முடியாது. அவனுக்கு முன்னால் நின்றவர்கள் அவனை நன்றாக மறைத்துவிட்டார்கள். இப்போது துர்க்கையம்மன் அவனைப் பார்க்கவில்லை. அவன் சப்தம் செய்யாமல் தலையைக் குனிந்துகொண்டு ஓடிப் போய்விடும் எண்ணத்துடன் கூட்டத்தைத் தள்ளிக்கொண்டு வாயிற்படியருகில் வந்ததும், யாரோ ஒருவர் அவனுடைய கையைப் பிடித்து அவனைத் தன் தோளின் மேல் ஏற்றிக்கொண்டு விட்டார்.

சிலர் எருமையை பிடித்து இழுத்துக்கொண்டு வந்தார்கள். சாம்பிராணி, ஊதுபத்திகளின் மணம் போதை ஊட்டியது. அவற் றின் புகை காரணமாகத் துர்க்கையின் முகம் தெளிவாகத் தெரிய வில்லை. ஆனால் எருமை மாட்டுக்கு எல்லாம் தெரிந்துவிட்டது. துர்க்கையின் மூக்கில் ஒரு பெரிய வளையம் தொங்கியது. தேவியின் கண்களில்தான் என்ன காம்பீர்யம்!

துர்க்கையை ஆராதிக்கும் பாவனையில் எருமை நிமிர்ந்து பார்த்தது. அந்தச் சமயத்தில் பத்துப் பன்னிரண்டு பேர் அதைப் பலியிடும் கட்டை மேல் தள்ளிவிட்டார்கள். அதன் கால்களைக் கயிற்றால் கட்டி யிருந்தார்கள். கயிற்றைச் சிலர் இழுத்ததும் எருமை இடறிக் கீழே விழுந்தது. அதன நாக்கு கீழே தொங்கியது. அதிலிருந்து எச்சில் வழிந்தது. கோங், கோங் என்ற ஒலி வந்தது அதனிடமிருந்து. யாரோ அதன் கழுத்தை அமுக்கியதும் அந்த ஒலி நின்றுவிட்டது. அதன் ஓலம் யார் காதிலும் விழவில்லை. பல மத்தளங்களின் சப்தத்திலும் அதன் எதிரொலியிலும் அந்த பாளிகையும், எருமையும், சோனாவும் அதிர்ந்து ஆடினார்கள். காற்றில் அசையும் லஸ்தர் விளக்கு மணிகள் ஜலதரங்கம் போல் ஒலியெழுப்பின. துர்க்கை யின் முகம் ஜொலித்தது.

பலி நடந்தது. சோனாவின் இரண்டாவது பெரியப்பா வெட்டுண்ட முண்டங்களை அடுக்கிவைத்தார். வெட்டிய தலைகளில் மண்ணால் சின்னஞ்சிறு நெய் விளக்குகளை ஏற்றினார்கள். எருமைப் பலிதான் கடைசி. வாத்தியம் வாசிப்பவர்கள் ஆடிக்கொண்டே வாசித்தார்கள். எல்லாரும் 'துர்க்கைக்கு ஜே, சண்டியன்னைக்கு ஜே, அன்னபூர்ணா வுக்கு ஜே!' என்று கோஷம் போட்டார்கள்.

'ஆதிசக்தி மகாமாயாவுக்கு ஜே! அசுரவிநாசினிக்கு ஜே! மதுகைடப சம்ஹாரிணிக்கு ஜே!'

ராம்சுந்தர் கத்தியை எடுத்துக்கொண்டு முன்னே வந்தான். பிரதிமையின் முகம் அசைந்தது. மகிஷமர்த்தினி மகிஷத்தின் ரத்தத்தைக் குடித்துவிட்டுத் தானே நர்த்தனமாடத் தொடங்கி விடுவாள் போலும்.

எருமையைப் பலிக்கட்டையின் மேல் தள்ளியவர்கள் எல்லாரும் அதன் முதுகை அமுக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். ஒரு கூடாரத்தை நான்கு பக்கங்களிலும் கயிறுகளால் பிடித்திழுத்து நிறுத்துவதைப்போல் நான்குபேர் எருமையைக் கட்டிய கயிறுகளை நாற்புறமும் பிடித்துக்கொண் டிருந்தார்கள். ஆட்கள் அழுத்தும் அழுத்தத்தில் எருமையின் கழுத்து நீண்டது. அதன் கறுப்புத் தோல் நீலமாகத் தெரிந்தது. அதன் கழுத்தில் நெய் தடவித் தேய்த் தார்கள். சோனா எட்டி எட்டிப் பார்த்தான். தன்னை யார் தூக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்று பார்க்க அவனுக்கு நேரமில்லை. இங்கிருந்து மூங்கில் தட்டி கண்ணுக்குத் தெரியவில்லை.

சோனா வைத்தகண் வாங்காமல் தேவியையே பார்த்துக்கொண் டிருந்தான். ராம்சுந்தர் கையில் கத்தியுடன் மெதுவாக முன்னே வந்தான். தேவியின் முன்னால் தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து, "அம்மா! தாயே! அன்னபூர்ணா!" என்று கதறினான். இதையெல்லாம்

பார்த்துச் சோனு திகைத்தான். கயிறும் வைக்கோலும் மண்ணும் சேர்த்துச் செய்த இந்தப் பிரதிமைக்கு இந்த நிமிஷத்தில் என்ன மகிமை! என்ன பெருமை!

பாபுக்கள் கை கூப்பிக்கொண்டு நின்றுர்கள். புரோகிதர் மணியடித்துக்கொண்டு பூக்களையும் வில்வத்தையும் மாட்டின் மேல் போட்டதும் ராம்சுந்தர் அதன் முன்னுல் வந்து நின்றுன். ஓர் ஆள் மாட்டின் வாலைச் சுருட்டிப் பிடித்துக்கொண்டான். அது வாலைச சிலிர்த்துக்கொண்டது.

"அம்மா, தாயே! எல்லாம் உன் லீலை!" என்று முழங்கினுன் ராம்சுந்தர். அவன் கையை ஒரு முழ உயரத்துக்கு உயர்த்திக் கததியை மாட்டின கழுத்தில் பாய்ச்சினுன். சோனுவின் கண்ணுக்கு முன்னுல் பளபளதத அந்தக் கத்தி திடீரென்று மறைந்துவிட்டது. தலையும் முண்டமும் வெவ்வேருக விழுந்தன.

குடத்திலிருந்து தண்ணீர் கொட்டுவதுபோல் வெட்டப்பட்ட கழுத்திலிருந்து ரத்தம் குபுகுபுவென்று கொட்டியது. வெட்டப்பட்ட எருமைத் தலையைத் தம் தலைமேல் வைத்துக்கொண்டு நடந்தார் சோனுவின் பெரியபபா.

உண்மையில் ராம்சுந்தர் கத்தியைத் தூக்கியதுமே கண்களை மூடிக் கொண்டு விட்டான் சோனு. அவன் கண்களைத் திறந்தபோது பெரி யப்பா எருமைத் தலையைத் தூக்கிக்கொண்டு போவதைப் பார்த் தான். அவர் எவ்வளவு பலசாலி, அவருக்குத் தேவியிடம் எவ்வளவு பக்தி என்று சோனுவுக்கு இப்போதுதான் புரிந்தன. அவர்தாம் சோனுவை இவ்வளவு நேரம் தோள்மேல் தூக்கிக்கொண் டிருந்திருக் கிருர். அவர் பலிக்கட்டையிலிருந்து ரத்ததனதை ஒரு மண்சட்டியில் எடுத்து எல்லாருக்கும் அதைக் கொண்டு திலகமிட்டார்.

"ஹே ஈசுவரி! கருணைக் கடலே! உன்னை நகத்தால் கிள்ளினுல் மண்ணும் சாயமும் விரலோடு வந்துவிடும். இருந்தாலும் உன் மகிமையே மகிமை!"

எல்லாரும் இந்த மாதிரி உணர்ச்சி வசப்பட்டிருப்பதைப் பார்த்துப் பைத்தியக்காரப் பெரியப்பா தரையில் விழுந்து புரண்டு சிரித்தார். கூட்டத்துக்குள் இரண்டாவது பெரியப்பாவைக் காண முடியவில்லை சோனுவால். மண்சட்டி எடுத்துவர மறந்துபோன வர்கள் சேம்பு இலையிலோ வாழையிலையிலோ ரத்தத்தை எடுத்துக் கொணடார்கள். அவர்கள் வெறி பிடித்தவர்கள் போல் கையிலும் காலிலும் ரத்தத்தை அப்பிக்கொண்டு நடனமாடினுர்கள். சோனு அவர்களிடமிருந்து விலகி, உட்புறத் தூண ஒன்றின் மறைவில் நின்றுன். பயத்தில் அவனுக்குப் பசி மறந்து போய்விட்டது. தன்னைத் தனியனுக, துணையில்லாதவனுக உணர்ந்தான் அவன்.

அவனுக்குத் தன் தாயின் நினைவு வந்தது. அவன் தன் தாயின் பக்கத்தில் படுத்துக்கொண்டு எவ்வளவு நாளாகிவிட்டது! தாயின் பக்கத்தில் படுத்துக்கொள்ளாவிட்டால் அவனுக்குத் தூக்கம் வருவதில்லை. அம்மாவின் மேல் காலைப் போட்டுக்கொண்டு அவளைத் திண்டாகப் பயன்படுத்தினால்தான் அவனுக்குத் தூக்கம் வரும். இப்போது அவன் உள்ளூறத் தன் தாயை நினைத்து ஏங்கினான்.

அம்மா நினைவோ, பசியோ, என்ன காரணமோ தெரியவில்லை; அவன் தூண்மேல் சாய்ந்துகொண்டு கேவிக் கேவியழத் தொடங்கினான். காலையிலிருந்து அவன் அநேகமாக ஒன்றுமே சாப்பிடவில்லை. அவனுடைய முகம் வற்றிப் போயிருந்தது. இவ்வளவு பேர் அவனைச் சுற்றிலும் இருந்தும் அவனால் யாரிடமும் ஒன்றும் சொல்ல முடியவில்லை. இரண்டாவது பெரியப்பாவிடம் பேசப் பயம் அவனுக்கு. அவனுடைய அண்ணாக்களோ அவனை லட்சியம் செய்வதே இல்லை. எருமைப் பலி ஆனதுமே அவர்கள் மற்றப் பையன்களுடன் எங்கோ போய்விட்டார்கள்.

இப்போது சமையலறையில் பலியாடுகளின் மாமிசத்தைச் சமைத்துக் கொண்டிருப்பார்கள். அது தயாரானதும் பெரிய முற்றத்தில் இலை போடுவார்கள். எல்லாரும் சாப்பிட உட்காரும்போது சோனாவும் உட்காரலாம். சமையலறையிலிருந்து சாப்பாட்டுக்கு எப்போது அழைப்பு வரும் என்று காத்துக்கொண்டு நின்றான் சோனா. அம்மாவை நினைத்து நினைத்து அழுகை வந்தது அவனுக்கு.

மாடிப்படிகளில் யாரோ இறங்கி வந்தார்கள்; அமலா, கமலா. "சோனா, நீ திலகம் இட்டுக்கல்லியா?" என்று அவர்கள் கேட்டார்கள்.

"இல்லே."

"வா, திலகம் இட்டுக்கோ" என்று சொல்லி எங்கிருந்தோ ஒரு மண்சட்டியை எடுத்துக்கொண்டு வந்தாள் அமலா. அதில் ரத்தம் உறைந்து கிடந்தது. அமலா அதை எடுத்துச் சோனாவுக்குப் பொட்டு வைத்தாள். "நீ பொட்டு வச்சுக்கல்லேன்னா எப்படிப் பெரியவனாவே? எப்படி உனக்குப் புண்ணியம் வரும்?" என்று கேட்டாள்.

சோனா பதில் எதுவும் சொல்லாமல், சற்று இருட்டாக இருந்த அந்த இடத்திலேயே நின்றுகொண்டிருந்தான், அவர்களைப் பார்த்தவாறு. ஜரிகை வேலை செய்த ஃப்ராக், கையில் விலையுயர்ந்த கடிகாரம், வளையல். சுண்டு விரலில் வைர மோதிரம். 'பாப்' செய்த தலைமயிரை வெள்ளை ரிப்பனால் கட்டிக்கொண்டிருந்தார்கள் அவர்கள். அவர்களுடைய உடம்பிலிருந்து நல்ல மணம் வந்தது, தாமரைப் பூவின் வாசனை போல.

அந்த இடம் இருட்டாயிருந்தாலும் சோனு அழுதுகொண்டிருப்பதைக் கவனித்துவிட்டாள் அமலா. "நீ எங்கே போயிருந்தே, சோனு? நாங்க உன்னைக் காலம்பறத்திலேருந்து தேடறோம்" என்றாள் அமலா.

சோனு பதில் சொல்லவில்லை.

"சின்னச் சித்தி உன்னைக் கூப்பிடறா, போ!" என்று கமலா சொன்னாள்.

"நான் எருமைப் பலி ஒரு தடவை கூடப் பார்த்ததில்லே" என்று சோனு சொன்னான்.

"நீ ஏன் அழுதுகிண்டிருந்தே?" என்று அமலா கேட்டாள்.

"நான் எங்கே அழுதேன்?"

"நீ அழுதியே! நான் பார்த்தேனே!"

தான் அகப்பட்டுக்கொண்டுவிட்டதை அறிந்த சோனு, "பொட்டு இட்டுக்கிண்டா பாவமெல்லாம் போயிடுமா?" என்று கேட்டான்.

அமலா, "போயிடும்!" என்று சொல்லி அவனுடைய தோளின் மேல் கையை வைத்து அவனைச் சற்று உட்புறம் அழைத்துப் போய், "சோனு, ஒருத்தர்கிட்டேயும் சொல்லல்லியே?" என்று கேட்டாள்.

"இல்லே."

"நீ ஏன் என்னை அத்தைன்னு கூப்பிட மாட்டேங்கறே? நான் உன்னைவிட எவ்வளவு பெரியவ!"

"எனக்கு வெட்கமா இருக்கு."

"நீ என்னை அத்தைன்னு கூப்பிடணும். நான் சொல்றபடி கேட்கணும் புரிஞ்சுதா?"

சோனு பதில் சொல்லவில்லை.

"இன்னிக்கு ராத்திரி மொட்டை மாடிக்கு வரியா?"

"சீ!" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து ஓடிப்போனான் சோனு.

பூஜை மண்டபத்தில் பலியிட்ட மிருகங்களின் தலைகள் கிடந்தன. பத்து ஆட்டுத் தலைகள், அவற்றுக்கு நடுவில் எருமைத் தலை. ஒவ்வொரு தலையிலும் ஒரு விளக்கு. சில விளக்குகள் அணைந்து போய்விட்டன. எல்லாத் தலைகளிலும் இருந்த கண்கள் தேவியைப் பார்த்துக்கொண்டிருந்தன. இப்போது அங்கே கூட்டம் இல்லை. பலிக்கட்டையில் கொஞ்சங்கூட ரத்தம் இல்லை. எல்லாரும் அதை வழித்துத் துடைத்து எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

சோனு ஏரிகரைக்குப் போனான். நல்ல வெயில் வந்திருந்தது. காலையில் சரத்கால மழை ஒரு பாட்டம் பெய்துவிட்டிருந்தது. புல், பூ, பறவை எல்லாம் சுத்தமாக, புதுமையாக இருந்தன. அப்படியும் சோனுவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. அப்போது அவன்

பைத்தியக்காரப் பெரியப்பா மயில் கூண்டுக்கருகில் உட்கார்ந்திருப் பதைக் கண்டான். வடப்புறத்து வானத்தில் ஒரு கறுப்பு மேகம். அதைப் பார்த்துவிட்டு மயில் தோகை விரித்து ஆடியது. அதைப் பார்த்துக்கொண்டு தம்மை மறந்து உட்கார்ந்திருந்தார் பெரியப்பா.

சோனு கூப்பிட்டான், ''பெரியப்பா!''

கையுங்களவுமாகப் பிடிபட்டவர்போல் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தார் மணீந்திரநாத். அவருடைய இந்தப் பாவத்தைக் கவனிக் காமலேயே சோனு அவரிடம் ரகசியமாகச் சொன்னான்: ''வாங்க, பெரியப்பா! நாம ஊருக்குப் போயிடுவோம்.''

சோனு சாப்பிடவில்லை என்று மணீந்திரநாதத்துக்குத் தெரிந்து விட்டது போலும். அவனுடைய கண்கள் இடுங்கிப் போயிருந்தன. அவர் அவசர அவசரமாக எழுந்து சோனுவை நேராகச் சமைய லறைக்கு இழுத்துக்கொண்டு போனார். தாமே இரண்டு வாழை இலைகளை எடுத்துக்கொண்டு வந்தார். ஒரு மண் கோப்பையில் தண்ணீர் எடுத்து வைத்தார். பிறகு வராந்தாவைக் கடந்து வந்து சமையற்காரப் பிராமணனுக்குச் சைகை காட்டினார்.

அவர் பையனுக்குச் சாப்பாடு போடச் சொல்கிறார் என்று நகுலுக் குப் புரிந்தது. இன்னும் மகாப் பிரசாதம் தயாராகவில்லை. பெரிய முற்றத்தில் இலை போட்டுக்கொண் டிருந்தார்கள். பையனை அங்கே போய் உட்காரும்படி சொல்லியிருக்கலாம் நகுல். ஆனால் பெரியவரே வந்து சொல்லும்போது எப்படி மறுப்பது? நகுல் தானே சாப்பாடு பரிமாறினான். பைத்தியக்கார மனிதர் அக்கறையுடன் சாதத்தைப் பிசைந்து பெரிய பெரிய உருண்டைகளாக உருட்டிச் சோனுவுக்குக் கொடுத்தார். குடிக்கத் தண்ணீர் கொடுத்தார். சோனுவுக்கு எப்படிச் சாப்பிடப் பிடிக்குமோ அப்படிச் சாதத்தில் உப்புக் கலந்து பிசைந்து கொடுத்தார்.

அப்படியும் சோனுவால் சாப்பிட முடியவில்லை. காரணம், அவன் பூஜை மண்டபத்தில் வெட்டுண்ட எருமை கிடப்பதைப் பார்த்து விட்டான். என்ன அருவருப்பான காட்சி! அவனுக்கு வாந்தி எடுக்கும் போல் இருந்தது.

சாப்பிட்டுவிட்டு வந்ததும் இரண்டாவது பெரியப்பா படுத்துக் கொண்டு குறட்டைவிட்டுத் தூங்க ஆரம்பித்துவிட்டார். சோனு வுக்குத் தூக்கம் வரவில்லை. பைத்தியக்காரப் பெரியப்பா வராந்தாவில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். நாய்க்காகத் தனியாக ஒரு தொன்னையில் சாப்பாடு கொண்டு வந்திருந்தார் அவர். அதை வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு அவருடைய காலடியில் தூங்கியது அது. இந்தச் சமயத்தில் அவரோடு வெளியில் கிளம்பத் தோன்றியது சோனுவுக்கு. யானை லாயத்துக்குப் போய் அங்கே

யானைக்கருகில் சற்றுநேரம் உட்காரலாம். எருமைப் பலியால் ஏற்பட்ட பயம் சோனுவை யானையிடம் போகத் தூண்டியது. பெரியப்பாவுக்கு யானையைக் காட்டலாம். இப்படி யானை, புல், பூ, பறவைகள் இவற்றைக் காட்டிக் காட்டி அவரைச் சொஸ்தமாக்கி விடுவான் சோனு.

அவர்கள் தோட்டத்துக்குள் நுழைந்து நடக்க ஆரம்பித்தார்கள். எதிரில் சீதலக்ஷா நதி. அவர்கள் நதிக்கரையோடு நடந்தார்கள். மேலே நிர்மலமான ஆகாயம். இருபுறமும் பனை மரங்கள். கரையில் நிறைய மனிதர்கள். அவர்கள் வேகமாகப் போனார்கள், யானையைப் பார்க்க. சோனு பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு போனான். அவர்கள் ஆபீஸ் கட்டிடத்தைத் தாண்டி வந்தபோது ஜாத்ராக் குழுவின் தலைவன் அவர்களைப் பார்த்துவிட்டான்.

ராமாயணம் படித்துக்கொண்டிருந்த அவன் மூக்குக் கண்ணாடியைத் துடைத்துக்கொண்டு நிமிர்ந்தபோது பைத்தியக்கார மனிதர் பையன் கையைப் பிடித்துக்கொண்டு நடப்பது தெரிந்தது. அவரைப் பார்க்கும்போதெல்லாம் அவனுக்கு ராஜா அரிச்சந்திரனின் நினைவு வந்தது. மரங்களுக்கு நடுவே போய்க்கொண்டிருந்த அவருடைய முகமும் கைகால்களும் நாயின் நிழலும் தெளிவில்லாமல் அவன் கண்ணில் பட்டன.

அக்கம்பக்கம் பார்க்காமல் நேரே நிமிர்ந்து பார்த்துக்கொண்டு நடக்கும் இவரைப் போன்ற ஒரு பற்றற்ற மனிதரைத் தன் ஜாத்ராவில் சித்திரிக்க எவ்வளவோ முயன்றும் அவனால் முடியவில்லை. அவரைப் பார்த்ததும் அவன் பெருமூச்சு விட்டான்.

பெரியப்பாவுடன் நடக்கத் தொடங்கியதுமே சோனுவின் பயமும் வருத்தமும் பறந்தோடிவிட்டன. அவன் முன்போல் உற்சாகமாக நடக்க ஆரம்பித்தான். அவன் அடிக்கடி பெரியப்பாவை எச்சரித்தான், யானையிடம் விஷமம் செய்யாமல் இருக்கும்படி. விஷமம் செய்தால் தன் தந்தையிடமோ இரண்டாவது பெரியப்பாவிடமோ சொல்லிவிடப் போவதாக அவரைப் பயமுறுத்தினான்.

அவர்கள் காளிகோவில் போகும் வழியை அடைந்தனர். கடைத்தெரு வழியாகவும் காளி கோவிலுக்குப் போக முடியும். ஆனால் யானை லாயத்துக்குப் போக அந்த வழியில் போகவேண்டியதில்லை. வலப் பக்கம் உமேஷ் பாபுவின் மண்டபம். மண்டபத்துக்கு வடக்கே பாக்குத் தோப்பு. தோப்பைக் கடந்தால் மாந்தோட்டம். அங்கேதான் யானையைக் கட்டி வைத்திருப்பார்கள். ஆனால் இப்போது சோனுவால் அந்த இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

பாதையில் வந்துகொண் டிருந்தபோதே யானையின் மணியோசை அவனுக்குக் கேட்டது. ஆகவே தோப்பில் நுழைந்ததும் யானையைப் பார்த்துவிடலாம் என்று நினைத்திருந்தான் அவன். யானையைக் காணோம்! அப்போதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது, காலை வேளையில் யானை லாயத்தில் இருக்கும் என்று.

நண்பகலில் ஜசீம் அதைக் குளிப்பாட்ட ஆற்றுக்கு அழைத்துப் போவான். பிறகு தோப்பில் சற்றுநேரம் கட்டி வைத்திருப்பான். அங்கே அதற்குத் தீனி போடுவான் — வாழைமரம், இலவமரக் கிளைகள்.

தசமியன்று யானை அங்கே இருக்காது. அன்று காலையில் ஜசீம் யானையை வீடுவீடாக அழைத்துக்கொண்டு போவான். யானைக்காக அரிசி, அவல், பொரி, சந்தேஷ் எல்லாம் கேட்டு வாங்குவான். விடியற்காலையில் அவன் யானையின் நெற்றியில் சந்தனப் பொட்டு இடுவான். பலநிற நெட்டித் தட்டைகளால் அதற்கு அலங்காரம் செய்வான். ஜரிகை வேலைப்பாடு செய்த பட்டயத்தை அதன் தலையில் கட்டுவான்.

அவர்கள் மறுநாள் யானை மேலேறி உட்கார்ந்துகொண்டு தசராப் பார்க்கப் போகலாமென்று கமலா சொல்லியிருந்தாள். "நீயும் எங்களுடன் வரவேண்டும், சோனு!" என்று சொல்லியிருந்தாள் அமலா. அவன் பதிலெதுவும் சொல்லவில்லை.

இப்போது யானை எங்கே இருக்கிறது, எந்தப் பக்கம் போக வேண்டும்? தோப்புக்குள்ளே போவதா, அல்லது மண்டபத்துப் பக்கமாகப் போவதா என்று தெரியவில்லை அவனுக்கு. நாய் தோப்புக்குள் நுழைந்து உறுமியது. அது யானையைப் பார்த்து விட்டது என்று சோனுவுக்குப் புரிந்தது.

அவன் நாயைப் பின்பற்றித் தோப்புக்குள் நுழைந்தான். யானையைக் கண்டான். அதன் கால்கள் சங்கிலியால் கட்டப்பட்டிருந்தன. அது முன்னும் பின்னுமாக அசைந்து கொண்டிருந்தது. ஆனால் யானையால் நகர முடியவில்லை. காடும், மரங்களும், பறவைகளும் புடைசூழச் சௌக்கியமாக இருந்தது யானை. சோனுவும் பெரியப்பாவும் சிறுகுழந்தைகளைப் போல் தங்களை மறந்து யானையைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள். யானை முழங்கால்களை மடக்கிக்கொண்டு உட்கார்ந்தது. சோனுவையும், பைத்தியக்காரப் பெரியப்பாவையும் அடையாளங் கண்டுகொண்டு அவர்களுக்குச் சலாம் செய்தது.

நாயும் அவர்களுக்கு அருகில் உட்கார்ந்துகொண்டு உறுமியது. 'என்னை உனக்குத் தெரியல்லியா? நான்தான் இவங்களோட நாய்!"

என்று சொல்வது போல; 'உன்னோடே ஒரு தடவை நதியைக் கடந்து வந்தேனே, ஞாபகமில்லையா?' என்று கேட்பது போல.

சோனு யானையைப் பார்க்காமல் பெரியப்பாவின் பக்கம் திரும்பிப் பார்த்தான. குழந்தை மாதிரி யானையைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தார் அவர். அந்தக் கள்ளங்கபடமற்ற, நிர்மலமான சிரிப்பைப் பார்த்த சோனுவுக்கு அவர் குணமடைந்து கொண்டு வருவதாகத் தோன்றியது. அவன் தன் தாயை மறந்து, அமலாவை யும் கமலாவையும் மறந்து, பாதிமாவை மறந்து பெரியப்பாவின் முதுகுப்புறம் அவருடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு சந்தோஷத் தோடு தொங்கினான். "பெரியப்பா! சொல்லுங்க, ஒண்ணு!"

"ஒண்ணு!"

"ரெண்டு!"

"ரெண்டு!"

யானைத் தும்பிக்கையை ஆட்டியது. அதன் கழுத்திலிருந்த மணி ஒலித்தது. சோனு சொல்லச் சொல்லப் பெரியப்பாவும் எண் களை வரிசையாகச் சொன்னார். அந்தத் தோப்பில் உட்கார்ந்து கொண்டு சோனு அவருக்கு வாய்பாடு சொல்லிக் கொடுத்தான், ராகம் போட்டு. அவன் சொல்வதைச் சரியாகத் திருப்பிச் சொன்னார் பெரியப்பா.

"ஒண்ணு, சந்திரன் ஒண்ணு!"

"ரெண்டு, பட்டங்கள் ரெண்டு!"

"மூணு, கண்கள் மூணு!"

சோனு திடீரென்று எழுந்து நின்று இரு கைகளையும் தூக்கி உரக்கக் கூவினான்: "அப்பா, அம்மா, பாட்டி, சின்னப் பெரியப்பா, பெரியண்ணு, சின்னண்ணு, பெரியப்பா சொஸ்தமாயிட்டார்!" என்று கூவிக் கொண்டே மகிழ்ச்சியுடன் இங்குமங்கும் ஓடினான் சோனு. நாயும் அவனுடன் சேர்ந்து ஓடியது.

யானையின் கழுத்து மணி ஒலித்தது. பெரியப்பா எண்ணிக் கொண்டே போனார் – ஒண்ணு, ரெண்டு, மூணு, நாலு....

படுத்த மாலதி எழுந்திருக்கவில்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு தான் அவளுக்கு நினைவு திரும்பியது. அவள கண்களைத் திறந்து பார்த்தாள். ஏதோ சொல்ல நினைத்து அவளுடைய உதடு அசைந்தது.

ஆனால் வார்த்தை வெளியே வரவில்லை. அவள் தன் முந்தானையால் தன் முகத்தை மூடிக்கொண்டாள். ஜோட்டன் முந்தானையை விலக்கி விட்டு அவளுடன் பேச முயற்சி செய்தான். மாலதி திரும்பத் திரும்ப முந்தானையால் தன் முகத்தை மூடிக்கொண்டாள்.

நினைவு திரும்பிய மாலதிக்கு ஜோட்டனைப் பார்க்க மிகவும் ஆறுதலாக இருந்தது. இளமை கழிந்துவிட்ட ஜோட்டன் பீரின் தர்காவில் குடித்தனம் செய்தாள். வெற்றிலை பாக்குக்காக அல்லது அரிசிக் குறுணைககாக வீட்டுக்கு வீடு போய் நெல் பொரித்து, அவல் இடித்துக் கொடுத்த ஜோட்டன். ஆனால் அந்த ஆறுதல் நீடிக்கவில்லை. தன் எதிர்காலத்தைப் பற்றிய நினைவு வந்ததும் அவளைச் சோகம் சூழ்ந்துகொண்டது. அப்போது மாலதிக்கு ஜோட்டனே பரமசத்துருவாகத் தோன்றினாள். எங்கேயோ காட்டில் விழுந்து கிடந்த மாலதி இங்கே எப்படி வந்தாள்?

கோரைக் காட்டுக்குள் ஒளிந்திருந்த அவளை மூன்று பிராணிகள்—அவர்களை மனிதர்களாகவே கருத முடியாது — அவளை அணுகியதும் அவள் நினைவிழந்துவிட்டாள். இப்போது இங்கே, ஜோட்டனின் வீட்டில் இருக்கிறாள். இது ஜோட்டனின் வேலை. அந்த மனிதப் பிசாசுகள் அவளைக் காட்டிலேயே போட்டுவிட்டுப் போய்விட்டார்கள். அவளை எப்படியோ கண்டுபிடித்துத் தன் வீட்டுக்குக் கொண்டு வந்திருக்கிறாளே ஜோட்டன்!

ஜோட்டனுக்கு மாலதிமேல் அப்படி என்ன விரோதம்? காட்டிலே விழுந்துகிடந்து செத்துப் போயிருந்தால் இந்த அதிருஷ்டங் கெட்ட முகத்தை யாருக்கும் காட்டவேண்டி யிருக்காது. ஜோட்டன் மேல் ஏற்பட்ட எரிச்சலால் அவள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லவில்லை மாலதி.

பக்கிரிசாயபு பாலை எடுத்துக்கொண்டு வந்து மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். மாலதி குளித்த பிறகு பாலைக் காய்ச்சிக் கொடுக்க வேண்டும். மாலதி ஓர் இந்து விதவை. அவள் குளித்துவிட்டு ஈரத் துணியுடன்தான் பாலைக் காய்ச்சிக் குடிப்பாள். இந்த இடமே அவளுக்கு ஆசாரக் குறைவானதுதான். ஜோட்டன் மாலதியை எழுப்பினாள் "மாலதி! எழுந்திரு!"

பால், விறகு, ஒரு புதிய மண்சட்டி எல்லாம் தயாராக இருந்தன, மாலதிக்காக. தானே பாலைக் காய்ச்சி மாலதிக்குக் கொடுக்க ஜோட்டனுக்குத் துணிவு வரவில்லை. இந்து விதவைகளுக்கு எவ்வளவோ ஆசார நியமங்கள், கட்டுப்பாடுகள் உண்டு. மாலதிக்கு ஆறுதல் சொல்லத் துடித்தாள் ஜோட்டன். "ஏ பெண்ணே! நீ இவ்வளவு நாள் உன் இளமையை ஜாக்கிரதையாகக் காப்பாத்தி வந்தே. சொப்பனங் கண்டுக்கிட்டு இருந்தே — புருஷனோடே

வேடிக்கையும் விளையாட்டுமா இருந்த சொப்பனம். இப்போ நடந்தது நடந்திடுச்சு. இதோ பாரு, மண்பாத்திரம், புதுசு. சுத்தத்திலே இதுவும் தங்கமும் ஒண்ணு. இதை யார் தொட்டாலும் ஆசாரங் கெடாது, ஜாதி கெடாது. எழுந்திரு, மாலதி! பாலைக் காய்ச்சிக் குடி!'' என்று ஜோட்டன் கூறினள்.

மாலதி எழுந்திருக்கவில்லை; அசையாமல் படுத்துக் கிடந்தாள்.

ஜோட்டன் பக்கிரிசாயபுவைக் கேட்டாள்; ''என்ன செய்யறது?''

''என்ன செய்யச் சொல்றே?''

''நரேன்தாஸுக்குச் சொல்லியனுப்பணும்.''

''அனுப்பேன்.''

''நான் எப்படி அனுப்புவேன்? என்னாலே தனியாப் போக முடியுமா?''

''இப்பத்தானே சொன்னே நீயே படகோட்டிக்கிட்டுப் போகப் போவதாக? துர்க்கா பூஜை பார்க்க.''

''வேடிக்கை இருக்கட்டும். என்ன பண்றது, சொல்லுங்க?''

''நான் என்ன சொல்றது?''

''சரி, உங்க இஷ்டப்படி செய்யுங்க'' என்று எரிச்சலுடன் சொல்லி விட்டு ஜோட்டன் குடிசைக்குள் நுழைந்து, ''மாலதி, என் கண்ணேல்லியோ! எழுந்திரு! பாலைக் காய்ச்சிக் குடி. அப்புறம் உன்னைக் கொண்டுபோய் விடறேன்'' என்று கூறினள்.

மாலதி வியப்புடன் ஜோட்டனைப் பார்த்தாள்.

''உன்னை உங்க வீட்டிலே கொண்டுபோய் விடறேன்.''

மாலதி திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள்.

''நானும் பக்கிரிசாயபுவும் உன்னோட வரோம்.''

மாலதி கைகளால் தன் முகத்தை மூடிக்கொண்டாள். இந்த அதிருஷ்டங்கெட்ட முகத்துடன் அவள் வீட்டுக்கு எப்படிப் போவாள்? அவள் எங்கே போவாள்? யாரிடம் போவாள்? அவள் எங்காவது கண்காணுத இடத்துக்குப் போக வேண்டியதுதான், அல்லது தண்ணீரில் முழுகிச் சாக வேண்டியதுதான். அரற்றினள் மாலதி.

''உனக்கு என்ன வந்தது இப்போ? ஒண்ணும் ஆயிடல்லே உனக்கு! சும்மாயிரு.''

''நான் எங்கே போவேன்?''

பக்கிரி சாயபு இதற்குள் மரத்தடியிலிருந்து வந்துவிட்டார். ''நீங்க போகல்லேன்னு என்னத்தைச் சாப்பிட்டுக்கிட்டு இங்கே இருப்பீங்க? நான் ஒரு பக்கிரி. வேரையும் இலையையும் சாப்பிட்டுக்கிட்டு உசிரோடே இருக்கேன். உங்களுக்குப் பாலும் தயிரும் நெய்யும் எங்கே இருந்து கொண்டுவந்து கொடுப்பேன்?''

பக்கிரி சாயபுவைப் பார்த்துப் பயத்தால் வெளிறிப் போய்விட்டாள் மாலதி. அவருடைய நீண்ட நரைத்த தாடியிலிருந்து தண்ணீர் சொட்டியது. ஒரு ஈரத்துண்டைக் கட்டிக்கொண் டிருந்தார் அவர். அவருடைய கைகளிலும் கழுத்திலும் பெரிய பெரிய கண்ணாடிக் கல் மாலைகள். பூண்டுத் தைலத்தால் தயாரித்த மையைக் கண்ணில் தீட்டிக்கொண டிருந்தார்.

மாலதியை விரட்ட வருபவர்போல் அவர் குடிசைக்குள் ஓடி வந்தார். "எழுந்திருங்க, எழுந்திருங்க, சொல்றேன்! குளிச்சுட்டுப் பாலைக் காய்ச்சிக் குடிங்க. நான் கிழவன். தண்ணியிலே நீஞ்சிப் போய்ப் பால் கறந்துக்கிட்டு வந்திருக்கேன். சாப்பிடமாட்டீங்க அதை?"

மாலதி அசையவில்லை. மாலதியின் பயத்தைப் பார்த்து ஜோட்டன் சிரித்துக்கொண்டாள்.

பககிரி சாயபு கண்களை உருட்டி மாலதியைப் பயமுறுத்தினார். "சாப்பிட மாட்டீங்களா? அப்பறுனை, சாப்பிட்டுத்தான் ஆகணும்" என்று சொல்லிக்கொணடே அவர் ஒரு பெரிய விறகுக் கட்டையை எடுத்துவந்தார். "எழுந்திருங்க. நான் ஒரு பைத்தியக்காரன். நீங்க உடனே எழுந்திருந்து குளிச்சுட்டுப் பால் குடிக்கல்லேன்னு இந்த இடத்துக்கு நெருப்பு வச்சுடுவேன், ஆமா!"

ஜோட்டன் பக்கிரி சாயபுவுக்கு ஒத்துப் பாடினாள். "எழுந்திரு, எழுந்திரு. பைத்தியத்தைக் கிளப்பிவிட்டுடாதே! சாப்பிடாமே இருந்தா, போனதெல்லாம் திரும்பி வந்துடுமா? அப்படி வந்துடும்னு நான் உன்னைச் சாப்பிடச் சொல்லல்லே! எழுந்திரு."

பக்கிரி சாயபு சொன்னார்: "உங்க உடம்பு தங்கம் மாதிரி. தங்கத்திலே அழுக்குப் பட்டா அது ஒட்டிக்கிட்டா இருக்கும்? உடம்பைக் கழுவிக்கிட்டாச் சுத்தமாயிடும். இதோ பாருங்க, கங்கை தண்ணியிலே எவ்வளவோ அழுக்கும் அசுத்தமும் வந்து கலக்குது. அம்மா கங்கை அதனாலே அசுத்தமாயிடறாளா, கெட்டுப் போயிடறாளா? ஆத்துக்கு எச்சில் கிடையாது, பனிகட்டிக்கு எச்சில் கிடையாது. தண்ணி தண்ணியாலேயே சுத்தமாயிடும்."

மாலதி அப்படியும் அசையாமல் குடிசை மூலையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ஜோட்டன் பக்கிரி சாயபுவிடம் சொன்னாள், "இப்ப என்ன செய்யறது? கண்ணு இடுங்கிக் கிடக்கு, சாப்பிட்டு எவ்வளவு நாளாச்சோ? ஒண்ணும் பேசவே மாட்டாங்கறாளே!"

"நான் போயிப் பெரிய மியான் கிட்டேயிருந்து கோஷாப் படகு எடுத்துக்கிட்டு வரேன். அப்பறம் அல்லா பேரைச் சொல்லிக்கிட்டுப் படகிலே புறப்படலாம்."

தண்ணீரில் நீந்தியும் கரையில் நடந்தும் சுமார் ஒரு கோச தூரம் சென்ருல் குடியிருப்பை அடையலாம். அங்கே போகும் வழியில் ஒரு தடவை வாந்தியெடுத்தார் பக்கிரிசாயபு. மழைக்காலம் வந்துவிட்டால் பக்கிரி சாயபுவின் பாடு திண்டாட்டந்தான். அவரிடம் இருந்த இரண்டு ஆடுகளின் பாலும் காட்டுக்கீரையும் அல்லி கிழங்குந்தான் கதி. முஸ்கிலாசாலை எடுத்துக்கொண்டு தண்ணீரைக் கடந்து போக முடியாது. யாராவது இறந்துபோய், தர்க்காவில் பிணத்தைப் புதைக்க வருபவர்கள் ஏதாவது கொடுத்தால் அதை வைத்துக்கொண்டுதான் காலம் தள்ளவேண்டும். கண்ட இலைகளையும் கிழங்குகளையும் தின்று வயிறு கெட்டுவிட்டது பக்கிரி சாயபுவுக்கு.

கோஷாப் படகு கொண்டு வருவதற்குள் பொழுது ஏறிவிட்டது. பக்கிரிசாயபு ஒன்றும் சாப்பிடவில்லை. ஜோட்டன் ஒரு தவலைத் தண்ணீரை எடுத்துக் கடகடவென்று குடித்தாள். கொஞ்சம் விறகு, ஒரு புதுச் சட்டி, அடுப்பு, பால் எல்லாவற்றையும் எடுத்துப் படகில் வைத்துக்கொண்டாள். பக்கிரி சாயபு ஆடுகள் இரண்டையும் வீட்டுக்குள் கொண்டுவந்து கட்டிவிட்டு மாலதியைக் கூப்பிட்டார், "அம்மா, எழுந்திருந்து வாங்க!"

மாலதியை அழைக்க வந்த ஜோட்டன் மாலதியால் எழுந்திருக்க முடியவில்லை என்று கண்டாள். அவள், மாலதியிடம் வீட்டில் தேய்த்துக் கொள்ளச் சொல்லிப் பூண்டுத் தைலத்தை ஒரு பாட்டிலில் ஊற்றிக் கொடுத்தாள். பிறகு அவளைக் கெட்டியாகப் பிடித்துத் தூக்கினுள். மாலதிக்குத் தலை கிறுகிறுத்து அவள் கீழே விழுந்தாலும் விழுந்துவிடலாம். எப்படி ஆகிவிட்டது அவளுடைய முகம்? கண்களும் முகமும் எப்படிக் கறுத்துப்போய் விட்டன! அவளுடைய தங்கமான உடம்பில் யாரோ நெருப்பு வைத்துவிட்டார்களே! மாலதியை நிமிர்ந்து பார்க்கவே பயமாக இருந்தது ஜோட்டனுக்கு. அந்தப் பெண் தற்கொலை செய்துகொள்ள தயாராயிருக்கிருள்! சந்தர்ப்பம் கிடைத்தால் செய்துகொண்டு விடுவாள்.

நோயின் வேதனையால் உள்ளூறத் துடித்தார் பக்கிரி சாயபு. பக்கிரிக்கு வியாதி வரலாமா? அவருடன தங்கியிருந்த இவ்வளவு காலத்தில் அவர் ஒரு நாள் கூட நோய்வாய்பட்டு ஜோட்டன் பார்த்ததில்லை. காலை முதற்கொண்டே அவருடைய வயிற்றில் ஒரே களேபரம். யாரிடம் சொல்வது இதை? வயிற்றுக்குள் ஒரே எரிச்சல், ஒரே வேதனை. உடம்பில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால் ஏதாவது மூலிகையை எடுத்துக் கசக்கி அதன் ரசத்தைக் குடிப்பது அவர் வழக்கம். அப்படியே இன்றும் காட்டுக்குள் போய் ஏதோ மூலிகையின் சாறைக் குடித்தார் அவர்.

அவர் ஜோட்டனிடம், "நீ ஏதாவது கொஞ்சம் சாப்பிட்டுக்கோ! எனக்குப் பசி இல்லே" என்ருர்.

"நான் எப்படிச் சாப்பிடுவேன்? மாலதி ஒண்ணுமே சாப்பிடல் லேயே !"

பக்கிரி சாயபு இப்போது திறந்தவெளியில் மாலதியை நன்ருகப் பார்த்தார். உண்மையாகவே மாலதியின் நிலே நன்ருக இல்லேதான். அவர் ஜோட்டனின் காதுக்கருகில் கிசுகிசுத்தார். "அவளே நன்ருகப் பிடிச்சுக்கோ. இருக்கிற நிலேயைப் பார்த்தா உடம்புக்கு நல்லா யில்லே போலிருக்கு. இந்தப் பொண்ணேட புத்தி சரியாயில்லே. பைத்தியத்தின் லட்சணம் தெரியுது. உடன்கட்டையேறிச் சதியாகப் போற பொண்ணு மாதிரி இருக்கா இவ."

பக்கிரி சாயபு சிறியவருயிருந்தபோது ஆற்றங்கரையில் ஒரு பெண் சதியாகி உடன்கட்டையேறிய கதையைக் கேட்டிருந்தார். மாலதி யின் நிலே அந்தக் கதையை நினேவூட்டியது அவருக்கு. இந்தப் பெண் உட்கார்ந்தவாறே தற்கொலே செய்துகொள்ளத் திட்டமிடு கிருள் போலும்.

ஜோட்டன் மாலதியைப் படகின் நடுவில் உட்கார வைத்தாள். பக்கிரி சாயபு முஸ்கிலாஸான் விளக்கையும் எடுத்துக்கொண்டார். எப்போது வெளியே கிளம்பிவிட்டாரோ, திரும்பிவர இரண்டு மூன்று நாட்களும் ஆகலாம், இரண்டு மூன்று வாரங்களும் ஆகலாம். விளக் குடன் கிராமம் கிராமமாகச் சுற்றலாம். அவர் பெரிய மியானிடம் படகு கேட்கப் போனபோது சொல்லியிருந்தார். "பீபியைக் கூட்டிக் கிட்டுப் போறேன், விளக்கும் கொண்டு போறேன். கொஞ்ச நாள் ஆத்திலேயும் வாய்க்கால்லேயும் போய்க்கிட்டிருப்பேன். பொறந்த ஊருக்குப் போகணுமின்னு ஏக்கம் வந்திடுச்சு பீபிக்கு. துர்க்கா பூஜை பார்க்கணுமாம். ஒரு தடவை கூட்டிக்கிட்டுப் போயிட்டு வரேன்." அவர் வேண்டுமென்றே யாரிடமும் மாலதியைப் பற்றிச் சொல்லவில்லே. சொல்லிவிட்டால் மக்கள் தர்காவுக்கு ஓடிவரு வார்கள். போலீசும் வந்துவிடும்.

இவை எல்லாம் நேராமலும் இருக்கலாம். காரணம், இது ஜாதி, குல கௌரவத்தைப் பற்றிய விஷயம். மாலதியை இப்போது களங்கம் சூழ்ந்திருக்கிறது. ரஞ்சித், சின்ன டாகுர், நரேன்தாஸ், மற்றக் கிராமத்தாரும் மாலதியைச் சூழ்ந்து நிற்பதாகக் கற்பனே செய்து கொண்டார் பக்கிரி சாயபு. அவளால் ஜாதிக்கே, குலத்துக்கே ளகங்கம் ஏற்பட்டுவிட்டது. அவளேக் காட்டுக்கு விரட்டி விடுவார்கள்.

இத்தகைய எண்ணங்கள் மாலதிக்கும் ஏற்பட்டிருக்கலாம்.

மாலதி பொருமிப் பொருமி அழுவதைக் கவனித்தார் பக்கிரி சாயபு. இதுவும் நல்லதுதான்! பாவம், அழுது அழுது அவளுடைய வேதனே

கொஞ்சம் குறையட்டும். வேதனை குறைந்தால் வாழ்க்கை பாரமாகத் தோன்றுது, உலகம் அவ்வளவு கொடூரமாகத் தோன்றுது.

ரஞ்சித்தை நினைத்துக்கொண்டு கேவிக் கேவியழுதாள் மாலதி. 'டாகுர், அவங்க என்னோட எல்லாத்தையும் பிடுங்கிக்கிண்டுட்டாங் களே! நான் உனக்கு என்ன தருவேன்?'

பிணந்தின்னிக் கழுகுகள் போல் யார் யாரோ இரவு முழுவதும் அவளுடைய உடலைக் குதறிப் பிடுங்கிவிட்டார்கள். இரத்தக் களறியாகிவிட்ட அவள் தேகத்தின் மேல் ஏதேதோ பிசாசுகள் நர்த்தனம் செய்தன. மூன்று மிருகங்கள் நரகத்தில் குதிக்கும் வெறியுடன் அவளைத் தாக்கின. அந்த மலைப் பாம்புகள் அவள் மேல் இரவு பூராவும் நெளிந்து திரிந்தன. அவர்கள் அவளை என்ன செய்தார்கள், எங்கிருந்து எங்கே இழுத்துக்கொண்டு போனார்கள்— ஒன்றுமே நினைவுக்கு வரவில்லை அவளுக்கு. அந்த இடுகாட்டின் இருட்டில் தசை வெறியில்—பிண நாற்றத்தை மோப்பம் பிடித்துக் கொண்டு புதைகுழியில் நுழையும் ஓநாய் போல — அவர்கள் மாலதியின் தேகத்துக்குள் புக முயற்சி செய்தார்கள். அவளுக்கு உடம்பெல்லாம் நோவு எடுத்தது. உடம்பு வீங்கிப் போய்விட்டது. அவளால் எழுந்து உட்கார முடியவில்லை. தன் நினைவிழந்த உடலில் அவர்கள் இழைத்த கொடுமையைக் கற்பனை செய்து பார்த்தபோது, அவளுக்கு அருவருப்பால் குமட்டிக்கொண்டு வந்தது.

மாலதி ஓங்களிப்பதைப் பக்கிரி சாயபு கவனித்தார்.

''சாப்பிடல்லேன்னு வாந்தி வராதா? நீங்களே சொல்லுங்க என்றாள் ஜோட்டன்.

மாலதி ஓங்களித்துக் கொண்டே இருந்தாள். இப்போது அவளுடைய அழுகை ஓய்ந்துவிட்டது. பக்கிரிசாயபு ஆற்றின் ஓரமாகப் படகைச் செலுத்திக்கொண்டு போனார். சூரியன் வானத்தில் மேலே ஏறிக்கொண் டிருந்தான். பக்கிரி சாயபு ஜிப்பாவைக் கழற்றினார். ஒரு லங்கோடு மட்டுமே அணிந்திருந்தார் அவர். கழுத்திலும் கையிலும் அவர் அணிந்திருந்த கண்ணாடிக்கல் மாலைகளும் தாயத்துகளும் ஒன்றுடன் ஒன்று உராய்ந்து ஒலியெழுப்பின. அவரைப் பார்த்தால் ஒரு பண்டைக் காலத்து மகரிஷிபோல் இருந்தது—கண்வ மகரிஷி சகுந்தலையை அரசனிடம் அழைத்துப் போய்க்கொண் டிருக்கிறார். அவளை எப்படியாவது அவளுடைய ஊரில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட வேண்டும். அவர் தாம் உள்ளூறப் படும் உபாதையைக் காட்டிக்கொள்ளாமல், விடாமல் துடுப்பு வலித்தார்.

ஜோட்டன் சொன்னாள்: ''மாலதி, கொஞ்சம் பால் குடி. குடிக்கல்லேன்னு செத்துப் போயிடுவே!''

மாலதி ஒன்றும் பேசாமல் ஓங்களித்துக்கொண்டே படகின் மேல் தட்டில் படுத்தாள்.

இந்த வயதில் இவ்வளவு தூரம் படகு வலித்துக்கொண்டு போவது தம்மால் முடியாத காரியம் என்று பக்கிரிசாயபுவுக்குப் புரிந்தது. நேர்வழியில் சென்ருலும் ஊர் போய்ச் சேர இரவு வெகு நேரமாகிவிடும். தண்ணீர் வடிந்துகொண் டிருந்ததால் நேர்வழியில் செல்ல முடியாது. பாத்ர மாதக் கடைசியிலிருந்தே தண்ணீர் வடியத் தொடங்கிவிடும். நடு நடுவே மணல் மேடுகள் தெரிந்தன. அவற்றைச் சுற்றிப் படகுவிட வேண்டும். மேக்னுவில் போனுல் இன்னும் சுற்றுவழியாகிவிடும். சன்கந்தா வழியே போய், கடுபர்தி மைதானத்துக்கருகில் ஆற்றில் போய் இறங்கினுல் அவ்வளவு கஷ்ட மில்லை. தண்ணீரின் போக்கோடு படகைச் சுலபமாகச் செலுத்தலாம். ஆனுல் வயிற்றுக்குள் என்ன எரிச்சல்! மூலிகைச் சாற்ருல் வேதனை குறையவில்லை. தொண்டையும் நெஞ்சும் உலர்ந்து போய்விட்டன.

பக்கிரிசாயபு சிரமப்படுவது ஜோட்டனுக்குப் புரிந்தது. அவள் ஹுக்கா தயார் செய்தாள். ஹுக்கா பிடித்தால் மனிதருக்குக் கொஞ்சம் தெம்பு வரும். அவள் அவருக்கு ஹுக்காவைக் கொடுத்துவிட்டுத் தானே துடுப்பு வலிக்கத் தொடங்கினுள். பக்கிரிசாயபுவிடம் சொன்னுள். "மாலதிதான் பால் சாப்பிடல்லே. நீங்களாவது சாப்பிடுங்க. சாப்பிட்டால் கொஞ்சம் தெம்பாயிருக்கும். சாப்பிடாமே இவ்வளவு தூரம் எப்படிப் போக முடியும்?"

"ஊஹும், வேண்டாம்!" என்று சொல்லிவிட்டுப் பக்கிரிசாயபு கீழேயிருந்து தண்ணீரை மடக் மடக்கென்று குடித்தார்.

பக்கிரிசாயபுவும் ஜோட்டனும் மாலதிக்காகத் தங்கள் பசியையும் கஷ்டத்தையும் பொருட்படுத்தவில்லை. தர்காவில் தன்னைப் போட்டுவிட்டுச் சென்ற மனிதப் பிசாசு யாரென்று மாலதி யாரிடமும் சொல்லவில்லை. கேட்டால் விம்மி விம்மியழுதாள். தன் உடலில் இழைக்கப்பட்ட கொடுமையின் அடையாளத்தைப் பார்க்கும்போது அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. அவருடைய தர்காவில் இத்தகைய கொடுமை நிகழ்ந்துவிட்டதற்காகத் தம்மையே குற்றவாளியாக நினைத்துக்கொண்டார் பக்கிரிசாயபு. அவர் முஸ்கிலாசான் விளக்கை ஏற்றிக்கொண்டு இரவில் இடு காட்டில் சுற்றுவார். நீண்ட அங்கியணிந்த அவருடைய உருவம் விளக்குடன் சுற்றுவதைத் தூரத்திலிருந்து பார்க்கும் மனிதர்கள் பயந்துபோய் ஓடுவார்கள். அப்படிப்பட்ட இடத்தில் சில பாவி கள் வந்து தங்கள் நீசச் செய்கையால் தர்காவின் புனிதத்தையே கெடுத்துவிட்டார்கள். இந்த அநியாயத்துக்குப் பொறுப்பு பக்கிரி சாயபுவும் ஜோட்டனுந்தான். மனிதன் சாகாவிட்டால் பக்கிரிசாயபு

வுக்கு மதிப்பு இல்லை. நாளுக்கு நாள் அவருடைய சாப்பாட்டுக் கஷ்டம் அதிகரித்துக்கொண்டு வந்தது.

ஜோட்டன் பாலைப் படகின் மேல்தட்டில் வைத்திருந்தாள். ஜோட்டன் எவ்வளவு வற்புறுததியும் மாலதி பாலைக் குடிக்கவில்லை. படகின் ஆட்டத்தில் பால் தளும்பி வழிந்ததால் கோபம் வந்தது பக்கிரிசாயபுவுக்கு.

முதலில் பக்கிரிசாயபுவுக்குப் படகுத் துறை இருக்குமிடம் தெரிய வில்லை. அவர் இந்தப் பக்கம் வந்து வெகு காலமாகிவிட்டது.

நவமிச் சந்திரன் மறைந்துவிட்டான். எங்கும் ஒரே அமைதி. இருட்டில் வயல் வெளியிலிருந்து ஒரு கிரௌஞ்ச பட்சியின் குரல் கேட்டது. தூரத்தில் பிரதாப் சந்தாவின் வீட்டுத் துர்க்கா பூஜை விளக்குகள் கண்ணுக்குத் தெரிந்தன. அவற்றைக் குறிவைத்துக் கொண்டு படகை ஓட்டினார் பக்கிரிசாயபு. அவருடைய கண்கள் இருண்டுகொண்டு வந்தன. கைகளும் கால்களும் வலுவிழந்தன. அவருக்கு வாந்தி வந்தது. பிறருக்குத் தெரியாமல் இருட்டில் வாந்தி எடுத்தார் அவர். வாய் கொப்புளிப்பது போல் பாவனை செய்தார். பூச்சிகள் மரங்களிலும் வயல்களிலும் பறந்துகொண் டிருந்தன. பக்கிரிசாயபு பிரதாப் சந்தாவின் படகுத் துறையைத் தாண்டி நரேன்தாஸின் படகுத் துறைக்கு வந்து சேர்ந்தார். எல்லாரையும் இறங்கச் சொன்னார்.

படகில் படுத்திருந்த மாலதி எழுந்திருக்கவில்லை. படகு எங்கே போகிறது, பக்கிரிசாயபுவும் ஜோட்டனும் ஏன படகை ஓட்டிக் கொண்டு போகிறார்கள் என்பனவெல்லாம் மாலதிக்குப் புரிந்த தாகவே தெரியவில்லை. படகுத் துறையில் வந்து நின்றதும் அவளுக்கு நினைவு மீண்டது.

அடே! இது அவர்கள் வீட்டுப் படகுத் துறையல்லவா? காலை வேளைகளில் வாத்துக்களை வெளியே விட்டுவிட்டு இங்கேதான் உட்கார்ந்திருப்பாள் மாலதி. தலைக்கு மேல் ஒரு கடம்பமரம். மழைக் காலத்தில் அந்த மரத்தில்தான் எவ்வளவு பூக்கள் பூத்துக் குலுங்கும்! ஆனால் இந்த இரண்டு மூன்று நாட்களுக்குள் இந்த இடம் அவளுக்குப் பழக்கமில்லாததாகத தோன்றியது. ஏதோ ஒரு புது இடத்துக்கு வந்திருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது அவளுக்கு.

இந்த இருளில் திடீரென்று செய்தி கொண்டு போவதிலும் ஓர் ஆபத்து இருந்தது. மாலதி காணாமல் போய் எவ்வளவு நாளாகி விட்டனவோ! திடீரென்று நரேன்தாஸைக் கூப்பிட்டு விஷயத்தைச் சொன்னால் அவன் உணர்ச்சி வசப்பட்டுக் கதறத் தொடங்கி விடலாம். மாலதியைப் பார்த்து ஊர்மக்கள் கூடிப் பக்கிரி சாயபுவையே கட்டிப் போட்டுவிடலாம்.

அவரையே கேட்கலாம் : "மாலதி உங்களுக்கு எங்கே கிடைச்சா ? மனசுக்குள்ளேயே இப்படி ஒரு கெட்ட எண்ணம் இருந்ததா உங்களுக்கு ?" உபகாரம் செய்யப் போய்த் தாமே வம்பில் மாட்டிக் கொண்டு விடுவார். அவர் இந்தக் காரியத்தைத் தடங்கலின்றி செய்து முடிக்கச் சில ஏற்பாடுகள் செய்தார்.

முஸ்கிலாசான் விளக்கிலிருந்து மையை எடுத்துத் தன் கண்களிலும் முகத்திலும் தீட்டிக்கொண்டார். நீண்ட அங்கியை அணிந்து கொண்டு கண்களையும் சிவப்பாக்கிக் கொண்டார். இந்த வேஷத்தில் அவர் இந்த உலகத்தைச் சேர்ந்த மனிதர் அல்ல. தாயத்துமாலைகளும், நீண்ட அங்கியும், கையில் முஸ்கிலாஸானுமாக ஒரு தனிப் பிரகிருதியாய்க் காட்சியளித்தார் அவர். நினைத்தால் மரங்களையும் பறவைகளையும் சாம்பலாக்கிவிடும் சக்திபடைத்த அபூர்வ மனிதராகத் தோன்றினர் அவர். கையில் விளக்குடன் ஏதோ ஒரு தூரத்து லட்சியத்தை நோக்கிப் பிரயாணம் செய்யும் உருவம். அவர் வானத்துக்கு ஒளி தருபவர். விரும்பினுல் ஒரே தாண்டில் கடலை கடந்து விடக் கூடியவர்.

இவ்வாறு ஒரு விசித்திரத் தோற்றம் பூண்டு அவர் தள்ளாடித் தள்ளாடிக்கொண்டே நரேன்தாஸின் வீட்டை நோக்கி நடந்தார். இப்போது அவர்—சாந் சதாகரின் நாட்டுப் பெண்போல, ஈசாகானின் ஸோனுயிபீபியைப் போல—ஒரு கட்டுக்கதைப் பாத்திரமாகக் காட்சியளித்தார்.

நளளிரவில் இப்படிப்பட்டவரின் குரலைக் கேட்டு நடுங்காத சம்சாரி யார் இருக்க முடியும் ? அந்த நேரத்தில் அவர் ஒரு சாதாரண மனிதராகவே இருக்கமாட்டார். ஆகாயத்தையும் பூமியையும் திறந்த வெளியின் இருளையும் பிளந்துகொண்டு தோன்றும் தேவதூதராகக் காட்சியளிப்பார் அவர்.

ஆனல் இப்போது பக்கிரிசாயபு உள்ளூறப் பலமிழந்து போயிருந்தார். அவருக்குக் கண் இருண்டு கொண்டு வந்தது. அப்படியும் அவர் தம சோர்வையும் வயிற்று நோயையும் பொருட்படுத்தாமல் உரக்கக் கத்தினர். "முஸ்கிலாசான் ! முஸ்கிலா...ஆ...சா...ஆன் !"

ஆயினும் அவருடைய குரலில் வழக்கமாக இருக்கும் கம்பீரம் இப்போது இல்லை. இந்தப் பிராந்தியத்தில் வசிப்பவர்கள் எல்லாரும் கேட்டு நடுங்கும்படியாகக் குரல் எழுப்பவேண்டும் அவர். 'நான் ஆஸ்தாஞ சாயபுவின் தர்காவில் வசிக்கும் பக்கிரி! மனிதர்கள் இறக்கும் காலத்தில் அவர்களுடைய சவக்குழிகளில் மெழுகுவர்த்தி ஏற்றுவது என் வேலை. மரங்களின் உச்சாணிக் கிளைகளில் விளக்கேற்றித் திரியும் அபூர்வப் பிறவி நான் .'

''அபூர்வப்பிறவி நான். தாய்மார்களே! பிறப்பைப்போல், சாவைப் போல், இந்த உலகத்தில் பிழைத்திருப்பதும் ஓர் ஆச்சரியமான நிகழ்ச்சிதான். இன்பமும் துன்பமும் கலந்த வாழ்க்கையில் கடவுளின் கருணை கஷ்டத்தை எளிதாக்கிவிடும். முஸ்கிலாசான்!'' என்று அவர் கம்பீரமாகத் தமக்குச் சக்தியிருந்தபோது கூவுவது வழக்கம். இப்போதும் அப்படிக் குரல் கொடுக்க விரும்பினார் அவர். ஆனால் முடியவில்லை. கொஞ்சதூரம் நடந்ததும் அவர் களைத்துப் போய்க் கீழே உட்கார்ந்துவிட்டார். முஸ்கிலாசான் விளக்கின் தண்டின் பலத்தில் எழுந்து நின்றார் அவர். அவருக்கு வாந்தி வந்தது. தாம் வாந்தியெடுப்பதை ஜோட்டன் பார்க்காதிருப்பதற்காக அவர் விளக்கை உயரத் தூக்கி அதன் கீழ் இருட்டில் வாந்தியெடுத்துவிட்டு மேலும் நடக்கத் தொடங்கினார். அவர் குடித்த நீரும் சாப்பிட்ட அல்லிக்கிழங்கும் வாந்தியாக வெளிவந்தன. ஆஸ்வின் மாதத்தில் வடியும் தண்ணீரின் நாற்றம் அவருடைய வாந்தியிலும் வெளிப் பட்டது.

தன் வீட்டுக் கதவைத் திறந்த நரேன்தாஸ் வாசலில் பக்கிரிசாயபு நிற்பதைக் கண்டான். நல்ல உயரம், கையில் முஸ்கிலாசான், தலையில் தலைப்பாகை, வெள்ளைக் கேசம், வெள்ளைத் தாடி, கறுத்த முகம், சிவந்த கண்கள். முகத்துக்கு வெகு அருகில் விளக்கு எரிந்தது. கண்ணின் கருவிழிகள் மேல்பக்கமாகக் குத்திட்டு நின்றன. அவரது வாய் குடும்பஸ்தர்களின் மங்களத்தை உத்தேசித்து ஏதோ மந்திரங்களை முணு முணுத்துக்கொண் டிருந்தது; கழுத்தில் நீல, சிவப்பு, மஞ்சள் நிறக்கற்கள் பளபளத்தன. அவரைப் பார்த்து விட்டு ஆபுவும் சோபாவும் வீட்டுக்குள்ளிருந்து வெளியே வரப் பயந்தார்கள். அத்தை காணமற் போனதிலிருந்து ஒரு சிறு அரவம் கேட்டாலும் அவர்களுக்கு விழிப்பு வந்துவிடும். நரேன்தாஸுக்கு இரவில் தூக்கமே வருவதில்லை. யாரோ தன் வீட்டின் நாற்புறமும் ஏதோ கிசுகிசுத்துக்கொண்டு அலைவதுபோல் ஒரு பிரமை ஏற்பட்டது அவனுக்கு.

நரேன்தாஸ் பக்கிரிசாயபுவின் அருகில் வந்ததும் அவர் கொஞ்சம் மையை எடுத்து அவனுடைய நெற்றியில் திலகமிட்டார். முஸ்கிலா சான் விளக்கில் மூன்று குழிகள் இருந்தன. ஒன்றில் விளக்கு, இன்னொன்றில் மை, மூன்றாவது குழி காசு போடுவதற்காக. நரேன் தாஸ் அந்தக் குழியில் காலணா போட்டுவிட்டு ஆபாராணியையும், சோபா, ஆபுவையும் பொட்டு இட்டுக்கொள்வதற்காகக் கூப்பிட் டான். அவர்கள் பொட்டு இட்டுக்கொண்டு வீட்டுக்குள் போனபிறகு பக்கிரிசாயபு இருட்டில் நரேன்தாஸின் கையைப் பிடித்துக்கொண்டு, ''தாஸ், உங்க தங்கையைப் பத்தி செய்தி வந்திருக்கு'' என்றார்.

“என் தங்கையைப் பத்தியா?”

“ஆமா, அந்த லக்ஷ்மியை நான் தர்க்காவிலே கண்டெடுத்தேன்.”

“என்ன சொல்றீங்க?” நம்ப முடியாதவனுகக் கூவிவிட்டான் நரேன்தாஸ்.

“ஆமா, கண்டெடுத்தேன். உன் தங்கை வனதேவதை மாதிரி ஓடி வந்தா, ‘என்னைக் காப்பாத்துங்க, காப்பாத்துங்க'ன்னு கத்திக்கிட்டு!”

“நீங்க காப்பாத்தினீங்களா?”

“ஆமா காப்பாத்தினேன்.” கம்பீரமாகப் பதில் சொன்னுர் அவர். “நான் ஒரு பக்கிரி. எனக்கு மந்திர சக்தி உண்டு. நான் உன் தங்கையைக் காப்பாத்திட்டேன். அவளை யாராலும் கெடுக்க முடியல்லே.”

மாலதிக்காகப் பொய் சொன்னுர் அவர். அவருக்கு வாந்தி வந்தது, அவர் விளக்கை உயரத் தூக்கிக்கொண்டு கீழே இருட்டில் தம் அங்கியால் முகத்தை மறைத்துக்கொண்டு வாந்தியெடுத்தார். பொறுக்க முடியாத நாற்றம் வந்தது வாந்தியிலிருந்து.

ஏதோ ஒரு பைத்தியத்தைப் பார்ப்பது போல் அவரைப் பார்த்துக் கொண்டு நின்ருன் நரேன்தாஸ். அவருடைய பேச்சைக் கேட்க ஆச்சரியமாகவும் இருந்தது, திகைப்பாகவும் இருந்தது அவனுக்கு. பக்கத்தில் மாலதியைக் காணும். இவரோ மாலதியைக் காப்பாற்றி விட்டதாகச் சொல்கிருர். பக்கிரிசாயபுவின் தைரியத்தைப் பற்றிப் பல கதைகள் கேட்டிருக்கிருன் அவன். இவர் சொல்வதை நம்புவதா, இல்லையா?

அவன் உணர்ச்சிவசப்பட்டவனுகத் தன் மனைவியைக் கூப்பிட்டான். “ஆபுவோட அம்மா, கேட்டியா பக்கிரிசாயபு சொல்றதை? இவர் மாலதியைக் கண்டுபிடிச்சுட்டாராம்.”

தாம் போட்ட வேஷம் பலன் அளித்துவிட்டது என்பதை நரேன் தாஸின் நடத்தையிலிருந்து புரிந்துகொண்டு விட்டார் பக்கிரி சாயபு. நரேன்தாஸும் அவனுடைய குடும்பத்தினரும் ஆகாயத்திலிருந்து குதித்து வந்திருக்கும் ஓர் அபூர்வப் பிறவியைப் பார்ப்பது போல் வியப்புடனும் பயத்துடனும் அவரைப் பார்த்துக்கொண்டு நின்ருர்கள். அவர் விளக்கைப் பெரிதாகத் தூண்டிவிட்டார். குடிசையிலேயே நெருப்புப் பற்றிக்கொண்டு விடுமளவுக்கு அவ்வளவு பெரிதாக எரிந்தது விளக்கு. எங்கும் ஒரே வெளிச்சம். கீழ்ப் பக்கத்தில் இலந்தை மரத்தடியில் மட்டுந்தான் இருட்டாயிருந்தது. அங்கேதான் மாலதியை வைத்துக்கொண்டு நின்ருன் ஜோட்டன்.

நரேன்தாஸ் தம் பேச்சை நம்ப வேண்டுமென்பதற்காகப் பக்கிரி சாயபு, ‘லா இலாஹா இல்லல்லா, பிஸ்மில்லா ரகிமானே ரகீம்' என்றெல்லாம் மந்திரம் உச்சரிப்பது போல் கம்பீரமாகச் சொன்னுர்.

“தாஸ்! மாலதியம்மா வனதேவதை மாதிரி காட்டிலே ஓடினு.

அப்போ ஆத்திலே தண்ணி இல்லே, பறவைகள் கூவல்லே, மைனு மதிச் சந்தையிலே கடைகளிலே விளக்கு எரியல்லே. அம்மா ஓடிவரபோது காடும் மரமும் அழுததாக்கும். நான் அவளைக் கண்டுபிடிச்சுக் கூட்டிக்கிட்டு வந்திட்டேன், தாஸ்.''

இலந்தை மரத்தடியில் நின்றுகொண்டு அவர் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள் மாலதி. ஜோட்டனின் பக்கிரி சாயபு, திருவிழாக்களில் காஜிப் பாட்டுப் பாடும் வாத்தியக்காரர் களைப் போல் சுற்றித் திரியும் பக்கிரி சாயபு இப்போது மாலதிக்காகப் பொய் சொன்னுர்.

ஆபாராணி வீட்டுக்குள்ளிருந்து கூவினுள். ''அவள் எங்கே, பக்கிரி சாயபு? கண்ணுக்கு ஒருத்தரும் தெரியல்லியே!''

''இருக்கா. உங்களுக்கு ஆட்சேபமில்லேன்னு காண்பிக்கிறேன்.''

''பொய் சொல்லாதீங்க, பக்கிரிசாயபு. எனக்கு நம்பிக்கை ஏற்படல்லே'' என்ருன் நரேன்தாஸ்.

''இப்போ ஏற்படும் பாருங்க'' என்று சொல்லிவிட்டுப் பக்கிரி சாயபு கூவினுர். ''அம்மா தாயே! இப்போ வில்வ மரத்தடியிலே அல்லது பூச்செடிக்குப் பக்கத்திலே எழுந்தருள்வாய், அம்மா!''

கூவிக்கொண்டே அவர் தம் விளக்கைத் தூண்டிவிட்டார். அவருடைய அடிவயிற்றில் தாங்கமுடியாத வலி ஏற்பட்டது அப்போது. வலியின் கடுமை காரணமாகச் சுருண்டு போய்விட்டார் அவர். நிமிர்ந்து நிற்க முடியவில்லை அவரால். இந்த நோவையும் எப்படியோ பொறுததுக்கொண்டு அவர் நிமிர்ந்து பார்த்தார். சிரிக்க முயன்றுகொண்டு கையையும் காலையும் ஆட்டியவாறு கோஷித்தார். ''அம்மா, வா! ஆகாசத்திலேருந்து காத்திலேருந்து இங்கு வந்து குதி!''

மந்திர ஜாலம் செய்யும் பாணியில் இருந்தது அவரது செய்கை.

பக்கத்து வீட்டுக்காரர்களான தீனபந்துவும் அவருடைய இரு மனைவிகளும் பக்கிரி சாயபு முஸ்கிலாசான் எடுத்துக்கொண்டு வந்திருப்பதை அறிந்தார்கள். இதற்குள் மாலதி நரேன்தாஸின் வீட்டு வாசலுக்கு வந்துவிட்டாள். பக்கிரி சாயபு விளக்கைத் திருப்பிக் காட்டியதும் ஆபாராணியும் நரேன்தாஸும் அங்கு மாலதி சோர்ந்து, களைததுப் போய், தரையில் விழுந்துவிடப் போகிருற்போல் நின்றுகொணடிருப்பதை கண்டார்கள். அவர்கள் ஓடிச் சென்று மாலதியைத் தாங்கிக்கொண்டதும் பக்கிரி சாயபு விளக்கை அணைத்துவிட்டு விடுவிடென்று படகுத் துறைக்குத் திரும்பினுர். ஜோட்டனும் அவரைப் பின்பற்றினுள். பக்கிரிசாயபுவிடம் கிசுகிசுத்தாள், ''சீக்கிரம் படகை எடுங்க. தாமதம் செய்யாதீங்க.''

இருளில் பக்கிரி சாயபுவின் உடை மலம் மூத்திரத்தால் நாச

மாகிவிட்டது. அவருக்குப் பேதி ஏற்பட்டுவிட்டது. அப்படியும் அவர் ஜோட்டனிடம் எதுவும் சொல்லவில்லை. ஜோட்டனுல் மலம் மூத்திரத்தைப் பார்க்க முடியாவிட்டாலும் அவற்றின் துர்நாற்றத்தை உணர முடிந்தது. ஆற்றின் வாயை அடைந்ததும் பக்கிரிசாயபு படகை ஆற்றின் போக்கில் விட்டுவிட்டார். அவரால் பேச முடியவில்லை. வாந்தி பேதியால் உயிர் போய்க்கொண் டிருந்தது. இப்படியே போய்க்கொண் டிருந்தால் பொழுது விடியுமுன் அலிபுரா கிராமம் வந்து சேர்ந்துவிடும். அதற்கப்புறம் உள்ள ஒரு கோச தூரத்துக்குப் படகை ஓட்டிக்கொண்டு போய்த் தர்காவை அடைந்து விட ஜோட்டனுல் முடியும். அவர் ஜோட்டனிடம் சொன்னுர். ''பீபி, எனக்கு உயிர் போய்க்கிட்டிருக்கு. பொழுது விடியறதுக்குள்ளே என்னைத் தர்காவிலே கொண்டுபோய்ச் சேர்த்திடு. நான் போன பிறகு அழுது ஒப்பாரி வைக்கவேண்டும். அலிபுராவிலே ஜனங் களுக்கு நான் செத்துப்போன செய்தியைச் சொல்லிடு.''

பக்கிரி சாயபு ஏன் இப்படிப் பேசுகிருர் என்றுப் புரியவில்லை ஜோட்டனுக்கு. அவர் படகுத் தட்டில் படுத்துக் கிடந்தார். ஜோட்டன் அருகில் போய் அவரைத் தொட்டுப் பார்த்தாள். அவ ருடைய உடை நனைந்திருந்தது, ஜோட்டனுக்குத் திக் என்றிருந்தது. அவள் கேட்டாள். ''ராத்திரி எவ்வளவு மணிக்குன்னு சொல்லணும்?''

''ராத்திரி இரண்டாம் சாமத்திலேன்னு.''

''அப்போ நீங்க நரேன்தாஸ் வீட்டு வாசல்லேன்ஞ நின்னுக்கிட் டிருந்தீங்க?''

''அதைப் பத்தி உனக்கென்ன கவலை?'' என்று சொல்லிவிட்டு மௌனமானுர் பக்கிரிசாயபு.

ஜோட்டன் அழ ஆரம்பித்தாள். பக்கிரிசாயபு அவளை ஜாடையால் தம் அருகே அழைத்தார். அவள் அவருடைய தலையைத் தூக்கித் தன் மடியின் மேல் வைத்துக் கொண்டாள். ஆற்று நீரின் வேகத்தில் படகும் வேகமாகப் போய்க்கொண்டிருந்தது. ஜோட்டன் ஒரு கையால் சுக்கானை மாத்திரம் பிடித்துக்கொண்டு இன்னெரு கையால் மெதுவாக அவருடைய உடைகளைக் கழற்றினுள். அவருடைய உடம்பைத் துடைத்துவிட்டாள். படுத்தவாறே இருளை வெறித்துப் பார்த்துக்கொண்டு, கைகளை நெஞ்சின் மேல் சேர்த்து வைத்துக் கொண்டு கிடந்தார் பக்கிரி சாயபு. அவர் சொன்னுர். ''அழாதே! உனக்குப் பிடிக்கல்லேன்ஞ, தர்காவுக்குப் போக வேண்டாம்.''- மேலும் பேச முடியாமல் அவருக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டது.

இருட்டில் ஆற்று நீர் மங்கலாகத் தெரிந்தது. வயல்களில் மின் மினிகள் கண் சிமிட்டின. எண்ணற்ற நட்சத்திரங்கள் வானத்தி

லிருந்து பக்கிரி சாயபுவின் இறுதிக் காலத்தைப் பார்த்துக் கொண் டிருந்தன. எவ்வளவு காலமாக இந்த மனிதர் இரவென்றும் பகலென்றும் பாராமல் வயல்களிலும் காடுகளிலும் பட்டினியாய்ச் சுற்றியிருக்கிறார் !

ஒரு காலத்தில் அவர் ஒரு கொலைக் குற்றச்சாட்டிலிருந்து தப்புவதற்காகத் தம் வீட்டை விட்டு ஓடி வந்தவர். பரிசாலைச் சேர்ந்த போலா பகுதியிலிருந்து அவர் தம் வீடுவாசல், மனைவி மக்கள், நெற்களஞ்சியம், ஊர்க் குளத்தங்கரை, மருதமரங்கள் எல்லாவற்றையும் விட்டுக் கால்நடையாகக் கிளம்பினார். பல நாட்கள் தலை மறைவாக இங்குமங்கும் அலைந்து திரிந்துவிட்டு ஒருநாள் ஆஸ்தானா சாயபுவின் தர்காவில் இரவைக் கழித்தார்.

தர்காவுக்குப் பக்கத்தில் பிணத்தைப் புதைக்க வந்தவர்கள் மெழுகு வர்த்திகள் ஏற்றி வைத்துவிட்டுச் சென்றார்கள். அந்த மெழுகுவர்த்தி களை எடுத்துக்கொண்டு காட்டில் சுற்றித் திரிந்தபோது அவருக்கு அங்கேயே தனிக் காட்டு ராஜாவாகத் தங்கிவிடும் ஆசை ஏற்பட்டது. நாளாக ஆக அங்கிருந்த பறவைகள், மரங்கள், செடிகள் எல்லாமே அவருக்கு நண்பர்களாக ஆகிவிட்டன. அவர் தமக்கு ஒரு சிறு குடிசை கட்டிக்கொண்டார். ஒரு முஸ்கிலாஸான் விளக்கு சம்பாதித் துக் கொண்டார். தம் சொந்த வீடு பரிசாலில் எங்கிருக்கிறது என்பது கூட மறந்து போய்விட்டது அவருக்கு. சில மந்திரங்களும் மத சம்பந்தமான விஷயங்களும் எப்படியோ தெரிந்து வைத்துக்கொண் டார். அவ்வளவுதான், பிறகு கொலைக் குற்றஞ் சாட்டப்பட்ட குற்ற வாளியாக அல்ல ; பக்கிரிசாயபு ஆகிவிட்டார் அவர்.

அவர் இப்போது செத்துக்கொண் டிருந்தார். ஜோட்டன் சொன் னாள் : ''உங்களுக்குப் பயமில்லே, பக்கிரிசாயபு. நீங்க சாதாரண மனிதரில்லே, பீராக்கும் !'' இதைச் சொல்லும்போது அவளுக்கு எப்ப டியோ தைரியம் வந்துவிட்டது. இரவோடிரவோக இந்த மனிதரைத் தர்காவுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும் என்று உறுதி கொண்டாள் அவள். மேட்டு நிலத்தில் பெரிய வேப்பமரத்தடியில் அவரைப் படுக்க வைக்கவேண்டும். அவுஸ் பருவ பயிரை அறு வடை செய்யப் படகில் வருபவர்கள் ஜோட்டன் ஒரு பிணத்தரு கில் உட்கார்ந்திருப்பதைப் பார்ப்பார்கள். பக்கிரிசாயபு இரவில் செத்துப் போன செய்தியைத் தெரிந்துகொள்வார்கள். பக்கிரிசாயபு வுக்கு இந்த வயது வரை வியாதியோ, துக்கமோ, கிழட்டுத்தனமோ இருந்ததில்லை. கடைசிக் காலத்திலும் தெம்புடன் இருக்க வேண்டும். கிழட்டுத்தனத்துக்கு இடம் கொடுக்கக்கூடாது. ஒன்றுமே நடக்காதது போல் ஜோட்டன் அவருடைய உடம்பைக் கழுவித் துடைத்து அவரை ஒரு புதிய மனிதராக்கிவிட்டாள். அவருடைய உடம்பில்

இப்போது துர் நாற்றம் இல்லை, அவரைப் பார்ப்பவர்கள் அவர் வாந்தி பேதியால் செத்துப்போனாரென்று உணர முடியாது. அப்போதுதான் "நீங்கள் பீர் ஆயிட்டீங்க, பக்கிரிசாயபு!" என்றான் ஜோட்டன்.

இப்போது ஜன்னலில் மாலை வெயில். பிருந்தாவனி எல்லாக் கதவுகளையும் திறந்து வைத்தாள். இந்த அறையில் அமலாவும் கமலாவும் உடையணிந்துகொண்டு தங்களை அலங்கரித்துக் கொண்டார்கள். வராந்தாவில் அமலாவும் கமலாவும் நின்றிருந்தார்கள். தூரத்தில் சீதலக்ஷா ஆறு. அதன் கரை வழியே சிலர் பலியிடப்பட்ட எருமையைத் தூக்கிச் செல்வதை அமலாவும் கமலாவும் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

பிருந்தாவனி அவர்களைக் கூப்பிட்டாள். "குட்டி ராணிகளே! வாங்க!"

பிருந்தாவனி அலமாரியைத் திறந்து அவர்களுடைய ஃபிராக்குகளை எடுத்தாள். முதலில் அவர்களுக்குத் தலை பின்னிவிட்டு உடையணிவித்து விடுவாள். பொழுது சாய்ந்துகொண் டிருந்தது.

வராந்தாவையொட்டிக் கோச்சு வண்டி நின்றது. குழந்தைகள் மற்ற வீடுகளில் துர்க்கை பூஜை பார்க்கப் போவார்கள். கூட ராம்சுந்தரும் போவான். பிருந்தாவனி அவர்களைக் கூப்பிட்டதும் அவர்களுடைய விளையாட்டு ஆரம்பமாகிவிடும். வழுவழுப்பான தரையாதலால் அவர்களால் வேகமாக ஓட முடியாது. இருந்தாலும் பிருந்தாவனியிடம் பிடிபடாமல் இருக்க இங்குமங்கும் வேகமாக ஓடினார்கள், அவர்கள். அவர்கள் பிருந்தாவனியிடமிருந்து தப்ப விரும்புவதன் காரணம் பிருந்தாவனி அவர்களுடைய தலைமயிரை இறுக்கிப் பின்னி விடுவாள்; தலையை வலிக்கும் அவர்களுக்கு.

பிருந்தாவனி அவர்களை இரண்டாம் முறை கூப்பிடவில்லை. சப்தம் போடாமல் அவர்கள் அருகே வந்து அவர்களைப் பிடித்துக்கொள்ள நினைத்தாள் அவள். ஆனால் அவள் அருகில் வருவதற்குள் அவளுடைய நோக்கம் குழந்தைகளுக்குப் புரிந்துவிட்டது. அவர்கள் வராந்தாவில் தங்கள் அழகிய கால்களை வைத்து, கீழே விழுந்து விடாமலிருக்கத் தங்கள் கைகளை இரு பக்கமும் நீட்டிக்கொண்டு தேவதைகள் போல, பாலே நடனக்காரிகள் போல—வளைய வந்தார்கள். அவர்கள் ஓடி விளையாடுவது நதிக்கரையில் அல்லது

வழுவழுப்பான பனிக்கட்டி மீது சறுக்கு விளையாட்டு விளையாடுவது போலிருந்தது. இதைக் கண்டு பிருந்தாவனிக்குக் கோபம் வந்தது. அவளால் அவர்களைப் பிடிக்க முடியுமா? அவள் கோபித்துக் கொண்டு அவர்களுடன் பேசாமல், ஒரே இடத்தில் நின்றுவிட்டாள். அப்போது அவளுடைய முகத்தைப் பார்த்தாலே அவளுக்குக் கோபம் என்று அவர்களுக்குத் தெரிந்துவிடும். உடனே அவர்கள் தாங்களாகவே வந்து அவளிடம் பிடிபட்டுக்கொள்வார்கள். குழந்தைப் பிராயம் முதல் தங்களை வளர்த்த பிருந்தாவனிடம் அவர்களுக்கு ரொம்பப் பிரியம்.

''நான் இன்னிக்குப் பின்னிக்கல்லே, அத்தை'' என்ருள் அமலா.

பிருந்தாவனி பதில் சொல்லாமல் அவளைத் திரும்பிப் பார்த்தாள்.

தன் கேசத்தை அப்படியே புஸ் புஸ் என்று வைத்துக்கொள்ள அமலாவுக்கு ஆசை. கழுத்து வரை வரும்படி வெட்டப்பட்டகேசம்.

பிருந்தாவனி சொன்ஞள். ''உங்களுக்கு வயசாயிக்கிட்டு வருது. மயிரைக் கழுத்து வரை வந்ததுமே வெட்டறது சரியில்லே. இனிமேல் இன்னும் நிறைய மயிரை வளர்த்துக்குங்க. நான் இறுகப் பின்னி விடறேன். இறுகப் பின்னிஞல் மயிரோட வேருக்குப் பலம். மயிர் நல்லா வளரும். நீங்க பெரியவங்களானப்பறம் மயிர் பொல பொலன்னு உதிராது.''

இருந்தாலும் 'பாப்' செய்யப்பட்ட தலைமயிருடன் அவர்களுடைய முகங்கள் அழகாகவே இருந்தன — புத்தம் புதிய டாலி போடில் மலர்களைப் போல அவர்களுக்கு ஒரு தடவை மொட்டை யடித்துவிட்டால் தலைமயிர் நன்ருக வளரும். ஆஞல் இந்தப் பேசசை எடுத்தாலே அவர்கள் அழத் தொடங்கி விடுவார்கள். அதைப் பார்க்கப் பிருந்தாவனிக்குக் கஷ்டமாக இருக்கும். அவன் அவர்களுடைய தந்தையிடம் தன் யோசனையை வற்புறுத்த மாட்டாள்.

அவர்களுடைய தந்தையையும் சிறு வயது முதல் வளர்த்து ஆளாக்கியது பிருந்தாவனிதான். அதே கவனத்துடனும் அக்கறை யுடனும் அவர்களையும் வளர்த்து வந்தாள் அவள். இப்போது அவர்கள் மறுபடியும் அவளிடமிருந்து நழுவ முயற்சி செய்தபோது அவள் கோபித்துக்கொன்டு அவர்களை அதட்டிஞள். அலமாரிக் கதவைப் பட்டென்று மூடிஞள். சிறுமிகள் இருவரும் அவளை லட்சியம் செய்யாமல் மறுபடி இங்குமங்கும் ஓட ஆரம்பித்தார்கள்.

கல்கத்தாவாயிருந்தால் பிருந்தாவனி அவர்களை அதட்டி அடக்கி யிருப்பாள். ஆஞல் இங்கு அவ்வாறு செய்ய முடியவில்லை. கல்கத்தா வீட்டில் அவள்தான் சர்வாதிகாரி. இல்லாவிட்டால் அந்தப் பெண்களும் தங்கள் தாயின் மதத்தையும் பழக்க வழக்கங்களையும்

பின்பற்றியிருப்பார்கள். பிருந்தாவனியின் முயற்சியால் அவர்கள் அழகாக வங்காளியில் பேசினார்கள். பூஜை முதலிய அனுஷ்டானங்களில் அபார ஈடுபாடு இருந்தது அவர்களுக்கு.

துர்க்கா பூஜை நெருங்க நெருங்க அவர்கள் தந்தையிடம் அடம் பிடிக்கத் தொடங்கிவிடுவார்கள் ஊருக்குப் போக. சந்தியா பூஜையின் போது மற்றப் பெண்களைப் போல் அவர்களும் மூங்கில் தட்டிக்குப் பின்னால் கைகளைக் குவித்துக்கொண்டு நிற்பார்கள். எருமைப் பலிக்குப் பின் அதன் ரத்தத்தை நெற்றியில் திலகமாக இட்டுக் கொள்வார்கள். இட்டுக்கொண்டால் அவர்களுடைய பாவமெல்லாம் போய்விடும், சரீரம் புனிதமாகிவிடும் என்ற நம்பிக்கை அவர்களுடைய முகங்களில் ஒளிர்வதைக் கவனிப்பாள் பிருந்தாவனி.

அமலா, கமலாவின் தாய்க்கு இதெல்லாம் பிடிக்குமா இல்லையா என்று சரியாகத் தெரியவில்லை, பிருந்தாவனிக்கு. ஆனால் ஒன்று மட்டும் உண்மை—குழந்தைகள் பூஜை பார்க்க ஊருக்குப் போவது குறித்து ஒவ்வொரு வருடமும் தம்பதிகளிடையே தகராறு ஏற்பட்டு, அதன் காரணமாக மனவேற்றுமை அதிகரித்து வந்தது. இதைப் பிருந்தாவனியால் உணர முடிந்தது.

அமலா கமலாவைக் கூட்டிக்கொண்டு அவர்களுடைய தநதை படகுத் துறைக்கு வந்தால் கள்ளங்கபடமற்ற, மகிழ்ச்சி நிறைந்த சின்னஞ்சிறு குழந்தையாக மாறிவிடுவார். அவரிடம் உற்சாகம் பொங்கும். ஆற்றங்கரையில் படகிலிருந்து இறங்கியதும் அவர் தம் பிறந்த மண்ணுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வார். "இது தானம்மா வங்காளத் தேசம், நம் முன்னோர்களின் சொந்த ஊர்" என்று குதூகலமாகத் தம் பெண்களிடம் சொல்வார். பிறகு சுற்று முற்றும் பார்த்துக்கொண்டே பேசாமல் நடப்பார். வண்டியில் ஏறி வீட்டுக்குப் போவதில்லை அவர். ஆற்றுநீர், வயல்களில் பசுமையான பயிர், வரிசை வரிசையாக நிற்கும் பனைமரங்களின் நிழல்—இவை அவரை, அவருடைய இளமைக் காலத்துக்கு அழைத்துச் சென்று அவரை உணர்ச்சிவசப்படச் செய்யும். வாலிபனாக இருந்த காலத்தில் அவர் எவ்வளவு தடவைகள் இந்த ஆற்றங்கரையில் குதிரை மேல் சவாரி செய்திருக்கிறார்!

இந்த விஷயத்தைப் பற்றி அவருக்கும் அவருடைய மனைவிக்கும் இடையே வெளிப்படையாகச் சண்டை உண்டாவதில்லை. ஆனால், பூஜை நெருங்கும்போது அமலா—கமலாவின் தந்தை காலை வேளைகளில் மகாபாரதம் படிக்கத் தொடங்கி விடுவார். மாலை வேளைகளில் கிளப்புக்குப் போவதை நிறுத்திவிடுவார். அவரது மனைவி அப்போது மாதாகோவிலுக்குப் போவாள், அல்லது பாதிரியே வீட்டுக்கு வந்து விடுவார். முதல் மாடியின் தென்பக்கத்து அறையில் சித்திர வேலைப்

பாடுகள் செய்த சலவைக்கல் தரையில் பாதிரியின் காலடியில், உட்கார்ந்திருப்பாள் அவள்.

இந்தத் தடவை பூஜைக்குச் சில நாட்கள் முன்பிருந்தே அப்பா அம்மாவின் அறைக்குப் போவதை நிறுத்திவிட்டதை அமலா கவனித்தாள். அம்மாவின் முகம் சோர்ந்து வருத்தமாக இருந்தது. அப்பா கீழ் அறையிலேயே படுத்துக்கொண்டு விட்டார். நள்ளிரவில் சில சமயம் திடீரென்று குழலூதுவார் அவர். தங்கள் தாய் தந்தையரிடையே இருந்த மனவேற்றுமையின் காரணம் தெரிய வில்லை குழந்தைகளுக்கு. அவர்கள் காலையில் மௌனமாகப் பள்ளிக்குப் போய்விடுவார்கள். மாலையில் திரும்பிவந்த பிறகு அவர்களுக்கு முன்போல் வீட்டில் விளையாடித் திரியத் தோன்றுவ தில்லை. வருத்தந் தோய்ந்த சிலையாக—கல்லாக ஆகிக்கொண்டிருந் தாள் அம்மா. அவள் எதையோ தேடிக்கொண்டு அவர்களுடைய தந்தையுடன் கடல் கடந்து வந்திருந்தாள். இப்போது அவளது முகத்தைப் பார்த்தால் அவள் தேடிவந்தது கிடைக்கவில்லை என்று தோன்றியது. சில சமயம் தோன்றியது- அவள் எதையோ தன் நாட்டில் விட்டுவிட்டு வந்துவிட்டாள்; இப்போது இங்கே வந்த பிறகு அது அவள் நினைவுக்கு வந்துவிட்டதென்று. அவள் எப்போதும் மைதானத்தை நோக்கிய பெரிய ஜன்னலுக்கு முன்னால் நின்றுகொண்டு வெளியே பார்த்துக்கொண் டிருப்பாள். மைதானத் தின் மறுபக்கம் கோட்டை. கோட்டைச் சுவர்மேல் ஆயிரக்கணக் கான கொண்டைப் புறாக்கள் பறந்தன. இவற்றைப் பார்த்துக் கொண்டே அவளது நினைவு எங்கோ சென்றுவிடும். அவள் எதையோ தேடுவது போலத் தோன்றும்.

இந்தக் காலத்தில் பிருந்தாவனி இரு சிறுமிகளுக்கும் வங்காள தேசத்து மண்ணின் கதையைச் சொல்வாள். சரத்காலத்தில் பவழ மல்லிகை பூத்துச் சொரியும். செம்பரத்தைச் செடி பனியால் நனையும். வானம் நிர்மலமாக இருக்கும். வெயில் பொன்னிறமாக இருக்கும். இவை எல்லாம் சேர்த்து ஒரு தேசம், பெயர் வங்காளம். இந்தத் தேசம் உங்கள் தேசம்! இந்த நாட்டில் காலை வேளையில் வெயிலில் பொன்னிறம் தோன்றும்போது, கிரௌஞ்ச பட்சி வானத்தில் பறக்கும்போது, வயல்களில் கதிர் முற்றும்போது, ஆறு களில் தண்ணீர் இறங்கும்போது, அதன் இரு புறங்களிலும் தண்ணீர் குறைந்து மேட்டு நிலம் கண்ணுக்குத் தோன்றும்போது, கருவேல மரங்களில் பட்டங்கள் சிக்கிக்கொண்டு கிழியும்போது, ஆறுகளில் பனை நுங்குகளும் அண்ணுசிகளும் ஏற்றிக்கொண்டு படகு கள் செல்லும்போது — சரத்காலம் வந்துவிட்டது என்று தெரிந்து கொள்ளுங்கள்! அமலா! கமலா! இப்படிப்பட்ட தேசத்தில் நீங்கள்

நீலக் கண்களுடன், பொன்னிறக் கேசத்துடன், பிறந்துவிட்டீர்கள். பின்பனிக் காலத்தில் திறந்த வெளியில் நீங்கள் ஓடும்போது உங்களைப் பார்க்க சாட்சாத் லட்சுமிதேவி மாதிரி இருக்கும்! இப்படிப்பட்ட பெண்கள் விஷமம் செய்யலாமா?

பிருந்தாவனி மிகவும் அழகாக அவர்களுக்குத் தலை பின்னிவிட்டாள். அவர்கள் படிகளில் இறங்கிக் கீழே செல்லும் வரையில் அவர்களைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். அவர்கள் பாட்டி, சித்தி இவர்களுடைய அறைகளுக்குப் போய்விட்டு வந்தார்கள். அவர்களுடைய தந்தை ஒரு மிலேச்சப் பெண்ணை மணம் செய்து கொண்டு வந்த காரணத்தால் ஊர்மக்களின் இகழ்ச்சிக்கும் ஏளனத்துக்கும் ஆளாகிவிட்டார். அவர்களுடைய பெண்களான அவர்கள் ஜமீன் சொத்தின் ஒரு பகுதிக்கு வாரிசு. ஆனாலும் அவர்களுக்கு ஜமீன் சொத்து கிடைக்குமா என்பது சந்தேகந்தான்.

இந்தக் காரணத்தால் அவ்வீட்டிலுள்ளவர்கள் எல்லாருக்குமே அவர்களிடம் அநுதாபமும் பரிவும் இருந்தன. கள்ளங்கபடமற்ற அந்தக் குழந்தைகள் ஓடியாடி விளையாடுவதையும், சிரிக்கும் அழகையும் பார்த்தால் அவர்கள் சாவி கொடுக்கப்பட்ட ஜப்பான் பொம்மைகளோ என்று தோன்றும். அவர்கள் வெளியே சென்று விட்டால் வீடே வெறிச்சென்று ஆகிவிடும்.

அவர்கள் கீழே இறங்கிக்கொண்டே நாற்புறமும் பார்த்தார்கள், சோனுவுக்காக. அவனைக் காணவில்லை. நடுப்பகலில் ஒருதடவை அவனைப் பார்த்தார்கள். ஆனால் எருமை ரத்தத்தால் திலகமிட்டுக் கொண்ட பிறகு ஒரே ஓட்டமாக ஓடிவிட்டான் அவன். எங்கே தான் போய்விட்டான்?

அவர்கள் கீழே வந்து பார்த்தபோது கோச்சுவண்டியில் காலேக் மியானைக் காணவில்லை. அவனுக்குப் பதிலாக யானை மாவுத்தன் ஜசீம் வண்டியோட்டியாக உட்கார்ந்திருந்தான். பின்னால் ராம்சுந்தர் டவாலி போட்டுக்கொண்டு நின்றுகொண் டிருந்தான்.

அமலாவுக்குக் காலேக்கைக் காணாதது ஆச்சரியமாக இருந்தது. "ஜசீம், நீயா வந்திருக்கே?" என்று கேட்டாள்.

"ஆமாம்மா, நான்தான்."

"காலேக் எங்கே?"

"அவனுக்கு உடம்பு சரியில்லேம்மா."

"என்ன ஆச்சு?"

"இருமல், ஜுரம்."

காலையில் ராம்சுந்தரைப் பார்த்தவர்கள் இந்த ராம்சுந்தரை அடையாளம் காண முடியாது. சாதாரணமாகப் பூஜை நாட்களில் அவன் துர்க்கையைத் தவிர வேறு யாருக்கும் சேவகன் அல்ல.

ஆனால் இன்று சின்ன எஜமானிகள் இருவரும் குலீன்பாடாவுக்கும் இன்னும் மற்றப் பாபுக்களின் வீடுகளுக்கும் துர்க்கையம்மனைப் பார்க்கப் போகிறார்கள் என்று கேட்டதுமே தன் சீருடையையும் டவாலியையும் அணிந்துகொண்டு ஓடிவந்துவிட்டான். அவன் தேவிக்கு மட்டும் அல்ல, குட்டி எஜமானிகளுக்கும் அடிமைதான்.

அவன் வெள்ளைச் சீருடை அணிந்திருந்தான; கால்களில் நாக்ராச் செருப்பு; இடுப்பில் பித்தளைக் கச்சை. கச்சையில் அந்தக் குடும்பத்தின் அடையாளச் சின்னம் பொறிக்கப்பட்டிருந்தது. அவன் தலையில் சரிகை வேலைப்பாடு செய்யப்பட்ட நீல நிறத தலைப்பாகை-புல் புல் பறவையின் கூட்டைப் போலத் தோன்றியது. அதன் நடுப்பகுதி கூம்பிக்கொண்டு மேலே நீட்டிக்கொண் டிருந்தது. இப்போது ராம் சுந்தரின் வேஷத்தைப் பார்த்தால், 'நீ எந்தத் தேசத்து ராஜா?' என்று கேட்கத் தோன்றும்.

அமலாவும் கமலாவும் முகத்தைக் கம்பீரமாக வைத்துக்கொண்டு கோச்சில் போய் உட்கார்ந்தார்கள். வீட்டு வேலைக்காரர்களுக்கு முன்னால் தங்கள் பரபரப்பை வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவர்கள் இங்குமங்கும் திரும்பிப் பார்த்தார்கள். "சோனா எங்கே? இதற்குள் தூங்கிப்போய்விட்டானா?" வண்டியை ஆபீஸ் கட்டிடத்துப் பக்கமாக ஓட்டிக்கொண்டு போகும்படி வண்டியோட்டியிடம் சொல்லவும் துணிவு ஏற்படவில்லை, அமலாவுக்கு. இந்த ஊருக்கு வந்தால் சில சட்டதிட்டங்களுக்கு அடங்கி நடக்கவேண்டும். அவர்கள் தனியே எங்காவது சென்றால் பாட்டி திட்டுவாள். அவர்களுக்கு நிறையச் செலலம் கொடுக்கும் அப்பா கூட அவர்கள் அந்தப்புரத்துக்கு வெளியே நடமாடினால், "இங்கே ஏன் வந்தீங்க? உள்ளே போங்க!" என்பார்.

கல்கத்தா வீட்டில் அவர்களுக்கு இத்தகைய கட்டுப்பாடுகள் இல்லை. அங்கே தோட்டக்காரர்களின பிள்ளைகள் அவர்களுடன் நெருங்கிப் பழகுவார்கள்; அவர்களுக்குப பொம்மை தயாரிததுக் கொடுப்பார்கள். இன்னும் வேண்டிய உதவிகள் செய்வார்கள். கல்கததா வீடும் பெரிய வீடுதான். அங்கே அமலாவும், கமலாவும் தங்கள் இஷ்டப்படி சுற்றித் திரிவார்கள்.

அப்படிப்பட்டவர்கள் இந்த ஊருக்கு வந்ததும் சிறை பட்ட ராஜகுமாரி போல் நடத்தப்படுவார்கள். சோனாவைக் கூட்டிக் கொண்டு பூஜை பார்க்கப் போக வேண்டுமென்று அமலாவுக்கு ரொம்ப ஆசை. சோனாவை அவர்கள் இருவருக்கும் நடுவில் உட்கார வைத்துக்கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அவன் உடலில் எப்போதும் சந்தன மணம் வீசுகிறதே, அது எப்படி?

சென்ற இரவு கொடையாளி கர்ணனின் ஜாத்ரா நடந்தது. அதில் விருஷகேதுவாக நடித்தவனுக்கு அழகான முகம், நீண்ட கண்கள், சிறிய உருவம். எவ்வளவு அசாதாரணமான பித்ரு பக்தி! சோனு அவர்களுக்கு விருஷகேதுவை நினைவூட்டினான். சென்ற இரவு சோனு தன் பைத்தியக்காரப் பெரியப்பாவின் அருகில் உட்கார்ந்துகொண்டு ஜாத்ரா பார்த்ததைத் தட்டி மறைவிலிருந்து கவனித்திருந்தாள், அமலா ஜாத்ரா பார்த்தவாறே சோனு தன் பெரியப்பாவின் மடியில் தலையை வைத்துக்கொண்டு தூங்கிவிட்டான்.

அந்தப் பைத்தியக்காரர் அசாதாரண மனிதர். அவர் அசையாமல் நேராக உட்கார்ந்திருந்தார். அவ்வளவு நேரமும் அவர் கையைக் காலைச் சற்று அசைத்தால் சோனுவின் தூக்கம் கெட்டுவிடும் என்று அப்படி அமர்ந்திருந்தார். அமலாவின் அத்தைமார்களும், சித்திமார் களும் ஜாத்ராவுக்கு நடுவே அடிக்கடி அவரைக் கவனித்துத் தங்களை மறந்ததை அமலா கவனித்தாள். அப்போது லஸ்தர் விளக்கில் நீலமும் சிவப்புமாகப் பலவகை விளக்குகள் ஒளிவீசிக் கொண் டிருந்தன.

வண்டி மரங்களின் நிழலில், கூழாங்கற்கள் பதித்த பாதையில் போய்க்கொண் டிருந்தது. டக் டக் என்று குதிரைகளின் குளம்பொலி கேட்டது. ஏரியின் சலனமற்ற நீரில் சில தாமரை மலர்கள் மலர்ந் திருந்தன. சரத்கால மாலை நேரம் கழிந்து வந்தது. நிர்மலமான ஆகாயம். மரங்களின் இடைவெளிகள் வழியே ஆற்றங்கரையில் நிறைய மக்கள் தென்பட்டார்கள். அவர்கள் எல்லாரும் துர்க்கை யைப் பார்க்க வந்திருப்பவர்கள்.

"சோனு என்ன இப்படி இருக்கான் ?" என்று அமலா எரிச்சலுடன் சொன்னாள்.

"ஏன், என்ன ஆச்சு ?"

"அவனைக் காணவேயில்லையே ?"

இங்கிருந்து ஆபீஸ் கட்டிடம் வரையில் பார்த்தாள் அமலா. சோனு மண்டபத்துப் படியில் உட்கார்ந்திருக்கலாம். அல்லது மானையோ மயிலையோ பார்த்துக் கொண்டிருக்கலாம், முதலைப் பள்ளத்தை எட்டிப் பார்த்துக்கொண் டிருக்கலாம்.

ஊஹூம். மரங்களின் இடைவெளியிலோ இலைகளாலான அலங் காரப் பந்தல்களுக்குக் கீழோ சோனுவைக் காணோம். "சோனு இனிமே நம்மோட வரமாட்டான்" என்று அப்போது கமலா சொன்னாள்.

அமலாவுக்கு நெஞ்சு திக்கென்றது. "ஏன் வரமாட்டான் ?"

"அவனுக்குக் கோபம்."

"நாம அவனை ஒண்ணும் சொல்லலியே!"

"கோபந்தான் அவனுக்கு. இல்லேன்னு நம்மளைக் கண்டதுமே ஏன் அப்படி ஓடறான்?"

அமலாவுக்கு உயிர் திரும்பி வந்தது. நல்லவேளை அவன் கமலாவிடம் ஒன்றும் சொல்லவில்லை.

வண்டி ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தது. குதிரைகள் இரண்டும் வெள்ளை. சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்தான். வண்டியைப் பார்த்ததும் அங்குள்ள ஜனங்கள், சிறுமியர் இருவருக்கும் நமஸ்காரம் செய்தார்கள். பாதை காலியாக இருந்தது. குதிரைகள் நிதானமாக நடை பயின்றன.

"சோனுவை எங்கேயாவது பார்த்தாப் பிடிச்சு இழுத்துக்கிண்டு வந்துடுவோம். எங்கே போயிடுவான் பார்ப்போம்?" என்று அமலா சொன்னாள்.

"நீ அவனோட ரெண்டு கையையும் பிடிச்சுக்கோ. நான் அவனோட கால் ரெண்டையும் பிடிச்சுக்கறேன். அவனைத் தூக்கிண்டு மொட்டை மாடிக்குக் கொண்டுபோய் மாடிப்படிக் கதவைச் சாத்திப்பிட்டா அவன் என்ன பண்றான், பார்ப்போம்" என்றாள் கமலா.

சோனுவை விரோதித்துக்கொள்ளக் கூடாது, அவனைத் தாஜா செய்து வைத்துக்கொள்ள வேண்டும் என்று அமலா நினைத்தாள். அவள் சோனுவை என்ன என்ன செய்துவிட்டாள்! கமலாவுடன் இப்படியெல்லாம் எவ்வளவோ தடவை செய்திருக்கிறாள். ஆனால் சோனு! அது ஓர் அலாதி அநுபவந்தான், அலாதி இனிமைதான். கமலா அவனைத் தன்னிடம் இழுத்துக் கொண்டுவிடுவாளோ என்ற பயம் அமலாவுக்கு. "சோனுவை அப்படியெல்லாம் பலவந்தமா இழுத்துக்கிண்டு வரவேண்டாம். அவன் நல்ல பையன். நான் அவன் கிட்டே பிரியமா இருப்பேன்" என்றாள் கமலா.

"நானும், அவன்கிட்டே பிரியமா இருப்பேன்."

கமலாவின் பேச்சால் அமலாவுக்கு வருத்தம் ஏற்பட்டது. "உனக்கு எப்போதும் இந்தக் குணந்தான். எனக்கு ஏதாவது பிடிச்சிருந்தா உனக்கும் அதுவே வேணும்!"

"நீயும் அந்தமாதிரிதான்."

அமலா பிறகு பேசவில்லை. பின்னால் மரப்பொம்மை போல் அசையாமல் ராம்சுந்தர் நின்றுகொண்டிருந்தான். எதிரில் சீதலக்ஷாவின் படுகை நிலம். அதில் சோனுவின் பைத்தியக்காரப் பெரியப்பா தன்னந்தனியே நடந்து போனார்.

"அதோ பார், அக்கா! சோனுவோட பைத்தியக்காரப் பெரியப்பா!" என்று கமலா சொன்னாள்.

அமலா திரும்பிப் பார்த்தாள். பைத்தியக்கார மனிதருடன் அவ ருடைய நாயும் இருந்தது. நதிப்படுகையைக் கடந்து எங்கேயோ போனார் அவர்.

"அவருக்குப் பின்னாலே சோனு போறான் போலே யிருக்கே!" என்று கமலா சொன்னாள்.

"ராம்சுந்தர், அது சோனுதானே?" என்று கமலா கேட்டாள்.

"ஆமாங்க."

"ஜசீம், வண்டியை வேகமா விடு !" என்று சொல்லிவிட்டு அமலா தன் ஃபிராக்கைச் சரி செய்துகொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

ஆற்றங்கரையில் பழைய மண்டபம். மண்டபத்தின் சிகரத்தில் பதித்திருந்த திரிசூலத்தின் மேல் ஒரு பறவை உட்கார்ந்திருந்தது. சோனுவும் பெரியப்பாவும் மண்டபத்துக்கு வருவதற்குள் கமலாவும் அமலாவும் அங்கே போய்ச் சேர்ந்துவிடுவார்கள். சோனுவையும் அவனுடைய பெரியப்பாவையும் பிடித்து விடுவார்கள். அவர்களையும் வண்டியில் ஏற்றிக்கொண்டு நாலு பேராக, நாலு பேர் ஏன், ராம்சுந்தர், ஜசீம், நாய், இவர்களை எல்லாம் சேர்த்து, மொத்தம் ஏழு பேர்—வீட்டுக்கு வீடு துர்க்கையைப் பார்த்து வணங்கிக்கொண்டு போவார்கள். கடைசியாகப் பழைய வீட்டுக்குப் போய் அங்கிருக் கும் துர்க்கையைப் பார்த்து வணங்கிவிட்டு மைதானத்துக்கு வந்து வண்டியிலிருந்து இறங்குவார்கள். ஆஸ்வின் மாதக்கடைசி யாதலால் அஸ்தமித்ததுமே பனி விழத் தொடங்கிவிடும். நல்ல நிலா இருக்கும். இரவில் வெகுநேரம் அங்கேயே உட்கார்ந்திருந்துவிட்டுப் பிறகு அவர்கள் வீடு திரும்புவார்கள். கூடவே ராம்சுந்தர் இருக் கிறானே, பயம் என்ன!

ஆற்றங்கரையில் இரண்டு குதிரைகள் கோச்சுவண்டியை இழுத்துக்கொண்டு வருவதையும் அந்த வண்டியின் பின்னால் ஜாத் ராவில் நடிக்கும் நடிகனைப் போல் ஒரு மனிதன் நிமிர்ந்து நிற்பதை யும் சோனு பார்த்தான். ராஜா மாதிரி உடையணிந்திருப்பவன் ராம் சுந்தர் தான் என்று தூரத்திலிருந்து சோனுவுக்கு அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அமலாவும் கமலாவும் அவனைச் சைகை செய்து கூப்பிட்டார்கள்.

சோனு அவசர அவசரமாகப் பெரியப்பாவின் கையைப்பிடித்து இழுத்தான். சோனுவைப் பார்த்ததும் அவர்கள் மண்டபத்துக்கு அருகில் வண்டியை நிறுத்திவிட்டார்கள். சோனுவை ஏற்றிக் கொள்ளக் காத்திருந்தார்கள். சோனு அந்தப் பக்கம் போகவில்லை; அவன் யானை லாயம இருக்கும் பகுதியை நோக்கி, அதாவது, எதிர்த் திசையில், பெரியப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு நடக்கத் தொடங்கினான்.

"ராம்சுந்தர், சோனுவைக் கூட்டிக்கொண்டு வா!" என்று அமலா சொன்னாள்.

"பார்த்தியா? சோனு நம்மளைப் பார்த்துட்டு ஓடறான்!" என்று கமலா சொன்னாள்.

ராம்சுந்தர் வண்டியிலிருந்து குதித்து நேர்வழியில் மரங்களைத் தாண்டி வந்து படுகைக்கு வந்துவிட்டான். இந்த இடத்தில் ஒரு படித்துறை கட்டப்பட்டிருந்தது. அவன் படிகளில் இறங்கி நாணல் காட்டுப் பக்கம் ஓடிவந்தான்.

ராஜா உடையணிந்தவன் தங்களை நோக்கி ஓடிவருவதைச் சோனு கண்டான். நாணல் காடு, சற்று நேரம் அவனை அவர்கள் பார்வையிலிருந்து மறைத்தது. பெரியப்பாவுடன் நாணல் காட்டுக்குள் ஒளிந்துகொண்டுவிடப் பார்த்தான். அமலாவும், கமலாவும் அவனைக் கூட்டிக்கொண்டு வர அந்த ஆளை அனுப்பியிருந்தார்கள். ஆனால் சோனுவால் ஓடிவிட முடியவில்லை. நாய் வாலை ஆட்டிக்கொண்டும் உறுமிக்கொண்டும் ராம்சுந்தரிடம் ஓடியது.

சோனு ஆபீஸ் கட்டிடத்துக்கே திரும்பிப் போய்விடும் நோக்கத்துடன் படுகை வழியே ஓடத் தொடங்கினான். அங்கே இரண்டாவது பெரியப்பாவுடன் மெத்தைமேல் பேசாமல் உட்கார்ந்துவிட வேண்டும். அவன் அமலா கமலாவுடன் எங்கேயும் போகப் போவதில்லை, அவர்களோடு கண்ணாமூச்சி விளையாடப் போவதில்லை.

அப்போது நாய்க்கு ரொம்ப குஷி. பைத்தியக்காரப் பெரியப்பா ஆற்றங்கரையில் நின்றுகொண்டிருந்தார். நுங்கு, அன்னாசி ஏற்றிச் செல்லும் படகுகளும், சந்தைக்குச் சட்டிகளும், பாத்திரங்களும் ஏற்றிச் செல்லும் படகுகளும் ஆற்றின் போக்குக்கு எதிர்த்திசையில் சென்றன. சிலர் படகுகளைக் கயிற்றால் இழுத்துக்கொண்டு போனார்கள். அமலாவும் கமலாவும் வண்டியிலிருந்து இறங்கினார்கள். அவர்களும் ராம்சுந்தருமாகச் சேர்ந்துகொண்டு சோனுவைப் பிடித்து வண்டியில் வைத்துக்கொண்டு போய்விடுவார்கள் என்ற கவலை இல்லாதவர் போலக் காணப்பட்டார் மணீந்திரநாத். நதியில் சென்ற படகுகளை எண்ணிக்கொண்டிருந்தார் அவர்.

சோனு ஓடுவதையும் மற்றவர்கள் அவனைத் துரத்துவதையும் பார்க்க வேடிக்கையாக இருந்தது நாய்க்கு. அதுவும் உறுமிக்கொண்டு சோனுவோடு கூட ஓடியது.

"நீங்க ஏன் இறங்கி வந்துட்டிங்க?" என்று ராம்சுந்தர், அமலாவையும் கமலாவையும் கேட்டான்.

"சோனு நில்லு! ராம்சுந்தர் என்ன சொல்றான், கேளு!" என்று அமலா சொன்னாள்.

"நான் வரமாட்டேன்" என்று சோனு கத்தினான்.

''நாங்க துர்க்கை பார்க்கப் போறேம்.''

"நீங்க போங்க. நான் வரல்லே!"—இதற்குள் மூவரும் அவனைச் சூழ்ந்துகொண்டு விட்டார்கள். தப்பியோட வழியில்லை சோனுவுக்கு.

''நீங்க வரல்லேன்னு இவங்களுக்கு ரொம்ப வருத்தமா இருக்கும்'' என்று ராம்சுந்தர் சொன்னுன்.

''நான் வரல்லே." அடம் பிடிக்கும் குழந்தையைப் போல் திருப்பித் திருப்பிச் சொன்னுன் சோனு.

இதற்குள் அமலா ஓடி வந்து அவனைக் 'கப்'பென்று பிடித்துக் கொண்டாள். ''எங்கே போயிடுவே நீ?"

என்ன ஆச்சரியம்! சோனுவால் அவளை உதறித் தள்ள முடிய வில்லை. மிருதுவான மணம்வீசும் உடலுடனும், அழகிய முகத்துடனும் கண்களுடனும் கூடிய அமலா அவனை இறுகப் பிடித்துக்கொண் டிருந்தாள். இப்படிப்பட்ட ஒரு பெண் இப்படிப் பிடித்துக்கொண்டு விட்டால் அந்தப் பிடியிலிருந்து விலகிவர யாருக்குத் தோன்றும்?

"வா எங்களோட. வந்து துர்க்கை பாரு! திரும்பி வரபோது மைதானத்திலே கொஞ்ச நேரம் உட்கார்ந்திருக்கலாம். நிலா இருக்கும். அங்கே உனக்கு ஒரு விதப் பட்சி காண்பிக்கிறேன். வெள்ளை வெளேர்னு இருக்கும். எப்போப் பார்த்தாலும் பறந்துண்டு கூவிக் கிண்டு இருக்கும். நீ அதைப் பார்த்துட்டா அந்த இடத்தை விட்டு வரவே மாட்டே.''

"ஆனு நீ என்னை''...... என்று ஏதோ சொல்ல ஆரம்பித்த சோனு, அமலாவின் முகத்தைப் பார்த்து அப்படியே மௌனமாகி விட்டான். அவளுடைய முகம் பரிதாபமாக இருந்தது. அதில் ஒரு மௌன வேண்டுகோள் இருந்தது. அந்த வேண்டுகோளை மீற முடியவில்லை அவனுல்.

பெரியப்பா திரும்பிப் பார்த்தார். சோனு அந்தப் பெண்களுடன் செல்வதைப் பார்த்துவிட்டு, படகுகளை எண்ணுவதை நிறுத்திவிட்டு அவனை நோக்கி நடந்தார்.

''உன்னேட பெரியப்பாவையும் கூட்டிக்கலாம்'' என்று அமலா சொன்னுள்.

''நீங்களும் வரீங்களா?'' என்று சோனு கேட்டான்.

பெரியப்பா பதில் எதுவும் சொல்லாமல் வண்டியில் தாவி ஏறிக் கொண்டார்.

''நீ என்கிட்டே உட்காரு'' என்று கமலா சோனுவிடம் சொன்னுள்.

"அதெப்படி?'' என்று அமலா ஆட்சேபித்தாள். ''நான் பெரியப்பா கிட்டே உட்காருவேன்'' என்றுன் சோனு.

ஜசீம் குதிரைகளை வேகமாக ஓட்டினுன். ''ஜசீம்! என்னையும்

பெரியப்பாவையும் உனக்கு அடையாளம் தெரியறதா?'' என்று சோனு அவனைக் கேட்டான்.

"தெரியாமே என்ன! உங்க அம்மா சௌக்கியமா இருக்காங்களா?''

தன் அம்மா எப்படி இருக்கிறுளென்று சோனுவுக்குத் தெரியாது. இங்கு வந்து சில நாட்களே ஆகியிருந்தாலும் அம்மாவைப் பார்த்து வெகுகாலமாகி விட்டதாகத் தோன்றியது அவனுக்கு. ஊர் திரும்பி யதும் தன் தாயைப் பார்க்க முடியாது என்று ஏனோ அவனுகக்கு அடிக்கடி தோன்றியது. அவன் ஊர் போய்ச் சேர்ந்ததும் படகுத் துறையில் பெரியம்மாவை மட்டும் பார்ப்பான், வேறு யாரும் அங்கு இருக்கமாட்டார்கள்.

அமலாவுடன் நேர்ந்த அந்த நிகழ்ச்சிக்குப் பிறகே அவனுக்கு இப்படித் தோன்ற ஆரம்பித்தது. ஏன் என்று சொல்லத் தெரிய வில்லை அவனுக்கு. அவனுல் தன் தாய் சௌக்கியமாக இருக்கிருள் என்று தைரியமாகச் சொல்ல முடியவில்லை. "நான் ஊருக்குப் போகிறேன்'' என்று இரண்டாவது பெரியப்பாவிடம் சொல்லவும் தைரியமில்லை. அவனுடைய அண்ணுக்கள் அவனை மீண்டும் மீண் டும் எச்சரித்தார்கள், "இங்கே வந்ததும் ஊருக்குப் போறேன்னு சொல்லி அழக் கூடாது'' என்று. ஈசமின் படகில் போய் உட்கார்ந்துவிடத் தோன்றியது சோனுவுக்கு. அதில் உட்கார்ந்து விட்டால் தன் ஊருக்கு அருகில் வந்துவிட்டாற் போன்ற உணர்வு ஏற்படும் அவனுக்கு.

சோனு பதில் சொல்லாமல் இருப்பதைக் கண்ட ஜசீம் சொன்னுன்: "அம்மாவை நினைச்சுக்கிட்டு ஏங்குறீங்க நீங்க."

ஜசீம் சொன்னது உண்மைதான். தாயின் நினைவு அவன் மனத்தில் பாரமாக அழுத்தியது.

"மறுபடி உங்க ஊருக்கு வரப் போறேன். குளிர்காலம் ஆரம்பிச்ச தும் உங்க அம்மா கையாலே பிட்டும் பாயசமும் சாப்பிடணும்'' என்றுன் ஜசீம்.

ஜசீம் சொல்வதைச் சோனு கவனிக்கவில்லை. அவன் குதிரை களைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். இரண்டு குதிரைகளும் நல்ல வெள்ளை. கிளப் கிளப் என்று குளம்பொலி கேட்டது. வண்டியின் பின்னுல் ராஜா மாதிரி வேடமணிந்து கொண்டு ராம்சுந்தர் நின்றுன். தலைக்கு மேல் பசுமையான மரங்கள் பறக்கும் பறவைகள், குதிரைகள். அவனை எங்கோ ஒரு தூர தேசத்துக்கு அழைத்துச் செல்வதாகத் தோன்றியது அவனுக்கு. அமலா தன்னைத் திருட்டுத்தனமாகப் பார்ப்பதைக் கவனித்தான். அவன் வெட்கமடைந்து, சென்ற இரவு நிகழ்ச்சியை நினைத்துச் சிரித்துவிட்டான்.

"என்கிட்டே உட்கார்றியா?" என்று கேட்டு அமலாவும் சிரித்தாள்.

சோணு பெரியப்பாவின் முகத்தைப் பார்த்தான். அதில் அனுமதியின் அறிகுறியைக் காணும். "வேண்டாம்!" என்றான் அவன்.

"நாளைக்குத் தசமி. அப்பா சாயங்காலம் புல்லாங்குழல் வாசிப்பார். நானும் நீயும் பால்கனியிலே உட்கார்ந்துகிண்டு கேட்போம்" என்று அமலா சொன்னாள்.

அவள் பேசுவதைக் கூடக் கவனிக்காமல் நிர்மலமான வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான் சோணு.

"அப்பா புல்லாங்குழல் வாசிப்பார். ரொம்பப் பேர் அதைக் கேட்க ஆத்தங்கரைக்கு வருவாங்க. பால்கனியிலே நீ, நான், கமலா மூணு பேருமா உட்கார்ந்துகிண்டு கேட்போம். வரியா?" என்று அமலா மறுபடி சொன்னாள்.

"அத்தை, பழைய வீடு எவ்வளவு தூரம்?"

"அடே! சோணு உன்னை அத்தைன்னு கூப்பிடறானே, அக்கா?"

அமலா முகத்தை உம்மென்று வைத்துக்கொண்டு, "ரொம்பத் தூரம்" என்று சுருக்கமாகப் பதில் சொன்னாள்.

அமலாவின் கோபத்துக்குக் காரணத்தைச் சோணு புரிந்து கொண்டான். "பொழுது சாஞ்சதும் வரேன்!" என்றான் சோணு.

"பொழுது சாஞ்சதும்னு ஏன் சொல்றே? சாயங்காலம்னு சொல்லத் தெரியாது?" என்று கமலா சொன்னாள்.

"தெரியும்."

"பின் ஏன் சொல்ல மாட்டேங்கறே?"

"மறந்து போறது."

"நீ எங்களோட கல்கத்தாவுக்கு வந்தால் எப்படிப் பேசுவே?"

சோணு பதில் சொல்லவில்லை.

"நீ இந்த மாதிரி பேசினா எல்லாரும் உன்னைப் பட்டிக்காட்டான்னு சொல்லுவாங்க" என்றாள் கமலா.

கல்கத்தா என்ற வார்த்தையைக் கேட்டதும் சோணுவுக்கு ஒரு ராஜாவின் ஊர் ஞாபகம் வந்தது. அங்கே எவ்வளவு பெரிய பெரிய வீடுகள், அரணமனை மாதிரி! வண்டிகள், குதிரைகள், கோட்டை, மியூசியம், ஹௌரா பாலம்! நினைக்க நினைக்க அதுவே ஒரு சாம்ராஜ்யமாகத் தோன்றியது அவனுக்கு. "பிரிதிவிராஜ், ஜயச்சந்திரன் சம்யுக்தையின் சுயம்வரம்-இவையெல்லாம் நினைவுக்கு வந்தன.

அவன் ஒரு பூங்காவில் தன் குதிரையுடன் ஒளிந்திருக்கிறான். ராஜகுமாரி சுயம்வரச் சபையின் வாயிலுக்கு வந்து அவனுடைய சிலைக்கு மாலை போட்டதும், அவன் அவளைத் தூக்கிக் குதிரையின் மேல் வைத்துக்கொண்டு வேகமாக ஓடிவிடுவான்! ஏனோ அவனுடைய மனக்கண்ணில் வெள்ளைக் குதிரை தோன்றியது. அதன்

மேல் உட்கார்ந்திருக்கிறுன் சோஞ. அவனுக்கு முன்னல் அமலா அவன் அமலாவைக் கூட்டிக்கொண்டு ஆறு, வயல், காடுகளைக் கடந்து பெரியப்பாவின் நீலகண்ட பறவையைத் தேடிக்கொண்டு போவான்.

சோஞ தன்னருகில் உட்கார்ந்திருந்த பெரியப்பாவைப் பார்த்தான். அமைதியாக மௌனமாக உட்கார்ந்திருந்தார் அவர்.

"அமலா, உனக்குக் குதிரைச் சவாரி பண்ணத் தெரியுமோ?" என்று சோஞ கேட்டான்.

"அடே! இப்ப நீ நன்ஞப் பேசறியே!" என்ருள் கமலா.

"எங்க பெரியம்மா கல்கத்தாப் பேச்சுப் பேசுவாளே!" என்று சோஞ சொன்ஞன்.

"அப்போ நீ ஏன் இவ்வளவு நாள் அந்த மாதிரி பேசல்லே?"

"எனக்கு வெட்கமாயிருக்கு."

"அக்காவுக்குக் குதிரைச் சவாரி நன்ஞத் தெரியும். தினம் காலம்பற அவ கிதிர்பூர் மைதானத்திலே குதிரைச் சவாரி பண்ணப் போவா" என்ருள் கமலா.

அவர்கள் வீடு வீடாகப போய்த் துர்க்கையைப் பார்த்துவிட்டுப் பெரிய மைதானத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். எங்கும் நிலா. பக்கத்தில் ஆற்றுப் படுகை, எண்ணற்ற நாணற் பூக்கள். ஆற்று நீர் தெளிவில்லாமல் தெரிந்தது. அதில் வானத்து நட்சத்திரங்கள் பிரதிபலித்தன. குதிரைகள் வேகமாக ஓடின. அவற்றின் கழுத்து மணிகள் ஒலித்தன. நாய் அந்த ஒலிக்கேற்ப ஆடிக்கொண்டு ஓடிவந்தது. மூங்கில் காட்டிலிருந்து சில பறவைகள் பறந்து வந்தன. அவர்கள் வண்டியிலேயே உட்கார்ந்திருந்தார்கள். வெள்ளை நிறப் பட்சிகள் வெள்ளி நிலவில் பறந்து போய் மறைந்துவிட்டன. அவை கூவும் ஒலி பயத்தை உண்டாக்கியது. எண்ணற்ற பறவை கள் உலகமெங்கும் பறந்து போய் ஏதோ ஒரு சோகச் செய்தியைப் பரப்புவது போலத் தோன்றியது.

நதிப்படுகையில் ஒரு சுழற்காற்று பிறந்தது. எண்ணற்ற நாணற் பூக்கள் அதில் பறந்தன. பறவைகள் காட்டுக்குள் மறைந்து விட்டன. அவற்றின் ஒலியும் கேட்கவில்லை. நாணற்பூக்களின் மகரந்தம் அவர்கள்மேல் பனிபோல் உதிர்ந்தது.

"சோஞ, கண்ணை மூடிக்கோ! நாணல் பூவோட மகரந்தம் பட்டால் கண் பொட்டையாயிடும்" என்ருள் கமலா.

எல்லாரும் கண்களை மூடிக் கொண்டார்கள். இந்த மகரந்த மழை நிற்கும் வரை அவர்கள் கண்களை மூடிக்கொண்டிருப்பார்கள். அமலா உத்தரவு கொடுத்தால்தான் வண்டி வீட்டுப் பக்கம் திரும்பும். அமலா சோஞவுக்கு ஓர் அபூர்வக் காட்சியைக் காட்டு

வதற்காகக் கூட்டிக்கொண்டு வந்திருந்தாள். அவள் நிலா வெளிச்சத்தில் தன் கடிகாரத்தைப் பார்த்தாள். ஸ்டீமர் வரும் நேரமாகிவிட்டது. ஸ்டீமர் வந்தால் அதன் விளக்குகளின் வெளிச்சம் ஆற்றங்கரையில், ஆற்றுப்படுகையில், பறவைகளின் மேல் வந்து விழும். அப்போது ஓர் அற்புதமான, மர்மம் நிறைந்த காட்சி தோன்றும். ஸ்டீமரின் பிரகாசமான வெளிச்சத்தில் பறவைகளின் நீலக்கண்களும் வெள்ளை இறக்கைகளும், மஞ்சள் நிறக் கால்களும், ஆழமான நீல நிற நீரில் எண்ணற்ற வெள்ளி மீன்கள் நீந்தித் திரிவது போன்ற தோற்றத்தை உண்டாக்கும். சுழலில் அகப்பட்டுக் கொண்டு சுற்றிவிட்டு மறையும் மீன்கள் சற்று நேரத்துக்குப் பிறகு மறுபடியும் தோன்றும். அந்தக் காட்சியைப் பார்க்கும்போது ஒரு போதை ஏற்படும். சினிமா பார்ப்பது போல் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே இருக்கத் தோன்றும். அதைக் காண்பிக்கத்தான் சோனுவை அழைத்து வந்திருந்தாள் அமலா. ஸ்டீமரின் வெளிச்சத்தைத் தூரத்தில் பார்த்ததுமே பறவைகள் உயரத்தில் வட்டமாகப் பறக்கத் தொடங்கின.

அமலா கண்களை மூடிக்கொண்டே, "சோனு, உன்னை நாங்க இன்னிக்கு எவ்வளவு தேடினோம்?" என்று கூறினாள்.

சோனு ஒன்றும் சொல்லவில்லை. அவன் கண்களைத் திறந்து பார்த்தபோது எல்லாருமே வெள்ளையாகத் தெரிந்தார்கள். அவனால் யாரையும் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. கதைகளில் வரும் கற்பனை மனிதர்களாகத் தோன்றினார்கள் அவர்கள். அவன் ஆங்கிலத்தில் ஒரு பாடப் புத்தகம் பார்த்திருந்தான்.

அதில் ஒரு படம். வரிசை வரிசையாகப் பைன் மரங்கள், அவற்றின் மேல் பனி விழுந்துகொண் டிருக்கிறது: அவற்றுக்குக் கீழே ஒரு கிழவனின் கையைப் பிடித்துக்கொண்டு ஒரு பையன் நிற்கிறான். அவர்களுடைய தலைமேல், உடைகள் மேல் பனி விழுந்து குவிந்துவிடுகிறது. அது மாதிரிதான் இவர்கள் எல்லாரும் இப்போது ஆகிவிட்டார்கள். கண்களை மூடிக்கொண்டிருந்த பெரியப்பா சோனு அழைத்ததன் பேரில் கண்களைத் திறந்தார். அவர் படத்திலிருந்த கிழவனைப் போலக் காணப்பட்டார். முன்பு குதிரைகள் மட்டுமே வெள்ளையாக இருந்தன. இப்போதோ எல்லாருமே வெள்ளையாகிவிட்டார்கள், நாய் உட்பட.

அப்போதுதான் அந்த அற்புத வெளிச்சம் தோன்றி, வானம், ஆறு, ஆற்றுப் படுகை, நாணற்காடு, மரங்கள் எல்லாவற்றையும் ஒளிமயமாக்கியது. "ஸ்டீமர் வெளிச்சம்!" சோனு கூவினான்.

எல்லாரும் கண்களைத் திறந்து அந்த வெளிச்சத்தைப் பார்த்தார்கள். அந்த வெளிச்சம் அவர்களுடைய வண்டியின் மேல் வந்து

விழுந்தது. ஆயிரக்கணக்கான காஸ் விளக்குகளின் வெளிச்சம் போல் இருந்தது. அந்த வெளிச்சத்தில் காட்டிலிருந்து பறவைகள் பறந்து வந்தன. அவைகளும் வெள்ளையாகத் தெரிந்தன. வெள்ளைப் பறவைகளின் நீலக்கண்கள் — இவற்றை மெய்ம்மறந்து பார்த்தான் சோனு. பெரியப்பா தம்மையே பார்த்துக் கொள்கிறார். அவர் பாலினின் நாட்டுக்கு வந்து சேர்ந்துவிட்டாரா? பனி விழுவது போல் எங்கும் நாணற் பூக்கள் விழுந்தன. நீலக்கண்களைக் கொண்ட அந்தப் பறவைகளைப் பிடிப்பதற்காக வண்டியிலிருந்து குதிக்க முற்பட்டுவிட்டார் பெரியப்பா. அதைப் புரிந்துகொண்ட ஜசீம் அமலாவிடம் சொன்னான். "இப்போ வண்டியைத் திருப்பணும் எஜமானியம்மா!"

"ஆமா" என்றான் ராம்சுந்தர்.

ஆனால் அமலா ஒன்றும் பேசவில்லை. சுழற்காற்று இப்படி அவர்களை ஒரு கற்பனையுலக மனிதர்களாக மாற்றிவிடும் என்று அவளே எதிர்பார்க்கவில்லை.

"சோனு என்ன பார்க்கறே?" என்று அவள் சோனுவைக் கேட்டாள்.

"பறவைகளைப் பார்க்கறேன்."

"வெளிச்சத்தைப் பார்க்கல்லே?"

"அதையும் பார்க்கறேன்."

"இன்னும் வேறே என்ன பார்க்கறே?"

"ஸ்டீமர்."

ஆனால் அமலா தன்னிடம் ஒன்றும் பேசவில்லை என்று மணீந்திர நாத்துக்குக் கோபம். அவர் பேச வாயெடுத்த அதே கணத்தில் ஒரு பெரிய பிராணி மணலில் நடந்து வருவதைக் கவனித்தார். முதலில் அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு பெரிய பிராந்து–யானையளவு பெரியது–வெள்ளை நிறம்–மைதானத்தை நோக்கி வந்தது. எல்லாரும் திகைத்துப் போய் அதைப் பார்த்தார்கள்.

"இது என்ன, ஜசீம்?" என்று கேட்டாள் அமலா. இதற்குள் வெளிச்சம் நகர்ந்துவிட்டது. எல்லாருக்கும் முன்னால் விஷயத்தைப் புரிந்துகொண்ட மணீந்திரநாத் வண்டியிலிருந்து குதித்தார். அது யானைதான்! ஆயிரக்கணக்கான நாணற்பூக்கள் அதன் மேல் விழுந்து அதை வெள்ளையாக்கிவிட்டன. யானை சங்கிலியை அறுத்துக் கொண்டு ஓடிவந்தது. ஜசீம் அதனிடம் வரவில்லை என்பதற்காக அவனைத் தேடிக்கொண்டு வந்தது போலும்.

சோனு அவசரமாக இறங்கிப் பெரியப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டான். அவன் இப்படிப் பிடித்துக்கொண்டால் அவர் எங்கும் போகமாட்டார். ஆனால் அவருடைய கண்களில் ஒரு மௌன

வேண்டுகோள். "நீங்க என்னை விட்டுடுங்க! நான் யானை மேலே ஏறிக்கிண்டு எங்கேயாவது போறேன் மறுபடியும்!"

சோனு மணீந்திரநாத்தின் கையை விடவில்லை. ஜசீம் ராம்சுந்தரிடம், "நம்ம யானை—லக்ஷ்மி—க்கு மறுபடி மதம் பிடிச்சுடுத்து. அதைப் போய்ப் பார்க்கறேன்" என்று சொல்லிவிட்டு வண்டியிலிருந்து குதித்துக் கத்திக்கொண்டே யானையை நோக்கி ஓடினான். ஜசீமின் குரலைக் கேட்டதும் யானை நின்றுவிட்டது. அசையாமல் நின்றுகொண்டு தும்பிக்கையை மட்டும் ஆட்டியது.

"பெரியப்பா, நான் பெரியவனானப்பறம் உங்களைக் கல்கத்தாவுக்குக் கூட்டிக்கிண்டு போறேன். நீங்க இப்போ வண்டியிலே ஏறுங்க" என்றான் சோனு.

இதைக் கேட்டு அமைதியாகிவிட்டார் மணீந்திரநாத். எப்போதும் அவர் சிந்தனையில் நிறைந்திருந்த சித்திரம் யானையைப் பார்க்கப் பார்க்க அவர் கண்முன்னால் தோன்றத் தொடங்கியது:

ஆற்றில் மயிற்படகு மிதக்கிறது.. கோட்டைச் சுவர் மேல் பறவைகள் பறக்கின்றன... ஹூக்ளியின் இருகரைகளிலும் சணல். தொழிற்சாலைகளின் சங்குகள் ஒலிக்கின்றன... ஈடான் பூங்காவில் நீலநிறப் பர்மியக் கோயில் தளத்தில் அவருடன் உட்கார்ந்திருக்கிறாள் பாலின்...அவருடைய கையில் தன் கையை வைத்துக்கொண்டு சொல்கிறாள்: "நீ ரொம்பப் பெரிய ஆளாயிடுவே, மணி! அப்பாவுக்கு உன்னோட வேலைத் திறமையில் ரொம்பத் திருப்தி. நான் அவர்கிட்டே சொல்லி உன்னைச் சீமைக்கு அனுப்ப ஏற்பாடு பண்றேன். நீ அங்கே போயிட்டு வந்ததும் உனக்கு இன்னும் பெரிய வேலை கிடைக்கும். கார்டிஃப்பிலே எங்களுக்கு வீடு இருக்கும். கோட்டையை யொட்டி ஒரு சிறிய பாலம்; அதற்கப்புறம் 'ராவுத் இஞ்சினீரிங் டாக்', தூரத்திலே ஒரு மலை, மலைமேலே லைட்ஹவுஸ். கோடைக் காலத்திலே, சாயங்கால வேளையிலே நீயும் நானும் அந்த லைட்ஹவுசுக்குக் கீழே உட்கார்ந்திருப்போம். சமுத்திரத்தைப் பார்ப்போம். நாம கப்பல்லே போயிட்டுக் கப்பல்லே திரும்பி வருவோம். நீ சம்மதிச்சா எல்லாம் நடந்துடும்!....

இச்சமயத்தில் அமலா வந்து சோனுவுக்கருகில் உட்கார்ந்தாள். அவனுடைய உடலிலிருந்து நாணற்பூவின் மகரந்தத்தை எடுத்து எறியும் சாக்கில் அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அவனிடம் ஏதோ கிசுகிசுத்தாள். அவளைப் பார்த்தால் மணீந்திரநாத்துக்குப் பாலினின் நினைவு வந்துவிடுகிறது. அவள்தான் சிறுமி பாலின். அவருக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை.

ஓர் இரவில் பாலின் மிகுந்த உணர்ச்சியுடன் பியானோ வாசித்துக் கொண்டிருந்தாள். வெள்ளை நிறத்தில் பளபளக்கும் கவுன் அணிந்

திருந்தாள் அவள். சண்பகப்பூப் போன்ற மிருதுவான அவளுடைய விரல்கள் எவ்வளவு வேகமாகச் செயல்பட்டன! ஆசை அவளுக்குள்ளே கொந்தளித்து அவளைப் பைத்தியமாக்கியது. அன்றிரவு முழுவதும் அவளால் தூங்க முடியவில்லை. அன்றுதான் அவர் அவளிடம் சொல்லியிருந்தார்: "எனக்கு ஊர் திரும்ப வேண்டும், பாலின்! அப்பாவிடமிருந்து தந்தி வந்திருக்கிறது. அவருக்கு உடல் நிலை மிகவும் மோசமாயிருக்கிறதாம். இந்தத் தடவை உன்னுடன் இங்கிலாந்து போக என்னால் முடியாது போலிக்கிறது." அப்புறம், அப்புறம் என்ன? அப்புறம் என்ன நடந்ததென்று தெளிவாக நினைவுக்கு வரவில்லை. எல்லாம் ஒரே குழப்பம்.

அமலா இன்னும் நெருங்கிச் சோனுவின் காதுக்கருகே தன் வாயைக் கொண்டுபோய், "யாரிடமும் சொல்லவில்லையே நீ?" என்று கேட்டாள்.

சோனு அசடுபோல் பரக்கப் பரக்க விழித்தான். ஜசீம் யானையைக் கூட்டிக்கொண்டு திரும்பி வந்தான். ராம்சுந்தர் வீட்டை நோக்கிக் குதிரைகளைத் திருப்பினான். அவர்கள் யானை, குதிரை சகிதம் ராஜா ஊர்வலம் வருவது போல் திரும்பி வந்தார்கள்.

"உனக்கு ஒண்ணுமே தெரியல்லே, சோனு!"

அப்போது மணீந்திரநாத் ஒரு கவிதையைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

Still, Still to hear her tender-taken breath, and to live ever—or else swoon to death! Death, Death, Death—

'டெத்', 'டெத்' என்று திருப்பித் திருப்பிச் சொன்னார் மணீந்திரநாத். அந்த ஒலிக்கேற்பக் குதிரைகளின் குளம்புகளும் ஒலித்தன, 'கிளப்', 'கிளப்' என்று. யானை எல்லாருக்கும் பின்னால் வந்தது. நாய் எல்லாருக்கும் முன்னால் நடந்தது. நடுவில் இரண்டு வெள்ளைக் குதிரைகள், கோச்சு வண்டி. ராஜா ஊர்வலமாக அரண்மனைக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தார். சோனுவுக்குத் தான் ஒரு கற்பனைக் கதையின் நாயகன் என்ற உணர்வு ஏற்பட்டது.

நிலையிலிருந்தே * விசர்ஜனத்தைக் குறிக்க வாத்தியங்கள் ஒலித்தன. துர்க்கையின் முகத்தில் சோகம். அவள் மறுபடி இமாலயத்

* விசர்ஜனம் பூஜிக்கப்பட்ட தெய்வச் சிலைகளை ஆற்றில் கொண்டுபோய் போடும் விழா.

துக்குத் திரும்பப் போகிருள், வரவேற்புக் கீதங்கள் பாடிய நாட்கள் கழிந்துவிட்டன. இனிப் பாட ஒன்றுமில்லை.

இன்று எல்லாப் பொருள்களிலுமே ஒரு வேதனையின் சாயல் படிந்திருந்தது. வெயில் ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்தது. நிர்மலமான வானம். அதில் கறையோ அழுக்கோ இல்லை; என்ருலும் எல்லாரும் எதையோ இழந்தது போல் உணர்ந்தார்கள். எல்லாரும் பூஜை மண்டபத்துக்கு முன்னுல் வந்து அசையாமல் நின்ருர்கள். பெரிய ஜமீன்தார் காலையிலிருந்தே மண்டபத்தில் ஒரு புலித்தோலின் மேல் உட்கார்ந்திருந்தார். சிவப்பு ஆடையும் நெற்றியில் சிவப்பு சந்தனத் திலகமும் அணிந்திருந்தார் அவர். "அம்மா, தாயே, புவனேஸ்வரி, புவனமோகினி எங்களைக் கண் திறந்து பாரு!" என்று அவர் பிரார்த்தனை செய்தார்.

இரண்டாவது ஜமீந்தார் வழக்கம் போல் இந்தத் தடவையும் புல்லாங்குழல் இசைப்பார். தன்டோராப் போடும் நகேன் நேற்றே தெரிவிததகோடு, பக்கத்து ஊர்களிலும் தண்டோராப் போட்டு இந்தச் செய்தியைத தெரிவித்திருந்தான்.

கிராமங்களில இந்தச் செய்தி பரவியதும் குடியானப் பெண்களின் முகங்கள் மலர்ந்துவிட்டன. இன்று சீக்கிரம் சாபபாட்டை முடித்துக் கொள்ள வேண்டும். சீதலக்ஷா ஆற்றின் கரையில் ஊர்.

ஜமீன்தாரின் மாளிகையும் கரையிலேயேதான். குடியானப் பெண் கள் முந்தானையில் நாலணக் காசை முடிந்துகொண்டு, வெற்றிலை போட்டு உதடுகளைச் சிவக்கச் செய்துகொண்டு, தலையில் முக்காடு அணிந்து தசரா பார்க்கப் போவார்கள். போகும் வழியில் ஆற்றங் கரையில் உட்கார்ந்து இரண்டாவது எஜமானனின் புல்லாங் குழலைக் கேட்பார்கள். சீக்கிரம் போகாவிட்டால் உட்கார இடம் கிடைக்காது.

ஆற்றங்கரையிலுள்ள மரங்களுக்கடியில் இரவு முதற்கொண்டே மக்கள் கூடத் தொடங்கிவிட்டனர். இசைக் கச்சேரிக்காகப் பெரிய பந்தல் போட்டிருக்கும். ஆனுல் குடியான மக்கள் பந்தலில் உட்கார முடியாது. இரண்டாவது எஜமானனை அருகில் சென்று பார்க்க ஆசைதான் குடியானப் பெண்களுக்கு. ஆனுல் அவர்கள் பந்தலுக் கருகில் சென்ருல் சிப்பாய்கள் தடிகளை வைத்துக்கொண்டு அவர்களை விரட்டிவிடுவார்கள்.

திருட்டுத்தனமாக எப்படியாவது பந்தலில் போய் உட்கார்ந்து விடப் பெண்களுக்கு ஆசை. ஆனுல் அவர்களுடைய கணவன் மார்கள் பயங்கொள்ளிகள். மனைவிமார்களைப் பந்தலுக்குள் நுழைய விடமாட்டார்கள். சவுக்கு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு அவர்கள் குழலிசையைக் கேட்பார்கள். எல்லாக் கிராமங்களின்

பிரதிமைகளும் ஆற்றில் விசர்ஜனமாகும் வரை இசை தொடர்ந்து நடக்கும். எவ்வளவோ ராகங்கள் இசைக்கப்படும். ஒவ்வொன்றிலும் வேதனை நிறைந்திருக்கும். அவை கேட்பவர்களின் உள்ளங்களைத் தொட்டு அவர்களையும் சோகத்தில் ஆழ்த்தும்.

காலையிலிருந்தே பல கிராமங்களிலிருந்து மக்கள் வரத் தொடங்கினர். ஜமீன் உத்தியோகஸ்தர்களுக்கு நிறைய வேலை. இசைக் குழு உட்காருவதற்காக மேடை அமைக்கப்பட்டது. ஆற்றங்கரையிலும் ஒரு மேடை அமைக்கப்பட்டது. அங்கே கிளாரினெட் வாத்தியங்கள் இசைக்கப்படும். சீதலக்ஷாவின் மறுகரையில் சூரியன் சாய்ந்ததுமே குழலிசை தொடங்கிவிடும். இரண்டாவது எஜமானனின் இரண்டு சீடர்கள் கல்கத்தாவிலிருந்து வந்திருந்தார்கள். அவர்களும் கூடவே இசைப்பார்கள்.

காலேக் எங்கே? அவனுக்கு உடல்நிலை சரியில்லை. ஆபீஸ் கட்டிடத்தைத் தாண்டினால் குதிரை லாயம். அதில் வெள்ளை நிறக் குதிரைகள், கறுப்புக் குதிரைகள். லாயத்தின் ஓர் ஓரத்தில் காலேக்கின் சிறிய குடிசை. அங்கு வெளிச்சமே நுழையாது. காற்று வராது. காலேக்மியானின் உடம்பு உலர்ந்து வற்றிக் கிடந்தது; கட்டை மாதிரி கிடந்தான். இன்று சூரியாஸ்தமன சமயத்தில் அவன் இறந்துவிடுவானென்று தோன்றியது. அவனுக்குக் கண் தெரியவில்லை; மூச்சுவிடக் கஷ்டமாயிருந்தது; கையும் காலும் கனத்தன.

தசமியன்று அவனும் இரண்டாவது எஜமானனுடன் சேர்ந்து உட்கார்ந்துகொண்டு குழல் இசைப்பது வழக்கம். இன்று அவன் தன் விரல்களை அசைத்துப் பார்த்தான். ஊஹூம், விரல்கள் அசைய மறுத்தன. கல்போல கனமாக விறைத்திருந்தன அவை.

ஒரு தடவை இப்ராகிமும் இரண்டு தடவைகள் பூபேந்திரநாத்தும் வந்து அவனைப் பார்த்துவிட்டுப் போனார்கள். அவன் மருந்தும் சாப்பிடவில்லை, உணவும் உட்கொள்ளவில்லை. சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் புல்லாங்குழலிலிருந்து வரும் ஒலியலைகளுடன் கலந்து அவன் இந்த உலகத்திலிருந்து விடை பெற்றுக்கொள்ளப் போகிறான் என்று அவனுக்குத் தெரியும். இந்தக் கஷ்டகாலத்தில், கஷ்டகாலம் ஏன், நல்ல காலந்தான் — அவன் தயாராகிக்கொண்டிருந்தான், யாருடைய காலடியில் உட்கார்ந்து இனி எப்போதும் குழலிசைக்கப் போகிறானோ, அவரிடம் செல்ல.

இப்படி ஒரு மனிதன் மரணத்துக்குத் தயாராகிக்கொண்டிருந்த போது வேறொருவர் ஒரு பழைய கால ஓலைச் சுவடியை வைத்துக்கொண்டு சண்டி மகாத்மியம் பாராயணம் செய்து கொண்டிருந்தார். 'ஜயம் தேஹி! யசோதா தேஹி!'

இந்த மனிதர் மகாளய அமாவாசையன்று சண்டீ மகாத்மியம்

பாராயணம் செய்யாமல் விஜயதசமியன்று – விசர்ஜனத்தன்று செய்வார். அவர் புலித்தோலின் மேல் பத்மாசனம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவருக்கு முன்னால் துர்க்கையின் சிலை. விசர்ஜனத்தைக் கொண்டாட வாத்தியங்கள் ஒலித்தன.

அவர் உரத்த குரலில் தேவியை இறைஞ்சினார்: 'ஹே, ஜகதம்பா! ஹே ஈஸ்வரி! என் பாவங்களை மன்னிச்சுடு, தாயே! நீ இன்னிக்குப் போயிடுவியே, அம்மா!' என்று சொல்லிடக் கை கூப்பிக்கொண்டு சிறு குழந்தையைப் போல் அழுதார். அழுது கொண்டே சண்டீ மகாத்மியத்தில் சும்ப நிசும்ப வதம் முதலிய வற்றைப் பாராயணம் செய்தார். தேவியின் சரீரத்திலிருந்து தேஜஸ் வெளிப்படுவது போல் உணர்ந்தார். அவரது உடல் சிலிர்த்தது. பாராயணம் செய்துகொண்டே அவர் தம்மையே கேட்டுக்கொண் டார், 'என்னப்பா பயந்துட்டியா?' என்று. அவர் தேவியை நோக்கிச் சொன்னார்: "அம்மா, நீ இப்போ மது அருந்து! சரி இப்போ உன் சரீரத்திலே சக்தி பிறந்துடுத்து, உன்னோட மூச்சுக் காததுலே ஆயிரக் கணக்கான தேவர்கள் பிறக்கிறாங்க! ஆனா மகிஷாசுரன் ...? அவங்களையெல்லாம் ஒரு முகூர்த்தத்தில் அழிச்சுட்டியே! தாயே, உனக்கு இப்படியா கஷ்டம் வரணும்? நீ அவனை உன்னோட மாயா பாசத்தாலே கட்டிவிடக் கூடாதா?"

இவ்வாறு உணர்ச்சியுடன் பேசிக்கொண்டே போனார் அவர். பல பக்தர்கள் அவருக்கு முன் உட்கார்ந்து கேட்டுக்கொண் டிருந்தார் கள். மண்டபததின் ஒரு மூலையில் தூண்மறைவில் நின்றுகொண்டு ஒரு சிறு பையன் ஆர்வத்துடன் கதை கேட்பதைக் கவனித்தார் அவர்.

அவர் அமலா கமலாவின் தாத்தா. இந்தப் பெரிய குடும்பத்தின் தலைவர் அவர். யாரும் அவருடைய வார்த்தையை மீறமுடியாது. அப்படிப்பட்டவர் தேவியின் முன்னிலையில் ஒரு சிறுகுழந்தை யாக மாறிவிடுவார். சிறு குழந்தை போல அழுவார். தேவியின் அருளை வேணடி, மன்னிப்பை வேண்டிக் கெஞ்சுவார். சண்டீ மகாத்மியத்தைச் சொல்லி வரும்போது தேவி கர்ஜிப்பதுபோல் அவரும் கர்ஜிப்பார். அந்தக் கர்ஜனையைக் கேட்டுச் சிரிப்பு வந்து விட்டது சோனுவுக்கு. "யாரது?" என்று கர்ஜித்தார் பெரியவர். சோனு ஓடிப் போய் விடலாமா என்று நினைத்தான். பெரியவருடைய சிவந்த கண்கள், கழுகின் அலகு போல் கூர்மையான நாசி, நெற்றியி லிருந்த சிவப்புச் சந்தனத் திலகம், காபாலிகனைப் போன்ற நடுங்க வைக்கும் முகம் — இவை அவனை ஸ்தம்பித்து நிற்கச் செய்து விட்டன. ஆனால், பெரியவரின் முகததில் கொஞ்சங் கொஞ்சமாக எப்படிப்பட்ட மாறுதல்! தன் கடுமை மறைந்து அதில் பரிவு,

தோன்றியது. "அடேட நீயா! தேவி மகிமையைக் கேட்கப் பிடிக்கிறதா உனக்கு?"

சோனு தலையை ஆட்டினான்.

"அப்படியானு இரு."

சோனு நின்றுகொண்டே கதையைத் தொடர்ந்து கேட்டான்.

சற்று நேரத்துக்குப் பிறகு தன்னைக் கமலா பின்னாலிருந்து கூப்பிடுவது தெரிந்தது. "சோனு, நீ இங்கே என்ன செய்யறே?" என்று கேட்டாள்.

தான் சண்டீ மாகாத்மியம் கேட்பதாக அவன் சொல்லவில்லை. அந்தக் காலத்து ரிஷிகள் தாங்கள் அறிந்த விஷயங்களையும் சொந்தக் கற்பனைகளையும் ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்துவிட்டுப் போய் விட்டார்கள். அவையெல்லாம் இப்போது தேவி மகிமையாகி விட்டன. இதெல்லாம் அவனுக்கு ஈசம் சொல்லும் கதை போலத் தோன்றியது. 'தண்ணீருக்குள்ளே ஒரு வெள்ளி மீன் இருக்கு; அதோட வாய்க்குள்ளே சூரியன் இருப்பான், அந்த மீன்தான் ஜாலாலியோ? அந்த மீன் சூரியனை வாயிலே கவ்விக்கிண்டு ஏரியைத் தாண்டி, ஆத்தைத் தாண்டிச் சமுத்திரத்துக்குள்ளே முழுகிடும். காலம்பர அது சூரியனைக் கிழக்குத திசையிலே தொங்க விட்டுட்டு மறுபடியும் தண்ணிக்குள்ளே முழுகிடும். சமுத்திரத்துக்குச் சமுத்திரம் திரியும அந்த மீன.'

'ரிஷிகள் எழுதியிருக்கிற கட்டுக்கதைகளைக் கேட்டுக்கிட்டிருக் கேன். எங்க ஈசம் இதை விட நலல நல்ல கதையெல்லாம் சொல்லு வானே!' என்று சொல்லத் தோனறியது அவனுக்கு. ஈசம் சொல்லும் கதைகளையெல்லாம் நோட்டில் எழுதி வைத்துக் கொள்ளலாமே என்று அவன் நினைத்தான். இப்போது தான் கேட்பது சண்டீ மகாத் மியமா, பழைய காலத்துக் கட்டுக் கதையா என்று தெளிவாகத் தெரியவில்லை அவனுக்கு. ஆகையால் அவன கமலாவுக்குப் பதில் சொலலவில்லை.

அவன் பதில் சொல்லாமலிருப்பதைப் பார்த்துவிட்டு, "யானை அஞ்சு மணிக்கு வரும். நாம அதில ஏறிக்கிண்டு தசரா பார்க்கப் போகலாம. நீயும் எங்களோடே வரணும்" என்றாள் கமலா.

சோனு அப்போது ஈசம் சொல்லிய கதைகளை நினைத்துக்கொண் டிருந்தான். ஜாலாலியின் உடல் ஏரியிலிருந்து எடுத்து வரப்பட்ட இரவை அவன் மனக்கண் பார்த்துக்கொண் டிருந்தது. பௌர்ணமி இரவு. குளிரில் பைத்தியக்காரப் பெரியப்பாவின் முகம் வெளுத்துப் போயிருந்தது நிலாவைப் போலவே இருந்தது அதன் நிறமும். இவ்வித நினைவுகளில் ஆழ்ந்திருந்ததால் கமலா சொல்லியது எதுவும் அவன் காதில் விழவில்லை.

"என்ன, நான் சொல்றது காதிலே விழுந்ததா?"

"என்ன சொன்னே?"

"யானே மேலே ஏறிக்கிண்டு தசரா பார்க்கப் போறேம். நீயும் எங்களோட வரியா?"

"வரேன்."

"கொஞ்சம் முன்னலேயே நீ எங்க ரூமுக்கு வந்துடு. உனக்குப் பவுடர் போட்டு அலங்காரம் பண்ணி விடறேம்."

சோனு பதில் பேசாமல் நடந்தான்.

"என்ன, மறக்கமாட்டியே?"

அவன் மறக்கமாட்டேன் என்று சொல்வதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தான். "வேற யார் யாரு வரப்போறுங்க?" என்று பிறகு கேட்டான்.

"நான், அக்கா, ஸோனு அக்கா, ரமா, பாச்சு."

"வேறே ஒருத்தரும் வரல்லியா?"

"வேறே யார் வராங்களோ. தெரியாது. நீ முன்னலே வந்துடு பவுடர் போட்டுக்க."

சோனு இதுவரை முகத்துக்குப் பவுடர் போட்டுக் கொண்டதில்லை. அவன் ஆண்பிள்ளை. ஆண் பிள்ளைகள் பவுடர் போட்டுக் கொள்ளும் வழக்கம் அந்த வீட்டில் இல்லை. சோனுவின் அம்மாவும் பெரியம்மாவும் எப்போதாவது தான் முகத்தில் பவுடர் தடவிக் கொள்வார்கள். ஆகையால் பவுடர் தடவிக் கொள்வதை அவன் பார்த்ததேயில்லை என்று சொல்லலாம். தூரததில் எங்காவது உறவினர் வீட்டுக்குப் போவதாயிருந்தால் குளிர்காலத்தில சோனுவின் முகத்தில் ஸ்நோ தடவி விட்டிருக்கிருள், அவனுடைய அம்மா. ஆனல் இப்போது குளிர்காலம் வருவதற்கு முன்பே அவன் முகததில் பவுடர் தடவிக் கொள்ளப் போகிருன். அதனல் அவன் முகம் இன்னும் அழகாக ஆகப்போகிறது - இதை நினைக்கும்போதே அவனுக்கு வெட்கம் வந்துவிட்டது.

"பெரியப்பா வரக் கூடாதா?"

"ஊஹூம்!"

"அவர் வரல்லேன்னு, நானும் வரல்லே!"

"நீ என்ன இப்படி இருக்கே, சோனு? சின்னவங்கதான் யானை மேலே போவாங்க. பெரியவங்க நடந்து போவாங்க. பாட்டி உன்னை எங்களோடே கூட்டிக்கிண்டு போகச் சொல்லியிருக்கா."

இவ்வாறு சொல்லிவிட்டு அவள் வேகமாக மாடிப்படிகளில் ஏறிப் போய்விட்டாள். மேலே அமலா நின்றுகொண் டிருந்தாள். "சோனுவைப் பார்த்தியா?" என்று அவள் கமலாவைக் கேட்டாள்.

"உம்."

"என்ன சொன்னுன்?''

''வரேன்னு சொன்னுன்.''

''சீக்கிரமே வந்துடு. பவுடர் போட்டு விடறேம்னு சொன்னியா?''

''எல்லாம் சொல்லிட்டேன். இருந்தாலும் நீ ..'' என்று மேலும் ஏதோ சொல்ல வந்த கமலா தன் தந்தை அந்தப் பக்கம் வருவதைக் கண்டு அப்படியே பேச்சை நிறுத்திவிட்டாள்.

கிராமத்தில் தங்கியிருக்கும் இந்தச் சில நாட்களுக்கு உடையிலும் நடத்தையிலும் அவர் முழுக்க முழுக்க வங்காளியாகவே இருப்பார். கல்கத்தாவுக்குத் திரும்பிப் போகிற அன்று மறுபடியும் துறையாக மாறிவிடுவார். வங்காளியில் பேசக்கூட மாட்டார். அப்போதான் அவர் தங்களுக்கு மிகவும் நெருங்கியவராகக் குழந்தைகளுக்குத் தோன்றும். அவர்கள் அவருடன் தாராளமாகப் பேசிப் பழகு வார்கள்.

தந்தையைப் பார்த்ததும் அவர்கள் அங்கிருந்து ஓடிவிடப் பார்த் தார்கள். இந்த நேரத்தில் அவர்கள் பூஜை மண்டபத்துக்கு வந்தது சரியில்லே. அவர்களேப் பார்த்தால் அப்பா அதட்டுவார். ஆகையால் அவர்கள் சோனுவைத் தேடிக்கொண்டு ஆபீஸ் கட்டிடத்துக்கு வரும்போதெல்லாம் திருட்டுத்தனமாக, ரகசியமாக வந்துவிட்டுப் போனுர்கள், அந்தப்புரத்தில் உள்ள வேலேக்காரி களுக்குக் கூடத் தெரியாமல். கண்ணுமூச்சி விளேயாட்டுப் போலத் தான். சோனுவைக் காணுவிட்டால் ஏமாற்றத்துடன் திரும்பி வருவார் கள் அவர்கள்.

அவர்களுடைய தந்தை வராந்தாவைக் கடந்து போய்க்கொண் டிருந்தார். அவர் தம் அறைக்குப் போய்க் கதவைச் சாத்திக்கொண்டு விடுவார். அவர் அறையில் இல்லாத சமயங்களில் அது பூட்டி யிருக்கும். அதில் பெரிய பெரிய அலமாரிகள், கண்ணுடி ஜன்னல் கள், அறைக் கதவுகளில் பல விசித்திர வேலேப்பாடுகள். கருங்காலி மரத்தால் செய்த பழங்காலக் கட்டில். எவ்வளவோ காலமாகக் காலியாகக் கிடந்தது, அந்தக் கட்டில். அவர் ஊருக்கு வந்தால் கட்டிலில் படுத்துக்கொள்ளாமல் வேறொரு பலகையில் படுத்துக் கொள்வார்.

வலப்பக்கத்து அறையில் பில்லியார்டு மேஜை. ஓய்வு நேரத்தில் அவர் தாம் மட்டும் சிவப்பு, நீலப் பந்துகளே வைத்துக்கொண்டு அதில் விளேயாடுவார். சுவரில் கோர்ட் உடையில் அவருடைய போட்டோ. அவர் கவர்னருடன் விருந்து சாப்பிடும் போட்டோ. அவர் லண்டனில் லிங்கன் ஹாலில் படித்துக்கொண் டிருந்தபோது எடுத்த போட்டோ; வெல்ஸைச் சேர்ந்த ஏதோ ஒரு கிராமத்தில் மனேவியுடன் எடுத்துக்கொண்ட போட்டோ.

அமலா கமலாவின் மாமா வீட்டுக்குப் போகும் வழியில் ஒரு கோட்டை இருக்கிறது. அந்தக் கோட்டையின் படமும் அந்த அறையில் இருந்தது. மாணவனாக இருந்தபோது எடுத்த போட்டோவில் உள்ள அவருடைய களையான முகத்தைப் பார்க்கப் பெண்கள் இருவரும் திருட்டுத்தனமாக அந்த அறைக்குள் நுழைவார்கள். தந்தையைப் பார்த்துவிட்டால் ஓட்டம் பிடிப்பார்கள்.

சோனுவுக்கு அந்த அறையைக் காட்டுவதாகச் சொல்லியிருந்தாள் அமலா. ஆனால் எப்படிக் காட்டுவது? சோனுவுக்குப் புத்தி கிடையாது; ரகசியமாகக் கூட்டிக்கொண்டு வந்து காட்டினால் பேசாமல் பார்த்துவிட்டுப் போகமாட்டான். அவர்கள் பேசுவதைக் கேட்டுச் சிரிப்பான். 'இது என்ன, அது என்ன?' என்று கேட்டுத் தொணதொணப்பான். 'இந்த நீல, சிவப்புப் பந்துகள் எதற்கு? எனக்கு ரெண்டு பந்து கொடு!' என்றெல்லாம் கேட்பான்.

இந்த மாதிரி பேசிக்கொண்டே தன்னை மறந்துவிடுவான். இப்படியிருந்தால் அகப்பட்டுக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. சோனுவை வைத்துக்கொண்டு ஒரு காரியம் செய்ய முடியாது. ஓடத் தெரியாது அவனுக்கு; வெகு சுலபமாக அகப்பட்டுக் கொண்டுவிடுவான்.

பூபேந்திரநாத்திடம், "நான் அமலா கமலாவோடே யானை மேலே ஏறிக்கிண்டு தசரா பார்க்கப் போறேன்" என்று கூறினான் சோனு.

தசமியன்று மாலை யானை வரும். ஜசீம் ஜரிகை வைத்துத் தைத்த உடை அணிந்திருப்பான். தலையில் ஜரிகைத் தொப்பி. ஜமீந்தார் வீட்டுக் குழந்தைகள் எல்லாரும் தசரா பார்க்கப் போவார்கள். யானையின் தும்பிக்கையில் வெள்ளைச் சந்தனத்தால் பூக்கள் வரைந்திருக்கும். நெற்றியிலும் உடலிலும் வெற்றிலை, பலவிதக் கொடிகள், நெற்கதிர், லக்ஷ்மியின் காலடிச் சின்னம் இவை தீட்டப் பட்டிருக்கும். அதன் கழுத்தில் கடப்ப மலர் மாலை.

அமலா கமலாவின் அப்பா புல்லாங்குழல் இசைக்க ஆரம்பித்ததும் யானை லாயத்திலிருந்து புறப்படும். நேரே அந்தப்புரத்து வாயிலுக்கு வரும். அப்போது வீட்டுப் பெண்கள் துர்க்கையின் சிலையிடம் பிரார்த்தனை செய்வார்கள். தேவியின் காலடியில் சிந்தூரத்தைக் கொட்டிவிட்டுப் பிறகு அதை எடுத்துச் சிமிழ்களில் போட்டு வைத்துக்கொள்வார்கள். இந்தச் சிந்தூரத்தை வருஷம் முழுதும் நெற்றியிலும் வகிட்டிலும் இட்டுக்கொள்வார்கள்.

அமலா கமலாவின் அப்பாவுக்காக அவர்களுடைய தந்தை ஒரு தங்கச் சிமிழில் சிந்தூரம் எடுத்துக்கொண்டு போவார், கல்கத்தாவுக்கு. அமலா கமலாவின் தாய் சிந்தூரம் அணிவதில்லை. அவள் கவுன் அணிந்துகொள்வாள். மாதாகோவிலுக்குப் போவாள்.

இருந்தாலும் அவள் இந்தச் சிந்தூரத்தை இட்டுக்கொள்ள வேண்டு மென்று வீட்டுப் பெண்களுக்கு - முக்கியமாக அமலா கமலாவின் பாட்டிக்கு - ஆசை. பாட்டி தேவியின் காலடியிலிருந்து மற்ற எல்லா நாட்டுப் பெண்களுக்காகவும் சிந்தூரம் எடுத்து வைப்பது போல் தன் இரண்டாவது நாட்டுப் பெண்ணுக்காகவும் எடுத்து வைப்பாள். தன் பிள்ளையிடம் அதைக் கொடுக்கும்போது ஒரு தடவையாவது அவருடைய மனைவி அதை இட்டுக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்துவாள். அவர் மெல்லச் சிரிப்பார். அப்புறம் இந்த யானைக் காகவும் சிந்தூரம் எடுத்து வைப்பார்கள். யானை இந்த வீட்டின் லக்ஷ்மி. சின்ன எஜமானியம்மாள், தசமியன்று தன்கையால் யானைக்குச் சிந்தூரம் இட்டுவிடுவாள். அதன் கழுதத்தில் ஜரிகை மாலை போட்டுவிடுவாள். அபபுறம் வாத்தியங்கள இசைக்கத் தொடங்கும். மத்தள இசை, விசர்ஜனத்தைக் குறிக்கும் வாத்திய ஒலி. குடும்பத்தைச் சேர்ந்த சிறுவர், சிறுமியர் யாவரும் தங்களை அலங்கரித்துக்கொண்டு யானையின் மேல் உட்காருவார்கள்.

நதிப் படுகையில் நாணற்காட்டுக்குப் பின் பொழுது சாயும் ஆகாயத்தில் தசமி சந்திரன். மத்தளமும், மிருதங்கமும் ஒலிக்கும். நதியில் தேவியின் சிலைகளைத் தாங்கிய படகுகள் வரிசை வரிசையாகப் போகும். வாத்தியங்களின் ஒலியும் வெளிச்சமும் இருளும் கண்ணாமூச்சி விளையாட்டுமாக எங்கும் ஒரே கோலா கலம். ஆகாய வானங்கள் வெடிக்கும், பல நிற ஒளிகள் ஆகாயத் துக்குச் சாயம் தீட்டும். விட்டுவிட்டுக் கேட்கும் குழலிசை அதன் சோகத் தொனி உலகமெங்கும் ஆட்சி செலுத்தும். இரண்டாவது இந்த இசை மூலம் தன் மனைவியின் காதலுக்காகத் தாம் ஏங்கு வதைக் குறிப்பிடுகிறாரோ ?

வழக்கம்போல் அன்றும் பூபேந்திரநாத் அதிகாலையிலேயே ஆற்றில் ஸதானம் செய்துவிட்டு வந்தார், தினம்போல் மயில் கூண்டு, புலிக்கூண்டு, மான்கள் இருக்குமிடம் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்துவிட்டு வந்தார். இந்த இடங்களெல்லாம் சுத்தமாக இருக்கின்றனவா என்று பார்ப்பது அவருடைய வேலையல்ல. இருந்தாலும் இந்த மாளிகையில் வளர்க்கப்படும் எல்லாப் பிராணி களின் சுகதுககங்களையும் கவனித்த அவற்றுக்குத் தேவையானதைச் செய்வார் அவர்.

இன்று தேவி இமாலயத்துக்குத் திரும்பிச் செல்லப் போகிறாள். ஒவ்வொரு தடவையும் ஏற்படுவது போல் இந்தத் தடவையும் காலைமுதல் ஒரு வேதனை அவரை ஆட்கொண்டிருந்தது. அவர் வழக்கம் போல் மண்டபத்துக்குப் போய் மகாதேவனின் சிலை

மேலும் எருதின் சங்கிலியை இழுத்து இழுத்து நூறுதடவை மணியடித்தார்.

காலேக்குக்கு உடல் நிலை சரியில்லை. குவீன்பாடாவிலிருந்து டாக்டர் வந்து பார்த்துவிட்டுப் போனார். பூஜையில் கலந்து கொண்ட புரோகிதர் முதலான பலர் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு போவதற்காக ஆபீஸ் கட்டிடத்தில் காத்துக்கொண் டிருந்தார்கள். முதல் நாள் மாலையில் வெட்டிய எருமையை எடுத்துச் சென்றவர்கள் இன்று புதுத் துணி வாங்கிக்கொள்வதற்காக வந்தார் கள். ஜமீந்தார் நிலத்தைக் குடியானவர்களிடையே வெள்ளாமைக் காகப் பிரித்துக் கொடுக்கும் சமயத்தில் சிலர் பூஜைக்கு ஆட்டுக் குட்டி, எருமை, பால், வாழை, தானியம் இவ்வாறு வெவ்வேறு பொருள்களைக் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனை செய்யப் பட்டிருந்தது. சம்பந்தப்பட்டவர்கள் அதன்படி சாமான்களைக் கொடுத்துவிட்டார்களா என்று பார்ப்பதும், கொடுக்காதவனைக் கூப்பிட்டு விசாரிப்பதும் பூபேந்திரநாத்தின் பொறுப்பு.

இந்த வேலைகளைக் கவனித்து முடிப்பதற்குள் நண்பகல் கழிந்து விட்டது. அவருக்கு இன்று ஒன்றும் பிடிக்கவில்லை. அவர் வருத்தத் துடன் வெகுநேரம் மௌனமாகத் தேவியின் சிலையருகே நின்றார். தேவியின் காலடியிலிருந்து அண்ணிக்காகவும் தன் மாமிக்காகவும் சிந்தூரம் எடுத்து வைத்துக்கொண்டார். மறுபடியும் இந்த வீடு வெறிச்சிட்டுப் போய்விடும். இந்தச் சில நாட்கள் எவ்வளவு கோலாகலமாக இருந்தது இந்த மாளிகை! இன்று யாருக்கும் அவசரம் இல்லை. மக்கள் ஏரிகரையில் திரண்டிருந்தார்கள்.

மாலையானதுமே ஜசீம் யானையின் முதுகிலேறி உட்கார்ந்து கொண்டான். அப்போது இரண்டாவது பாபு பட்டு வேஷ்டியும் பட்டுச் சட்டையும் அணிந்துகொண்டார், விரலில் வைரமோதிரம். கறுப்புநிறப் பூட்ஸ். அவர் தம் அறையிலிருந்து வெளியே வந்து மெதுவாக நடந்தார். அவருக்கு முன்னும் பின்னும் ஜமீன் உத்தியோ கஸ்தர்கள். எல்லாரிடமும் அத்தர் மணம் வீசியது. எல்லாருக்கும் முன்னால் பூபேந்திரநாத். அவருக்குப் பிறகு ரஷீத் பாபு. எல்லாருக்கும் கடைசியில் பாபுவின் சொந்த வேலையாள் ஹரிபத்.

அவர்கள் ஊர்வலம் போலத் தெற்கு வாயிலை நோக்கிப் போனார்கள். பூஜை மண்டபத்துக்கு வந்து சேர்ந்ததும் இரண்டாவது பாபு தேவிக்கு முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். பிறகு தேவியின் காலடியிலிருந்த வில்வத்தைக் கைநிறைய எடுத்துக்கொண்டார். பெரிய பெரிய தூண்களுக்குப் பின்னால் அவர்களுடைய உருவங்கள் மறைந்துவிட்டன. இப்போது தேவி தன்னைப் பார்க்கவில்லை, அவர்களைத்தான் பார்த்துக்கொண் டிருக்

கிருள் என்று சோனுவுக்குத் தோன்றியது. தேவியின் முகத்தில் என்ன நடுக்கம்? முகத்தில் பளபளப்பது வேர்வைத் துளிகளா? அவன் தேவிக்கு அருகில் போனுன், தேவி நிஜமாகவே அழுகிருளா என்று பார்க்க.

அவன் முதலில் தேவியின் சிம்ம வாகனத்தைத் தொட்டுப் பார்த்தான். எல்லாரும் அப்போது ஏரிகரையில் தங்களுக்கு இடம் பிடித்துக்கொண் டிருந்ததால் பூஜைமண்டபத்தில் யாரும் இல்லை. இந்தச் சமயத்தில் – நல்ல வேளையில் — தேவியையும், அசுரனையும், கணேசரின் காலடியில் ஒரு செடியின் மேல் உட்கார்ந்திருக்கும் சின்னப் பெருச்சாளியையும் தொட்டுப் பார்க்கலாம். அவன் சிங்கத்தின் வாய்க்குள் கையை விட்டான். அசுரனின் நெஞ்சிலிருந்து இவ்வளவு நாட்களாக வழிந்துகொண் டிருந்த ரத்தத்தைத் தொட்டுப் பார்த்தான். அது காய்ந்துபோயிருந்தது. சிங்கம் அசுரனுடைய உடலிலிருந்து தசையைக் குதறியெடுத்திருந்தது. ஏனே அவனுக்கு அசுரனிடம் பரிவு ஏற்பட்டது. அவன் அசுரனின் சுருட்டை மயிரை ஆதரவுடன் கையால் தடவிக் கொடுத்தான். "இதோ பார் வேடிக்கையை!" என்று சொல்லிக்கொண்டே அவன் சிங்கத்தின் கண்ணைக் கிள்ளிவிட்டான். சிங்கத்தின் கண்ணில் பூசியிருந்த வர்ணம் நகத்தில் வந்துவிட்டது. தேவியின் மகிமை காரணமாகச் சிங்கத்துக்குச் சோனுவிடம் பயம் ஏற்படவில்லை. அவன் ஓரக்கண்ணுல் தேவியைப் பார்த்தான். தேவியின் கண்களிலிருந்து நீர் சொட்டியது.

"உனக்கு இங்கேயிருந்து போக அவ்வளவு வருத்தமாயிருந்தால் ஏன் போகணும்? இங்கேயே இருந்துடலாமே!" என்று தேவியிடம் கூற விரும்பினுன். ஆனுல் கூடவே ஒரு பயம், அருகில் போனுல் தேவிக்குக் கோபம் வந்துவிடுமோ என்று. ஆனுல் தேவியின் கண்களில் பரிவு தெரிந்தது.

'உனக்கு ஏன் இந்த வாகனம்? நான் இதோட மூக்கிலே குச்சியை நுழைச்சுக் குறுகுறுப்பு உண்டாக்கறேன், பாரு!' அவன் ஒரு குச்சியை எடுத்துச் சிங்கத்தின் மூக்குக்கருகில் கொண்டு போனதும்... ஒரு தும்மல்! பக்கத்தில் யாரும் இல்லை. தும்மியது யார்? நிஜமாகவே சிங்கந்தான் தும்மியதா? அவன் பயந்துபோய் அங்கிருந்து ஓட முயன்றபோது வாயிற்படியில் பைத்தியக்காரப் பெரியப்பா நிற்பதைப் பார்ததான். அவர்தான் தும்மியிருப்பார். பைத்தியக்காரர்களுக்கு ஜலதோஷம் ஏற்படுவதில்லை. இப்போது பெரியப்பா தும்மியதைப் பார்த்து அவர் குணமாகிக்கொண்டு வருகிருரென்று நினைத்தான் சோனு. அவன் அவருடைய கையைப் பிடித்துக்

கொண்டு, "நான் யானை மேலே ஏறி ஆத்தங்கரைக்குப் போகப் போறேன்" என்றான்.

ஏரிக்கரையில் அப்போது குழல் இசைத்துக் கொண்டிருந்தார், இரண்டாவது பாபு. நேரமாகிவிட்டது என்று சோனுவுக்குத் தோன்றவே அவன் பெரியப்பாவை விட்டுவிட்டு ஆபீஸ் கட்டிடத்துக்கு வேகமாக ஓடினான். சீக்கிரம் உடை மாற்றிக்கொள்ள வேண்டும்!

சிலைகளை விசர்ஜனத்துக்காகத் தூக்கிக்கொண்டு போக வந்தவர்கள் பூஜை மண்டபத்தில் துண்டுகளை இடுப்பில் கட்டிக்கொண்டார்கள். பிறகு சிலைகளைத் தோளில் வைத்துத் தூக்கிக்கொண்டு வெளியே வந்தார்கள். ராம்சுந்தர் குடத்தைத் தலைக்குமேல் வைத்துக் கொண்டு சென்றான். சிலைகளை ஆற்றுப்படுகையில் இறக்கித் தூப தீபாராதனைகள் செய்வார்கள். சோனுவின் அண்ணாக்கள் அந்த ஊர்வலத்தில் நடனமாடிக்கொண்டே செல்வார்கள். அவனால் அவர்களோடு போக முடியாது. அவன் யானை மேல் போகப் போகிறான். அமலா கமலா அவனுக்காகக் காத்திருப்பார்கள்.

பூபேந்திரநாத் சோனுவுக்கு உடைகளை மாற்றிவிட்டார்; தலையையும் வாரிவிட்டார். அவனுக்கு ஒரே அவசரம். எல்லோரும் போய்க்கொண்டிருந்தார்கள். அவனுக்கு நேரமாகிவிட்டது.

இப்போது வெயில் போய்விட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் சவுக்கு மரங்களுக்கடியில் உட்கார்ந்துகொண்டு ஆர்வத்துடன் குழலிசையை அநுபவித்துக்கொண்டிருந்தார்கள். எவ்வளவு பேர் அங்கே கூடியிருக்கிறார்கள் என்று எண்ணித் தொலையாது.

குதிரை லாயத்துக்குப் பக்கத்தில் இருக்கும் மனிதனின் அந்தியக் காலம் நெருங்கிவிட்டது. அவன் தன்னிரு கைகளையும் ஒன்று சேர்த்துத் தன் நெஞ்சின்மேல் வைத்துக்கொண்டு மெய்ம்மறந்து குழலிசையில் லயித்திருந்தான். மல்லாந்து படுத்திருந்தான் அவன். முன்பு தெருக்களிலும் சந்தைகளிலும் குழல் வாசித்தபோது ஆடுவதுபோல் இப்போதும் உடம்பை அசைத்தான் கடைசித் தடவையாக, மானசீகமாக இரண்டாவது பாபுவுடன் குழல் இசைத்தான் அவன்.

ஆஸ்வின் மாதத்தின் இந்த மாலை நேரத்தில் அவன் குழலிசைக்காவிட்டால் வேறு யார் இசைப்பார்கள்? அவன் உண்மையிலேயே குழலிசைக்கும் நினைவில் கைகளை உயர்த்தினான். அதன்பின் அந்தக் கைகள் வலுவிழந்து அவனது நெஞ்சின் மேல் விழுந்தன. அவனது கண்கள் மூடியிருந்தன. அவனுக்கு உலகத்தில் சொந்தமானது எதுவும் இல்லை—இரண்டு குதிரைகள். ஒரு கோச்சு வண்டி, ஒரு புல்லாங்குழல். இவற்றைத் தவிர, இரண்டாவது பாபு இல்லாத

சமயங்களில் அவன் நள்ளிரவில் யாருமறியாமல் ஆற்றுப்படுகையில் தன்னந்தனியாக உட்கார்ந்துகொண்டு குழல் இசைப்பதுண்டு. அப்போது வெவ்வேறு ராகங்கள் இசைப்பான். அந்தக் கானத்தில் தன்னை மறந்துவிடுவான் அவன். அவ்வாறே இன்றும் அவன் குழலிசையில் லயித்துப் போய் விட்டான். ஏரிகரை, சீதலக்ஷாவின் படுகை, மைதானம் எல்லாமே அந்த இசையொலியில் கதறின. அவன் கண்ணை மூடிக்கொண்டு, இரண்டாவது பாபுவின் குழலிசையைக் கேட்டவாறே, 'அல்லா ஒருவரே! அவருக்கு ஈடு இணை கிடையாது. இணை கிடையாது, கிடையாது!' என்று முனகினான். அவனால் மூச்சுவிட முடியவில்லை. பொறுக்கவியலாத ஒரு வேதனை அவனை உள்ளூற வாட்டியது. அவனுடைய கைகள் தொய்ந்து போய்க் கீழே விழுந்தன.

ஆஸ்வின் மாதத்தின் ஒரு மாலை நேரம் இவ்விதம் கழிந்து கொண்டிருந்தது, யாரும் கவனியாமலே.

சோனா வேகமாக ஓடினான். யானை அந்தப்புர வாசலுக்கு வந்திருக்கும். ஜசீம் யானையின் மேல் உட்கார்ந்துகொண்டு அவனுக்காகக் காத்திருப்பான். எல்லாரும் காத்திருப்பார்கள். யானை அவனைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கும். குழலிசை கேட்டது. ஏரிகரையில் ஆயிரக்கணக்கான மனிதர்கள். பலவகை வண்ணங்கள் நிறைந்த திருவிழா. இப்ராகிம் யந்திர அறையில் உட்கார்ந்திருந்தான்; சரியான நேரத்தில் விளக்குகளை ஏற்றிவிட்டான்.

பைத்தியக்காரப் பெரியப்பாவைத் தேடப் போனதில் சோனாவுக்கு நேரமாகிவிட்டது. பெரியப்பா தனியாக வேடிக்கை பார்க்கப் போகவேண்டாம், தானும் அவருடன் போகலாம் என்று நினைத்திருந்தான் அவன். அவன் யானை மேல் சவாரி செய்யப் போவதில்லை. அவர்கள் இருவரும் தசரா வேடிக்கை பார்த்துவிட்டு லட்டு வாங்கித் தின்றுகொண்டே திரும்பலாம். ஆனால் பெரியப்பாவை அந்தக் கூட்டத்தில் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவேதான் அவன் திரும்பிவிட்டான். சூரியன் மறைந்துகொண்டிருந்தான். யானை அந்தப்புர வாயிலில் நின்று தும்பிக்கையையும் காதுகளையும் ஆட்டியது.

அமலாவுக்கும் கமலாவுக்கும் எரிச்சலாக இருந்தது. அவர்கள் ஜசீமைப் புறப்படாமல் நிற்க வைத்திருந்தார்கள். சோனா வேகமாக ஓடி ஆபீஸ் கட்டிடத்தைக் கடந்து, தர்வான்களின் இருப்பிடத்தைத் தாண்டி, பூஜை மண்டபத்தை அடைந்ததும் சற்று நின்று பெருமூச்சு விட்டான். பையிலிருந்த நாணயங்கள் பத்திரமாக இருக்கின்றனவா என்று பார்த்துக்கொண்டான். அவனிடம் பதினான்கு புத்தம் புதிய காலணாக் காசுகள் இருந்தன. அந்த

வீட்டு நாட்டுப் பெண்கள் ஒவ்வொருவரும் குழந்தைகளுக்கு ஒவ்வொரு காலணு கொடுத்தார்கள். சோனு தன் பங்கோடு பெரியப்பாவின் பங்கையும் கேட்டு வாங்கிக்கொண்டு அவரு டைய பங்கை ஒரு பையில் தனியாகப் போட்டு வைத்திருந்தான்.

திருவிழாப் பார்த்த பிறகு அவன் பெரியப்பாவின் பங்கை அவருடைய பையில் போட்டுவிடுவான். ஆனல் அவனல் பெரியப்பாவைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவரைத் தேடப் போய்த்தான் அவனுக்கு நேரமாகிவிட்டது. அவன் வராந்தா வழியாகச் சமையலறையைக் கடந்து போனன். இந்த வழியில் போனல் அவன் சீக்கிரம் வடக்கு வாசலுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம்.

அமலாவும் கமலாவும் அவனுக்குப் பவுடர் பூசிவிடுவதாகச் சொல்லியிருந்தார்கள். இந்தப் பெரியப்பா ரொம்ப மோசம் அவரால்தான் அவனுக்குப் பவுடர் பூசிக்கொள்ள முடியாமல் போய் விட்டது !

அழுகை அழுகையாக வந்தது அவனுக்கு. அவர்கள் எல்லாரும் இப்போது வடக்கு வாசலில் இருப்பார்கள். அமலாவும் கமலாவும் அவர்களுடைய அறையில் இருக்கமாட்டார்கள். அவன் வேகமாக ஓடினன். வடக்கு வாயிலை அவன் அடைந்தபோது அங்கு ஒரு வரையும் காணேம். யானையும் இல்லை, ஜரீமும் இல்லை, அமலா - கமலாவும் இல்லை. வீட்டில் எல்லா விளக்குகளும் எரிந்துகொண் டிருந்தன. எல்லாரும் அவனை விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். தன்னந்தனியாக இப்போது அவன் என்ன செய்வது?

இருந்தாலும் ஒரு தடவை அமலா கமலாவின் அறைக்குப் போய்ப் பார்க்க வேண்டும். வீட்டு வேலைக்காரிகளைக் கூடக் காணேமே! அவர்கள் எங்கே போய்விட்டார்கள்? அவன் படிகளில் வேகமாக ஏறி மாடிக்குப் போனன். ஓரிரண்டு அந்நிய முகங்களைத் தவிர வேறு யாரும் அங்கு இல்லை. யாரும் அவனுடன் பேசவில்லை. அவனுக்குப் பயமாக இருந்தது. எப்படியாவது அமலா கமலாவின் அறைக்குப் போய்விடவேண்டும். அவர்கள் அவனை விட்டுவிட்டுத் திருவிழாப் பார்க்க போயிருக்க மாட்டார்கள். இந்தச் சமயத்தில் திடீரென்று அந்த மாளிகையின் விளக்குகள் எல்லாம் அணைந்து விட்டன. இவ்வளவு லஸ்தர் விளக்குகளும் அலங்காரங்களும் இருட்டில் மறைந்துவிட்டன. ஏரிகரையில் குழலிசை ஒலிக்கவில்லை. கூண்டிலிருந்த மைனு மட்டும் இருட்டில் கூவியது: "சோனு, நீ எங்கே போறே?... இருட்டு, ஒரே இருட்டு."

இப்படிப்பட்ட கும்மிருட்டை இதுவரை பார்த்ததே இல்லை அவன். ஒரு முழத் தூரத்திலுள்ள ஆளைக்கூடப் பார்க்க முடியாதபடி அவ்

-வளவு இருட்டு. மனிதர்கள் நிழல்கள் போல் இங்குமங்கும் ஓடுவது தெரிந்தது. யாரோ வேகமாக அவனைத் தாண்டிப் போனார்கள். அவன் பயந்துகொண்டே, "அமலா" என்று கூப்பிட்டான்.

இருட்டில் ஒரு முரட்டுக் கை வந்து அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "யாரைக் கூப்பிடறே?" என்று கேட்டது.

"அமலா!"

"நீ யாரு?"

"நான் சோனு."

"எங்கே போகணும் உனக்கு?"

"அமலாகிட்டே, அவங்க என்னைத் தசரா பார்க்கக் கூட்டிண்டு போறதாச் சொல்லியிருக்காங்க. கமலா என் மூஞ்சியிலே பவுடர் பூசிவிடறேன்னு சொல்லியிருக்கா."

"நீ அவங்க அறைக்குப் போகக்கூடாது. யாரும் போகக்கூடாது."

"நான் போகத்தான் போவேன்."

"கூடாது."

அந்தக் கை யாருடையதென்று சோனுவுக்குத் தெரியவில்லை. ஆனால் அது ஒரு பெண்பிள்ளையுடையது என்று மட்டும் புரிந்தது. பிருந்தாவனியாக இருக்கலாம். பயத்தால் ஒன்றும் புரியாதவனாக அவன் கம்பிக் கிராதியைப் பிடித்துக்கொண்டு நின்றான். யாராவது அவனை ஆபீஸ் கட்டிடத்துக்குக் கொண்டுபோய் விட்டுவிட்டால் நல்லது.

மாடிப்படியில் ஒரு விளக்குத் தெரிந்தது. இருட்டில் நின்றிருந்த அவனுக்கு இரண்டாவது பாபு படியிலேறி வருவது தெரிந்தது. அவருக்கு முன்னால் அவருடைய வேலைக்காரன் ஹரிபத். அங்கிருந்து ஓடிவிடத் தோன்றியது சோனுவுக்கு.

இரண்டாவது பாபுவைப் பிடித்துக்கொண்டு அழைத்து வந்தார்கள். அவர் முகத்தில் வேதனை. சோனுவுக்கு ஆச்சரியம். சற்றுநேரம் முன்புதானே அவர் மேடையில் உட்கார்ந்து புல்லாங்குழல் வாசித்துக்கொண் டிருந்தார்! இப்போது அவரைப் பார்த்தால் அவருடைய உயிரே சோர்ந்து போய்விட்டது போல் தோன்றியது. சோனுவின் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. அமலா கமலாவுக்கு ஒன்றும் ஆகிவிடவில்லையே? அவர்களுடைய அறை உட்புறத்தில் தாழிடப்பட்டிருந்தது. அறைக்குள் அமலாவும் கமலாவும் விம்மி விம்மி அழுவதாகத் தோன்றியது.

யானை தனியே அந்த இருண்ட மாளிகையிலிருந்து திரும்பிச் சென்றது. யாரும் தசரா பார்க்கப் போகவில்லை. ஏதோ கெட்ட செய்தி கிடைத்திருந்தது போலும், இந்தக் குடும்பத்துக்கு. அது

என்ன என்று யாருக்கும் சொல்லத் தெரியவில்லை. மிகவும் நெருங்கிய சிலருக்கு விஷயம் தெரிந்திருக்கலாம். அவர்களில் பூபேந்திரநாத்தும் ஒருவர். அவர் வேகமாக நடந்து போய்க்கொண்டிருந்தார். மாளிகையிலிருந்த எல்லாமே விசர்ஜனமாகிவிட்டது போலும்! ஒரு நிர்ஜனமான பொட்டலில் நடப்பதுபோல் இருந்தது அவருக்கு.

சோனு அடம் பிடித்தான், "நான் அமலாகிட்டே போகப் போறேன்" என்று.

''ஊஹூம், கூடாது!'' என்று பிருந்தாவனி சொன்னாள்.

சோனு வெளியே வந்து அமலாவின் அறையின் ஜன்னலுக்கு எதிரில் திறந்த வெளியில் உட்கார்ந்துகொண்டான். விளக்கு வந்ததும் அவர்கள் ஜன்னல் வழியே அவனைப் பார்க்கலாம். அவ்விரு பெண்களும் ஏனோ அவனைக் கவர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு ஏதோ நேர்ந்திருக்கிறது; அது என்னவென்று தெரியாமல் அவன் அங்கிருந்து நகரப் போவதில்லை.

அப்போது யானை இருட்டில் மரங்களின் வழியே போய்க்கொண்டிருந்தது. யந்திர அறையில் ஒரு டார்ச்சைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான் இப்ராகிம். ஆற்றங்கரையில் நடந்து போன யானையின் காதுகள் அடித்துக்கொள்ளும் அரவம் மிதந்து வந்தது.

எங்கிருந்தோ பிரதிமை விசர்ஜன அரவங்கள் கேட்டன. பைத்தியக்காரப் பெரியப்பா எங்கே போனாரோ, தெரியவில்லை. யாருக்காகவும் ஒன்றும் வாங்கித் தர முடியவில்லை சோனுவால். அவனுடைய இரண்டு பைகளிலும் பளபளக்கும் செம்புக் காசுகள் இருந்தன. மேலே அமலா அறையின் ஜன்னல் மூடிக் கிடந்தது.

ஆற்றில் கடைசிப் பிரதிமை விசர்ஜனமாகி விட்டது. ஆற்றங்கரையில் வெளிச்சம், தூபங்கள், மத்தள ஒலி எல்லாமே நின்றுவிட்டன. ஓர் இடத்திலும் வெளிச்சம் இல்லை. எங்கும் ஒரே இருட்டு. மேலே நிர்மலமான ஆகாயத்தில் ஆயிரக்கணக்கான நட்சத்திரங்களின் ஒளி உலகத்தின் நலத்தைக் காப்பாற்ற முயற்சி செய்தது. ஜன்னலைத் திறந்துவிட்டால் சோனு, அமலா கமலாவுக்கு ஏதாவது உதவி செய்யலாம். அவன் அவர்களுடைய முகத்தைப் பார்ப்பதற்காக, முழங்கால்களுக்கு நடுவில் தலையை வைத்துக்கொண்டு புல்லின் மேல் உட்கார்ந்திருந்தான்.

விசர்ஜனத்துக்குப் பிறகுதான் பூபேந்திரநாத்துக்குச் சோனுவின் நினைவு வந்தது. அவன் எங்கே? எல்லாரும் அவனை இருட்டில் தேடினார்கள். கடைசியில் ராம்சுந்தர்தான் சோனு வீட்டு வராந்

தாவை ஒட்டிய திறந்த வெளியில் தூங்கிக்கொண் டிருப்பதைக் கவனித்தான்.

காலையில் அந்தப்புரத்திலிருந்து சோனுவுக்கு ஒரு கடிதம் கிடைத்தது. "நாங்க விடியற்காலை ஸ்டீமர்லே கல்கத்தாவுக்குத் திரும்பிப் போறோம். உன்னைச் சந்திக்க முடியாமே போயிடுத்து!"

அவன் ஆபீஸ் கட்டிடத்தின் வாயிற்படியில் தனிமையில் மௌனமாக உட்கார்ந்திருந்தான். அவனுக்கு இன்று ஒன்றும் பிடிக்கவில்லை. நதிப்படுகையில் நாணற்காட்டில் யாரோ திருட்டுத் தனமாகப் புல்லாங்குழல் இசைப்பதாக அவனுக்குத் தோன்றியது.

இப்போது ஊர் திரும்பும் படலம். ஈசம காலையில் சீக்கிரமே சமையல் செய்து சாப்பாட்டை முடித்துக்கொண்டு விட்டான். படகின மேல்தட்டில் தண்ணீரை ஊற்றி நன்ருகக் கழுவினுன். படகின முன்பகுதியில் தண்ணீர் தேங்கியிருந்தது. அதை வடித்துப் படகின் பளுவைக் குறைத்தான். படகின் பாய் கிழிந்திருந்த இடங்களை முந்தின நாள் தான் ஊசி நூலால் தைத்துச் சரி செய்திருந்தான் படகைச் செலுததுவதில் ஒரு சிரமம் இல்லாமல் இருபபதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்தான். அவன் கயிறுகளைச் சரிபார்த்துக்கொண டிருந்தபோது இரண்டாவது எசமான் வருவதைக் கண்டான். அவருக்குப் பின்னுல் சோனு, லால்ட்டு, பல்ட்டு, பைத்தியக்கார எஜமான், கடைசியில் நாய்.

ஸ்டீமர்த் துறையில் இப்போது நல்ல கூட்டம். பூஜை விடுமுறையைக் கழித்தவர்கள் திரும்பிப் போய்க்கொண்டிருந்தார்கள். இந்தக் கிராமமே ஒரு பட்டணம் போலததான். உயர்நிலைப்பள்ளி, தபால் ஆபீஸ், கடை வீதி, சந்தை, ஆனந்தமயீக் காளிகோவில், ஜமீந்தார்களின் மாளிகைகள் எல்லாம் இருந்தன. பூஜை நாட்கள் விமரிசையாகத்தான் கழிந்தன. அப்புறம் பூஜைக்கு வந்தவர்களில் சிலர் டாக்கா போவார்கள். சிலர் கல்கததா போவார்கள். மக்களில் பெரும் பகுதி போனதும் ஊர் வெறிச்சிட்டுவிடும்.

எல்லாம் வெறிச்சிட்டுப் போனது போல்தான் இருந்தது பூபேந்திரநாத்துக்கு. உறவினர்கள் ஊர் திரும்பினுர்கள். அதிகாலையிலேயே சாப்பிட்டு விட்டார்கள் அவர்கள். கரையில் நின்றுகொண்டு அவர்களுக்கு விடை கொடுத்தார் அவர். சீதலக்ஷா

ஆற்றில் படகுகள் கண் பார்வையிலிருந்து மறையும் வரையில் அவர் கரையிலேயே நின்றுகொண்டிருந்தார். ஏனோ அவருக்கு இந்த நேரத்தில் ஆபீஸ் கட்டிடத்துக்குத் திரும்பிச் செல்லப் பிடிக்க வில்லை. அவர் காளிகோவிலை நோக்கி நடந்தார். பேசாமல் கோவிலில் உட்கார்ந்துகொண்டு தேவிதரிசனம் செய்ய விரும்பினார். புரோகிதர் காலு சக்கரவர்த்தியைப் பார்த்துச் சுகம் விசாரித்த மாதிரியும் இருக்கும். வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு அந்த இடிந்துபோன, பாசி பிடித்த, கோட்டை போன்ற பழங்கட்டிடத்தில் கோவிலின் உருவ ஒற்றுமை ஏதாவது தெரி கிறதா என்றும் பார்க்கலாம்.

மௌல்வி சாயபுவுக்கு என்ன தைரியம்? இங்கே மக்களைக் கூட்டிக்கொண்டு வந்து தொழுகை நடத்தப் போகிறாராம்! ஆட்டுப் பலி கொடுக்கப் போகிறாராம்! அப்படியெல்லாம் செய்தால் கலகந்தான் வரும். பூபேந்திரநாத் தமக்குள் சொல்லிக் கொண்டார். "தேவி! வெட்டப்பட்ட தலைகளை மாலையாக அணிந்தவளே! நீ எங்களுக்குச் சக்தியைக் கொடு, அம்மா!"

அவருடைய மனக்கண்ணால் ஒரு தர்மயுத்தக் காட்சி தோன்றியது. ஆனந்தமயீ காளி தன் சரீரத்திலிருந்து ஆயிரக் கணக்கான வீரர்களைத் தோற்றுவிப்பாள், இன்னொரு மகிஷாசுர வதத்துக்காக! பூபேந்திரநாத் தமக்குள் சிரித்துக்கொண்டார். ஏளனப் புன்னகை தோன்றியது அவருடைய முகத்தில். போலீஸ் ஸ்டேஷனிலுள்ள ஹெட்கான்ஸ்டபிள், பட்டணத்திலுள்ள போலீஸ் துரை மாஜிஸ்டிரேட் உள்பட எல்லாரும் பாபுக்களின் கையில். அவர்கள் ஒரு தந்தி கொடுத்துவிட்டால் ஒரு ஸ்டீமர் நிறையப் போலீஸ் வந்துவிடும். இந்தக் கலகக்காரர்கள் என்ன செய்ய முடியும்? உள்ளூற அவருக்கு ஏற்பட்ட உணர்ச்சி வேகத்தில் அவர் தமக்குத் தாமே பேசத் தொடங்கிவிட்டார். தாம் ஒரு போர்க்களத்தில் நடந்துகொண் டிருப்பதாக அவருக்கு நினைப்பு.

சுக்கானைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்த ஈசம் சோனாவைக் கேட்டான். "என்ன எசமான், மூஞ்சி ஏன் சுரத்தாயில்லே?"

ஈசம் தன் முகத்தைப் பார்க்காதவாறு திரும்பிக்கொண்டான் சோனா.

"கவலைப்படாதீங்க. நேரே துறையிலே கொண்டுபோய் நிறுத் தறேன் படகை. அம்மா அங்கே வந்து காத்துக்கிட்டு இருப்பாங்க. நீங்க இறங்கினதும் உங்களைத் தூக்கி மடியிலே வச்சுக்குவாங்க."

பைத்தியக்கார மனிதர் படகின் முனையில் உட்கார்ந்திருந்தார். அவர் தலைக்கு மேல் வெயில். ஈசம் மீண்டும் மீண்டும் அவரை உள்ளே போய் உட்காரச் சொல்லியும் அவர் கேட்கவில்லை. பத்மா

சனம் போட்டுக்கொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தார் அவர். வெயிலில் அவர் முகம் சிவந்துவிட்டது. சோனுவுக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. அவன் வீடு திரும்புகிறுன். அமலாவும் கமலாவும் அவனை விட்டுவிட்டு எவ்வளவோ தொலைவுக்குப் போய்விட்டார் கள். எந்த முகத்தோடு அம்மாவைப் பார்ப்பான் அவன்? ஒரு பாவத்தைச் செய்துவிட்ட உணர்வு அவனை உறுத்தியது. அமலா கமலாவின் அழுகையைக் கேட்டதிலிருந்து அந்த உணர்வு இன்னும் தீவிரமாகிவிட்டது. "நீ பண்ணினது பாவம்!" என்று யாரோ சொல்வதுபோல் இருந்தது அவனுக்கு. மௌனமாகப் படகில் உட்கார்ந்திருந்தான் அவன்,

துறைக்குப் படகு வரும் அரவம் கேட்டுத் தனமாமி ஓடிவந் தாள். பெரிய மாமியும் வந்தாள். அவர்களுக்கு முன்னுலேயே செய்தி கிடைத்திருந்தது, பைத்தியக்கார மனிதர் நீந்தியும் நடந்தும் மூடா பாடா போய்விட்டது பற்றி. சோனுவுடன் அவரும் திரும்பி வருவாரென்று அவர்களுக்குத தெரியும்.

படகிலிருந்து இறங்கியதும் சோனு தாயைக் கட்டிக்கொண்டான். உடனே அவனது மனச் சுமை முற்றும் மறைந்துவிட்டது.

"சோனு, நீ அம்மாவுக்காக அழலியே?" என்று பெரிய மாமி கேட்டாள்.

இல்லை என்பதற்கடையாளமாகத் தலையை ஆட்டினுன் சோனு.

"இல்லே. நீ அழுதிருக்கே. உன் மூஞ்சியைப் பார்த்தாலே தெரியறதே. லாஸ்ட்டு, சோனு அழுதானு இல்லையா?"

"இல்லெ, பெரியம்மா."

"சரிதான். இனிமேல் நீயும் உன் பெரியப்பா மாதிரி ஆயிடுவே. எங்கே வேணுமானுலும் சுத்துவே! யாரையும் நினைக்கமாட்டே."

இவ்வாறு மறைமுகமாகத் தன் கணவனைக் குததிக் காட்டினுள் பெரிய மாமி. அவளுடைய குத்தலைப் புரிந்துகொண்டு அவர் அவளைப் பார்த்தார்.

"வாங்க!" ஆனுல் அவள் சொல்ல விரும்பியது: 'நீங்க எங்கே யாவது போயிட்டா எனக்குப் பயமா இருக்கு, கஷ்டமா இருக்கு. உங்களை விட்டால் எனக்கு வேறே யாரு கதி?" என்பதுதான்.

உலகத்தையே ஜயித்துவிட்டு வந்த உணர்வு ஏற்பட்டது சோனுவுக்கு. எவ்வளவு புதிய அநுபவங்கள்! மான், மயில், பயாஸ்கோப் ஆகியவற்றைப்பற்றியெல்லாம் யாரிடமாவது சொல்லா விட்டால் அவனுக்கு நிம்மதி இருக்காது. முதலில் மாலதி அத்தை யிடம் பயாஸ்கோப்பைக் காண்பிக்க வேண்டும். பாதிமா வந்தால் அவளிடமும் காண்பிக்க வேண்டும்.

நீண்ட காலத்துக்குப் பிறகு ஊர் திரும்பியிருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது அவனுக்கு. எல்லாரையும் சந்திக்கத் துடித தான். வீட்டுக்குள் நுழைந்ததும் தாத்தா, பாட்டிக்கு நமஸ்காரம் செய்தான். அவன் தாழ்வாரத்துக்கு வந்ததும், ''டிரஸ் மாத்திக்கிண்டு சாப்பிட வா, சோனு'' என்று அழைத்தாள் பெரிய மாமி.

எவ்வளவோ நேரத்துக்கு முன்னுல் சாப்பிட்டது. ஆகையால் நியாயப்படி இப்போது நல்ல பசியிருக்க வேண்டும் அவனுக்கு. ஆனுல் அவன் பெரிய மாமியின் வார்த்தையைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அவர்கள் கைகால்களைக் கழுவிக்கொண்டு வந்தால் பெரிய மாமி அவர்களுக்குச் சாப்பாடு போடுவாள், ஆனுல் யாருமே சாப்பிட வரவில்லை.

சோனு குளக்கரைக்கு ஓடிப் போய் மருத மரத்தடியில் நின்ருன. அங்கிருந்து பார்த்தால் சோபா ஆபுவின் வீடு தெரியும். அவன முழங்கால் அளவு தண்ணீரில் நடந்து அங்கே போய்ச் சேர்ந்தான. வீடு வெறிச்சென்று கிடந்தது. வீட்டில் நரேன்தாஸ் இல்லை, சோபா ஆபு இல்லை. அவர்களுடைய அம்மாவும் இல்லை. மாலதி அத்தை யையும் காணவில்லை. யாரோ நெசவு அறையில் புகையிலை நறுக்கி கொண்டிருப்பது தெரிந்தது.

அந்த வீடே பேய் வாழும் இடமாகத் தோன்றியது சோனு வுக்கு. வீட்டில் யாருமே இல்லை. சூரியன் அஸ்தமித்து விட்டான. அறைகள் எல்லாம் காலியாகக் கிடந்தன. அவன் பயந்து போய் அங்கிருந்து ஓட யத்தனித்தபோது மாலதி அத்தை ஒரு பிட்கில மரத்தடியில் நிற்பதைக் கண்டான். தனியாக நின்று அவள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

அவன் அவள் அருகில் சென்ருன். வேறு நாட்களில் மாலதி அத்தை அவனை அப்படியே கட்டிப்பிடித்துக் கொள்வாள். ஆனுல் இன்று அவளுடைய கண்கள் உணர்ச்சியற்று இருந்தன. தலை பின்னிக் கொள்ளவில்லை அவள். முகத்திலும் எவ்வித உணர்ச்சியு மில்லை. தன்னுடைய உடம்பில் ஏதோ ஓர் அசுத்தம் புகுந்து விட்டாற் போலவும் அதை வெளியேற்றித் தன்னைச் சுத்தப்படுத்திக கொள்ள முயற்சி செய்பவள் போலவும் அவள் அடிக்கடி எச்சிலை உமிழ்ந்தாள். எதிரில் யாரோ இருப்பது போல் ஏதோ பேசிக் கொண்டே யிருந்தாள் அவள். சோனுவைப் பார்த்ததும் அவளோடு ஒன்றும் பேசாமல் அப்படியே நின்றுகொண் டிருந்தாள். அவள சோனுவை அடையாளங் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. சோனு மரத்தடியில் போய் நின்ருன். அவன் அவளுக்குத் தன் பயாஸ்கோப்பைக் காண்பிக்க வந்திருந்தான். இப்போது அவளு டைய முகத்தைப் பார்த்தபிறகு அவனுக்குப் பேச வார்த்தை

வரவில்லை. மாலதி அத்தைக்கு ஏதோ வியாதி வந்திருக்கிறது வியாதி வந்த ஆளுக்குத்தான் கண்ணும் முகமும் இந்த மாதிரி இருக்கும். அதற்கு மேலும் அங்கே நிற்க முடியவில்லை அவனால். அவன் தன் பெரியம்மாவிடம் ஓடி, ''மாலதி அத்தை மரத்தடியிலே ...'' என்று பேச ஆரம்பித்து முடிக்கவில்லை. ''மாலதி கிட்டே போய் அவளைத் தொந்தரவு பண்ணாதே'' என்றாள் பெரியம்மா.

''சித்தப்பா எங்கே? சோபா, ஆபு எங்கே? நரேன்தாஸ், பால் வீட்டிலே சுபாஷோட அப்பா இவங்கள்ளாம் எங்கே?'' என்று அவன் பெரியம்மாவைக் கேட்டான்.

''பக்கிரி தர்காவிலே ஏதோ திருவிழா. ஊரிலே எல்லாரும் திருவிழாவுக்குப் போயிருக்காங்க'' என்றாள் பெரியம்மா.

பெரியம்மா சொன்ன பக்கிரி சாயபுவின் கதையைக் கேட்ட சோனாவுக்கு உலகத்தில் இன்னொரு கர்ண பரம்பரைக் கதை பிறந்திருப்பதாகத் தோன்றியது.

அதிசயமான, நம்ப முடியாத நிகழ்ச்சிதான் இது. ஒரே இரவில் இரண்டு சம்பவங்கள் எப்படி நடக்கும்? நடக்காது, நடக்க முடியாது. நள்ளிரவில் நரேன்தாஸ் விட்டுவாசலில் பக்கிரிசாயபு தோன்றினார் சாட்சாத் லக்ஷ்மி தேவியைப் போல், தாயைப் போல், மாலதியை இங்கு விட்டுவிட்டுப் போனார். ஆச்சரியம் என்னவென்றால், அதே இரவில் தர்காவில் ஏதோ பிணத்தைப் புதைக்க வந்தவர்கள், ஜோட்டன் விளக்கை எரியவிட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பதையும் அவள் அருகில் சவப்பெட்டியில் பக்கிரி சாயபுவின் சவத்தையும் கண்டார்கள்.

நரேன்தாஸின் வீட்டுக்கும் தர்காவுக்குமிடையே பத்துக் கோச தூரம் ஆறுகளும் கால்வாய்களும் நிறைந்த பிரதேசம். அவற்றில் தண்ணீர் எப்போது பொங்கி வரும், எப்போது வடியும் என்று சொல்ல முடியாது.

படகில் கடக்க ஒரு நாள் பிடிக்கும் தூரத்தை ஒரு முகூர்த்த நேரத்தில் கடந்துவிட்டாள், பக்கிரி சாயபுவின் பீபி. நள்ளிரவில் பக்கிரிசாயபு தன் வீட்டுவாசலில் தோன்றி மாலதியைத் தன்னிடம் ஒப்புவித்த அதிசயத்தை நரேன்தாஸ் எல்லாரிடமும் பரப்பிவிட்டான். பக்கிரிசாயபு விசுவரூபமெடுத்து, பல யோசனை தூரத்துக்கு வளர்ந்து, தம் அங்கியின் பையிலிருந்து மாலதியை ஒரு பொம்மையை எடுப்பது போல் வெளியே எடுத்து வைத்துவிட்டு ஒரு விநாடியில் காற்றில் மறைந்து போய்விட்டார் என்று அவர் இறந்த செய்தி கேட்டதும் அவனுக்குத் தோன்றியது.

இரவோடிரவாக, இந்நிகழ்ச்சியின் மூலம், ஒரு பீராக, அவதார புருஷராக ஆகிவிட்டார் பக்கிரிசாயபு. இன்னொரு கர்ணபரம்பரைக் கதை—மதத்தைப் போல, அந்தப் பனையோலைச் சுவடிக் கதைகளைப் போல. எப்போதும் தங்களுக்குள் தகராறு செய்துகொள்ளும் இரண்டு மதங்கள். ஒருபக்கம் அவன்—சோனு; இன்னொரு பக்கம், மைதானத்துக்கு அப்பால், படுகைக்கு அப்பால் உள்ள பாதிமா!

பாதிமா வந்ததும் சோனு அவளிடம் பயாஸ்கோப் பெட்டியைத் தந்தான்.

''யாரு கொடுத்தாங்க, சோனு பாபு?''

''அமலா.''

''ஏன் கொடுத்தா?''

''அவளுக்கு என்கிட்டே பிரியம்.''

பாதிமா மருத மரத்தடியில் நின்றுகொண்டு, பேசாமல் சோனுவின் முகத்தைப் பார்த்தாள். ''எனக்குப் பயாஸ்கோப் வேண்டாம்?'' என்றாள்.

''ஏன்?''

''வேண்டாம். நான் வாங்கிக்க மாட்டேன்.''

''ஏன் வாங்கிக்க மாட்டே?''

பாதிமா பதில் சொல்லவில்லை. சோனு மூடாபாடாவிலிருந்து திரும்பி விட்ட செய்தி கேட்டதும் தண்ணீரில் நடந்து அங்கு வந்து விட்டாள் அவள். வழியில் தண்ணீர் அதிகம் இல்லை, பாதம் மட்டும் மூங்கும். பாதிமா வேறு பேச்சுப் பேசாமல் தன் புடைவையைச் சற்றுத் தூக்கிக்கொண்டு தண்ணீரில் இறங்கினாள், வீடு திரும்புவதற்காக.

''அமலா எனக்கு அத்தை முறை'' என்றான் சோனு.

இப்போது பாதிமா திரும்பிப் பார்த்தாள். தண்ணீரிலிருந்து ஏறி வந்து பயாஸ்கோப்புக்காகக் கையை நீட்டினாள்.

சோனு பயாஸ்கோப்பின் கண்ணாடியைக் கண்ணுக்கு நேரே வைத்துக் கொள்ளும்படி பாதிமாவிடம் சொல்லிப் படங்களை மாற்றி மாற்றி அவளுக்குக் காட்டினான். அராபிய இரவுகளின் அதிசய உலகத்தை அந்தப் படங்களில் பார்த்து ஆச்சரியத்தால் ஸ்தம்பித்துப் போய்விட்டாள் பாதிமா. 'நீங்க இவ்வளவு நாள் எங்கே போயிட்டீங்க?' என்று சோனுவைக் கேட்க விரும்பினாள் அவள். தினம் சாயங்காலமானதும் அவள் அவர்கள் வீட்டுக் கொய்யா மரத்தடியில் வந்து நின்றுவிடுவாள். அங்கிருந்து இவர்கள் வீட்டு மருத மரம் தெரியும்; மருதமரத்தடியில் யார் நின்றாலும் தெரியும்.

ஜேஷ்ட ஆஷாட மாதங்களில் மட்டும் சணல் பயிர் உயரமாக வளர்ந்துவிடுவதால் ஒரு மரத்தடியிலிருந்து இன்னொரு மரத்தடியைப் பார்க்க முடியாது. சணல் பயிர் அறுவடையான பிறகு, மறுபடியும்

ஒரு மரத்தடியிலிருந்து இன்னொரு மரத்தடியில் இருப்பவர்களைப் பார்க்கலாம்.

அவள் அன்று மாலையிலும் அவனை இவ்வாறு பார்த்துவிட்டுத் தான் அவனைச் சந்திக்க வந்திருந்தாள். இருந்தாலும் அவன் மேல் அவளுக்குக் கோபமாக இருந்தது. அவனை ஏறிட்டுப் பார்க்க வில்லை, இவ்வளவு நேரம். ஆனல் இப்போது சோனு அவளுக்குப் பயாஸ்கோப்பைக் கொடுத்த பிறகு அவளுடைய கோபம் பறந்து போய்விட்டது.

"பாட்டி ஒரு தடவை உங்களை வந்துட்டுப் போகச் சொன்னுங்க" என்று அவள் சொன்னுள்.

அவளுடைய கொச்சைப் பேச்சைத் திருத்தினுன், சோனு.

''இது புஸ்தகத்துப் பேச்சுன்னு!''

''புஸ்தகப் பேச்சுப் பேசக் கத்துக்கறியா?''

''எனக்கு வெட்கமா இருக்கு.''

''எனக்குந்தான்'' என்று சொல்லிச் சிரித்தான் சோனு. ''அமலா அத்தை பெரியம்மா மாதிரி பேசரு. நான் பேசறதைத் திருத்திப் பேசச் சொல்ரு.''

''நீங்க என்ன சொன்னீங்க?''

''எனக்கு வெக்கமாயிருக்குன்னு சொன்னேன்.''

''எனக்குந்தான்'' என்று சொல்லிவிட்டுப் பாதிமா தண்ணீரில் இறங்கினுள். மறுகரையில் ஏறிக் கொய்யா மரத்தடியை அடைந் நதும் அங்கிருந்து கையை ஆட்டினுள். சோனுவும் மருத மரத்தடி யிலிருந்து கையாட்டினுன். இவ்வாறு சைகைகள் செய்துகொண்டு அவர்கள் தங்கள் தங்கள் வீட்டுக்குப் போனுர்கள்.

சோனு தெற்குப் பக்கத்து அறைக்குள் போனுன். அங்கே அலிமத்தி இல்லை. ஆபேத் அலி மட்டும் உட்கார்ந்திருந்தான். அலிமத்தியும் சித்தப்பாவும் திரும்ப நேரமாகும். அவர்கள் பக்கிரி யின் தர்காவுக்குப் போயிருந்தார்கள். இவ்வளவு பெரிய வீட்டில் ஆண் துணை யாரும் இல்லை. இரவில் திருட்டுப் பயம். ஆகையால் சசீந்திரநாத் வீட்டுக்குக் காவலாக ஆபேத் அலியை வைத்து விட்டுச் சென்றிருந்தார். ஆபேத் அலி அங்கேயே சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்வான். சோனு அரிக்கேன் விளக்கைக் கொண்டு வந்து வைத்தான். ''நீங்க தர்காவுக்குப் போகவில்லையா?'' என்று ஆபேத் அலியைக் கேட்டான்.

"நாளைக்குப் போகப்போறேன்.''

ஈசம் வந்துவிட்டதால் இனி ஆபேத் அலி அங்கே இருக்கத் தேவையில்லை. எல்லாரும் அவரவர்களுக்கு நேரம் கிடைக்கும் போது தர்காவுக்குப் போவார்கள்.

யாராவது எங்காவது போகிறுர்களா என்று கேட்டால் சோனு வுக்குத் தானும் அங்கே போக வேண்டுமென்று தோன்றும். திருவிழாப் பேச்சு காதில் விழுந்தால் சோனுவுக்குச் சர்க்கசும் அதிலி ருந்த இரண்டு புலிகளும் நினைவுக்கு வரும். அந்த நினைவுவந்ததும் அவன் இன்னும் அரிக்கேன் விளக்கை யொட்டியவாறு உட்கார்ந் தான். இன்றும் அவனுக்குப் படிப்பிலிருந்து விடுதலை. நாளை முதல் இல்லை. பௌர்ணமியில் லட்சுமி பூஜை முடிந்ததும்–இரவு பகலாகப் படிக்கத் தொடங்கவேண்டும். பள்ளி திறந்ததும் பரீட்சை.

சோனு, ஆபேத் அலியை உற்றுக் கவனித்தான். ஆபேத் அலியின் முகத்தில் களையே இல்லை. அவனுடைய உடம்பு தளர்ந்து விட்டது. ஜப்பர் போன இடம் தெரியவில்லை.

ஆபேத் அலியின் இரண்டாவது பீபி அவனுடைய வறுமையைப் பற்றிக் கவலைப்படவில்லை. நன்ருகச் சாப்பிடவேண்டும் அவளுக்கு. சமைப்பதையெல்லாம் அவள் தானே சாப்பிட்டு விடுவாள். அவனுக்கு வயிறு நிறையச் சாப்பாடு போட மாட்டாள். இன்றிரவு அவனுக்கு வயிறு நிறையச் சாபபாடு கிடைக்கும். பாதி நரைத்த தாடிக்குள் மறைந்திருந்த அவனுடைய முகத்தில் நிறையச் சாப்பிடப் போகும் மகிழ்ச்சி தெரிந்தது. ஆனுல் இந்த ஜப்பர் அவனுக்குத் தலைக்குனிவை ஏற்படுத்திவிட்டான். ஜப்பரின் செய்கை போலீஸ் விவகாரமாகியிருந்தது. பக்கிரி சாயபுவின் அற்புதச் செயலில் மக்கள் மற்ற எல்லா விஷயங்களையும் மறந்து விட்டுத் திருவிழாக் கொண்டாட்டததில் ஈடுபட்டுவிட்டார்கள்.

எல்லாவற்றையும் விடப் பெரிய ஆச்சரியம் இந்த மாலதி. மாலதி திரும்பி வந்த அன்று நரேன்தாஸ் சததம் போட்டு எல்லாரையும் அழைத்தான். அவன சொல்லியதிலிருந்து ஒன்றும் தெளிவாகப் புரியவில்லை, பக்கிரிசாயபு ஓர் அசாதாரண மனிதர் எனபதைத் தவிர. அவருடைய மந்திர உச்சாரணத்தால் தண்ணீரிலிருந்து ஒரு ஜோதி தோன்றியதாம். அந்த ஜோதியில் ரிஷிகளுடைய முகங்கள் தெரிந்ததாம். பக்கிரி சாயபு சொன்ருராம்: ''என் தாயை யாரும் கெடுக்கவில்லை, நரேன்தாஸ்! நீ அவளை ஏற்றுக்கொள்!''

நரேன்தாஸ் சொன்னதைப் பார்ததால் சீதை வனவாச நிகழ்ச்சி மறுபடி நிகழ்ந்திருப்பதாகத் தோன்றியது.

இருளில் மௌனமாக நின்றுகொண் டிருந்தாள் மாலதி. அவளு டைய முகம் கற்சிலைபோல் இறுகிப் போயிருந்தது. அவளுடைய கண்கள் மட்டும் இருட்டில் ஜொலித்தன. கேட்ட கேள்விகளுக்கு அவளிடமிருந்து பதில் எதுவும் இல்லை. அவள் மௌனமாக உணர்ச்சியற்ற பார்வையுடன் கணகாட்சிச் சாலையில் உள்ள பிராணியைப் போல் வராந்தாவில் உட்கார்ந்திருந்தாள். அண்டை

அயலார் அவளை வந்து பார்த்துவிட்டு அவரவர்களுக்குத் தோன்றி யதைச் சொல்விட்டுப் போவார்கள். பக்கிரி சாயபுவைப் போன்ற மனிதர் உண்டா? அவர் அல்லாவின் அருளைப் பெற்றவராக்கும்.

இவ்வாறு நாட்கள் கழிந்தன. ஏனோ, நரேன்தாஸால் மாலதியை முன்போல் தன் குடும்பத்தில் வைத்துக்கொள்ள முடியவில்லை. பிற மதத்தைச் சேர்ந்தவர்கள் — அவர்களை மனிதர்களென்றே கருத முடியாது — அவளைக் களவாடிப் போனார்கள். புலி தொட்டால் பதினெட்டுக் காயம், மிலேச்சன் தொட்டால் முப்பத்திரண்டு காயம்.

அரிசி குத்தும் அறைக்குப் பக்கத்தில் வராந்தாவையொட்டி மாலதிக்கு ஒரு தனிக்குடிசை கட்டிக் கொடுத்து விட்டான், நரேன் தாஸ். மாலதி அந்தக் குடிசைக்குள் குடி போய்விட்டாள்.

ஆச்சரியம் என்னவென்றால், இந்தக் குடிசையில் தனியே வசிக்கும் தைரியம் வந்துவிட்டது, அந்த அழகிய விதவைக்கு மனிதன் அவளு டைய உடலிலிருந்து பிடுங்கிக் கொள்ளும்படியாக அதில் என்ன தான் மிஞ்சியிருந்தது? அவள் இவ்வளவு காலம் தன் உடம்பைப் பரிவு டனும் கவனத்துடனும் பாதுகாத்து வந்திருந்தாள். ஆகாயத்தில் நட்சத்திரங்களைப் பார்க்கும்போது அவளுக்கு ரஞ்சித்தின் நினைவு வரும். அவளிடம் சொல்லிக்கொள்ளாமலே எங்கேயோ போய் விட்டான், அந்த இளைஞன். அவனுக்கு ஒன்றும் தர இயல வில்லை அவளால். இப்போது தன் எச்சிற்பட்ட உடம்பைப் பார்க்கும்போது அவளுக்கு அருவெறுப்பால் காறித துப்பத் தோன்றி யது. அவள் எப்போதும் தண்ணீரில் அமிழ்ந்திருக்க விரும்பினாள். தண்ணீரில் அமிழ்ந்தால் உடல் தூய்மையாவது போன்ற உணர்வு. தண்ணீரில் அமிழ்ந்திருக்கும்போது, 'ஆகா, கங்கைத் தாயின் மடியில் எவ்வளவு அமைதி! எவ்வளவு சுகம்!' என்று நினைக்கத் தோன்றியது. குளிர்கால இரவானாலும் சரி, கோடையில் எரிக்கும் வெயிலானாலும் சரி, தண்ணீரில் அமுங்கினால் இந்த நினைவுதான் அவளுக்கு.

அந்தப் பக்கத்துச் சிறுவர்களுக்கு மாலதியின் செய்கை விளையாட் டாக அமைந்தது. மாலதி அத்தை நீர்ப்பூனையைப் போல் தண்ணீரில் முழுகுகிறாள், மிதக்கிறாள். அவர்கள் கரையில் நின்றுகொண்டு அவளைக் கேலி செய்வார்கள். அவளுடைய முன்றானை தண்ணீரில் மிதந்து போகிறதென்று கத்துவார்கள்.

"அத்தை, உன் தலைமயிர் தெரியறது. இல்லை, உன் கால்விரல் தண்ணிக்கு மேலே தெரியறது. உன் புடைவை காத்திலே உப்பிக் கிண்டு போறது, படகுப் பாய்போல. நீ பூரா முழுகல்லியே? உன் உடம்பு கொஞ்சம் கொஞ்சம் வெளியே தெரியறதே!" என்று

எல்லாம் சொல்லி அவர்கள் சிரிப்பார்கள். அப்போது மாலதியின் முகம் பரிதாபமாக இருக்கும்.

''ஆமாம், என்னோட எல்லாம் முழுகிடாது. ஏதாவது கொஞ்ச மிதந்துண்டேதான் இருக்கும்'' என்று அலுத்துக் கொள்வாள் அவள். ''பாரு, சோனு! நான் பூரா முழுகிட்டேனு இல்லையா, பாரு.''

''நீ பூரா முழுகிட்டே, அத்தை'' என்பான் சோனு.

அதன் பிறகே மாலதி துறை முழுதும் தண்ணீரை எடுத்துத் தெளித் துக் கொண்டே கரையேறுவாள். எல்லா இடங்களும் அசுத்தமா யிருப்பதாக அவளுக்கு எணணம். அவள் வாளியிலிருந்து தண்ணீரை எடுதது வழியெல்லாம் தெளித்துக்கொண்டே வீடு திரும்புவாள். இதுவே ஒரு நோயாகிவிட்டது அவளுக்கு. இம் மாதிரி எப்போதும் தண்ணீரில் முழுகி அவள் தன் மென்மையை யும் அழகையும் இழந்து பைத்தியம் போலாகி விட்டாள்.

இரவு முழுவதும் தூங்காமல் கண்ணீர் சிந்திக்கொண்டே இருப் பாள். சோனு பார்க்கும் போதெல்லாம் அவள் நீரில் நீந்திக் கொண்டே யிருப்பாள். தண்ணீரை விட்டு வெளியே வரமாட்டாள். அவளுடைய முகத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கும். அவளு டைய உடலிலிருந்து ஜீவன் பிரிந்து போய்விட்டதோ என்று தோன் றும். நரேன்தாஸ் அவளைத் திட்டித் தண்ணீரிலிருந்து எழுப்பிக் கூட்டிக்கொண்டு போவான்.

இவ்வாறு சரத்காலம் கழிந்துவிட்டது. பூஜை விடுமுறை முடிந்ததும் சசிபூஷன் திரும்பி வந்துவிடுவார். பின்பனிக் காலத்தில் படிப்புச் சுமை அதிகம். சசிபூஷன் காலையிலும் இரவில் வெகு நேரம் வரையிலும் சோனுவைத் தம் அருகில் உட்காரவைத்துக் கொண்டு படிக்கச் செய்வார். சில நாட்களாகப் பைத்தியக்காரப் பெரியப்பா எங்கும் போவதில்லை. அவருடைய திருந்திய நிலைக்குத் தானே காரணம் என்பது சோனுவின் கருத்து. பூஜையின்போது யானை பார்க்கப் போன நாளிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாகக் குணமாகிக் கொண்டு வந்தார் பெரியப்பா. அவன் சிலசமயம் அவருக்கு ஹுக்கா தயார் செய்து கொடுப்பான். அவர் ஹுக்கா பிடிப்பார்.

உட்கார்ந்துகொண்டு தமக்குத் தாமே அந்தக் கவிதையைச் சொல்லிக்கொண டிருப்பார். குளிக்கவேண்டிய நேரத்தில் குளியல், சாப்பிட வேண்டிய நேரத்தில் சாப்பாடு. இரவில் சிறுவர்கள் எல்லாரும் படிக்கும்போது அவரும் தம்மை ஒரு மாணவனுக நினைத்துக்கொண்டு, வங்காளி இலக்கணப் புத்தகத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார். மிகவும் கவனத்துடன் படிப்பதாகப் பாவனை செய்வார்.

சில சமயம் சோனுவின் சிலேட்டை எடுத்து அதில் பலவித வண்ணத்துப் பூச்சிகள், பாலம், வயல்கள் இவற்றை வரைவார். யாரையும் தொந்தரவு செய்வதில்லை அவர்.

சோனு லக்ஷ்மி பூஜைக்குத் துனுப் பூ பறித்து வரப் போனான். பெரியப்பாவே படகில் அவனைக் கூட்டிக்கொண்டு போய் துனுப் பூ கிடைக்கும் இடத்தில் சேர்த்தார். அவருடைய நடத்தையால் பெரியம்மாவுக்கு மிகவும் திருப்தி. பெரியம்மா நாள் முழுவதும் குடும்பத்துக்காக உழைத்தாள், பெரியப்பா வீட்டில் இருந்தால் கஷ்டமே தோன்றாது அவளுக்கு. நெற்றியில் வட்டவடிவமான குங்கும திலகம், வகிட்டில் நீண்ட கோடு போல் இடப்பட்ட குங்குமம், வெள்ளை வெளேரென்ற, சிவப்புக் கரை போட்ட புடைவை ; மாநிறம்— இவற்றோடு கூடிய பெரியம்மாவை ராமாயணத்தில் வர்ணிக்கப்பட்ட சிறந்த பெண் பாத்திரங்களுடன் ஒப்பிடத் தோன்றும் சோனுவுக்கு.

இவ்வாறு கார்த்திக் பூஜையும் வந்துவிட்டது. பாதிமா மருதமரத் தடிக்கு வந்து சோனுவிடம் தனக்கு இரண்டு பூஜைக் குடங்கள் வைத்திருக்கும்படி கேட்டாள். சோனு தன் தாயிடமும் சொல்லியிருந்தான். பெரியம்மாவிடமும் சொல்லி வைத்திருந்தான். அவன் அவர்கள் இருவரிடமிருந்தும் குடங்கள் வாங்கி வைத்திருந்து கார்த்திக் பூஜைக்கு மறு நாள் பாதிமாவுக்கு இரண்டுக்குப் பதிலாக நான்கு குடங்கள் கொடுக்கப் போகிறான். அமலாவும் கமலாவும், அவனுக்குப் பல பொருள்களைக் கொடுத்து அவனை மகிழ்விக்க முயன்றது போல அவனும் இந்தப் பெண்ணை, காலில் காப்பும் மூக்கில் மூக்குத்தியும், கட்டம் போட்ட புடைவையும் அணிந்த இந்தப் பெண்ணை மகிழ்விக்கக் காத்திருந்தான். அவளுக்கு ஏதாவது கொடுக்க முடிந்தால் அது ஒரு பெரிய சாதனையாகத் தோன்றியது அவனுக்கு.

கார்த்திக் பூஜையன்றுதான் அந்தச் சம்பவம் நடந்தது. அவர்கள் மாலையில் வயலுக்குச் சென்றார்கள். நாற்புறமும் வயல்களில் சொக்கப்பனை கொளுத்தினார்கள். ஊர் மக்கள் தங்கள் பாவங்களைத் தொலைத்துப் புண்ணியம் சேர்த்துக்கொண்டு போக அங்கே வந்திருந்தார்கள். சோனு, லால்ட்டு, பல்ட்டு சொக்கப்பனையில் நெருப்பு வைத்துவிட்டு ஓடினார்கள். அவர்களுடைய வயல்களிலேயே மிகவும் நல்ல விளைச்சலுள்ள வயலில் அவர்கள் சொக்கப்பனை கட்டியிருந்தார்கள்.

இப்போது கார்த்திக் பூஜைக்கு ஒரு நல்ல அடர்த்தியான தானியக் கதிர் தேவை. அவர்கள் மூவரும் அப்படிப்பட்ட கதிரைத் தேடிக்கொண்டு ஒவ்வொரு வயலாகப் பார்த்துக்கொண்டு

போனார்கள். மிகவும் அடர்த்தியான கதிரைத் தேடிக் கண்டு பிடிப்பவன் அந்தக் குடும்பத்துக்காக நிறைய புண்ணியம் சம்பாதித்துக் கொடுத்தவனாவான். யார் மிகவும் அடர்த்தியான கதிரைப் பறிக்கப் போகிறார்களென்று அவர்களுக்குள்ளே ஒரு போட்டி. சோனா ஒரு கதிரைப் பிடுங்கி அண்ணாக்களிடம் காட்டுவான்: ''பார்த்தியா அண்ணா! எவ்வளவு பெரிசு!''

பல்ட்டு அதைப் பார்த்துவிட்டு, "உம், இதை விடப் பெரிசு இதோ பாரு!'' என்று இன்னொரு கதிரைப் பிடுங்குவான்.

இவ்வாறு அவர்கள் கதிர்களைத் தேடிக்கொண்டு தூரத்து வயல்களுக்குப் போய்விட்டார்கள். இன்னும் கொஞ்ச தூரம் போனால் பெரிய மியானின் நிலம். அந்தப் பிராந்தியத்திலேயே நல்ல விளைச்சல் உள்ள நிலம். ஏதோ ஒரு வயலில் லக்ஷ்மிதேவி அவர்களுக்காக நல்ல அடர்த்தியான கதிர்களை வைத்துக்கொண்டு காத்திருந்தாள். லட்சுமி தேவியைத் தேடிக்கொண் டிருந்தார்கள் அவர்கள்.

அவர்கள் கதிரைத் தேடிக்கொண்டு வெகுதூரம் போய்விட்டார்கள். நல்ல நெற்கதிர் கொண்டு வந்தால் தான் அவர்களுக்கு மதிப்பு இருக்கும். பெரியம்மா சோனாவின் தாயிடம் சொல்வாள், ''தன், பார்த்தியா, உன் பிள்ளை எவ்வளவு பெரிய கதிர் கொண்டு வந்திருக்கான்!'' என்று.

அவர்கள் வயலுக்கு வயல் சுற்றினார்கள். அந்தி மங்கும் நேரம். பின் பனிக்காலமாதலால் ஓரளவு பனி படர்ந்திருந்தது எங்கும். மங்கலான நிலாவொளி. அவர்கள் குனிந்து குனிந்து நெற்கதிர்களைக் கையிலெடுத்துப் பார்த்தார்கள். அளந்து பார்த்துவிட்டு விட்டுவிட்டார்கள். ''ஊஹூம், இது சின்னது! ஒரு முழநீளமாவது இல்லாட்டா, கார்த்திக் சாமியோட கழுத்திலே, மாலையாப் போட முடியாது.''

அப்போது யாரோ கையில் விளக்குடன் ஆற்றங்கரை வழியே நடந்து வந்தார்கள். விளக்கு வெளிச்சத்தைப் பார்த்தே அவர்களுக்குத் தாங்கள் வெகுதூரம் வந்திருப்பது தெரிந்தது. அவர்கள் தாங்கள் அறியாமலேயே ஹாய் ஜாதி மைதானத்துக்கு வந்துவிட்டிருந்தார்கள். நதிப்படுகையைத் தாண்டி வீடு திரும்பும் எண்ணம் அப்போதுதான் ஏற்பட்டது அவர்களுக்கு.

போய்க்கொண்டிருந்த பேலுவின் தலையில் ஒரு பெரிய டிரங்குப் பெட்டி இருந்தது. அதை ஒரு கையால் பிடித்துக்கொண்டிருந்தான் அவன். அவனுக்குப் பின்னால் சாம்சுத்தீன்; எல்லாருக்கும் பின்னால் பாதிமா. அவள் சல்வாரும் பூப்போட்ட தங்க நிற ஃபிராக்கும் அணிந்திருந்தாள். மறுநாள் அவள் மருத மரத்தடிக்கு

வருவதாகப் பேச்சு. சோனு அவளுக்காக நான்கு குடங்கள் எடுத்து வைத்திருந்தான்.

'இப்போது எங்கே போகிறுள் பாதிமா, இவ்வளவு அலங்காரம் செய்துகொண்டு ?' அவளைப் பார்த்தும் அவளை ஒன்றும் கேட்கத் தோன்றவில்லை அவனுக்கு.

சாம்சுதீன் அவர்களைப் பார்த்து ஆச்சரியத்துடன் கேட்டான், "நீங்களா ?" என்று.

"ஆமா, நாங்க நெல்லுக்கதிர் பறிக்க வந்தோம்."

சாம்சுத்தீனுக்கு இப்போதுதான் ஞாபகம் வந்தது, இன்று கார்த்திக் பூஜை என்று. அதுதான் எல்லாரும் நெல்கதிர் பறிக்க வந்திருக்கிறுர்கள். "கிடைத்ததா ?" என்று அவன் கேட்டான்.

அவர்கள் தாங்கள் பறித்த கதிர்களைக் காட்டினுர்கள்.

சாம்சுததின் சிரித்தான்: "லட்சுமி அம்மனுக்கு இத்தனூண்டு கதிர்தானு ? என் கூட வாங்க."

அவர்கள் எல்லாரும் நடக்கத் தொடங்கினுர்கள். சோனு பாதிமாவுக்குப் பக்கததில் நடந்தான். ஆனுல் அவளுடன் பேசவில்லை. பாதிமாவும் ஒன்றும் பேசவில்லை. ஆனுல் சோனுவால் வெகுநேரம் அப்படி இருக்க முடியவில்லை.

"உனக்குக் குடம் வேண்டாமா ?" என்று அவன் கேட்டான்.

"வச்சிருங்க. டாக்காவிலேருந்து வந்தால் எடுத்துக்கறேன்."

"நீ டாக்கா போகப் போறியா ?"

"நாங்க எல்லாரும் போகப்போறோம். நான் ஸ்கூல்லே படிக்கப் போறேன். இங்கே விட்டிலே பாட்டி மட்டும் தனியா இருப்பார்."

"முன்னுலே சொல்லவே இல்லையே ?"

"எப்படிச் சொல்லுவேன் ? பாபாவே இன்னிக்குக் காலம்பரந் தானே சொனனுர்."

சாம்சுதீன் வீட்டிலிருந்தால் பாதிமா வீட்டைவிட்டு வெளியே போவதில்லை என்பது சோனுவுக்குத் தெரியும். அவன் மௌன மாகிவிட்டான். பாதிமாவும் சற்று மௌனமாயிருந்து விட்டுச் சொன்னுள். "சோனு பாபு எனக்கு லெட்டர் போடுங்க."

"போ, போ ! நான் என்ன லெட்டர் எழுதறது ?"

"நீங்க எப்படி இருக்கீங்கன்னுதான்."

"சித்தப்பா திட்டுவார்."

"நான் சாயந்திரம் அழுதேன். பாபாகூடக் கேட்டார், ஏன் அழறேன்னு ?"

"அழும்படியா என்ன நடந்தது உனக்கு ?"

"ஒண்ணும் நடக்கலியா ?"

சாம்சுதீன் ஒரு துண்டைக் கட்டிக்கொண்டு தண்ணீரில் இறங்கி, மூன்று பெரிய பெரிய நெற்கதிர்களைப் பிடுங்கிக்கொண்டு வந்து அவர்கள் மூவரிடத்திலும் ஒவ்வொன்று கொடுத்துவிட்டுச் சொன்னான் :

"இந்தாங்க ! இவ்வளவு பெரிய கதிரை எங்கேயும் பார்க்க முடியாது. தண்ணியிலே இறங்கல்லேன்னா நீஞ்சக் கத்துக்க முடியுமா ? என்ன, சொல்லுங்க ! லட்சுமியைக் கொண்டு வரணுமின்னாக் கஷ்டப் படணுமாக்கும்."

இவ்வாறு சொல்லிவிட்டுச் சாம்சுதீன் துண்டால் தன் உடம்பைத் துடைத்துக்கொண்டு பிறகு பேலுவிடம் சொன்னான். "நீங்க போயிக்கிட்டிருங்க. நான் இவங்களைக் கொஞ்ச தூரம் விட்டுட்டு வரேன். இவங்களாலே தனியா வழியைக் கண்டு பிடிச்சு வீட்டுக்குப் போக முடியாது."

சாம்சுதீன் மருதமரம் வரையில் அவர்களைக் கொண்டு வந்து விட்டான். கிழக்குப் பக்கம் மாலதியின் வீடு. ஜப்பர் மாலதியைக் கவர்ந்துகொண்டு ஓடிவிட்டான். பக்கிரி சாயபு அவளைக் காப்பாற்றிக்கொண்டு வந்தார். ஜப்பர், சாம்சுதீன் கட்சியில் ஒரு முக்கிய ஆசாமி. ஆகையால் ஜப்பரின் குற்றத்தில் தனக்கும் பங்கு உண்டு என்ற உணர்வு ஏற்பட்டிருந்தது சாம்சுதீனுக்கு. மாலதிக்கு நேர்ந்த தீமை அவனை வேதனைக்குள்ளாக்கியது.

இன்னொரு புறம் தன்னைப் பலவீனனாக, பரிதாபத்துக்குரியவனாகக் கருதிக் கொண்டான் அவன். அவன் முஸ்லீம் மக்களிடையே தன்னம்பிக்கையை உண்டாக்க முயற்சி செய்துவந்தான். அவர்கள் எதை தங்கள் விதி என்று நம்பி இவ்வளவு காலமாகப் பொறுத்துக் கொண்டிருந்தார்களோ, அது விதியில்லை, அது அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதி என்று அவர்களுக்குப் புரிய வைத்துக்கொண்டு வந்தான் அவன்.

இவ்வாறு தன்னம்பிக்கை உண்டாக்கும் முயற்சியில் சில சமயங்களில் கடுமையான வார்த்தைகளையும் உபயோகிக்க நேரிட்டது. ஆனால் இந்த ஜப்பர் எவ்வளவு நீசத்தனமான காரியம் செய்து விட்டான் ? ஜப்பரின் செய்கைக்காக அவன் உள்ளூற வருந்தி வருந்தி நீராகிக் கொண்டிருந்தான்.

அவன் திடீரென்று ஊரை விட்டு விட்டுப் போனால் ஊரில் பல விதமாகப் பேசுவார்கள். அவன் ஊரிலிருந்தால் எப்போதாவது மாலதியைச் சந்திக்க நேரிடும். அப்போது அவனால் அவளுடன் பேச முடியாது. அவளுக்கு இழைக்கப்பட்ட தீங்குக்காக அவன் தலை குனிந்துகொள்ள வேண்டியிருக்கும். மாலதியின் சந்திப்பைத் தவிர்ப்பதற்காகவே அவன் ஊரை விட்டு ஓடுகிறானோ என்று தோன்றியது. அவன் ஹாஜீசாயபுவின் சிறிய பிள்ளை அகாலுவைத் தனக்குப்

பதிலாகக் கட்சித் தலைவனுக்கி விட்டான். அவனுக்குப் பட்டணத்தில் பொறுப்பு அதிகமாகிவிட்டது. அவன் இனிமேல் பட்டணத்திலே தான் இருக்க வேண்டும்.

மருத மரத்தைத் தாண்டி வரத் துணிவு வரவில்லை, சாம்சுதீனுக்கு. நரேன்தாஸின் வீட்டில் ஒரு விளக்குக்கூட எரியவில்லை. அவன் மரத்தடியில் தனியாக நின்முன். சிறுவர்கள் மூவரும் பத்திரமாக வீட்டை நெருங்கி, ''நீங்க இனிமேல் போகலாம்'' என்று அவனிடம் உரக்கக் கூறும் வரையில் அவன் அங்கேயே நின்றுகொண்டு, நரேன்தாஸின் வீட்டில் விளக்கு எரிகிறதா என்றும் பார்த்தான்.

பயங்கொள்ளி போல் மறைவில் நின்றுகொண் டிருந்தான் அவன். விளக்கு எரிந்தால் அதன் வெளிச்சத்தில் மாலதியின் முகத்தைப் பார்க்க அவனுக்கு ஆசை, ''மாலதி நீ என் குத்தத்தை மன்னிச்சுடு!'' என்று சொல்ல ஆசை.

மெதுவாகத் திரும்பிப் போனுன் சாம்சுதீன். சோனு வீட்டுக்கு வந்தபோது தென் பக்கத்து அறையை அடுத்த வராந்தாவில் ஆசிரியர் சசிபூஷண் நின்றிருப்பதைப் பார்த்தான். அவர் ஊரிலிருந்து திரும்பி வந்துவிட்டார். அவர்களைக் கண்டதும் வேடிக்கையாக, ''என்ன, சீதேவியை விரட்டிப்பிட்டு மூதேவியைக் கொண்டு வந்துட்டீங்களா? எங்கே, லட்சுமியைக் காட்டுங்க பார்ப்போம்!'' என்று கேட்டார்.

அவர்கள் கதிர்களைக் காட்டினுர்கள்.

''அடே எவ்வளவு பெரிய கதிர்! உங்களுக்குஎங்கே கிடைச்சது?''

சோனு தன் கதிரைக் காட்டினுன். தன்னுடையது மற்றவர்களுடைய கதிர்களைவிடப் பெரியது என்று ஆசிரியரிடம் சர்ட்டிபிகேட் வாங்க அவனுக்கு ஆசை. இதை ஊகித்துக்கொண்ட சசிபூஷண், ''சோனுவோட கதிர்தான் மத்ததைவிடப் பெரிசு'' என்ருர்.

அதைக் கேட்டுக்கொண்டே உள்ளே ஓடினுன் சோனு. அவனுடைய அம்மா பூஜையறையில் கோலம் போட்டிருந்தாள். காஸ் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. பலகையில் கார்த்திகேயனின் சிலை, கீழே வரிசையாகக் குடங்கள், அவற்றில் பச்சரிசி வைக்கப்பட்டு மேலே ஜல்பாயிப் பழம். சோனு தன் கதிரைத் தாயிடம் கொடுத்தான். அவள் பயபக்தியுடன் அதை இரு கைகளாலும் பெற்றுக் கொண்டாள்.

ஆசியரைப் பார்த்ததுமே சோனுவுக்கு நடுக்கம் ஏற்பட்டுவிட்டது. அதன் பிறகு பூஜையில் அவனுக்கு உற்சாகமே இல்லை. சசிபூஷன் எப்போதும் கண்டிப்பாக இருப்பார். அவர் அதி காலையிலேயே எழுந்து விடுவார். பிறகு அறைக் கதவைத் தட்டிச்

சிறுவர்களை எழுப்புவார். அவர்களைக் கூட்டிக்கொண்டு வயல் புறத்துக்குச் செல்வார். காலைக் கடன்கள் முடிந்த பிறகு அவர்களுக்கு மட்கிலாக் குச்சியைக் கொடுத்துப் பல் துலக்கச் சொல்வார். அவர்கள் முகங்கழுவிக் கொண்டு வந்ததும் அவர்களுக்கு ஊற வைத்த கொத்துக் கடலையை எண்ணி எண்ணிக் கொடுப்பார். அவர் பலவித வேர்களையும் மரப் பட்டைகளையும் சேர்த்து வைத்திருந்தார். வயிற்றுவலி, பல்வலி, வாயு, தலைவலி எல்லாவற்றுக்கும் அவரே மருந்து கொடுத்து விடுவார். சிறுவர்களைத் தேகப்பயிற்சி செய்யச் சொல்வார். பிறகு ஸ்நானம். அவர் சோனுவின் தலையில் எண்ணெய் தேய்த்து விடுவார். பிறகு எல்லோரையும் கூட்டிக் கொண்டு குளத்துக்குப் போய் நீச்சல் அடிப்பார். பிறகு, சுடச் சுடச் சாதம், கத்திரிக்காய் கறி சாப்பிட்டுவிட்டு எல்லாரும் பள்ளிக் கூடத்துக்குப் புறப்படுவார்கள்.

இவ்வாறு சசிபூஷண் வந்துவிட்டால் சிறுவர்களுடைய வாழ்க்கை முறையில் கட்டுப்பாடும் வந்துவிடும்.

சசிபூஷணுக்கு லால்ட்டு மேல்தான் மிகவும் எரிச்சல். லால்ட்டு நூற்றுப் பத்து பஸ்கி எடுக்க வேண்டும். சோனு ஐம்பது, பல்ட்டு நூற்றிருபது எடுக்கவேண்டும். சோனுவும் பல்ட்டுவும் சரியாகச் செய்துவிடுவார்கள், இந்தப் பயிற்சியை. ஆனால் லால்ட்டு சரியாகச் செய்யமாட்டான். அவன் உட்கார்ந்து எழுந்திருக்கும்போது அவனுடைய பேண்ட் அவிழ்ந்துவிடும். சசிபூஷண் அவனுடைய காதைப் பிடித்து அவனைத் தூக்குவார். "தனமாமி, தனமாமி!" என்று கூப்பிடுவார்.

அவருடைய குரலைக் கேட்டு ஓடிவரும் தனமாமி லால்ட்டு நிர்வாணமாக நிற்பதைப் பார்ப்பாள். உட்கார்ந்து எழுந்திருக்கும் போது அவனுடைய பேண்ட் அவிழ்ந்துவிடும். பேண்டில் நாடா இல்லை.

"இதென்ன ?"

"நான் என்ன பண்றது சொல்லுங்க! அவன் பேண்டிலே கயிறு நிக்கிறதில்லை" என்று தனமாமி சொல்லுவாள்.

"அப்படியா? நான் கயிறு தயார் செஞ்சு தரேன்" என்று சொல்லி, சசிபூஷண் தாமே நூலை எடுத்து முறுக்கி லால்ட்டுவின் பேண்டில் நுழைத்துக் கொடுப்பார். லால்ட்டு பயத்தால் அதன் பிறகு கயிற்றை அவிழ்த்தெறிவதில்லை. சசிபூஷணிடம் பெட்டிப் பாம்பாக அடங்கிவிடுவான் அவன்.

சசிபூஷணைப் பார்த்ததும் இதெல்லாம் ஞாபகம் வரும் சோனுவுக்கு. ஒரு பறக்கும் கப்பலும் நினைவுக்கு வருவதுண்டு.

முதல் தடவையாக ஒரு பறக்கும் கப்பல் அவர்களுடைய ஊருக்குமேல் பறந்து சென்றது. டாக்காவை யடுத்த கர்மிடோலா வில் யுத்தத்துக்காகக் கப்பல் தளம் ஏற்பட்டிருந்தது. இரண்டாவது பெரியப்பா ஊருக்கு வரும்போதெல்லாம் யுத்தத்தைப் பற்றிய கதைகள் சொல்லுவார். அவன் பறக்கும் கப்பலைப் பார்த்துவிட்டு மைதானத்திலிருந்து வீடு திரும்பும்போது வழியில் ஒரு புதிய மனிதரைச் சந்தித்தான்.

"பையா, இங்கே வா!"

அவர் பேசிய பேச்சு அந்த ஊர்ப் பேச்சு அல்ல. அவன் திடுக் கிட்டு நின்றான்.

"டாகுர் வீடு எந்தப் பக்கம்?"

அவன் விரலால் சுட்டிக் காட்டினான்.

அந்த மனிதரின் தலைமயிர் குட்டையாக வெட்டப்பட்டிருந்தது. அவர் நவத்வீபத்தைச் சேர்ந்தவர். அந்த ஊர் உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராக வேலைப் பார்ப்பதற்காக வந் திருந்தார். பார்தியிலிருந்து நடந்தே வந்ததால் அவர் கால்களில் ஒரே புழுதி. சோனா வீட்டைக் காண்பித்துவிட்டு ஹாராண்பாலின் வீட்டுக்குள் நுழைந்து, தன் வீட்டுக்கு அவருக்கு முன்னால் வந்து தன் சித்தப்பாவிடம் செய்தியைத் தெரிவித்தான். தெரிவித்து விட்டுத் தான் வெளியே வந்து நின்றான்.

சசிபூஷண் அங்கு வந்ததும், "இது உங்க வீடா?" என்று கேட் டார்.

சோனா தலையசைத்தான்.

"சசீந்திரநாத் உனக்கு என்ன உறவு?"

"சித்தப்பா."

"எங்கே, சித்தப்பாவைக் கூப்பிடு, பார்ப்போம்!"

அதற்குள் சசீந்திரநாத்தே அங்கே வந்துவிட்டார். அவரைப் பார்த்ததும் சசிபூஷண் அவருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு, "வந்துவிட்டேன்" என்றார்.

"வாங்க!" என்று சொல்லி அவரை முன்னறைக்கு அழைத்துச் சென்று உட்கார வைத்தார் சசீந்திரநாத். "இதுதான் உங்க அறை. இது உங்க கட்டில். இந்த மூன்று பேருந்தான் பசங்க."

சோனா முன்னமே கேள்விப்பட்டிருந்தான். பரிசால் பக்கத்தில், ஓர் ஊரில் உதவித் தலைமையாசிரியராக இருந்த ஒருவர் இங்கே தலைமையாசிரியராக வரப் போகிறாரென்று. அவர்தான் இவர் என்று அவனுக்குப் புரிந்தது. இது விஷயமாக மிகவும் முயற்சி எடுத்துக் கொண்டவர் சசீந்திரநாத்துதான்.

அவர் அவர்களுடைய வீட்டிலேயே சாப்பிட்டுக்கொண்டு தங்குவதென்றும் அந்த மூன்று பையன்களையும் கவனித்துக்கொள்வதென்றும் முடிவாகியிருந்தது.

சசீந்திரநாத் சிறுவர்களிடம், "ஆசிரியருக்கு நமஸ்காரம் பண்ணுங்கள்" என்று சொன்னார்.

யார் முன்னால் நமஸ்காரம் செய்வது என்பதில் போட்டி போட்டுக்கொண்டு அவர்கள் சசிபூஷணின் காலில் விழுந்தார்கள்.

முதலிலேயே சசிபூஷண், "எங்கே உங்க பல்லைக் காட்டுங்க" என்றார்.

சோனா பல்லைக் காட்டினான்.

"ஊஹூம், நீங்க பல்லை நன்னாத் தேய்க்கல்லே" என்று சொல்லிவிட்டு அவர் கைகால்களைக் கழுவிவிட்டு வரும்போது தாமே ஒரு மட்கிலாக் கிளையைப் பறித்து எடுத்துக்கொண்டு வந்தார். அதிலிருந்து பல் குச்சிகள் ஒடித்து ஆளுக்கொன்றாகக் கொடுத்து, 'பற்களைக் கீழே இருந்து மேல்பக்கமாக எப்படித் தேய்க்க வேண்டும்? நாம் சரியாகப் பல் விளக்குவதில்லை, பல்லிலிருந்துதான் பல நோய்கள் உற்பத்தியாகின்றன' என்றெல்லாம் பேசிக்கொண்டே பல் தேய்க்கும் முறையைச் செய்து காட்டினார்.

சிறுவர் மூவரும் வெளியே வந்தபிறகு விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

அப்பேர்ப்பட்ட சசிபூஷண் திரும்பி வந்துவிட்டார். இனிமேல் சோனா நினைத்தபோது படிப்பை விட்டுவிட்டு மருத மரத்தடிக்கு ஓடமுடியாது. அவன் அரிக்கேன் விளக்கை எடுத்துக்கொண்டு கைகால் கழுவத் துறைக்குப் போனான். அவனுக்கு மனம் சரியில்லை. பாதிமா ஊரைவிட்டுப் போய்விட்டாள். அவனுக்கு ஏதேதோ நினைவுகள். அப்படியில்லாவிட்டால் அவன் ஒரு நாளும் அரிக்கேனை எடுத்துக்கொண்டு தன்னந்தனியாகத் துறைக்குப் போயிருக்க மாட்டான், அவனுக்குப் பயமாயிருக்கும்.

அவன் அரிக்கேன் விளக்கைப் புளியமரத்தடியில் வைத்துவிட்டுத் தண்ணீரில் இறங்கினான். குனிந்து கைகளால் தண்ணீர் எடுத்தபோது எதிரில் எதையோ பார்த்துவிட்டுப் பயந்து போனான் அவன். தண்ணீரில் சிவப்பாக, சிவந்த அலகுள்ள மீன் கொத்திப் பறவை போல இரண்டு பாதங்கள் மிதந்தன. யாரோ லட்சுமி தேவியைத் தண்ணீரில் மிதக்க விட்டிருப்பது போலவும் அந்தப் பாதங்கள் தேவியின் குங்குமம் பூசிய பாதங்கள் போலவும் தோன்றின. யாரோ தண்ணீரில் முழுகியிருந்தார்கள்! அதைப் பார்த்துப் பயந்து போய்ச் சோனா அங்கிருந்து ஒரே ஓட்டம் பிடித்தான். அரிக்கேன் அவனுடைய காலில் பட்டுக் கீழே விழுந்துவிட்டது.

அவன் மூச்சிறைக்க ஓடி வந்து தென்பக்கத்து அறைக்குள் நுழைந்து பேச முடியாமல் குழறினான்.

சசிபூஷண், சசீந்திரநாத், நரேன்தாஸ் எல்லாரும் துறைக்கு ஓடினார்கள். சசிபூஷண் தண்ணீரில் குதித்தார். அவருடைய தலைப்பக்கத்தில் கட்டையாக ஏதோ தட்டுப்பட்டது. அதைத் தூக்கிக்கொண்டு வந்தார், மாலதி! கழுத்தில் பானையைக் கட்டிக்கொண்டு தண்ணீரில் விழுந்து தற்கொலை செய்துகொள்ள முயற்சி செய்திருக்கிறாள் அவள். கால்களில் செம்பஞ்சுக் குழம்பு பூசிக்கொண் டிருந்தாள். நெற்றியில் குங்குமமும் உடம்பில் தன் எல்லா நகைகளையும் அணிந்துகொண்டு தண்ணீரில் முழுகத் துணிந்திருக்கிறாள்.

சசீந்திரநாத் நாடி பிடித்துப் பார்த்தார். உயிர் இருந்தது. மாலதியின் கண்கள் மூடியிருந்தன. நினைவு இல்லை. கடகடவென்று வாந்தி எடுத்தாள். முகம் வெளிறிப் போயிருந்தது. நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டு. வகிட்டிலும் குங்குமம். கால்களில் செம்பஞ்சுக் குழம்பு. நாற்புறமும் கூட்டம் கூடிவிட்டதைக் கூடக் கவனிக்காமல் சசீந்திரநாத் இமை கொட்டாமல் அந்த அதிருஷ்டம் கெட்ட பெண்ணைப் பார்த்துக்கொண்டு நின்றார். கூடியிருந்தவர்கள் உப்பைப் போட்டு அவளுடைய உடலைக் கொஞ்சம் கொஞ்சமாக மூடினார்கள். மாலதி உப்புக் கடியில் தூங்கிவிட்டுக் காலையில் விழித்துக் கொள்ளுவாள் என்ற நம்பிக்கையில் அவர்கள் நாற்புறமும் உட்கார்ந்திருந்தார்கள். அன்றிரவு சோனாவுக்கும் தூக்கம் வரவில்லை. மாலதியின் தலைமாட்டில் அவனும் விழித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அவனுக்கு ரஞ்சித் மாமாவின் நினைவு வந்தது. ஏனோ அவனுக்கு ரஞ்சித் மாமாவின் மேல் கோபங் கோபமாக வந்தது.

மேலே பின்பனிக் காலத்து ஆகாயம். கீழே நெல்வயல்கள். ஆயிரக்கணக்கான நட்சத்திரங்களின் வெளிச்சம். நாற்புறமும் கூட்டம். உப்புக்கடியில் உறங்கிக்கொண் டிருந்தாள் மாலதி. நேரம் ஆக ஆகச் சோனாவுக்கு விழித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவன் தென்பக்கத்து அறையில் விரித்திருந்த ஜமுக்காளத்தில் போய்ப் படுத்துக்கொண்டான். ஆனால், என்ன காரணமோ, தூக்கம் வரவில்லை அவனுக்கு. அவன் மறுபடி எழுந்து மாலதியைப் பார்க்கப் போனபோது, என்ன ஆச்சரியம்! ரஞ்சித்

மாமா கையில் தடியுடன் கூட்டத்தில் நின்றுகொண் டிருந்தார்.
சித்தப்பா அவரிடம் ஏதோ சொல்லிக்கொண் டிருந்தார்.

ரஞ்சித் மாலதியின் காலடிப்பக்கம் உட்கார்ந்தான். அவனுடைய சூட்கேசை எடுத்துக் கொண்டு போய்ப் பெரிய மாமியிடம் கொடுத்தான் சோனு. ரஞ்சித்தின் முகத்தில் முள்முள்ளாகத் தாடி வளர்ந்திருந்தது. பல இரவுகள் விழிததுக் கால்நடையாக வெகு தூரம் வந்திருந்தான் அவன். ஊர் வந்து சேர்ந்ததும் தூங்க நினைத் திருந்தான். தூரத்திலிருந்தே காஸ்விளக்கைப் பார்த்ததும் அவனுக்கு வியப்பு ஏற்பட்டது. விஷயத்தை அறிந்ததும் அவனுக்கு ஒரே அதிர்ச்சி.

மாலதிக்கு நேர்ந்த விபத்துக்கு நரேன்தாஸ்தான் காரணமென்று நினைத்தான் ரஞ்சித். நரேன்தாஸ் தானே மாலதியை ஒதுக்கி வைத் தான்! அந்த ஜப்பருந்தான் காரணம்! ஜப்பர் எங்கே? இதை யெல்லாம் யோசிக்க நேரமில்லை அவனுக்கு. அவன் மாலதியின் வலக் கையை உப்புக்குள்ளிருந்து வெளியே எடுத்தான். நாடியைப் பார்த் தான். முன்னேற்றந்தான். அவன் மாலதியின் பாதத்தில எவ்வளவு வெப்பம் இருக்கிறது என்று பார்ப்பதற்காக உப்பைச் சற்று நகர்த்தினன். பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பு. ரஞ்சித்துக்கு ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. மாலதியின் முகத்தைப் பார்க்கவேண்டு மென்று தோன்றியது அவனுக்கு. அவன் அவளுடைய முகத்தை மூடியிருந்த உப்பை நகர்த்தினன்.

இரவின் கடைசி ஜாமம். இப்போது காவலாக இருந்தது அவன் ஒருவன்தான். உப்பை நகர்த்தியதும் அவள் பெருமூச்சு விடுவ தாக அவனுக்குத் தோன்றியது. அவளுடைய நெற்றியிலும் வகிட் டிலும் குங்குமம். அவள் விதவை என்று யார் சொல்வார்கள்? அவளுடைய அழகிய முகத்தையும் இளமை பொங்கும் உடலையும் பார்த்துக்கொண்டு பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருந் தான் ரஞ்சித். அவன் அவளுடைய நெற்றியைத் தொட்டுப் பார்த் தான். மோவாயைத் தொட்டுப் பார்த்தான். நல்லவேளையாக அவன் மற்றவர்களைத் தூங்கப் போகச் சொல்லிவிட்டான். எல்லாரும் தூக்கம் விழித்து என்ன பிரயோசனம்? யாரும் அறியாமல் அவன் இப்போது மாலதியிடம் அன்பு காட்டினன். அவன் வானத்தை அண்ணந்து பார்த்தபோது விடியத் தொடங்கிவிட்டதென்று தெரிந் தது. அவன் மாலதியை உப்பிலிருந்து தூக்கிக்கொண்டு வந்து தென் பக்கத்து அறையில் ஒரு ஜமுக்காளத்தின் மேல் கிடத்தினன். அவளைக் கூப்பிட்டு, ''மாலதி, இதோ நான் வந்துட்டேன்'' என்று கூறினன்.

நீர் வளம் நிறைந்த இந்தப் பிராந்தியத்து மக்கள் இறக்க விரும் பினல் நீரையே சரணடைவார்கள். மாலதிக்கு உயிரோடிருப்பதில்

ஆசையில்லே. அவள் தண்ணீருக்குள், தன் பிரியத்துக்குரிய வாத்தைத் தேடிக்கொண்டு தானும் முழுகத் துணிந்துவிட்டாள். இனியும் மிதந்து கொண்டிருக்கப் பிடிக்கவில்லே அவளுக்கு.

காலேயில் ரஞ்சித் சசீந்திரநாத்தைப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகச் சொன்னுன். போலீஸிடம் தன்னேக் காட்டிக்கொள்ள விரும்பாததால் அவன் தானே போகவில்லே. ஸ்டேஷன் அங்கிருந்து ஆறு கோச தூரம்.

சசீந்திரநாத் சென்ற பிறகு ரஞ்சித் நரேன்தாஸிடம் போய், "அவளே ஏன் தனிக் குடிசையிலே வச்சீங்க?" என்று கேட்டான்.

நரேன்தாஸ் நூல் சுற்றிக்கொண் டிருந்தான். வரவர மாலதியால் அதிகத் தொந்தரவு ஏற்படுவதாகத் தோன்றியது அவனுக்கு. அவன் பதில் சொல்லவில்லே.

மாலதி தங்களுடன் வசிப்பதில் நரேன்தாஸுக்கு விருப்பம் இல்லே என்பது ரஞ்சிதத்துக்குப் புரிந்தது. அவனுக்கு ஆசாரம் இருந்தது. வீட்டில் லட்சுமி படம் இருந்தது. ஆகவே ரஞ்சித்துக்கு இதுபற்றித் தொடர்ந்து பேசத் துணிவு வரவில்லே. அவன் மாலதிக்கு என்ன உறவு? அவள் இனி தனிக்குடிசையில் இருக்க வேண்டியதுதான். அவள் இனி வீட்டுக்குள் இருக்க முடியாது.

ஸ்டீமரிலும் ஒரு மனிதன் — மேக்ன நதியில் பிரயாணம் செய்து கொண்டிருப்பவன் - கிராதியின் மேல் சாய்ந்துகொண்டு மாலதியைப் பற்றி நினேத்துக்கொண டிருந்தான். ஆற்றின் இருகரைகளிலும் எவ்வளவு மரங்கள், செடிகள்! ஸ்டீமர் போகப் போக அவனுக்குத் தோன்றியது : ஒரு சிறுமி ஆற்றங்கரையில் மரங்களுக்குக் கீழே வேகமாக ஓடிகொண் டிருக்கிருள். அவளுடைய தலேமயிர் பறக்கிறது. வெறும் உடம்பு. இடுப்பில் புடைவையைக் கச்சமாகக் கட்டிக்கொண் டிருக்கிருள்.

தாமோதர்தி மடத்தைக் கடந்துவிட்டான் சாம்சுதீன். இதோ உத்தவ்கஞ்சு வந்துவிடும். ஆனல் அவனுக்கு இதெல்லாம் தெரியவில்லே. ஒரு பெண் வயல்களேக் கடந்து ஓடிக்கொண் டிருப்பது தான் தெரிந்தது. அவன் எதையோ அணுக விரும்பினுன். ஆனல் முடியவில்லே. மாலதி காணுமற்போன முதல் சாம்சுதீன் ஒடுங்கிப் போய்விட்டான். ஜப்பர் அவனுடைய ஜாதிக்காரன், லீக் கட்சியின் தூண். அந்த ஜப்பர் காசுக்கு ஆசைப்பட்டு இந்த இழிவான காரியத்தைச் செய்துவிட்டான். மலர் போன்ற வாழ்க்கையை நாசமாக்கி விட்டான். தன் சிறுமிப் பருவத்தில் ஆண்டு முழுவதும் மலராக மலர்ந்திருந்த அவள் இப்போது உயிர் வற்றிப்போய்ப் பைத்தியம் போலாகிவிட்டாள். ஏதோ ஒரு விபரீதம் நடக்கும் என்று சாம்சுதீனின் உள்ளுணர்வு கூறியது. அவன் தன் மனக்

கண்ணில் தெரிந்த காட்சியிலிருந்து பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

பேலு தன் கன்றுக்குட்டியைப் புல்வெளிக்குக் கொண்டு போய்க்கொண் டிருந்தான். நாற்புறமும் நெல், பருப்பு வயல்கள். அதனால் கயிற்றை இறுகப் பிடித்துக்கொண் டிருந்தான் பேலு. கயிற்றைச் சற்றுத் தளர்த்தினுல் கன்று நெல்லிலோ பருப்பிலோ வாய் வைத்துவிடும். இந்த மாதத்தில் இரண்டு தடவை கௌர் சர்க்காரின் வேலைக்காரன் அப்துல் கன்றைப் பவுண்டில் கொண்டு போய் அடைத்துவிட்டான். வேலு நொண்டியாகி விட்டதால் இப்போது யாரும் அவனை லட்சியம் செய்வதில்லை. அவனுக்குப் பயப்படுவதில்லை. அவன் எவ்வளவோ பாவம் செய்திருக்கிறுன். அதன் பலனை இப்போது அநுபவிக்கிறுன் என்று எல்லாரும் நினைக்கிறுர்கள்.

இப்போது உலகத்திலே இருக்கிற எல்லாப் பெரிய மனிதர்களை யும் கத்தியாலே குத்திக் குடைய அவனுக்கு ஆசைதான். ஆனுல் முடியவில்லை. அவன் கையில் சக்தியில்லை. கறுப்புக் கயிற்றில் சோழி கட்டிய அவனுடைய கை வலுவின்றித் தொங்கியது. ஒவ்வொரு சமயம் அவனுக்கு அதை ஒரே வெட்டில் துண்டித்து விடலாமா என்று தோன்றும். கழுத்தை வெட்டுவது போலக் கையை வெட்டிவிட்டால் என்ன? ஆனுல் அதுவும் செய்ய முடியவில்லை. அவனுக்கு இந்த வலுவற்ற கையின்மேல் பாசம் போகவில்லை. வெயிலில் அந்தக் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும்போது அதைத் தன் குழந்தையாக நினைத்துக் கொள்ளுவான் பேலு.

அவன் கயிற்றைப் பிடித்துக் கன்றை இழுத்துக்கொண்டு நடந் தான். கன்றுக்கோ அந்த இடத்தை விட்டு நகரவே மனம் இல்லை. எலும்பும் தோலுமாயிருந்த அந்தக் கன்றுக்கு வயிறு நிறையத் தீனி போட அவனுல் முடியவில்லை. இந்தக் கையும் இந்தக் கன்றும் அவனை பைத்தியமாக்கின; ஆன்னுவுந்தான். அவன் இப்போது பழைய பேலு, சடுகுடு விளையாட்டு வீரன் பேலு - இல்லையே! அவனுடைய பீபி பிறர் வீடுகளுக்குப் போகிறுள். அவன் யாரிடம் சொல்வான், இந்த வெட்கக்கேட்டை! இரவில் பீபி பக்கத்திலிருந்தால் அவனுக்குத் தூக்கம் வராது. அவள் இப்போது எங்கோ கேளிக்கை செய்துகொண் டிருப்பாள். ஹாஜிசாயபுவின் சிறிய பிள்ளை ஆகாலு, அவளுக்காக மூங்கில் காட்டில் ஒளிந்துக் கொண்டிருப்பான். அவன் கன்றுக்குட்டியை மேய்க்க வந்து விட்டால் அல்லது நெல் கதிரைத் திருடப் புறப்பட்டுவிட்டால் அவனுடைய பீபி ஊர் மேயக் கிளம்பிவிடுவாள்.

இப்போது அவன் எப்படிக் காலம் தள்ளுகிருன்; எப்படி அவனுடைய குடும்பம் நடக்கிறது? இரண்டு பேர் அடங்கிய குடும்பம்?

மனவருத்தத்துடன் ஆற்றங்கரையில் சுற்றுவான் பேலு. கன்று கூட இருந்தால் வேகமாகவும் நடக்க முடியாது. கன்றை இழுத்துக் கொண்டு நடப்பான். சமயம் பார்த்துத் திருட்டுத்தனமாக நெல் கதிரை நறுக்கி மடியில் வைத்துக்கொள்வான்; ஜோட்டன் முன்பு செய்வாளே, அதுபோல.

ராத்திரி வேளையில் உளுத்தம்பயிரைப் பறித்துக்கொண்டு வந்து விடுவான். பார்லி, கோதுமைப் பருவ காலத்தில் பார்லி, கோதுமை. இதெல்லாம் தனியாகச் செய்ய முடியாது அவனுல். பீபி அவனுக்கு உதவி செய்வாள். அவள் வயலுக்குள் நுழைந்து கதிரை அறுப்பாள், நிலா காயும் இரவுகளில். அவன் வரப்பில் நின்று கொண்டிருப்பான்.

நடுநடுவே குரல் கொடுப்பான், ''யாரது?'' என்று.

சீட்டியடிப்பது போல் பதில் ஒலிக்கும். ''நான்தான்.''

''கூட யாரு?''

''மியான் சாயபு.''

ஆன்னுவுக்குக் குஷி பிறந்துவிட்டால் அவனை மியான் சாயபு என்று கூப்பிடுவாள். அந்தச் சமயங்களில் அவள் அவனுடைய ஆன்னு. அவள் இன்னும் யாரையோ காதலிக்கிருள் என்பதையே மறந்துவிடுவான் பேலு. பீபியோடு கதிர் திருட வயலுக்கு வந்துவிட்டால் அவனுக்குக் கவலையில்லை. ஆனல் அவளை வீட்டில் விட்டுவிட்டு வந்தால் அவனுக்கு அவள்மேல் சந்தேகம் வளர்ந்துகொண்டே இருக்கும். அவள் திருட்டுத்தனமாக வேறு வீட்டுக்குப் போய்விடுகிருள். அவள்மேல் வரும் கோபத்தை அவன் கன்றுக்குட்டியின்மேல் காட்டி அதைக் காலால் உதைப்பான். சனியன் பிடித்த காக்காய் கூட எனக்குப் பயப்படவில்லையே! நாற்புறமும் மைதானம். பேலுவின் மனக்கண்ணில் பைத்தியக்கார டாகுர் நடந்துபோய்க் கொண்டிருப்பது தெரியும். அவருடைய தலைக்குமேல் பலவிதப் பறவைகள் பறக்கும். அப்போது அவன் தன் முரட்டுக் குரலில் கத்துவான், ''டாகுர் நீ என்னை நொண்டியாக்கிட்டியே!'' என்று.

அவன் தன் வலது கையால் கன்றுக்குட்டியை இழுத்துக் கொண்டு போனுன். கன்று செங்கடம்பு மரத்தடிக்கு வந்ததும் அங்கேயே மரமாக நின்றுவிட்டது. அதை அங்கிருந்து கொஞ்சங் கூட அசைக்க முடியவில்லை அவனல். இத்தனை சிறிய பிராணியை அவனல் அசைக்க முடியவில்லையே!

அவனுக்கு எரிச்சல் அதிகரித்துக்கொண்டு வந்தது. கன்றுக் குட்டி எதையோ பார்த்துப் பயப்பட்டது. அவன் நாற்புறமும் திரும்பிப் பார்த்தான். ஓ, சனியன் பிடித்த அந்தக் கோவில்காளை! ஹாஜிசாயபுவின் கோவில்மாடு இரண்டு முன்கால்களையும் ஊன்றிக் கொண்டு, பின்னங்கால்களை உயரே தூக்கி, வாலை விறைப்பாக வைத்துக்கொண்டு கொம்புகளால் மண்ணைக் குத்தி எடுத்தது. கன்றுக்குட்டியைப் பயமுறுத்தியது. அது நெல்லைத் தின்றாலும் யாரும் எதுவும் சொல்ல முடியாது. மண்ணைக் குத்தித் தன் பலத்தைச் சோதித்துப் பார்த்துக் கொண்டது அது. கூர்மையான கொம்பு-கத்தி முனைபோல பளபளப்பாக இருந்தது. அது இஷ்டம் போல் சுற்றிக்கொண்டிருக்கும். கோவில்மாடு என்று யாரும் அதை ஒன்றும் செய்வதில்லை. அது கொம்புகளைத் தீட்டிக்கொண்டு ராஜாபோலக் கம்பீரமாகக் கழுத்தை நீட்டிக்கொண்டு மைதானத்தில் நின்றது. இப்படிப்பட்ட வீரம் நிறைந்த பிராணியைக் கண்டால் பேலுவின் பிராணன் வற்றிவிடுகிறது. அந்தக் கன்றுக் குட்டியைக் கண்டாலே அதை விரட்ட ஓடி வரும் அது. ஒருநாள் அது கன்றுக்குட்டியின் வயிற்றைக் கிழித்துவிடப் போகிறது. ஒரு சாதாரண மிருகத்துக்கா பேலு பயப்படுவான்! அவன் தன் தைரியத்தைக் காட்டிக்கொள்வதற்காக, 'நாசமாப் போன மாடே!' என்று அதைத் திட்டினான்.

திட்டியதோடு திருப்தி அடையவில்லை. அவன் பலி கொடுக்க உபயோகிக்கும் கத்தியால், "பிஸ்மில்லா ரகிமானே ரகீம்" என்று சொல்லி அதன் கழுத்தை வெட்டத் துடித்தான். அவன் உபயோகித்த வசவுகள் யாரைக் குறித்துச் சொல்லப் பட்டவை என்று சொல்வது கஷ்டம். எந்த மாடு ரொம்ப மோசம்? அவன் முன்னால் நிற்கும் மாடா, அல்லது ஆகாலுவா?

அவன் கத்தினான்: "நாசமாப் போன காக்கா! நாசமாப் போன ஆகாலு."

கட்டம் போட்ட லுங்கியும், தலையில் துருக்கிக் குல்லாயும் அணிந்துகொண்டு தாடியில் அத்தர் தடவிக்கொண்டு பேலு வீட்டு வாசல் வழியாகப் போனான் ஆகாலு. சிவப்பு நிறத் துருக்கிக் குல்லாய், அதில் ஒரு கறுப்புக் குஞ்சம, காக்கை மாதிரி.

"ஏய், ராஸ்கல்! நீ என் பெண்டாட்டி மேலே கையை வைக்கிறியா? நாசமாப் போக நீ! என் வீட்டு வாசல்லே எப்படிப் போறே, பார்க்கிறேன்" என்று சொல்லி, அவன் தன் வீட்டுவாசலில் கல்யாண முருங்கைக் கிளைகளை நட்டு வேலி போட்டுவிட்டான்.

"இது பொது வழியில்லை, மியான்! இது ரஸ்தா இல்லே!" ஆனால் அவன் காலையில் எழுந்து பார்த்தபோது வேலியை யாரோ பிய்த்துப்

போட்டிருந்தார்கள் பீபியின் முகத்தை நிமிர்ந்து பார்க்கக்கூடத் துணிவு ஏற்படவில்லை பேலுவுக்கு. அவளைக் கேட்டால் எரிந்து விழுவாள்; "எனக்கென்ன தெரியும், யார் வேலியைப் பிய்ச்சு எறிஞ்சாங்க?" என்று.

"நாசமாப் போறவ! உனக்குத தெரியாதாக்கும்!" என்றெல்லாம் அவன் கத்தலாம். ஆனால் இப்போதெல்லாம் அவனுக்கு அவளிடம் பயம். ஜப்பர் பச்சை நிறத்தில் கட்டம் போட்ட புடைவை வாங்கிக் கொடுத்தான் அவளுக்கு. வாசனைத் தைலம் வாங்கிக் கொடுத்தான். பதிலுக்கு அவள் அவனுக்கு என்ன கொடுத்தாளோ, யாருக்குத் தெரியும்? பேலு தன் கை நொண்டியாகி விட்டதற்காக எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டான். இப்போது அவனுடைய பீபியிடம் ஒரே ஒரு துண்டும் ஒரு கிழிந்த புடைவையுந்தான் இருக்கின்றன. இரவில் வயலில் கதிர் திருடப் போகும்போது அவள் கிழிந்த புடைவையைக் கட்டிக்கொள்வாள். வீட்டுக்குள் இருக்கும் போது துணடைத்தான் உடுத்தியிருப்பாள். எப்போதாவது துண்டு ஈரமாகிவிட்டால் அதை வேலியின்மேல் காயப்போடுவாள். அப் போது அவள் நிர்வாணந்தான் அநேகமாக என்ன, முற்றிலுந்தான்!

சீதாமர வேலி மறைவில் வீடு. எதிரில் புதர், காடு. வேலியின் மறுபுறம் செல்பவர்களுக்குத் தெரியாது வேலியின் மறுபக்கத்தில் பேலுவின் பீபி நிர்வாணமாக உட்கார்ந்துகொண்டு சோறு சமைப்பாள், அல்லது கோதுமை வறுப்பாள், அல்லது மக்காச் சோளம் ஊறவைப்பாள். எந்தக் காலத்தில் எந்தத் தானியம் விளைகிறதோ அதைத் திருடிக்கொண்டு வந்து அதைக் கொண்டு எப்படி ஒரு வருஷத்தைக் கடத்துவது என்று கவலைப்பட்டுக் கொணடே வேலை செய்வாள் பேலுவின் பீபி.

பீபி இப்படி நிர்வாணமாக உள்ளே வேலை செய்யும்போது பேலு வாசலில் உட்கார்ந்துகொண்டு ஹுக்கா பிடிப்பான். இடை யிடையே வேலியிடுக்கு வழியே பீபியின் வாழைக் குருத்துப் போன்ற இளமையைப் பார்த்து ரசிப்பான். சரியான பராமரிப்பு இல்லாமல் அந்த இளமை வீணாகிக்கொண் டிருந்தது. அவளுக்குத் தலையில் தடவிக்கொள்ள எண்ணெய் இல்லை. கண்களில் மை தீட்டிக்கொள்ள வழியில்லை. விசேஷ நாட்களில் பீபி கடன் வாங்கித் தலைக்கு எண்ணெய் தடவிக்கொண்டு அலங்கரித்துக் கொண்டால், அவளை அழைத்துக்கொணடு படகில் உல்லாசப் பிரயாணம் செய்யத் தோன்றும் பேலுவுக்கு.

பேலு வீட்டில் இருந்தால் வாசலில் காவல் காத்துக்கொண் டிருப்பான். யாராவது அங்கே வந்தால் விரல்களால் சுண்டி ஒலி யெழுப்புவான். இரண்டு தடவை இந்த ஒலி வந்தால் ஆன்னு

ஜாக்கிரதையாகி விடுவாள். வேலையை அப்படியே போட்டு விட்டு அவசர அவசரமாகப் புடைவையை எடுத்து உடுத்திக் கொள்வாள். திருடி வந்த கதிர்களைச் சட்டிப் பானைக்குள் போட்டு மறைப்பாள். அவள் ராத்திரியில் கதிர் திருடி வந்தாள் என்பதை யாராலும் கண்டுபிடிக்க முடியாது.

வேலிக்கு அப்பாலிருந்து திருட்டுத்தனமாகப் பீபியைப் பார்க்க ரொம்பப் பிடிக்கும் அவனுக்கு. சில சமயம் கண் கண்ணாகக் கிழிந்த துண்டை உடுத்தியிருப்பாள் அவள். மூங்கில் தட்டி மாதிரி ஓட்டை ஓட்டையாக இருக்கும் அது. அவன் முன்பு ஹாஜிசாயபுவின் வீட்டுத் துறையை ஒட்டிய புதரில் ஒளிந்துகொண் டிருப்பானே ஹாஜிசாயபுவின் இரண்டாவது பீபியைப் பார்ப்பதற்காக, அது போல அவன், வீட்டுக்குள் தன் பீபியைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பான். தன் சொந்த பீபியின் நிர்வாணமான உடலைப் பார்க்க அவனுக்கு ரொம்ப ஆசை.

இந்த வறுமையிலும் பற்றுக்குறையிலும் எப்படித்தான் உடம்பை இவ்வளவு வாளிப்பாக வைத்துக்கொண் டிருக்கிறாளோ அவள்? ஆகாலுவின் ஆஜானுபாகுவான உடல், உரமேறிய நெஞ்சு, சிவப்பு நிறக் குல்லாய் இவையெல்லாம் கானல் நீர்போல் பேலுவின் ஆசையைக் கிளப்பிவிடும்.

ஆகாலு தாடியில் அத்தர் தடவிக்கொள்வான். அவன் பெரிய தந்திரசாலி. அவன் பேலுவின் வீட்டு வழியே போகும்போது அத்தரின் மணம் வீட்டுக்குள் பரவும். அந்த மணத்தை முகர்ந்ததும் ஆன்னுவின் நெஞ்சு குதிக்கத் தொடங்கிவிடும். அவளுடைய ஆள் வந்துவிட்டான்! மூங்கில் காட்டுப் பக்கம் போயிருப்பான்! அவள் உடனே ஜப்பர் கொடுத்திருந்த பச்சைப் புடைவையைக் கட்டிக் கொண்டு வெளியே கிளம்பிவிடுவாள்.

"எங்கே போறே?"

"மதிஉர் வீட்டுக்கு. அவ அவலுக்கு நெல் ஊறப் போட்டிருக்கா, வறுத்துக் கொடுத்தா ரெண்டு தொன்னை அவல் கொடுப்பா."

"வேறே ஒண்ணும் கிடைக்காதா?"

"வேறே என்ன கிடைக்கும்?"

"ஏன், முத்தம் கிடைக்காதா?"

புருஷன் தன்னைச் சந்தேகிப்பது ஆன்னுவுக்கு நன்றாகப் புரியும். அத்தர் மணத்தை அவனும் மோப்பம் பிடித்துவிட்டான்! அல்லா இந்த மனிதனை நொண்டியாக்கி வலுவைப் பிடுங்கிக் கொண் டாரே, மோப்ப சக்தியை ஏன் பிடுங்கிக் கொள்ளவில்லை? சில சமயங்களில் காதல் வேண்டியிருந்தது ஆன்னுவுக்கு.

ஆகாலு, ஆன்னுவின் காதலைத் தன்னிடமிருந்து பறித்துக்கொண்டு விட்டான் என்று பேலுவுக்குப் புரியும். அப்போது அவன் பலி ஆடு வெட்டும் கத்தியை எடுக்கத் துடிப்பான். ஆனால் நண்பகல் வெயிலில் ஆகாலு சிவப்புநிறத் துருக்கிக் குல்லாயும், கறுப்புநிற மஸ்லின் ஜிப்பாவும், கட்டம் போட்ட லுங்கியும் அணிந்து கொண்டு போவதைப் பார்க்கும்போது அவனும் ஒரு கோயில் காளை என்றே தோன்றும்.

மூன்று கோவில் மாடுகள் மூன்று பக்கங்களிலிருந்து பேலுவை விரட்டிப் பைத்தியமாக அடித்தன. ஒன்று ஹாஜிசாயபுவின் கோவில் காளை, இரண்டு ஆகாலு, மூன்று, பைத்தியக்கார டாகுர்.

பேலு கன்றுக்குட்டியை இழுத்துக்கொண்டு சென்றான்.

அவன் சில சமயம் பலியிடும் கத்தியைக் குடிசையின் எரவாணத்தில் எங்காவது ஒளித்து வைத்திருப்பான். ஆன்னு அவனுடைய கழுத்தை வெட்டிவிட்டு ஓடிப் போனாலும் போய்விடுவாள். இரவும் பகலும் அவனுக்கு அவநம்பிக்கை. அவன் அடிக்கடி எரவாணத்தில் பார்த்துக் கொள்வான், கத்தி இருக்கிறதா என்று. அதையும் ஆகாலு, ஆன்னு மூலம் எடுத்துக்கொண்டு போய் விட்டானோ என்று சந்தேகம் தோன்றும்.

அவனால் கன்றை அசைக்க முடியவில்லை. கோவில்மாடு பூதாகாரமாக நின்றுகொண் டிருந்தது. இந்தப் பக்கம், அந்தப் பக்கம் திரும்பாமல் கன்றையே முறைத்துப் பார்த்தது. நடுநடுவில் அவன் கண்ணுக்கு முன்னால் அது மியான் ஆகாலுத்தீனாக மாறிவிட்டது! கன்றுக்குட்டியை விரட்டுவதற்காக வாலைத் தூக்கியது அது.

அது கொம்பை உயர்த்திக்கொண்டு இந்தப் பக்கம் ஓடிவரலாம்! அது ஓடிவந்தால் கன்றும் ஓடும். பேலு கயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்தால் அவனையும் இழுத்துக்கொண்டு வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்துவிடும், நாசமாப் போன மாடு! அதற்கு முன்னாலே இருக்கிற வயல்கள், அவற்றில் விளைந்திருக்கும் பயிர், பசும்புல் எல்லாவற்றையும் தின்றுவிடலாம் என்று அதற்கு நினைப்பு! 'இந்த உலகத்திலே என் தீனியிலே பங்கு கேட்க யாருக்குத் தைரியம் இருக்கு? யார் என் முன்னாலே வரமுடியும்?' என்று கேட்பது போல் இருக்கும் அது நிற்கும் நிலை.

பேலு மாட்டை ஆபாசமாகத் திட்டினான். அதன் முன்னால் போகப் பயமாக இருந்தது கன்றுக்குட்டிக்கு. கன்றைச் சொல்லிக் குற்றம் என்ன? அவனுக்கே பயமாக இருந்தது. அவன் அவசர அவசரமாக ஒரு கிட்கிலா மரக்கிளையை ஒடித்து வைத்துக்கொண் டான். ஒரு கையாலேயே அதன் இலைகளைப் பிய்த்து எறிந்து விட்டு ஒரு ஈட்டிமாதிரி அதைச் செய்துகொண்டான். அதைத்

தலைக்கு மேல் கையால் சுழற்றினான். அவனுக்கு எவ்வளவு தைரியம், சக்தி இருக்கிறதென்று மாடு பார்க்கட்டுமே!

கம்பைச் சுழற்றி அதைப் பயமுறுத்தப் பார்த்தான் அவன். அவன் சாதாரண ஆள் இல்லை. பேலுவாக்கும்! ஒரு கை போனாலும் அவனுக்கு இன்னும் பழைய வலு இருக்கிறது. மாடு அருகில் வந்தால் அதை உதைத்து நொறுக்கிவிடுவான் அவன். இதுதான் அவன் மாட்டுக்கு உணர்த்த விரும்பியது.

ஒரு நாள் மாடு கன்றுக்குட்டியைத் துரத்தியது. பேலுவால் தன் நொண்டிக் கையுடன் கன்றைத் தடுக்க முடியவில்லை. கன்று அவனை இழுத்துக்கொண்டு வீட்டில் கொண்டு வந்து சேர்த்து விட்டது. மாடு, மகாமாரியைப் போல் திடுதிடுவென்று வீட்டு வாசலுக்கு வந்துவிட்டது. கோவில் மாட்டுக்குத் தான் எத்தனை பிரதாபம்!

அது வீட்டு வாசலுக்கு வந்ததும் எங்கும் ஆரவாரம். கன்று வீட்டுக்குள் நுழைந்துகொண்டது. மாடு கொம்புகளால் பேலுவின் குடிசையையே பிய்த்துப் போட்டிருக்கும். நல்ல வேளை, ஆன்னு வின் கையில் சூடான கஞ்சிச் சட்டி இருந்தது. அவள் மாட்டைக் கண்டு பயந்து கஞ்சியை அதன் மேல் கொட்டிவிட்டாள். அதன் முகம் வெந்துப் போய்விட்டது. அது, 'அம்மா அம்மா' என்று அரற்றத் தொடங்கியது. வாலைத் தூக்கிக்கொண்டு வயற் பக்கம் ஓடிவிட்டது. அதுமுதல் மாடு அதன் எல்லைக்குள் நிற்கும்; பேலு அவனுடைய எல்லைக்குள் இருப்பான். மாட்டின் முகம் வெந்து போய்விட்டது. ஒரு கண் அழுகிப் போய் நெற்றிக்குள் இடுங்கி விட்டது. பெரியம்மையால் பேலுவின் ஒரு கண் போய்விட்டது. ஆகவே இரு பிராணிகளுக்கும் ஒவ்வொரு கண்தான். சமயம் கிடைத்தால் இரண்டும் சண்டை போடும்.

பேலுவுக்கு இப்போது பயந்தான். இருந்தாலும் கையில் தடி இருந்ததால் பயம் கொஞ்சம் குறைந்திருந்தது. அவன் கன்றைக் கூட்டிக்கொண்டு நடந்தான். மாஜி வீட்டு வயல் வரப்பில் நல்ல புல் வளர்ந்திருந்தது. அவன் கன்றை அங்கு விட்டுவிட்டுக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்தான். நாற்புறமும் நெல் வயல்கள். 'கன்று புல்மேயும்போது 'சப் சப்' என்று ஒளி எழுந்தது. அது வாலை ஆட்டிக்கொண்டு கவலையில்லாமல் புல்லை மேய்ந்தது. அது புல் மேய்வதைப் பார்த்து ஏனோ பேலுவும் உணர்ச்சி வசப் பட்டுப் போனான். அவனுக்கு கடந்த இரவின் நினைவு வந்தது.

இரவு முழுவதும் அவன் பயத்தால் தூங்கவில்லை. சாயங்காலத்தி லிருந்து ஆன்னு வீட்டில் இல்லை. கிழிந்த புடைவையைக் கட்டிக் கொண்டு எங்கேயோ போய்விட்டாள் அவள். அவன் அவளைப்

பக்கத்து வீடுகளில் தேடினுன். ஹாஜிசாயபு வீட்டுக்குப் போக அவனுக்குப் பயம். அவனைக் கண்டால் ஹாஜிசாயபுவின் இரண்டாவது பீபி, 'அடியே தோழி லலிதே!' என்று பாடத் தொடங்கி விடுவாள். ஹாஜிசாயபு தடியால் அடிக்க வருவார்.

அவன் திரும்பினுன் வீட்டுக்கு. ஆன்னுவைக் காணும். கடைசியில் அவள் இரவு வெகுநேரத்துக்குப் பிறகுதான் வீடு திரும்பினுள். அவள் தலையில் ஒரு கட்டு உளுந்துக் கதிர். ஹாஜிசாயபுவின் நிலத்திலிருந்து திருடிக்கொண்டுதான் வந்தாளா அல்லது அவள் செய்த குற்றத்தை மறைப்பதற்காக ஆகாலுவே ஒரு மூட்டைக் கதிர் அறுத்துக் கொடுத்தாஞ என்று பேலுவுக்குப் புரியவில்லை.

பீபி சொல்லிக்கொள்ளாமல் வெளியே போனுல் திருட்டுத்தனமாகக் காதல் செய்யத்தான் போகிருள் என்று பேலுவுக்குத் தோன்றும். கள்ளக் காதலன் ஆகாலுவுடன் காட்டில் சரசமாடப் போயிருக்கிருள் பாவி!

கடந்த இரவில் எங்கும் போவதாகப் பேச்சே இல்லை. இருந்தாலும் சொல்லிக்கொள்ளாமல் போய்விட்டாள். அவ்வளவு ஆசை வெறி! தலையில் துருக்கித் தொப்பி போட்டுக்கொண்டு தாடியில் அத்தர் தடவிக்கொண்டு இருட்டில் காட்டுப்பக்கம் போயிருக்கிருன் ஆகாலு. ஆன்னு அத்தரின் மணத்தை மோப்பம் கண்டுகொண்டே இருட்டில் அவனைக் கண்டுபிடித்து விடுவாள். பேலு அன்று கௌர்சந்தா வீட்டுக்கு வேலைக்குப் போவதாகவும் இரவானதும் திரும்பி வருவதாகவும் சொல்லியிருந்தான். இந்த வாய்ப்பை நழுவவிடாமல் பீபி காட்டுக்குப் போய்விட்டாளே, கள்ளக் காதலனைச் சந்திக்க!

வீட்டு வேலை முடிந்துவிட்டால் ஆன்னு கன்றுக்குட்டிக்குப் புல் கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டு வெளியே போய் விடுகிருள். இருட்டில் வயலிலிருந்து உளுத்தம் பயிரைப் பறித்துக் கொண்டு வருகிருள். என்னதான் நடக்கிறதோ? கிராமத்தார் எல்லாருக்கும் தெரிந்து போய்விட்டது, முரட்டுப் பேலுவின் பீபிக்குக் கள்ளக் காதலன் இருக்கிருன் என்று. முரட்டுப் பேலுவின் நிலை இப்படி! அவனுக்கு உள்ளூற ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

அவள் தலையிலிருந்து மூட்டையை இறக்கக்கூட இல்லை அவளுடைய இடுப்பில் காலால் உதை உதை என்று உதைத்தான். அவன் கால் முடமில்லையே! கையின் வலுவும் அவனுடைய காலுக்கு வந்துவிட்டதோ? அந்த உதைகளைத் தாங்க முடியாமல் அவள் குப்புறக் கீழே விழுந்தாள். அடி வாங்கினுல் ஆன்னு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பிலாக்கணம் பாடத் தொடங்கி

விடுவாள், வீட்டில் இழவு விழுந்துவிட்ட மாதிரி. அழுகைக்கு நடுவே ஆபாசமாகத் திட்டுவாள், பேலுவை, ராகம் போட்டு. அப்போது வயல் பக்கம் செல்பவர்கள் பேலுவுக்கு வெறிபிடித்து விட்டது என்று புரிந்துகொள்வார்கள். இது சகஜம் என்று யாரும் பொருட்படுத்த மாட்டார்கள்.

இருந்தாலும் தம்பதிகளுக்கிடையே எவ்வளவு ஆசை!

இப்போது ஆன்னுவின் விவகாரம் எல்லாருக்கும் தெரிந்து போய் விட்டது. சென்ற இரவு இவ்வளவு உதை வாங்கியும் அவள் கொஞ்சமும் அழவில்லை. அவளுக்கு எங்கோ நன்ருகக் காலே ஊன்றிக்கொள்ள இடம் கிடைத்துவிட்டது. அவள் அழுது பிலாக் கணம் பாடித் திட்டினுல் பேலு கவலைப்படுவதில்லை. இந்தத் தடவை அவள் அவனைத் திட்டவில்லை. உண்மையில் எங்கேயாவது போய்விடப் போகிருள் அவள். பேலு தலாக் கொக்காவிட்டால் அவளால் எங்கும் போகமுடியாது. பேலு தலாக் கொடுக்கட்டும் என்றுதான் ஆகாலு விரும்புகிருன். தலாக் கொடுத்தால் அவனுக்குப் பணம் கொடுப்பதாகக் கூட ஆசை காட்டினுன் ஆகாலு. பேலு இப்போது எடுத்தற்கெல்லாம் கத்துவதும் சண்டை போடுவதும். பணம் இன்னும் நிறைய வாங்கச் செய்யும் தந்திரமோ என்று கூடத் தோன்றும். ஆனுல் பேலுவுக்கு உள்ளூறத் தெரியும், அவனுல் பீபிக்குத் தலாக் கொடுக்க முடியாதென்று. பீபி இல்லாவிட்டால் செத்துப் போய்விடுவான் அவன்.

ஆன்னுவை விட்டுக் கொடுக்க எவ்வளவு பணம் வாங்குவது என்று யோசிதத்துக்கொண்டு பேலு ஒற்றைக் கண்ணுல் புன்சிரிப்புச் சிரித்தால் அவனுடைய அம்மைத் தழும்பு முகம் தாடிக்கு நடுவில் அருவருப்பாகக் காட்சி அளிக்கும். பெண்ணுக்குப் பதிலாகப் பணம்.

ஆன்னு இருக்கும் வரையில் வறுமை, பற்ருக்குறை, கடன் பிழைப்புத்தான். அவள் இல்லாவிட்டால் அந்த நாசமாய்ப் போன ஆகாலு பேலுவை வீட்டை விட்டே விரட்டியிருப்பான். ஆகாலு தன் வீட்டு வாசல் வழியே போவதைப் பேலு பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான். ஆகாலு தன் விட்டு வழியே போகும்போது அவனைத் தடியால் ஒரேயடியாக அடித்துவிட தோன்றும் பேலுவுக்கு. நீசப் பயலோட கள்ளக் காதல் மாயமாப் பறந்துடும். ஆனுல் மறு கணமே பேலுவுக்கு ஞாபகம் வரும், தன் ஒரு கை வழங்கவில்லை என்று. பேலு ஆகாலுவை அடிக்கப் போனுல் ஆகாலு அவனைப் பிடித்து அவனுடைய நொண்டிக் கையை முறுக்குவான். பேலு வெறிநாய் போல ஊளையிடுவான். ஆகையால், ஆகாலு அந்தப் பக்கமாகப் போனுல் பேலு அவனுடன் சிரித்த முகத்துடன் பேசு

வான். "எங்கே போறீங்க? இந்தத் தடவை விளைச்சல் எப்படி? கார்த்திக் சால் நெல் சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு. அறுவடையான தும் ஆன்னுவை அனுப்பறேன். ரெண்டு நாழி நெல் கொடுத் தனுப்பறீங்களா?"

ஆகாலுவுக்குக் கோபங் கோபமாக வரும். எப்போ அறுவடை யாகும்னு காத்திட்டிருக்காஞ பேலு? என்ன பதில் சொல்வதென்று தெரியாது அவனுக்கு. 'சரி, ஆன்னு எங்கே?' ஆகாலு திருட்டுத் தனமாகச் சீதாமர வேலிப் பக்கம் பார்வையை ஓட்டுவான். அவனுடைய தாடியின் அத்தர் மணம் அவளுக்கு எட்டவில்லையா? அவன் ஆன்னுவைப் பார்ப்பதற்காக அங்கேயே நிற்பான். ஏதோ பேச்சுக் கொடுப்பான். இங்குமங்கும் பார்த்துக்கொண்டு சொல் வான்: "பீபியை அனுப்பு. ரெண்டு நாழி நெல், பாக்கு, வெத்திலை புகையிலை எல்லாம் கொடுத்தனுப்பறேன்."

பேலு தன் பீபியையே திருட்டுத்தனமாக இடுக்கு வழியே பார்த்துக்கொண் டிருக்கிறுன் என்று தெரிந்தால் அவன் முகத்தில் காரித் துப்பத் தோன்றும் ஆகாலுவுக்கு.

பாவம், இந்த ஆளிடம் மாட்டிக்கொண்டு எவ்வளவு கஷ்டப் படுகிருள் ஆன்னு! அவனை விட்டுவிட்டு வரவும் முடியவில்லை அவளால். பேலு எங்கிருந்து, எப்படித்தான் இவ்வளவு அழகான பீபியைப் பிடித்துக்கொண்டு வந்தானோ? இந்த விஷயம் யாருக் கும் தெரியாமல் இல்லை. ஆனுல் தெரிந்தும் தெரியாதது போல் எல்லாரும் நடந்துகொண்டார்கள். பேலுவின் பீபி ஆன்னு என்ற விஷயம் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. பேலு முறைப் படி ஆன்னுவுக்குத் தலாக் கொடுத்தாலொழிய ஆகாலு அவளைத் தன் வீட்டுக்குக் கொண்டுவர முடியாது. வேண்டுமானுல் அவளை இழுத்துக் கொண்டு வேறு ஏதாவது ஓர் ஊருக்கு ஓடிப் போய்விடலாம்.

தன் பீபி ஒரு நாள் உண்மையிலேயே ஓடிப் போய்விடுவாள் என்று பேலுவுக்குத் தோன்றும். சும்மா ஓடிப் போகமாட்டாள். அவன் மியான் சாயபுவின் கழுத்தை இரண்டாக வெட்டிப் போட்ட மாதிரி அவளும் அவனுடைய கழுத்தை இரண்டாக வெட்டிவிட்டு ஓடிப்போகப் போகிருள்.

இவ்வாறெல்லாம் நினைத்துக்கொண்டு அவன் அன்றிரவு பீபியின் முகத்தைப் பார்த்தான். இவ்வளவு உதை வாங்கியும் அவள் அழவில்லை. சிம்னி விளக்கின் வெளிச்சத்தில் தலையைக் குனிந்து கொண்டு உம்மென்று உட்கார்ந்திருந்தாள். அவள் என்ன செய் வாளோ என்ற பயத்தில் பேலு முன்னிரவில் தூங்கவில்லை. அவன் பிரப்பம்பாயை விரித்துப் படுத்துக்கொண்டு அவளைப் பார்த் துக்கொண்டே இருந்தான். அவளுடைய முகம் இறுகியிருந்தது. கண்

வெளிறிப் போயிருந்தது. அப்போது வெளியே ஏதோ ஒரு பறவை கூவியது. பின்பனிக் காலப் பனி வயலில் விழுந்துகொண் டிருந்தது. கிரவுஞ்சப் பறவைகளின் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளி வந்திருக்கும், இதற்குள். பேலு பெருமூச்சு விட்டான். ஆன்னு கொஞ்சம் அசைந்தாள். இப்போது அவனுக்கு அவளிடம் பரிவு ஏற்பட்டது. பாவம், ரொம்பத்தான் அடிபட்டுவிட்டாள் அவள். அவன் கேட்டான், "எங்கே போயிருந்தே?" என்று.

"சாகப் போயிருந்தேன்!"

"சாக எங்கே போயிருந்தே?"

"வயலுக்கு."

"வயல்லே என்ன வேலை?"

"புல் அறுத்துக்கிட்டு வரத்தான்! புல் இல்லேன்னு உன் அருமை கன்னுக்குட்டி என்னத்தைத் தின்னும்?"

"அவன் எழுந்து உட்கார்ந்தான். "சரி, சோறு போடு"

"என்னலே முடியாது!"

"ஏன் முடியாது? யாரு உனக்குச் சோறு போடறு?"

மறுபடி அவளை உதைக்கலாமா என்றுகூட நினைத்தான் பேலு. ஆனால் அவள் உட்கார்ந்திருக்கும் நிலையைப் பார்த்து அவனுக்கு அவளை அணுகத் தைரியம் வரவில்லை. எரவானத்தில் செருகி வைத்திருந்த கத்தி இருக்கிறதா என்று பார்த்தான். இல்லை. பரபரப்புடன் இங்குமங்கும் பார்த்தான் அவன். ஒற்றைக் கண்ணால் பார்க்கவேண்டி யிருந்ததால் கழுத்தை முழுவதும் திருப்ப வேண்டி யிருந்தது. வேறு எங்கேயாவது வைத்து விட்டோமோ என்று நினைத்தான். தேடிப் பார்த்தால் கிடைக்கும். அவன் பீபியின்மேல் வீணைச் சந்தேகப்படுகிறானே? தவிர, அவனால் பீபிக்கு என்ன சுகம்? ஒருசமயம் அவனுக்கு அவளிடம் அநுதாபம் பிறந்தது. மறுநிமிடமே அவநம்பிக்கை ஏற்பட்டது. அவன் அவள் அருகில் போய் உட்கார்ந்தான் அவளுடைய முதுகை வருடி, அவளை இறுகத் தழுவிக் கொஞ்ச முயற்சி செய்தான். ஆன்னு கடிக்க வரும் பாம்பு போல் சீறினாள். "மியான் என்னைத் தொடாதே! நீ ஒரு சைத்தான், ஒரு ராட்சசன்!"

"என்ன சொன்னே? நான் சைத்தானா, ராட்சசனா?" பேலு எகிறிக் குதித்தான். இவ்வளவு காலத்துக்குப்பின் அவள் சொல்லிக் காட்டு கிறாளா, அவன் சைத்தான் என்று!

பேலுவின் கால் ரத்தம் தலைக்கேறி விட்டது. அவன் ஏதோ ஒரு பயங்கரமான காரியம் செய்யப் போகிறான். அவன் வெளியே இருட்டுக்கு வந்தான். வீட்டுக்குள் இருந்தால் இப்போதே ஒரு கொலை விழுந்துவிடும். நான் சைத்தானா ராட்சசனா என்று முணு

முணுத்துக்கொண்டே அவன் வெளியிலிருந்தே எரவானத்தில் கத்தியைத் தேடினுன் "ஆமா, நான் தொழுகை செய்யறதில்லே, அல்லா பேரைச் சொல்றதில்லே, நான் செஞ்ச பாவததுக்குக் கணக்கு இல்லே. அதையா இப்போ சொல்லிக் காட்டறே நீ?" என்று சொல்லிக்கொண்டே அவன் உள்ளே நுழைந்து தடாரென்று அவள் அருகில் உட்கார்ந்தான். பிறகு தன் முறிந்த இடக்கையைச் செத்த பாம்பைத் தூக்குவது போல் வலக்கையால் தூக்கி அவளுடைய கண்ணுக்கு நேரே ஆட்டினுன். "பீபி, நீ ரொம்பத் தைரியசாலிதான். என் கை ஒடிஞ்சு போனதுதான் உனக்கு இவ்வளவு தைரியததைக் கொடுத்திருக்கு. நீ என்னேச் சைத்தான்னு சொன்னியா? இந்தமாதிரி யாராவது சொன்ஞக் கதறக் கதறச் சாக அடிப்பேன். நீ ஒரு பொம்பளே என்று பார்க்கிறேன். சரி, கத்தி எங்கே? பலி வெட்டற கத்தி?"

"ஏன்? என் கழுத்தை வெட்டப்போறியா?"

"வெட்டித்தான் பார்க்கலாமே, உன் கழுத்து அறுபடறதா, இல்லையான்னு!"

ஆன்னுவின் அழுத்தம் அதிகரித்தது. "இதுவா உன்னுடை எண்ணம்?"

அவள் புல்கட்டுக்குள்ளிருந்து கத்தியை எடுத்துப் போட்டாள்.

"இந்தா. கொடுத்துட்டேன்! எங்கே வெட்டு பார்ப்போம்! உருப்படியா இந்தக் காரியமாவது செய்யறியா, பார்க்கலாம்."

இவ்வாறு கத்திக்கொண்டே அவள் பத்ரகாளி போல் கண்களை அகல விரித்துக்கொண்டு புடைவையை அவிழ்த்தெறிந்து விட்டு நிர்வாண நிலேயில் கழுத்தை அவனுக்குமுன் நீட்டினுள். "உம், தைரியம் இல்லே மியானுக்கு! வெட்ட முடியல்லே!" என்று சொல்லிவிட்டு அவள் விறைத்துக்கொண்டு உட்கார்ந்தாள். பேலுவுக்கு வந்த கோபத்தில் அந்த நிமிஷமே அவளுடைய கழுத்தை வெட்டிவிடலாம் போல் இருந்தது. ஆனுல் சற்றும் பயப்படவில்லை ஆன்னு. ஏனென்ருல் அவனுடைய கண்ணேப் பார்த்தே அவள் புரிந்துகொண்டுவிட்டாள், அவன் பயந்துவிட்டான் என்று. அவன் முன்போல் கண்களை அகலமாக விரித்துக்கொண்டு, கண்களில் ஆத்திரம் ஜொலிக்க, வெறி பிடித்தவள் போல் அட்டகாசமாகச் சிரித்தாள். முன்பொரு நாள் தன் கணவன் வயலில் கொல்லப் பட்டான் என்பதைக் கேட்டுவிட்டுப் பேலுவுடன் ஓடிவரும் போது சிரித்தாளே அதுபோல்.

உடனே பேலு தன் முறிந்த கையைப் போல் தானும் ஜீவனற்றுப் போனுன். முரட்டு மனிதர் அடங்கிப் போய்விட்டதைக் கவனித்

தாள் அவள். அவள் ஏளனமாகக் கேட்டாள்: "என்ன மியான் தைரியம் வரல்லியா? உனக்கு அதுக்கெல்லாம் திராணி ஏது?"

"இல்லே பீபி."

"அப்படியானு, உன் மூஞ்சியை வெளியே காண்பிக்காதே!"

உண்மையாகவே தான் உயிரோடு இருப்பதில் அர்த்தமில்லை என்று தோன்றியது பேலுவுக்கு. பீபியின் கேலிக்குப் பதில் சொல்வதானுல் அவன் தன் தலையைத் தானே வெட்டிக்கொண்டு, வெட்டப்பட்ட தலையைக் கையில் வைத்துக்கொண்டு ஆட வேணடும். ஆனுல் இந்த இருட்டு, அந்தப் பக்கம் கொட்டிலில் இருக்கும் கன்றுக்குட்டியின் கண், நெல்லைத் - திருட்டுத்தனமாக அறுத்துக்கொண்டு வந்து அவன் நடததும் பிழைப்பு — எல்லாமே அவனுக்கு உயிரில் ஆசையை உண்டாக்கியிருந்தன. அவனுக்குத் தலையை வெட்டிக்கொண்டு வெறியாட்டம் ஆடத் துணிவு வர வில்லை. அவன் அவளுக்குத் தெரியாமல் கத்தியைப் புல்லுக்குள் ஒளித்து வைத்துவிட்டுப் பிரப்பம் பாயில் படுத்துக்கொண்டு விட்டான். இரவு முழுவதும் தூங்க முடியவில்லை அவனுல்.

அவன் சற்று அயர்ந்துவிட்டால் பீபி வீட்டுக்கு நெருப்பு வைத்து விட்டு ஓடிப் போய்விடுவாள். எரிந்த சாம்பற் குவியலில் வெந்து கிடப்பான் அவன். ஆன்னுவும் தலைப்பை விரித்துக்கொண்டு ஒரு புறம் படுத்துவிட்டதைப் பார்க்காதிருந்தால் அவன் அன்று பைதத்திய மாகவே ஆகியிருப்பான். அவன் அவள் அருகில் சென்று பார்த தான், அவள் நிஜமாகவே தூங்குகிருளா அல்லது தூங்குவதாகப் பாவனை செய்துகொண் டிருக்கிருளா என்று. ஆன்னு உண்மை யாகவே தூங்கிக்கொண் டிருந்தாள். அவனுக்கு அவள் மேல் அநுதாபம் ஏற்பட்டது. அவளைக் கொஞ்ச ஆசை. ஆனுல் அவன் தன் கழுத்தை அவள் அருகில் கொண்டு சென்றும் அவளைத் தொடத் துணிவில்லாமல் விலகிக்கொண்டான்.

பெண் பாம்பிடம் பயப்படுவதுபோல் அவளிடம் அவனுக்குப் பயம். அவளைக் கொஞ்சப் போனுல் கழுத்தைப் பிடித்துக் கடித்து விடுவாள். அவன் அவளுக்கு அருகில் துண்டை விரித்துக்கொண்டு படுத்தான். காலையில் ஆன்னு அவனை எழுப்பி, "கன்னுக் குட்டியை வயல்லே மேயவிட்டுட்டு வா!" என்ருள்.

மேய்க்கக் கன்றை இழுத்துவந்த இடத்தில்தான் இந்த ஆபத்து. கோவில்மாடு உறுமிக்கொண்டு நின்றது. அது விசாலமான மைதானம், நெல்வயல்கள், சோனுலி பாலி நதிப்படுகை — எல்லா வற்றையும் அலட்சியமாகப் பார்த்துக்கொண்டு அவனைப் பய முறுத்தியது.

ஹாஜிசாயபுவின் சிறிய மகன் ஏற்கனவே நல்ல உயரம். இன்னும் நல்ல உயரமாக ஆசை அவனுக்கு. தலையில் சிவப்புக் குல்லாய். லுங்கி அணிந்துகொண்டு வெயிலில் நின்றான் அவன். தாடியில் அத்தர் மணம். ஆன்று கடந்த இரவு தான் வாங்கிய உதைகளை மறந்துவிட்டு மூங்கில் காட்டுக்குள் நுழைந்தாள்.

பேலு, கோவில்மாடு, ஆகாலுதீன், பைத்தியக்கார டாகுர் இவர்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் எதிரிகளாகி விட்டார்கள். அந்தப் பனிக்காலத்தின் காலைவேளையில் ஸோனாலி பாலி ஆற்றின் படுகையில் வியாபித்திருக்கும் தெய்வத்துக்குத்தான், கோவில் மாடு வேகமாகப் பாய்ந்தால் பேலுவின் வயிறு எப்படிக் கிழியும் என்று தெரியும்.

பேலுவைப் பார்த்துவிட்டு ஊழி நடனமாடுகிறது. மாடு, இதோ பாயப் போகிறது அவன் மேல்!

மாலதி சிரித்தாள். ரஞ்சித்தின் பேச்சைக் கேட்டுச் சிரித்தாள். சிரிப்பிலும் இவ்வளவு வேதனை இருக்கும் என்ற உண்மை ரஞ்சித்துக்கு மாலதியின் முகத்தைப் பார்த்திராவிட்டால் தெரிந்திருக்காது. வறண்ட சிரிப்பு! எவ்வளவு பரிதாபமாக இருக்கிறது மாலதியின் முகம்!

தன் தனிக்குடிசையில் ஒரு வாத்துப் போல் உட்கார்ந்திருந்தாள் மாலதி. குடிசையின் கதவாகப் பயன்பட்ட படலின்மேல் பின்பனிக் காலத்தில் வெயில் விழுந்தது. பின்பனிக் கால இறுதியானதால் கொஞ்சம் குளிரும் இருந்தது. மாலதி ஒரு கம்பளத துண்டை ஆசனமாக விரித்துக்கொண்டு, ஒரு மெல்லிய போர்வையை மேலே போர்த்திக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்; தான் தீட்டுப் பட்டவள்போல. நாற்புறமும் கவனக் குறைவின் அடையாளங்கள். வெளியே நரேன்தாஸ் வைக்கோலைக் குவித்துக்கொண் டிருந்தான். ஆபாராணி நெல்லைத் தூற்றினாள். சோபா, ஆபு வீட்டில் இல்லை.

இப்போதெல்லாம் மாலதி சாதாரணமாக வீட்டை விட்டு வெளியே வருவதில்லை. நடுநடுவே வீட்டுக்கு அருகிலுள்ள கட்டாரி மரத்தடியில் போய் உட்கார்ந்திருப்பாள்.

ரஞ்சித் வந்ததும் படலைத் திறந்துவைத்தாள் அவள். ஏனென்றால் படலைச் சாத்தினால் வீட்டுக்குள் இருட்டாயிருக்கும். அவளுக்கு

வர வர இருட்டு பிடித்துப்போய்விட்டது. மிருகக்காட்சி சாலையி லுள்ள பிராணிபோல் பிழைத்திருக்க முடியவில்லை, அவளால். அவள் இப்போது என்ன செய்வது? அவளுக்குள்ளே என்ன நடக்கிறது? எப்போதும் ஒரு குளிர், ஒரு பயம். நெஞ்சு நடுங்கியது. அவள் வறட்டுச் சிரிப்பு சிரிக்கும்போது நரேன்தாஸுக்குப் பயமாக இருக்கும். அவன் ரஞ்சித்தைப் பார்த்தால் அவனிடம் சொல்லுவான்: "போய்ப் பாருங்க அவளை! பைத்தியம் மாதிரி சிரிக்கிறு!"

இவ்வாறு கேட்டுத்தான் ரஞ்சித் வந்திருந்தான், அவளைப் பார்க்க. அவனைக் கண்டதும் அவள் சாதுவாக, அடக்கம் நிறைந்த இளம் பெண்ணுக ஆகிவிட்டாள். சற்றுத் தள்ளி ஒரு பலகையைப் போட்டு அதில் அவனை உட்காரச் சொன்னுள். ரஞ்சித் வந்து உட்கார்ந் தால் அவளுக்கு எப்படியோ தெம்பு வந்துவிடும். தன் மனத்தில் உள்ளதை அவனிடம் சொல்லவேண்டும் எனறு தீர்மானிக்க முடியும். அவளுக்கு இப்போது என்ன செய்வதென்று தெரியவில்லை. தெரியாததால் அவளுடைய முகம் பரிதாபமாகத் தோற்றம் அளித் தது. அவளால் வாய் திறந்து பேச முடியவில்லை. அவள் அவனைப் பார்த்ததும் ஒரு மயக்க நிலையை அடைந்தாள்.

"நீ ஏன் இந்தமாதிரி பைத்தியக்காரத்தனம் பண்ணறே, மாலதி?"

"என்ன பைத்தியக்காரத்தனம்?"

"நடுநடுவிலே கட்டாரி மரத்தடிக்கு ஓடிப் போய்ப் பேசாமே உக்கார்ந்திருக்கே! ஒணனும் சாப்பிடறதில்லே!"

"ஒண்ணும் சாப்பிடவே பிடிக்கல்லியே!"

"பிடிக்கலேன்னு விடமுடியுமா? சாப்பிடணும், உசிரோட இருக் கணும்."

"நான் உன்னை ஒரு கத்தி கேட்டேனே! ஏன் கொடுக்க மாட் டேங்கறே?"

"உனக்கு எப்போதும் இந்தப் பேச்சுத்தான்."

"ஆமா, எனக்கு வேறே பேச்சு இல்லே."

"நீ இந்த மாதிரியெல்லாம் பண்ணிஞ நரேன் அண்ணு உன்னை வச்சுக்கிண்டு என்ன பண்ணுவார்?"

"என்னை வச்சுண்டு யாரும் ஒண்ணும் பண்ண வேண்டிய தில்லே."

"அப்படிச் சொல்லாதே! அப்படியெல்லாம் சொல்லக்கூடாது."

"நீ என்ன நினைக்கறே டாகுர்? எனக்குப் பிசாசு பிடிச்சிருக்கா?"

"எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை யில்லேன்னு உனக்குத் தெரியாதா?"

"பின்னே நீ ஏன் அண்ணு சொல்றதைக் கேட்கறே?"

"ஏன்ணு உன் மூஞ்சியைப் பார்த்தா எனக்குப் பயமா இருக்கு.

“என்ன பயம்?”

“உன்னோட கண்ணும் முகமும் இயற்கையாகவே இல்லே. நீ முந்தியெல்லாம் இப்படி இல்லையே, மாலதி! மனப்பூர்வமாகக் கடவுளைக் கூப்பிடு. அவர் உன்னைச் சொஸ்தமாக்கி விடுவார்.”

“டாகுர், உனக்குக் கடவுள் மேலே அவ்வளவு நம்பிக்கையா?”

“நான் உனக்கு என்னதான் சொல்லுவேன்? மறுபடியும் நீ ஒரு நாள் தற்கொலை பண்ணிக்குவேன்னு எனக்குப் பயமா இருக்கு.”

“டாகுர், எனக்குச் சாக இஷ்டமில்லே. நீ என்னை நம்பு. நீ பக்கத்திலே இருந்தா, எனக்குச் சாகக்கூடத் துணிவு வரதில்லே.”

சற்று நேரம் மௌனமாக இருந்துவிட்டு அவள் சொன்னாள்: “கத்தியாவது கொடுக்கக் கூடாதா? நீங்க என்னைச் சாகக் கூட விடமாட்டீங்க. நான் என்ன பண்றது இப்போ?”

ரஞ்சித்தின தலைமேல் பின்பனிக் காலத்து வெயில் விழுகிறது. எங்கோ பரிசயமான பறவையின் கூவல். உள்ளே இருளில் மாலதி உட்கார்ந்திருக்கிறாள். வெகுநாட்களாக ரஞ்சித்திடம் ஏதோ சொல்ல வேண்டுமென்று அவள் தூங்கக்கூட முடியாமல் காத்திருக்கிறாள். கண்களுக்குக் கீழே கருமை படிந்திருக்கிறது. கை, கால்கள் மெலிந்திருக்கின்றன. களைத்துச் சோர்ந்த முகம். நாற்புறமும் அலாதியான வெறுமை. அவள் மறுபடியும் கத்தியைப் பற்றியே பேச்செடுக்கிறாள்.

“மாலதி, நீ அன்னிக்கு நெத்தியிலே குங்குமமும், காலில் ஆல்த்தாவும் போட்டுக்கிண்டிருந்தே. எவ்வளவு அழகாயிருந்தது, தெரியுமா?”

மாலதி பதில் சொல்லவில்லை.

“உன் கண்ணு எவ்வளவு அழகாயிருக்கு, மாலதி! என்னாலே உனக்கு ஒண்ணும் பண்ண முடியல்லியேன்னு வருத்தமா இருக்கு. நான் வேறே என்ன சொல்லுவேன்?”

என்னவோ யோசிப்பதுபோல் மாலதி தலையைக் குனிந்துகொண்டாள்.

“நான் போயிடுவேன், மாலதி! இனிமேல் உன்னைப் பார்ப்பேனா இல்லியான்னு தெரியாது. எப்போ பார்ப்பேன்னும் தெரியாது. என்னோட அக்ஞாதவாசம் முடிஞ்சு போச்சு. நான் போறதுக்கு முன்னாலே உன்னைப் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்.”

மாலதியின் கண்கள் விரிந்தன “நான் ஏன் இவ்வளவு பெரிசா பைத்தியம் மாதிரி சிரிக்கறேன்னு நீ கேட்கல்லியே?”

“ஏன் கேட்கணும்? உனக்கு உதவி பண்ண என்னாலே முடியல்லே! கேட்டு என்னப் பிரயோசனம்?”

“உன்னுடை அக்ஞாதவாசம் முடிஞ்சு போச்சா?” கேட்டபோது மாலதியின் நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது.

“ஆமா. நான் இந்தப் பக்கத்திலே இருக்கேன்னு போலீசுக்குத் தெரிஞ்சுபோச்சு. இன்னிக்கோ நாளைக்கோ என்னைப் பிடிக்கப் போலீஸ் வரதுக்குள்ளே நான் இங்கேயிருந்து ஓடிப்போயிடணும்.”

மாலதி தான் ஒரு துக்கத்தில் ஆழ்ந்திருப்பதை மறந்து போனாள். அவள் தன் அன்புக்குரியவனின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். இந்த இளைஞன் அவளிடம் வந்தால் யாரும் சந்தேகம் கொள்ளமாட்டார்கள். காரணம், இவன் எவ்வளவோ காலமாக அவளுக்குக் கத்தி விளையாட்டும் சிலம்பமும் கற்றுக் கொடுத்து வந்திருக்கிறான். ரஞ்சித் ஒரு மகத்தான லட்சியத்தில் பற்று வைத்தவன். மாலதி போன்ற சாதாரண இளம் விதவை அவனுக்கு ஒரு பொருட்டல்ல. அவன் அருகில் வந்தால் அவளுடைய இறுகிய முகம் இயற்கை நிலைக்கு வந்துவிடும். மாலதிக்கு ரஞ்சித்திடம் பயம் என்று நரேன்தாஸும் மற்றவர்களும் நினைத்தார்கள். இப்போது அவன் மறுபடி எங்கோ போய்விடப் போகிறான். அவனும் போய்விட்டால் அவளுக்கென்று என்ன மிஞ்சியிருக்கும்? அவள் இப்போது எல்லாவற்றையும் அவனிடம் சொல்லிவிடலாம். ஆனால் எப்படிச் சொல்லுவாள்? நரேன்தாஸ் தெரிந்தும் மறைத்து வைத்திருக்கும் ஒரு விஷயத்தை! அவள் அழாக்குறையாகச் சொன்னாள். “டாகுர், எனக்குச் சாக இஷ்டம் இல்லே! நீ எங்கேயாவது கூட்டிண்டு போ!”

மாலதியின் கண்களிலிருந்து நீர் அருவியாகக் கொட்டியது.

கொஞ்சங் கொஞ்சமாக மாலை மங்கிக்கொண்டே வந்தது. வயல்களிலிருந்து நெல்லின் மணம் மிதந்து வந்தது. நாற்புறமும் நெல், பருப்பு வயல்கள். பருப்புப் பயிரில் நீலநிறப் பூக்கள் மலரத் தொடங்கியிருந்தன. நெற்பயிரில் கதிர் முற்றியிருந்தது. எங்கிருந்தோ அறுவடைப் பாட்டு காற்றில் மிதந்து வந்தது. இவை எல்லாமே அர்த்தமற்றவையாகத் தோன்றின மாலதிக்கு. ரஞ்சித் என்ன சொல்லப் போகிறான் என்று கேட்கத் துடித்தாள் அவள்.

இதுவரை ரஞ்சித் அவனுடைய சங்கத்தின் கட்டளைப்படி எவ்வளவோ பெரிய பெரிய காரியங்களை அநாயாசமாகச் சாதித்திருக்கிறான். குமில்லாவில் ஹட்சன் துரையைக் கொன்றுவிட்டுத் தப்பியோடி விட்டான். அவன் அகர்த்தலா வழியாகச் சில்சாருக்குப் போய்ப் பிறகு அங்கிருந்து அஸ்ஸாமில் எங்கோ மறைந்துபோய் விட்டதாகப் போலீஸார் நினைத்தார்கள். எவ்வளவோ முயற்சி செய்தும் அவனுடைய இளம் பிராயத்து வரலாற்றைப் போலீஸாரால் அறிய முடியவில்லை. அவனுக்குப் பல பெயர்கள் — ரஞ்சித் சுகமஸ்

தாஸ், சரண்பண்டல் ... ஒரு தடவை ஆற்றுக்கு மறுகரையில் கோபால் சாமந்தா என்ற பெயரில் வாத்தியம் வாசித்தான் அவன். இவ்விஷயங்களைக் கண்டுபிடித்த போலீசுக்கு அவன் இந்த இடத்தில் தான் வாலிபப் பருவததைக் கழித்தான் என்று தெரிய வில்லை. இந்தப் பிராந்தியத்து மக்களுக்கோ ரஞ்சித் தேசத்துக்குச் சேவை செய்கிறுன் என்று மட்டுந்தான் தெரியும்.

இப்போது அவன் முன்னல் மாலதி சோகமே உருவாக உட்கார்ந் திருந்தாள். தான் இதுவரை போற்றிவந்த லட்சியங்கள் எல்லாம் அர்த்தமற்றவையாக ரஞ்சித்துக்குத் தோன்றின. மாலதியின் இந்நிலையைப் பார்க்க அவனுக்குத் தாளவில்லை. அவன் தன்னைப் பலவீனனுக உணர்ந்தான்.

அவனுக்கு முன்னே உலகமே நெல்வயலாக விரிந்து கிடக்கிறது. ஒரு துண்டு நிலத்தை வைத்துக்கொண்டு அவன் என்ன செய்வான்? மாலதியை எங்காவது கொண்டு போய்ச் சேர்க்க முடியவில்லையே அவனல்! இதுதான் மாலதியின் விதியா? அவனுக்குப் பேச வாயெழவில்லை. அவன் தலையைக் குனிந்து கொண்டே நடந்துபோய் மரங்களுக்குப்பின் மறைந்து போனுன்.

மாலதி தன் குடிசைக்குள் வாத்தைப் போல் அடைந்து கிடந் தாள். சற்று நேரத்துக்குப் பின் சோபா வந்தாள். அவளுடைய இடது கையில் லாந்தர், வலது கையில் ஒரு தட்டில் பொரியும் வெல்லமும் — மாலதியின் இரவு ஆகாரம். அதை வாங்கிக் கொண்டு மாலதி தன் குடிசைப் படலைச் சாத்திக்கொண்டாள். பிறகு அந்த இருட்டில் கண்களை இடுக்கிக்கொண்டு படுத்துக் கிடப்பாள். கண்களில் உறக்கம் இருக்காது. ஏதோ ஒரு பாலைவன எல்லையில் ஒரு மொட்டைமரம் தன்னைக் கைத் தட்டி அழைப்பதாகத் தோன்றும் அவளுக்கு.

ரஞ்சித் நடந்துகொண்டே குளத்தங்கரைக்கு வந்து சேர்ந்தான். மருதமரம் கொப்புங்கிளையுமாகப் பெரிதாக வளர்ந்திருந்தது. நாற்புறமும் கொஞ்சங் கொஞ்சமாக இருட்டுப் பரவியது. தெற்குப் பக்க அறையில் சசிபூஷண் சிறுவர்களுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்தார்.

உரக்கப் படித்துக்கொண்டிருக்கிறுன் சோனு. ரஞ்சித் வீட்டுக்கு வந்தால் சோனு அவனுடைய காதில் படும்படி பெரிய பெரிய வார்த்தைகளை உரக்கப் படிப்பான். தான் இந்த வயதிலேயே எவ் வளவு பெரிய வார்த்தைகளைக் கற்றுக்கொண் டிருக்கிறுன் என்பதை மாமாவிடம் காட்டிக்கொள்ள ஆசை அவனுக்கு. இதை நினைக்கும் போது ரஞ்சித்துக்கு இவ்வளவு கவலைகளுக்கிடையிலும் சிரிப்பு வந்துவிடும். அவன் போய்விடப் போகிறுன்.

இவையெல்லாவற்றையும் விட்டுவிட்டுப் போகக் கஷ்டமாக இருந்தது அவனுக்கு. அக்காவிடம் வளர்ந்தவனுதலால் தனிப்பட்ட பாசம் அவனுக்கு. தவிர, அவளுடைய கணவர் பைத்தியம் என்பதால் அவளிடம் அநுதாபம். அந்த மனிதர் வாழ்நாள் முழுவதும் இப்படியே கவிதையை ஒப்பித்துக்கொண்டு இருந்துவிடப் போகிருர். அண்ணியின் வாழ்க்கை துன்பமயமாகவே கழிந்துவிடும். இந்த ஊருக்கு வரும்போது தன் சொந்த வீட்டுக்குத் திரும்பும் உணர்வு ஏற்படும் அவனுக்கு. இங்கு எல்லாமே அவனுக்குப் பரிசயமானவை. ஆகையால் தான் போவதற்கு முன் கடைசியாக ஒரு தடவை எல்லாவற்றையும் பார்த்துவிட்டுப் போக விரும்பினுன் அவன்.

குளத்தங் கரையிலிருந்து அவனுக்குப் படிப்பறையின் வெளிச்சம் தெரிந்தது. சசிபூஷண் உடம்பை ஆட்டி ஆட்டிக்கொண்டே பாடம் கற்பிப்பார். சரித்திரம் கற்பிக்கும்போது 'ஜனனீ ஜன்ம பூமிஸ்ச ஸ்வர்கதபி கரீயஸ’ என்று சொல்லும்போது இந்த மண்ணுக்காகவும் மண்ணில் வசிக்கும் மக்களுக்காகவும் உணர்ச்சி வசப்பட்டு விடுவார் அவர். இந்தச் சிறுவர்களைத் தம் குழந்தைகள் போல் நேசிக்கிருர் அவர்.

ரஞ்சித் இருட்டிலிருந்து கிளம்பி வந்தான். உலகத்தில் அவனுடைய ஒரே உறவு அவனுடைய அக்கா மட்டுந்தான். அவளுடைய கணவரோ பைத்தியம்!

அவன் நேரே வீட்டுக்கு வந்தான். தன் அறைக்குப் போய் உடைகளை மாற்றிக்கொண்டான். தன் சூட்கேஸைத் திறந்து அதில் எல்லாச் சாமான்களும் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்துக் கொண்டான்.

மகேந்திரநாத் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். இந்தச் சமயத்தில் அவர் சூடான பால் குடிப்பார். இப்போது அக்கா அவருடைய காலடியில் உட்கார்ந்திருப்பாள்.

அவன் அக்காவைப் பரிமாறச் சொல்லிக் கொஞ்சம் சாப்பிட்டான். மகேந்திரநாத்தின் அறையில் நுழைந்து அவரை வணங்கிவிட்டு, ''நான் இன்னிக்கே புறப்பட்டுப் போறேன்'' என்ருன்.

ரஞ்சித்தின் இம்மாதிரி செய்கைகள் பெரிய மாமிக்கு வியப்பளிப்பதில்லை. அவன் எங்கே போகப் போகிருன், எங்கே தங்கப் போகிருன் என்று அவனைக் கேட்டால் பதில் கிடைக்காது. முன்பெல்லாம் இது பற்றி அவள் ரஞ்சித்துடன் சண்டை போடுவாள்; இப்போதெல்லாம் அப்படிச் செய்வதில்லை. வேளை கெட்ட வேளையில் அவன் திடீரென்று புறப்பட்டாலும் அவளுக்கு ஆச்சரியம் ஏற்படுவதில்லை. அவள் அதிகம் பேசாமல் அவனுடைய பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வாள்.

தான் செய்வது குறித்து அவளுக்கு உள்ளூற ஏற்படும் கஷ்டம் அவனுக்குத் தெரியும். அவன் போன பிறகு அவள் அழுவாள் என்பதும் தெரியும். அவன் புறப்படுவதற்கு முன் வழக்கம்போல் அவளுக்கு நமஸ்காரம் செய்தான். அவளுடைய சோகமான முகத்தைப் பார்த்து அவளைக் கேட்டான் :

"நீ ஏன் சிரிக்க மாட்டேங்கறே அக்கா? நீ சிரிச்ச முகத் தோடே இல்லேன்னு நான் எப்படிக் கிளம்புவேன்?"

பெரிய மாமி பலக்கச் சிரித்தாள், தம்பிக்கு விடை கொடுக்க.

"உம், இதுதான் என்னோட அக்கா!" என்று சொல்லிவிட்டு, அவன் எல்லாரிடமும் விடைபெறுவதற்காக முதலில் தென் பக்கத்து அறைக்குள் நுழைந்தான். "நான் போயிட்டு வரேன்" என்று சசிபூஷணிடம் சொல்லிவிட்டுச் சோனுவின் தலையில் அடர்ந்து வளர்ந்திருந்த மயிற் கற்றைகளைக் கையால் அளைந்து அவனைக் கொஞ்சினான். "நான் போயிட்டு வரேன். நீங்க சமத்தா இருக் கணும். அம்மா பேச்சைக் கேட்கணும். பெரியப்பாவைக் கவனிச்சுக்கணும், தெரிஞ்சுதா?"

சசிபூஷண் கேட்டார் : "மறுபடியும் தலைமறைவாகப் போயிடப் போறீங்களாக்கும்?"

"ஆமா."

"எப்போ திரும்புவீங்க?"

"திரும்பி வரமுடியாதுன்னு தோணறது."

"ஏன்?"

"சில அசௌகரியம் இருக்கு."

"நீங்க சுதேசி இயக்கத்தைச் சேர்ந்தவர். உங்களைப் பத்தி எல்லா விஷயமும் தெரிஞ்சுக்க எங்களுக்கு வாய்ப்பு இல்லே. ஆனால் சில சமயம் உங்க மாதிரி தேசசேவை செய்யப் போயிடணும்னு தோணறது!"

"இப்பவுந்தான் நீங்க தேச சேவை செய்யறீங்க. இதை விடப் பெரிய சேவை என்ன இருக்கு?"

"ஆனால் பாருங்க, தேசம் எப்போ விடுதலையடையும்னு எனக்குப் புரியல்லே."

"விடுதலை கிடைச்சுடும்!"

"கிடைக்கும். ஆனால் ரொம்பத் தாமதமாறது. நாம எல்லாரும் தேச சேவையிலே இறங்கல்லேன்னுதான் இப்படித் தாமதமாறது."

ரஞ்சித் பதில் சொல்லவில்லை.

"நீங்க என்ன நினைக்கிறீங்க?"

"எதைப் பற்றிச் சொல்றீங்க?"

"தேச விடுதலையைப் பத்தித்தான்."

''எல்லோரும் தேச சேவையில் இறங்கிட்டா, வாழ்க்கை எப்படி நடக்கும் ?''

''நீங்க சொல்றது சரிதான். ஆனல் லீக் போற போக்கைப் பார்த்தாக் கடைசி வரையிலே என்ன ஆகுமோன்னு பயமா இருக்கு.''

ரஞ்சித் இதற்குப் பதில் சொல்ல விரும்பாமல் பேச்சை மாற்றினன். ''இந்தப் பசங்களுக்கு உங்ககிட்டே ரொம்ப விசுவாசம். இப்போ எல்லாம் ரொம்பக் கவனமாப் பல் தேய்க்கருங்க.''

''பல்லுத்தான் ரொம்ப முக்கியம். எங்கே, உங்க பல்லைக் காட்டுங்க, பார்க்கறேன்.''

வேறு சமயமாயிருந்தால் ரஞ்சித் என்ன செய்திருப்பான் என்று சொல்ல முடியாது. ஆனல் இப்போது அங்கிருந்தே போய்விட இருந்ததால் மிகவும் எளியவனக ஆகிவிட்டான். ஆகவே அவன் சற்றும் தயக்கமின்றிச் சசிபூஷணுக்குத் தன் பற்களைக் காட்டினன்.

சசிபூஷண் விளக்கைத் தூக்கி ரஞ்சித்தின் பற்களைக் கவனித்தார். கை தேர்ந்த பல் டாக்டரைப் போல. ஈறுகளை அமுக்கி அமுக்கிப் பார்த்தார். பல்டுவை ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவரச் சொல்லிவிட்டு ரஞ்சித்தின் பக்கம் திரும்பிச் சொன்னர். ''கீழ் வரிசைப் பல்லுகள் நன்ருயில்லே.''

ரஞ்சித் சிரித்துக்கொண்டே கேட்டான். ''என்ன பண்ணணும் அதுக்கு ?''

''தினம் ராத்திரி ஒரு கடுக்காய் சாப்பிடுங்க.'' அவர் வெளியில் போய்க் கையை அலம்பிக்கொண்டு திரும்பி வந்து சொன்னர். ''கடுக்காய் சாப்பிட்டால் பல் கெட்டிப்படும். ஈரல் நன்ருய் வேலை செய்யும். நன்ருத் தூக்கம் வரும். கடுக்காய் ஜீரணத்துக்கும் நல்லது'' என்று சொல்லி நிறுத்திவிட்டு, அவர் தம்முடைய நோட்டுப் புத்தகத்தை எடுத்தார். அதன் அட்டவணையைப் பார்த்து 'கடுக்காய்' எந்தப் பக்கத்தில் இருக்கிறதென்று தெரிந்துகொண்டு அந்தப் பக்கத்தைப் பிரித்தார். பிறகு கடுக்காயின் குணங்களைப் பற்றி விவரமாகச் சொல்லிக்கொண்டே போனர் அவர்.

அந்த நோட்டுப் புத்தகத்தில் ஆயுர்வேதத்தில் பயன்படும் இலைகள், பூக்கள், பழங்களைப் பற்றிய எல்லா விவரங்களும் இருந்தன. ஒவ்வொன்றின் குணங்களும் உபயோகங்களும் விவரமாக எழுதியிருந்தன.

''இதிலே இருக்கிறதெல்லாம் இவங்களுக்குச் சொல்லிக் கொடுங்க. இந்த நாட்டு மண்ணிலே கிடைக்கற சாமான்கள் உலகத்திலே வேற எங்கேயும் கிடைக்காது'' என்ருன் ரஞ்சித்.

''லால்ட்டு ! பல்ட்டு ! உங்க மாமா என்ன சொல்ருர், கேட்டீங் களா? அவர் வெளியூர் போகப்போருர். அவருக்கு நமஸ்காரம் பண்ணுங்க !''

சிறுவர்கள் ஒரே சமயத்தில் எழுந்தார்கள். யார் மாமாவுக்கு முன்னுல் நமஸ்காரம் செய்துவிட்டுத் தன் இடத்தில் திரும்பிப் போய் உட்காருவது என்பதில் அவர்களுக்குள் போட்டி. ரஞ்சித் சொன்னுன. ''பரீட்சை சமயத்திலே இந்தமாதிரி போட்டி போட்டுக்கிணுடு படிக்கணும். பரிட்சையிலே எல்லாரையும்விட முன்னுலே நிற்கணும். எல்லாத்திலேயும் வெற்றி அடையணும்.''

அந்தப் பக்கத்தில் இருண்டிருந்த வராந்தாவில் மணீந்திரநாத் மௌனமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான் ரஞ்சித். அவன் அவரிடம் சென்று, ''மாப்பிள்ளை, இன்னிக்கு நான் ஊருக்குப் போறேன்'' என்று கூறி, அவன் அவருடைய கால்களில் தலையை வைத்து வணங்கினுன். ''நான் நல்ல காரியம் செய்யணும்னு ஆசீர் வாதம் பண்ணுங்க.''

அவர் உட்கார்ந்தே இருந்தார். பேசவில்லை. அவருடைய கண் கள் இருட்டில் தெரியவில்லை. ஆனுல் ஒன்றுமட்டும் தெரிந்தது. இந்த மனிதர் தம் வாழ்நாள் முழுதும் ஒரு பொன்மானின் பின்னுல் ஓடிக்கொண் டிருக்கிருர். அவரைப் பார்த்தாலே ரஞ்சித்தின் கண் களில் நீர் நிறைந்துவிடும்.

அவன் அவசர அவசரமாக மேற்குப் பக்க அறைக்குள் நுழைந் தான். தனமாமிக்கு நமஸ்காரம் செய்துவிட்டுச் சொன்னுன் : ''அக்கா, நான் இன்னிக்குப் புறப்படறேன்.''

''பத்திரமா இரு அப்பா!''

ரஞ்சித் சசீந்திரநாததிடமும் விடைபெற்றுக் கொண்டு அந்த அடர்ந்த இருளில் புறப்பட்டான். சசிபூஷண், சோனு, லால்ட்டு, பல்ட்டு எல்லாரும் அரிக்கேன் விளக்குடன் குளத்தங்கரை வரையில் அவனை வழியனுப்ப வந்தார்கள்.

ரஞ்சித் சொன்னுன். ''இனிமே நீங்க திரும்பிப் போங்க. மாஸ்டர் பாபு ! எனக்கு இருட்டிலே வழி தெரியும். வெளிச்சம் இருந்தாத்தான் கண் கூசும், வழி சரியாத் தெரியாது.''

திறந்தவெளி, ஸோனுலிபாலி ஆற்றின் படுகை, தர்முஜ் வயல், மேலே வானம், வானத்தில் ஒளிர்ந்த நட்சத்திரங்களும் நிர்ஜன மான அந்தத் திறந்த வெளியும் அவனுக்கு அவனுடைய குழந் தைப் பருவத்தை நினைவூட்டிக் கொண்டிருந்தன. சிறுவயதில் அவன், சாம்சுதீன், மாலதி மூவரும் இந்த நதியில் விளையாடு வார்கள். நீந்தி மறுகரைக்குப் போய் விடுவார்கள், கொய்னுப்

படகுக்குப் பின்னால் ரஞ்சித் ஒளிந்துகொள்வான். மாலதி அவனைக் காணாமல் பயந்துபோய், "டாகுர்!" என்று கூப்பிடுவாள்.

இப்போதும் அவள் தன்னைப் பின்னாலிருந்து கூப்பிடுவதாக அவனுக்குத் தோன்றியது 'டாகுர், நீ என்னை யார்கிட்டே ஒப்ப டைச்சுட்டுப் போறே? நீ தேச சேவை பண்ணிக்கிண்டு திரியறியே? நான் மட்டும் இந்தத் தேசத்திலே சேர்ந்தவ இல்லையா? இந்த மண்ணிலேயும் தண்ணியிலேயுந்தானே நானும் வளர்ந்து பெரியவளானேன். என்னோட சுகதுக்கம் உன்னோட சுகதுக்கம் இல்லையா? டாகுர், டாகுர்! நீ ஏன் பதில் பேசமாட்டேங்கறே?'

நினைத்த அளவு வேகமாக நடக்க முடியவில்லை ரஞ்சித்தால். யாரோ இவனைக் கூப்பிட்டுக்கொண்டே இருக்கிறார்கள், பின்னா லிருந்து. "நான் என்ன செய்வேன், டாகுர்?" அவன் தன்னை மறந்து ஒரு மரத்தடியில் நின்றுவிட்டான். அவளுடைய கால்கள் நகர மறுத்தன. அவனுக்கு மேலே வானத்தைப் போல் தூய்மையே உருவாகத் தோன்றுகிறாள் மாலதி. ஓர் அடிகூட முன்னால் வைக்க முடியவில்லை அவனால்.

அவன் இதுவரை நினையாத நினைவுகள் இப்போது திடீரென்று அவனைத் தாக்கின. அவன் தன் லட்சியங்களை, கனவுகளைத் துச்ச மாக மதித்து வேறொரு வாழ்க்கையில் புகலாமா என்று நினைத்தான். இந்தக் காரியத்தின் மகத்துவம் நாட்டு முன்னேற்றத்தின் முக்கியத்து வத்தை விடச் சற்றும் குறைந்ததில்லை என்று அவனுக்குத் தோன்றியது.

அரசமரத்தடியில் நின்றுகொண் டிருந்தான் அவன். அடர்ந்த இருள். இருளில் நின்றுகொண்டே எதையோ பார்க்க முயற்சி செய்தான் அவன். தூரத்தில் கிராமங்களின் விளக்குகள் பொட்டுக் கள்போலத் தெரிந்தன. இரவு வெகு நேரமாகவில்லை. கவிராஜிடமும் புஜங்கனிடமும் கத்திப் பயிற்சி, சிலம்பப் பயிற்சி சம்பந்தமான எல்லா விஷயங்களையும்—எங்கெங்குப் புதிய பயிற்சி நிலையங்கள் ஆரம்பிக்க வேண்டும், அவன் இல்லாதபோது யாருடன் தொடர்பு கொள்ளவேண்டும் என்பது போன்ற விஷயங்களை—சொல்லிவிட் டானா என்று ஒரு தடவை நினைத்துப் பார்த்துக் கொண்டான்.

எங்கோ ஒரு நாய் குரைத்தது. நரிகள் ஊளையிட்டன. ஜாலாலியின் உடல் புதைக்கப்பட்ட இடத்தில் இதற்குள் நாணல் காடாக வளர்ந்துவிட்டது. அதன் வெள்ளைப் பூக்கள் இந்த இடத்தில் நிலாத் துண்டு போல் பளிச்சென்று கண்ணில் பட்டன. ஜாலாலி தன் வாழ்நாள் முழுதும் பிழைப்புக்காகப் போராட்டம் நடத்தினாள். சாவுக்குப் பின் தனக்கென்று ஒரு சிறிய நிலத்தை அடைந்து விட்ட மகிழ்ச்சியில் எவ்வளவு அழகாகச் சிரிக்கிறாள் அவள்! ஆம்,

இருளில் வெள்ளையாகப் பளிச்சிடுவது நாணற் பூவுமல்ல, நிலாவு மல்ல. ஒரு துண்டு நிலம் கிடைத்த மகிழ்ச்சியில் சிறு குழந்தை போல் சிரிக்கும் ஜாலாலியின் சிரிப்புத்தான் அது. மலரைப் போன்ற பவித்திரமான சிரிப்பில் அவளது முகம் மலர்ந்திருக்கிறது.

இருட்டில் நின்றுகொண் டிருந்த ரஞ்சித்துக்குத் தோன்றியது; 'உலகத்தில் ஒவ்வொருவருக்கும் ஒரு துண்டு நிலம் கிடைக்க வேண்டும்; சாப்பாட்டுக்கு இல்லாத மனிதன், தன் கால்களுக்குக் கீழே தனக்கென்று கொஞ்சம் சொந்த நிலம் இல்லாத மனிதன்.' இப்படி மனிதர்கள் இருப்பதைக் கற்பனை செய்துபார்க்கக் கூடப் பிடிக்கவில்லை அவனுக்கு. மனிதனுக்கு வீடு இருக்கவேண்டும், உழுது பயிர் செய்து சாப்பிடக் கொஞ்சம் நிலம் இருக்கவேண்டும். சாப்பிட வழியில்லாத மனிதனுக்குச் சுதந்தரம் கிடைத்து என்ன பிரயோசனம்? வீடு, வாசல், உணவு, துணி—இவையே சுதந்தரத் துக்கு அடையாளம். மாலதிக்கும் ஒரு துண்டு நிலம் கொடுக்க வேண்டுமென்று ரஞ்சித்துக்குத் தோன்றியது.

இருளில் இருக்கும்போது அவனுக்கு அசாதாரண தைரியம் பிறந்துவிடுகிறது. அப்போது அவனுக்கு மரணபயம் இருப்ப தில்லை. இரவு பகல் என்று பாராமல் வயல்கள், காடுகள், நதிகள் ஆகியவற்றில் சுற்றித் திரிவது, மலைகள் இருந்தால் அவற்றின் மேல் சிங்கக்குட்டி போல் ஏறிச் சுற்றுவது—ஒரு கிரகத்திலிருந்து இன்னொரு கிரகத்துக்குப் பிரயாணம் செய்வது போன்ற சஞ்சாரங்கள் மூலம் அவனுக்கு உயிர் வாழ்வதில் ஆர்வம் உண்டாகிறது.

ஒன்றும் செய்ய முடியாதுபோனால் அவன் தன்னைச் சவமாகக் கருதிக் கொள்கிறான். மாற்றமில்லாத ஒரே மாதிரியான வாழ்க்கை அவனுக்கு அலுப்பைத் தருகிறது. அத்தகைய வாழ்க்கையில் அவனுக்கு உயிருடனிருக்கும் ஆசையே மறைந்துவிடுகிறது. உற்சாகம் மறைந்துவிட்டால் அவன் தன் கடமையையே மறந்து போகிறான்.

ஹட்சன் துரையைக் கொன்ற பிறகு இப்போது மறுபடி ஒரு புதிய சாதனையைச் செய்யப் போகிறான் அவன்; ஒரு கிரகத்தி லிருந்து இன்னொரு கிரகத்துக்குப் பிரயாணம் செய்வதைப் போல.

இருளில் நரேன்தாஸின் வீடு தெளிவாகத் தெரிந்தது. அதில் பொட்டுப் பொட்டாக வெளிச்சம் தெரிந்தது. நரேன்தாஸ் மாட்டுக் கொட்டகையில் மாடு கட்டுகிறான் போலும். ஆபாராணி துறையில் பாத்திரங்களைத் தேய்த்துவிட்டுத் திரும்பி வந்தபின் தான் அவன் மேலே செல்ல முடியும். வீடு திரும்பியதும் படுத்துக் கொண்டு விடுவார்கள் அவர்கள். மாலதியைப் பற்றிய அவனு

டைய பயம் குறைந்துவிட்டது. காரணம், இப்போது அவளுடைய உடலில் முன்பு இருந்த இளமை வெறி இல்லை. அவள் உடல் மெலிந்து சோர்ந்து நோயாளியாகி விட்டாள். தர்மம், அதர்மம் பற்றிய உணர்வுகள் அவளைக் குழப்பிக்கொண் டிருக்கின்றன. நரேன்தாஸ் அவளைத் தன் வீட்டுக்குள் அனுமதிக்கவில்லை. அவள் இங்கேயே தங்கியிருந்தால் அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்.

இரவு நேரம் கழிந்துகொண் டிருக்கிறது. பொழுது புலரும் முன் போலீஸ் டாகுர் குடும்பத்து வீட்டைச் சூழ்ந்து கொள்ளும். இந்தச் செய்தி அவனுக்குக் கிடைத்திருந்தது. சந்தோஷ்*தாரோகா ஆயுதந் தாங்கிய போலீசை அழைத்துவர நாராயணகஞ்ச் போயிருக்கிறான். ஒரு சாமானிய ஆளைப் பிடிப்பதற்காகப் பிரமாத ஏற்பாடுகள் செய்திருக்கிறான் சந்தோஷ தாரோகா. அவனுடைய அபரிமிதமான பயத்தைப் பார்த்துச் சிரிப்பு வந்தது ரஞ்சித்துக்கு.

அவனைக் காட்டிக்கொடுப்பவர்கள் யார்? ரஞ்சித்துக்கு இதுதான் புரியவில்லை. இந்தக் கிராமத்தில் அவனுடன் யாருக்கு விரோதம்? போலீஸ் ஸ்டேஷன் அங்கிருந்து சில கோசதூரம். ஸ்டேஷனுக்குப் போய்வர அதிக நேரம் பிடிக்கும். தண்ணீர் சூழ்ந்த இடமாதலால் அந்தப் பக்கம் போலீஸ் அதிகம் வருவதில்லை. ஆகவேதான் அவனால் அவ்விடத்தில் சௌகரியமாக நீண்ட காலம் அக்ஞாதவாசம் செய்ய முடிந்தது. ஆனால் வேலையின்றிச் சும்மா உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை அவனுக்கு. ஆகையால் அவன் தன் சங்கததின் ஆலோசனையை வேண்டிக் கடிதம் எழுதினான். சங்கத்தின் உததரவுப்படி ஒவவொரு கிராமத்திலும் பயிற்சி நிலையங்களைத் துவக்கினான். ஒரு நாள் தேசாந்திரிப் பாடகன் போல் வேடமணிந்த ஒருவன் அவனுக்கு ஒரு செய்தி கொண்டு வந்தான், 'போலீஸ் அவனைத் தேடிக்கொண் டிருக்கிறது, அவன் அங்கிருந்து ஓடிவிடவேண்டும்!' என்று.

இப்போது நரேன்தாஸின் வீட்டு விளக்குகள் அணைந்துவிட்டன.

ரஞ்சித காவிநிற ஜிப்பாவும் அதன்மேல் கையில்லாத குட்டைக் கோட்டும் அணிந்திருந்தான். கோட்டின் உட்புறப் பைக்குள் கையை விட்டுப் பார்த்தான். அவன் அதில் வைத்திருந்த சாமான் பத்திரமாக இருந்தது. எதிரில் இருட்டில் ஏதோ உறுமும் ஒலி. அவசர அவசரமாக ரிவால்வரை எடுக்கக் கோட்டுக்குள் கையை விட்டபோது அவனுக்குத் தோன்றியது. அது அவர்களுடைய வளர்ப்பு நாய். அவனுக்கு விடை கொடுக்க வந்திருக்கிறது போலும்.

"இங்கே என்ன வேலை உனக்கு? வீட்டுக்குப் போ" என்று ரஞ்சித் சொன்னான்.

*தாரோகா— போலீஸ் இன்ஸ்பெக்டர்.

நாய் அவனோடு நடக்க ஆரம்பித்தது.

''நீ போ, போ! நான் இவ்வளவு நாள் கழிச்சு ஒரு நல்ல காரியம் செய்யப்போறேன்!''

நாய் அவன் பேச்சைக் கேட்காமல் அவனுடனேயே நடந்தது.

''சொல்றேனே, காதிலே விழல்லே?''

நாய் அவனுடைய கால்களில் விழுந்து சுருண்டு படுத்துக் கொண்டது.

''போதும், போதும்! நமஸ்காரம் பண்ணினது போதும்! இப்போ வீட்டுக்குப் போ!''

நாய் குளத்தங்கரையை நோக்கி ஓடியது. மருத மரத்தடியில் நின்றுகொண்டு அவன் எங்கே போகிறான் என்று பார்த்தது. ரஞ்சித் மாலதியின் குடிசை வாயிலில் நின்றான். மூங்கில் படல். டார்ச்சை அடித்துப் படல் கொஞ்சமாவது திறந்திருக்கிறதா என்று பார்த்தான் ரஞ்சித். அது திறந்திருக்கவில்லை. அவன் வெளியிலிருந்து மெல்லிய குரலில் கூப்பிட்டான் ''மாலதி!'' என்று. விழித்துக்கொண்டுதான் இருக்கிறாள் அவள். அவன் ஒரு தடவை கூப்பிட்டதும் அவள் எழுந்து உட்காரும் அரவம் கேட்டது. ரஞ்சித்தின் குரலை அடையாளங் கண்டுகொண்ட மாலதியின் நெஞ்சு அடித்துக்கொண்டது. அவள நடுங்கும் கைகளால் படலைத் திறந்தாள்.

''நான்தான்.''

மாலதி ஒன்றும் பேசவில்லை.

''இந்தத தடவை நாம போகலாம்.''

மாலதிக்கு ஒன்றும் புரியவில்லை. 'நாம போகலாம்!' என்ற வார்த்தைகளால் என்ன சொல்ல விரும்புகிறான் அவன்? அவள் தலையைக் குனிந்துகொண்டு அசையாமல் நின்றிருந்தாள்.

''என்னோட நீயும் வா.''

''எங்கே?''

''கண் போகிற இடத்துக்கு.''

''நான் உனக்கு ஒரு விஷயம் சொல்லணும், டாகுர்.''

''இப்போ ஒண்ணும் சொல்ல வேண்டியதில்லே நீ. தாமதமானால் பிடிபட்டுடுவோம். கிளம்பு உடனே!''

''எனக்குப் பயமா இருக்கு, உன்கிட்டே எல்லா விஷயத்தையும் சொல்லாட்டா.''

''போற வழியிலே எல்லாம் கேட்டுக்கறேன். சீக்கிரம் வா.''

மாலதி குடிசைக்குள் நுழைந்து இரண்டு வெள்ளைப் புடைவைகள், பாவாடைகள், ஒரு மாக்கல் தட்டு இவற்றை எடுத்துக் கொண்டாள்.

''இவ்வளவையும் தூக்கிண்டு உன்னாலே நடக்க முடியாது.''

மாலதி தட்டை வைத்துவிட்டு வந்தாள். "பொழுது விடியறதுக் .குள்ளே சாலமரக் காட்டுக்குள்ளே நுழைஞ்சுடணும்" என்று ரஞ்சித் சொன்னுன்.

அவர்கள் ஆற்றுப் படுகையில் நடந்து போகும்போது தோடார் பாகின் மறுபக்கத்தில் யாரோ டார்ச்சைப் போட்டுக்கொண்டு வரும் அரவம் கேட்டது. குதிரைகளின் குளம்பொலி. இரவோ டிரவாகச் சந்தோஷ் தாரோகா கிராமத்தைச் சூழ்ந்துகொண் டிருக்கிருன் என்று ரஞ்சித்துக்குப் புரிந்தது. "தண்ணியிலே குதிச்சுடு!" அவன் மாலதியிடம் கூறிஞன்.

போலீஸ்காரர்கள் டார்ச்சை அணைத்துவிட்டு நடந்து போனுர்கள்.

அவர்கள் நீரில் குதித்த அரவம் போலீசுக்குக் கேட்டிருக்கும் என்று ரஞ்சித்துக்குத் தோன்றியது. அவன் மாலதியிடம், எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாக மறுகரையை நோக்கி நீந்தச் சொன்னுன்.

அவர்கள் நீந்திப் போய் மறுகரையை அடைந்தார்கள். டார்ச்சின் வெளிச்சமும் அந்தக் கரையில் வந்து விழுந்தது. ரஞ்சித் பிடிபட்டு விடுவானே? அவர்கள் அவனைத் தேடுகிருர்கள்.

இந்த ஆபத்தான நிலையிலும் ரஞ்சித் சற்றும் சலனமடையவில்லை. மாலதியும் கூட இருப்பதால் அவனுக்குச் சற்று அசௌகரியம். அவ்வளவுதான்! அவன் சொன்னுன்: "நான் தப்பிப்போயிடுவேன்னு அவங்களுக்கு எப்படியோ தெரிஞ்சுடுத்து. அதுதான் அவங்க முன்னலேயே வந்துட்டாங்க."

மாலதிக்கு ஒன்றும் புரியவில்லை. அவளுக்குக் குமட்டிக்கொண்டு வந்தது.

"உனக்கு என்ன வந்தது?"

"டாகுர், நீ ஓடிப்போ! நீ தாமதம் பண்ணிஞ உன்னைப் பிடிச்சுடு வாங்க."

அவன் சற்றும் பரபரப்படையாமல் மெல்லச் சிரித்தான். மாலதி யிடம் சொன்னுன். "இதை எடுத்துப் போட்டுக்கோ. எவ்வளவோ ஆபத்திலேருந்து என்னைக் காப்பாத்தியிருக்கு இது."

அவன் மாலதியிடம் ஒரு கறுப்பு நிறப் *புர்க்காவை எடுத்துக் கொடுத்தான். அவர்கள் காட்டுக்குள் நுழைந்து உடை மாற்றிக் கொண்டார்கள். அவன் தன் சூட்கேசிலிருந்து ஏதேதோ சாமான் களை எடுத்தான். ஒரு துப்பாக்கியை எடுத்து மாலதிக்கு டார்ச் ஒளி யில் விளக்கிஞன். "இதோ பார், இதுதான் ரிவால்வரோட குதிரை. இதை அழுத்திஞக் குண்டு வெளியிலே பாயும். இதை நன்ருப்

*புர்க்கா – கோஷாப் பெண்கள் தங்கள் உடலை மறைத்துக்கொள்ள அணியும் உடை.

பிடிச்சுக்கணும். நன்ருக் குறிவைக்கணும். இதென்ன மாலதி? ஏன் ஓங்களிக்கறே?''

ஓங்களித்துக்கொண்டே இருந்ததால் மாலதியால் பதில் பேச முடியா வில்லே.

''உனக்கு என்ன வந்தது, மாலதி? எனக்கு ஒண்ணும் புரியல் லியே? விளக்கமாச் சொல்லேன்.''

மாலதி ரஞ்சித்திடம் இவ்வளவு நாட்களாகச் சொல்ல விரும்பி யதை, அருவருப்பிலும் தயக்கத்தாலும் இதுவரை சொல்லாமல் இருந் ததை, இப்போது சொல்லிவிட்டாள்.

''டாகுர், நான் அம்மாவாகப் போறேன். மூணு பிசாசுகள் என்னே அம்மாவாககிட்டாங்க!'' மேலும் பேச முடியாமல் அவள் ஓங்களித் தாள்.

இருட்டில் ரஞ்சித்துக்கு ஒன்றும் தெரியவில்லே. அவள் அவன் காலடியில் உட்கார்ந்திருந்தாள். மறுகரையில் தொடர்ந்தாற்போல் எண்ணற்ற டார்ச்சு விளக்குகளின் வெளிச்சம் தெரிந்தது. ஆனுல் காட்டுக்குள் அதிகம் நுழையவில்லே. சிறு ஒளிக்கீற்றுகள் மட்டும் மழைத் தூறல் போல் இலேகளின் இடைவெளிகள் வழியே வந்தன. ரஞ்சித மண்டியிட்டு உட்கார்ந்தான். மாலதியின் தலேமேல வைததான். ''நாம ரொம்பத் தூரம் போகணும், மாலதி எங்கே போவோம்னு தெரியல்லே எனக்கு. நீ எழுந்திரு!''

முன் ஒரு தடவை சோனுவின் பைத்தியக்காரப் பெரியப்பா யாளேமேல் உட்கார்ந்துகொண்டு கடந்த ஆற்றங்கரைக் காட்டில் ரஞ்சிததும் மாலதியும் ஒரு மரத்தடியில் அருகருகே படுத்துக் கொண்டு காலேக்காகக் காத்திருந்தார்கள். ரஞ்சித் ஒரு வார்த்தை யும் பேசவில்லே. பயந்திருந்த மாலதி புல்லுக்குள் முகத்தைப் புதைததுக்கொண டிருந்தாள். இருவருமே இரவு முழுதும் விழித் திருந்தார்கள். இவ்வளவு நிகழ்ந்த பிறகு என்ன பேச்சு பேசிஞல் சகஜ நிலேக்குத திரும்பிவர முடியும் என்று ரஞ்சித்துக்குப் புரிய வ்லே. அவன் இந்தப் பெண்ணே அழைத்துக்கொண்டு எங்கே போவான்? அவளே எங்கே, யாரிடம் விடுவான்? மரக்கிளேகள் காற்றில் அசைந்தன. மரங்களின் இலேகளில் நிலவு — முடியப் போகும் இரவின் நிலவு விழுந்தது. 'பாதாய் பாதாய் பொடே நிசிர் சிசிர்!' யாரோ உரத்த குரலில படிக்கிருற் போன்ற பிரமை ''அட்லாஸ்ட் தி செல்ஃபிஷ் ஜயண்ட் கேம்.''

அதிகாலேயில் கிழக்கு வெளுக்கு முன்பே மாலதிதான் ரஞ்சித்தை எழுப்பினுள். விடியற்காலேயில் அவன் தூங்கிப் போயிருந்தான்.

ரஞ்சித் பரபரத்துக்கொண்டு எழுந்தான். ஒரு லுங்கியணிந்து கொண்டான். தன் சூட்கேஸிலிருந்து கோந்தும் கொஞ்சம் சணலும் எடுத்துத் தன் முகத்தில் ஒட்டிக்கொண்டு முற்றிலும் ஒரு புதிய மனிதனாக மாறிவிட்டான். இப்போது அவன் ஒரு மியான் சாயபு. அவனுக்கு அருகிலுள்ளவள் புர்க்கா அணிந்த அவனுடைய பீபி. கட்கத்தில் ஒரு கிழிந்த குடை. மியானும் பீபியும் உறவினர் வீடு போகும் பாவனையில் நடந்தனர். சற்றே நொண்டி நொண்டிக் கொண்டு நடந்தான் ரஞ்சித்.

போகும் வழியில் மாலதி சொன்னாள்: "டாகுர், என்னை ஜோட்டன் கிட்டே விட்டுட்டுப் போ!"

ரஞ்சித் ஒன்றும் சொல்லவில்லை. இந்த நிலையில் அவளை வேறு எங்கே கூட்டிக்கொண்டு போவது? அவர்கள் தர்காவை நோக்கி நடந்தார்கள். நாள் முழுதும் நடந்தால் தர்காவை அடையலாம். மாலதியை ஜோட்டனிடம் விட்டுவிட்டு அவன் வேறெங்காவது போகத் தீர்மானித்தான்.

நடந்துகொண்டே அவன் யார் மேலோ கோபங் கொண்டவனாக அந்தக் காட்டுக்குள்ளே உரக்கக் கூவினான்: "வந்தே மாதரம்." அவனுடைய கோபம் ஜப்பர் மேலா அல்லது சந்தோஷ் தாரோகா மேலா என்று ரஞ்சித்தின் முகத் தோற்றத்திலிருந்து கண்டுபிடிக்க முடியவில்லை.

முதற்பாகம் நிறைந்தது.